த.வ. நிலா, கதிர்நிலை.

[Skt. khacara+yōga>த.கசரயோகம்.]

**கசலட்சுமி** *kaša-laṭcumi,* பெ.(n.) இருபக்கமும் யானைகள் பூச்சொரிய தாமரை மலர்மேல் அமர்ந்துள்ள திருமகள்; figure of Laksmi with elephants on both sides.

த.வ. ஈரானைத் திருமகள்.

[Skt. gaja+lakṣmi> த. கசலட்சுமி.]

**கசவேட்டை** *kaša-vēṭṭai,* பெ.(n.) யானை வேட்டை; elephant hunt.

த.வ. கரிவேட்டை, கயவேட்டை.

[Skt. gaja > த.கசம் + வேட்டை.]

**கசனா** *kašaṉā,* பெ.(n.) கருவூலச்சாலை; treasury, public treasury.

[U. khazāna > த.> கசனா.]

**கசாக்கிரம்** *kašākkiram,* பெ.(n.) 1. மயிர் நுனி; point of a hair. 2. ஒரு சிற்றளவு; a linear measure equal to a hair's, breadth. *"கதிரெழுதுகளெண்மூன்று கசாக்கிர கந்தானாகும்" (கந்தபு.அண்டகோ. 5).*

[Skt. kaca+agra > த. கசாக்கிரம்.]

**கசாசனம்** *kašāšaṉam,* பெ.(n.) அரசமரம் (வின்.); pipal.

[Skt. gajasana > த. கசாசனம்.]

**கசாப்பு** *kašāppu,* பெ.(n.) 1. ஆடு மாடு அடிக்கை; slaughter of animals for food. 2. இறைச்சி விற்போன்; butcher.

த.வ. புலால்.

[U. kassāb > த. கசாப்பு.]

**கசாப்புக்கடை** *kašāppu-k-kaḍai,* பெ.(n.) இறைச்சி விற்குமிடம்; butcher's shop.

த.வ. புலால்கடை.

[U. kassāb> த.கசாப்பு + கடை.]

**கசாப்புக்காரன்** *kašāppu-k-kāraṉ,* பெ. (n.) கசாப்பு பார்க்க; see *kašāppu.*

த.வ. வெட்டுகறியாளன்.

[U. kassāb > த.கசாப்பு + காரன் (உடைமைப் பொருள் ஈறு).]

**கசாப்புக்கிடங்கு** *kašāppu-k-kiḍaṅgu,* பெ.(n.) ஆடுமாடுகள் அடிக்குமிடம்; slaughter-house.

த.வ. வெட்டுகிடங்கு.

[U. kassāb > த.கசாப்பு + கிடங்கு.]

**கசாயக்கிராயினம்** *kašāya-k-kirāyiṉam,* பெ.(n.) மாஞ்சரோகணி, ஒருவகை மூலிகை; a rejuvenating plant.

**கசாயகசாயம்** *kašāya-kašāyam,* பெ. (n.) மிக்கத் துவர்ப்பான கருக்குநீர். இது சில சமயம் சுரத்தை யுள்ளடக்கி, மறுபடியு மெழுப்பும் தன்மை வாய்ந்தது; a decoction extremely astringent. It has a tendency at times to suppress fever, which subsequently relapses (சா.அக.).

த.வ. துவர்கருக்கி.

[கசாயம்+கசாயம்.]

[Skt.kasāya+kacāya > த.கசாயகசாயம்.]

**கசாயதித்தம்**[1] *kašāya-tittam,* பெ.(n.) ஒருவகைக் கரந்தை; Vishnu blue, Vishnu plant-spaeranthus Indicus alias Evolvulus hirsutus (சா.அக.).

த.வ. கரந்தைப்பூடு.

[Skt.kasāya+tikta> த.கசாயதித்தம்.]

**கசாயதித்தம்**[2] *kašāya-tittam,* பெ.(n.) வெள்வேல்; white acacia-*Acacia leucopholea* (சா.அக.).

[Skt.kasāya+tikta> த.க ாயதித்தம்.]

**கசாயபாகவிதி** *kašāya-bāgavidi,* பெ.(n.) கருக்குநீர் (கசாயம்) செய்முறை; a rule for preparing decoction (சா.அக.).

த.வ. கருக்குமுறை.

[Skt.kasāya+pāka+vidhi> த.கசாயபாக விதி.]

**கசாயபாண்டம்** *kašāya-pāṇḍam,* பெ.(n.) கருக்குநீர் (கசாயம்) காய்ச்சுவதற்காகப் பயன்படுத்தும் மட்கலம்; an earthern pot used for preparing decoction (சா.அக.).

த.வ. கருக்குச்சட்டி.

[Skt.kasāya> த.கசாயம் + பாண்டம்.]

**கசாயம்**[1] *kašāyam,* பெ.(n.) 1. காய்ச்சிய மருந்துக் குடிநீர்; decoction, infusion. *"கசாயமுங் கரிசமானவே" (மேருமந்.543).* 2. மாதவிலக்குக் கழிவு; menstrual blood. 3. ஐம்மூலக் கருக்குநீர் – ஐந்து வகை வேர்களையிட்டுக் காய்ச்சி வடித்த நீர்; a decoction prepared using five different roots. 4. துவர்ப்பு மருந்து; astringent medicine. 5. நோயைக் கண்டிக்கும் மருந்து நீர்; any healing or medicinal potion (சா.அக.).

**த.வ. மருந்துக்குடிநீர், குடிநீரம்.**

*[Skt. kasāya>த. கசாயம்.]*

**கசாயம்**[2] *kašāyam,* பெ.(n.) தீவினை (சீவக.3076, உரை); impurity or sin clinging to the soul; defect.

*[Skt.kas āya > த. கசாயம்.]*

**கசாயம்**[3] *kašāyam,* பெ. (n.) பேசாதிருக்கின்ற பெருநிலைக்கு நேர்கின்ற இடையூறுகளுள் ஒன்று (வேதாந்தசா.103); one of the obstacles to *nirvigarpa-šamādi.*

**த.வ. பேசாநிலை இடர்.**

*[Skt. kas āya > த. கசாயம்.]*

**கசாயம்போடல்** *kašāyam-pōḍal,* பெ. (n.) கசாயம் வடித்தல்; the act or process of boiling to prepare decoction (சா.அக.).

**த.வ. கருக்கிடல்.**

*[Skt. kas aya > த.கசாயம் + போடல்.]*

**கசாயர்** *kašāyar,* பெ.(n.) மஞ்சள்; turmeric (சா.அக.).

**கசாயரசம்** *kašāya-rašam,* பெ. (n.) 1. துவர்ப்பு; astringency.2. கருக்குநீர்ச்சாறு; the essence in decoction (சா.அக.).

*[Skt. kas āya+rasa>த.கசாயரசம்.]*

**கசாயவா** *kašāyavā,* பெ.(n.) பேரீந்து; date-tree, wild date palm - *Phoenix dactylifera* (சா.அக.).

**கசாயிக்காரன்** *kašāyi-k-kāraṉ,* பெ. (n.) இறைச்சி விற்போன்; meat vendor, butcher.

**த.வ. வெட்டுகறிக்காரன்.**

*[U. kasāyi > த. கசாயி+காரன் (உடைமைப் பொருள் ஈறு).]*

**கசாலா** *kašālā,* பெ.(n.) 1. துன்பம்; affliction, distress, grief, trouble. 2. வருத்தம்; difficulty, obstruction, trouble. *வழி கசாலாவாயிருந்தது.*

*[U. kasālā > த. கசாலா.]*

**கசான்சி** *kašāṉši,* பெ.(n.) பொருளாளர், கருவூலர்; treasurer.

*[U. khazānci > த. கசான்சி.]*

**கசானனன்** *kašāṉaṉaṉ,* பெ.(n.) ஆனைமுகன் (விநாயகபு.69:2); Piḷḷaiyār, who has the face of an elephant.

*[U. gaja+ānana > த. கசானனன்.]*

**கசானா** *kašāṉā,* பெ.(n.) கருவூலம்; treasury.

*[U. khazānā > த. கசானா.]*

**கசுக்கொட்டை** *kašu-k-koṭṭai,* பெ.(n.) மரத்தின் தவிட்டு நிறத்தைப் போன்ற கொட்டை; chestnut.

**கசுப்பா** *kašuppā,* பெ.(n.) தலைமையூர்; chief station or head-quarters of a district or division.

*[U. kasuba > த. கசுப்பா.]*

**கசூர்** *kašūr,* பெ. (n.) கவனமின்மை (C.G.); neglect, carelessness.

*[U. qasūr > த. கசூர்.]*

**கசூரி** *kašūri,* பெ.(n.) **கசூர்** பார்க்க; see *kašūr.*

**கசேந்திரன்** *kašēndiraṉ,* பெ.(n.) சிறந்த யானை; lord of elephants.

*[Skt. gaja+indra> த. கசேந்திரன்.]*

**கசேந்திரைசுவரியம்** *kašēndiraišuvariyam,* பெ.(n.) பெருஞ் செல்வம்; greataffluence, opulence.

**த.வ. யானைப்பெருஞ்செல்வம்.**

*[U. gaja+indra+aišvarya > த. கசேந்திரை சுவரியம்.]*

**கசேரிகை** *kašērigai,* பெ. (n.) முதுகெலும்பு; back-bone - *vertebra* (சா.அக.).

த.வ. முதுகுத்தண்டு.

**கசேரு**[1] *kašēru,* பெ.(n.) 1. கருணைக் கிழங்கு; elephant yam. 2. முத்தக்காசு; straight sedge.

*[Skt. kašēru> த. கசேரு.]*

**கசேரு**[2] *kašēru,* பெ.(n.) முள்ளந்தண்டு; spinal column-*Vertebral column* (சா.அக.).

**கசேருகம்** *kašērugam,* பெ.(n.) தமரத்தை (மூ.அ.); carambolā tree.

*[Skt. kašēruka > த. கசேருகம்.]*

**கசேருநீர்க்கோவை** *kašēru-nir-k-kōvai,* பெ.(n.) முள்ளந்தண்டில் இறங்கி நிற்கும் ஊதை நீர்; a collection of morbid fluid in the vertebral column-*Hydrorachis* (சா.அக.).

த.வ. முள்ளந்தண்டு நீர்க்கோவை.

**கசேருபம்** *kašērubam,* பெ. (n.) முள்ளந் தண்டிலிருக்கும் 33 முள் எலும்புகள்; the thirty three vertebrae. 2. முதுகெலும்பு; back-bone (சா.அக.).

த.வ. முள்ளந்தண்டு.

*[Skt. kašēru > த. கசேருபம்.]*

**கசேருபவர்** *kašērubavar,* பெ.(n.) முள்ளந் தண்டிற் பிளவு ஏற்பட்டுப் பிதுங்கி நிற்குமோர் பிறவிநோய்; congenital cleft of the vertebral column with some protrusion-*Spina bifida* (சா.அக.).

த.வ. பிதுக்கு முள்ளந்தண்டு.

**கசோதம்** *kašōdam,* பெ. (n.) பிராய்முட்டி; Ceylon pavonia-*Pavonia zeylanica* (சா.அக.).

**கசோதிகம்** *kašōdigam,* பெ. (n.) கருப்பெள்(ளு); black gingelly seed-*Sessamum indicum* (சா.அக.).

த.வ. காரெள்.

**கசோரம்** *kašōram,* பெ.(n.) ஒரு வகைப்பூடு; a plant-*Curcuma zerumbet* (சா.அக.).

**கஞ்சீயம்** *kañjiyam,* பெ.(n.) வெண்கலம் (யாழ்.அக.); bell-metal.

*[Skt. kamsiya> த. கஞ்சீயம்.]*

**கஞ்சுகசரீரம்** *kañjuga-šariram,* பெ.(n.) விழைவு (அராகம்), அறிவம் (வித்தை), கலை, ஊழ் (நியதி), காலம் முதலான மெய்ம (தத்துவ)ங்களினாலாகிய நுண்ணுடம்பு (பரசரீரம்) (சி.போ.பா.2:2); a subtle body of the soul composed of the five principles *arāgam, vittai, kalai, niyadi* and *kālam.*

*[Skt.kañcuka+sarira >த.கஞ்சுகசரீரம்.]*

**கஞ்சூழ்** *kañjūḷ,* பெ.(n.) பேரீந்து (பச்.மூ.); date palm.

*[Skt. kharjūra> த. கஞ்சூழ்.]*

**கஞ்சோற்பவம்** *kañjōṟpavam,* பெ. (n.) மணமுள்ள மண்; a fragrant earth (சா.அக.).

த.வ. மணமண்.

**கட்கன்** *kaṭkaṉ,* பெ. (n.) வீரபத்திரத் தெய்வம் (நாமதீப.); God *Virabhadraṉ.*

*[Skt. khaḍga> த. கட்கன்.]*

**கட்சம்** *kaṭcam,* பெ.(n.) 1. சங்க நஞ்சு; a kind of arsenic, a mineral poison. 2. மந்திரநூல்; a mantric science of this name. 3. மாயக்கலை அடங்கிய தந்திரக்கலை (விதி); a tantric science treating of magic etc. (சா.அக.).

*[Skt. kakṣa>த.கட்சம்.]*

**கடபயாதி** *kaḍapayādi,* பெ. (n.) எண்களை வடமொழி எழுத்தாற் குறிப்பதற்கமைந்த ஒரு முறை (சாச.தமிழ்க்.87); a system of signifying numerals by Sanskrit letters.

த.வ. எண்ணாக்க எழுத்து.

*[Skt. ka-ṭa-pa-yatādi> த. கடபயாதி.]*

**கடவல்லி** *kaḍa-valli,* பெ.(n.) 108 உபநிடதங்களுள் ஒன்று; name of an *Upaniṣad.*

*[Skt. Kaṭha-valli> த. கடவல்லி.]*

**கடாட்சவீட்சணம்** *kaḍāṭca-viṭcaṇam,* பெ.(n.) கடைக்கண்பார்வை; side glance.

த.வ. அருணோக்கம்.

*[Skt. kaṭākṣa + vīkṣaṇa > த. கடாட்ச வீட்சணம்.]*

**கடாட்சி-த்தல்** *kaḍāṭci-,* 4 செ.குன்றாவி. (v.t.) அருணோக்கஞ் செய்தல்; to condescend to cast a side glance, to look upon with gracious favour. *"அன்பர் மகிழ்வுறக் கடாட்சிக்கும்" (சிவரக. தேவிமேருவரை.13).*

*[Skt. kaṭākṣa> த. கடாட்சம் >கடாட்சி-த்தல்.]*

**கடி** *kaḍi,* பெ. (n.) இடம்விட்டு இடம் செல்லும் பொழுது எருது குதிரைகளை மாற்றும் இடம்; stage in a journey, where the horses or bulls of carriages are changed.

த.வ. எருதுபூட்டெல்லை.

*[U.gaḍi > த. கடி.]*

**கடிகம்** *kaḍigam,* பெ. (n.) கரமுட்டி (யாழ்.அக.); fist.

*[Skt. khataka> த. கடிகம்.]*

**கடேரியம்** *kaḍēriyam,* பெ.(n.) மரமஞ்சள்; turmeric.

*[Skt. kaṭarikaṭēri> த. கடேரியம்.]*

**கடோபநிடதம்** *kaḍōba-niḍadam,* பெ.(n.) நூற்றெட்டு உபநிடதங்களுளொன்று; name of an *upaniṣad.*

*[Skt. katha+upa-ni-sad>த. கடோப நிடதம்.]*

**கடோரம்** *kaḍōram,* பெ.(n.) 1. கடினம்; hardness, solidity. 2. கொடுமை; severity, cruelty.

*[Skt. kaṭhōra > த. கடோரம்.]*

**கடோற்கசன்** *kaḍōṟkaśaṉ,* பெ.(n.) வீமனுக்கு இடும்பியிடம் பிறந்த அரக்கன் (பாரத.வேத்திர.30); bald-headed powerful gaint, name of the son of *Bhīma* and *Hidimbā.*

*[Skt. Ghaṭōtkaca> த. கடோற்கசன்.]*

**கண்டகப்பிரபத்தி** *kaṇḍaga-p-pirapatti,* பெ. (n.) தஞ்சம் புகுதலில் (பிரபத்தியில்) ஓர் இழிவான வகை; *(Vaiṣṇ)* an inferior kind of Pirapatti. *"கண்டகப் பிரபத்தி செய்திருக்கச் செய்தேயும்" (திவ்.பெரியாழ்.2, 6, 7, வ்யா. பக்.377).*

*[Skt. kaṇṭaka+pra-patti>த. கண்டகப் பிரபத்தி.]*

**கண்டகாசனம்** *kaṇḍagāśaṉam,* பெ.(n.) ஒட்டகம் (யாழ்.அக.); camel.

*[Skt. kaṇṭaka+aśana> த. கண்டகாசனம்.]*



**கண்டகிரகணம்** *kaṇḍa-kiragaṇam,* பெ. (n.) பாதி கோள் மறைப்பு (பார்சுவகிரகணம்); partial eclipse.

த.வ. அரைக்கவ்வல், துண்டுகவ்வணம்.

*[Skt. khanda+grahaṇa>த.கண்டகிரகணம்.]*

**கண்டகுப்சம்** *kaṇḍa-kupšam,* பெ. (n.) சன்னிவகை (வின்.); a kind of convulsion, one of 13 *caṉṉi.*

த.வ. சார்இழுப்பு.

*[Skt. kaṇtha-kubja >த. கண்டகுப்சம்.]*

**கண்டகூணிகை** *kaṇḍa-kūṇigai,* பெ. (n.) வீணை (யாழ்.அக.); the Indian lute, *vīṇai.*

*[Skt. kaṇtha + kūṇikā>த.கண்டகூணிகை.]*

**கண்டபத்திரம்** *kaṇḍa-pattiram,* பெ.(n.) வழக்கைத் தீர்த்தெழுதுஞ் சீட்டு (நாஞ்.); award in a dispute.

த.வ. தீர்ப்புமுறி.

**கண்டாத்திரிலேகியம்** *kaṇḍāttiri-lēgiyam,* பெ.(n.) இஞ்சி சேர்ந்த இளகிய வகை (பைஷஜ.); electuary with ginger as its chief ingredient.

த.வ. இஞ்சி இளகியம்.

[Skt.khaṇḍārdraka+lēhya>த.கண்டாத்திரிலேகியம்]

[த. இளகியம் > Skt. lēhya.]

**கண்டாபரணம்** *kaṇḍābaraṇam,* பெ.(n.) கண்டாபரன் பார்க்க; see *kaṇḍābaraṉ.*

**கண்டாபரன்** *kaṇḍābaraṉ,* பெ.(n.) குதிரைக் கழுத்தின் இரண்டு புறத்தும் உள்ள இரு சுழிகள் (அசுவசா.19); two auspicious curls one on each side of a horse's neck, a point of the horse.

த.வ. கண்டல் சுழி.

[U. kaṇṭhā-bharan>Skt.kaṇṭha+ā-bharaṇa > த. கண்டாபரன்.]

**கண்டுசம்** *kaṇḍušam,* பெ.(n.) கண்டூசம் பார்க்க; see *kaṇḍūšam.*

[Skt. kaṇḍū> த. கண்டுசம்.]

**கண்டூசகசாயம்** *kaṇḍūša-kašāyam,* பெ.(n.) ஆறிலொன்றாய்க் காய்ச்சி வடித்து வாய்க்கொப்பளிக்கப் பயன்படுத்தும் நீர் அல்லது கியாழம்; a decoction or extract obtained by boiling and reducing to one sixth part. It is used as a gargle (சா.அக.).

த.வ. கொப்புளிப்பு கருக்கு.

[Skt.kaṇḍū+kasāya >த. கண்டூசகசாயம்.]

**கண்டூசம்** *kaṇḍūšam,* பெ. (n.) 1. வாய் நிரம்ப மருந்து நீரை ஊற்றிக் கொப்பளிக்கும் மருந்து; a solution or extract used in mouthfuls for rinsing the mouth and the throat. It is opposed to கவளம், which means using it in small quantities, gargle (சா.அக.).

த.வ. கொப்புளி நீரம்

[Skt.kaṇḍū > த. கண்டூசம்.]

**கணசங்கியாபாகம்** *kaṇa-šaṅgiyā-pāgam,* பெ. (n.) சிற்றூர்ப் பங்குகளின் பிரிவுத்தொகை; aggregate number of shares into which the lands of a village are, at the time of the original grant, equally divided.

த.வ. ஊர்ப்பாகம்.

[கணசங்கியை + பாகம்.]

[Skt. gaṇa + saṅkhyā > கணசங்கியை.]

**கணாநந்தி** *kaṇānandi,* பெ. (n.) புகையிலை (நாமதீப.); tobacco.

[Skt. gaṇa+ānandi>த.கணாநந்தி.]

**கணேரம்** *kaṇēram,* பெ. (n.) மலைப்புளிச்சை (சங்.அக.); hill hemp bendy.

[Skt. kaṇēra>த.கணேரம்.]

**கத்தணம்** *kattaṇam,* பெ.(n.) காப்புறை; jacket, tunic, coat of mail. *"கத்தணங் கடிது பூண்டார்" (இரகு.மீட்சிப்.7).*

தெ. கட்டலமு.

**கத்தபம்** *kattabam,* பெ.(n.) கழுதை (திவா.); ass. *"கத்தபத்தின் பாற்குக்கரிய கிரந்தியறும்" (பதார்த்தகுண.108).*

[Skt. gardabha>த. கத்தபம்.]



**கத்தாப்பு** *kattāppu,* பெ.(n.) நாட்டு வாதுமை; Indian almond.

[Mal. Catapang> த.கத்தாப்பு]

**கத்தி** *katti,* பெ.(n.) 1. துன்பம்; grief. 2. கடினம் (கஷ்டம்); difficulty, trouble.

[Skt. kaṣta > Te. kasti > கஸ்தி > த. கத்தி]

**கத்துரு** *katturu,* பெ.(n.) காசியபமுனிவர் மனைவி (கம்பரா.சடாயுகாண்.29); *Kadrū,* daughter of *Dakṣa,* wife of *Kāšyapa* and mother of the *Nāgās.*

[Skt. kadru> த. கத்துரு.]

**கத்து** *kattu,* பெ.(n.) இரவில் சுற்றும் ஊர்காவல்; night patrol.

*[U. gasht> த. கத்து.]*

**கத்தோலிக்கன்** *kattōlikkaṉ,* பெ. (n.) கிறித்துவ மதத்தின் ஒரு பிரிவைச் சார்ந்தவன் (நாஞ்.); catholic.

*[E. catholic> த. கத்தோலிக்கன்.]*

**கதர்** *kadar,* பெ.(n.) கையிராட்டின நூல் கொண்டு நெய்த ஆடைகள்; cloth woven with yarn produced on the spinning wheel.

*[U. khaddar > த. கதர்.]*

**கதலிபாகம்** *kadali-pāgam,* பெ.(n.) செய்யுளமைதியுளொன்று; (Rhet.) easy, felicitous style of poetry, delicious as plantain fruit; sweet sytle of poetry, pleasing to the ear, one of the three kinds of *pāgam.*

**கதாகுவயம்** *kadāguvayam,* பெ.(n.) கோட்டம் (தைலவ.தைல.1); costus.

*[Skt. gadāhvaya> த. கதாகுவயம்.]*

**கதாசித்து** *kadā-šittu,* வி.எ. (adv.) அரியதாய்; rarely.

*[Skt. kadā-chit> த. கதாசித்து.]*

**கதாபாணி** *kadā-pāṇi,* பெ.(n.) தண்டு எனும் படைக்கலனை யேந்தியவன் (வின்.); one armed with a club.

**த.வ. தண்டேந்தி.**

*[Skt. gadā+pāṇi> த. கதாபாணி.]*

**கதாயுதம்** *kadāyutam,* பெ. (n.) தண்டாயுதம்; clup, mace.

**த.வ. மறத்தண்டு.**

*[Skt. gada + த. ஆயுதம்.]*



**கதாயுதன்[1]** *kadā-yudaṉ,* பெ. (n.) வீமன் (பிங்.); *Bhīmaṉ*, son of *Pāṇḍu*, so called. because his chief weapon of fighting was a mace or clup.

*[Skt. gadā+a-yudan> த. கதாயுதன்.]*

**கதாயுதன்[2]** *kadāyudaṉ,* பெ. (n.) வைரவக் கடவுள் (யாழ்.அக.); God Bhairavar.

*[Skt. gadāyudha> த. கதாயுதன்.]*

**கதாவணி** *kadāvaṇi,* பெ.(n.) கணக்குப் பொத்தகம்; ledger, account book.

*[Mhr. khatāvaṇi> த. கதாவணி.]*

**கதானுகதிகநியாயம்** *kadāṉugadiga-niyāyam,* பெ. (n.) ஒருவர் சென்ற வழியே மற்றவர் செல்லுதலைக் குறிக்கும் நெறி; one blindly following another that precedes, referred to in illustration of blind adherence to precedent or custom.

**த.வ. சென்றோர் செல்வழி.**

*[Skt. gatā + anu - gatika + nyāya > த. கதானுகதிகநியாயம்.]*

**கதிமி** *kadimi,* பெ.(n.) தலைமைக் குடியானவன் (வின்.); head ryot, hereditary cultivator.

**த.வ. வேளாண்கோ.**

*[U. kadīm> த. கதிமி.]*

**கந்திரி[1]** *kandiri,* பெ.(n.) மகமதிய விழா (பண்டிகை) (G.Tj.D.i, 243); a Muhammadan festival held in honour of a deceased holy person as the annual festival held at *Nāgore* in honour of the saint *Mīrāṉ Sahib.*

*[U. kandūri> த. கந்திரி.]*

**கந்திரி[2]** *kandiri,* பெ.(n.) இரவலன்; beggar.

*[U. kamtarin>த. கந்திரி.]*

**கப்சாவீசு–தல்** *kapšā-vīšu-,* 5 செ.கு.வி. (v.i.) பொய்ச்செய்தி பரப்புதல்; to spread false rumours.

**த.வ. புரட்டுபரப்புதல்.**

*[U. kabza > த.கப்சா.]*

**கப்சா** *kapšā,* பெ. (n.) பொய்ச்சொல்; lie, falsehood.

த.வ. புரட்டு.

*[U. kabza > த. கப்சா.]*

**கப்பாலத்து** *kappālattu,* பெ. (n.) பிணையல் (இ.வ.); bail, security.

*[Ar. kafālat > த. கப்பலாத்து.]*

**கப்பித்தான்** *kappittāṉ,* பெ. (n.) கப்பற்றலைவன் (இ.வ.); captain of a ship.

த.வ. மீகாமன், நாவாய்கன், வங்கன்.

*[F. capitaine > த. கப்பித்தான்.]*

**கப்பிர்** *kappir,* பெ.(n.) செருக்கு (கருவம்); pride, haughtiness. *"கப்பிர்பிடித்து அலைகிறான்" (இ.வ.).*

*[U. gubbar > த. கப்பிர்.]*

**கப்பே** *kappē,* பெ.(n.) குளம்பி (காப்பி) (Pond.); coffee.

த.வ. காணீர் (காழ் + நீர்).

*[F. caffē > த. காப்பி.]*

**கபக்கட்டு** *kapa-k-kaṭṭu,* பெ. (n.) கோழை நெஞ்சில் திரண்டிருக்கை; accumulation of phlegm in the throat.

த.வ. கோழைக்கட்டு.

*[Skt. kapha > த.கபம்.]*

**கபகரைகசாயம்** *kabagarai-kašāyam,* பெ.(n.) கோழையை அறுக்கும் கருக்குநீர்; a decoction capable of bringing out the phlegm, i.e. promoting expectoration (சா.அக.).

த.வ. கோழைக்கரைநீரம்.

*[கபம்+கரை+கசாயம்.]*

*[Skt. kapha > த. கபம் > Skt. kaṣāya > த.கசாயம்.]*

**கபகரகாரி** *kabagara-kāri,* பெ. (n.) 1. கோழையை வெளிப்படுத்தி இருமலைத் தணிக்கும் மருந்து; a medicine which promotes expectoration Expectorant. 2. நெஞ்சிலிருக்கும் கோழையை அறுப்பது; anything which promotes the ejection of mucous or other fluids from the lungs and the trachea (சா.அக.).

த.வ. கம்மல் தணும்பி.

**கபந்தம்** *kapandam,* பெ.(n.) 1. **கவந்தம்** பார்க்க; see *kavandam.* 2. அறிவிலி; simpleton, stupid person (Brah.).

*[Skt. kabandha > கபந்தம்.]*

**கபநாசம்** *kapa-nāšam,* பெ.(n.) **கண்டங்கத்தரி** (மலை.) பார்க்க; see *kaṇḍaṅgattari.*

*[Skt. kapha+nāša> த. கபநாசம்.]*

**கபநாசனி** *kapa-nāšaṉi,* பெ. (n.) தேற்றாங் கொட்டை (யாழ்.அக.); clearing nut.

*[Skt. kapha-nāšaṉa>த. கபநாசனி.]*

**கபம்** *kabam,* பெ.(n.) கோழை; phlegm, one of three kinds of *nāḍi.* *"வாதபித்தகபமென... மூவரும்... நலிந்தனர்" (உத்தரரா.அரக்கர்.31).*

*[Skt. kapha >த. கபம்.]*

**கபர்** *kabar,* பெ. (n.) செய்தி (வின்.); news.

*[U. khabar > த. கபர்.]*

**கபர்த்தம்** *kabarttam,* பெ. (n.) சிவபெருமான் சடை; *Šiva's* matted locks.

*[Skt. kaparda > த. கபர்த்தம்.]*

**கபர்த்தி** *kabartti,* பெ.(n.) சிவன்; *Šivaṉ,* having matted locks.

*[Skt. kapardin > த. கபர்த்தி.]*

**கபர்தார்** *kabardār,* பெ. (n.) விழிப்பாயிருத்தல்; beware, take care.

*[U. khabadār > த. கபர்தார்.]*

**கபருசுதான்** *kabarušutāṉ,* பெ.(n.) (இசுலாம்.) இடுகாடு; burial place (கிரியா.).

*[U. khaba> த. கபருசுதான்.]*

**கபரோகம்** *kaba-rōgam,* பெ.(n.) கோழை நோய்; any disease caused by excess of phlegm, as bronchitis or asthma.

த.வ. ஈளை.

*[Skt. kapha+rōga > த. கபரோகம்.]*

**கபவாதசுரம்** *kaba-vāda-šuram,* பெ. (n.) கோழை வளிமிகுதியால் ஏற்படும் சுரம்; pneumonia.

த.வ. கடுங்காய்ச்சல்.

*[கபம் + வாதம் + சுரம்.]*

*[Skt. kapha + vāda > த.கபவாதம்.]*

**கபவிரோதி** *kaba-virōdi,* பெ.(n.) சிற்றரத்தை (தைலவ.); lesser galangal.

**கபளீகரி-த்தல்** *kabaḷīgari-,* 4 செ.குன்றாவி. (v.t.) **கவளீகரி-** பார்க்க; see *kavaḷīgari-.*

*[Skt. kabaḷīkr-> த. கபளீகரி-த்தல்.]*

**கபாத்து**[1] *kabāttu,* பெ.(n.) 1. விதையடி சேவல் (வின்.); capon. 2.மரஞ்செடிகளின் மிகைக்கிளைகளை ஒழுங்குபெறக் கத்திரிக்கை; pruning.

*[U. kabāt> த. கபாத்து.]*

**கபாத்து**[2] *kabāttu,* பெ. (n.) படைப்பயிற்சி; military drill.

*[U. qawāid> த. கபாத்து.]*

**கபாபு** *kabābu,* பெ.(n.) சூட்டிறைச்சி (வின்.); roast, dish of roasted meat.

**த.வ. சூட்டூன்.**

*[U. kabāb> த. கபாபு.]*

**கபாய்** *kabāy,* பெ. (n.) நிலையங்கி; frock, a kind of long flowing tunic reaching to the ankles such as that worn generally by Muhammadans. *"கடகளிறுதவு கபாய்மிசைப் போர்த்தவள்" (மீனாட். பிள்.காப்பு.10).*

*[U. qabā > த. கபாய்.]*

**கபாலன்** *kapālan,* பெ.(n.) பிறவி நஞ்சு வகை (மூ.அ.); a mineral poison.

**கபிலசம்** *kabilaśam,* பெ.(n.) காடை (நாமதீப.); rain quail.

*[Skt. kapiñjala>த. கபிலசம்.]*



**கபிதம்** *kabidam,* பெ.(n.) **கருஞ்சீரகம்** (மலை.) பார்க்க; see *karuñjīragam.*

**கபிலவத்து** *kabilavattu,* பெ.(n.) புத்தர் பிறந்த நகரம் (மணிமே.அரும்.); Buddha's birth - place.

*[Skt. kabilavastu>த. கபிலவத்து.]*

**கபிலை** *kabilai,* பெ.(n.) நறுமணப் பொருள் வகை (நாமதீப.); a fragrant substance.

*[Skt. kabilā > த. கபிலை.]*

**கபீதனம்** *kabīdanam,* பெ. (n.) **வாகை** (மலை.) பார்க்க; see *vāgai.*

*[Skt. kapītana> த. கபீதனம்.]*

**கபுல்** *kabul,* பெ.(n.) வஞ்சனை (இ.வ.); deceit, fraud.

*[U. qaul> த. கபுல்.]*

**கபூல்** *kabūl,* பெ. (n.) இசைவு (வின்.); consent, approval, admission, confession.

*[U. qabul > த. கபூல்.]*

**கபூலி** *kabūli,* பெ.(n.) **கபூல்** பார்க்க (C.G.); see *kabūl.*

**கபூலியத்து** *kabūliyattu,* பெ.(n.) **கபூலியத் நாமா** பார்க்க; see *kabūliyat-nāmā.*

*[U. qabūliyat > த. கபூலியத்து.]*

**கபூலியத்நாமா** *kabūliyat-nāmā,* பெ. (n.) எதிரீட்டாவணம்; counter-agreement, counter part of a license.

*[U. qabūliyat+nāmā>த. கபூலியத்நாமா.]*

**கபூலேத்து** *kabūlēttu,* பெ.(n.) உடன்படிக்கை யாவணம் (வின்.); agreement in writing.

*[U. qabūliyat > த. கபூலேத்து.]*

**கபோணிகுளநியாயம்** *kabōṇi-kuḷa-niyāyam,* பெ. (n.) முழங்கையிலுள்ள வெல்லத்தை நாவாற் சுவைக்க இயலாததுபோல, அடுத்திருந்துந் தனக்கு அடைய முடியாமையைக் காட்டும் நெறி; illustration of absolute inaccessibility or unattainability, as the illustration of the treacle on one's elbow, being tantalizingly out of reach of one's tongue.

**த.வ. எட்டாக்கனி உறழ்.**

**கம்சன்** *kamšaṉ,* பெ. (n.) கண்ணபெருமானாற் கொலையுண்ட ஓர் அரசன்; *Kamsa*, a king of *Madhurā*, slain by *Krishnaṉ.*
*[U. kamsa>த. கம்சன்.]*

**கம்பத்து**[1] *kambattu,* பெ. (n.) இடம்பம் (வின்.); pomp, splendour.
*[U. gammat>த. கம்பத்து.]*

**கம்பத்து**[2] *kambattu,* பெ. (n.) கப்பலில் விழும் ஓட்டை (Naut.); leakage in a ship.
**த.வ. கசிவுத்துளை.**
*[Port. gamote> த. கம்பத்து.]*

**கம்பத்துப்பார்-த்தல்** *kambattu-p-pār-,* 4 செ.கு.வி. (v.i.) கப்பலின் ஓட்டையை அடைத்தல் (வின்.); to stop a ship's leak.
**த.வ. கசிவு பார்த்தல்.**
*[Port. gamote > த.கம்பத்து.]*

**கம்பீர்** *kambīr,* பெ. (n.) வெற்றிலைத் தம்பலத்துடன் சேர்க்கும் ஒருவகைத் துவர்ப்புச் சரக்கு (மூ.அ.); a preparation from the astringent leaf of a Malay shrub used along with betel.
*[Mal. gambier> த. கம்பீர்.]*

**கம்பீரசன்னி** *kambīra-šaṉṉi,* பெ.(n.) 1. மிகை இசிவு (அதிகாரசன்னி); high delirium. 2. இறுமாப்பு (இ.வ.); superciliousness, boastfulness, haughtiness.
*[Skt. gambhīra+sanni> த. கம்பீரசன்னி.]*

**கம்பீரம்** *kambīram,* பெ.(n.) 1. ஆழம் (சூடா.); depth, profundity. 2. ஆழ்ந்த அறிவு (வின்.); profound knowledge. 3. வீறு; majestic air or bearing; manliness.
**த.வ. வீறு.**
*[Skt. gambhīra> த. கம்பீரம்.]*

**கம்பீரவாக்கு** *kambīra-vākku,* பெ.(n.) பொருளாழ்ந்த செய்யுள் (வின்.); superior style of writing, pregnant with meaning. 2. எடுப்பான குரல்; manly, authoritative, majestic voice, deep, grave intonation.
**த.வ. வீறார்ந்த குரல்.**
*[கம்பீரம்+வாக்கு.]*
*[Skt. gambhīra > த.கம்பீரம்.]*

**கம்பீரி-த்தல்** *kambīri-,* 4 செ.கு.வி.(v.i.) எடுப்பான குரலாற் பேசுதல் (வின்.); to exult, to speak in a majestic tone.
*[Skt. gambhīra > த. கம்பீரி-த்தல்.]*

**கமகம்** *kamagam,* பெ.(n.) 1. இசை வேறுபாடு (ஸ்வரபேதம்) (பரத. இராக. 24); (Mus.) graces and embellishments of melody of which there are ten varieties. (ஆரோகணம், அவரோகணம், டாலு, ஆந்தோளம், ஸ்புரிதம், ஆகதம், மூர்ச்சனை, திரியுச்சம், பிரத்தியாகதம், கம்பிதம்). 2. ஒன்றையறிதற்கு ஏதுவாயுள்ள குறிப்பு; clue, key, as of a solution. *"இப்புகை யுடைமை தீயுடைமையது கமகம்" (தர்க்கபரி. 72).*
*[Skt. gamaka > த. கமகம்.]*

**கமடாதனம்** *kamaṭātaṉam,* பெ.(n.) ஆமை வடிவாயமைந்த இருக்கை (கூர்மாசனம்); a raised wooden board shaped like a tortoise used as a seat while meditating. *"இருந்து கமடாதனத்திலே" (சைவச. பொது. 61).*
**த. வ. ஆமை இருக்கை.**
*[Skt. Kamtha+ ātanam > த. கமடாதனம்.]*

**கமலகுண்டலமாய்** *kamala-kuṇṭalam,* து.வி.(adv.) தலைகீழாய் (யாழ்ப்.); head foremost, upside down.
*[Skt. Kamala+kuṇṭalam > த. கமல குண்டலமாய்.]*

**கமலத்தோன்** *kamalattōṉ,* பெ.(n.) நான்முகன் (பிரமன்); *Brahmān. "கமலத்தோனாயுளும்" (திவா. 11, 80).*

**கமலநிருத்தம்** *kamala-niruttam,* பெ.(n.) கூத்தின் வகை (யாழ்.அக.); a kind of dance.

**கமலபுத்திரி** *kamalaputtiri,* பெ. (n.) முசுக்கட்டைச் செடி; Indian mulberry plant - Morus indica.



**கமலமனோகரி** *kamala-manōgari,* பெ.(n.) ஒரு வகை அராகம் (பரத. இராக. 55); a musical mode.

*[Skt. kamala-manōhari > த. கமலமனோகரி.]*

**கமலமூலம்** *kamalamūlam,* பெ.(n.) தாமரைக் கிழங்கு; lotus root.

*[கமலம் + மூலம்.]*

**கமலயோனி** *kamala-yōni,* பெ.(n.) நான்முகன் (பிரமன்) (திவா.); Brahmān, the lotus - born.

*[Skt. kamala + yōni > த. கமலயோனி.]*

**கமலராகம்** *kamala-rāgam,* பெ. (n.) ஒன்பான் மணிகளுள் ஒன்றான பதுமராகம் (யாழ்.அக.); the precious stone, *padumarāgam.*

*[Skt. kamala + rāga > த. கமலராகம்.]*

**கமலவருத்தனை** *kamala-varuttanai,* பெ. (n.) வணங்குதற்கு அடையாளமாக தாமரை மொட்டுப் போலக் கைகளைக் குவிக்கை (பரிபா. 16, 11, உரை); *(Nāṭya)* a gesture with both hands signifying obeisance, consisting in folding one's hands so as to resemble a lotus bud.

**த. வ. தாமரைக் கை கூப்பு**

*[Skt.kamala+vartanā>த.கமலவருத்தனை.]*



**கமலவல்லி** *kamala-valli,* பெ.(n.) **கமலத்தேவி** பார்க்க; see *kamala-t-tēvi.*

**த. வ. தாமரைச்செல்வி.**

**கமலாகாரமாகவெரி-த்தல்** *kamalāgāramāga-veri-,* செ.கு.வி. (v.i) தாமரை வடிவத்தைப் போல் கொழுந்துவிட்டு எரியும்படி தீ மூட்டல்; to burn moderately with little fire so that the flame may resemble the shape of a lotus.

*[கமலாகாரம் + ஆக + எரி-.]*

**கமலாசனன்** *kamalācanan,* பெ. (n.) 1. நான்முகன் (பிரமன்); Brahmān, seated on a lotus. 2. அருகன்; Arhat, seated on a lotus.

*[கமலம் + ஆசனன்.]*

**கமலாசனி** *kamalācani,* பெ.(n.) திருமகள் (இலக்குமி); Lakṣmi, seated on a lotus.

*[கமலம் + ஆசனி.]*

**கமலாலயம்** *kamalālayam,* பெ.(n.) தாமரைக் கோயில்; lotus temple.

*[Skt. kamala-a-laya > த. கமலாலயம்.]*



**கமலாலயன்** *kamalālayan,* பெ.(n.) தாமரையை வாழிடமாகக் கொண்ட நான்முகன்; Brahmān who has his abode in a pink lotus. *"கமலாலயனுக்கருள்வோய் சரணம்" (பிரமோத். 22, 75).*

*[கமல+ஆலயன்.]*

*[Pkt. Kamalam >த. கமலம்.]*

**கமலினி** *kamalini,* பெ. (n.) 1. தாமரை; lotus plant. 2. பதின்மூன்று தரம் சாரணை தீர்ந்த இரசக் குளிகை, இதை 9 நாள் சாரணை தீர்ந்த இரசக் குளிகையென்றும் சொல்வர். (விளக்கத்திற்குக் கருவூரார் குருநூலையும், போகர் 7000 யும் பார்க்கவும்); a consolidated mercurial pill animated 13 times or for 9 days. (For details see the works of *Karuvūrār Gurunūl* and *Bōgar 7000).*

**கமலோத்தரம்** *kamalōttaram,* பெ.(n.) 1. செந்நிறம்; reddish colour or thinge. 2. செந் துருக்கம்; safflower-Carthamus tinctorious.

**கமனசித்தர்** *kamaṉa-cittar,* பெ.(n.) வான்வழியே நினைத்தவிடம் செல்ல வல்ல சித்தர் (வின்.); siddhar reputed to have the supernatural power of freely traversing through space.

த. வ. வான்செலல் அறிவர்.

*[கமனம் + சித்தர்.]*

*[Skt. kamaṉa > த. கமனர்.]*

**கமனசித்தி** *kamaṉa-citti,* பெ.(n.) வான் வழியே நினைத்தவிடம் செல்லும் ஆற்றல் (வின்.); supernatural power of freely traversing through space.

த. வ. வான்செலவாற்றல்.

*[Skt. kamaṉa+siddhi > த. கமனசித்தி.]*

**கமனப்பிரியா** *kamaṉa-p-piriyā,* பெ.(n.) மேளகர்த்தாக்களுளொன்று (சங். சந். 47); (Mus.) a primary rāga.

*[Skt. gamana+priya > த. கமனப்பிரியா.]*

**கமனம்**[1] *kamaṉam,* பெ.(n.) செல்லுகை; going, journeying, walking.

*[Skt. gamana > த. கமனம்.]*

**கமனம்**[2] *kamaṉam,* பெ.(n.) கருஞ்சீரகம்; black cumin seed Nigella sativa.

**கமனம்**[3] *kamaṉam,* பெ.(n.) 1. வானில் செல்லல்; wandering, as in. 2. வான் கமனம்; moving through the mid-air. 3. பெண் கமனம்; copulation.

**கமனாயகம்** *kamaṉā-yagam,* பெ.(n.) ஒருவகைப் பிசின் மரம்; gum-ammoniacal tree.

*[E. gumammoniacum > த. கமனாயகம்.]*

**கமனியம்** *kamaṉiyam,* பெ.(n.) அழகு; beauty.

**கமாசு** *kamāšu,* பெ.(n.) ஒரு வகைப் பண் (இராகம்); a musical mode.

*[U. Khamāz > த. கமாசு.]*

**கமாசுதார்** *kamāšudār,* பெ.(n.) சத்திர மேற்பார்க்கும் அலுவலர்; person appointed to supervise a cattiram.

*[U. kamāshdār > த. கமாசுதார்.]*

**கமாமிசு** *kamāmišu,* பெ.(n.) செயற்பாடு (வின்.); affairs, business.

*[U. kamāsh > த. கமாமிசு]*

**கமால்** *kamāl,* பெ.(n.) செயல் திறமை; cleverness.

*[Ar. kamāl > த. கமால்]*

**கமான்**[1] *kamāṉ,* பெ.(n.) வளைவு; arch.

*[U. kamān > த. கமான்.]*

**கமான்**[2] *kamāṉ,* பெ.(n.) வளைந்த குறடு; curling tongs.



**கமிசு** *kamisu,* பெ.(n.) மேல்சட்டை; shirt, chemise.

*[U. Qamis > த. கமிசு.]*

**கமிர்** *kamir,* பெ.(n.) புளிப்பு; leaven, yeast, fermented matter.

*[U. khamir > த. கமிர்.]*

**கயடேரிகம்** *kayaṭērigam,* பெ.(n.) அகில் (மூ.அ.); eagle wood.

**கயத்தம்** *kayattam,* பெ.(n.) துளசி (மலை.); sacred basil.

*[Skt. kāya-sthā > த. கயத்தம்.]*

**கயரோகம்** *kaya-rōgam,* பெ.(n.) என்புருக்கி நோய்; pulmonary disease, consumption. *"கயரோகத் திளைப்பர்" (சேதுபு. துராசார. 27).*

*[Skt. kṣaya+rōgam > த. கயரோகம்.]*

**கயாசிராத்தம்** *kayā-cirāttam,* பெ.(n.) கயையிற் செய்யும் முன்னோர் (பிதிரர்) சடங்கு; religious ceremony for the departed performed at *Gayā.*

*[**Skt.** gaya+cirāttam > த. கயாசிராத்தம்.]*

**கயாவாளி** *kayā-vāḷi,* பெ.(n.) 1. கயையிற் செய்யுஞ் சடங்கில் உண்ணுதற்கு உரிய பிராமணன்; one of the priestly class at *Gayā.*

*[**Skt.** kayā+**U.** wāl > த. கயாவாளி.]*

*த. ஆள் > **H.** wala*

**கயிங்கரியபரர்** *kayiṅkariya-parar,* பெ.(n.) பணிவிடை செய்வோர்; servants (Brah.).

**த. வ. பணியாளர்.**

*[**Skt.** kainkarya+para > த. கயிங்கரியபரர்.]*

**கயிமவாதி** *kayimavādi,* பெ.(n.) வசம்பு (மலை.); sweet flag.

**கயிரவம்** *kayiravam,* பெ.(n.) ஆம்பல்; water lily, white and red. *"கயிரவ நிறத்த பூங்கச்சு" (கந்தபு. யுத்தகாண். முதனாட். 21).*

*[**Skt.** kairava > த. கயிரவம்.]*

**கயிலி** *kayili,* பெ.(n.) பல வண்ணமுள்ள முகம்மதியர் உடை (யாழ்ப்.); a kind of checkered cloth worn by Muhammadans.

**த. வ. சாரம்.**

**மறுவ. கைலி**

*[**U.** khilat > த. கயிலி.]*

**கயை** *kayai,* பெ.(n.) பீகார் மாநிலத்திலுள்ள புகழ்பெற்ற இறைவழிபாட்டிடம்; *Gaya,* sacred city in *Bihar,* famous place of pilgrimage.

*[**Skt.** Gayā > த. கயை.]*

**கர்க்கசம்** *karkkašam,* பெ.(n.) நயமற்றது, கடினமானது; that which is rough, gruff, grating, unpolished. *"என் கர்க்கசச் சொல்" (இரகு. பாயி. 7).*

*[**Skt.** karkaša- > த. கர்க்கசம்.]*

**கர்க்கடகசங்கிராந்தி** *karkkaḍaga-caṅkirānti,* பெ. (n.) கடக (ஆடி) மாதப் பிறப்பு; beginning of the month of *kaḍagam (Áḍi),* when the sun passes to the sign of cancer.

*[**Skt.** karkaṭaka + caṅkirānti > த. கர்க்கடகசங்கிராந்தி.]*

**கர்க்கடகசந்திரன்** *karkkaḍaga-canḍiraṉ,* பெ. (n.) கடக ஓரை (ராசி)யில் நிற்குந் திங்கள்; the moon in cancer.

*[**Skt.** karkadaka+candiraṉ> த. கர்க்கடக சந்திரன்.]*

**கர்க்கடகசிங்கி** *karkkaḍaga-siṅgi,* பெ.(n.) கடுக்காய்ப் பூமரம்; Japanese wax-tree. *"கர்கடகசிங்கி...... அரிவையரைக் கூடு திறங் கொடுக்கும்" (பதார்த்த. 1008).*

*[**Skt.** karkaḍaka+šṛngi> த. கர்க்கடக சிங்கி.]*

**கர்க்கடகபாடாணம்** *karkkaṭaka-pāḍāṇam,* பெ.(n.) பிறவி செய்நஞ்சுகளுள் ஒன்று; a mineral poison.

**கர்க்கடகம்** *kar-k-kaṭakam,* பெ.(n.) 1. நண்டு (திவா.); crab. 2. ஓர் ஓரை (இராசி.) (சூடா.); cancer, a constellation of the Zodiac.

*[**Skt.** karkaṭaka > த. கர்க்கடகம்.]*



**கர்க்கர்** *karkkar,* பெ.(n.) வான நூல் ஆசிரியரான ஒரு முனிவர்; *Garga,* one of the earliest astronomers.

*[**Skt.** garga > த. கர்க்கர்.]*

**கார்க்கரி**[1] *karkkari,* பெ.(n.) கரகம் (பிங்.); a jar for holding water.

*[**Skt.** karkari > த. கர்க்கரி.]*



**கார்க்கரி**[2] *karkkari,* பெ.(n.) தயிர்கடை தாழி (சூடா.); churn.

*[**Skt**. gargari > த. கர்க்கரி]*

**கர்க்கவம்** *karkkavam,* பெ.(n.) மரவகை; Ceylon tea.

**கர்ச்சினை** *karccinai,* பெ.(n.) பேரொலி (திவா.); roar, as of a lion or a thunderstorm.

**த. வ. உரப்பு, உரப்புதல்.**

*[**Skt.** garjana > த. கர்ச்சினை.]*

**கர்ச்சி**[1]**-த்தல்** *karcci-,* 4 செ.கு.வி.(v.i.) முழங்குதல்; to roar, as a wild beast or thunder.

*[**Skt.** garj-, > த. கர்ச்சி-,]*

**கர்ச்சி**[2] *karcci,* பெ.(n.) சிறுவழுதுணை; Indian night shade.

**கர்ச்சிதம்** *karccidam,* பெ.(n.) முழக்கம்; rumbling of clouds, rolling of distant thunder; roaring of a lion.

*[**Skt.** garjita > த. கர்ச்சிதம்.]*

**கர்ச்சிப்பு** *karccippu,* பெ.(n.) **கர்ச்சிதம்** பார்க்க; see *karccidam.*

**கர்ச்சு** *karccu,* பெ.(n.) செலவு; charge, expense, expenditure (G.Sm.D.i.ii, 50).

*[**U.** kharcu > த. கர்ச்சு.]*

**கர்ச்சூர்** *karccūr,* பெ.(n.) கர்ச்சூரம் பார்க்க; see karccuram.

*[**Skt.** kharcu > த. கர்ச்சு.]*

**கர்ச்சூரம்** *karccūram,* பெ.(n.) பேரீந்து; date fruit.

**கர்ச்சூரிக்காய்**[1] *karccūri-k-kāy,* பெ.(n.) பேரீச்சங்காய்; date fruit.

*[கர்ச்சூரி+காய்.]*

*[**Skt.** kharjura > த. கர்ச்சூரி.]*

**கர்ச்சூரிக்காய்**[2] *karccūri-k-kāy,* பெ.(n.) ஒருவகைப் பணிகாரம்; a preparation of confectionery, a puff.

*[கர்ச்சூரி + காய்.]*

*[**Skt.** kharjura > த. கர்ச்சூரி.]*

**கர்சு** *karcu,* பெ.(n.) **கர்ச்சு** பார்க்க; see *karccu.*

**கர்ணகடூரம்** *karṇa-kaḍūram,* பெ.(n.) **கர்ணகடோரம்** பார்க்க; see *karṇa kaḍōram.*

**கர்ணகடோரம்** *karṇa-kaḍōram,* பெ. (n.) காதுக்குக் கடுமையானது; that which is unpleasant to hear, harsh, jarring, discordant sound.

**த.வ. செவிக்கடூரம்.**

*[**Skt.** karṇa+kaṭhōra > த. கர்ணகடோரம்.]*

**கர்ணகூசிகை** *karṇa-kūśigai,* பெ.(n.) காதுநோய் வகை (தைலவ. தைல. 44); a disease of the ear.

*[**Skt**. karṇa-gūthaka > த. கர்ணகூசிகை.]*

**கர்ணசூலை** *karṇa-śūlai,* பெ.(n.) காது வலி (தைலவ. தைல. 44); ear-ache.

**த.வ. காதுவலி.**

*[கர்ணம் + சூலை.]*

*[**Skt.** karṇa>த. கர்ணம்.]*

**கர்ணநாதம்** *karṇa-nādam,* பெ. (n.) காதிரைச்சல் நோய் (தைலவ. தைல. 44); singing in the ears, a disease of the ear.

**த.வ. காதரவம்.**

*[**Skt.** karṇa+nādha> த. கர்ணநாதம்.]*

**கர்ணப்பூ** *karṇa-p-pū,* பெ.(n.) காதின் மேற்பகுதியில் முருகு எனும் காதணியை யடுத்து அணியப்பெறும் பொன்னாலான ஒருவகைக் காதணி; jewel worn at the top of the ear next to the murugu, usually made of gold.

*[கர்ணம் + பூ.]*

*[**Skt.** karṇa>த. கர்ணம்.]*

**கர்ணபத்திரம்** *karṇa-pattiram,* பெ. (n.) 1. ஓலையால் செய்த காதணி; gold earning fashioned after a roll of palmyra leaf worn by women. 2. கடவுள் திருமேனிகளுக்குச் சாத்தும் காது போன்ற அணி; ear-like ornament for the idol made of gold or silver.

த.வ. **காதோலை.**

*[Skt. karṇa+patra > த. கர்ணபத்திரம்.]*



**கர்ணபரம்பரை** *karṇa-parambarai,* பெ.(n.) கேள்வி வழியாக வந்த செய்தி; tradition, traditional story or information.

த.வ. **செவிமரபு.**

*[Skt. karṇa-parampara > த. கர்ணபரம்பரை.]*

**கர்ணபூரம்** *karṇa-pūram,* பெ.(n.) காதணி வகை; a kind of ear-ornament.

த.வ. **காதணி.**

*[Skt. karṇa+pūra > த. கர்ணபூரம்.]*

**கர்ணம்** *karṇam,* பெ.(n.) காது; ear.

*[Skt. karṇa > த. கர்ணம்.]*

**கர்ணமந்திரம்[1]** *karṇa-mandiram,* பெ.(n.) இறக்கும் நிலையிலிருப்பவரின் காதில் சொல்லும் மந்திரம்; verses of mandram, uttered into the ear of a dying person. (Brah.).

த.வ. **செவிமந்திரம்.**

*[கர்ணம்+மந்திரம்.]*

*[Skt. karṇa > த. கர்ணம்.]*

**கர்ணமந்திரம்[2]** *karṇa-mandiram,* பெ.(n.) 1. காதோடு சொல்லும் கமுக்கம் (இரகசியம்); secret, as whispered in the ear. 2. கமுக்கமாகப் பேசிப் பெறுஞ் செல்வாக்கு; influence over a person obtained by gaining his ear.

த.வ. **செவிமந்தணம்.**

*[கர்ணம்+மந்திரம்.]*

*[Skt. karṇa > த. மந்திரம்.]*

**கர்ணன்** *karṇaṉ,* பெ.(n.) **கன்னன்** பார்க்க; see *kaṉṉaṉ.*

*[Skt. karṇaṉ > த. கர்ணன்.]*

**கர்ணா** *karṇā,* பெ.(n.) ஒருவகை இசைக்கருவி; a kind of musical instrument. *"கர்ணாவொடு சிறந்த கொம்புகள்........ முழங்கிவர" (இராமநா. யுத்த. 87).*

*[U. karṇā > த. கர்ணா.]*

**கர்ணிகம்** *karṇigam,* பெ.(n.) இசிவுநோய் (சன்னி)வகை (சீவரட். 27); a kind of delirium, one of 13 *caṉṉi.*

*[Skt. karṇika > த. கர்ணிகம்.]*

**கர்ணிகை** *karṇigai,* பெ.(n.) தாமரைப் பொகுட்டு; pericarp of the lotus or rudiment of the future fruit.

த.வ. **பொகுள்.**

*[Skt. karṇikā > த. கர்ணிகை.]*

**கர்த்தத்துவம்** *karttattuvam,* பெ. (n.) கர்த்திருத்துவம் பார்க்க; see karttiruttuvam. *"கர்த்தத்துவம் அவர்தோளின் மேலிருக்கும்" (விவிலி. ஏசா. 9, 6).*

*[Skt. kartṛtva > த. கர்த்தத்துவம்.]*

**கர்த்ததுரோகம்** *kartta-durōgam,* பெ.(n.) அரச இரண்டகம் (வின்.); high treason.

த.வ. **அரசஇரண்டகம்.**

*[Skt. kartṛ+drōha > த. கர்த்ததுரோகம்.]*

**கர்த்ததுரோகி** *kartta-durōgi,* பெ.(n.) அரச இரண்டகம் செய்வோன் (வின்.); one guilty off high treason.

த.வ. **இரண்டகன்.**

**கர்த்தபம்** *karttapam,* பெ.(n.) கழுதை (பிங்.); ass, donkey.

*[Skt. gardabha > த. கர்த்தபம்.]*

**கர்த்தமன்** *karttaman*, பெ.(n.) **கருத்தமன்** பார்க்க; see *karuttaman*.

*[Skt. kardama > த. கர்த்தமன்.]*

**கர்த்தரிப்பிரயோகம்** *karttari-p-pirayōgam*, பெ.(n.) செய்வினை சொற்றொடர் (பி.வி.36, உரை); (Gram.) active voice.

*[Skt. kartari-prayōga > த.கர்த்தரிப் பிரயோகம்.]*

**கர்த்தவம்** *karttavam*, பெ.(n.) **கர்த்தபம்** பார்க்க; see *karttapam*. *"நீ கர்த்தவ மாதியென்றான்" (உபதேசகா. சிவத் துரோகி. 455).*

*[Skt. gardabha > த. கர்த்தவம்.]*

**கர்த்தவியம்** *karttaviyam*, பெ.(n.) செய்யத்தக்கது; that which ought to be done, duty, obligation. *"கர்த்தவிய மெவ்விடம்" (தாயு. எங்குநிறை. 1).*

**த.வ. கடமை**

**கர்த்தன்** *karttan*, பெ.(n.) **கர்த்தா** பார்க்க; see *karttā*.

**கர்த்தா** *karttā*, பெ.(n.) 1. செய்வோன்; doer, maker, agent, author, managing member of a family, one who performs, as a religious ceremony. 2. வினை முதல் (நன். 297); (Gram.) subject of a sentence, agent of an action. 3. கடவுள்; God, as creator. 4. தலைவன் (விவிலி. மத். 7, 22); master, chief, lord.

**த.வ. கருத்தன்.**

*[Skt. kartā > த. கர்த்தா.]*

**கர்த்தாக்கள்** *karttākkaḷ*, பெ.(n.) படைப்பு முதலிய தொழில் புரியம் ஐந்து வினைஞர்கள். (பஞ்சகர்த்தாக்கள்); (šaiva.) agents, term applied to the five deities as those through whose actions for the benefit of souls the supreme power manifests itself, the deities being. *நான்முகன் (பிரமன்), திருமால் (விஷ்ணு), சிவன் (உருத்திரன்), பெருவுடையார் (மகேசுவரன்), அருட்சிவன் (சதாசிவன்).* 2. மதுரை நாயக்கவரசர் பட்டப் பெயர்; title of thee *Nāyaka* kings of Madurai. *"கர்த்தாக்கள் மெச்சஞ்சலியா மதி மந்திரி" (பெருந்தொ. 1300).*

**கர்த்தாரியோகம்** *karttāri-yōgam*, பெ.(n.) ஓரை (இலக்கினத்து)க்கு இரண்டு, பன்னிரண்டாமிடங்களில் பாவிகளிருக்கையால் பிறப்பியத்துக்குரியோனு(சாதகனு)க்குண்டாம் ஓகம் (யோகம்) (சோதிடகிரக. 57); (Astrol.) a yōga in which malefic planets occupy the second and the twelvth sign from the ascendant.

*[Skt. karttāri+yōga > த. கர்த்தாரியோகம்.]*

**கர்த்தாளி** *karttāḷi*, பெ.(n.) உரியவன்; heir. *"அம்மான் சொத்துக்கு மருமகன் கர்த்தாளி" (இ.வ.).*

*[Skt. கர்த்தா > த. கர்த்தாளி; ஆள் – ஆளி.]*

**கர்த்திருசாதாக்கியம்** *karttiru-sādākkiyam*, பெ. (n.) நான்கு முகங்களோடும் எட்டுக் கைகளோடுங் கூடிய பெருவுடையார்(மகேசுர) வடிவம் (தத்துவப். 191); *Mahēšvara* manifestation of *Šiva* with four faces and eight hands.

**த.வ. எண்டோளீச வடிவம்.**

*[Skt. kartṛ+sādākhya>கர்த்திருசாதாக்கியம்.]*

**கர்த்திருத்துவம்** *karttiruttuvam*, பெ.(n.) 1. தொழில் நடத்து முதன்மை; privilege of commencing or doing an act. 2. கடவுட்டன்மை; God head.

**த.வ. செயலாண்மை.**

*[Skt. kartṛ-tva > த. கர்த்திருத்துவம்.]*

**கர்ப்பகிரகம்** *karp-pa-kiragam*, பெ.(n.) கோயிலின் நடுவில் மூலவர் இடத்தைக் கொண்டு விளங்கும் இடம், கருவறை; sanctum sanctorum.

*[Skt. garbha+gṛha>த.கர்ப்பகிரகம்.]*

**கர்ப்பக்கிருகம்** *karppa-k-kirugam*, பெ.(n.) கருவறை; inner sanctuary of a Hindu temple, in which the fixed idols is placed.

**த.வ. உண்ணாழிகை.**

*[Skt. garbha-grha > த. கர்ப்பக்கிருகம்.]*

**கர்ப்பக்குழி** *karppa-k-kuḻi,* பெ.(n.) கருதங்கும் உறுப்பு; the uterus.

*[கர்ப்பம் + குழி.]*

*[த. கருப்பம் >**Skt.** garbha.]*

**கர்ப்பகோசம்** *karppa-kōšam,* பெ.(n.) கர்ப்பக்குழி பார்க்க; see karppa-k-kuḻi.

*[**Skt.** garbha+kōsa> த. கர்ப்பகோசம்.]*

**கர்ப்பமேகம்** *karppa-mēgam,* பெ.(n.) வெள்ளைநோய்; leucorrhoea.

**கர்ப்புரை** *karppurai,* பெ.(n.) நறும்புகை (சாம்பிராணி) மரம் (சங்.அக.); benzoin tree.

*[**Skt.** karburā> த. கர்ப்புரை.]*

**கர்பூரக்கிச்சிலிக்கிழங்கு** *karppūra-k-kiccili-k-kiḻaṅgu,* பெ.(n.) பூலாங்கிழங்கு; zedoary root.

*[கர்ப்பூரம்+கிச்சிலி+கிழங்கு.]*

*[**Skt.** karpurā > த. கர்ப்பூரம்.]*

**கர்ப்பூரக்கிளுவை** *karppūra-k-kiluvai,* பெ.(n.) மலைமா; hill balsam tree.

*[கர்ப்பூரம்+கிலுவை.]*

*[**Skt.** karpurā > த. கர்ப்பூரம்.]*

**கர்ப்பூரக்கொடி** *karppūra-k-kōḍi,* பெ.(n.) வெள்ளைக்கொடி; a kind of betel. (G.sm.D.215).

*[கர்ப்பூரம்+கொடி.]*

*[**Skt.** karpūra > த. கர்ப்பூரம்.]*

**கர்ப்பூரசிலாசத்து** *karppūra-cilā-cattu,* பெ. (n.) ஒருவகை மருந்துக்கல்; foliated *Gystallized gypsum.*

**கர்ப்பூரத்துளசி** *karppūra-tuḷaši,* பெ.(n.) கர்ப்பூர மணமுள்ள துளசி வகை; a kind of *tuḷaci* plant that diffuses the smell of camphor.

*[கர்ப்பூரம்+துளசி.]*

*[**Skt.** karpūra > த. கர்பபூரம்.]*

**கர்ப்பூரத்தைலம்** *karppūra-t-tailam,* பெ.(n.) 1. கர்ப்பூரம் போல மணமுள்ள பூச்சு மருந்து; oil or spirit of turpentine. 2. கர்ப்பூரத்தினின்று எடுக்கும் நெய்மம் (தைலம்); oil of camphor.

*[கர்ப்பூரம் + தைலம்.]*

**கர்ப்பூரதீபம்** *karppūra-tīpam,* பெ.(n.) கர்ப்பூரத்தினின்று எரியுந் தீபம் (பரத. ஒழிபி. 42, உரை); lighted camphor used in worship.

*[கர்ப்பூரம் + தீபம்.]*

**கர்ப்பூரநீர்** *karppūra-nīr,* பெ.(n.) கர்ப்பூர நீர்மம் (வின்.); tincture of camphor, camphor in solution.

*[கர்ப்பூரம் + நீர்.]*

**கர்ப்பூரப்புல்** *karppūra-p-pul,* பெ.(n.) ஒருவகை மணப்புல் (வின்.); lemon-grass. Andropogon citratus.

*[கர்ப்பூரம் + புல்.]*

**கர்ப்பூரம்**[1] *karppūram,* பெ.(n.) 1. எரிக்குங் கர்ப்பூரம்; common camphor. 2. முக வாசங்களுள் ஒன்றான பச்சைக் கர்ப்பூரம் (சீவக. 838, உரை); comphor in its native state, one of five *muka-vācam.* 3. **கர்ப்பூரமரம்** பார்க்க; see *karppūra-maram.*

*[**Skt.** karpūra > த. கர்ப்பூரம்.]*

**கர்ப்பூரம்**[2] *karppūram,* பெ.(n.) பொன் (பிங்.); Gold.

*[**Skt.** karbūra > த. கர்ப்பூரம்.]*

**கர்ப்பூரமணி** *karppūra-maṇi,* பெ.(n.) **அம்பர்**[3] பார்க்க; see *amber*[3].

*[கர்ப்பூரம் + மணி.]*

**கர்ப்பூரமரம்** *karppūra-maram,* பெ.(n.) 1. கர்ப்பூரம் உண்டாதற்குரிய மரம்; Japan comphor tree. 2. மரவகை (வின்.); blue-gum tree.

*[கர்ப்பூரம் + மரம்.]*

**கர்ப்பூரவல்லி** *karppūra-valli,* பெ.(n.) **கர்ப்பூரவள்ளி** பார்க்க; see *karppūra-vaḷḷi.*

**கர்ப்பூரவள்ளி** *karppūra-vaḷḷi,* பெ.(n.) 1. ஒருவகை மருந்துச் செடி; thick-leaved lavender. *"நெஞ்சிற் கட்டு கபம் வாதமும்போம்.......... கர்ப்பூரவள்ளி" (பதார்த்த. 330).* 2. ஒருவகை வாசனைச் செடி; country borage.

*[கர்ப்பூரம் + வள்ளி.]*

[**Skt.** *karpūra* + த. *வள்ளி.*]



**கர்ப்பூரவாழை** *karppūra-vāḻai,* பெ.(n.) வாழைவகை; a kind of plantain.

[*கர்ப்பூரம் + வாழை.*]

**கர்ப்பூரவில்வம்** *karppūra-vilvam,* பெ.(n.) வில்வமரவகை (வின்.); a very fragrant bael tree.

[*கர்ப்பூரம் + விலை.*]

**கர்ப்பூரவிலை** *karppūra-vilai,* பெ.(n.) கோவில் நிலங்களுக்குக் கொடுக்கும் விலை; price paid for temple lands.

**கர்ப்பூரவெற்றிலை** *karppūra-veṟṟilai,* பெ.(n.) வெற்றிலை வகை (வின்.); fragrant white betel.

[*கர்ப்பூரம் + வெற்றிலை.*]

**கர்ப்பூராரத்தி** *karppūrāratti,* பெ.(n.) கர்ப்பூரத்தாலாகிய ஆலத்தி; waving of lighted camphor.

[*கர்ப்பூரம் + ஆரத்தி.*]

**கர்ப்போட்டம்** *karppōṭṭam.* பெ.(n.) சிலை (மார்கழி)ப் பிற்பகுதியில் கருக்கொண்ட மேகத்தின் தென்சார்பான ஓட்டம்; southern passage of the rain clouds about the latter half of the *Mārkaḻi* month.

[**Skt.** *garbha* + த. *ஓட்டம்.*]

**கர்பரி** *karpari,* பெ.(n.) குழப்பம் (வின்.); confusion.

[**Skt.** *garbari* > த. *கர்பரி.*]

**கர்மகாண்டம்**[1] *karmakāṇḍam,* பெ.(n.) சடங்குகளைப் பற்றிக் கூறும் மறை (வேத) நூல்; (In veda) a portion of the vedas which deals about the sacrificial rites and ceremonial acts and observances as mentioned above. 2. கணிய (சோதிட) நூலின்படிக் கோள்களின் (கிரகக்) கோளாறினாலேற்பட்ட துன்பங்களுக்குப் (பாப நிவர்த்தி)யைக் கூறும் சித்தர்கள் செய்த நாடி நூல்; (In Astrology)) that portion of siddhar's science treating about expiation of sin and reparation for the evil influences of stars. 3. மருத்துவ (வைத்திய) நூலின்படி (கர்மத்தினால்) ஏற்படும் நோய்களையும், அவற்றை நீக்கும் (நிவர்த்திக்கும்) ஏதுவைப் பற்றியும் கொடுக்கும் மருந்துகளைப் பற்றியும் கூறும் நூல்; (In medicine).

**கர்மகாண்டம்**[2] *karma-kāṇḍam,* பெ. (n.) 1. முறைமை யாகம் முதலிய வைதிகங்களைப் பற்றிக் கூறும் மறையின் (வேதத்தின்) முற்பகுதி; that part of the *vēda* chiefly *Brāhmaṇā* literature which treats about dharma, ceremonial acts and sacrificial rites. 2. அகத்தியர் எழுதியதாகக் கூறப்படும் ஒரு மருத்துவ நூல்; a medical treatise, attributed to Agastya.

[**Skt.** *karman* + த. *காண்டம்.*]

**கர்மகுணம்** *karmakuṇam,* பெ.(n.) ஊழ் வினையால் மனிதருக்கு நேரும் நிலைமை; the condition of life in man resulting from his acts done in the previous birth.

[*கர்மம் + குணம்.*]

**கர்மசங்கடம்** *karmaśaṅkaḍam,* பெ. (n.) முற்பிறப்பிற் செய்த கரிசு (பாவங்)களினாலேற்பட்ட தீராச் சங்கடங்கள்; endless sufferings according to one's karma in the former births.

[*கர்மம் + சங்கடம்.*]

**கர்மசலம்** *karmaśalam,* பெ.(n.) வியர்வை; perspiration.

[*கர்மம் + சலம்.*]

**கர்மசிரத்தை** *karmaśirattai,* பெ.(n.) செயலில் (காரியத்தில்) முழு ஈடுபாடு; கவனம்; dedication (to work) : (of one's work) application. *'கர்மசிரத்தையோடு பணியாற்றும் போது மனம் செயலில் ஒன்றிவிடுகிறது'.*

**த. வ. கடப்பாடு.**

**கர்மசீலன்** *karmaśīlaṉ,* பெ.(n.) பயனைக் கருதாமலே தான் செய்யும் கடமையைச் செய்து முடிப்பவன்; one who perseveres in his duties without looking forward to any reward.

*[கர்மம் + சீலன்.]*

**கர்மடன்** *karmaḍaṉ,* பெ.(n.) கருமமே பெரிதென்று கருதுவோன் (தென். இந். க்ஷேத். 58); one who holds that *karma* is of supreme importance.

**த. வ. கருமக்கோட்பாட்டாளன்.**

*[Skt. karmaṭha > த. கர்மடன்.]*

**கர்மணிப்பிரயோகம்** *karp,* பெ. (n.) செயப்பாட்டு வினை வழக்கு (பி.வி.36, உரை); passive voice.

*[Skt. karmaṇi+prayōga > த. கர்மணிப் பிரயோகம்.]*

**கர்மதாரயம்** *karma-tārayam,* பெ.(n.) இரு பெயரொட்டுப் பண்புத்தொகை (பி.வி.22, உரை); (Gram.) appositional compound noun made up of two nouns in which 'ākiya' the particle of apposition is understood.

*[Skt. karmadhāraya > த. கர்மதாரயம்.]*

**கர்மநிட்டன்** *karma-niṭṭaṉ,* பெ.(n.) கருமத்தை மேற்கொண்டொழுகுவோன்; one devoted to the strict observance of one's religious duties.

**த. வ. கடப்பாட்டாளன்.**

*[Skt. karman+ni-ṣṭha > த. கர்மநிட்டன்.]*

**கர்மநோய்** *karma-nōy,* பெ.(n.) 1. யாதொரு காரணமு மில்லாமலே ஏற்பட்டு ஊழ்வினை தன்னை விட்டகல அதுவும் கூடவே உடம்பை விட்டகலும் ஊழ்வினை நோய்; disease coming on without any apparent cause and disappearing with the extinction of Karma (sins of previous births). 2. தீராத நோய்; an incurable or chronic disease. 3. உடம்பை விட்டகலாது எப்போதும் துன்பத்தைக் கொடுக்கும் நோய்; any chronic or lingering disease attended with unbearable sufferings. 4. ஆயுள் வேதப்படி குட்டம் முதலிய வினைப்பயன் நோய்கள்; according to Ayurveda, the karmic diseases as leprosy etc.

**கர்மப்பிரமவாதி** *karma-p-pirama-vādi,* பெ.(n.) வைதிகச் சடங்குகளையே பிரமமெனவாதிக்கும் பூர்வமீ மாஞ்சகன்; one who affirms that *karma* itself is *Brahman*, i.e. one who believes that the strict observance of *vēdic* rituals is the highest goal of man and that in such observance alone lies the true path of liberation.

**த. வ. தொன்மநடப்பாளன்.**

**கர்மபந்தம்** *karmapantam,* பெ.(n.) முழு வினைப்பயனாலேற்படும் பிறவி முதலிய சொந்தங்கள்; bonds of action. i.e., re-birth as the result of actions in the previous life (சா.அக.).

**த. வ. பிறவித்தொடர்.**

*[கர்மம் + பந்தம்.]*

**கர்மபலம்** *karma-palam,* பெ. (n.) 1. முழுமையான முன்வினைப் பயனுக்கு ஈடாக மாந்தர்களுக்கு ஏற்படும் இன்பம் துன்பம் முதலியன; the fruit or recompense of actions such as pain, pleasure etc. resulting from act or acts in a former life. 2. வினைப்பயன்; the reflections or results of acts of former births, which one has to suffer in the present birth. (சா.அக.).

**த. வ. வினைப்பயன்.**

*[கர்மம் + பலம்.]*

**கர்மபிந்து** *karmapindu,* பெ.(n.) **கர்மசலம்** பார்க்க; see *karmacalam* (சா.அக.).

**கர்மம்**[1] *karmam,* பெ.(n.) முற் பிறப்பிற் செய்த வினை; ஊழ்வினை (In philosophy) actions or deeds of previous birth (good or evil) rebounding on the soul and resultiing subsequently in the enjoyments and sufferings during the present birth or shifted to future births. 2. வாக்கு, மனம், காயம் ஆகியவற்றின் முயற்சி; (in psychology) the increase in speeches or utteraces of words, reflections of thought or mind and actions of the body. 3. (In medicine) மருந்துகளுக் கேற்பட்ட உடம்பின் தொடர்புடைய தொழில்கள்; the physiological actions of medicines. 4. மூன்று மாதத்திய கரு; (figuratively) refers to the foetus three month's old in the womb. 5. ஒரு பூடு; a plant (சா.அக.).

**த. வ. கருமம்.**

*[Skt. karma > த. கர்மம்.]*

**கர்மம்**[2] *karmam,* பெ.(n.) **கருமம்** பார்க்க; see *karumam.*

*[தமிழ் – கருமம் > Skt. karman.]*

**கர்மம்**[3] *karmam,* பெ.(n.) 1. (தன் வாழ்நாளில் குடும்பத்துக்கும் குமுகத்துக்கும் செய்ய வேண்டிய) கடமை; duty (to one's family and the society), action. *"கர்மத்தைச் செய், பலனை எதிர்பார்க்காதே" என்பது கீதையின் சாரம்.* 2. (பின் பிறவியில் பயன் தருவதாக இருக்கக் கூடிய முன் பிறவியின்) செயல்; வினை; deeds in the previous birth whose consequences one has to bear now, karma. *'நான் இப்படி இருப்பதற்குப் போன பிறவியில் என்ன கர்மம் செய்தேனோ!', 'நீ செய்த கர்மம் ஏழு பிறவிக்குப் போதும்'.*

**த. வ. பிறவிவினை.**

**கர்மயோகம்** *karmayōgam,* பெ. (n.) ஊதியத்தைக் கருதாமல் கடமை எண்ணமாகச் செய்யும் தொழில்களும் அவற்றிற்குரிய கடைப்பிடிகளும்; (In moral philosophy) performance of virtuous actions, rites and observances without any expectation of fruits derived there from. 2. நெடுங்காலம் நிலைத்திருக்க வேண்டி, மூச்சையடக்கிச் செய்யும் வாசியோகம்; (In yoga philosophy) that kind of yoga which consists chiefly in the control of breath. It is practised mainly for the purpose of attainment of longevity.

**த. வ. வினைஓகம்.**

**கர்மரோகம்** *karmarōgam,* பெ.(n.) **கர்மநோய்** பார்க்க; see *karma-nōy.*

**த. வ. விடா வினைநோய்.**

**கர்மவசம்** *karmavašam,* பெ.(n.) ஊழ்வினையின் பயனாக ஒருவனை வந்தடையும் வினைப்பயன்; the necessary sufferings considered as the inevitable consequences of actions done in a former life (சா.அக.)

**த. வ. வினைப்பயன்.**

**கர்மவிபாகம்** *karmavipākam,* பெ. (n.) 1. அகத்தியர் செய்ததாகச் சொல்லும் ஒரு மருத்துவ நூல்; a treatise on medicine said to have been compiled by Agastya. 2. ஊழ்வினைப் பயன், இப்பிறவியில் நேரப் பக்குவப்படுதல்; the ripening of actions. i.e. the good or evil consequences occurring in this life for human acts performed in previous births.(சா.அக.).

*[Skt. karma+vibaga]*

**கர்மவியாதி** *karmaviyāti,* பெ.(n.) **கர்மநோய்** பார்க்க; see *karma-nōy.*

**கர்மவேதனை** *karmavēdaṉai,* பெ.(n.) ஊழ்வினையினா லேற்படுந் துன்பங்கள்; sufferings and troubles due to sins of previous births or past karma.

**த. வ. வினைத்துன்பம்.**

*[கர்மம் + வேதனை.]*

**கர்மபசயாதிசயம்** *karma-kṣayādiśayam,* பெ.(n.) அருகசமயத்தார் கூறும் வியப்பு மூன்றனுள் வினை நீங்குகையாகிய வியப்பு (சீவக. 2813, உரை); (Jaina) pre-eminence arising from annihilation of all karma, one of three aticayam.

த. வ. வினையகல் வியப்பு.

*[Skt. karma+kṣata+ati-śaya > த. கர்மசயாதிசயம்.]*

**கர்மாந்தரம்** *karmāndaram,* பெ.(n.) **கருமாந்தரம்** பார்க்க; see *karumāndaram.*

**கர்மி** *karmi,* பெ.(n.) ஊழ் வினையால் கட்டுண்டவன்; one who is afflicted by past karma. 2. தொழிலாளி; artisan (சா.அக.).

**கர்மேந்திரியம்** *karmēndiriyam,* பெ.(n.) ஐம்பொறிகள்; the operative organs such as the mouth or the tongue, hands, the genitals, the anus and the feet. 2. **கருமேந்திரியம்** பார்க்க; see *karu-mēndiriyam.* 3.தொழிலியற்றும் அங்கங்கள்; the functioning organs (சா.அக.).

த. வ. ஐம்பொறிகள்.

**கர்மை** *karmai,* பெ.(n.) காரைச்செடி; thorny webera, canthium parviflorum alias webera tetrandra (சா.அக.).

**கர்லா** *karlā,* பெ.(n.) **கர்லாக்கட்டை** பார்க்க; see *karlā-k-kaṭṭai.*

*[U. karela> த. கர்லா.]*

**கர்லாக்கட்டை** *karlā-k-kaṭṭai,* பெ.(n.) உடற்பயிற்சிக்காகச் சுழற்றுந் திரண்ட கனத்த மரக்கட்டை; Indian club used for physical exercises.



த. வ. சுழற்றுக்கட்டை, சுக்குமாந்தடி.

*[கர்லா + கட்டை.]*

*[U. karela> த.கர்லா.]*

**கர்வடம்**[1] *karvaḍam,* பெ.(n.) மலையும் ஆறுஞ் சூழ்ந்த ஊர் (திவா.); town surrounded by mountains and rivers.

த. வ. முல்லை.

*[Skt. harvaṭa> த. கர்வடம்.]*

**கர்வடம்**[2] *karvaḍam,* பெ.(n.) நானூறு சிற்றூர்களுக்குத் தலைச் சிற்றூர் (யாழ்.அக.); the chief village in a group or 400 villages.

த. வ. முல்லைப்பேரூர்.

*[Skt. karvaṭa > த. கர்வடம்.]*

**கர்வம்**[1] *karvam,* பெ.(n.) ஆயிரங்கோடி (சுக்கிரநீதி. 106); thousand crores.

த. வ. ஆயிரம் குவளை.

*[Skt. kharva > த. கர்வம்.]*

**கர்வம்**[2] *karvam,* பெ.(n.) பெருமை; pride. *'நாம் அனைவருமே கர்வப்பட்டுக் கொள்ள வேண்டிய செய்தியிது'.*

த. வ. பீடு.

**கர்வம்**[3] *karvam,* பெ.(n.) செருக்கு; haughtiness, arrogance.

*[Skt. garva > த. கர்வம்.]*

**கர்வம்**[4] *karvam,* பெ.(n.) ஒன்பான் செல்வங்களுளொன்று; one of the none treasures of *Kubēra.*

*[Skt. kharva > த. கர்வம்.]*

**கர்வி**[1]**-த்தல்** *karvi-,* 4 செ.கு.வி.(v.i.) செருக்குதல்; to be proud, arrogant.

*[Skt. garva-, > த. கர்வி-த்தல்.]*

**கர்வி**[2] *karvi,* பெ.(n.) செருக்கன்; proud fellow.

*[Skt. garvin > த. கர்வி.]*

**கர்விதன்** *karvidaṉ,* பெ.(n.) **கர்வி** பார்க்க; see *karvi.*

*[Skt. garvita > த. கர்விதன்.]*

**கர்விட்டன்** *karviṭṭaṉ,* பெ.(n.) **கர்வி**[2] பார்க்க; see *karvi*[2].

*[Skt. garviṣṭha>கர்விஷ்டன்>த. கர்விட்டன்.]*

**கர்னகுட்டம்** *karnakuttam,* பெ. (n.) உடம்பில் பச்சை நிறத்துடன் பொடிப் பொடியாக வெடித்தலும், தாக்கத்தினால் உடம்பு பருத்துத் திமிருடன் காக்கட்டான் பூ நிறமாகத் தோன்றித் தடிப்பு, வீக்கம், மிகுந்த கபம் முதலிய குணங்களைக் காட்டும் ஒருவகைத் தொழு நோய்; a kind of leprosy marked by scaly affections of the skin, which soon become greenish on its surface and when afflicted with the aggrevated condition of the three humours, the body is turned livid with the characteristic symptoms of raised patches, swelling numbness etc. (சா.அக.)

**த. வ. கடுங்குட்டம்.**

**கர்னசூலை** *karnašūlai,* பெ. (n.) 1. கன்னசூலை பார்க்க; see kann-sūlai. 2. குத்தல் வலியோடு கூடிய கன்னக் கழலை; a tumour in the region of the cheek accompanied by acute pain. 3. எவ்வித காரணத்தினாலும், கன்னத்திலேற்படும் குத்தல் நோய்; any acute or exacting pain of the cheek from any cause whatsoever.

**த. வ. கன்னச்சூலை.**

*[கர்னம் + சூலை.]*

**கர்னம்** *karnam,* பெ.(n.) கன்னம்; cheek. (சா.அக.)

**கர்னிகயோனிரோகம்** *karnika-yōni-rōgam,* பெ.(n.) இது காலமற்ற காலத்தின் புணர்ச்சியினால் வளி அதிகரித்து அரத்தத்தைக் கெடுத்து அல்குலின் வழியில் இரத்தம் திரண்டு, தாமரைக் காயைப் போலும், விழுது விட்டதைப் போலும் தொங்கும் ஒரு வகைத் தசையண்ட நோய்; a disease of the vagina, arising from abnormal growth of flesh and accumulation of blood in the walls of the vagina. It is marked by a pendulous growth (poly-poid) hanging in the passage of the vagina (சா.அக.).

**த. வ. முகிழ்நோனிநோய்.**

*[Skt. karnika+yoni+roga.]*

**கர்னிகை** *karnigai,* பெ.(n.) தாமரைக் கொட்டை; the pericarp of a lotus. (சா.அக.)

**த. வ. பொகுட்டுக்காய்.**

**கர்னியேசா** *karniyēšā,* பெ.(n.) பேய்த் தும்மட்டி; bitter-apple, cucumis colocynthis (சா.அக.).

**கர்ச்சனை** *karjanai,* பெ.(n.) அரிமா முழக்கம் (பெரும் குரல்), அதிர் முழக்கம்; (of lion) roar. *'அவர் பேச ஆரம்பித்தால் சிம்ம கர்ச்சனைதான்!'* (சா.அக.).

**த. வ. உரப்பல்.**

**கர்ச்சி-த்தல்** *karcci-,* செ.கு.வி.(v.t.) 1. (அரிமா, கடல்) பேரொலி எழுப்புதல், முழங்குதல்; (of lion, sea, wind, etc.) to roar, to rumble. *'தொழிற்சாலையின் இயந்திரங்கள் எழுப்பிய பேரோசை சிங்கங்கள் கர்ச்சிப்பது போல் இருந்தது'.* 2. உரத்த குரலில் பேசுதல்; spack in full-throated voice, roar. *'பொது மேடையில் கர்ச்சிக்கும் அவர் வீட்டுக்குப் போனால் பூனையாகி விடுவார்'.*

**த. வ. உரப்புதல்**

**கரகரப்பிரியா** *karakara-p-piriyā,* பெ.(n.) ஒரு வகைப் பண்; a musical mode.

*[Skt. kharaharapriyā > த. கரகரப்பிரியா]*

**கரகோசம்** *kara-kōšam,* பெ.(n.) ஒருவரைப் பாராட்டும் நோக்கத்தில் அவையினர் கைதட்டி உண்டாக்கும் ஒலி; வலுத்த கைதட்டல்; (thunderous) applause : ovation. *'கலை நிகழ்ச்சி முடிந்ததும் பார்வையாளர்கள் கரகோசம் செய்தனர்'* (சா.அக.).

**த. வ. கைக்கொட்டு, கைத்தட்டு.**

*[கரம் + கோசம்.]*

**கரச்சேத்திரம்** *kara-ccēttiram,* பெ.(n.) வீடு கட்டக் கூடிய மனை; building site (S.I.I.IV. 100).

**த. வ. வீட்டுமனை.**

[Skt. ghara+kṣettiram > த. கரச்சேத்திரம்]

**கரடகபாடாணம்** *karaḍaga-pāḍāṇam*, பெ.(n.) செய்நஞ்சு வகை (வின்.); a kind of arsenic.

**கரண்டகபாடாணம்** *karaṇḍaga-pāḍāṇam*, பெ.(n.) ஒரு வகை நஞ்சு; a kind of poison. (சா.அக.)

**கரணகளேபரம்** *karaṇa-kalēbaram*, பெ.(n.) உணர்வுப் பொறிகளுடன் கூடிய உடல்; the physical body with its sensory organs. *"கரணகளே பரங்களை யிழந்து" (அஷ்டாதச. முமுட்சுப். வ்யா. அவ.).*

**த. வ. உணர்வுடல்.**

*[Skt. karaṇa + kalēparam > த. கரண களேபரம்.]*

**கரணசிராவேதை** *karaṇaśirāvēdai*, பெ.(n.) அண்ட வீக்கம், விதை வீக்கம் முதலியவற்றைச் சரி செய்வதற்காகக் காது நடுவிலிருக்கும் அரத்த மூல நரம்பைத் துளையிடல்; boring the central concavity of the external ear (concha) as a reflex treatment, resorted to in olden days for purposes of arresting growth or swelling in cases of hydrocele, orchitis etc. (சா.அக.).

**த. வ. செவிமடல் குத்து.**

**கரணம்பலம்** *karaṇambalam*, பெ.(n.) வரிதண்டும் பணி; ancient name for the office of village headman. (Rd.).

*[Skt. karna+ த. அம்பலம்.]*

**கரணம்பாய்-தல்** *karaṇam-pāy-*, செ.கு.வி. (v.i.) 1. கூத்தாடுதல் (திருக்கோ, 389, உரை); to dance with gestures. 2. **கரணம் போடு-தல்** பார்க்க; see *karaṇam-pōḍu-*.

**த. வ. கூத்தாட்டம்.**

*[Skt. கரணம் + த. பாய்-தல்.]*

**கரணம்போடு-தல்** *karaṇam-pōḍu-*, செ.கு.வி. (v.i.) 1. தலைகீழாகப் பாய்தல்; to tumble heels over head, to gambol. 2. கெஞ்சுதல்; to solicit pressingly and persistently; to importune; to crave or beg for. 3. தன்னாற் கூடியதெல்லாம் செய்தல்; to do one's utmost; to use all possible means; to leave no stone unturned to accomplish an object.

**த. வ. கூத்தாட்டு காட்டுதல்.**

*[கரணம் + போடு-தல்.]*



**கரணவாசனை** *karaṇa-vāšaṇai*, பெ.(n.) **கரணவாதனை** பார்க்க; see *karaṇa-vātaṇai*.

**கரணவாதனை** *karaṇa-vādaṇai*, பெ.(n.) பொறிகளின் பழக்கவறிவு (வின்.); sensation, experience, pleasing or painful, as associated either with bodily organs or mental faculties.

**த. வ. பொறியுணர்வு.**

*[கரணம் + வாதனை.]*

**கரணாதசம்மிதை** *karaṇāda-šammidai*, பெ.(n.) காதைப் பற்றிய வரலாற்றைக் கூறுமோர் ஆயுள் வேத நூல்; an Ayurvedic science treating all about the ear (சா.அக.).

**த. வ. செவிப்பிணிநூல்.**

**கரணிகசன்னி** *karaṇika-šaṇṇi*, பெ.(n.) காதின் நோயினால், கண்டத்தை இறுக்கிப் பிடிப்பதனாலேற்படும் ஒரு வகை இசிவு நோய் சன்னி; a kind of delirium caused through the disease of the ear attended with constriction of the throat. (சா.அக.).

**த. வ. செவிப்பிணி இழுப்பு.**

*[Skt. கரணிக + சன்னி.]*

**கரத்தம்பவாதம்** *karattampavādam,* பெ.(n.) இரண்டு உள்ளங்கைகளிலும் உள்ளங் கால்களிலும், நெருப்பில் வைத்தாற் போல் எரிச்சல் கண்டு, உடம்பெங்கும் வெளுத்துலர்ந்து புரைதனில் புழுக்கள் ஊருதல் போல் ஊர்ந்து நடை கொடாது, வாயுலர்ந்து, உடம்பு கனத்துக் காணுமோர் வளிம நோய் (யூகி. முனி. 800); a kind of rheumatism marked by burning sensation on both the palms and the soles, pale and dried condition of the body, a peculiar sensation in the folds of the skin corresponding to the movements of a worm in a wound, inability to walk or more about freely. parched tongue, heaviness of body etc.

த. வ. எரிச்சல் ஊதை.

**கரத்தை** *karattai,* பெ.(n.) (ஒற்றை) மாட்டு வண்டி (இலங்.); bullock cart (drawn by a single ox).

*[E. cart > த. கரத்தை.]*



**கரதபத்திரம்** *karata-pattiram,* பெ.(n.) அரசிறையை நிலைக்க வைக்கும் ஆவணம் (பத்திரம்) (சுக்கிரநீதி. 93); document fixing the tax.

த. வ. வரியாவணம்.

*[Skt. karada+pattiram > த. கரதபத்திரம்.]*

**கரதலாமலகம்** *karatalāmalakam,* பெ.(n.) உள்ளங்கை நெல்லிக்கனி போல் தெளிவானது; Lit. a fruit of the myrobalan placed on the palm of the hand; fig, perception at once easy and quite clear. *"மறைகள் ......... கரதலாமலகமதாக வுணர்வில் வைத்த" (செவ்வந்திப்பு. சார. 2).*

த. வ. அங்கையுள் நெல்லி.

*[Skt. karatala+āmalaka>த. கரதலாமலகம்.]*

**கரதாளம்** *kara-tāḷam,* பெ.(n.) கைத்தாளம்;

*[Skt. kara+த. தாளம்.]*

**கரதோடம்** *karatōḍam,* பெ.(n.) வேதி மருந்துகளால் ஏற்பட்ட நஞ்சுக்கேடு; chemical poisoning (சா.அக.).

*[Skt. kara-dosha.]*

**கரநியாசம்** *kara-niyāšam,* பெ.(n.) தேவர்களை மந்திர வழி விரல்களில் வைக்கும் செய்கை; assignment of the fingers of the hand severally to different deities with appropriate mantras and gesticulation previous to meditation and prayer. *"அஞ்செழுத்தா லங்ககரநியாசம் பண்ணி" (சி.சி. 9, 8).*

த. வ. கைவயம்.

*[Skt. kara+niyācam > த. கரநியாசம்.]*

**கரப்பர்ணம்** *karapparṇam,* பெ.(n.) ஆமணக்கு (சங். அக.); castor-plant.

**கரப்பிரசாரம்** *kara-p-pirašāram,* பெ.(n.) செய்கை வகை; (nātya) a kind of gesture. *"சீர் சால் கரப்பிரசார முவமையில் சிரக்கரகருமம்" (திருவிளை. கான்மா. 8).*

*[Skt. kara+pra-cāra > த. கரப்பிரசாரம்.]*

**கரப்பொத்தான்** *karap-pottāṉ,* பெ.(n.) கரப்பான் பூச்சி (இலங்.வ); cockroach.



**கரபவல்லபம்** *karapa-vallabam,* பெ.(n.) விளா மரம் (சங்.அக.); wood apple tree.

*[**Skt.** karabha+vallabba > த. கரபவல்லபம்.]*

**கரபத்திரம்** *kara-pattiram,* பெ.(n.) 1. ஈர்வாள் (திவா.); saw. 2. வாள்; sword. *"பணிக்கர் கரபத்திரமதாகும்" (திருவாதபு. புத். 74).*

*[**Skt.** kara-patra > த. கரபத்திரம்.]*



**கரபம்**[1] *karabam,* பெ.(n.) மணிக்கட்டிலிருந்து விரல் வரையில் உள்ள பகுதி; metacarpus, the part of the hand between the wrist and fingers. *"யானைத் தடவுடைக் கையுங் கரபமும்" (திருவிளை. உக்கிர. வேல்வளை. 37).*

*[**Skt.** karabha > த. கரபம்.]*

**கரபம்**[2] *karabam,* பெ.(n.) யானை; elephant. *"ஒரு நாற் றந்தக் கரபத்தினண்ணல்" (கந்தபு. அசமுக்கு. 22).* கழுதை (வின்.); ass.

**கரபாகம்** *kara-bāgam,* பெ.(n.) சூடுபட்டு மென்மையான குளிகை போல் திரளுகிற மருந்துப் பாகம் (பைஷஜ. 9); that stage in the preparation of any medicine by heating, when it reaches such consistency as would admit of a small pinch between wet fingers being easily rolled into a soft globule.

**த. வ. கைபாகம்.**

*[**Skt.** kara+pāka > த. கரபாகம்.]*

**கரபாதம்** *karapātam,* பெ.(n.) கையும் காலும்; the arm and the leg; the limbs.

**கரம்** *karam,* பெ.(n.) கை; arm, hand. *'பேருந்தில் சிரம், கரம், புறம் நீட்டாதீர்' என்று ஓர் அறிவிப்பு', 'எனக்கு வலது கை போல் விளங்கும் நண்பன்'*

*[**Skt.** kara > த. கரம்.]*

(இ.சொ) 1. பெரும்பாலும் (சமற்கிருத) பெயர்ச்சொற்களோடு சேர்க்கப்படுவதும் 'தரக் கூடியது' என்னும் பொருள்படுவதும் (வேற்றுமை உருபோ பன்மை ஈறோ ஏற்காத) பெயர்ச் சொல் அமைக்கக் கூடியதுமான ஓர் ஈறு. (எ.கா.) திருப்திகரம். 2. சுட்டும் முறையாகவும் ஒலிப்பு முறை கருதியும் உயிர் எழுத்திலும் உயிர்மெய் எழுத்திலும் குறில் எழுத்துகளோடு சேர்க்கப்படும் இடைச்சொல். சிலர் ழகரத்தை ளகரமாக பலுக்குகிறார்கள். (உ.வ).

**கரம்பற்று-தல்** *karamparru-,* 11. செ.கு.வி. திருமணம் செய்து கொள்ளுதல், மணத்தல்; marry. *'அவளைக் கரம் பற்றிய நாளிலிருந்து அவனுக்கு நல்ல வாழ்வு தான்'.*

*[கரம் + பற்று-]*

**கரமசாலை** *kara-macālai,* பெ.(n.) காரமான மசாலை (வின்.); pungent curry-stuff.

**த. வ. காரஉசிலை.**

*[**U.** garmmasāla > த. கரமசாலை]*

**கரமஞ்சரி** *kara-mañcari,* பெ.(n.) நாயுருவிச் செடி (பிங்.); a plant growing in hedges and thickets.

*[**Skt.** khara-mañjari > த. கரமஞ்சரி]*



**கரமாலம்** *karamālam,* பெ.(n.) புகை (சங். அக.); smoke.

*[**Skt.** karamāla > த. கரமாலம்.]*

**கரலட்சணம்** *kara-laṭcaṇam,* பெ.(n.) கையாற் புரியும் மெய்ப்பாட்டுச் செய்கை (பரத. பாவ. 19, தனம்பு); (Nāṭya) gestuculation by the hands.

த. வ. கைநயம்.

*[கரம் + லட்சணம்.]*

**கரவாகம்** *karavāgam,* பெ.(n.) காக்கை (வின்.); grow from its being harsh-voiced.

*[Skt. khara+vāka > த. கரவாகம்.]*



**கரவாதசன்னி** *karavāda-šanni,* பெ.(n.) 1. நஞ்சினாலேற்படும் இசிவுநோய் (சன்னி); delirium due to poisoning. 2. ஊதை நோயால் உடம்பில் நஞ்சு தங்கி அதனாலேற்படும் இசிவு நோய் (சன்னி); delirium due to sceptic poison arising from rheumatism (சா.அக.).

த. வ. நஞ்சு இசிவு.

**கரவாலம்** *karavālam,* பெ.(n.) உகிர் (நகம்) (சங்.அக.); nail.

*[Skt. kara-vāla > த. கரவாலம்.]*

**கரவிகாரம்** *karavigāram,* பெ. (n.) 1. நஞ்சினால் உடம்பிலேற்படும் வேற்றுமைகள்; various modifications or changes occurring in the system due to poisoning. 2. இடு மருந்தினால் உடம்பிலுண்டாகும் நோய்கள்; diseases occurring in the body due to introduction of love philter as an after effect. 3. இடு மருந்தினால் ஆண்கள் அல்லது பெண்களுக் கேற்படும் காமக் கவலை; lustful thoughts or venereal passions arising from introducing love-potion.

த. வ. செய்மருந்து நோய், கை மருந்து நோய்.

*[கரம் + விகாரம்.]*

**கரவிடம்** *karavḍam,* பெ.(n.) 1. சிறிதளவாக நஞ்சேற்றி வரல்; slow poisoning. 2. ஆடவர்களைத் தம்மிடம் பாசமுள்ளவர் களாகச் செய்ய விருப்பமுள்ள பெண்களாவது, பகைவர்களாவது, உணவு, தின்பண்டம் முதலியவற்றில் இடும் ஒரு வகை இடு மருந்து; a philter or substance usually administered by jealous wives to their husbands or by an enemy to one, in food or other eatables for purposes of subjecting him to her or his control. It is a slow poisoning by which the health of the victim is impaired and the person dies ultimately (சா.அக.).

த. வ. இடுமருந்து, கைமருந்து.

**கரவிடாணம்** *kara-viḍāṇam,* பெ.(n.) கழுதைக் கொம்பு போல் இல்பொருள் (நீலகேசி. 393, உரை); that which is non-existent, as an ass's horn.

*[Skt. khara+viṣāṇam > த. கரவிடாணம்.]*

**கரவொலி** *karavoli,* பெ.(n.) கைதட்டுதலால் ஏற்படும் ஓசை; applause. *'தலைவர் மேடைக்கு வந்ததும் தொண்டர்கள் கரவொலி எழுப்பி வரவேற்றார்கள்'.*

த.வ. கையொலி.

*[கரம் + ஒலி.]*



**கராக்கி** *karākki,* பெ.(n.) **கிராக்கி** (வின்.) பார்க்க; see *kirākki.*

*[U. giraki > த. கராக்கி.]*

**கராகண்டிதம்** *karā-kaṇḍidam,* பெ.(n.) கண்டிப்பு; severity, rigour. *"கராகண்டிதமாய்ச் சொல்லு" (வின்.).*

*[U. qarār+kantitam > த. கராகண்டிதம்.]*

**கராசனம்** *karāšaṉam,* பெ.(n.) புலி (யாழ்.அக.); tiger.

*[Skt. khara+ašana > த. கராசனம்]*



**கராட்சேபகவாதம்** *karāḍšebagavādam,* பெ.(n.) அதிக ஊதைப் பண்டங்களைப் புசிப்பதனாற் பிறந்து, உடம்பு முழுவதும் பரவி பின்னர் கை கால்களை அசைக்கவும், நீட்டவும், மடக்கவும் கூடாமையாயிருக்கும் ஒரு வகை ஊதை நோய்; a kind of paralysis attended with loss of motion and function of the limbs, especially the arms, as a result of the deranged condition of vayu, which begins in the muscles of a particular part and gradually spreads all over the body. It is aid to be caused by over indulging in articles of fare likely to develop vatha.

**கராடம்** *karāḍam,* பெ.(n.) தாமரைக் கிழங்கு (நாநார்த்த.); tuber of the lotus plant.

*[Skt. karahāṭa > த. கராடம்.]*

**கராபத்தினி** *karāpattiṉi,* பெ.(n.) பேராமுட்டி; fragrant sticky mallow - *Pavonia odorata* (சா.அக.).

**கராம்பு** *karāmbu,* பெ.(n.) **இலவங்கம் 1, 2** பார்க்க; see *elavaṅgam.*

*[Gr. karnophullon > ū. quaranful > த. கராம்பு.]*

**கரார்** *karār,* பெ.(n.) 1. உறுதி; fixity, stability, certainty, fixedness. 2. **கரார்நாமா** பார்க்க; see *karārnāmā.*

*[U. qarār > த. கரார்.]*

**கரார்க்காரன்** *karār-k-kāraṉ,* பெ.(n.) கண்டிப்புள்ளவன்; strict man, man of exacting character in respect of word and deed.

**த. வ. கண்டிப்புக்காரன்.**

*[கரார் + காரன்.]*

**கரார்நாமா** *karār-nāmā,* பெ.(n.) உறுதி ஆவணம்; deed of ratification, written agreement, contract or engagement.

**த. வ. உறுதிமுறி.**

*[கரார் + நாமா.]*

**கரிசன்னி** *karišaṉṉi,* பெ.(n.) வெண் காக்கணம்; white-flowered mussel shell creeper - *Clitoriaternatea* (albi-flora).

**கரிணிகம்** *kariṇigam,* பெ.(n.) காதணி வகை (யாழ்.அக.); an ear ornament.

*[Skt. karṇika > த. கரிணிகம்.]*

**கரிபரிசம்** *kariparišam,* பெ.(n.) கையிற் தொடுதலினாலேற்படும் உணர்ச்சி; sensation arising from touch by hand (சா.அக.).

*[கர > கரி + பரிசம்.]*

**கரீத்து** *karīttu,* பெ.(n.) அடக்க விலை; net price (C.G.).

**த. வ. மூலவிலை, அடக்கவிலை.**

*[U. kharid > த. கரீத்து.]*

**கரீத்துபட்டி** *karīttu-paṭṭi,* பெ.(n.) கைச்சாத்து; invoice (C.G.).

**கரீப்பு** *karīppu,* பெ.அ.(adj.) எளிய; poor, indigent (C.G.).

**த. வ. ஏழ்மையான, வறிய.**

*[U. garib > த. கரீப்பு.]*

**கரீரம்** *karīram,* பெ.(n.) 1. மிடா (பிங்.); large boiler, water-jar. 2. கும்ப ஒரை (சூடா.); aquarius, the 11th sign of the zodiac. 3. **அகத்தி** (திவா.) பார்க்க; see *agatti.* 4. **கருவேல்** (மலை) பார்க்க; see *karuvēl.* 5. முளை; sprout, shoot. 6. மூங்கில் முளை; shoot of the bamboo. *"காம்பாங் கரீரம்" (தைலவ. தைல. 35).* 7. யானை மருப்பு மூலம் (பிங்.); root of an elephant's tusk.

*[**Skt.** karira > த. கரீரம்.]*

**கருசணம்** *karuṣaṇam,* பெ.(n.) 1. தேய்க்குந் தைலம்; embrocation. 2. மஞ்சள்; turmeric.

**கருசபாடாணம்** *karusa-pāṣdāṇam,* பெ.(n.) உரைகல் (பி.வி.22, உரை); touchstone.

*[**Skt.** ghaṛsa+pāṣāṇam > த. கருசபாடாணம்]*

**கருசோபலம்** *karuṣōpalam,* பெ.(n.) **கருசபாடாணம்** (பி.வி.22, உரை) பார்க்க; see *karuṣa-pāṣāṇam.*

**கருணா**[1] *karuṇā,* பெ.(n.) 1. **கருணை**[1] பார்க்க; see *karuṇai.* *'கருணாமூர்த்தி'.* 2. முகக்குறி (பாவனை) ஐந்தனுள் ஒன்றான அருள்; (Buddh) grace, one of five kinds of *pāvaṇai.* *"மைத்திரி கருணா முதிதையென் றறிந்து" (மணிமே. 30, 256).*

*[**Skt.** karuṇā > த. கருணா.]*

**கருணா**[2] *karuṇā,* பெ.(n.) ஒரு வகை இசைக்கருவி (வாச்சியம்) (வின்.); large brase trumpet which sounds the bass.

*[**U.** karnā > த. கருணா.]*

**கருணாகடாட்சம்** *karuṇā-kaṭāṭcam,* பெ.(n.) அருளோடு (கருணையோடு) கூடிய கடைக்கண் பார்வை (பே.வ.); gracious look.

**த. வ. அருள்நோக்கு**

*[கருணா + கடாட்சம்.]*

*[**Skt.** karuṇā > த. கருணை + **Skt.** kaṭaksa > த. கடாட்சம்.]*

**கருணாகரன்** *karuṇākaraṉ,* பெ.(n.) கருணைக்கு இருப்பிடமான கடவுள்; God as the storehouse of grace. *"நஞ்சமுது செய்தாய் கருணாகரனே" (திருவாச. 6, 28).*

**த. வ. அருளாளன்.**

*[**Skt.** karṇa+a-kāra > த. கருணாகரன்.]*

**கருணாநிதி** *karuṇā-nidi,* பெ. (n.) அருளுக்கு இருப்பிடமானவன்; God as the highest repository of grace.

**த. வ. அருட்செல்வன்**

*[**Skt.** karuṇā+niti > த. கருணாநிதி.]*

**கருணாமூர்த்தி** *karuṇā-mūrtti,* பெ.(n.) அருளுருவானவன்; God as grace personified.

**த. வ. அருளன்.**

*[**Skt.** karuṇā+murtti.]*

**கருணாலயன்** *karuṇālayaṉ,* பெ.(n.) அருளுக்கு நிலைக்களமானவன்; God, the storehouse of grace. *"கடைப்பட்டேனை யாண்டு கொண்ட கருணாலயனை" (திருவாச. 27, 1).*

**த. வ. அருளுருவன்.**

*[**Skt.** karuṇā+ā-laya > த. கருணாலயன்.]*

**கருணி** *karuṇi,* பெ.(n.) 1. மலை (வின்.); nill, mountain. 2. குகை (சது.); cave, cavern.

**கருணிகை** *karuṇigai,* பெ.(n.) தாமரைப் பொகுட்டு (வின்.); pericarp of the lotus, germ or rudiment of the fruit.

*[**Skt.** karṇikā > த. கருணிகை.]*

**கருணை** *karuṇai,* பெ.(n.) இரக்கம், அருள்; compassion, grace, mercy, benignity. *"மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்" (திருவாசக. 2, 107).*

**கருணைமறம்** *karuṇai-maṟam,* பெ.(n.) கருணையாற் செய்யும் தண்டனை (நிக்கிரகம்); reformative punishment, as an act of divine grace. *"அக்கருணை மறமாகிய செய்கை மாறி" (சி.போ.பா.8,1,பக். 174).*

*[கருணை + மறம்.]*

*[**Skt.** karuṇa + த. மறம்.]*

**கரோடம்** *karōḍam,* பெ.(n.) தலையோடு (வின்.); skull.

**த. வ. புருடை.**

*[Skt. karōṭa > த. கரோடம்.]*

*[கர + ஓடு + அம்.]*

**கல்கம்** *kalkam,* பெ.(n.) உலர்நிற சரக்கைப் பால் அல்லது நீர் விட்டு அரைத்துச் செய்யுங் குளிகை (பைஷஜ.); medicinal pill prepared by mixing dried drugs with milk or water.

*[Skt. kalka > த. கல்கம்.]*

**கல்கித்துவாதசி** *kalki-t-tuvādaśi,* பெ.(n.) பாத்திரபத திங்கள் மாதத்துப் பன்னிரண்டாம் நாள் (பஞ்.); the twelveth tithi in the lunar month of bhādrapada.

**கல்நாதம்** *kal-nādam,* பெ.(n.) அன்னபேதி (வின்.); green virtriol.

**கல்பவாசியர்** *kalpa-vāśiyar,* பெ.(n.) தேவருள் ஒருவகையினர் (மேருமந். 8, உரை); (Jaina.) a class of *Dēvas.*

**கல்பா** *kalpā,* பெ.(n.) கலவரம்; disturbance, tumult.

*[H. khalbal > த. கல்பா.]*

**கல்பு** *kalpu,* பெ.(n.) மனம்; mind. *"செய்த சட்டம் லாக்கள் முற்றுங் கல்பிற் பொதிந்த களஞ்சியவான்" (பஞ்ச. திருமுக. 1613).*

*[Ar. qalf > த. கல்பு.]*

**கல்மசம்** *kalmaśam,* பெ.(n.) 1. அழுக்கு; dirt, dross, impurity. 2. புண்ணினின்று வெளிவரும் சீழ் முதலியன; pus of a boil. 3. கரிசு (பாவம்); sin. 4. குற்றம்; fault.

**த. வ. மனத்தில் கல்மசம் கூடாது.**

**மறுவ. கல்மிசம்.**

**கல்யாணகுணம்** *kalyāṇa-kuṇam,* பெ.(n.) நற்குணம் (சம்.அக.); good disposition nobility of character.

*[கல்யாணம் + குணம்.]*

*[Skt. kalyāṇa + த. குணம்.]*

**கல்யாணதரம்** *kalyāṇa-taram,* பெ.(n.) சமவசரணத்திலுள்ள மூன்று மதில்களுள் ஒன்று (மேருமந். 61, உரை); (Jaina.) one of the three fort-walls in Camavacaraṇam.

*[Skt. kalyāṇa+tara > த. கல்யாணதரம்]*

**கல்லி** *kalli,* பெ.(n.) மேலங்கியுறுப்பு (வின்.); triangular piece of cloth, gore in long Indian jacket.

*[U. kalli > த. கல்லி.]*



**கல்லோலம்** *kallōlam,* பெ.(n.) அலை; billow, wave, surge. *"பெருங்கல் லோலப் புணரியின் மூழ்க" (திருவாலவா. 9, 5).*

**த. வ. கல்லோதம்.**

*[Skt. kallōla > த. கல்லோலம்.]*

**கலவிகரணன்** *kala-vikaraṇaṉ,* பெ.(n.) வைரவமூர்த்தி (காஞ்சிப். வயிர வீசப். 26); God vairava.

*[Skt. khala-vikaraṇan > த. கலவிகரணன்.]*

**கலாங்கிசம்** *kalāṅgiśam,* பெ.(n.) ஒரை (இராசி)யைப் பதினாறு கூறிடுகை (சோதிடகிரக. 123); (Astrol.) dividing a zodiacal sign into 16 parts.

*[Skt. kalā+amśa > த. கலாங்கிசம்.]*

**கலாசாலை** *kalāśālai,* பெ.(n.) (இலங்.) (மொழி கற்பிக்கும் அல்லது பயிற்சி தரும்) கல்லூரி; school (of languages), college (for training teachers). *'அரபுக் கலாசாலை / ஆசிரியர் பயிற்சிக் கலாசாலை'.*

**த. வ. கல்லூரி.**

*[கலா + சாலை.]*

*[த. கலை > Skt. kalā + த. சாலை.]*

**கலாசு** *kalāśu,* பெ.(n.) மரக்கலத்தொடர்பானது (வின்.); shipping.

**த. வ. நாவாயிகம்.**

*[U. khalās > த. கலாசு.]*

**கலாட்டா** *kalāṭṭā,* பெ.(n.) கலவரம்; riot, commotion, tumult, insurrection, strife.

*[U. galātā > த. கலாட்டா.]*

**கலாத்துவா** *kalāttuvā,* பெ. (n.) ஐங்(பஞ்ச)கலைகளாகிய அத்துவாவகை (சி.சி.8, 6–9, மறைஞா.); (Šaiva) a path to salvation in the form of *pañca-kalai*, one of six *attuvā*.

*[Skt. kalā+adhvan > த. கலாத்துவா.]*

**கலாதத்துவம்** *kalā-tattuvam,* பெ.(n.) தூய்மையற்ற மெய்மங்களுள் (சுத்தாசுத்த தத்துவங்களுள்) ஒன்று (சி.போ.பா.2,2, பக். 151); (Saiva) that which slightly reduces the power of *āṉava-malam* (which acts as a veil on the soul) so as to enable the soul to act, one of seven *cuttācutta-tattuvam*.

**கலாதி** *kalādi,* பெ.(n.) கலகம் (வின்.); agitation, stir, disturbance, tumult, quarrel, scuffle, squablole, brawl, wrangle.

**த. வ. போராட்டம்.**

*[Skt. kalaha > த. கலாதி.]*

**கலாநிதி[1]** *kalā-nidi,* பெ.(n.) 1. நிலவு (பிங்.); moon, having phases. 2. கல்விக் களஞ்சியம்; treasure-house of learning, a title given to a learned person. *"தாக்ஷிணாத்யகலாநிதி".*

**த. வ. கலைவல்லோன்.**

*[கலா + நிதி.]*

*[த. கலை > Skt. kalā+niti > த. கலாநிதி.]*

**கலாநிதி[2]** *kalānidi,* பெ.(n.) (இசை, நாட்டியம் முதலிய) கலைகளில் சிறந்தவருக்கு வழங்கப்படுகிற மதிப்புப் பட்டம்; a title given to a great master of fine arts such as music, dance, etc. *'சங்கீதக் கலாநிதி / நாட்டியக் கலாநிதி'.* 2. (இலங்.) முனைவர்; Doctor of philosophy (Ph.D.).

**த. வ. கலைச்செல்வன்.**

**கலாபூர்வம்** *kalā-pūrvam,* பெ. (n.) கலையழகு பொருந்தியது; that which is artistic. *'ஓவியம் கலாபூர்வமாக அமையவில்லை / அந்த இளைஞனின் கலாபூர்வமான சிந்தனை அவரை மிகவும் கவர்ந்தது'.*

**கலாயி** *kalāyi,* பெ.(n.) ஏனங்களுக்குப் பூசப்படும் ஈயம் (இ.வ.); tin used for tinning vessels.

**த. வ. ஈயப்பூச்சு.**

*[U. galai > த. கலாயி.]*

**கலாலாபம்** *kalālābam,* பெ.(n.) வண்டு; bee. *"அரியமாமலர் விரியத் தேனுகர்ந் தார்த்திடுங் கலாலாபம்" (அலங்காரச்சிந்து. 10).*

*[Skt. kalālāpa > த. கலாலாபம்.]*

**கலாவியூகம்** *kalā-viyūgam,* பெ.(n.) ஒன்பான் அணி வகுப்புகளுள் ஒன்று (நவவியூகத்தொன்று) (சௌந்த. 1, உரை); a category of things, one of nava-viyūkam.

**த. வ. ஒன்பான். அணி**

*[Skt. kalā+viyūkam > த. கலாவியூகம்.]*

**கலிக்கத்துரா** *kalikkatturā,* பெ.(n.) முன்னெற்றியில் அணியும் ஒருவகை அணி; aigrette, spray of gems, diadem of gold or of gold set with precious stones, set up as an ornament vertically over the forehead, on the turban.

**த. வ. சூளாமணி.**

*[Skt. kalikā+U. turai.]*



**கலிசந்தரணம்** *kalicandaraṇam,* பெ.(n.) நூற்றெட்டு மறைநூல்களுள் ஒன்று; name of an upaniṣad, one of 108.

*[Skt. kalisantaraṇa > த. கலிசந்தரணம்.]*

**கலித்தம்** *kalittam,* பெ.(n.) 1. கக்குகை (யாழ்.அக.); vomitting, emitting. 2. பொசிகை; oozing. 3. பொலிவு; grand appearance.

*[Skt. skhalita > த. கலித்தம்.]*

**கலிபுருடன்** *kali-puruḍaṉ,* பெ.(n.) கலிகாலத்துக்கு உரிய தெய்வம் (தேவதை); the deity presiding over the iron age.

**த. வ. கலியன்.**

*[Skt. kali+puruṣan > த. கலிபுருடன்.]*

**கலிமா** *kalimā,* பெ.(n.) 1. வழிபாட்டு (விண்ணப்பம்); prayer. 2. இசுலாம் மதத்தில் சேரும் போது அல்லாவைத் தவிர வேறு கடவுள் இல்லை; முகம்மது அவருடைய திருத்தூதர் என்று பொருள்படச் சொல்லும் அரபி வசனம்; the muslim confession of faith, beginning with *iāyilāhillallāhu.*

**த. வ. இசுலாம்ஓதல்.**

*[Ar. kalimā > த. கலிமா.]*

**கலியப்தம்** *kali-y-aptam,* பெ.(n.) கலியுகம் பிறந்தது முதலாக எண்ணப்படும் வருடம்; the era of kali yuga, which is said to have commenced in 3102 B.C.

**த. வ. கலியூழி.**

*[Skt. kali+abda > த. கலியப்தம்.]*

**கலேகபோதநியாயம்** *kalē-kapōda-niyāyam,* பெ. (n.) புறாக்கள் பல ஒரே நெற்களத்தில் தவசங்களைப் பொறுக்க மேல்விழுவது போலும் நெறி; maxim of the doves and the threshing-floor used to denote the way in which many seek the same vast source of enrichment and each do so unmindful of others.

**த.வ. மூசுபுறாமுறையம்.**

*[Skt. khalē + kapōta + nyāya > த. கலேகபோதநியாயம்.]*

**கவ்டா** *kavḍā,* பெ.(n.) கிராமத் தலைவன் (வின்.); head of a village.

**த.வ. ஊராளி.**

*[Mhr. gāvaḍā > த. கவ்டா.]*

**கவ்வா** *kavvā,* பெ.(n.) நீண்ட அங்கி; long-coat, tunic (Parav).

**த.வ. தொளாய்சட்டை.**

*[U. kabā > த. கவ்வா.]*

**கவ்வியம்**[1] *kavviyam,* பெ.(n.) ஆனைந்தனுள் (பஞ்சு கவ்வியத்துள்) ஒன்று; any one of the five choice products yielded by the cow.

*[Skt. gauya > த. கவ்வியம்.]*

**கவ்வியம்**[2] *kavviyam,* பெ.(n.) இறந்துபட்ட முன்னோர்களை எண்ணி கொடுக்கும் பிண்டம்; oblation of food to manes. *"அவ்விய கவ்வியத்தை .......... மறையோர்க் கீயின்" (மச்சபு. சிராத்தானு. 2).*

***ஐம்பொருள்களாவன :** பால், தயிர், நெய், ஆனீர், சாணம்.*

**த. வ. நீத்தார்கடன்.**

**கவசி-த்தல்** *kavaśi-,* 4 செ.குன்றாவி.(v.t.) சீலைமண் செய்தல் (இராசவைத். 89. உரை); to coat with clay over the mouth of a pot, to lute for calcining medicine.

*[Skt. kavaca-, > த. கவசி-த்தல்.]*

**கவளீகரி-த்தல்** *kavaḷīkari-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. மொத்தமாக விழுங்குதல்; to take in at one sweep. 2. முழுதும் பறித்தல் (கொ.வ.); to misappropriate.

*[Skt. kavali-kr-, > த. கவளீகரி-த்தல்.]*

**கவாடிபந்தி** *kavāḍi-pandi,* பெ. (n.) யானைக் கூடத்தைத் தூய்மை செய்வோன் (இ.வ.); elephant's stable - cleaner.

**த.வ. கட்டுத்தறி பணியாளன்.**

*[Skt. kavāṭi+U. bandi.]*

**கவாத்து** *kavāttu,* பெ.(n.) போர்வீரர் புரியும் உடற்பயிற்சி மையம் (உ.வ.); military drill.

**த.வ. களரி.**

*[U. qawāid > த. கவாத்து.]*

**கவாய்** *kavāy,* பெ.(n.) பாடகன்; musician.

*[H. gavaiya > த. கவாய்.]*

**கவாளம்** *kavāḷam,* பெ.(n.) குதிரை மருந்து (வின்.); horse physic.

*[Pkt. kavāta > த. கவாளம்.]*

**கவியம்** *kaviyam,* பெ.(n.) கடிவாளம் (பிங்.); bit of a horse's bridle.

*[Pkt. kavi(y)a > த. கவியம்.]*

**கவீனம்** *kavīnam,* பெ.(n.) வெண்ணெய்; butter.

*[Skt. haiyaṅ-gavīna.]*

**கவுல்** *kavul,* பெ.(n.) நிலக்குத்தகை உடன்படிக்கை; favourable tenure of land; agreement whereby land is held for rent either perpetually or for a term of years. (G.S.M. D.ii.22)

த. வ. நிலவாரம்.

*[U. qaul > த. கவுல்.]*

**கவோடணம்** *kavōḍaṇam,* பெ.(n.) மிதமான சூடு; moderate heat.

**களத்திரம்** *kaḷattiram,* பெ.(n.) 1. அரைப்புறம் (நாநார்த்த.); hip. 2. அரணிடம்; citadel, stronghold.

*[Skt. kalatra > த. களத்திரம்.]*

**களத்தொனி** *kaḷa-t-toṉi,* பெ.(n.) 1. குயில் (நாநார்த்த.); Indian cuckoo. 2. புறா; dove. 3. மயில்; peacock.

*[Skt. kala-dhavani > த. களத்தொனி.]*



**களதௌதம்** *kaḷataudam,* பெ.(n.) 1. பொன் (நாநார்த்த.); gold. 2. இனிய மெல்லோசை; dulcet sound.

*[Skt. kaladhauta > த. களதௌதம்.]*

**களாசுக்காரன்** *kaḷāšu-k-kāraṉ,* பெ.(n.) கப்பல் வேலையாள் (இ.வ.); lascar.

த. வ. கடலகன்.

*[U. khalāɛ > த. களாசுக்காரன்.]*

**களாய்** *kaḷāy,* பெ.(n.) 1. **கலாயி** பார்க்க; see *kalai.* 2. ஏன (பாத்திர)ங்கட்குப் பூசப்படும் ஈயம் (இ.வ.); tin used for tinning vessels. *"ஏனத்துக்குக் களாய் பூசுகிறது".*

த. வ. ஈயம்.

*[U. qalaī > த. களாய்.]*

**கற்கசம்** *kaṟkašam,* பெ.(n.) கரும்பு (நாநார்த்த.); sugar cane.

*[Skt. karkaša > த. கற்கசம்.]*

**கற்கரம்** *kaṟkaram,* பெ.(n.) மத்து (யாழ்.அக.); churn.

*[Skt. gargara > த. கற்கரம்.]*



**கற்கரிகை** *kaṟkarigai,* பெ.(n.) சதங்கை (யாழ்.அக.); tinklers.

*[Skt. ghargharikā > த. கற்கரிகை.]*

**கற்கிச்சா** *kaṟ-kiccā,* பெ.(n.) 1. சோதிடம் எனும் கணியத்தில் ஒரு சமன்பாடு; (Astrol.) equation for the second inequality of a planet when its position is within six signs of Aries. 2. கற்கிசீக்கிரபரிதி (வின்.); (Astrol.) table of these equations, the annual parallax of the orbits of planets,

given when their place in the heavens is from cancer to capricornus.

த. வ. கோள்சமன்பாடு.

**கற்பகன்** *karpagan,* பெ.(n.) நாவிதன் (சங்.அக.); barber.

த. வ. பரியாரி.

*[Skt. kalpaka > த. கற்பகன்.]*

**கறாமத்து** *karāmattu,* பெ.(n.) தாராளத்தன்மை; generosity, liberal, mindedness.

த. வ. வள்ளன்மை..

*[Skt. karāmat > த. கறாமத்து.]*

**கறார்** *karār,* பெ.(n.) உறுதி; fixity, stability, certainty, fixedness.

த. வ. கண்டிப்பு

*[U. qarār > த. கறார்.]*

**கறி** *kari,* பெ.(n.) ஒரு நாழிகை; measure of time - 24 minutes.

த. வ. நாழிகை, கழிகை.

*[U. ghari > த. கறி.]*

**கன்மசண்டாளன்** *kanma-šaṇḍāḷan,* பெ.(n.) மேற்குடியில் பிறந்திருப்பினும் அவனது இழிவான செய்கையால் தாழ்ந்தவன்; person of high birth who degrades himself by his own vile deeds.

த.வ. குலக்கேடன்.

*[Skt. karman > த. கன்மம் + சண்டாளன்.]*

**கன்மசாதாக்கியம்**[1] *kanma-šādākkiyam,* பெ.(n.) சிவனின் ஐந்து முகங்களில் ஒன்றான ஈசான முகத்தை அடைய மனோன்மணியுடன் (கிரியாசத்தி யுடன்) சேர்ந்த பரசிவம்; *Parašivan* in contact with *kiriyā-šatti* assaming the form of *Isāna*, one of five *šātākkiyam*, (சதாசிவ. 6.)

*[Skt.karman+sādākhya >த.கன்ம சாதாக்கியம்.]*

**கன்மசாதாக்கியம்**[2] *kanma-šādākkiyam,* பெ.(n.) இலிங்கமும் ஆவுடையும் (பீடமும்) இவ்வுலகின் முகமாக உருவெடுக்கும் சிவவடிவம் (தத்துவப். 191, உரை); manifestation of Šiva in *lingam, piḍam,* and *pirapañjam.*

*[Skt.karman+sādākhya>த.கன்ம சாதாக்கியம்.]*

**கன்மசாதாக்கியர்** *kanma-šādākkiyar,* பெ.(n.) தூய ஆதனில் (சுத்தாத்துவாவில்) படைப்பு முதலிய (சிருஷ்டியாதி) காரியங்களைச் செய்யும் சிவன் (சதாசிவ. 42, உரை.); Šiva, the creator in *šuttāttuvā.*

*[Skt.karman+sādākhya>த.கன்ம சாதாக்கியர்.]*

**கன்மசாந்தி** *kanma-šāndi,* பெ.(n.) முற்பிறப்புக்களின் தீவினை யொழியச் செய்யும் சடங்கு; ceremonial rites for expiation of sins of former births.

த.வ. பழவினையறுப்பு.

*[Skt. karman > த. கன்மம்.]*

**கன்மடம்** *kanmaḍam,* பெ.(n.) 1. அழுக்கு; dirt, dross, impurity. 2. காயத்திலிருந்து வெளிவரும் சீழ் முதலியவை; pus, of a boil. 3. கரிசு (பாவம்); sin.

*[Skt. kalmaṣa > த. கன்மடம்.]*

**கன்மத்தியாகம்** *kanma-t-tiyāgam,* பெ.(n.) முன் செய்தவினை தீர்க்கை (வின்.); expiation of the evil done in former births.

த.வ. பழவினைபாறல்.

*[Skt.karma+tyāga>த.கன்மதியாகம்.]*

**கன்மதாரயம்** *kanma-dārayam,* பெ.(n.) இரு பெயரொட்டுப் பண்புத்தொகை (கர்மதாரயம்) (வீரசோ. தொகைப். 2); appositional compound noun made up of two nouns in which *ākiyā* the particle of apposition is under stood.

*[Skt. karmadhāraya > த. கன்மதாரயம்.]*

**கன்மநிட்டன்** *kanma-niṭṭan,* பெ.(n.) நடைமுறைச் சடங்குகளில் (கருமானுட் டானத்தில்) பற்றுள்ளவன்; one who adheres to his ordained duties. *"கன்மநிட்டா சிறு பிள்ளாய் நீ" (தாயு. உடல்பொய். 52.)*

*[Skt. karma+niṣtha > த. கன்மநிட்டன்.]*

**கன்மநிவிர்த்தி** *kanma-nivirddi,* பெ.(n.) **கருமநிவிர்த்தி** பார்க்க; see *kauma-nivirddi.*

*[Skt. karman + ni-vrtti > த. கன்மநிவிர்த்தி.]*

**கன்மப்பிரமவாதி** *kanma-p-piramavādi,* பெ.(n.) **கர்மப்பிரமவாதி** (வின்.) பார்க்க; see *karma-p-pirma-vādi.*

[**Skt.** *karma + brahman + vādin* >த. *கன்மப்பிரமவாதி.*]

**கன்மபந்தம்** *kaṉma-pandam,* பெ.(n.) முன்வினைப் பயனின் தொடர்பிலேயே எதிர்கால இன்பதுன்பம் அமையும் என தொடர்புபடுத்துவது; the result of past actions, good or bad, and the cause of future happiness or misery.

**த.வ. பழவினைக்கட்டு.**

[*கன்மம் + பந்தம்.*]

[**Skt.** *karman>த.கன்மம்.*]

**கன்மபாதகன்** *kaṉma-pādagaṉ,* பெ.(n.) கொடியவன் (வின்); heinous sinner.

[**Skt.** *karman+pātaka > கன்மபாதகன்.*]

**கன்மபாவம்** *kaṉma-pāvam,* பெ.(n.) தன் முன்னோர் செய்த தீவினைப் பயன் தான் பிறப்பெடுத்தபோது தன்னுட் கரிசாகத் (பாவமாகத்) தோன்றினது நிற்கத் தானே செய்த கரிசு (பாவம்); sins actually committed by an individual.

**த.வ. தன்கரிசு.**

[**Skt.** *karman+bhāva > கன்மபாவம்.*]

**கன்மபூமி** *kaṉma-pūmi,* பெ.(n.) ஓகம் முதலிய நற்செயல்கள் புரிதற்குரிய பாரத ஆண்டு; Bhāratavarsa, the land of Bharata or India where virtuous deeds such as religious sacrifices are performed.

[**Skt.** *karman+bhūmi > த.கன்மபூமி.*]

**கன்மம்** *kaṉmam,* பெ.(n.) தொழில்; business, profession. *"கன்மமன் றெங்கன் கையிற் பாவை பறிப்பது" (திவ். திருவாய். 6.2: 7).*

[**Skt.** *karman > த. கன்மம்.*]

**கன்மம்புசி-த்தல்** *kaṉmam-puśi-,* 4 செ.கு.வி. (v.i.) வினைப்பயனை நுகர்தல்; to experience the results of one's deeds.

**த.வ. வினைத்துய்ப்பு.**

[*கன்மம் + புசி-த்தல்.*]

[**Skt.** *karman>த.கன்மம்+புசி-த்தல்.*]

**கன்மயக்ஞம்** *kaṉma-yakñam,* பெ.(n.) விடிய ஐந்து நாழிகைக்கு முன் எழுந்து விடிவதற்குமுன் செய்யக்கூடிய செயல்களைச் சரிவரச் செய்கை (சி.சி. 8 : 23.); performance of ordained duties , as praying to God, etc., between 4 a.m. and dawn.

**த.வ. வைகறைக் கடன்.**

[**Skt.** *karmayagña > கன்மயக்ஞம்.*]

**கன்மயாகம்** *kaṉma-yāgam,* பெ.(n.) ஐம்பான் வேள்விகளுள் குலங்களுக்குரிய நாட்கடனிறுக்கும் (நித்தியக் கிரியைகளாகிய) வேள்வி (சி. சி. 8, 23, சிவாக்.); performing daily the rites appropriate to each *varuṉācciramam,* one of pañja-yāgam.

**த.வ. கருமவேள்வி.**

[**Skt.** *karma+yāga > த. கன்மயாகம்.*]

**கன்மவிந்தியம்** *kaṉma-v-indiyam,* பெ.(n.) **கருமேந்திரியம்** பார்க்க; see *karumēndiriyam. "நீடிய கன்மவிந்தி யத்தின்" (மச்சபு. பிரமமு.12.)*

[**Skt.** *karman* + **Pkt.** *indiya* > *த. கன்மவிந்தியம்.* **Skt.** *indriya* > **Pkt.** *indiya.*]

**கன்மவேள்வி** *kaṉma-vēḷvi,* பெ.(n.) **கருமயாகம்** (சி.சி.8 : 23, சிவஞா.) பார்க்க; see *karuma-yāgam,* performance of religious duties.

[*கன்மம் + வேள்வி.*]

[**Skt.** *karman>த.கன்மன்+வேள்வி.*]

**கன்மாதிகன்** *kaṉmādigaṉ,* பெ.(n.) குல முன்னோர்களின் நினைவைப் போற்றும் வகையில் சடங்குகள் செய்வோன்; (பிதிர்கருமஞ்செய்வோன்) (சங்.அக.); one who performs funered rites to his ancestors.

**த.வ. நினைவேந்தலோன்.**

[**Skt.** *karman+adhi-kṛta > கன்மாதிகன்.*]

**கன்மிட்டன்** *kaṉmiṭṭaṉ,* பெ.(n.) 1. எல்லாச் செயல்களையும் ஆர்வத்தோடு செய்பவன்; one who earnestly performs all religious rites. 2. செயல் செய்வதில் வல்லவன்; one skilled in

business, clever man. *"தயித்தியர்க்குக் கன்மிட்டனாகிக் காக்குங் கவி"* *(உத்தரரா. இலவண. 33)*

**த.வ. வினைத்திறலன்.**

*[**Skt.** karmiṣtha > த. கன்மிட்டன்.]*

**கன்மேந்திரியம்** *kaṉmēndiriyam,* பெ.(n.) **கருமேந்திரியம்** (பரிபா. 3 : 77, உரை.) பார்க்க; see *karumēndiriyam.*

**த.வ. கருமப்பொறி.**

*[**Skt.** karman+indriya > த. கன்மேந்திரியம்.]*

**கன்னிகாதானம்** *kaṉṉigā-dāṉam,* பெ. (n.) 32 அறங்களுள் ஒன்றான, கன்னியை ஆடவனுக்கு மணம் செய்து கொடுக்கும் அறம் (பிங்.); giving away a virgin in marriage, one of *muppattiraṇḍaṟam.*

**த.வ. மகட்கொடை.**

*[கன்னிகா+தானம்.]*

*[த.கன்னிகா > **Skt.** kaṉyakā]*

கன்னிகா → கன்னி என்னும் தமிழ்ச்சொல்லின் வடமொழித் திரிபு.

**கன்னிகாமடம்** *kaṉṉigā-maḍam,* பெ.(n.) **கன்னியாத்திரீமடம்** பார்க்க; see kaṉṉiyāttirī-maḍam.

**த.வ. கன்னிமாடம்.**

*[கன்னிகா + மடம்.]*

*[த.கன்னி > **Skt.** kaṉyakā]*

**கன்னிப்பை** *kaṉṉi-p-pai,* பெ.(n.) கோணிப்பை; gunny bag.

*[**E.** gunny>gōṇi > த. கன்னி + பை]*

**கன்னியாசுல்கம்** *kaṉṉiyā-sulgam,* பெ.(n.) 1. திருமணத்தில் மணமகன் மணமகளைச் சார்ந்தார்க்குக் கொடுக்கும் பரிசுப் பணம்; money given to the bride's father as her price; purchase money of a girl. 2. ஒருவன் ஒரு கன்னியை மணந்து கொள்வதற்கு ஏற்படுத்தும் வில் வளைக்கை ஏறு தழுவுகை போன்ற செயல்; arduous undertaking, as bending a bow or successfully handling a wild ox, set as a test to win the hand of a bride.

**த.வ. கன்னிப்பரிசம்.**

*[த. கன்னி >**Skt.** kaṉyā + šulka > த. கன்னியா+சுல்கம்]*

**கன்னியாத்திரி** *kaṉṉiyā-t-tiri,* பெ.(n.) 1. கன்னிப் பெண் (மணமாகாத பெண்); virgin, damsel. 2. கிறித்தவப் பெண் துறவி; nun.

**த.வ. கன்னியாத்திரீ.**

*[த. கன்னி > **Skt.** kanyā + strī > த. கன்னியாத்திரீ]*

**கன்னியாத்திரீமடம்** *kaṉṉiyā-t-tirī-maḍam,* பெ.(n.) கிறித்தவப் பெண்துறவிகள் வசிக்கும் இடம்; convent for nuns.

*[கன்னியாத்திரீ + மடம்.]*

*[த. கன்னி > **Skt.** kanyā + strī.]*

**கன்னியாதானம்** *kaṉṉiyā-dāṉam,* பெ.(n.) **கன்னிகாதானம்** பார்க்க; see *kaṉṉigā-dānam.*

**த.வ. மகட்கொடை.**

*[கன்னியா + தானம்.]*

*[த. கன்னி > **Skt.** kanyā.]*

**கன்னியாபுத்திரன்** *kaṉṉiyā-puddiraṉ,* பெ.(n.) கன்னிப் பெண் பெற்ற மகன்; son of an unmarried woman.

**த.வ. கன்னிமகன்.**

*[கன்னியா + புத்திரன்.]*

*[த. கன்னி > **Skt.** kanyā]*

**கன்னியாமடம்** *kaṉṉiyā-maḍam,* பெ.(n.) **கன்னியாத்திரீமடம்** பார்க்க; see *kaṉṉiyā-ttirī-maḍam.*

*[கன்னியா + மடம்.]*

*[த. கன்னி > **Skt.** kanyā.]*

**கன்னியாமாடம்** *kaṉṉiyā-māḍam,* பெ.(n.) **கன்னிமாடம்** பார்க்க; see *kaṉṉi-mādam* *"மணியிற் செய்த கன்னியா மாட மெய்தி"* *(சீவக.585)*

*[கன்னியா + மாடம்.]*

*[த. கன்னி> **Skt.** kanyā]*

**கனகாசம்** *kaṉa-gāšam,* பெ. (n.) கண்ணோய்வகை (யாழ்.அக.); a disease of the eye.

*[**Skt.** ghana + kāca > த. கனகாசம்.]*

**கனரதம்** *kaṉa-radam,* பெ.(n.) **கனவிரதம்** (உரி. நி.) பார்க்க; see *kaṉa-v-iradam.*

*[Skt. ghana + rasa > த. கனரதம்.]*

**கனவிரதம்** *kaṉa-v-iradam,* பெ.(n.) நீர் (பிங்.); juice from the cloud, water.

*[கனரதம் >கனவிரதம்.]*

**கனிட்டமாத்திரை** *kaṉi-ṭ-ṭa-māttirai,* பெ.(n.) சிறுவடிவிலான மாத்திரைவகை (சாரங்க. 251.); small - sized medicinal pill.

**த.வ. நுண்மாத்திரை.**

*[கனிட்டம் + மாத்திரை.]*

*[Skt. kaniṣtha > த. கனிட்டம்.]*

**கனிட்டன்**[1] *kaṉiṭṭaṉ,* பெ.(n.) 1. கடைசிப்பிள்ளை (C.G.); last-born son. 2. தம்பி; younger brother. *"ஆனைமுகார் கனிட்ட" (திருப்பு. 513).* 3. கீழ்மகன் (திவா.); base, vile, low person.

**த.வ. இளையன், கடைக்குட்டி.**

*[Skt. kanistha > த. கனிட்டன்.]*

**கனிட்டன்**[2] *kaṉiṭṭaṉ,* பெ.(n.) **கனிட்டை, 3** (சிலப். 3 : 58 உரை.) பார்க்க; see *kaṉiṭṭai,3.*

*[Skt. kanisthā > த. கனிட்டன்.]*

**கனிட்டிகை** *kaṉiṭṭigai,* பெ.(n.) **கனிட்டை, 3** பார்க்க; see *kaṉiṭṭai, 3.*

*[Skt. kaniṣthikā > த. கனிட்டிகை.]*

**கனிட்டை** *kaṉiṭṭai,* பெ.(n.) 1. கடைசியாகப் பிறந்த மகள்; last-born daughter. 2. தங்கை; sister, younger than oneself. 3. சிறுவிரல்; the little finger. *"அணியலு மாகுங் கனிட்டை யங்குட்டமின்றி" (சைவச. பொது. 190).*

**த.வ. கடைக்குட்டி.**

*[Skt. kaniṣthā > த. கனிட்டை.]*

**கனோபலம்** *kaṉōpalam,* பெ.(n.) ஆலங்கட்டி; hail-stone. *"மழையிற் சுரும்பு கனோபலத்திற் கருல" (சேதுபு. அகத்திய. 15)*

**த.வ. ஆலி.**

*[Skt. ghana + upala > த. கனோபலம்.]*

**காக்கலாதிதம்** *kākkalādidam,* பெ.(n.) காளான்; mushroom (சா.அக.).

**காக்கா** *kākkā,* பெ.(n.) அண்ணன் (மு.வ.); elder brother.

*[U. kākā > த. காக்கா.]*

**காகபாடாணம்** *kāga-pāḍāṇam,* பெ.(n.) வைப்பு நஞ்சு வகை; a prepared arsenic, one of 32.

*[Skt. kāka+pāṣāṇa > காகபாஷாணம்>த. காக பாடாணம்.]*

**காகிதம்** *kākidam,* பெ.(n.) 1. கடுதாசி; paper. 2. கடிதம்; epistle written on paper.

**U.** kāgaz.

**த.வ. தாள்.**

*[Mhr. kāgada > த. காகிதம்.]*

**காங்கி**[1] *kāṅgi,* பெ.(n.) பணியாளர் தொகுதி; company of workmen.

**த.வ. களமர்.**

*[E. Gang > த. காங்கி.]*

**காங்கி**[2] *kāṅgi,* பெ.(n.) பேராசைக்காரன்; avaricious person. *"மற்றவன் கைத்துண்பான் காங்கி யெனப்படுவான்" (நான்மணி. 61).*

*[Skt. kāṅkṣin > த. காங்கி.]*

**காசச்சுரம்** *kāśa-c-curam,* பெ.(n.) ஈளை நோயால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உண்டாகும் காய்ச்சல்; fever of an asthmatic patient followed by cough (சா.அக.).

*[காசம்+சுரம்.]*

*[Skt. kāśa > த. காசம்.]*

**காசசிலேட்டுமம்** *kāśa-śilēṭṭumam,* பெ.(n.) ஈளை நோயினால் எழும் கோழை அல்லது சளி; the mucous sputum or phlegm arising from asthma (சா. அக.).

**த.வ. ஈளைச்சளி.**

*[Skt. kāśa+ślēṣman > த. காசசிலேட்டுமம்.]*

**காசசுவாசம்** *kāśa-śuvāsam,* பெ.(n.) ஈளை நோய் இழுப்பு (காச இழுப்பு) (பதார்த்த. 24.); asthmatic breathing, difficult breathing as in asthma (சா.அக.).

**த.வ. ஈளை இழுப்பு.**

*[Skt. kāśa+śvāsa > த. காசசுவாசம்.]*

**காசபாகயந்திரம்** *kāśabāga-yandiram,* பெ.(n.) வாலைக்குப் [நீர்மம் (திரவம்) வடிக்கும் பாண்டம்] பயன்படுத்தும் மூக்கு நீண்ட ஏனம்; a glass retort (சா.அக.).

த.வ. மூக்குஎனம்.

[Skt. kāsa+bāha+yantra>த. காசபாக யந்திரம்]

**காசரணவாதம்** *kāša-rana-vādam,* பெ.(n.) ஈளை நோய் ஏற்பட்டு நெஞ்சு புண்ணாகிக் காணும் ஒரு இழுப்பு நோய்; a kind of rheumatism attributed to irritation of the mucous membrane of the bronchial tubes (சா. அக.).

த.வ. ஈளை இழுப்பு.

[Skt. kāša+vrana+vāta > த. காசரண வாதம்.]

**காசரோகம்** *kāša-rōgam,* பெ.(n.) நாசித் துளை எரிச்சலால் உடம்பில் ஏற்படும் ஈளை நோய்; bronchitis or asthma due to irritation of the mucous membrane of the bronchial tubes (சா.அக.).

த.வ. ஈளைநோய்.

[Skt. kāša+rōga > த. காசரோகம்.]

**காசலவணம்** *kāša-lavanam,* பெ.(n.) ஐவகை உப்புகளுள் ஒன்று; salt of potash or soda in crystalline state, one of *pañja-lavanam.*

[Skt. kāša+lavana > த. காசலவணம்]

ஐவகையுப்புகள்: 1. காசலவணம், 2. பிடாலவணம், 3. சயிந்த வலவணம், 4. சவ்வர்ச்சலலவணம், 5. சமுத்திரலவணம்.

**காசனம்** *kāšanam,* பெ.(n) கொலை (வின்.); killing, slaying.

[Skt. šasana > த. காசனம்.]

**காசா**[1] *kāša,* பெ.எ.(adj.) முதல் தரமான; excellent, pure, good.

[U. khāšā > த. காசா.]

**காசா**[2] *kāša,* பெ.(n) பதினாறு அகவையாகும் போது குதிரைப் பற்களில் ஏற்படும் கருஞ் சிவப்பு நிறம் (அகவசா. 6.); deep-red colour of the teeth of horses when they are sixteen years old.

[U. gajā > த. காசா.]

**காசா**[3] *kāšā,* பெ.(n) உடையில் பொத்தானைப் பொருத்த அளவாக வெட்டித் தைக்கப்படும் சிறிய துளை; button hole. *'இந்தச் சட்டைக்கு எத்தனை காசா எடுக்க வேண்டும்? காசா வெட்டத் தேவையான இடங்களில் குறி போட்டுக் கொடு'.*

[U. gajā > த. காசா.]

**காசா**[4] *kāsā,* பெ.(n) துணிவகை; a kind of cloth. *காசா கச்சா.*

[Hi. kaccha > த. காசா.]

**காசா**[5] *kāšā,* பெ.(n) தலைவன் (எசமான்); master, proprietor.

[Persn. khwājā > த. காசா.]

**காசா**[6] *kāsā,* பெ.(n) 1. சொந்தம்; one's own, personal possession. 2. உண்மை விலை (அசல் விலை); original price.

[U. khāsā > த. காசா.]

**காசா**[7] *kāsā,* பெ.எ.(adj.) மிகவுஞ் சிறந்த; fine, capital, elegant.

[U. khāsā > த. காசா.]

**காசாக்காரன்** *kāšā-k-kāran,* பெ.(n) உரிமையாளன், சொந்தக்காரன்; owner, proprietor.

[U. khāsā > த. காசா + காரன்]

**காசாப்பற்று** *kāsā-p-parru,* பெ.(n) தனதுபற்று; dues, as to a shop, bank, etc.

[கசா + பற்று.]

[U. khāsā > த. கசா + பற்று.]

**காசாமண்டிகை** *kāša-mandigai,* பெ.(n) கோதுமை மாவினாலும், அரிசி மாவினாலும் செய்யப்படும் ஒருவகைப் பணியாரம் (இந்துபாக. 326.); a kind of cake made of wheat and rice flour.

[U.gajā+Skt.mandikā> த. காசாமண்டிகை.]

**காசாயங்கொடு-த்தல்** *kāšāyan-godu-,* 4 செ.கு.வி.(v.i.) காவி வண்ண ஆடையைக் கொடுத்துத் துறவி (சன்னியாசி) ஆக்குதல்; to initiate one into the order of *šanyāši,* as by giving him a cloth dyed brown-red.

[காசாயம் + கொடு-.]

[Skt. kāšāya > த. காசாயம்.]

**காசாயநாதாந்தி** *kāšāya-nādāndi,* பெ.(n) செம்பு; copper (சா.அக.).

**காசாயம்** *kāšāyam,* பெ.(n) செங்காவி வண்ணம் ஊட்டப் பெற்ற ஆடை; brown-red cloth of a *šaṉyāši.*

*[Skt. kāšāya > த. காசாயம்.]*

**காசாயம்வாங்கிக்கொள்(ளு)-தல்** *kāšāyam-vāṅgi-k-koḷ(ḷu)-,* 16 செ.கு.வி.(v.i.) காவி வண்ண ஆடையைப் பெற்றுத் துறவியாதல்; to be admitted to the order of *šaṉyāšiš.*

**த.வ. துறவறம் ஏற்றல்.**

*[காசாயம் + வாங்கி + கொள்(ளு)-,]*

*[Skt. kāšāya > த. காசாயம்.]*

**காசாயமூட்டு-தல்** *kāšāyam-ūṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) காவி வண்ணம் ஊட்டல்; to dye a cloth with ochre.

*[காசாயம்+ஊட்டு-,]*

*[Skt. kāšāya > த. காசாயம்.]*

**காசாவசம்** *kāšāvašam,* பெ.(n) பற்றுவரவுக் கணக்கில் தன் வயமானது; that which is received or paid personally by the individual in whose name the account stands.

*[U. khāsā+vaša > த. காசாவசம்]*

**காசாவர்க்கம்[1]** *kāša-varkkam,* பெ.(n) குடிக்கூலி கொடுக்கும் நல்ல குடிகள்; good tenants.

*[U. khāsā + Skt. varga > த. காசாவர்க்கம்]*

**காசாவர்க்கம்[2]** *kāšā-varkkam,* பெ.(n) ஊர்ப்பொதுவேலை செய்வதென்னும் கட்டுப் பாட்டின் மேல் சிற்றூர் பொது மனைக்கட்டில் குடியிருக்கை; occupying the *maṉaikkaṭṭu* of a village, free of rent, in return for common village service.

*[Ar. khāsā + Skt. varga > த. காசாவர்க்கம்.]*

**காசாவில்லை** *kāšā-villai,* பெ.(n) சந்தனத்துடன் பல நறுமணப் பொருள்கள் சேர்ந்த சிறப்புச் சந்தனக் கூட்டு (யாழ். அக.); sandal paste with special fragrant ingredients.

*[காசா + வில்லை.]*

*[Ar. khāsa > த. காசா.]*

**காசாவெடு-த்தல்** *kāšā-veḍu-,* 4. செ.கு.வி. (v.i.) சட்டையின் பொத்தான் துளையைத் தைத்தல்; to stitch a buttonhole.

**த.வ. பொல்லம் பொத்தல்**

*[U. kājā > த. காசா.]*

**காசியார்** *kāšiyār,* பெ.(n) சட்டப்படி தீர்ப்பு வழங்கும் முறை மன்றாளரும் (நீதிபதியும்) முகம்மதிய குருவும், ஆனவர்; Muhammadan judge having jurisdiction over all cases of law, religious, moral, civil and criminal.

*[U. qāzi > த. காசியார்.]*

**காசீ** *kāji,* பெ.(n) **காசியார்** பார்க்க; see *kāšiyār.*

*[U. qāzī > த. காசீ.]*

**காசீசம்** *kāšīšam,* பெ.(n) அன்ன பேதி; green-vitriol, Iron sulphate (சா.அக.).

**காசீயார்** *kāšīyār,* பெ.(n) **காசியார்** பார்க்க; see *kāšiyār.*

**காசுசவாரி** *kāšu-šavāri,* பெ.(n) பெரியோரின் சுற்றுலா (P.T.L.); tour of a high or noble person.

*[Ar. khāss + U. sawār > த. காசுசவாரி]*

**காசுதாரி** *kāšu-dāri,* பெ.(n) குதிரைக்காரன்; groom, syce, horsekeeper.

*[Ar. khāss + Persn bardār > த. காசுதாரி.]*

**காசை** *kāšai,* பெ.(n) ஈளை நோய் (வின்.); consumption.

*[Skt. kāša > த. காசை.]*

**காசையாடை** *kāšaiyāḍai,* பெ.(n) காவி வண்ணம் ஊட்டப்பட்ட ஆடை; brown-red cloth worn by ascetics. *"காசையாடை மூடியோடி" (திவ். பெரியதி. 2. 2 :1).*

*[காசா + ஆடை.]*

*[Skt. kāṣāya > த. காசாயம்.]*

**காட்டாக்கினி** *kāṭṭākkiṉi,* பெ.(n) கட்டையைக் கடைந்து உண்டாக்கும் நெருப்பு; fire produced from sticks by friction.

*[Skt. kāṣṭa+agni > காஷ்டாக்கினி > த. காட்டாக்கினி]*

**காட்டாசாரி** *kāṭṭāšāri,* பெ.(n) தச்சன்; carpenter.

*[Skt. kāṣtha+ācārya > காஷ்டாசாரி > த. காட்டாசாரி.]*



**காட்டை**[1] *kāṭṭai,* பெ.(n) 1. ஒரு நுட்பமான காலவளவு; a measure of time = 1/30 *kalā.* 2. எல்லை; boundary, limit.

*[Skt. kāšthā > த. காட்டை.]*

**காட்டை**[2] *kāṭṭai,* பெ.(n) விருப்பம்; desire.

*[Skt. kāṅkšā > த. காட்டை.]*

**காடாலிங்கனம்** *kāḍāliṅganam,* பெ.(n) இறுகத்தழுவுகை; close embrace.

*[Skt.gāḍha+ ā-liṅgana > த. காடாலிங்கனம்.]*

**காடிகானா** *kādi-gāṉā,* பெ.(n) வண்டியை நிறுத்தும் இடம் (கட்டிடம்); cart-stand carriage-house, shed far keeping carts.

*[U. gādi-khāna > த. காடிகானா.]*

**காடினியம்** *kāḍiṉiyam,* பெ.(n) கடினத்தன்மை இறுகுத் தன்மை; hardness, rigidity, thoughness.

*[Skt. kāṭhinya > த. காடினியம்.]*

**காடீசம்** *kāḍīšam,* பெ.(n) வெங்காரம்; borax or biborate of soda - *Soda biborous* (சா.அக.).

**காணாதன்** *kāṇādaṉ,* பெ.(n) கணாத மதத்தினன்; adherent of the school of *kaṇādam.* *"கண்டகராய்நின்ற காணாதர் வாதங் கழற்றுவமே" (தேசிகப். 5 : 30.).*

*[Skt. kaṇāda > த. காணாதன்.]*

**காத்தியம்** *kāttiyam,* பெ.(n) கடித்துண்ணும் உணவு; food munched and eaten.

*[Skt. khādya > த. காத்தியம்.]*

**காத்தியாயனம்** *kāttiyāyaṉam,* பெ.(n) அறநூல் பதினெட்டனுள் காத்தியாயனரால் இயற்றப்பட்டது (திவா.); a treatise in Sanskrit on Hindu law, ascribed to *Kātyāyana* one of 18 *tāruma-nūl.*

*[Skt. Kātyā-yana > த. காத்தியாயனம்.]*

**காத்தியாயனர்** *kāttiyāyaṉar,* பெ.(n) 1. அற (தரும) நூலாசிரியருள் ஒருவர்; name of a Hindu-law-giver. 2. வரருசி, சமற்கிருத இலக்கண ஆசிரியர் (பி.வி.1.); Vararuci, a Sanskrit grammarian, as a descendant of Kata.

*[Skt. Kātyāyana > த. காத்தியாயனர்.]*

**காத்தியாயனி** *kāttiyāyaṉi,* பெ.(n) 1. மலை மகள் (சிவரக. தாருக. 30.); *Pārvati.* 2. கொற்றவை (பிங்.); *Durgā.*

*[Skt. kātyāyani > த. காத்தியாயனி.]*

**காத்திரம்**[1] *kāttiram,* பெ.(n) 1. உடல்; body. *"காத்திரங் கரணஞ்சேர்த்தி" (வைராக். தீப. 39).* 2. உறுப்பு (திவா.); limb, member. 3. யானையின் முன்னங்கால்; fore leg of an elephant. *"காத்திரங்களாற் றலத்தொடுந் தேய்த்ததொர் களிறு" (கம்பரா. வரைக். 6).* 4. கனம், நெருக்கம், இறுக்கம் (சூடா.); thickness, solidity. 5. உடலின் பருமன்; corpulence. 6. இன்றியமையாதது; importance.

*[Skt. gātra > த. காத்திரம்.]*

**காத்திரம்**[2] *kāṭṭiram,* பெ.(n) **காத்திரவேயம்** பார்க்க; see *kāttiravēyam.*

**காத்திரவேயம்** *kāttiravēyam,* பெ.(n) பாம்பு (உரி. நி.); serpent.

*[Skt. kādravēya > த. காத்திரவேயம்.]*

**காத்திரவேயர்** *kāttira-vēyar,* பெ.(n) கீழ்த்திசையில் வாழ்வதாகக் கருதப்படும் நாகர்; a class of *Nāgas* or serpent demons supposed to inhabit the lower regions, as the children of *Kadru.* *"காத்திரவேயரை மன்னன் மைந்தரு மொத்தார்" (பாரத. சம்பவ. 119).*

*[Skt. kādravēya > த. காத்திரவேயர்.]*

**காத்திராந்தலேபனி** *kāttirāndalēbaṉi,* பெ.(n) நறுமணச் சந்தனம்; perfumed sandal paste. (சா. அக.)

**காத்திரி**[1] *kāttiri,* பெ.(n) கீரி (திவா.); mungoose.

*[Skt. kṣātra > த. காத்திரி.]*



**காத்திரி**[2] *kāttiri,* பெ.(n) சினம், வெகுளி (கோபம்); displeasure, anger.

*[Skt. kṣātra > த. காத்திரி.]*

**காத்திரி**[3] *kāttiri,* பெ.(n) படைக்கலம் (வின்.); weapon.

*[Skt. šastra > த. காத்திரி.]*

**காத்திரை** *kāttirai,* பெ.(n) **காத்திரி**[3] (அக. நி.) பார்க்க; see *kāttiri*[3].

**காதர்** *kādar,* பெ.(n) அனைத்து வல்லமைகளும் உடைய இறைவன் (முகமதி.); almighty.

ம. காதர்.

*[U. qādir > த. காதர்.]*

**காதர்பசந்து** *kādar-pašandu,* பெ.(n) சிறுநீரக வடிவில் இருக்கும் சுவைமிக்க மாம்பழவகை; a kidney-shaped graft mango, fleshy and of milky flavour when ripe.

*[U. qādir+pasand > த. காதர்பசந்து.]*

**காதரோகம்** *kāda-rōgam,* பெ.(n) கரப்பான் (கிரந்தி) நோய்; glandular swellings; syphilis (சா.அக.).

**காதனவிரணம்** *kādaṉa-viraṇam,* பெ.(n) அரிபுண்; rodent ulcer (சா.அக.).

**காதா** *kādā,* பெ.(n) பற்றுவரவுக் கணக்கு (C.G.); current account in a person's name; ledger.

*[U. khāta > த. காதா.]*

**காதி** *kādhi,* பெ.(n) இரட்டுத் துணி; double-threaded coarse cloth.

*[U. khādi > த. காதி.]*

**காதியம்** *kādiyam,* பெ.(n) மென்று தின்னும் மருந்து; a medicine to be taken by mastication (சா.அக.).

**காதேமார்** *kādēmār,* பெ.(n) மிகப்பெரிய காய்களையுடைய புளிப்பான மாவகை; a mango tree that bears very big fruits sour to the taste.

*[U. gadhā-mār > த. காதேமார்.]*

**காந்துவி** *kānduvi,* பெ.(n) மண்ணீரல்; spleen. (சா. அக.)

**காப்பி**[1] *kāppi,* பெ.(n) 1. ஒரு வகையான செடி; Arabian coffee, *Coffea arabica.* 2. காப்பித் தூளைக் கொதிக்கும் நீரில் போட்டுத் தெளியவைத்துப் பால் கலந்து தேவையான அளவு இனிப்புச் சேர்த்துச் செய்யும் பருகக் கூடிய சிறப்பான சுவைப்பருகம்; coffee.

**த.வ.குளம்பி, காணீர்**

*[E. coffee > த. காப்பி.]*

**காப்பி**[2] *kāppi,* பெ.(n) படி (நகல்); copy.

*[E. copy > த. காப்பி.]*

**காப்பிக்கசாயம்** *kāppi-k-kašayam,* பெ.(n) காப்பிப் பொடியிட்டுக் காய்ச்சிய கொதிநீர், காணீர்க் கருக்கு; coffee decoction (சா.அக.).

*[E.coffee+**Skt.**கஷாயம் > த. காப்பிக்கசாயம்.]*

**காப்பிக்கொட்டை** *kāppi-k-kōṭṭai,* பெ.(n) காப்பிச் செடியின் பழத்தினின்று கொட்டையை எடுத்துக் காயவைத்துப் பதப்படுத்திய விதை; coffee seeds, coffea beans. It is from the ripe red berries that this seed is taken, washed and then dried.

*[காப்பி + கொட்டை.]*

*[E. coffee > த. காப்பி.]*

இதற்குக் கோப்பிக் கொட்டையென்றும் பெயர். இக்கொட்டையின் தரம், காயின் வடிவு, நிறம், மணம், செழிப்பு முதலியவற்றைக் கருதி பலவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதை வறுத்துப் பொடி செய்து

**காப்பிச்சூரை** *kāppi-c-cūrai,* பெ.(n) காப்பிச் செடியில் பூச்சிகளினால் ஏற்படும் நோய்; a disease common to coffee crops caused by a fungus, *coffee blight* (சா.அக.).

*[காப்பி + சூரை.]*

*[E. coffee > த. காப்பி.]*

**காப்பிச்செடிநோய்** *kāppi-c-ceḍi-nōy,* பெ.(n) காப்பிச் செடியில் பூச்சி விழுந்து அதன் காய்ப்பைக் கெடுக்கும் ஒரு நோய்; a disease of the coffee plant caused by fungus (Hemibia vastatrix) which destroys the whole crops (சா.அக.).

*[காப்பி+செடி+நோய்.]*

*[E. coffee > த. காப்பி.]*

**காப்பித்தண்ணீர்** *kāppi-t-taṇṇīr,* பெ.(n) காப்பித் துளை வெந்நீரில் கொதிக்க விட்டு, அந்நீரில் பாலும் சருக்கரையும் பலவாறாகக் கலந்துள்ள ஒருவகைப் பருகம்; coffee drink. It is a decoction of coffee powder to which are added milk and sugar in desired proportions (சா.அக.).

*[காப்பி + தண்ணீர்.]*

*[E. coffee > த. காப்பி.]*

**காப்பித்தூள்** *kāppi-t-tūḷ,* பெ.(n) காப்பிக் கொட்டையை வெண்ணெய் அல்லது நெய்யிட்டு வறுத்து இடித்து எடுத்த பொடி; powder of coffee seeds prepared by adding some butter or ghee to the seeds and then roasted (சா.அக.).

*[காப்பி + தூள்.]*

*[E. coffee > த. காப்பி.]*

**காப்பியடி–த்தல்** *kāppi-y-aḍi-,* 4 செ.கு.வி.(v.i) 1. தேர்வின் நெறிமுறைகளுக்குப் புறம்பாக வினாக்களுக்குப் புத்தகம் முதலியவற்றைப் பார்த்து எழுதுதல்; copy, the answer from sources that are not allowed in the examination. *காப்பியடித்துப் பிடிபட்டால் மூன்றாண்டுகள் தேர்வு எழுத முடியாது.* 2. ஒன்றில் இருப்பதைப் போன்று அல்லது ஒருவர் செய்யும் செயலைப் பார்த்து அப்படியே அது போன்றே செய்தல்; imitate. *'தலை முடியை வாருவதில் கூட என்னைப் பார்த்துக் காப்பியடிக்க வேண்டுமா என்ன?'.*

*[காப்பி + அடி–.]*

*[E. copy > த. காப்பி.]*

**காபடிகன்** *kābaḍigaṉ,* பெ.(n) மாயக்கலை (இந்திர சாலம்) செய்வோன்; a magician; one creating an illusion (சா.அக.).

**காபந்து** *kābandu,* பெ.(n) காப்பு, பாதுகாப்பு; careful protection. *'முந்தும் அரவம் நச்சுயிரிகளால் ஏதம் வந்து கெடாமலே காபந்து செய்தாயே'. (சர்வசமய சமரசக் கீர்த்தனை).*

*[U. khāwand > த. காபந்து.]*

**காபந்துஅரசு** *kābandu-arašu,* பெ.(n) மறு அரசு தேர்ந்தெடுக்கப்படும் வரையுள்ள காலத்தில் நாட்டை ஆளும் அரசு; caretaker government.

*[காபந்து + அரசு.]*

*[U. khāwand > த. காபந்து.]*

**காபரா** *kābarā,* பெ.(n) குழப்பம், மனக்கலக்கம்; disorder, confusion, alarm, excitement. *'ஆள் மெத்த காபராகிவிட்டான்' (உ.வ.).*

*[U. ghābrā > த. காபரா.]*

**காபி** *kāpi,* பெ.(n) **காப்பி** பார்க்க; see *kāppi.*

*[E. copy > த. காபி.]*

**காபிசம்** *kāpišam,* பெ.(n) **காபிசாயனம்** பார்க்க; see *kāpi-šāyaṉam* (சா.அக.).

**காபிசாயனம்** *kāpi-šāyaṉam,* பெ.(n) கள்; toddy (சா.அக.).

**காபித்தம்** *kābittam,* பெ.(n) விளா; wood-apple - *Feronia elephantum* (சா.அக.).

**காபிரம்** *kābiram,* பெ.(n) சாம்பிராணி; frankincense benzoin. (சா. அக.)

**காபிரியமதம்** *kābiriya-madam,* பெ.(n) ஒரு வகை மதம்; a kind of religion.

இம்மதத்தவர்களின் படைப்புக் கடவுளுக்குக் குவினியாடிக்வோசா என்று பெயர். இவர்கள் பல சிலைகளைச் செய்து கோயில்களில் வைத்துப் பூசிப்பர். ஆடு, மாடுகளைப் பலியிடும் இவர்கள் மேபக் என்னும் புழுவை நல்லவற்றைத் தெரிவிக்கும் எனக் கருதிக் காப்பாற்றுவர். குருக்கள் தங்கள் விருப்பப்படிப் பெண்களை மணந்து கொள்ளலாம். இம்மத வழக்கப்படிக் கைம்பெண்கள் மறுமணம் செய்து கொள்ளலாம் (அபி.சிந்.).

**காபில்** *kābil,* பெ.(n) அனைத்துத் திறமைகளும் பொருந்தியவன்; a fit, clever or competent person.

*[U. qabil > த. காபில்.]*

**காபிலம்** *kābilam,* பெ.(n) 1. கபிலரது மதமான சாங்கிய மதம்; *šāṅgiya,* one of the Indian systems of philosophy whose founder or the earliest systematic exponent was Kapilar. *"காபிலப் பொருளென் றுரைசெயு நூலின்" (பிரபோத.11 : 6).* 2. தலையிலிருந்து கால்வரை ஈரத் துணியால் உடம்பைத் துடைத்துக் கொள்ளுதலாகிய குளியல் வகை; a kind of bath which consists in wiping the body clean from head to foot with a wet cloth and which is generally resorted to by persons who are not in a position ot take a both. 3. கபிலம் என்னும் ஆ (பசு)வினது நெய்; ghee from a brown cow. *"திருவிளக்கைக் காபிலத்தா னிகழ்த்துகவே" (சிவதரு. சிவஞானதா. 24.).* 4. துணைத் தொன்ம (உப புராண) வகையுள் ஒன்று; a secondary Purana one of 18 *upa-purānam.*

*[Skt. kāpila > த. காபிலம்.]*

**காபுரம்** *kāburam,* பெ.(n) 1. வயிற்றுப்பிசம்; tympany, wind dropsy. 2. பாக்கு மரம்; areca nut tree. 3. ஒரு வகைக் கோரைப்புல்; a kind of sedge grass - *Cyperus pertinuis.* 4. ஒரு நறுமணம்; a perfume (சா.அக.).

**காபுருசன்** *kā-puruša<u>n</u>,* பெ.(n) இழிந்தவன், சிறுமையுடையவன்; insignificant despicable person. *"ஒரு காபுருசன் எடுக்கிலும்" (திவ். திருநெடுந். 21, வியா. 176).*

*[Skt. kā-puruṣa > த. காபுருசன்.]*

**காம்** *kām,* பெ.(n) சிற்றூர் (வின்.); village.

*[த. கம்மம் > U. gām > த. காம்.]*

**காம்காரி** *kām-gāri,* பெ.(n) அரசின் கட்டட வேலை(C.G.); public works.

*[U. kām+kārin > த. காம்காரி.]*

**காம்பரா** *kāmbarā,* பெ.(n) 1. அறை; room, chamber. 2. இன்றியமையாத (முக்கியமான) பொருள்களை வைக்கும் அறை; room in which important articles are kept.

*[L. camera > த. காம்பரா.]*

**காம்பலிகம்** *kāmbaligam,* பெ.(n) காடி, மோர், கஞ்சி, யவாக்கஞ்சி முதலியவைகளின் கலப்பு; a mixture of vinegar, sour milk, whey, gruel, barley water etc. (சா. அக.)

**காம்பவுண்டு** *kāmbavuṇḍu,* பெ.(n) 1. ஒரு சுற்றுச் சுவரை உடைய கட்டடத் தொகுதி, வளாகம்; compound, building complex. 2. ஒரு வீடு அல்லது கட்டடத் தொகுதிக்கு வெளியில் உள்ள சுற்றுச் சுவர்; compound wall.

*[E. compound > த. காம்பவுண்டு.]*

**காம்பீரம்** *kāmbīram,* பெ.(n) **காம்பீரியம்** பார்க்க; see *kāmbīriyam.*

**காம்பீரியம்** *kāmbīriyam,* பெ.(n) 1. கம்பீரம்; dignity, majestic bearing. 2. ஆழம்; profundity, depth.

*[Skt. gāmbhīrya > த. காம்பீரியம்.]*

**காம்வார்¹** *kām-vār,* வி.எ.(adv.) சிற்றூர் வாரியாக; village by village.

*[U. gāmvār > த. காம்வார்.]*

**காம்வார்²** *kām-vār,* பெ.(n) சிற்றூர் வருவாய் வகைத்திட்டம் (P.T.L.); village settlement.

*[H. gāmvār > த. காம்வார்.]*

**காமதாலம்** *kāmatālam*, பெ.(n) குயில்; Indian cuckoo (சா.அக.).



**காமமிய்வோன்** *kāmamiyvōn*, பெ.(n) கோழித் தலைக் கெந்தி; red sulphur found in irregular pieces of brick-dust colour (சா. அக.).

**காமராவுள்** *kāmarā-v-uḷ*, பெ.(n) சிறப்பான உடைமைகளை வைக்கக்கூடிய உள்ளறை; inner room in a house where valuable things are kept.

*[காமரா + உள்.]*

*[L. camera > த. காமரா.]*

**காமலம்** *kāmalam*, பெ.(n) 1. கழுதைப்பீ, எச்சம் (லத்தி); ass's dung. 2. கண்ணில் பீளை தள்ளும் ஒரு நோய்; an eye disease attended with purulent discharge. 3. பாலை நிலம்; desert. 4. இளவேனிற் காலம்; spring season. 5. காமம்; lust (சா.அக.).

**காமில்** *kāmil*, பெ.(n) 1. முழுமை; completeness, entirety. 2. ஊரிலிருந்து வரியாக வாங்கும் மொத்தத் தொகை; the total land revenue realised from a village.

*[Ar. kāmil > த. காமில்.]*

**காய்தா** *kāydā*, பெ.(n) 1. முறை (வின்.); order, rule. 2. வழக்கம்; custom, usage, practice. 3. கட்டுப்படுத்துகை; checking.

*[U. qāida > த. காய்தா.]*

**காயகப்பிரியா** *kāyagappriyā*, பெ.(n) மேளகர்தாக்களுளொன்று (சங். சந். 47.); a primary rāga.

*[Skt. gāyaka-priyā > த. காயகப்பிரியா.]*

**காயம்பௌனாகவுல்** *kāyam-paunā-kavul*, பெ.(n) ஏற்பட்ட நிலத்தீர்வையில் முக்கால் பங்கு நிலையாகச் செலுத்தும் குத்தகை உடன்படிக்கை; a cowle, according to the terms of which three-quarters of the original assessment is permanently payable.

*[Ar. qāim+H. pauna>த. காயம்பௌனா+ கவுல்.]*

**காயம்சமாபந்தி** *kāyam-ša(j)māpandi*, பெ.(n) நிலைத்த நிலவரித்திட்டம் (P.T.L.); permanent settlement.

**த.வ. வரித்தணிக்கை.**

*[Ar. qāim + jema > த. காயம்சமா + பந்தி.]*

சிற்றூர்க் கணக்குகளைச் சரிபார்க்கவும், நிலத்தீர்வைக் குறித்த பிணக்குகளைத் தீர்க்கவும் மாவட்ட வருவாய் அலுவலர்களால் நடத்தப்படும் கூட்டம் – (ஜமாபந்தி)

**காயிதம்** *kāyidam*, பெ.(n) **காகிதம்** பார்க்க; see *kāgidam*.

**காயிதா** *kāyidā*, பெ.(n) 1. முறை; order, rule. 2. வழக்கம்; custom, usage, practice. *அங்கு அவனுக்கு ஒன்றும் கட்டுகாயிதா இல்லையோ (வழ.).*

*[U. qāida > த. காயிதா.]*

**காயி** *kāyi*, பெ.(n) பாய்மரத்திற்குப் பற்றுக் கோடாகக் கட்டுப்படும் கயிறு (M.navi.84); guy.

*[E. guy > த. காயி.]*

**கார்க்கானாதார்** *kār-k-kānādār*, பெ.(n) பண்டசாலை அதிகாரி; proprietor of a factory.

*[U. kārkhāna-dār > த. கார்க்கானாதார்.]*

**கார்க்கோன்** *kārkkōn*, பெ.(n) வட்டாட்சியரின் கீழுள்ள ஓர் அரசிறை அலுவலர் (P.T.L.); a subordinate revenue officer under a Tahsildar.

*[Persn. kārkun > த. கார்க்கோன்.]*

**கார்கானா** *kār-kāna*, பெ.(n) தொழில் செய்யும் இடம்; workshop, factory, place of business.

**த.வ. தொழிற்கூடம், பணியகம், தொழிற்சாலை.**

*[U. kārkhāna > த. கார்கானா.]*

**கார்கோன்** *kār-kōṉ,* பெ.(n) தலைமைப் பதவியில் இருப்பவன்; chief executive.

*[U. kārkun > த. கார்கோன்]*

**கார்த்தபசத்துவம்** *kārttapa-šattuvam,* பெ.(n) பெண்களுக்குரிய பத்துக் குணங்களுள் ஒன்று (கொக்கோ. 4 : 28.); the natural disposition of women of the donkey-class, one of pattu-cattuvam.

*[Skt. gārdabha + sat-tva > த. கார்த்தபசத்துவம்.]*

**கார்த்தபம்** *kārttabam,* பெ.(n) கழுதை; ass.

*[Skt. gardabha > த. கார்த்தபம்.]*

**கார்த்திகம்** *kārttigam,* பெ.(n) நிலவின் சுழற்சியை அடிப்படையாகக் கொண்டு கணக்கிடப்படும் ஆண்டின் எட்டாவது மாதம்; eighth lunar month.

*[Skt. kārtika > த. கார்த்திகம்.]*

**கார்ப்படிகன்** *kārppaḍigaṉ,* பெ.(n) தூயப் (புனிதப்) பயணன் (யாழ். அக.); pilgrim.

*[Skt. kārpaṭika > த. கார்ப்படிகன்.]*

**கார்பார்** *kārpār,* பெ.(n) அதிகாரம்; rule, dominion. *கார்பார் பண்ணுகிற வேங்கடராயர் காதிலேகேட்டிடவே (தேசிங்கு–கதை).*

*[U. kārbār > த. கார்பார்.]*

**கார்பாரி** *kārpāri,* பெ.(n) **கார்வாரி** பார்க்க; see *kārvāri.*

*[U. kārbāri > த. கார்பாரி.]*

**கார்வார்** *kārvār,* பெ.(n) **கார்பார்** பார்க்க; see *kārpār.*

*[U. kārbār > த. கார்வார்.]*

**கார்வாரி** *kārvāri,* பெ.(n) செயலாளன், செயல்காரன்; one who conducts the affairs or business of another, manager, agent, superintendent.

*[U. kārbāri > த. கார்வாரி.]*

**கார்வாரித்தம்பிரான்** *kār-vāri-t-tambirāṉ,* பெ.(n) சிவமடத்தின் உசாவல் (விசாரணைத்) தம்பிரான்; a sanyasi superintendent of a šaiva monastery.

*[கார்வாரி+தம்பிரான்.]*

*[U. kārbāri > த. கார்வாரி.]*

**காரகபஞ்சகம்** *kāraga-pañjagam,* பெ.(n) ஐவகைப் பொறிகளின் செயல் (சி.சி. 1 : 5, சிவாக்); the five organs of action.

*[Skt. kāraka + pañjaka> த. காரகபஞ்சகம்.]*

**காரகம்** *kāragam,* பெ.(n) சிறைச்சாலை; jail, prison, dungeon. *"காரகத் திவனையாக்கி" (உபதேசகா. சிவபுண். 338).*

*[Skt. kārā-grha > த. காரகம்.]*

**காரட்டு**[1] *kāraṭṭu,* பெ.(n) தங்கம், மணிகள் (இரத்தினம்) போன்றவற்றை நிறுக்கும் ஒரு நிறை; carat, standard weight for precious stones, 3 1/6 gr. troy.

*[U. qirāṭ > E. carat > த. காரட்டு.]*

**காரட்டு**[2] *kāraṭṭu,* பெ.(n) மஞ்சள் முள்ளங்கி (சு.வை.ர.482); carrot.

*[E. carrot > த. காரட்டு.]*

**காராகாரம்** *kārā-kāram,* பெ.(n) **காராகிரகம்** பார்க்க; see *kārā-kiragam.*

**காராகிரகம்** *kāra-kiragam,* பெ.(n) சிறைச்சாலை; prison, dungeon. *"காராகிரகங் கழிவுற்றபினும்" (தணிகைப்பு. பிரமன். 3).*

*[Skt. kārā-grha > த. காராகிரகம்.]*

**காருகத்தம்** *kārugattam,* பெ.(n) இல்லற நிலை (சிலப். 9 : 28, உரை.); the state of being a householder.

*[Skt. gārhasthya > த. காருகத்தம்.]*

**காருகத்தியம்** *kārugattiyam,* பெ.(n) **காருகத்தம்** பார்க்க; see *kārugattam. "நீதி நிலைபெறு காருகத்தியமா மாச்சிரமம்"* (குற்றா. தல. மந்தமா. 34.)

*[Skt. gārhasthya > த. காருகத்தியம்.]*

**காருகபத்தியம்** *kārugapattiyam,* பெ.(n) துவிசனுக்குரிய வேதாக்கினி மூன்றனுள் முதன்மையானது; the central sacrifical fire of a *tuvišaṉ,* one of three *vētākkiṉi. "காருக பத்தியமாதி மூன்றழல்" (தணிகைப்பு, அகத். 490).*

*[Skt. gārhapatya > த. காருகபத்தியம்.]*

**காருகம்** *kārugam,* பெ.(n) இல்லறம்; life of a householder. *"காருக மடந்தை" (மணிமே 23:105.)*

*[**Skt.** gārha > த. காருகம்.]*

**காருகவடி** *kāruga-v-aḍi,* பெ.(n) கோள் நிலை; position of a planet. *"காருகவடிப் பயின்று" (சிலப். 26:25.).*

*[காருகம்+அடி.]*

*[**Skt.** graha > த. காருகம்.]*

**காருகன்** *karugaṉ,* பெ.(n) கொலையாளன் (சூடா.); murderer.

*[**Skt.** ghātuga > த. காருகன்.]*

**காருடதந்திரம்** *kāruḍa-tandiram,* பெ.(n) விடம் தீர்க்கும் மந்திரங்கள் முதலியவற்றைக் கூறும் நூல்; a work dealing with the art of removing poison with charms, etc.

*[**Skt.** gāruḍa+tantra > த. காருடதந்திரம்.]*

**காருடம்** *kāruḍam,* பெ.(n) 1. கருட கூட்டம் (சமூகம்); a flock of kites. *"காருடங் கண்ட பாந்தட் கணமென"* (கந்தபு. தாரகன்வ. 54). 2. அறுபத்துநாலு கலையுள் நஞ்சைத் தீர்க்கும் கலை (வித்தை); art of removing poison with charms, mantras, etc., invoking *Garuḍa* one of *aṟupattunālu-kalai.* 3. நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; name of an Upaniṣad. 4. **கருடபுராணம்** (கந்தபு. பாயி. 55.) பார்க்க; see *karuḍapurāṇam.* 5. பச்சைக்கல்; green stone, digneous rock, composed chiefly of felspar and hornblende. *"முத்தந் துப்புக் காருடம்" (திருவிளை. மாணிக். 48).*

*[**Skt.** gāruḍa > த. காருடம்.]*

**காருடயூகம்** *kāruḍa-yūgam,* பெ.(n) கலுழன் உருவாக (கருடவுருவாக) அமைக்கும் ஒரு படைவகுப்பு; garuḍa-shaped array of an army. *"வீடுமனும் வகுத்தான் கருங்கா ருடயூகம்" (பாரத. மூன்றாம் போ. 2.).*

*[gāruḍa + vyūha > த. காருடயூகம்.]*

**காருடவிஞ்சை** *kāruḍa-viñjai,* பெ.(n) **காருட வித்தை** பார்க்க; see *kāruḍa-vittai. "காருடவிஞ்சை வித்தகர்" (பெரியபு. திருஞான. 1062).*

*[காருடவித்தை → காருடவிஞ்சை.]*

**காருடவித்தை** *kāruḍa-vittai,* பெ.(n) நஞ்சு மருத்துவம்; art of counteracting poison by charms, incantations, etc.

*[**Skt.** gāruḍa+vidyā > காருடவித்தை.]*

**காருண்ணியம்** *kāruṇṇiyam,* பெ.(n) **காருணியம்** பார்க்க; see *kāruṇiyam.*

*[**Skt.** kāruṇya > த. காருண்ணியம்.]*

**காருண்யபிதிர்க்கள்** *kāruṇya-pidirkkaḷ,* பெ.(n) மாளய பக்கத்தில் (பக்ஷத்திற்) பூசிக்கப்படும் பெயரறியப் படாத தென்புலத்தார் தொகுதி; the manes whose names are not known and who are propitiated during the Mahālaya fortlight.

*[**Skt.** kāruṇya+pitṟ > த. காருண்ய பிதிர்க்கள்.]*

**காருண்யம்** *kāruṇyam,* பெ.(n) **காருணியம்** பார்க்க; see *kāruṇiyam.*

**காருண்யமேகம்** *kāruṇya-mēgam,* பெ.(n) முகிலைப் (மேகம்) போற் கைம்மாறு கருதாது உதவி செய்பவன் (வின்.); one whose bounty flows without stint or expectation of recompense, as a cloud.

*[**Skt.**kāruṇya+mēgha> த. காருண்யமேகம்.]*

**காருணிகன்** *kāruṇigaṉ,* பெ.(n) நல்ல குணம் கொண்டவன், அன்புள்ளவன்; kind, benevolent person. *பரம காருணிகரான பெரியவாச்சான் பிள்ளை.*

*[**Skt.** kāruṇika > த. காருணிகன்.]*

**காருணியம்** *kāruṇiyam,* பெ.(n) இரக்கம், அருள், அன்பு; mercy, grace, compassion. *"காருணியத்தால் வாவென வந்து" (திருப்போ. சந். பிள்ளை. செங்கீரை 5.).*

*[காருண்யம் → த. காருணியம்.]*

**காருணியன்** *kāruṇiyaṉ,* பெ.(n) **காருணிகன்** பார்க்க; see *kāruṇigaṉ.*

*[காருண்ய → காருணியன்.]*

**காருவன்** *kāruvaṉ*, பெ.(n) **காருவாகன்** பார்க்க; see *kāruvāgaṉ*.

**காருவாகன்** *kāruvāgaṉ*, பெ.(n) வண்ணான்; washerman. *"சாணாகம் உவர் காரமுதலியவற்றால் காருவாகன்... நின் மலமாக்காநிற்பன்" (சி.சி. 2:52, மறை.)*

*[Skt. kāru+vāka > த. காருவாகன்.]*



**காலகன்** *kālagaṉ*, பெ.(n) சிவகணத் தலைவரில் ஒருவன்; Kalaga who one of the head to Śiva's celestial hosts (அபி.சிந்.).

**காலசர்ப்பி** *kāla-šarppi*, பெ.(n) ஒரு தூய நீர்த்துறை (தீர்த்தம்); sacred bath-ghat (அபி.சிந்.).

**காலசேயம்** *kālašēyam*, பெ.(n) மோர் (பிங்.); buttermilk.

*[Skt. kālašēya > த. காலசேயம்.]*

**காலதட்சணி** *kāladaṭcaṇi*, பெ.(n) ஒரு வகைப் பாம்பு; a kind of snake (சா.அக.).

**காலரா** *kālarā*, பெ.(n) உமட்டல் மற்றும் வயிற்றுப் போக்கு; vomiting and diarrhoea (சா.அக.).

**காலா** *kālā*, பெ.(n) தாயின் உடன்பிறந்தவள் (முகமதி.); mother's sister.

*[Ar. khālā > த. காலா.]*

**காலாசயம்** *kālāšayam*, பெ.(n) இரும்பு; iron (சா.அக.).

**காலாசுவரம்** *kālā-šuvaram*, பெ.(n) கொடிய காய்ச்சல் வகை (M.L.); black fever.

*[U. kālā+hazar > த. காலாசுவரம்.]*

**காலாயசம்** *kālāyašam*, பெ.(n) **காலாசயம்** பார்க்க; see *kālāšayam* (சா.அக.).

**காலாவதிகபத்திரம்** *kālāvadiga-pattiram*, பெ.(n) ஒன்றைச் செய்தற்குக் காலங் குறிப்பிட்டு எழுதிக் கொடுக்கும் ஆவணம் (சுக்கிரநீதி, 93); document fixing a time-limit for the performance of an act.

*[Skt. kālāvadhika + patra > த. காலாவதிகபத்திரம்.]*

**காலிகவிப்புருதி** *kāliga-vippurudi*, பெ.(n) நாட்பட்ட புண் கட்டி; chronic abscess (இங். வை. 298).

த.வ. புற்றுக்கட்டி.

*[Skt. kālika + vidradhi > த. காலிகவிப்புருதி.]*

**காலேசுத்தி** *kālēšutti*, பெ.(n) தீட்டு, பிள்ளைப்பேற்றுத் தீட்டு, சாவுத் தீட்டு; a period of ceremonial impurity or pollution as at the birth of a child or death of a relation (சா.அக.).

த.வ. தீட்டு, துடக்கு.

**காலேசுரவாதி** *kālēšura-vādi*, பெ.(n) காலத்தையே கடவுளென எதிராடுபவன் (வாதிப்பவன்) (சி.சி. 8 : 12, ஞானப்.); one who maintains that time is the Supreme Being.

*[Skt. kāla + īšvara + vādin > த. காலேசுரவாதி.]*

**காவந்து** *kāvandu*, பெ.(n) **காபந்து** (வின்.) பார்க்க; see *kābandu*.

*[U. khāwand > த. காவந்து.]*

**காவாலி** *kāvāli*, பெ.(n) மனம் போனபடி நடப்பவன்; vagabond. *அவன் மெத்த காவாலியாய்த் திரிகிறான் (உ.வ.).*

த.வ. தெம்மாடி.

*[U. qawwāli > த. காவாலி.]*

**காவிந்து** *kāvindu*, பெ.(n) முதலாளி; master; employer. *அதுகளைக் காவிந்தவர்கள் பார்வையிடுகிற இங்கிலீசு புத்தகத்திலும் எழுதுவித்தேன்* (P.T.L. 185.).

*[Pers. khawand > த. காவிந்து.]*

**காற்பனிகம்** *kāṟpaṉigam*, பெ.(n) கற்பிக்கப்பட்டது; that which is invented, newly fashioned. *"தியான பூசாதிநிமித்தம் காற்பனிக தேகம்" (சி.சி. 1: 47, ஞானப்.).*

*[Skt. kālpanika > த. காற்பனிகம்.]*

**காறட்டுக்கிழங்கு** *kāṟaṭṭu-k-kiḻaṅgu,* பெ.(n) **காரட்டு²** பார்க்க; see *kāraṭṭu²* (சா.அக.).

**காறுபாறு** *kāṟū-pāṟu,* பெ.(n) **கார்பார்** பார்க்க; see *kārbār.*

[*U. kārbār* > த. கார்பார் → காறுபாறு.]

**கான்** *kāṉ,* பெ.(n) 1. செவி; ear. 2. புகழ் (தக்கயாகப். 448, உரை.); fame.

[*Skt. karṇa* > *Pkt. kān* > த. கான்.]

**கான்சாகிப்** *kāṉ-šākip,* பெ.(n) முகம்மதியர்க்குக் கொடுக்கும் சிறப்புப் பெயர்களுள் ஒன்று; a title of honour bestowed on distinguished Muhammadans.

[*U. khān-šāhib* > த. கான்சாகிப்.]

**கான்பகதூர்** *kāṉ-pāgadūr,* பெ.(n) முகமதியர்க்கு வழங்கப்படும் மதிப்புரவுப் பட்டப்பெயர்களுள் ஒன்று; a title of honour, higher than *kāṉ-šākib,* bestowed on distinguished Muhammadans.

[*U.khān* + *Pkt. bahādūra* > த. கான்பகதூர்.]

**கான்மிகம்** *kāṉmigam,* பெ.(n) **கான்மியம்** பார்க்க (சி.சி.2 : 39, சிவாக்.); see *kāṉmiyam.*

[*Skt. kārmika* > த. கான்மிகம்.]

**கான்மியம்** *kāṉmiyam,* பெ.(n) மும்மலத்துள் ஒன்றாய் கருக்கொண்டபோதேயுள்ள கன்மமலம் (சி.சி. 3, 39, ஞானப்.); one of the three eternal obstructive principles which creates bondage for the soul as a result of good and evil deeds.

[*Skt. kārmya* > த. கான்மியம்.]

**கானகுப்பிசம்** *kāṉa-kuppišam,* பெ.(n) ஐந்து நாடுகளுள் (பஞ்ச கௌடத்துள்) ஒன்றாகிய கானிய குப்த நாடு (சங். அக.); Kanouj, one of *pañja-gauḍam* (சா.அக.).

[*Skt. kānya-kubja* < த. கானகுப்பிசம்.]

**கானிசுமாரிக்கணக்கு** *kāṉišu-māri-k-kaṇakku,* பெ.(n) **கானேசு மாரிக்கணக்கு** பார்க்க; see *kāṉēšumāri-k-kaṇakku.*

[கானிசுமாரி + கணக்கு.]

[*Pers. khāna-shumāri* > த. கானிசுமாரி.]

**கானுகோ** *kāṉu-gō,* பெ.(n) முகம்மதிய அரசு ஊழியன் (C.G.); village or district officer who, under Muhammadan governments, recorded full details regarding landed property within his sphere.

[*U. khānun+go* > த. கானுகோ.]

**கானூன்** *kāṉūṉ,* பெ.(n) சட்டம் (C.G.); rule, regulation, statute.

[*U. khānun* > த. கானூன்.]

**கானேசுமாரிக்கணக்கு** *kāṉēšumāri-k-kāṇakku,* பெ.(n) குடிமதிப்புக் கணக்கு (P.T.L.); census.

[கானேசுமாரி+கணக்கு.]

[*Persn. khāna-shumāri* > த. கானேசுமாரி.]

**கிசிமிசி** *kiši-misi,* பெ.(n) ஏசு கிறித்து பிறந்த நாள்; Christmas.

[*E. Christmas* > கிறிஸ்மஸ் > த. கிசிமிசி.]

**கிசுதி** *kišudi,* பெ.(n) நிலச் சொந்தக்காரர் களிடம் பெறப்பட்ட நிலவரி; kist, land revenue payable in instalments.

[*U. quist* > கிஸ்தி > த. கிசுதி.]

**கிசுதிபந்தி** *kišudi-pandi,* பெ.(n) நிலவரியின் வரையறைத் திட்டம்; settlement of kists.

[*U. qisṭbandī* > கிஸ்திபந்தி > த. கிசுதிபந்தி]

**கிசுதிபேரீத்து** *kišudi- pērittu,* பெ.(n) சிற்றூரின் மொத்தத் தீர்வை; total revenue of a village.

[*U. quisṭ*+*U. bāriz* > கிஸ்திபேரீஸ்து > த. கிசுதிபேரீத்து.]

**கிசுமிசு** *kišu-mišu,* பெ.(n) விதையில்லாத கொடி முந்திரிப் பழம்; small seedless raisins, originally imported from Persia, Sultana raisin.

[*U. kishmish* > த. கிசுமிசு.]

**கிஞ்சிக்கியத்துவம்** *kañjikkiyattuvam,* பெ.(n) சிற்றறிவுடைமை; state of being limited in knowledge.

[*Skt. kiñji-jña-tva* > த. கிஞ்சிக்கியத்துவம்.]

**கிஞ்சிஞ்ஞன்** *kiñjiññaṉ,* பெ.(n) 1. சிற்றறிவினன்; one having limited knowledge. 2. ஆதன் (சீவான்மா); *āṉmā,* the individual soul.

*[Skt. kiñji-jña > த. கிஞ்சிஞ்ஞன்.]*

**கிட்டிணகாரம்** *kiṭṭiṇakāram,* பெ.(n) சவர்க்காரம்; fuller's earth; soap (சா.அக.).

*[கிட்டிணம்+காரம்.]*

*[Skt. kṛṣṇa > த. கிட்டிணம்.]*

**கிட்டிணசாசி** *kiṭṭiṇaśāśi,* பெ.(n) கருஞ்சீரகம்; black cumin, *Nigella sativa* (சா.அக.).

*[கிருட்டிணம்+சாசி.]*

*[Skt. kṛṣṇa > த. கிட்டிணம் + சாசி.]*

**கிட்டிணசாரம்** *kiṭṭiṇa-śāram,* பெ.(n) திப்பிலி; long-pepper, *Piper longam* (சா.அக.).

*[கிருட்டிணம் + சாரம்.]*

*[Skt. kṛṣṇa > த. கிட்டிணம்.]*

**கிட்டிணபேடம்** *kaṭṭiṇa-pēḍam,* பெ.(n) கடுகுரோகிணி, ஒரு கடைச்சரக்கு; black hellebore, *Helleborous niger* (சா.அக.).

*[Skt. kṛṣṇa > த. கிட்டிணம்.]*

**கிட்டிணபோளம்** *kiṭṭiṇa-pōḷam,* பெ.(n) கரிய போளம்; black myrrh (சா.அக.).

*[Skt. kṛṣṇa > த. கிட்டிணம்.]*

**கிட்டிணன்** *kiṭṭiṇaṉ,* பெ.(n) கண்ணன்; *Kirṣṇa,* son of *Vāśudēva,* one of ten incarnations of Viṣṇu.

*[Skt. kṛṣṇa > த. கிட்டிணம்.]*

**கித்தம்** *kittam,* பெ.(n.) செய்யப்பட்டது (திருக்கோ.388, உரை); that which is made.

*[Skt. kṛta > த. கித்தம்.]*

**கித்தா** *kittā,* பெ.(n.) துடைப்பான் (தரங்.); rubber.

*[Danish. kitta > த. கித்தா.]*

**கித்தாப்பு** *kittāppu,* பெ.(n.) கண்ணியமான பட்டம்; title, degree, honour.

**த.வ. பட்டம்.**

*[U.khiṭāb > த. கித்தாப்பு.]*

**கித்தார்** *kittār,* பெ.(n.) மரவகை; fiddle wood, *Citharexylon subseratum.*

**த.வ. கின்னர மரம்.**

*[E. guitar > த. கித்தார்.]*

**கித்தான்**[1] *kittāṉ,* பெ.(n.) ஒரு வகை உரப்புத்துணி; linen, canvas.

**த.வ. உரப்பு.**

*[U. katāṉ, M. kittān > த. கித்தான்.]*

**கித்தான்**[2] *kittāṉ,* பெ.(n.) ஒரு நூல்; cotton thread.

**த.வ. முரட்டுநூல்.**

*[U. katāṉ, M. kittāṉ > த. கித்தான்.]*

**கித்தான்கட்டில்** *kittāṉ-kaṭṭil,* பெ.(n.) உரப்புத் (கித்தான்) துணி வைத்துத் தைத்த கட்டில்; canvas cot.

**த.வ. உரப்புக்கட்டில்.**

*[கித்தான்+ கட்டில்.]*

*[U. katān > த. கித்தான்.]*

**கித்தான்கயிறு** *kittāṉ-kayiṟu,* பெ.(n.) சணற் கயிறு; hemp rope.

**த.வ. உரப்புக்கயிறு.**

*[கித்தான்+ கயிறு.]*

*[U. katān>த. கித்தான்.]*

**கித்தான்பஞ்சு** *kittāṉ-pañju,* பெ.(n.) கப்பலின் பலகை மூட்டுக்களை நீர்க் காப்புடையதாகச் செய்யப் பயன்படும் சணற்கூளம்; tow, oakum for caulking ships.

**த.வ. சனற்கூளம்**

*[கித்தான்+ பஞ்சு.]*

*[U. katān > த. கித்தான்.]*

**கித்தான்பாய்** *kittāṉ-pāy,* பெ.(n.) கப்பலில் காற்றை முகப்பதற்காக முரட்டுச் சீலையாலமைந்த பாய்; canvas sail.

*[கித்தான்+ பாய்.]*



[U. katān > த. கித்தான்.]

**கித்தில்** *kittil,* பெ.(n.) 1. ஒருவகைக் கூந்தற் கமுகு; jaggery-palm. 2. கூந்தற் கமுகின் நார்; kittul-fibre obtained from the leaf stalks of the jaggery-palm.

த.வ. கமுகுநார்.

[Skt. kitul > த. கித்தில்.]

**கித்துள்** *kittul,* பெ.(n.) கமுகு வகை (பிங்.); areca palm.

த.வ. கமுகம்பாக்கு.

[Sinh. kitul > த. கித்துள்.]

**கித்மிவிதை** *kitmi-vitai,* பெ.(n.) சீமைத்துத்தி விதை; seeds of marsh-mallow (சா.அக.).

**கிதபம்** *kidabam,* பெ.(n.) ஊமத்தைச் செடி வகை; thorn-apple, *Datura* (சா.அக.).

**கிதபாடணம்** *kidapādaṇam,* பெ.(n.) தீயசொல்; evil, wicked words. *"பாங்கிலர்வாய்க் கிதபாடணனே" (சிவதரு. பலவிசி.) (த.சொ.அக.).*

த.வ. தீச்சொல், கடுஞ்சொல்.

**கிதம்** *kidam,* பெ.(n.) நெய்; ghee (சா.அக.).

**கிதயுகம்** *kita-yugam,* பெ.(n.) **கிருதயுகம்** பார்க்க; see *kiruda-yugam.*

[Skt. krta+yuga > த. கிதயுகம்.]

**கிதவபன்** *kitavabaṉ,* பெ.(n.) போக்கிலி (நீலகேசி, 286, உரை); rogue.

[Skt. kitava > த. கிதவபன்.]

**கிதவம்** *kitavam,* பெ.(n.) **கிதபம்** பார்க்க; see *kitabam* (சா.அக.).

**கிதாப்பு** *kidāppu,* பெ.(n.) 1. பொத்தகத்தின் பெயர்; title of a book. 2. பொத்தகம்; book.

[U. kitāb > த. கிதாப்பு.]

**கிந்துக்கினம்** *kindukkiṉam,* பெ.(n.) ஐந்திய (பஞ்சாங்க)க் கரணங்களுள் ஒன்றாய் வளர்பிறையின் முதனாளின் முதற் பகுதியாகிய வேளை (விதான.பஞ்சாங்க.29); a division of the day, the first half of the first day of the bright fortnight, one of 11 *karaṇam.*

[Skt. kintughna > த. கிந்துக்கினம்.]

**கிபாயத்து** *kibāyattu,* பெ.(n.) நன்மை, ஊதியம்; profit, advantage, gain from lands held at reduced rent or tax.

[U. kifāyat > த. கிபாயத்து.]

**கிம்புருடவருடம்** *kimburuḍa-varuḍam,* பெ.(n.) ஒன்பது (நவ) ஆண்டுகளுள் ஒன்று (கந்தபு.அண்டகோ.37); land between *ēmakūṭam* and *imācalam,* one of *nava-varuṭam.*

[Skt. kimpuruṣa+ varuḍa>த. கிம்புருட வருடம்.]

**கிம்மீரன்** *kimmīraṉ,* பெ.(n.) ஓர் அரக்கன்; a giant.

வீமனால் கொல்லப்பட்ட பகாசுரனின் தம்பி. பாண்டவர்கள் காட்டில் வாழ்ந்திருந்த போது பாஞ்சாலியைக் கவர வந்து வீமனால் கொல்லப்பட்டவன். இவனுக்குக் கிம்மீரணன் எனவும் பெயர் (அபி.சிந்.).

**கிமித்துக்கினம்** *kimittukkiṉam,* பெ.(n.) 1. **கிந்துக்கினம்** பார்க்க; see *kindukkiṉam.* 2. புழு; worm.

[Skt. kintughna > த. கிமித்துக்கினம்.]

**கியமதம்** *kiya-madam,* பெ.(n.) நலிவு (யாழ்.அக.); weakness.

**கியாதம்** *kiyādam,* பெ.(n.) **கியாதி** (பிங்.) பார்க்க; see *kiyādi.*

[Skt. khyāta > த. கியாதம்.]

**கியாதி**[1] *kiyādi,* பெ.(n.) புகழ் (சூடா.); fame.

த.வ. பாடாண்.

[Skt. khyāta > த. கியாதி.]

**கியாரசம்பர்** *kiyārašambar,* பெ.(n.) சரக்கொன்றைப் புளி; a unani term referring to Indian laburnam (சா.அக.).

**கியால்** *kiyāl,* பெ.(n.) ஒரு வகை இந்துத்தானிப் பாட்டு; a Hindustani musical composition, or anything similar to it in Tamil.

[U. khiyāl > த. கியால்.]

**கியாழம்** *kiyāḻam,* பெ.(n.) காய்ச்சிய மருந்துக் குடிநீர் (கஷாயம்); decoction. *"கலிகங் கியாழம்" (திருவேங்.சத.68).*

த.வ. கருக்கு.

*[Skt. kaṣāya > த. கியாழம்.]*

**கியாழமிறக்கல்** *kiyāḻamiṟakkal,* தொ.பெ. (vbl.n.) மருந்தைக் காய்ச்சி வடித்து இறக்கல்; preparation of decoction or infusion (சா.அக.).

**த.வ. கருக்கிறக்கல்.**

*[கியாழம்+இறக்கல்.]*

*[Skt. kaṣāya>த.கியாழம்.]*

**கியானம்** *kiyāṉam,* பெ.(n.) அறிவு (யாழ்.அக.); wisdom, knowledge.

*[Skt. jñāna > த. கியானம்.]*

**கிரகக்கழிப்பு** *kiraga-k-kaḻippu,* பெ.(n.) **கிரகசாந்தி** பார்க்க; see *kiraga-šānti.*

**த.வ. கோளமைதி.**

*[Skt. graha+> த. கிரகம்+கழிப்பு.]*

**கிரககதி** *kiraga-gadi,* பெ.(n.) கோளின் (கிரகத்தின்) நடை; planetary motion.

**த.வ. கோள்நடை.**

*[Skt. graha> த. கிரகம்.]*

**கிரககபோதம்** *kiraga-kapōdam,* பெ.(n.) வீட்டுப் புறா; house-pigeon (சா.அக.).

**த.வ. வீட்டுப்புறா.**



*[Skt. graha+apōta> த. கிரக+கபோதம்.]*

**கிரகங்கழி–த்தல்** *kiragaṅ-kaḻi,* செ.கு.வி. (v.i.) கோள்களை அமைதியடையச் செய்தல்; to perform a propitiatory ceremony to avert or mitigate the evil influence of planets.

**த.வ. கோள்கழித்தல்.**

*[கிரகம்+கழி–,]*

*[Skt. graha> த. கிரகம்.]*

**கிரகச்சித்திரம்** *kiraga-c-cittiram,* பெ.(n.) குடும்பக் கலகம் (சச்சரவு); family dissensions. *"சென்மித்த வருடமு முண்டான வத்தமுந் தீதாங் கிரகச் சித்திரமும்" (அறப்.சத.39).*

**த.வ. இல்லக்கலகம்.**

*[கிரகம்+சித்திரம்.]*

*[Skt. graha >த.கிரகம்.]*

**கிரகச்சுற்று** *kiraga-c-cuṟṟu,* பெ.(n.) கோள்கள் சுழலும் பாதை; revolution of planets.

**த.வ. கோள்சுற்று.**

*[கிரகம்+சுற்று.]*

*[Skt. graha > த. கிரகம்.]*

**கிரகசபுடம்** *kiraga-šapuḍam,* பெ.(n.) பிறப்புக் கணியத்தில் (ஜாதகம்) கோள்களின் நிலையை வரையறுக்கை; determining the correct position of planets, at the time of one's birth.

**த.வ. கோள்வரையறை.**

*[Skt. graha> த. கிரகம்.]*

**கிரகசம்** *kiragašam,* பெ.(n.) ஒரு வகை நிரயம் (சிவதரு.சுவர்க்க.115); hell.

*[Skt. krakaca > த. கிரகசம்.]*

**கிரகசன்** *kiragašaṉ,* பெ.(n.) ஒரு காபாலிக மதத்தவன்; one who belonged to *kāpāli* religion.

**கிரகசாந்தி** *kiraga-šāndi,* பெ.(n.) கோள்களால் உண்டாகக் கூடிய தீமைகள் கழியும் பொருட்டுச் செய்யும் நீக்கவினை; propitiation of planets by offering oblation prayer, etc.,

**த.வ. கோளமைதி.**

*[Skt. graha +sānti> த.கிரகம்+ சாந்தி.]*

**கிரகசாரம்** *kiraga-šāram,* பெ.(n.) 1. கோள்களின் சுழற்சி நிலை; planetary motion. 2. தீமை தரும் கோளின் பயன்; evil influence of planets, as pain, poverty, sickness.

**த.வ. கோள்பயன்.**

[Skt. graha > த. கிரகம்.]

**கிரகசுரம்** *kiraga-šuram,* பெ.(n.) பண்ணின் தொடக்க இசை; initial note of a melody-type.

**த.வ. தொடக்கப்பண்.**

[Skt. graha+ṣ varam>த.கிரகசுவரம்.]

**கிரகசெபம்** *kiraga-šebam,* பெ.(n.) கோள்களினால் ஏற்படக் கூடிய தீமை கழியும் பொருட்டு உருவேற்றுகை; prayer offered to planets to propitiate them toward off their evil influence.

**த.வ. கோளுரு.**

[Skt. graha +šeba> த.கிரகசெபம்.]

**கிரகணச்சந்துக்கட்டு** *kiragaṇa-c-candu-k-kaṭṭu,* பெ.(n.) கோள் மறைப்புத் தொடங்கி, விடுமளவும் உள்ள காலம்; duration of an eclipse.

**த.வ. கோள்மறைப்புக்காலம்.**

[Skt.grahaṇa+sandhi+>த.கிரகணச் சந்து+கட்டு.]

**கிரகணசத்தி** *kiragaṇa-šatti,* பெ.(n.) உணர்ந்து கொள்ளுந் திறமை; power of comprehension.

**த.வ. உள்ளுணர்திறன்.**

[Skt. grahaṇa > த.கிரகணசத்தி.]

**கிரகணதோடம்** *kiragaṇa-tōḍam,* பெ.(n.) சூலுற்றிருக்கும் காலத்தில் தாய், கோள் மறைப்பைக் காண்பதால், குழந்தைக்கு உண்டாவதாகக் கருதப்படும் மேலுதட்டுப் பிளவுநோய் (பைஷஜ.207); harelip in a child, supposed to be the result of the mother's seeing an eclipse when pregnant.

**த.வ. கோட்குற்றம்.**

[Skt. grahaṇa+tōṣa>த.கிரகணதோடம்.]

**கிரகணம்** *kiragaṇam,* பெ.(n.) 1. பற்றுகை; holding fast, grasping, seizure. 2. மனத்தில் உணர்ந்து கொள்ளுகை; comprehension. 3. நிலவு மற்றும் ஞாயிற்றின் கோள் மறைப்பு; eclipse, as the seizing of the sun or moon by the nodes *irāgu* or *kēdu.*

**த.வ. கோள்பற்று, கோள்மறைப்பு.**

[Skt. grahaṇa > த. கிரகணம்.]

**கிரகணமோசனம்** *kiragaṇa-mōšaṇam,* பெ.(n.) **கிரகணமோட்சம்** பார்க்க; see *kiragaṇa-mōṭcam.*

**த.வ. கோட்பேறு.**

[Skt. grahaṇa+>த.கிரகணமோசனம்.]

**கிரகணமோட்சம்** *kiragaṇa-mōṭcam,* பெ.(n.) கோள் மறைப்பு நீங்குகை; end of an eclipse.

**த.வ. கோட்பேறு.**

[Skt.girahaṇa+mōṭca> த.கிரகண மோட்சம்.]

**கிரகணி** *kiragaṇi,* பெ.(n.) செரியாமையால் உண்டாகும் வயிற்றுப் போக்கு (பைஷஜ.); continual looseness of the bowels, chronic diarrhoea of six kinds.

[Skt. grahaṇi > த. கிரகணி.]

**கிரகத்தி** *kiragatti,* பெ.(n.) இல் வாழ்க்கையிலிருப்பவள்; married woman (யாழ்.அக.).

**த.வ. இல்லாள், மனைவி.**

[Skt. grha-sthi > த. கிரகத்தி.]

**கிரகதானம்** *kiraga-dāṇam,* பெ.(n.) ஒன்பது கோள்களின் நன்மைகளைப் பெறும் பொருட்டு செய்யும் கொடை; gift intended to avert the malignant influence of planets.

**த.வ. கோள்கொடை.**

[Skt. graha+dāna > த. கிரகதானம்.]

**கிரகதோடம்** *kiraga-tōḍam,* பெ.(n.) கோள்களினால் ஏற்படும் தீமை; affliction, calamity, suffering from the malignant influence of planets.

**த.வ. கோள்குற்றம்.**

[Skt. graha+tōṣam> த. கிரகதோடம்.]

**கிரகநடை** *kiraga-naḍai,* பெ.(n.) கோள்களின் நகர்வுநிலை; planetary motion.

**த.வ. கோளியக்கம்.**

*[கிரகம்+நடை.]*

*[**Skt.** graha > த. கிரகம்.]*

**கிரகநிலை** *kiraga-nilai,* பெ.(n.) கோள் நிற்கும் ஐந்து நிலைமை; aspect of planets of which there are five.

அவை: நட்பு, ஆட்சி, உச்சம், பகை, நீசம்.

**த.வ. கோள்நிலை.**

*[**Skt.** graha+> த. கிரகம்.]*

**கிரகநோக்கு** *kiraga-nōkku,* பெ.(n.) கோள்களின் பார்வை; relative aspect of planets, one to another; configuration, in four aspects,

அவையாவன; கால்நோக்கு, அரை நோக்கு, முக்கால் நோக்கு, முழு நோக்கு.

**த.வ. கோள்நோக்கு.**

*[**Skt.** graha> த. கிரகம்.]*

**கிரகப்பாடு** *kiraga-p-pāḍu,* பெ.(n.) கதிரவனோடு வேறு கோள் இணைந்து ஓர் ஓரையில் நிற்கை (யாழ்.அக.); the conjunction of the sun and a planet.

**த.வ. கோள்நிலை.**

*[**Skt.** graha>த. கிரகம்.]*

**கிரகப்பிரவேசம்** *kiraga-p-piravēšam,* பெ.(n.) **கிருகப்பிரவேசம்** பார்க்க; see *kirugappravesam,* புதிதாகக் கட்டிய அல்லது வாங்கிய வீட்டில் நடப்பு (சடங்குகள்) செய்து குடியேறும் நிகழ்ச்சி; a ceremony performed at the time of occupying a newly built house; house warming.

**த.வ. புதுமனை புகுவிழா.**

கிரகப்பிரவேசம் என்பது தவறு

**கிரகப்பிரீதி** *kiraga-p-pirīdi,* பெ.(n.) கோள்களுக்குக் கொடை முதலியவற்றால் அன்பு செய்கை; propitiation of planets, by prayer, offerings, etc.

**த.வ. கோள்விருப்பம்.**

*[**Skt.** graha+prīti > த. கிரகப்பிரீதி.]*

**கிரகப்பிழை** *kiraga-p-piḻai,* பெ.(n.) **கிரகதோடம்** பார்க்க; see *kiraga-tōdam.*

**த.வ. கோள்குற்றம்.**

*[**Skt.** graha> த.கிரகம்.]*

**கிரகப்பெயர்ச்சி** *kiraga-p-peyarcci,* பெ.(n.) கோள்கள் இடமாறுகை; transit of a planet from one zodiacal sign to another.

**த.வ. கோள்பெயர்நிலை.**

*[கிரகம்+பெயர்ச்சி.]*

*[**Skt.** graha> த. கிரகம்.]*

**கிரகபதனம்** *kiraga-padaṉam,* பெ.(n.) கிடைவரை (அட்சரேகை); latitude of a planet.

*[**Skt.** graha+patana>த. கிரகபதனம்.]*

**கிரகபதி** *kiragabati,* பெ.(n.) ஞாயிறு; sun, as lord of planets.

**த.வ. கோள்தலைவன்.**

*[**Skt.** graha+pati> த. கிரகபதி.]*

**கிரகபரிவிருத்தி** *kiraga-parivirutti,* பெ.(n.) கோள்களின் சுழற்சி; revolution of a planet.

**த.வ. கோள்சுழற்சி.**

*[**Skt.**graha+parivirutti> த. கிரகபரி விருத்தி.]*

**கிரகபீடை** *kiraga-pīḍai,* பெ.(n.) **கிரகதோடம்** பார்க்க; see *kiraga-tōdam.*

**த.வ. கோள்குற்றம்.**

*[**Skt.** graha+pēta >த.கிரகபீடை.]*

**கிரகம்[1]** *kiragam,* பெ.(n.) 1. கோள்கள்; planets of which there are nine in the Hindu System. அவை; ஞாயிறு, திங்கள், செவ்வாய், அறிவன் (புதன்), வியாழன், வெள்ளி, காரி (சனி), இராகு, கேது. 2. இசைப்பாட்டின் (கீர்த்தனை) தொடக்க காலத்தை உணர்த்துவதாகிய தாள அளவுகளுளொன்று (பரத.தாள.42); the element of time-measure which specifies the starting beat of a song, of four kinds அவை; அதீதம், அநாகதம், சமம், விஷமம், one of ten *tāḷa-p-pirāṇam.*

*[**Skt.** graha > த. கிரகம்.]*

**கிரகம்[2]** *kiragam,* பெ.(n.) **கிருகம்** பார்க்க; see *kirugam.*

**த.வ. இல்லம்.**

*[**Skt.** gṛha > த. கிரகம்.]*

**கிரகமண்டலம்** *kiraga-maṇḍalam,* பெ.(n.) **கிரகவீதி** பார்க்க; see *kiraga-vīdi.*

**த.வ. கோள்மண்டிலம்.**

*[கிரகம் + மண்டலம்.]*

***[Skt. graha> த. கிரகம்.]***

**கிரகமாலிகை** *kiraga-māligai,* பெ.(n.) **கிரகமாலை** பார்க்க; see *kiraga-mālai.*

**த.வ. கோள்மாலை.**

*[கிரகம்+மாலிகை.]*

***[Skt. graha> த. கிரகம்.]***

**கிரகமாலை** *kiraga-mālai,* பெ.(n.) கோள்கள் மாலை போன்று தொடர்ந்து நிற்கும் நிலை; position of two or more planets in the zodiacal signs following each other as a garland in their own order.

**த.வ. கோள்மாலை.**

*[கிரகம்+மாலை.]*

***[Skt. graha> த.கிரகம்.]***

**கிரகவட்டம்** *kiraga-vaṭṭam,* பெ.(n.) **கிரக வீதி** பார்க்க; see *kiraga-vīdi* 2. கோள்களின் சுழற்சி; revolution of a planet.

**த.வ. கோள்வட்டம்.**

*[கிரகம்+வட்டம்.]*

***[Skt. graha > த. கிரகம்.]***

**கிரகவீதி** *kiraga-vīdi,* பெ.(n.) கோள் செல்லும் வழி; planetary orbit.

**த.வ. கோள்வழி.**

*[கிரகம்+வீதி.]*

***[Skt. graha> த.கிரகம்.]***

**கிரகன்** *kiragaṉ,* பெ.(n.) ஒரு வகைப் பறவை; a kind of bird (சா.அக.).

**கிரகாகமம்** *kiragāgamam,* பெ.(n.) பேய்ப் பிடிக்கை; demoniacal possession (சா.அக.).

**த.வ. பேய்ப்பிடி.**

**கிரகாராதனை** *kiragārādaṉai,* பெ.(n.) ஒன்பது கோள்களுக்கும் செய்யப்படும் பூசை; prayer, etc., offered to planets.

**த.வ. கோட்பூசை.**

*[Skt.graha+ā-rādhanā >த. கிரகாராதனை.]*

**கிரகி-த்தல்** *kiragi-,* 11 செ.கு.வி.(v.i.) 1. பற்றுதல்; to seize, grasp. 2.நுண்ணிதின் உணர்ந்து கொள்ளுதல்; to comprehend, discern, understand. 3. ஏற்றுக் கொள்ளுதல்; to receive, accept. 4. குறிப்பாலறிதல்; to infer, deduce, conjecture. 5. துப்பறிதல்; to draw out, as secrets; to get information about. 6. தொகுப்பை (சாரம்) வாங்குதல்; to extract, as essence.

**த.வ. உள்வாங்குதல்.**

***[Skt. graha > த. கிரகி-த்தல்.]***

**கிரணம்** *kiraṇam,* பெ.(n.) 1. கதிர்; ray of light, beam. 2. ஒளி; light, brightness, brilliancy. *"கிரணக் கலாபி" (கந்தரலங்.21).* 3. சிவத் தோன்றியங்கள் இருபத்தெட்டனுள் ஒன்று (சைவ.பொது.335, உரை); an ancient *Šaiva* scripture in sanskrit one of 28 *Šivākamam.*

**த.வ. கதிரொளி.**

***[Skt. kiraṇa > த. கிரணம்.]***

**கிரணம்வீசு-தல்** *kiraṇam-vīsu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒளியடித்தல்; to emit rays.

**த.வ. கதிரொளித்தல்.**

*[கிரணம்+வீசு-,]*

***[Skt. kiraṇa> த.கிரணம்.]***

**கிரணமாலி** *kiraṇamāli,* பெ.(n.) பகலவன் (சூடா.); sun, as emitting rays.

**த.வ. கதிரவன்.**

***[Skt. kiraṇa-mālin > த. கிரணமாலி.]***

**கிரணன்** *kiraṇaṉ,* பெ.(n.) ஞாயிறு, பகலவன், கதிரவன்; sun, as having rays. *"கிளைத்த பல்பெருங் கிரணனில் வயங்கொளி கிளர்ந்தான்" (பாரத. பதினான்காம்.108).*

***[Skt. kiraṇa > த. கிரணன்.]***

**கிரது** *kiradu,* பெ.(n.) 1. வேள்வி; sacrifice. *"கிரதுக்கடவுடானும்" (அரிசமய.பத்திசார.93).* 2. நிரய (நரக)வகை (சிவதரு.சுவர்க்கந.115); a hell. 3. ஒரு முனிவர்; an ancient *rṣi.*

***[Skt. kratu > த. கிரது.]***

**கிரந்தகர்த்தா** *kiranda-karttā,* பெ.(n.) நூலாசிரியன்; author of a book, writer.

*[Skt.grantha>த.கிரந்தகர்த்தா.]*

**கிரந்தகாரன்** *kirandakāraṉ,* பெ.(n.) 1. **கிரந்தகர்த்தா** பார்க்க; see *kiranda-karttā.* 2. மதிப்புரவில்லாதவன்; impudentfellow.

*[Skt. granta> த. கிரந்த. 'காரன்'- உடைமைப் பெயரீறு.]*

**கிரந்தனம்** *kirandaṉam,* பெ.(n.) 1. அழுகை; weeping. 2. ஒலி; cry, as of birds (யாழ்.அக.).

*[Skt. granta > த. கிரந்தனம்.]*

**கிரந்தித்தொய்வு** *kirandi-t-toyvu,* பெ.(n.) புண்களால் தோன்றும் நோய்வகை; a disease (யாழ்.அக.).

*[கிரந்தி+தொய்வு.]*

*[Skt. granthi> த. கிரந்தி.]*

**கிரமக்காரன்** *kirama-k-kāraṉ,* பெ.(n.) ஒழுங்காக நடப்பவன் (யாழ்.அக.); well-behaved person, man of good conduct.

த.வ. நன்னடையல்..

*[Skt. krama > த. கிரமம். 'காரன்'- உடைமைப் பொருள்ஈறு.]*

**கிரமச்சா** *kiramaccā,* பெ.(n.) கோள் கணக்கின் உறுப்பு; sine of a planet's declination.

*[Skt. krama+jyā > த. கிரமச்சா.]*

**கிரமசிருட்டி** *kirama-ciruṭṭi,* பெ.(n.) இயற்கை (பிரகிருதி) முதல் மண் (பிருதி) வரை ஒன்றன்பின் ஒன்று அடைவே படைக்கப் படுகை (வேதா.சூ.80); creation of elements one after another, dist. fr. *yukapar-ciruṭṭi.*

*[Skt. krama+šurtti> த.கிரமசிருட்டி.]*

**கிரமதாடி** *kirama-dāḍi,* பெ.(n.) மறையின் ஒழுங்குமுறை தவறாமல் (கிரமபாட) ஓதுவதில் வல்லவன்; one well-versed in the *krama* method of reciting the *vēdā.* *"இவனவதானி யிவன் கிரமதாடி" (பிரபோத.11, 5).*

*[Skt. krama+dhāti > த. கிரமதாடி.]*

**கிரமதாவா** *kiramatāvā,* பெ.(n.) ஒழுங்கு வழக்கு; original suit, regular suit.

*[Skt. kirama+dāvā> த.கிரமதாவா.]*

**கிரமப்பிரசவம்** *kirama-p-piraśavam,* பெ.(n.) இயல்பான பிள்ளைப்பேறு (இங். வை.393); normal, easy delivery.

த.வ. பிள்ளை நற்பேறு.

*[Skt.kirama+pra-sava>த.கிரமப்பிரசவம்.]*

**கிரமுகம்** *kiramugam,* பெ.(n.) பாக்குமரம்; areca palm.

த.வ. கமுகம்.

*[Skt. kramuka > த. கிரமுகம்.]*

**கிரயசாசனம்** *kirayaśāsaṉam,* பெ.(n.) விற்பனை ஆவணம்; bill of sale, sale-deed.

*[Skt. kraya+śāśaṉa > த. கிரயசாசனம்.]*

**கிராகதி** *kirāgadi,* பெ.(n.) செடிவகை; french, chiratta.

**கிராம்** *kirām,* பெ.(n.) கடிவாளம் (பிங்.); bridle.

*[Skt. grāha > த. கிராம்.]*

**கிராம்பாணி** *kirāmbāṇi,* பெ.(n.) கிராம்பு வடிவிலான ஆணி வகை; nail resembling a clove.

த.வ. இலவங்கவடிவாணி.

*[கிராம்பு + அணி.]*

**கிராம்பு** *kirāmbu,* பெ.(n.) 1. இலவங்கம் (திவா.); clove. 2. கிராம்பு (இலவங்கம்) மரம் (சீவக.1901); clove-tree.

*[U. qaranful > த. கிராம்பு.]*



**கிராமக்கணக்கன்** *kirāma-k-kaṇakkaṉ,* பெ.(n.) ஊர்க் கணக்கு வேலை பார்ப்போன்; village accountant.

த.வ. **ஊர்க்கணக்கன்.**

*[கிராமம்+கணக்கன்.]*

*[Skt. grāma > த. கிராமம்.]*

**கிராமக்காவல்** *kirāma-k-kāval,* பெ.(n.) 1. ஊர்க்காவல்; service of a village watchman. 2. ஊர்க்காவற்காரன்; village watchman.

த.வ. **ஊர்க்காவலன்.**

*[கிராமம்+காவல்.]*

*[Skt. girāma>கிராமம்.]*

**கிராமச்சாவடி** *kirāma-c-cāvaḍi,* பெ.(n.) ஊர்ப் பொதுவிடம்; public building in a village.

த.வ. **ஊர்ச்சாவடி.**

*[கிராமம்+சாவடி.]*

*[Skt. grāma> த.கிராமம்.]*

**கிராமச்செலவு** *kirāma-c-celavu,* பெ.(n.) ஊர்ப் பொதுவில் செய்யப்படும் செலவு; village contribution for the performance of public functions like festivals.

த.வ. **ஊர்நலச் செலவு.**

*[கிராமம்+செலவு.]*

*[Skt. grāma>கிராமம்.]*

**கிராமசடகம்** *kirāma-šaḍagam,* பெ.(n.) ஊர்க்குருவி; domestic sparrow (சா.அக.).

*[கிராமம் + சடகம்.]*



**கிராமசமுதாயம்** *kirāma-šamudāyam,* பெ.(n.) வருமானமுள்ள ஊர்ப்பொதுச் சொத்து; rights enjoyed in common by villagers, as the produce or income from trees on common land, tanks, fisheries etc.

*[Skt. grāma+samudaya>கிராம சமுதாயம்.]*

**கிராமசாந்தி** *kirāma-šāndi,* பெ.(n.) சிற்றூரின் நன்மைக்காகக் அவ்வூர்த் தெய்வத்திற்குச் செய்யும் பூசை (சடங்கு); propitiatory ceremony to the tutelary deity of a village.

*[கிராமம் + சாந்தி.]*

*[Skt. grāma > த. கிராமம்.]*

**கிராமசிம்மம்** *kirāma-šimmam,* பெ.(n.) நாய்; dog, as the lion of the village. *"கிராமசிம்மம் போலே படுத்திருந்து" (குருபரம்.பன்னீ.177).*

*[Skt. grāma+simha> கிராமசிம்மம்.]*

**கிராமணி** *kirāmaṇi,* பெ.(n.) 1. சிற்றூரின் தலைவன்; headman of a village. 2. தலைமையானவன் (கூர்மபு.ஆதவர்.4); leader or chief. 3. சிற்றூரான்; peasant, villager. 4. சான்றோரிலும், கைக்கோளரிலும் ஒரு வகையினர்க்கு வழங்கும் சிறப்புப் பெயர்; title of some *shāṇārs* and *kaikkōḷas.*

த.வ. **ஊர்த்தலைவன்.**

*[Skt. grāmaṇi > த. கிராமணி.]*

**கிராமத்தார்** *kirāmattār,* பெ.(n.) சிற்றூரில் வாழும் மக்கள்; inhabitants of a village.

த.வ. **ஊர்மக்கள்.**

*[Skt. grāma+>த.கிராமம்→கிராமத்தார்.]*

**கிராமத்தான்** *kirāmattāṉ,* பெ.(n.) நாட்டுப்புறத்தான்; rustic, uncivilized person.

த.வ. **ஊரான்.**

*[Skt. grāma>த.கிராமம்→கிராமத்தான்.]*

**கிராமதேவதை** *kirāma-dēvadai,* பெ.(n.) ஊரைக் காவல் செய்து மக்களைக் காக்குந் தேவதை; tutelary deity of a village.

த.வ. **ஊர்க்காவல்தெய்வம்.**

*[கிராமம் + தேவதை.]*

*[Skt. grāma>த.கிராமம்.]*

**கிராமநத்தம்** *kirāma-nattam,* பெ.(n.) ஊரையடுத்து வீடுகள் கட்டக்கூடிய இடம்; ground in a village set apart for building houses, village site.

**த.வ. ஊர்ப்புறம்.**

*[கிராமம் + நத்தம்.]*

*[Skt. grāma>த.கிராமம்.]*

**கிராமப்பிரதட்சிணம்** *kirāma-p-piradaṭcinam,* பெ.(n.) ஊரைச் சுற்றுதல் (ஊர்வலம்); procession round a village from left to right.

**த.வ. ஊர்வலம்.**

*[Skt. grāma+piradaṭcina>த.கிராமப் பிரதட்சிணம்.]*

**கிராமப்பிரவர்த்திகம்** *kirāma-p-pira varttigam,* பெ.(n.) ஊர் அவை; village council.

*[Skt.grāma + iravartiga> த.கிராமப் பிரவர்த்திகம்.]*

**கிராமபாகம்** *kirāma-bāgam,* பெ.(n.) தாங்கள் விட்டுக்கொடுத்த சில உரிமைகளுக்காக நிலக்கிழாருக்குச் சிற்றூரரார் செலுத்தும் விளைச்சலின் ஒரு பகுதி; portion of the crop delivered to the *miraśdārs* of a village in lieu of their miras rights.

**த.வ. பகுதி.**

*[கிராமம் + பாகம்.]*

*[Skt. grāma> த. கிராமம்.]*

**கிராமம்**[1] *kirāmam,* பெ.(n.) 1. மருத நிலத்தூர்; village in an agricultural tract. *"அந்தணருறைதருங் கிராமம்" (மணிமே.13: 102-3).* 2. ஊர்; village. 3. பண்களின் சேர்க்கை வகை (பரத. இராக.80); combination of musical notes going up and down the scale.

*[Skt. grāma > த. கிராமம்.]*

**கிராமம்**[2] *kirāmam,* பெ.(n.) நீர்ப்பறவை (பிங்.); water fowl.

*[Pāli. girā > த. கிராமம்.]*



**கிராமாதிபதி** *kirāmādipadi,* பெ.(n.) ஊர்த்தலைவன்; head of a village, either the proprietor, headman or collector of the revenue on government account.

**த.வ. ஊர்நாயகன்.**

*[Skt. grāma+adhipati > த. கிராமாதிபதி.]*

**கிராமாந்தரம்** *kirāmāndaram,* பெ.(n.) நாட்டுப்புறம்; rural parts.

*[Skt. grāma+antara > த. கிராமாந்தரம்.]*

**கிராமமானியம்** *kirāma-māniyam,* பெ.(n.) பல, தலைமுறையாகக் கொடை பெற்றோர் (இனாம்தார்) நுகரும் இறையிலி நிலம்; land enjoyed rent-free by a hereditary proprietor of a part of the village lands.

**த.வ. இறையிலிநிலம்.**

*[Skt.grāma+mānya>த. கிராமமானியம்.]*

**கிராமமுன்சீபு** *kirāma-munśibu,* பெ.(n.) ஊரை நிருவாகம் செய்பவர்; ஊரையாளக் கூடிய பதவியிலிருப்பவர்; head of a village, vested with judicial, criminal and police powers, an office created by the British.

**த.வ. ஊர்நில அலுவலர், ஊர் நாயகம்.**

*[Skt. grāma+>த. கிராமம் + முன்சீபு.]*

**கிராமமேரை** *kirāma-mērai,* பெ.(n.) சிற்றூர்களில் வேலைக்காரரின் உரிமை (சுதந்திரம்); allowance of a portion of the crop to the village officers and servants.

*[Skt. grāma+mēra> த.கிராமமேரை.]*

**கிராமாதிகாரி** *kirāmādigāri,* பெ.(n.) **கிராமாதிபதி** பார்க்க; see *kirāmādipadi.*

*[Skt.grāma+adhikārin>த. கிராமாதிகாரி.]*

**கிராமியம்** *kirāmiyam,* பெ.(n.) 1. தாழ்ந்தோருடைய கொச்சைப் பேச்சு (இலக்.வி.635, உரை); rustic, vulgar speech; language of uncultured people. 2. இழிவானது; barbarism, that which is corrupt. *"கிராமியமாங் கருமச் சழக்கில்" (ஞானவா.நிருவா.11).*

*[**Skt.** grāmya > த. கிராமியம்.]*

**கிராமியன்** *kirāmiyaṉ,* பெ.(n.) நாட்டுப் புறத்தவன் (சூடா.); villager, rustic, pleasant.

**த.வ. நாட்டான், நாட்டுப்புறத்தான்.**

*[**Skt.** grāmya > த. கிராமியன்.]*

**கிராவாதி** *kirāvāti,* பெ.(n.) இரும்பு (யாழ்.அக.); iron.

**த.வ. இரும்பொன்.**

**கிரான்** *kirāṉ,* பெ.எ.(adj.) விலை மிகுந்த; dear, high priced.

*[**U.** girān > த. கிரான்.]*

**கிரி**[1] *kiri,* பெ.(n.) பன்றி; hog-boar. *"கரியுங் கிரியும் பேரையுஞ் சீரையுங் கேட்டு" (வெங்கைக்கோ.122).*

*[**Skt.** kiri > த. கிரி.]*



**கிரி**[2] *kiri,* பெ.(n.) மலை; hill, mountain. *"கொண்டல்கொள் கிரி" (ஞான.50, 10).*

*[**Skt.** giri > த. கிரி.]*

**கிரி**[3] *kiri,* பெ.(n.) பிணையாளி; hostage. *"கிரியிருக்கிறவன்".*

*[**Perh.** கரி > த. கிரி.]*

**கிரிகிரி** *kiri-kiri,* பெ.(n.) மருட்டுப் பன்றி (திவா.); wild hog.

**த.வ. காட்டுப்பன்றி.**

*[**Skt.** giri+kiri > த. கிரிகிரி.]*

**கிரிகை**[1] *kirigai,* பெ.(n.) **கிரியை** பார்க்க; see *kiriyai.*

*[**Skt.** kriyā > த. கிரிகை.]*

**கிரிச்சம்** *kiriccam,* பெ.(n.) வருத்தம், துன்பம்; difficulty, trouble, hardship. *"காளைநீ கிரிச்சமெல்லாங் கழித்தி" (கம்பரா. திருமுடி.28).*

**த.வ. ஏதம்.**

*[**Skt.** kṛcchra > த. கிரிச்சம்.]*

**கிரிச்சரம்** *kiriccaram,* பெ.(n.) **கிருச்சிரம்** பார்க்க; see *kirucciram. "கிரிச்சர மென்ப மன்னே" (காசிக.வியாதன்.சாப.14).*

*[**Skt.** kṛcchra > த. கிரிச்சரம்.]*

**கிரிச்சரரோகம்** *kiriccara-rōgam,* பெ.(n.) சிறுநீர் நோய் வகை (சீவரட்.); a urinary disease.

*[**Skt.** kṛcchra+ > த. கிரிச்சரரோகம்.]*

**கிரிச்சிரம்** *kiricciram,* பெ.(n.) **கிருச்சிரம்** பார்க்க; see *kirucciram. "சாந்திராயண கிரிச்சிரம்" (காஞ்சிப்பு.சிவபு.57).*

*[**Skt.** kṛcchra > த. கிரிச்சிரம்.]*

**கிரிச்சிரீட்டம்** *kiriciriṭṭam,* பெ.(n.) **கிரிச்சரீடம்** பார்க்க (யாழ்.அக.); see *kiriccarīḍam.*

**கிரிசம்** *kiriśam,* பெ.(n.) மென்மை (யாழ்.அக.); slenderness, thinness, tenderness.

**த.வ. இளந்தை.**

*[**Skt.** kṛsa > த. கிரிசம்.]*

**கிரிசரம்** *kiriśaram,* பெ.(n.) மலையிற் பிறந்த யானை (திவா.); elephant, as born in mountain.

**த.வ. மலையானை.**

*[**Skt.** giri+cara > த. கிரிசரம்.]*

**கிரிசன்** *kiriśaṉ,* பெ.(n.) சிவன்; *Śiva,* as dwelling in Mt. *Kailāśā. "கிரிசனை யுன்னி" (பாரத. அருச்சுனன்றவ. 26).*

*[**Skt.** Giri-śa > த. கிரிசன்.]*

**கிரிசு** *kirišu,* பெ.(n.) **கிரிசுக்கத்தி** பார்க்க; see *kirišu-k-katti.*

*[T. kirusu > த. கிரிசு.]*

**கிரிசுக்கத்தி** *kirišu-k-katti,* பெ.(n.) குறுவாள்; malay dagger, small double-edged sword.

**த.வ. சூரிக்கத்தி.**

*[கிரிசு+கத்தி.]*

*[**Skt.** kirisu> த.கிரிசு.]*



**கிரிசுவா** *kirišuvā,* பெ.(n.) தக்கசன் மருகன்; son in law of *Taṭcaṉ* (அபி..சிந்.).

**கிரிசை**[1] *kirišai,* பெ.(n.) மலைமகள்; *pārvati,* as born of the himalaya. *"பார்ப்பதியே வம்பறு கிரிசை" (திருவானைக். கோச்செங். 81).*

*[**Skt.** giri-jā > த. கிரிசை.]*

**கிரிசை**[2] *kirišai,* பெ.(n.) **கிரியை** பார்க்க; see *kiriyai.*

**கிரிட்டணம்** *kiriṭṭaṇam,* பெ.(n.) உறைப்பு (யாழ்.அக.); pungency.

**கிரிட்டம்** *kiriṭṭam,* பெ.(n.) **கிரிட்டணம்** பார்க்க; see *kiriṭṭaṇam.*

**கிரிதுர்க்கம்** *kiri-durkkam,* பெ.(n.) மலையாலான அரண்; hill fort, mountain stronghold. *"பேராரணான கிரிதுர்க்க நீக்குதல்" (ஒருதுறைக்.41).*

**த.வ. மலையரண்.**

*[**Skt.** giri+durga > த. கிரிதுர்க்கம்.]*

**கிரிப்பிரதட்சிணம்** *kiri-p-piradaṭciṇam,* பெ. (n.) இறைவன் உறையும் நல்லிடமாய் உள்ள மலையை வலம் வருகை; going round a sacred hill from left to right.

**த.வ. மலைவலம்.**

*[**Skt.**giri+piradaṭciṇa>த.கிரிப் பிரதட்சிணம்.]*

**கிரிபுட்பகம்** *kiripuṭpagam,* பெ.(n.) நறும் புகைத்தி (சாம்பிராணி); benzoin (சா.அக.).

**கிரிமல்லிகை** *kiri-malligai,* பெ.(n.) **1.** கசப்பு வெட்பாலை (மரவகை) (பதார்த்த.235); conessibark. **2.** நீண்ட மரமல்லிகை; Indian cordk, *Millingtonia hortensis.*

**த.வ. காட்டுமல்லிகை.**

*[கிரி+மல்லிகை.]*

*[**Skt.** giri > த. கிரி.]*

**கிரிமிஞ்சி** *kiri-miñji,* பெ.(n.) ஒருவகைச் சிவப்புச் சாயம்; cochineal, the dried female insect; scarlet dyestuff.

*[**U.** qirmiz > த. கிரிமிஞ்சி.]*

**கிரிமிஞ்சிப்புழு** *kirimiñji-p-puḻu,* பெ.(n.) புழு வகை; cochineal insect, *Coccus cacti.*

*[கிரிமிஞ்சி+புழு.]*

*[**Skt.** qirmiz>த. கிரிமிஞ்சி.]*

**கிரியன்** *kiriyaṉ,* பெ.(n.) சேரன் (யாழ்.அக.); the *Cērā* king.

**கிரியாங்கக்கட்டளை** *kiriyāṅga-k-kaṭṭaḷai,* பெ.(n.) நடப்பு நெறி (சடங்கு விதி); ceramonials.

*[கிரியாங்கம் + கட்டளை.]*

*[**Skt.** kriya > த. கிரியா.]*

**கிரியாசத்தி** *kiriyā-šatti,* பெ.(n.) ஐந்து (பஞ்ச) ஆற்றல்களுள் ஒன்றாகி உலகப் படைப்புக்களைச் செய்து, அச்செயல்களுக்கு ஈடாக உள்ளுணர்வுகளை ஆதன்களுக்குக் கொடுக்குஞ் சிவஆற்றல் (சி.சி.1, 63); *Šivās* energy which provides the souls with gross and subtle bodies and with experience-planes according to their *karma*, one of *Pañja-šatti.*

**த.வ. ஆக்கசத்தி.**

*[கிரியா+சத்தி.]*

*[**Skt.** kriyā > த. கிரியா.]*

**கிரியாசைவம்** *kiriyā-šaivam,* பெ.(n.) பதினாறு வகை சிவனிய சமயங்களுள் செயல்களையே முகாமையாகக் கொள்ளுஞ் சமயம் (த.நி.போ.256); a saiva sect which gives prominence to rites and ceremoneis, one sect of 16 *šaivam.*

*[Skt. kriya+šaiva>த. கிரியாசைவம்.]*

**கிரியாத்து** *kiriyāttu* பெ.(n.) செடிவகை; chiretta.

*[Skt. kairāta > த. கிரியாத்து.]*

**கிரியாதிகாரன்** *kiri-y-ādigāraṉ,* பெ.(n.) பிள்ளையார் (யாழ்.அக.); God *Ganēšā.*

*[Skt. kriyādhikāra > த. கிரியாதிகாரன்.]*

**கிரியாதீக்கை** *kiriyā-dikkai,* பெ.(n.) **கிரியாவதி** பார்க்க; see *kiriyāvadi.*

*[Skt. kriyā > த. கிரியா. கிரியா + தீக்ஷை >தீக்கை.]*

**கிரியாபதம்** *kiriyā-padam,* பெ. (n.) வினைமுற்றுச் சொல்; finite verb, as the word denoting action.

*[கிரியா+பதம்.]*

*[Skt. kriyā > த. கிரியா.]*

**கிரியாபாதம்** *kiriyā-pādam,* பெ.(n.) சிவாகமத்தில் பராபராக்கிரியைகளின் வகைகளைக் கூறும் பகுதி; the section of the *šivāgamam,* which deals with the modes of worship.

*[கிரியா+பாதம்.]*

*[Skt. kriyā > த.கிரியா.]*

**கிரியாபூசை** *kiriyā-pūšai,* பெ.(n.) சிவாகமத்தில் கூறியுள்ள வழிபாட்டுமுறை; the worship offered to *šivā* through *kiriyai.*

*[கிரியா+பூசை.]*

*[Skt. kriyā> த.கிரியா.]*

**கிரியாமார்க்கம்** *kiriyā-mārkkam,* பெ.(n.) முத்தியடைவதற்கு வழி வகையான (உபாயம்) செயல்கள்; rites and ceremonies as the means to attain salvation.

*[Skt.kriyā+mārkka > த. கிரியாமார்க்கம்.]*

**கிரியாலோபம்** *kiriyā-lōbam,* பெ.(n.) வேத ஒழுங்கு நடப்பை (வைதீகச் சடங்கு) கடைப்பிடிக்கும் போது சுருதி முதலியவை உறுப்புகளால் செய்யும் செயல்களில் நேருங் குறை; omission to perform duties ordained by *šruti,* etc.,

*[Skt. kriyā+lōba> த.கிரியாலோபம்.]*

**கிரியாவதி** *kiriyāvati,* பெ.(n.) குண்டல மண்டலாதிகளையும் மறை(வேதி)களையும் புறத்தே அமைத்து ஆகமத்திற் கூறியபடி செய்யும் ஔத்திரி தீக்ஷை வகை (சி.சி.8, 3, சிவாக்.); initiatory ceremony in which the guru actually performs the necessary rites, as dist. fr. *ñāṉavati,* a kind of *auttiri-dišai.*

*[Skt. kriyāvati > த. கிரியாவதி.]*

**கிரியாவான்**[1] *kiriyāvāṉ,* பெ.(n.) ஒழுக்க முள்ளவன்; one who duly performs his duties as ordained in Hindu *šaštrās.*

த.வ. **நெறிமுறையாளன்.**

*[Skt. kriyā > த. கிரியாவான்.]*

**கிரியாவான்**[2] *kiri-y-āvāṉ,* பெ.(n.) மனத்தால் பூசனை செய்பவன் (ஞானபூசா.14, உரை); one who mentally worships God.

*[Skt. kriyā > த. கிரியாவான்.]*

**கிரியாவுத்திரி** *kiriyāvuttiri,* பெ.(n.) **கிரியாவதி** பார்க்க; see *kiriyāvadi.*

**கிரியாவூக்கி** *kiriyā-v-ūkki,* பெ.(n.) தான் எந்த வகை மாற்றத்திற்கும் உள்ளாகாமல் தான் சேர்ந்துள்ளதில் வேதியியல் மாற்றத்தைத் தூண்டுவதற்கான பொருள்; catalyst.

த.வ. **செயலூக்கி.**

*[Skt. kriyā > த. கிரியா.]*

**கிரியேந்திரியம்** *kiri-y-ēndiriyam,* பெ.(n.) செயற் கருவிகள் அதாவது ஐவகைப் புலன்கள்; organs of motor action and they are so called from their five different actions in the body (சா.அக.).

*[கிரியை + இந்திரியம்.]*

**கிரியை** *kiriyai,* பெ.(n.) 1. செய்கை; act, action, deed. 2. சிவனை மறைகளில் கூறியவாறு புறத்தாலும், அகத்தாலும் வழிபடுகை (சி.போ.பா.359); second of the fourfold means of attaining salvation, which consists in worshipping *Śivā* with rites and ceremonies prescribed in the *āyamas.* 3. இறந்தோர் பொருட்டு செய்யும் செய்கை; funeral rites and solemnities, ceremony of offering oblations to the deceased ancestors. 4. தாளப் பிராணத்தொன்று; mode of measuring time, one of ten *tāla-p-pirāṇam.* 5. வினை; verb. 6. **கிரியாசத்தி** பார்க்க; see *kiriyā-šatti.* 7. **கிரியாவதி** பார்க்க (சி.சி.8, 3); see *kiriyāvadi.*

த.வ. செயல்.

*[Skt. kriyā > த. கிரியை.]*

**கிரியைக்கேடு** *kiriyai-k-kēḍu,* பெ.(n.) முறைகேடு; slovenliness, debauchery, disorderliness.

*[கிரியை+கேடு.]*

*[Skt. kriya > த.கிரியை.]*

**கிரியைகெடு–தல்** *kiriyai-keḍu-,* 4 செ.கு.வி. (v.i.) ஒழுங்கறுதல்; to be disorderly, solvenly, destitute of good conduct, irregular in habits. *"கிரியை கெட்டவன்".*

*[கிரியை+கெடு–,]*

*[Skt. kriya> த.கிரியை.]*

**கிரியையில்ஞானம்** *kiriyaiyil-ñāṉam,* பெ.(n.) மனத்தால் பூசனை செய்யும் பொழுது நிகழும் நுகர்வு உணர்வு (சி.பொ.பா.8, 1, 2, பக்.358); ecstatic condition during mental worship.

*[Skt. kriyayil+ñāna> த. கிரியையில் ஞானம்.]*

**கிரியையில்யோகம்** *kiriyayil-yōgam,* பெ.(n.) மனத்தால் செய்யப்படும் பூசனை (சி.போ.பா.8, 1, 2, பக்.358); mental worship of *Śivā.*

*[Skt. kriyā+yōga> த. கிரியையில்யோகம்.]*

**கிரியையிற்கிரியை** *kiriyaiyiṟ-kiriyai,* பெ.(n.) சிவாகமத்திற் கூறிய வாலிப்பு முறைப்படி (சுத்தி முன்னாக) சிவகுறி (சிவலிங்கம்) வடிவிற் செய்யும் பூசனை (சி.போ.பா.பக்.357); purificatory ceremonies enjoined in *āgamas.*

*[Skt. kriyā+kiriya> த.கிரியையிற்கிரியை.]*

**கிரியையிற்சரியை** *kiriyaiyiṟ-šariyai,* பெ.(n.) சிவபூசனைக்கு வேண்டப்படும் துணைப் பொருட்களெல்லாம் செய்கை (சி.போ.பா. பக்.357); collecting materials for the worship of *Śivā.*

*[Skt. kriyā+šariya>த.கிரியையிற்சரியை.]*

**கிரிராசன்** *kiri-rāšaṉ,* பெ.(n.) பனி (இமய) மலை (பிங்.); *Himālaya,* as the king of mountains.

*[கிரி+ராசன்.]*

*[Skt. giri> த.கிரி.]*

**கிரிராளி** *kiri-rāḷi,* பெ.(n.) பச்சைக் கருப்பூரம்; crude camphor (சா.அக.).

**கிரிவாணம்** *kiri-vāṇam,* பெ.(n.) நீலாஞ்சனக் கல்; antimony.

*[Skt. kiri+> த.கிரிவாணம்.]*

**கிரீச்செனல்** *kirīccenal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom, signifying creaking sound.

*[க்ரீச் + எனல்.]*

**கிரீசன்** *kirīšaṉ,* பெ.(n.) சிவன் (பிங்.); *Śiva,* as lord of Mt. *Kailasa.*

*[Skt. giri+īša > த. கிரீசன்.]*

**கிரீட்மருது** *kirīṭma-rudu,* பெ.(n.) முதுவேனிற் காலம்; summer, the months of *āṉi* and *āḍi,* one of six rutu.

*[Skt. grišma > கிரீட்மருது.]*

**கிரீட்டுமம்** *kirīṭṭumam,* பெ.(n.) முதுவேனிற் காலம் (பிங்.); hot season, the months of *āṉi* and *āḍi.*

*[Skt. grișma > த. கிரீட்டுமம்.]*

**கிரீடதாரி** *kiridadāri,* பெ.(n.) முடிவேய்ந்தோன்; one who wears a diadem, crowned prince, king.

*[Skt. kirīta+dhārin > த. கிரீடதாரி.]*

**கிரீடம்**[1] *kiridam,* பெ.(n.) மணிமுடி (திவா.); crown, diadem.

*[Skt. kirīta > த. கிரீடம்.]*



**கிரீடதாரணம்** *kiriḍa-dāraṇam,* பெ.(n.) முடிசூடுதல்;crowning, coronation.

*[கிரீடம் + தாரணம்.]*

*[Skt. kirīta > த. கிரீடம்]*

**கிரீடாதிபதி** *kiriḍādibati,* பெ.(n.) முடி சூடிய மன்னன்; crowned king.

*[Skt. kirīṭā+adhi-pati > த. கிரீடாதிபதி.]*

**கிரீடாப்பிரமவாதி** *kiriḍā-p-piramavāti,* பெ.(n.) உலகத்திலுள்ள தோற்றங்களெல்லாம் முழுமுதற் பொருளி (பிரமத்தி)ன் விளையாட்டென்று எடுத்துரைக்கும் சமயத்தான் (தத்துவநிஜா.94); a sect of *vēdantists* who hold that all the manifestations in the universe are but the sport of brahman.

**கிரீடாபர்வதம்** *kiriḍā-parvadam,* பெ.(n.) விளையாடுவதற்கென அமைக்கப் பெற்ற செய்குன்று; mound erected for pastime.

*[Skt. kriḍā+பர்வதம்→பருவதம்.]*

**கிரீடி**[1] *kiriḍi,* பெ.(n.) 1. அருச்சுனன் (திவா.); *Arjuna.* 2. மணிமுடி அணிந்த மன்னன்; king.

*[Skt. kirīṭin > த. கிரீடி.]*

**கிரீடி**[2]**-த்தல்** *kiriḍi-,* 11 செ.கு.வி.(v.i.) 1. விளையாடுதல்; to sport, play. *"கிரீடிக்கும் பாடும்" (பதினொ. பொன்வண். 47).* 2. புணர்தல்; to copulate.

*[Skt. krīḍ > த. கிரீடி²-த்தல்.]*

**கிரீடை** *kiriḍai,* பெ.(n.) 1. விளையாட்டு; play, sport, amusement. 2. மகளிர் விளையாட்டு (திவா.); pastime of women. 3. புணர்ச்சி (சூடா.); copulation, coition.

*[Skt. krīḍa > த. கிரீடை.]*

**கிரீதம்** *kiridam,* பெ.(n.) மென் சுண்ணம்; chalk (சா.அக.).

**கிரீதன்** *kiridaṉ,* பெ.(n.) பெற்றோரிடமிருந்து விலைக்கு வாங்கப்பட்ட தன்னேற்பு (சுவீகார)ப் புதல்வன் (ஏலா.31); son, purchased from his natural parents and adopted, one of 12 puttiran.

*[Skt. krīta > த. கிரீதன்.]*

**கிரீவநாடி** *kirivanāḍi,* பெ.(n.) கழுத்து நாடி; carotid artery (சா.அக.).

*[கிரீவம் + நாடி.]*

**கிரீவம்** *kirivam,* பெ.(n.) கழுத்து (திவா.); neck.

*[Skt. grīvā > த. கிரீவம்.]*

**கிருககருசம்** *kirugakarušam,* பெ.(n.) குழந்தைகளைத் தாக்கும் 'கொல்' எனும் இருமலும், துன்பமான மூச்சு விடுகையும்; a spasmodic state of the glottis, specially characterised by crowing inspiration, occasioned by the narrowing of the glottis (சா.அக.).

*[கிருகம் + கருசம்.]*

**கிருகச்சித்திரம்** *kiruga-c-cittiram,* பெ.(n.) குடும்பச் சச்சரவு; family dissension.

**த.வ. குடும்பச் சண்டை.**

*[Skt. gṛha+chidra > த. கிருகச்சித்திரம்.]*

**கிருகசாரி** *kirugašāri,* பெ.(n.) இல்லற நிலையிலுள்ளவன்; house holder. *"பேரறமோம்பிடுங் கிருகசாரியை யூட்டிய கேண்மையர்" (சிவதரு.கோபுர.179).*

**த.வ. இல்லறத்தான்.**

*[Skt. gṛha-cārin > த. கிருகசாரி.]*

**கிருகத்தம்** *kirugattam,* பெ.(n.) நான்கு வகையாகக் கூறப்படும் நிலைகளுள் ஒன்றான இல்லறநிலை; life of a householder, one of four *ācciramam.*

*[Skt. gṛha-stha > த. கிருகத்தம்.]*

**கிருகத்தன்** *kirugattaṉ,* பெ.(n.) 1. இல் வாழ்வான்; householder, one in the second stage of life or *ācciramam.* 2. சிறப்பான நிலையிலுள்ளவன்; honest, worthy man; man of status.

**த.வ. இல்லறத்தான்.**

*[Skt.gṛha-stha>கிருகஸ்தன்>த.கிருகத்தன்]*

**கிருகப்பிரதிட்டை** *kiruga-p-piradiṭṭai,* பெ.(n.) புது வீடு கட்டிக் கொடுத்து ஏழைக் குடும்பத்தைக் குடியேற்றுகை; settling a poor family by providing it with house, provisions, etc.

**த.வ. குடிபுகல்.**

*[Skt. gṛha+>த. கிருகப்பிரதிட்டை.]*

**கிருகப்பிரவேசம்** *kiruga-p-piravēšam,* பெ. (n.) 1. புது வீட்டிற் குடிபுகும் போது செய்யும் நடப்பு (சடங்கு); ceremony performed when occupying a newly built house. 2. மணப்பெண்ணைக் கணவன் வீட்டிற்கு முதன் முறை அழைத்துக் கொள்ளும்போது செய்யும் நடப்பு (சடங்கு); ceremony performed when a bride is first taken to her husband's house.

**த.வ. புதுமனைபுகுவிழா.**

*[Skt.gṛha+piravēša>த. கிருகப்பிரவேசம்.]*

**கிருகபதி**[1] *kirugapati,* பெ.(n.) 1. வீட்டுத் தலைவன்; master of the house. 2. இல்லறத்தான்; house holder. *"பரிகாரங் கிருகபதிக்கும் பிரமசரிக்கும் பகர்ந்திடுவாம்" (சிவதரு.பரிகார.2).*

**த.வ. குடும்பத்தலைவன்.**

*[Skt. gṛha+> த. கிருகபதி.]*

**கிருகபதி**[2] *kirugapati,* பெ.(n.) ஒரு நெருப்புக் கடவுள்; God of fire, fire God.

**த.வ. அங்கியங்கடவுள்.**

**கிருகம்**[1] *kirugam,* பெ.(n.) வீடு; house. *"கிருகத்தின் மைந்தர்கண் மேவுறாமையில்" (விநாயகபு.20, 10).*

**த.வ. மனை, இல்.**

*[Skt. grha > த. கிருகம்.]*

**கிருகம்**[2] *kirugam,* பெ.(n.) மிடறு (யாழ்.அக.); throat.

**கிருகரன்** *kirugaraṉ,* பெ.(n.) பசி, சினம் முதலியவற்றை உண்டாக்கும் பத்து வகைக் காற்றுகளுள் ஒன்று (சிலப்.3, 26, உரை); a vital air of the body, causing hunger, anger, etc., one of *taša-vāyu.*

*[Skt. kṛkara > த. கிருகரன்.]*

**கிருகவாயில்** *kirugavā-y-il,* பெ.(n.) சோறு, தண்ணீர் முதலியவை வாயின் வழியாக இறங்கும் குழாய்; the passage in the neck by which food and water are carried through into the stomach; carrier of food and drink, *Oesophagus or gullet* (சா.அக.).

**த.வ. உணவுக்குழாய்.**

*[கிருகம் + வாயில்.]*

*[Skt. grha > த. கிருகம்.]*

**கிருகாராதனை** *kirugārādaṉai,* பெ.(n.) வீட்டுத் தெய்வ வழிபாடு; worship in the house.

**த.வ. மனைத் தெய்வவழிபாடு.**

*[Skt.gṛha+ā-rādhanā>த. கிருகாராதனை.]*

**கிருகி** *kirugi,* பெ.(n.) இல்வாழ்வான்; householder. *"பிரமசரி கிருகியென்னவே பேசு மிருவருமே" (சைவ.ஆசா.60).*

**த.வ. இல்லறத்தான்.**

*[Skt. grhin > த. கிருகி.]*

**கிருகிணி** *kirugiṇi,* பெ.(n.) மனைவி; mistress of the house, wife.

**த.வ. இல்லாள்.**

*[Skt. gṛhiṇi > த. கிருகிணி.]*

**கிருச்சிரம்** *kirucciram,* பெ.(n.) 1. கழுவாயாகக் (பிராயச்சித்தமாக) கடைப்பிடிக்கப்படும்

நோன்பு; religious observance for the expiation of sin. *"கிருச்சிரஞ் சாந்தபன முதலரிதாய விரதம்" (பிரபோத.13, 19).* 2. நீர்ச்சுருக்கு நோய்; urethral stricture.

**த.வ. நேர்ந்த நோன்பு.**

*[Skt. kṛcchra > த. கிருச்சிரம்.]*

**கிருச்சிராகரம்** *kiruccirākaram,* பெ.(n.) கலிங்க நாட்டில் உள்ள ஒரு தூய நீர்த்துறை; sacred bath-ghat in *kaliṅga* (அபி.சிந்.).

**கிருச்சிரோன்மீலனவர்த்தமம்** *kirucciröṉ-milaṉa-varttamam,* பெ.(n.) ஒரு கண் நோய்; a disease of the eye.

*[கிருச்சிரோன் + மீலன + வர்த்தமம்.]*

**கிருச்சினம்** *kiruccinam,* பெ.(n.) **கிரிச்சரம்** பார்க்க; see *kiriccaram* (சா.அக.).

**கிருசம்**[1] *kirušam,* பெ.(n.) இளைப்பு (சூடா.); leanness, thinness, weakness.

**த.வ. இளைப்பு நோய்.**

*[Skt. kṛca > த. கிருசம்.]*

**கிருசம்**[2] *kirušam,* பெ.(n.) 1. உழவு; ploughing. 2. கலப்பை; plough. 3. கொழு; ploughshare.



**கிருசயம்** *kirušayam,* பெ.(n.) மலைப்பூவரசு; hill portia (சா.அக.).

**கிருசரான்னம்** *kirušarāṉṉam,* பெ.(n.) சோற்றுடன் எள்ளுப் பொடி கலந்த உணவு (சைவ. பொது.544, உரை); a dainty made of sesamam and rice.

**த.வ. எள்ளுச்சோறு, எட்சோறு.**

*[Skt. krsara+anna > த. கிருசரான்னம்.]*

**கிருசரோகம்** *kirušа-rōgam,* பெ.(n.) உடலை வற்ற வைத்து ஒடுக்கும் நோய் (பைஷஜ.230); emaciating disease.

**த.வ. உயிர்க்கொல்லிநோய்.**

*[Skt. kṛša+rōga > த. கிருசரோகம்.]*

**கிருசாட்சம்** *kiru-šāṭcam,* பெ.(n.) சிலந்தி (யாழ்.அக.); spider.



**கிருசாணு** *kirušāṉu,* பெ.(n.) 1. பவளக் கொடி; coral reef. 2. நெருப்பு; fire (சா.அக.).

**கிருசாந்தன்** *kirušāndaṉ,* பெ.(n.) நெருப்பு; fire (சா.அக.).

*[கிரு + சாந்தன்.]*

**கிருசாநாசி** *kirušānāši,* பெ.(n.) மெல்லிய மூக்கு; a thin nose (சா.அக.).

**த.வ. இல்லிமூக்கு.**

**கிருசி** *kiruši,* பெ.(n.) 1. வேளாண்மை; cultivation of soil, tillage, agriculture. 2. முயற்சி; effort, activity.

**த.வ. வெள்ளாண்மை.**

*[Skt. krši > த. கிருசி.]*

**கிருசிகன்** *kirušigaṉ,* பெ.(n.) உழவன்; cultivator, ryot, farmer.

**த.வ. ஏருழவன்.**

*[Skt. kršika > த. கிருசிகன்.]*

**கிருட்டவிரணம்** *kiruṭṭa-viraṇam,* பெ.(n.) ஆறாத காயம் அல்லது புண்; a wound or sore not completely healed up (சா.அக.).

**த.வ. ஆறாப்புண்.**

*[கிருட்ட + விரணம்.]*

*[Skt. grsṭi+viraṇa > த. கிருட்டவிரணம்.]*

**கிருட்டி¹** *kirutti,* பெ.(n.) தலையீற்றுப் பசு (சூடா.); young cow that has calved once.

**த.வ. தலையீற்று ஆ(ன்).**

*[Skt. grsti > த. கிருட்டி.]*

**கிருட்டி²** *kirutti,* பெ.(n.) பன்றி; hog. *"எதிர்த்த கிருட்டியின்" (அரிச்.பு. வேட்டஞ்.70).*

**த.வ. கேழல்.**

*[Skt. ghrsti > த. கிருட்டி.]*

**கிருட்டி³** *kirutti,* பெ.(n.) 1. கொடி வகை; square stalked vine. 2. பறவை வகை (பதார்த்த.893); a kind of bird.

**கிருட்டி⁴** *kirutti,* பெ.(n.) 1. அறிஞன்; wiseman. 2. வேள்வி செய்தவன்; one who has performed a sacrifice.

**த.வ. வல்லுநன்.**

**கிருட்டிகம்** *kiruttigam,* பெ.(n.) கொட்டையில்லா முந்திரிக் கொடி; creeper of seedless raisins (சா.அக.).

**த.வ. கொடிமுந்திரி.**

*[கிருட்டி + அகம்.]*

**கிருட்டிசாகியம்** *kiruttiśāgiyam,* பெ.(n.) கடற் பழம் என்னும் பெயருடைய மரம்; south sea island bottle-brush tree (சா.அக.).

**கிருட்டிசாரம்** *kiruttiśāram,* பெ.(n.) தீம்பிரண்டை; a variety of sweet adamant creeper (சா.அக.).

**த.வ. இனிப்புப் பிரண்டை.**

*[கிருட்டி + சாரம்.]*

**கிருட்டிணகந்தகம்** *kiruttina-kandagam,* பெ.(n.) கிடைப்பதற்கு அரிதான ஒரு வகைக் கறுப்புக் கந்தகம்; a black or dark and rare variety of sulphur (சா.அக.).

**த.வ. கருங்கந்தகம்.**

*[கிருட்டிணம் + கந்தகம் – கிருட்டிணகந்தகம் - வண்ணம்பற்றி வந்த சொல்லாகும்.]*

**கிருட்டிணகந்தம்** *kiruttina-kandam,* பெ.(n.) 1. கறுப்பு அல்லி; black lotus, *Nymphae tringra.* 2. முருங்கை; *moringa-Hyarin-thera moringa* (சா.அக.).

*[கிருட்டிணம் + கந்தம்.]*

**கிருட்டிணகர்க்கடகம்** *kiruttinakar-k-kadagam,* பெ.(n.) கறுப்பு நண்டு; black crab (சா.அக.).

**த.வ. கருநண்டு.**

*[கிருட்டிண+கல்+கடகம்.]*

**கிருட்டிணகர்ப்பம்** *kiruttina-karppam,* பெ.(n.) ஒரு வகைப்பூடு; a kind of plant (சா.அக.).

**த.வ. கருங்கருப்பம்.**

**கிருட்டிணகரித்துருமம்** *kiruttina-kari-t-turumam,* பெ.(n.) பேய்த் தும்பை; wild leucas (சா.அக.).

**த.வ. கருந்தும்பை.**

*[கிருட்டிணம் + கரி + துருமம்.]*

**கிருட்டிணகருமம்¹** *kiruttina-karumam,* பெ.(n.) வெள்ளை விழுந்த காயத் தழும்பைக் கறுப்பாக்குகை; the blackening of a white cicatrix, due to a bad or defective granulation (சா.அக.).

**த.வ. காயமாற்றி.**

*[கிருட்டிணம் + கருமம்.]*

**கிருட்டிணகருமம்²** *kiruttina-karumam,* பெ.(n.) புண்களைச் சூடிடல் அல்லது தீய்க்கை; a peculiar way of cauterising a wound or sore (சா.அக.).

**த.வ. சூட்டுக்கோல்போடுதல்.**

*[கிருட்டிணம் + கருமம்.]*

**கிருட்டிணகற்பம்** *kiruttina-karpam,* பெ.(n.) கருப்பத்திற்காக வேண்டிச் செய்யும் அயக் காந்தச் செந்தூரம்; calcined red oxide prepared with iron and magnet for purposes of rejuvenation (சா.அக.).

**த.வ. காயகற்ப செந்தூரம்.**

*[கிருட்டிணம் + கற்பம்.]*

**கிருட்டிணகாம்போசி** *kiruttina-kampōśi,* பெ.(n.) பூலா என்னும் ஒருவகைச் செடி; black honey shrub (சா.அக.).

**த.வ. கரும்பூலா.**

**கிருட்டிணகாயா** *kiruṭṭiṇa-kāyā,* பெ.(n.) பனை மரம்; palm tree (சா.அக.).

**த.வ.** கரும்புல், பனை.



**கிருட்டிணகுச்சம்** *kiruṭṭiṇa-kuccam,* பெ.(n.) கண்ணில் உண்டாகும் பூ; cataract of the eye (சா.அக.).

**த.வ.** கண்பூ.

**கிருட்டிணகுட்டம்** *kiruṭṭiṇa-kuṭṭam,* பெ.(n.) ஒரு வகைக் குட்ட நோய்; black leprosy.

**த.வ.** கருங்குட்டம்.

*[கிருட்டிணம் + குட்டம்.]*

**கிருட்டிணகெந்தம்** *kiruṭṭiṇa-kendam,* பெ.(n.) பனை மரம்; palm tree (சா.அக.).

**த.வ.** கரும்புல்.

**கிருட்டிணகெந்தா** *kiruṭṭiṇa-kendā,* பெ.(n.) முருங்கை; drum-stick tree (சா.அக.).

**த.வ.** கருப்பு முருங்கை.

**கிருட்டிணகேழி** *kiruṭṭiṇa-kēḻi,* பெ.(n.) ஒரு செடி; brazilian hog weed (சா.அக.).

**கிருட்டிணகேளி** *kiruṭṭiṇa-kēḷi,* பெ.(n.) கொடி வகை; brazilian hogweed, *Bougainvillea spectabilis.*

**கிருட்டிணசகாயன்** *kiruṭṭiṇa-šagāyāṉ,* பெ.(n.) பாண்டவர்களில் ஒருவரான அருச்சுனன் (பிங்.); *Arjuṇa* as having *Krṣṇa* for his comrade.

*[Skt. krṣṇa+> த. கிருட்டிணசகாயன்.]*

**கிருட்டிணசகுனி** *kiruṭṭiṇa-šaguṉi,* பெ.(n.) காக்கை; crow (சா.அக.).

**த.வ.** அண்டங்காக்கை.

*[கிருட்டிணம் + சகுனி.]*



**கிருட்டிணசதுகம்** *kiruṭṭiṇa-šadugam,* பெ.(n.) கறுப்பு சதுக மரம்; a black variety of *`Sadugam'* an unknown tree (சா.அக.).

**கிருட்டிணசயந்தி** *kiruṭṭiṇa-sayandi,* பெ.(n.) ஆண்டு தோறும் கண்ணன் பிறந்த நாளில் கொண்டாடப்படும் விழா; celebration of *kršṇā's* birthday.

*[Skt. krišṇa > கிருட்டிணம் + செயந்தி.]*

**கிருட்டிணசர்ப்பம்** *kiruṭṭiṇa-šarppam,* பெ.(n.) 1. ஒரு வகைக் கரும்பாம்பு; a black snake. 2. கருநாகம்; lance hooded black cobra (சா.அக.).

**த.வ.** கருப்புநாகம், கருநாகம்.

*[கிருட்டிணம் +சர்ப்பம்.]*

**கிருட்டிணசன்னுகம்** *kiruṭṭiṇa-šaṉṉugam,* பெ.(n.) கறுப்புக் கடலை; black Bengal gram (சா.அக.).

**த.வ.** கருங்கடலை.

*[கிருட்டிணம் + சன்னுகம்.]*

**கிருட்டிணசாபம்** *kiruṭṭiṇa-šābam,* பெ.(n.) நிலப்பனை; ground palm (சா.அக.).

**த.வ.** கரும்பனை.

**கிருட்டிணசாரம்** *kiruṭṭiṇa-šāram,* பெ.(n.) கறுப்புப் புள்ளிகளை உடலில் கொண்ட மான்; deer whereon the black dots in whole body (சா.அக.).

**த.வ. கரும்புள்ளிமான்.**



**கிருட்டிணசாலி** *kiruṭṭiṇašāli,* பெ.(n.) ஒரு கறுப்பு நெல்; a black variety of paddy (சா.அக.).

**த.வ. கருஞ்சாலி.**

*[கிருட்டிணம் + சாலி.]*

**கிருட்டிணசாலிச்சம்** *kiruṭṭiṇa-šāliccam,* பெ.(n.) கறுப்பரிசி; a variety of black rice (சா.அக.).

**த.வ. கருஞ்சாலியரிசி.**

**கிருட்டிணசிங்குவாததோடம்** *kiruṭṭiṇa-šinguvāda-tōṭam,* பெ.(n.) நாக்குக் கறுத்து இறப்பிற்கேதுவாகும் ஒரு நோய்; a fatal disease marked by the dark appearance of the tongue (சா.அக.).

*[கிருட்டிணம் + சிங்கு + வாதம் + தோடம்.]*

**கிருட்டிணசீரகம்** *kiruṭṭiṇa-šīragam,* பெ.(n.) சீரக வகை (பதார்த்த.1034); black cumin, *Nigella sativa.*

**த.வ. கருஞ்சீரகம்.**

**கிருட்டிணசுக்கிலை** *kiruṭṭiṇa-šukkilai,* பெ.(n.) கதிரவனைச் சுற்றிக் காணப்படும் ஒளியுள்ள பகுதி (செந்.10, 238); penumbra.

**த.வ. ஒளிவட்டம்.**

*[Skt. kṛṣṇa-šukla> த.கிருட்டிணசுக்கிலை.]*

**கிருட்டிணசுரம்** *kiruṭṭiṇa-šuram,* பெ.(n.) ஒரு வகைக் காய்ச்சல்; a kind of fever.

**த.வ. கருஞ்சுரம்.**

*[கிருட்டிணம் + சுரம்.]*

*[Skt. kṛṣṇa> த.கிருட்டிணம்.]*

இக்காய்ச்சல் ஏற்பட்டால் உடம்பில் கருப்புத் தழும்பும், நாக்கு, பல், உதடு முதலியவை கருப்பாயும் காணப்படும் (சா.அக.).

**கிருட்டிணசூரணம்** *kiruṭṭiṇa-šūraṇam,* பெ. (n.) இரும்புத் துரு; iron rust (சா.அக.).

**த.வ. கருந்தூறு.**

*[கிருட்டிணம் + சூரணம்.]*

*[Skt. kṛṣṇa-šurana> த.கிருட்டிணசூரணம்.]*

**கிருட்டிணசூரிகை** *kiruṭṭiṇa-šūrigai,* பெ.(n.) பாம்பின் நஞ்சு முறியும்படிக் கொடுக்கும் ஒரு மூலிகை வேர்; the root of an unknown plant given as an antidote for snake-poison (சா.அக.).

**த.வ. கருவேர்.**

**கிருட்டிணதுளசி** *kiruṭṭiṇa-tuḷaši,* பெ.(n.) துளசி வகை (பதார்த்த.304); purple-stalked basil, *Ocimum sanctumtypica.*

**த.வ. கருந்துளசி.**

*[கிருட்டிண(ம்)+துளசி.]*

*[Skt. kršna> த. கிருட்டிணம்.]*

**கிருட்டிணதேவராயர்** *kiruṭṭiṇa-tēvarāyar,* பெ.(n.) தொண்டை நாட்டுச் சிற்றரசர்; a petty king of *Toṇḍai-nāḍu* (அபி.சிந்.).

**கிருட்டிணதோடம்** *kiruṭṭiṇa-tōḍam,* பெ.(n.) ஒருவகை நச்சுக் காய்ச்சல்; typhus fever.

**த.வ. கருங்காய்ச்சல்.**

*[Skt. kršna>த.கிருட்டிணம்.]*

**கிருட்டிணப்பக்கம்** *kiruṭṭiṇa-p-pakkam,* பெ. (n.) இருள் பக்கம்; dark half of a lunar month or the period of the waning moon.

*[கிருட்டிணம்+பக்கம்.]*

*[Skt. kršna>த.கிருட்டிணம்.]*

**கிருட்டிணபரணி** *kiruṭṭiṇa-paraṇi,* பெ.(n.) ஒரு வகைத் துளசி; a kind of basil (சா.அக.).

**த.வ. கருந்துளசி.**

*[கிருட்டிணம் + பரணி.]*

**கிருட்டிணமாது** *kiruṭṭiṇa-mādu,* பெ.(n.) கருப்புத் துளசி; black basil.

**த.வ. கருந்துளசி.**

*[கிருட்டிணம் + மாது.]*

**கிருட்டிணமிச்ரர்** *kiruṭṭiṇa-micrar,* பெ.(n.) ஒரு பார்ப்பனர்; a Brahmin (அபி.சிந்.).

**கிருட்டிணமிருகம்** *kiruṭṭiṇa-mirugam,* பெ.(n.) கருநிறமுள்ள மான் வகை; black antelope.

**கிருட்டிணமூர்த்தி** *kiruṭṭiṇa-mūrtti,* பெ.(n.) கண்ணபிரான்; Lord *Kṛṣṇa.*

**த.வ. திருமால்.**

**கிருட்டிணமூலி** *kiruṭṭiṇa-mūli,* பெ.(n.) துளசி (மலை.); holy basil.

**கிருட்டிணயசுர்வேதம்** *kiruṭṭiṇa-yašur-vēdam,* பெ.(n.) எசுர் மறையின் (வேதத்தின்) இருபகுதிகளுள் மந்திரமும், மந்திரம் அல்லாத மறை (வேத)ப் பகுதி (பிராமணம்)யும் கலந்து கிடக்கும் பகுதி; the black *yajurvēda*, as having the mantras and brahmanas mixed up, dist. fr. *šukkila-yašur-vēdam.*

*[Skt. kršṇa+yašur-vēda>த. கிருட்டிண யசுர்வேதம்.]*

**கிருட்டிணராசன்** *kiruṭṭiṇa-rāšaṉ,* பெ.(n.) 1. சூடாமணி நிகண்டில் புகழப்பட்டவன்; one who celebrated by *cūḍāmaṇi-nigaṇḍu.* 2. செஞ்சியை ஆண்ட மன்னன்; a king of *ceñji.*

**கிருட்டிணராயன்** *kiruṭṭiṇa-rāyaṉ,* பெ.(n.) பதினாறாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் விஜய நகரத்தை ஆண்ட முக்கியமான மன்னருள் ஒருவர்; *krišṇa-raya* the famous king of the narasimha dynasty of vijayanagar, 1509-1530. *"கிருட்டிண ராயன் கைபோற் கொடை மடமென்பது" (சூடா.9, 10).*

**கிருட்டிணவெலி** *kiruṭṭiṇa-v-eli,* பெ.(n.) கறுப்பு எலி; black variety of rat, Musrattas.

**த.வ. காரெலி.**

*[கிருட்டிணம் + எலி.]*

*[Skt. kṛṣṇa> த.கிருட்டிணம்.]*

இது கடித்தால் அடிக்கடி அரத்தமாகக் கக்குவதோடன்றி, மழைக் காலத்தில் மிகுதியாக அரத்தம் விழும் (சா.அக.).



**கிருட்டிணன்** *kiruṭṭiṇaṉ,* பெ.(n.) 1. கண்ணபிரான்; kirusna, son of *vašudēvā*, one of ten incarnations of visnu. 2. கண்மணிப் பாவை; Iris of the eye. 3. அருச்சுனன் (பிங்.); Arjuna.

**த.வ. கருங்கொண்டல்.**

*[Skt. kṛṣṇa > த. கிருஷ்ணன்.]*

**கிருட்டிணா**[1] *kiruṭṭiṇā,* பெ.(n.) இந்தியாவில் ஆந்திர மாநிலத்தில் உள்ள ஒரு ஆறு; one of the river in Andrapradesh, India.

**கிருட்டிணாசினம்** *kiruṭṭiṇāšiṇam,* பெ.(n.) கறுப்பு மானின் தோல்; skin of black antelope, used as a seat during religious meditation.

*[Skt.karšna+ajina> த. கிருட்டிணாசினம்.]*

**கிருட்டிணாசுரன்** *kiruṭṭiṇāšuraṉ,* பெ.(n.) ஓர் அரக்கன்; a giant.

**கிருட்டிணாஞ்சனம்** *kiruṭṭiṇāñjaṉam,* பெ.(n.) 1. கறுப்பு மை; black collyrium. 2. கருங்குமிழம் பூ மரம்; black kandahar tree, bearing blue or black flowers (சா.அக.).

*[கிருட்டிணம் + அஞ்சனம்.]*

**கிருட்டிணாட்டமி** *kiruttiṇāṭṭami,* பெ.(n.) கண்ணன் பிறந்த நாள்; birthday of *Kršṇa,* the eighth day of the dark half of the month *šrāvaṇa.*

*[**Skt.** kršṇa+asṭami>த. கிருட்டிணாட்டமி.]*

**கிருட்டிணாப்பிரகம்** *kiruttiṇā-p-piragam,* பெ.(n.) அப்பிரக வகை; mica.

*[**Skt.** krsṇa+abhraka>த. கிருட்டிணாப் பிரகம்.]*

**கிருட்டிணார்ப்பணம்** *kiruttiṇār-p-paṇam,* பெ.(n.) செயலின் முடிவில் அதனைக் கண்ணனுக்குக் கொடுக்கும் தொடர்; expression used generally at the close of ablutions, rituals, etc., dedicating them to *šrikršṇa.*

*[**Skt.** kršṇa+arppaṇa>த. கிருட்டிணார்ப் பணம்.]*

**கிருட்டிணை**[1] *kiruttiṇai,* பெ.(n.) கதிரவனைச் சுற்றிக் காணப்படும் கருமையுள்ள பகுதி (செந்.X, 233); umbra, round the solar disc.

**கிருட்டிணை** *kiruttiṇai,* பெ.(n.) 1. திரௌபதை; Draubadai. 2. நான்கு வகை ஆற்றலுள் (பராசத்தியுள்) ஒன்று (சைவச. பொது.74, உரை); a form of *parā-šatti,* one of 4.

*[**Skt.** krsṇā > த. கிருட்டிணை.]*

**கிருத்தம்** *kiruttam,* பெ.(n.) செய்யப்பட்டது; that which is done, made, produced. *"சத்தமனித்தங் கிருத்தத் தாலெனின்" (மணிமே.29:395).*

*[**Skt.** krta> த. கிருத்தம்.]*

**கிருத்தி** *kirutti,* பெ.(n.) தோல் (சூடா.); skin, hide.

*[**Skt.** krtti > த. கிருத்தி.]*

**கிருத்திகாதீபம்** *kiruttigā-dībam,* பெ.(n.) கார்த்திகை விளக்கு; lights lit on the evening of *tiru-k-kārttigai.*

*[**Skt.** krttikā > த. கிருத்திகா.]*
*[தீ>தீவம்>**Skt.** dīpā > த. தீபம்.]*



**கிருத்திகை**[1] *kiruttigai,* பெ.(n.) 1. ஏழு இருடிகளில் வசிட்டர் ஒழிந்த மற்ற அறுவரின் மனைவிமார்; six saints wives. 2. தீக்கடவுளின் (அக்னி) மனைவி; wife of Agni. 3. ஒரு விண்மீன்; constellation pleiades.

**கிருத்திகை**[2] *kiruttigai,* பெ.(n.) ஒரு விண்மீன் (திவா.); the constellation pleiades, part of *mēṭa-rāši* and *iṭapa-rāši.*

**த.வ. கார்த்திகை.**

**கிருத்திமம்**[1] *kiruttimam,* பெ.(n.) **கிருத்தி** பார்க்க; see *kirutti.*

**கிருத்திமம்**[2] *kiruttimam,* பெ.(n.) 1. செயற்கையானது (சூடா.); that which is artificial. 2. பொய் (சூடா.); falsehood, lie, fraud. 3. பூதம்; a class of demons. *"கிருத்திமவினம் பல குதித்தன கிளைத்தே" (இரகு.திக்குவி.113).*

**த.வ. செய்மம்.**

**கிருத்தியம்** *kiruttiyam,* பெ.(n.) 1. தொழில்; act, action, operation, function. *"பூதங்கள் கிருத்தியகர்த்தாவென்று" (சி.சி.1, 4, மறைஞா.).* 2. ஆதன் மும்மலங்களை ஒழித்து வீடு பெறுவதற்குத் துணையாயிருக்கும் படைப்பு (கிருட்டி) (சி.சி.1, 36); the five functions of God, designed by divine grace for the deliverance of the souls. அவையாவன; சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்ற கடவுளின்

ஐந்தொழில். 3. அபரக் கிரியை (உத்தரக் கிரியை); funeral rites, obsequies.

**த.வ. வினை.**

*[Skt. krtya > த. கிருத்தியம்.]*

**கிருத்தியமுறை** *kiruttiya-murai,* பெ.(n.) செய்முறை; modus-operandi (சா.அக.).

**த.வ. வினைமுறை.**

*[கிருத்திய + முறை.]*

*[Skt. krtya > த. கிருத்திய.]*

**கிருத்திரகூடம்** *kiruttira-kūḍam,* பெ.(n.) மகதநாட்டில் உள்ள மலை; a hill in *magadā.*

*[கிருத்திர + கூடம்.]*

*[Skt. krtya > த. கிருத்திர(ம்).]*

**கிருத்திரசிவாதம்** *kiruttiraši-vādam,* பெ.(n.) தொடை நரம்புகளைப் பற்றிய நோய் (இங்.வை.227); sciatica.

**த.வ. தொடைநரம்பிசிவுநோய்.**

*[Skt.gr harasi+vāta>த.கிருத்திரசி வாதம்.]*

**கிருத்திரம்** *kiruttiram,* பெ.(n.) கழுகு (நிகண்டு); eagle.

**த.வ. பருந்து, கலுழன்.**

*[Skt. gr dhra > த. கிருத்திரம்.]*



**கிருத்திராசுரன்** *kiruttirāšuran,* பெ.(n.) ஒரு அரக்கன்; giant.

**கிருத்திரிமபுத்திரன்** *kiruttirama-puttiran,* பெ.(n.) **கிருத்திரிமன்** பார்க்க; see *kiruttiri-man.*

*[Skt. krtrima+> த.கிருத்திரிமபுத்திரன்.]*

**கிருத்திரிமம்** *kiruttirimam,* பெ.(n.) 1. போலியானது; that which is artificial, sham. *"கிருத்திரிமவேடம்".* 2. கரவடம் (வஞ்சனை); deception, fraud. *"கன்னியர் கிருத்திரிமத்தைக்காணரிது" (பஞ்ச.அர்த்தநா.61).* 3. குறும்பு (சேட்டை); mischief.

*[Skt. krtrima > த. கிருத்திரிமம்.]*

**கிருத்திரிமன்** *kiruttiriman,* பெ.(n.) பெற்றோர் இசைவின்றி தன்னேற்பு (சுவீகார) மகனாகச் செய்து கொள்ளப்பட்டவன்; artificial or adopted son; adult son adopted without the consent of his natural parents, one of 12 *puttiran.*

**கிருத்திவாசன்** *kirutti-vāšan,* பெ.(n.) காசியில் எழுந்தருளி இருக்கும் சிவன்; God *Šivā.*

**த.வ. உலகநாயகன்.**

**கிருத்துருணி** *kiruttiruṇi,* பெ.(n.) பம்பந்திராய்; Indian chick weed (சா.அக.).

**கிருதக்கிருமி** *kiruda-k-kirumi,* பெ.(n.) நெய்யில் உண்டாகும் புழு; a worm found in putrified ghee (சா.அக.).

**த.வ. நெய்புழு.**

*[Skt. krta+krmi > த. கிருதக்கிருமி.]*

**கிருதக்கினதை** *kirudakkinadai,* பெ.(n.) செய்ந்நன்றி கோறல்; ingratitude.

**த.வ. செய்ந்நன்றிகொல்லல்.**

*[Skt. krta-ghna-tā > த. கிருதக்கினதை.]*

**கிருதக்கினன்** *kirudakkinan,* பெ.(n.) நன்றி கொன்றவன்; ungrateful person.

**த.வ. நன்றிமறந்தவன்.**

**கிருதக்கு** *kirudakku,* பெ.(n.) குறும்பு, போக்கிரித்தனம் (வக்கிரம்); roguery, perveristy.

**த.வ. போக்கிலித்தனம்.**

*[Pkt. krtaka > த. கிருதக்கு.]*

**கிருதக்குளபாளிதபோசனம்** *kiruda-k-kuḷa-pāḷida-pōšaṉam,* பெ.(n.) சர்க்கரைப் பொங்கல்; the rice mixed with sugar.

த.வ. அக்காரவடிசில்.

*[கிருதம் + குளம் + பாளிதம் + போசனம்.]*

**கிருதகன்** *kirutagaṉ,* பெ.(n.) கண்ணனின் தந்தையாகிய வாசுதேவருக்குப் பத்திரையிடம் பிறந்த மகன்; son of *vāšudēvā* from *pattirai.*

**கிருதகிருத்தியன்** *kiruda-kiruttiyaṉ,* பெ.(n.) செய்தற்குரிய கடமையைச் செய்து முடித்தவன் (சிலப்.10:177, உரை); one who has done his duty.

த.வ. செய்வினையாளன்.

**கிருதகோடி** *kiruta-kōḍi,* பெ.(n.) அளவை நூல் இயற்றிய முனிவன்; a saint authority of logic book.

**கிருதகௌசகம்** *kiruta-kaušagam.* பெ.(n.) விதர்ப்ப நாட்டிலுள்ள ஒரு பட்டணம்; ancient city in *vidarpa* country.

**கிருதசமகன்** *kiruta-šamagaṉ,* பெ.(n.) ஒரு இருடி; a saint.

**கிருதசூடன்** *kiruda-šūḍaṉ,* பெ.(n.) உச்சிக் குடுமிக்காரன் (யாழ்.அக.); man who has a knotted lock of hair on the crown of the head.

த.வ. உச்சிக்குடுமி.

*[Skt. kṛta+ > த. கிருதசூடன்.]*

**கிருதஞ்ஞதை** *kirudaññadai,* பெ.(n.) செய்நன்றியறிகை; gratitude.

த.வ. செய்ந்நன்றிஅறிதல்.

*[Skt. kṛtajñatā > த. கிருதஞ்ஞதை.]*

**கிருதஞ்ஞன்** *kirudaññaṉ,* பெ.(n.) செய்நன்றி அறிபவன்; grateful person.

த.வ. செய்ந்நன்றிஉடையான்.

*[Skt. krta-jña > த. கிருதஞ்ஞன்.]*

**கிருததன்வா** *kirutataṉvā,* பெ.(n.) கண்ணனால் வெல்லப்பட்ட மன்னன்; a king defeated by Lord *Krishṇā.*

**கிருதபாகம்** *kiruda-pāgam,* பெ.(n.) நெய்யினால் செய்த மருந்து; a medicinal preparation made of ghee (சா.அக.).

த.வ. நெய்ம்மருந்து.

*[கிருதம் + பாகம்.]*

*[Skt. krta > த. கிருதம்.]*

**கிருதபிராயச்சித்தம்** *kiruta-pirāyaccittam,* பெ.(n.) ஒழுக்கக் கேட்டிற்கு நெய்யினால் வேள்வி செய்தல்; expiration, atonement, expiratory ceremoney for past sins. *"கிருதப்ராயஸ்சித்தஞ்செய்துசுத்தராயினார்–வாரியத்துக் குடவோலை யெழுதிப்புகவிடப் பெறாததாகவும்" (உத்தரமேரூர் கல்வெட்டு, முதல் பராந்தகன், கி.பி.921).*

த.வ. கழுவாய்.

*"வழுவாய் மருங்கிற் கழுவாயுமுளவென"* (புறநா.34,4).

**கிருதம்**[1] *kirudam,* பெ.(n.) 1. செய்யப்பட்டது; that which is done, made. 2. **கிருதயுகம்** பார்க்க; see *kiruda-yugam.*

*[Skt. kṛta > த. கிருதம்.]*

**கிருதம்**[2] *kirudam,* பெ.(n.) 1. நெய் (திவா.); ghee. 2. நெய் கலந்த குழம்பு வடிவான மருந்து; a medicinal preparation having ghee as the vehicle.

த.வ. நெய்ம மருந்து.

*[Skt. gṛta > த. கிருதம்.]*

**கிருதயுகம்** *kiruda-yugam,* பெ.(n.) நான்கு உகங்களுள் 17,28,000 ஆண்டு கொண்ட முதல் உகம்; the first of four yugas, golden age of the Hindus, consisting of 17,28,000 years.

*[Skt. kṛta+ > த. கிருதயுகம்.]*

**கிருதவன்மன்** *kirutavaṉ,* பெ.(n.) 1. பாரதப் போரில் முதல் நாள் கேகயனுடன் போர் புரிந்தவன்; the person who quarrel with *kēkayā* in *Bārathā* war. 2. இருதயன் மகன்; son of *irutayaṉ.* 3. தேவமீடனுக்குத் தம்பி; brother of *tēvamīṭaṉ.*

**கிருதவீரியன்** *kiruta-viriyaṉ,* பெ.(n.) தனகன் என்னும் மன்னனின் மகன்; son of king *taṉagaṉ.*

**கிருதன்** *kirudaṉ,* பெ.(n.) செருக்குடையவன்; arrogant, insolent fellow.

த.வ. செருக்காளன்.

**கிருதா** *kirudā,* பெ.(n.) கன்ன மீசை; ringlets on the cheeks almost touching the curls of moustache, whiskers.

*[U. girdā > த. கிருதா.]*



**கிருதாசி** *kirudāśi,* பெ.(n.) 1. குசநாபன் மனைவி; wife of *kuśa-nāpaṉ.* 2. ஒரு தேவ மகள்; a deity damsel. 3. ஒரு தெய்வக் கணிகை; a deity harlot.

*[Skt. krutāśi > த. கிருதாசி.]*

**கிருதாந்தம்** *kirutāndam,* பெ.(n.) முடிந்த முடிவு (யாழ்.அக.); established truth.

த.வ. கொண்முடிபு.

*[Skt. krtānta > த. கிருதாந்தம்.]*

**கிருதாந்தன்** *kirutāndaṉ,* பெ.(n.) இயமன் (யாழ்.அக.); yama.

த.வ. எமன்.

*[Skt. krtānta > த. கிருதாந்தன்.]*

**கிருதாமீசை** *kirudā-miśai,* பெ.(n.) **கிருதா** பார்க்க; see *kiruda.*

த.வ. கன்னமீசை.

*[கிருதா + மீசை.]*

*[U. girdā > த. கிருதா.]*

**கிருதார்த்தன்** *kirudārttaṉ,* பெ.(n.) பெரும் பேறு பெற்றவன்; one who has attained his object.

த.வ. பெரும்பேறாளன்.

*[Skt. krta+artha > த. கிருதார்த்தன்.]*

**கிருதி** *kirudi,* பெ.(n.) ஓர் இசைப்பாட்டு (கீர்த்தனம்); musical composition. *"இரண்டு கிருதி பாடினான்".*

த.வ. இசைப்பாடல்.

*[Skt. krti > த. கிருதி.]*

**கிருதிவந்தன்** *kiruti-vandaṉ,* பெ.(n.) வாசுதேவருக்குத் தேவகியிடம் பிறந்த குமரன்; son of *Vāsudeva* and *Devaki.*

**கிருதுப்பாகை** *kirudu-p-pāgai,* பெ.(n.) ஒரு பக்கமாக அணியும் தலைப்பாகை; turban slipped on one side of the head, heap near fixed on one side of the head.

த.வ. சாய்தலைப்பாகை.

*[கிருது + பாகை.]*

*[Skt. krudi > த. கிருது.]*

**கிருதுவுடை** *kiruduvudai,* பெ.(n.) இயல்பல்லாத உடை; foppish dress, finery.

த.வ. செயற்கெயுடை.

*[கிருது+உடை.]*

*[Skt. krtu > த. கிருது.]*

**கிருபணத்துவம்** *kirubaṇattuvam,* பெ.(n.) கடுங்கஞ்சத்தனம்;niggardliness, miserliness.

த.வ. கடுங்கஞ்சம்.

*[Skt. krpaṇa-tva > த. கிருபணத்துவம்.]*

**கிருபணம்** *kirubaṇam,* பெ.(n.) **கிருபணத்துவம்** பார்க்க; see *kirubaṇattuvam.*

*[Skt. krpaṇa > த. கிருபணம்.]*

**கிருபணன்** *kirubaṇaṉ,* பெ.(n.) கடுங் கஞ்சன்; niggard, miser.

த.வ. ஈர்ங்கைவிதிரான்.

*[Skt. krpaṇa > த. கிருபணன்.]*

**கிருபன்¹** *kirubaṉ,* பெ.(n.) **கிருபாசாரியன்** பார்க்க; see *kirubāśāriaṉ.*

*[Skt. krpa > த. கிருபன்.]*

**கிருபன்²** *kirubaṉ,* பெ.(n.) கௌதமர் குலத்தில் பிறந்தவன்; one who born in *Kautama's* lineage.

**கிருபாகடாட்சம்** *kirubā-kaḍāṭšam,* பெ.(n.) அருட்பார்வை; benign, gracious look; look of mercy, compassion.

*[Skt. kṛpā+gatācia> த. கிருபாகடாட்சம்.]*

**கிருபாகரம்** *kirubāgaram,* பெ.(n.) திருவருள்; divine grace. *"உனது கிருபாகரமேதோ" (திருப்பு.499).*

**த.வ. திருவருட்கருணை.**

*[Skt. kṛpakaram > த. கிருபாகரம்.]*

**கிருபாகரன்** *kirubāgaraṉ,* பெ.(n.) அருளுக்கு இருப்பிடமானவன்; the fountain of mercy or grace, as god. *"கிருபாகர ஞானாகர" (கந்தரலங்.21).*

**த.வ. அருளாளன்.**

*[Skt. kṛuba+ākara > த. கிருபாகரன்.]*

**கிருபாசமுத்திரம்** *kirubā-šamuttiram,* பெ.(n.) அருட்கடல்; ocean of grace, as god.

*[Skt. kṛubā+samudra > த. கிருபா சமுத்திரம்.]*

**கிருபாசனம்** *kirubāšaṉam,* பெ.(n.) அருட்செல்வத்திற்கு இருப்பிடமான கடவுள்; mercy-seat, god, as the seat of mercy and grace.

**த.வ. அருட்செல்வன்.**

*[Skt. kṛupa+pāšaṉa > த. கிருபாசனம்.]*

**கிருபாசாரியன்** *kirubāšāriyaṉ,* பெ.(n.) கௌரவர்கள் மற்றும் பாண்டவர்களுக்கு வில்வித்தை கற்றுக் கொடுத்த ஆசிரியர்களுள் ஒருவர் (பாரத.); a preceptor who taught archery to the *Kauravas* and *Pāṇḍavas*, one of seven *cirañciviyar.*

*[Skt kṛpa+ācārya > த. கிருபாசாரியன்.]*

**கிருபாணம்** *kirubāṇam,* பெ.(n.) வாள் (யாழ்.அக.); sword.

*[Skt. kṛpāṇu > த. கிருபாணம்.]*

**கிருபாமூர்த்தி** *kirubā-mūrtti,* பெ.(n.) அருள் வடிவானவன்; one who is the embodiment of mercy.

**த.வ. அருளாளன்.**

*[Skt. kṛpā+moorthy > த. கிருபாமூர்த்தி.]*

**கிருபாளு** *kirubāḷu,* பெ.(n.) உள்ளத்தில் அருள் உடையவன்; merciful, compassionate person. *"மாம்ஸத்தை மாற்றி அன்னாதிகளினால் உருசிக்கப் பண்ணிற் கிருபாளுவாவான்" (சி.சி.பர. சௌத்.ம.6).*

**த.வ. அருளுள்ளமுடையான்.**

*[Skt. krpā > த. கிருபாளு.]*

**கிருபி** *kirupi,* பெ.(n.) நான்முகன் பேரன் சதாநந்தர் பெண்; great grand daughter of *Nāṉmugaṉ* and *šatānandar.*

*[Skt. krti > த. கிருபி.]*

**கிருபீடபாலம்** *kirupīḍa-pālam,* பெ.(n.) கடல் (யாழ்.அக.); ocean.

*[Skt. krpīṭa+pāla > த. கிருபீடபாலம்.]*

**கிருபை** *kirubai,* பெ.(n.) அருள் (பிங்.); grace, mercy, clemency, compassion, benevolence.

**த.வ. அருள்.**

*[Skt. kṛpā > த. கிருபை.]*

**கிருபைக்கண்** *kirubai-k-kaṇ,* பெ.(n.) அருட்பார்வை (யாழ்.அக.); gracious or merciful look.

**த.வ. அருட்கண்.**

*[கிருபை + கண்.]*

*[Skt. kṛpa> த. கிருபை.]*

**கிருமி**[1] *kirumi,* பெ.(n.) புழு; worm, insect, maggot. *"ஈனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்" (திருவாச.4, 14).*

**த.வ. பூச்சி.**

*[Skt. krmi > த. கிருமி.]*

**கிருமி**[2] *kirumi,* பெ.(n.) மன்னன் உசீநரனின் நான்காவது மகன்; fourth son of a king *ušīnaraṉ.*

**கிருமிக்கிரந்தி** *kirumi-k-kirandi,* பெ.(n.) அரிபுண் (யாழ்.அக.); canker, an eating, spreading sore.

*[Skt. kṛmi+> த. கிருமிக்கிரந்தி.]*

**கிருமிகண்டசோழன்** *kirumi-kaṇḍa-cōḻaṉ,* பெ.(n.) சோழ மன்னன்; *Cōḻa* king.

[இவன் கூரத்தாழ்வார் கண்ணைப் பிடுங்கினவன் என்பர். ஆனால் வைணவர்கள், கூரத்தாழ்வாரே இவரைப் பார்க்கக் கூடாது எனத் தம் கண்ணைப் பிடுங்கி இவன் மேல் எறிந்தார். எனவே இவனுக்குக் கிருமி நோய் உண்டாயிற்று. அதனால் கிருமிகண்டசோழன் என்ற பெயர் பெற்றான் என்பர் (அபி.சிந்.).]

**கிருமிகொல்லி** *kirumi-kolli,* பெ.(n.) புழுக்கொல்லி; an agent either killing or rendering powerless the intestinal germs or parasites, *vermicide* (சா.அக.).

**த.வ. பூச்சிக்கொல்லி.**

*[கிருமி + கொல்லி.]*

*[Skt. krmi > த. கிருமி.]*

**கிருமிச்சத்துரு** *kirumi-c-catturu,* பெ.(n.) 1. பலாசு; Palas tree. 2. பலாசம் விதை; palas seed.

**த.வ. பூச்சிப்பகை.**

*[Skt. krmi+šatturu> த. கிருமிச்சத்துரு.]*

**கிருமிச்சுரம்** *kirumi-c-curam,* பெ.(n.) நுண்ணுயிரிகளால் உண்டாகும் காய்ச்சல் வகை (மூ.அ.); fever caused by worms.

**த.வ. நுண்ணு யிரிக்காய்ச்சல்.**

*[கிருமி+சுரம்]*

*[Skt. krmi > த. கிருமி.]*

**கிருமிச்சூலை** *kirumi-c-cūlai,* பெ.(n.) நுண்ணுயிரிகளால் உண்டாகும் சூலை நோய் வகை (மூ.அ.); gnawing pain caused by intestinal worms.

**த.வ. நுண்ணுயிரிவலி.**

*[கிருமி+சூலை.]*

*[Skt. krmi > த. கிருமி.]*

**கிருமிச்சொறி** *kirumi-c-cori,* பெ.(n.) நுண்ணுயிர்களால் உண்டாகும் சொறி நோய் வகை (மூ.அ.); itching caused by worms.

**த.வ. நுண்ணுயிரிசொறி.**

*[கிருமி+சொறி.]*

*[Skt. krmi > த. கிருமி.]*

**கிருமிசத்துரு** *kirumi-šatturu,* பெ.(n.) 1. புரசம் விதை; seed of palaus tree. 2. பலாசம் விதை; seed of portia tree. 3. ஆடு தின்னாப் பாலை; worm-killer, woody. 4. ஒரு பூடு; a plant (சா.அக.).

**த.வ. நுண்ணுயிரிப்பகை.**

*[Skt. krmi+šatturu > த. கிருமிசத்துரு.]*

**கிருமிநாசம்** *kirumi-nāšam,* பெ.(n.) 1. குராசானியோமம் (மலை.); black henbane. 2. பலாசம் விதை (மூ.அ.); Palas seed. 3. கொடிவகை; bitter luffa. *"சுரையொடு பேய்ப்பீர்க்குஞ் சுமந்த" (பு. வெ. 3, 25).* 4. புழுக்கொல்லிப்பூடு; worm killer.

*[கிருமி+நாசம்.]*

*[Skt. krmi > த. கிருமி.]*

**கிருமிநாசி** *kirumi-nāši,* பெ.(n.) செடி வகை (மலை.); tinnevelly senna.

*[கிருமி+நாசி.]*

*[Skt. krmi > த. கிருமி.]*

**கிருமிநாசினி** *kirumi-nāšini,* பெ.(n.) தீமை விளைவிக்கும் நுண்ணுயிரிகளைக் கொல்லப் பயன்படும் திண்ம அல்லது நீர்ம வடிவில் இருக்கும் மருந்து; germicide; antiseptic.

*[கிருமி+நாசினி.]*

*[Skt. krmi > த. கிருமி.]*

**கிருமிநிசயம்** *kirumi-nišayam,* பெ.(n.) எட்டு வகையான அரச நிரயங்களுள் ஒன்று (சி.போ.பா.2, 3, 1); a hell, one of eight *irāšanaragam.*

*[Skt. krmi+nišaya > த. கிருமிநிசயம்.]*

**கிருமிமலடு** *kirumi-maladu,* பெ.(n.) கருப்பையில் புழுக்கள் உண்டாவதால் உண்டாகும் மலட்டுத் தன்மை (மூ.அ.); sterility from animalculae in the uterus.

*[கிருமி+மலடு.]*

*[Skt. krmi > த. கிருமி.]*

**கிருமியுணா** *kirumiyuṇā,* பெ.(n.) ஒரு வகை நிரயம்; a hell where souls in the form of worms eat and are eaten by worms. *"கிருமியுணா வெனுநரகந் தனிற்புகுந்து— கிருமிகளுக்குணவாகித் தாமுமவைதின்று" (சேதுபு.தனுக்.12).*

**த.வ. புழுநிரயம்.**

*[கிருமி+உணா.]*

*[Skt. krmi > த. கிருமி.]*

**கிருமியோமம்** *kirumi-yōmam,* பெ.(n.) மருந்து வகை; a vermifuge containing omum.

*[கிருமி+ஓமம்.]*

*[**Skt.** krmi > த. கிருமி.]*

**கிருமிரோகம்** *kirumi-rōgam,* பெ.(n.) நாக்குப் பூச்சியை உண்டாக்கும் நோய் (பைஷஜ.231); worms, as a disease.

**த.வ. பூச்சிநோய்.**

*[**Skt.** krmi+rōga> த. கிருமிரோகம்.]*

**கிருமிவை-த்தல்** *kirumi-vai,* செ.கு.வி.(v.i.) புண்ணில் புழு உண்டாதல்; to breed maggots, as in a sore.

**த.வ. புழுப்புண்.**

*[கிருமி+வை-,]*

*[**Skt.** krmi > த. கிருமி.]*

**கிருமுதலாடை** *kirumudalāḍai,* பெ.(n.) பொடுதலை; creeping vervain (சா.அக.).

**கிருவைசூரி** *kiruvai-šuri,* பெ.(n.) தட்டம்மை; measles; flat variola (சா.அக.).

**த.வ. பெரியம்மை.**

*[கிரு + வைசூரி.]*

**கிருனம்பீரம்** *kirunambīram,* பெ.(n.) 1. வெங்காயம்; onion. 2. வெள்ளைப்பூண்டு; garlic (சா.அக.).

**த.வ. ஈருள்ளி.**

*[கிருனம் + பீரம்.]*



**கிரேணு** *kirēṉu,* பெ.(n.) சிவபத்திமை கொண்ட பெண்; pious of *šivā.*

*[இவள் மக்கட்பேறு வேண்டித் தவம் செய்து கங்கையைக் குழந்தையாக அடைந்தாள். அக்குழந்தையை வியிரமலையரசன் வளர்த்தான். பின் அக்குழந்தை சிவனை மணந்தது (அபி.சிந்.).]*

**கிரேதம்** *kirēdam,* பெ.(n.) **கிருதயுகம்** பார்க்க; see *kiruda-yugam.*

**த.வ. கிரேதை.**

*[**Skt.** krta > த. கிரேதம்.]*

**கிரேதயுகம்** *kirēda-yugam,* பெ.(n.) **கிருதயுகம்** பார்க்க; see *kiruda-yugam.*

*[**Skt.** krta > த. கிரேதம்.]*

**கிரேந்தி** *kirēndi,* பெ.(n.) ஏலத்தோல் (மூ.அ.); cardamom husk.

**த.வ. ஏலக்காய்த்தோல்.**

**கிரேனிடல்** *kirēṉiḍal,* பெ.(n.) அஞ்சி ஒடுங்குதற் குறிப்பு; expr. signifying startling, standing aghast, being panic-stricken.

**கிரோ** *kirō,* பெ.(n.) அடைமானம் (P.T.L.); pledge, mortgage, pawn.

*[**Persn.** girwī > த. கிரோ.]*

**கிரௌஞ்சத்துவீபம்** *kirauñja-t-tuvībam,* பெ.(n.) **கிரவுஞ்சத்தீவு** பார்க்க; see *kiravuñja-t-tīvu.*

*[**Skt.** krauñca+tuviba>த.கிரௌஞ்சத்து வீபம்.]*

**கிரௌஞ்சம்** *kirauñjam,* பெ.(n.) **கிரவுஞ்சம்** பார்க்க; see *kiravuñjam.*

*[**Skt.** krauñca > த. கிரெஞ்சம்.]*

**கிரௌஞ்சம்** *kirauñjam,* பெ.(n.) 1. ஒரு பட்டணம்; a city. 2. **கிரவுஞ்சன்** பார்க்க; see *kiravuñjaṉ.*

1. இது எமபுரிக்குச் செல்லும் வழியில் உள்ளது. இந்த இடத்திற்கு உடலை நீங்கிய ஆதன் சேர ஆறு மாதம் ஆகும் (அபி.சிந்.)

**கிரௌஞ்சன்** *kirauñjaṉ,* பெ.(n.) தேவர் உலகத்தவன்; heavenly men.

*சௌபரி முனிவரின் மனைவி மனோமயை தனியாக இருக்கும் போது அவன் அவளின் கையைப் பிடித்தான். இதைக் கண்ட முனிவன் அவனைப் பெருச்சாளியாகுமாறு தீமொழி கூறினான். பின் இவனது வேண்டுதலால் பிள்ளையாருக்கு வாகனமாக அருள் புரிந்தார் (அபி.சிந்.).*

**கிரௌஞ்சாதனம்** *kirauñjādaṉam,* பெ.(n.) 1. தாமரை நூல்; the 0. fibres of the stalk of the lotus. 2. திப்பிலி; long pepper. 3. தாமரைக் கொட்டை; the seed of the lotus (சா.அக.).

**கிரௌரியம்** *kirauriyam,* பெ.(n.) கொடுமை; cruelty, hard-heartedness.

*[Skt. kraurya > த. கிரௌரியம்.]*

**கில்–தல் (கிற்றல்)** *kil-,* செ.கு.வி.(v.i.) சம்மதித்தல்; to agree, consent. *'இறைவி கிற்குமே' (தக்கயாகப்.57).*

**கில்பிச(ஷ)ம்** *kilbišam,* பெ.(n.) இரக்கம் (பாவம்) (கோயிலொ.45); sin.

*[Skt. kilbiša > த. கில்பிச(ஷ)ம்.]*

**கில்லத்து** *killattu,* பெ.(n.) பெரியோர் அல்லது மன்னர்களால் பரிசாகக் கொடுக்கப்படும் ஆடை; robe of honour conferred by the nobility or royalty.

*[Ar. Khilat > த. கில்லத்து.]*

**கில்லேதார்** *killēdār,* பெ.(n.) கோட்டை உசாவல் (விசாரணை) தலைவன்; commandant of a fort.

*[U. qiladār > த. கில்லேதார்.]*

**கில** *kila,* பெ.(n.) எதிர்பார்த்தல் முதலிய பொருளையுணர்த்தும் வடமொழி இடைச் சொல்; a sanskrit word signifying expectation, probability, etc. *"சுவாகதங் கிலவென்று" (திருவிளை.இரசவாத.15).*

*[Port. kila > த. கில.]*

**கிலம்** *kilam,* பெ.(n.) 1. சிதைகை; that which is ruined, dilapidated, laid waste, destroyed. *"வீடு கிலமாய்விட்டது".* 2. இழிவு (சூடா.); that which is insufficient; trifle.

**த.வ. பழுது.**

*[Skt. khila > த. கிலம்.]*

**கிலவம்** *kilavam,* பெ.(n.) கழுத்து (யாழ். அக.); neck.

**கிலாசம்** *kilāšam,* பெ.(n.) 1. சதையை மூடிக்கொண்டிருக்கும் ஏழு வகைத் தோல்களில் ஒன்று; one of the seven layers of the skin covering the muscles of the body. 2. தேமல்; a form of skin disease.

**கிலாசு** *kilāšu,* பெ.(n.) கப்பல் தொழிலாளி; lascar; Indian sailor.

**த.வ. மாலுமி.**

*[U. khalāsu > த. கிலாசு.]*

**கிலாதன்** *kilātaṉ,* பெ.(n.) இரண்யகசிபுவின் குமரன்; son of *Iraṇyakašibu.*

இவன் மனைவி தெமனி. மகன் வாதாபி. பிரகலாதனின் தம்பியான இவனுக்கு அனுக்கிலாதன் எனவும் பெயருண்டு (அபி.சிந்.).

**கிலாபத்து** *kilābattu,* பெ.(n.) இசுலாம் மதத்தின் தலைமைப் பதவி; caliphate.

*[Ar. khilāfat > த. கிலாபத்து.]*

**கிலாம்** *kilām,* பெ.(n.) சினம்; indignation, vexation. *"கிலாந்தோற்றச் சொல்லுகிறாள்" (ஈடு, 6, 1, 1).*

**கிலிகை** *kiligai,* பெ.(n.) சிற்றெலி; small rat (சா.அக.).

**த.வ. சுண்டெலி.**

**கிலிகோலம்** *kili-kōlam,* பெ.(n.) சீர்கேடு; slovenliness, disorder, confusion.

**கிலிசம்பறை** *kilišam-paṟai,* பெ.(n.) **கிலிகோலம்** பார்க்க; see *kili-kōlam.*

**கிலிசைகெட்ட** *kilišai-keṭṭa,* பெ.எ.(adj.) வேலையற்ற; idle, unemployed, good for nothing.

**கிலிட்டம்** *kiliṭṭam,* பெ.(n.) எளிதில் பொருள் விளங்காமையாகிய குற்றம்; obscurity of a passage, unintelligibility.

*[Skt. klišṭa > த. கிலிட்டம்.]*

**கிலியம்பறை** *kiliyam-paṟai,* பெ.(n.) **கிலிசம்பறை** பார்க்க; see *kilišam-paṟai.*

**கிலீடகம்** *kiliḍagam,* பெ.(n.) 1. ஒரு பூடு; a plant. 2. ஒரு நச்சுக் கிழங்குடைய பூடு; a plant with a poisonous bulbous root (சா.அக.).

**கிலிபம்** *kilibam,* பெ.(n.) ஆண், பெண் அல்லாதது (அலி) (உரி.நி.); person or animal that is neither male nor female, hermaphrodite.

த.வ. பேடு.

*[Skt. kliba > த. கிலிபம்.]*

**கிலுசிதம்** *kilušitam,* பெ.(n.) வறுமை (யாழ்.அக.); poverty.

*[Skt. klišita > த. கிலுசிதம்.]*

**கிலுப்தம்** *kilupdam,* பெ.(n.) எப்பொழுதும்; readiness, settled order, certainty.

*[Skt. klpta > த. கிலுப்தம்.]*

**கிலேசம்** *kilēšam,* பெ.(n.) துயர்; affliction, distress, pain, anguish, sorrow, grief.

*[Skt. klēša > த. கிலேசம்.]*

**கிலேசி-த்தல்** *kilēši-,* 11 செ.கு.வி.(v.i.) துன்பப்படுதல்; to be in anguish, distress, to be afflicted.

*[Skt. klēšu > த. கிலேசி-த்தல்.]*

**கிலேசு** *kilēšu,* பெ.(n.) கீழ்மை (யாழ்.அக.); lowness.

**கிலேதம்** *kilēdam,* பெ.(n.) உடலின் மேல் இடும் மருந்துநீர் (இங்.வை.21); lotion.

த.வ. நீர்மமருந்து.

*[Skt. klēda > த. கிலேதம்.]*

**கிளப்** *kiḷap,* பெ.(n.) 1. உணவகம்; restaurant; hotel. 2. பொழுதுபோக்காகக் கூடும் இடம்; recreation club. *"கிளப்பில் சீட்டு விளையாடலாம்" (க்ரியா.).*

த.வ. சாப்பாட்டிடம்.

**கிளப்போசு** *kiḷa-p-pōšu,* பெ.(n.) சோற்றுக்கடை; உணவகம்; a restaurant, an eating-house, a hotel.

*[E. Club > த. கிளப்போசு.]*

**கிறாக்கி** *kiṟakki,* பெ.(n.) விலையேற்றம்; high price.

*[U. khiragi > த. கிறாக்கி.]*

**கிறாக்கிபண்ணு-தல்** *kirākki-paṉṉu-,* செ.கு.வி. (v.i.) அருமைப்படுத்திக் கொள்ளுதல்; to affect reserve.

**கிறிசு** *kiṟišu,* பெ.(n.) **கிரிசுக்கத்தி** பார்க்க; see *kirišu-k-katti.*

*[Malay. kris > த. கிறிசு.]*

**கிறித்து** *kiṟittu,* பெ.(n.) இயேசு கிறித்து; christ, the messiah.

*[Gr. kristos > த. கிறித்து.]*

**கிறித்துமசு** *kiṟittumašu,* பெ.(n.) இயேசு பிறந்த நாள்; the day who birth in jesus.

*[E. Chrištmas > த. கிறித்துமசு.]*

**கிறித்துமார்க்கம்** *kiṟittu-mārkkam,* பெ.(n.) கிறித்துவ மதம்; christianity.

*[கிறித்து + மார்க்கம்.]*

*[Gr. kristos> த. கிறித்து.]*

**கின்னரகண்டி** *kiṉṉara-gaṇḍi,* பெ.(n.) **கின்னரகீதம்** பார்க்க; see *kiṉṉara-gidam.*

*[Skt. kinnara+kaṇṭa> த. கின்னரகண்டி.]*

**கின்னரகீதம்** *kiṉṉara-gidam,* பெ.(n.) யாழ் இசைக் கலைஞ(கின்னர)ர்களால் பாடப்படும் இசை; the music of the celestial minstrels. *"கின்னரகீதத்துக் கேள்வி மாந்தர்" (பெருங்.உஞ்சைக்.37, 108).*

*[Skt. kiṉṉara+gita >த. கின்னரகீதம்.]*

**கினாரா** *kiṉārā,* பெ.(n.) ஆறு முதலியவற்றின் கரை; side, bank, shore.

*[U. kinārā > த. கினாரா.]*

**கீகசம்** *kigašam,* பெ.(n.) உடலில் எலும்பை ஒட்டியுள்ள தசை; flesh on the bone. *"வசைகீகசமென் றிருவகையாய்த் துன்னும் புலவு" (சேதுபு. வேதாள.30).*

*[Skt. Kikaša > த. கீகசம்.]*

**கீசதாருகம்** *kišatārugam,* பெ.(n.) மூங்கில் மரம்; bamboo tree (சா.அக.).

**கீசபாதிகம்** *kiša-pātigam,* பெ.(n.) நீலிச்செடி; Indigo plant (சா.அக.).

**கீசவல்லி** *kiša-valli,* பெ.(n.) **கீசபர்ணி** பார்க்க; see *kiša-parṇi* (சா.அக.).

**கீசா** *kišā,* பெ.(n.) பொய் (யாழ்.அக.); falsehood.

**கிசுதி** *kiśudi,* பெ.(n.) இசைக் கருவிகளுள் ஒன்றாகிய வீணை வகை (பரத.ஒழிபி.15); a kind of lute.



**கீடதந்தம்** *kiḍa-tandam,* பெ.(n.) நச்சுப் பற்களை உடைய விலங்கு; creature having venomous teeth (சா.அக.).

*[கீடம்+தந்தம்.]*

*[Skt. kidam > த. கீடம்.]*

**கீதகோவிந்தம்** *kita-kōvindam,* பெ.(n.) ஒரு வடநூல்; வடமொழி இசை நூல்; a sanskrit music book (த.சொ.அக.).

*[Skt. gita+kōvinda> த. கீதகோவிந்தம்.]*

**கீதசாத்திரம்** *kida-śāttiram,* பெ.(n.) இசை குறித்த நூல்; sciene of music.

*[Skt. gita+ > த. கீதசாத்திரம்.]*

**கீதசாலை** *kida-śālai,* பெ.(n.) இசை பயிலுங் கூடம்; hall where music is taught; music hall. *"கீதசாலையுங் கேள்விப்பந்தரும்" (பெருங்.இலாவாண.7, 131).*

**த.வ. இசைக்கல்லூரி.**

*[கீதம்+சாலை.]*

*[Skt. gitā > த. கீதம்.]*

**கீதநடை** *kita-naḍai,* பெ.(n.) நான்கு வகை மறைகளுள் ஒன்றாகிய சாம மறை (வேதம்) (திவா.); *sāmavēda*, as composed of chants.

*[கீதம்+நடை.]*

*[Skt. gita>த.கீதம்.]*

**கீதம்**[1] *kidam,* பெ.(n.) 1. இசைப்பாட்டு; song, chant. *"மங்கையரமுதகீதம்" (கம்பரா. கார்முக.40).* 2. இசை; melody, music. *"கீதமினிய குயிலே" (திருவாச.18, 1).* 3. வண்டு (திவா.); beetle, bee.

**த.வ. இசைப்பாடல்.**

*[Skt. gita > த. கீதம்.]*

**கீதம்**[2] *kitam,* பெ.(n.) 1. நெய்; ghee. 2. பழமை; oldness (த.சொ.அக.).

**கீதவம்** *kitavam,* பெ.(n.) ஊமத்தஞ் செடி; thorn apple tree.

**த.வ. உன்மத்தஞ்செடி**



**கீதவீதி** *kita-viti,* பெ.(n.) இசை ஒலி வருகின்ற வழி; avenue through which music sounds proceed. *"கனிந்த கீதவீதியே..... தடங்கணார்......எய்தினார்" (சீவக.2039).*

*[கீதம்+வீதி.]*

*[Skt. gita > த. கீதம்.]*

**கீதவுறுப்பு** *kida-v-uṟuppu,* பெ.(n.) இசைப்பாட்டின் கூறு (சிலப்.3, 150, உரை); limbs or component elements of a musical piece, which are four.

*[கீதம்+உறுப்பு.]*

*[Skt. gita>த.கீதம்.]*

அவையாவன; உக்கிரம், துருவை, ஆபோகம், பிரகலை.

**கீதவேதம்** *kita-vēdam,* பெ.(n.) நான்கு வகை மறைகளில் ஒன்றாகிய சாமமறை (வேதம்); *sāmavēda*, as composed of chants.

*[கீதம்+வேதம்.]*

*[Skt. gita>த.கீதம்.]*

**கீதாங்கம்** *kidāṅgam,* பெ.(n.) இசைக்கு வாசிக்கும் வாச்சியக்கூறு (சிலப்.3, 14, உரை); instrumental accompaniment to vocal music.

*[Skt. gita+aṅga > த. கீதாங்கம்.]*

**கீதாநுகம்** *kitānugam,* பெ.(n.) கூத்து வேறுபாடுகளுக்கிசைந்த இசைக்கூறுகளில் ஒன்று (சிலப்.3:14, அரும்.); music classification which accomodate with different pantomince (த.சொ.அக.).

**கீதானுகம்** *kidānugam,* பெ.(n.) **கீதாங்கம்** பார்க்க; see *kidāṅgam.*

*[Skt. gita+anu-ga > த. கீதானுகம்.]*

**கீதி**[1] *kiti,* பெ.(n.) பாடகன் (யாழ்.அக.); musician.

*[Skt.gita> த. கீதி.]*

**கீதி**[2] *kidi,* பெ.(n.) 1. பாடுகை; singing, chanting. 2. பாட்டு; song.

*[Skt. giti > த. கீதி.]*

**கீதி**[3] *kidi,* பெ.(n.) மரவகை; coromandal ebony of mysore.

**கீதை** *kidai,* பெ.(n.) 1. நல்ல அறங்களைக் கூறும் தெய்வப் பாடல்; sacred song or poem containing religious doctrines, by an inspired sage. 2. அருச்சுனன் பொருட்டுக் கண்ணன் போர்க்களத்தில் அறிவுரை கூறிய மொழிகள் உடையதும், 18 பகுதிகள் கொண்டதுமான மகாபாரதத்தில் அடங்கியதுமான வடமொழி அறிவு (ஞான) நூல்; a section of 18 chapters in the M*ahābārata*, containing the sacred instruction of K*ršna* to A*rjuna*. *"கண்ணன்..... ஸ்ரீ கீதையருளிச் செய்து" (மதுரைக்.753, உரை).*

*[Skt. gita > த. கீதை.]*

**கீயாக்கணக்கு** *kiyā-k-kaṇakku,* பெ.(n.) வடமொழியிலுள்ள கூட்டு மெய் யெழுத்துகளைக் குறித்து கூறும் நூல்; work dealing with conjunct consonants in sanskrit.

**கீர்**[1] *kir,* பெ.(n.) 1. ஒரொலிக்குறிப்பு; onom sound. 2. சொல்; word (த.சொ.அக.).

**கீர்**[2] *kir,* பெ.(n.) பாட்டு; verse, song. *"கீர்என்று பாட்டாய் அதுக்கு நிறம் சிவப்பாகி" (திவ்.பெரியாழ்.1, 5, அவ. பக்.86).*

**கீர்**[3] *kir,* பெ.(n.) பாயச வகை; a semi-liquid food prepared with milk..

த.வ. கன்னலமுது.

**கீர்த்தனம்** *kirttaṇam,* பெ. (n.) **கீர்த்தனை** பார்க்க; see *kirttaṇai.*

*[Skt. kirtaṇa > த. கீர்த்தனம்.]*

**கீர்த்தனை** *kirttaṇai,* பெ.(n.) 1. இசைப்பாட்டு; song, psalm, hymn. 2. புகழ்ச்சி; praise.

த.வ. இசைப்பாடல்.

*[Skt. kirtaṇā > த. கீர்த்தனை.]*

**கீர்த்தி–த்தல்** *kirtti,* 11 செ.கு.வி.(v.i.) புகழுதல்; to praise, extol. *"தன்சொல்லாற் றான்றன்னைக் கீர்த்தித்த மாயன்" (திவ். திருவாய்.7, 9, 2).*

*[Skt. kirti > த. கீர்த்தி–த்தல்.]*

**கீர்த்தி** *kirtti,* பெ.(n.) புகழ்; fame, celebrity, renown, distinction, glory. *"விண்சுமந்த கீர்த்தி வியன்மண் டலத்தீசன்" (திருவாச.8, 8).*

த.வ. மிகுபுகழ்.

*[Skt. kirti > த. கீர்த்தி.]*

**கீர்த்தித்தானம்** *kirtti-t-tāṇam,* பெ.(n.) பிறப்பு நல்லோரை (சங்.அக.); ascendant, house of one's birth.

*[Skt. kirti+tāna +> த. கீர்த்தித்தானம்.]*

**கீர்த்திப்பிரதாபம்** *kirtti-p-piradābam,* பெ.(n.) 1. புகழும் ஆற்றலும்; fame and splendour. 2. மிகு புகழ்; lustre of fame, glory, renown.

*[Skt.kirti+pra+tāpa>த. கீர்த்திப்பிரதாபம்.]*

**கீர்த்திபூடணபாண்டியன்** *kirtti-pūḍaṇa-pāṇḍiaṇ,* பெ. (n.) அதுலகீர்த்தி பாண்டியனின் மகன்; son of *atula-kirtti-pāṇḍiyaṇ.*

**கீர்த்திமதி** *kirtatimati,* பெ.(n.) மன்னர் குலத்தைச் சேர்ந்த சுகனின் பெண்; daughter of king *šugaṇ* (அபி.சிந்.).

**கீர்த்திமான்[1]** *kirttimāṉ,* பெ.(n.) வசுதேவருக்குத் தேவகியிடம் பிறந்த குமரன்; son of *vašu-tēvā* and *tēvagi*(அபி.சிந்.).

**கீர்த்திமான்[2]** *kirttimāṉ,* பெ.(n.) புகழ் பெற்றவன்; celebrated person, illustrious personage.

*[Skt. kirti-mān > த. கீர்த்திமான்.]*

**கீர்த்திலட்சுமி** *kirtti-latcumi,* பெ.(n.) புகழாகிய திரு; fame personified as *lakšmi.*

*[Skt. kirtti+lašmi > த. கீர்த்திலட்சுமி.]*

**கீர்த்திவர்த்தனசோழன்** *kirtti-varttaṉa-cōḻaṉ,* பெ.(n.) ஒரு சோழ அரசன்; a *Cōḻā* king.

**கீர்வாணம்** *kirvāṇam,* பெ.(n.) வானுலகில் வாழும் தேவர்கள் பேசக்கூடியதாகக் கருதப்படும் வடமொழி; *šanškrit,* believed as the language of the gods.

*[Skt. gir-vāṇa > த. கீர்வாணம்.]*

**கீரங்கீரனார்** *kiraṅ-kiraṉār,* பெ.(n.) புலவர் கீரனின் மகனாகிய கீரனார்; son of *kiraṉ.*

**கீலக** *kilaga,* பெ.(n.) ஆண்டுகள் அறுபதில் நாற்பத்திரண்டாம் ஆண்டு (பெரியவரு.); the 42nd year of the Indian cycle of 60 years.

**கீலகம்** *kilagam,* பெ. (n.) கலகம்; intrigue, trouble. *'ஏவர் கீலகத்தினால்.... மெத்தவுங் காய்கிறாய்' (சீவக்.பிரபந்.சரபேந்திர.குற.17, 7).*

*[Skt. kilaka > த. கீலகம்.]*

**கீலகை** *kilagai,* பெ.(n.) கீழ்மை (யாழ்.அக.); lowness.

**கீலம்கீலமாக** *kilam-kilamāga,* வி.அ. (adv.) துண்டு துண்டாக; into pieces. *கீலம் கீலமாகக் கிழித்த ஓலை.*

*[Skt. kila+kila> த. கீலம்கீலமாக.]*

**குகமுனிவர்** *kuga-muṉivar,* பெ.(n.) ஒரு இருடி; a saint.

**குகர்த்தமன்** *kugarttamaṉ,* பெ.(n.) ஒரு மன்னன்; a king.

**குகனேரியப்பமுதலியார்** *kugaṉēriyappa-mudaliyār,* பெ.(n.) தமிழில் உபதேச காண்டம் பாடிய ஆசிரியர்; the author of the Tamil *upadēšakaṇḍam.*

**குகூகண்டம்** *kukū-kaṇḍam,* பெ. (n.) குயில் (யாழ்.அக.); the Indian cuckoo.

*[Skt. kuhū-kaṉtha > த. குகூகண்டம்.]*

**குசலப்பிரசினம்** *kušala-p-piraširam,* பெ. (n.) நலம் குறித்து உசாவுதல்; friendly enquiry after a person's welfare.

**த.வ. நன்னலம் கேட்டல்.**

**குசலர்** *kušalar,* பெ.(n.) 1. அறிஞர்; man of knowledge, wiseman. 2. வல்லோர்; skilful person, expert. *"அறநூலிற் குசலராகிய மாதவர்" (சேதுபு.இலக்கும்.21) (த.சொ.அக.).*

**த.வ. திறவோர்.**

**குசன்** *kušaṉ,* பெ. (n.) செவ்வாய்; the planet Mars.

**த.வ. செங்கோள்.**

*[Skt. ku-ja > த. குசன்.]*

**குசாமத்தி** *kušāmatti,* பெ.(n.) முகமன் (முகஸ்துதி); flattery, coaxing, wheedling. *"குசாமத்தித்தனம்".*

*[U. khusāmad > த. குசாமத்தி.]*

**குசாரத்து** *kušārattu.* பெ.(n.) கைவழி; through a person.

*[U. guzāra > த. குசாரத்து.]*

**குசிகன்** *kušigaṉ,* பெ.(n.) விசுவாமித்திரனின் தந்தையாகிய ஒரு முனிவன்; a sage, the father of *Višuvāmitra.*

*[Skt. kušika > த. குசிகன்.]*

**குசிராத்தி** *kuširātti,* பெ.(n.) கூர்ச்சர நாடு; *kūrccaranāḍu.*

**த.வ. குச்சரம்.**

**குசும்பாவிதை** *kušumbā-vitai,* பெ.(n.) குசும்ப மரத்தின் விதை; seed of false saffron tree.

*[குசும்பா + விதை.]*

**குசுமை** *kušumai,* பெ.(n.) சுதன்மன் என்னும் மறையோனின் இளைய மனைவி; younger wife of *šutaṉmaṉ.*

**குடீரகம்** *kuḍiragam,* பெ.(n.) **குடீரம்** பார்க்க; see *kuḍiragam.* *"குறியுறுஞ் செபத்தர் மேவுங் குடீரகங் குலவி" (வேதாரணிய. பலபத்.21).*

*[**Skt.** kuṭiraka > த. குடீரகம்.]*

**குடீரம்** *kuḍiram,* பெ.(n.) 1. குடிசை; hut, cottage. *"படகுடீரபாவம்" (த.நி.போ.115).* 2. இலைக்குடில் (பர்ணசாலை); hermitage.

*[**Skt.** kuṭira > த. குடீரம்.]*

**குணாகுணம்** *kuṇākuṇam,* பெ.(n.) நோயை நீக்கமுடியும் தன்மை அல்லது நீக்க முடியாத் தன்மை (யாழ்.அக.); curability or otherwise of disease.

*[**Skt.** guṇa+aguṇa > த. குணாகுணம்.]*

**குணி** *kuṇi,* பெ.(n.) வில்; bow (யாழ்.அக.).

*[**Skt.** guṇin > த. குணி.]*

**குத்திரசங்கம்** *kuttira-šaṅgam,* பெ.(n.) ஊமச்சி (நாமதீப.), நத்தை; snail.

**குத்தினி** *kuttiṇi,* பெ.(n.) ஒருவகைப் பட்டுச்சீலை; a kind of striped silk.

*[**U.** khutnī >**Skt.** khutani> த. குத்தினி.]*

**குதப்பிரம்சம்** *kuda-p-piramšam,* பெ.(n.) அண்டு தள்ளுகை (பைஷஜ.232); prolapsus.

**குதாம்** *kudām,* பெ.(n.) பொருட்களைப் பாதுகாத்து சேர்த்து வைக்கும் இடம்; godown.

த.வ. பண்டகசாலை, கிடங்கு.

*[**U.** gudām > த. குதாம்.]*

**குதுகம்** *kutugam,* பெ.(n.) விருப்பம் (யாழ்.அக.); desire, longing.

*[**Skt.** kautuka > த. குதுகம்.]*

**குதூகலம்** *kutūkalam,* பெ.(n.) அகக்களிப்பு; delight, rapture.

த.வ. அகமகிழ்வு.

*[**Skt.** kutūhala > த. குதூகலம்.]*

**குதோதரி** *kutōdari,* பெ.(n.) அரக்கர் இனப் பெண்; anthropomorlphous demoness.

**குந்தமர்** *kundamar,* பெ.(n.) ஓர் இருடி; a saint.

**குந்தலம்** *kundalam,* பெ.(n.) வடநாட்டில் பல்லாரியில் உள்ள நாடு; the city in North *Pallāri* (அபி.சிந்.).

**குந்தாலம்** *kundālam,* பெ.(n.) புள் வகை (யாழ்.அக.).; a kind of bird.

*[**Skt.** guṇdala > த. குந்தாலம்.]*

**குந்திரம்** *kundiram,* பெ.(n.) புல்வகை (யாழ்.அக.); a kind of grass.

*[**Skt.** gundra > த. குந்திரம்.]*

**குநகவெலி** *kunaga-v-eli,* பெ.(n.) மரக்காலைப் போல் உடல் உள்ள ஒரு வகை எலி; a species of rat with a cylinderical body resembling a wooden measure.

**குநகி** *kunagi,* பெ.(n.) கெட்டுப் போன நகத்தை உடையவன்; one whose nails are rotten. *"சிந்திய குநகியாவான் செம் பொனைத் திருடினானும்" (சிவதரு. சுவர்க்க நரகசேட.10).*

*[**Skt.** ku-nakhin > த. குநகி.]*

**குப்தம்** *kuptam,* பெ.(n.) பூனைக்காலி; cowhage (சா.அக.).



**குப்தி** *kupti,* பெ.(n.) மூன்று வகை செயல்களின் அடக்கம்; restraint, as in thought, speech or deed.

*[**Skt.** gupti > த. குப்தி.]*

**குபாகும்பர்** *kupā-kumpar,* பெ.(n.) மார்வாட நாட்டுக் குயவர்; potter in *Mārvā* city.

**குபாடி** *kupāḍi,* பெ.(n.) இழிவான சொற்களைப் பேசுபவள்; woman using foul language. *'நகையால்மய லெழுப்புங் குபாடிகள்' (நூற்றெட்டுத்.திருப்பு.15).*

*[**Skt.** ku-bhāšiṇī > த. குபாடி.]*

**குபாண்டன்** *kupāṇḍaṉ,* பெ. (n.) பாணாசுரனின் அமைச்சன்; minister of P*āṇāśuraṉ* (அபி.சிந்.).

**குபார்** *kubār,* பெ. (n.) 1. கூச்சலிடுகை; outcry, complaint. 2. ஒவ்வாமையால் ஏற்படும் வாந்தி பேதி; cholera.

*[U. gubār > த. குபார்.]*

**குபாரா** *kubārā,* பெ.(n.) குபார் பார்க்க; see *kubār.*

**குபிகை** *kubigai,* பெ.(n.) 1. எள்; sesamum seed. 2. நல்லெண்ணெய்; gingelly oil (சா.அக.).

**குபிதன்** *kubidaṉ,* பெ. (n.) சினங் கொண்டவன்; angry man. *"இகழ்ந்திட வவன் குபிதனாய்" (உத்தரரா. வரையெடு.67).*

*[Skt. kupita > த. குபிதன்.]*

**குபிலன்** *kubilaṉ,* பெ.(n.) அரசன் (யாழ். அக.); king.

*[Skt. gupila > த. குபிலன்.]*

**குபினன்** *kubiṉaṉ,* பெ.(n.) வலைஞன் (யாழ்.அக.); fisherman.

த.வ. மீனவன்.

*[Skt. kupinin > த. குபினன்.]*

**குபினி** *kubiṉi,* பெ.(n.) மீன் பிடிக்கும் வலை வகை (யாழ்.அக.); a kind of fishing net.

*[Skt. kupini > த. குபினி.]*

**குபுர்** *kubur,* பெ.(n.) நம்பிக்கையின்மை; disbelief. 'குபுரான காரியம் செய்தான்' (முகம்மதிய).

*[Arab. kufr > த. குபுர்.]*

**கும்பகாரி** *kumpakāri,* பெ.(n.) 1. குயத்தி; potterwoman. 2. கண்ணிலிடும் மை வகை; a kind of collyrium. 3. செம்பாடாணம் என்னும் செய்ந்நஞ்சு வகை; a mineral poison.

*[Skt. kumbha-kāri > த. கும்பகாரி.]*

**கும்பதாசி** *kumbatāsi,* பெ.(n.) 1. சங்கதூதி; procuress. 2. விலைமகள்; prostitute.

*[Skt. kumbha-dāsi > த. கும்பதாசி.]*

**கும்பம்** *kumbam,* பெ.(n.) ஒரு சிற்றூரின் காற்பங்கு அளவுள்ள ஊர் (சுக்கிரநீதி, 27); hamlet, one fourth the size of a *cirrūr.*

*[Skt. kumbha > த. கும்பம்.]*

**கும்பம்பாலை** *kumbam-pālai,* பெ.(n.) கோபுரம் முதலியவற்றின்மேல் வைக்கும் அணியழகுக் கலசம்; pitcher shaped finial as of a tower.

*[கும்பம் + பாலை.]*

*[Skt. kumba > த. கும்பம்.]*

**கும்பமுத்திரை** *kumba-muttirai,* பெ.(n.) முத்திரை வகை (சைவாநுட்வி.12); a hand-pose in worship.

*[கும்பம் + முத்திரை.]*

*[Skt. kumba > த. கும்பம்.]*

**கும்பரேகை** *kumba-rēkai,* பெ.(n.) கைவரிவகை (திருவாரூர். குற.Ms.); (palmistry) a line in palm of hand.

*[Skt. kumba+rēkha > த. கும்பரேகை.]*

**கும்பன்** *kumbaṉ,* பெ.(n.) 1. அரக்கன்; a raksasa. 2. வஞ்சகன்; libertine.

*[Skt. kumba > த. கும்பன்.]*

**கும்பானு** *kumpāṉu,* பெ.(n.) ஒரு அரக்கன்; a giant (அபி.சிந்.).

**கும்பி** *kumbi,* பெ.(n.) மட்பாண்டம் (யாழ்.அக.); the zodiacal sign Aquaries.

*[Skt. kumbhi > த. கும்பி.]*



**கும்பிலன்** *kumbilaṉ,* பெ.(n.) 1. திருடன்; house-breaker, theif. 2. மனைவியின் தம்பி; wife's brother, brother-in-law.

*[Skt. kumbhila > த. கும்பிலன்.]*

**கும்பீநசம்** *kumbīnasam,* பெ.(n.) பெரும் பாம்பு வகை (யாழ்.அக.); a kind of large serpent.

*[Skt. kumbhinasa > த. கும்பீநசம்.]*

**கும்பீலம்** *kumbīlam,* பெ.(n.) முதலை (யாழ்.அக.); crocodile.

*[Skt. kumbhila > த. கும்பீலம்.]*



**கும்பை**[1] *kumbai,* பெ.(n.) விலைமகள் (யாழ்.அக.); prostitute.

*[Skt. kumbha > த. கும்பை.]*

**கும்பை**[2] *kumbai,* பெ.(n.) ஓம குண்டத்தின் வேதிகை (யாழ்.அக.); enclosure round a sacrificial pit.

*[Skt. kumbā > த. கும்பை.]*

**கும்மக்கு** *kummakku,* பெ.(n.) உதவி; aid, help, assistance. *"குமுக்குப் பண்ண".*

*[U. kumak > த. கும்மக்கு.]*

**குமாத்தா** *kumāttā,* பெ.(n.) 1. செயலன்; agent, steward. 2. எழுத்தர் முதலிய வேலை பார்க்கும் கீழ்ப் பதவியிலிருப்பவன்; writer, clerk.

த.வ. எழுத்தர்.

*[U. gumāshta > குமாஸ்தா>த. குமாத்தா.]*

**குமாரகாலம்** *kumāra-kālam,* பெ.(n.) இளையபருவம்; the period of youth. *"குமார கால நிறைவுற வுய்த்து" (பெருங். நரவாண. 8, 44).*

த.வ. இளம்பருவம்.

*[குமார+காலம்.]*

*[Skt. kumāra > த. குமார(ம்).]*

**குமாரவிருத்தியை** *kumāraviruttiyai,* பெ.(n.) மருத்துவச்சி (யாழ்.அக.); mid-wife child's nurse.

*[Skt.kumāra-byrtyā>த.குமார விருத்தியை.]*

**குமுதம்** *kumutam,* பெ.(n.) கருப்பூரம் (யாழ்.அக.); camphor.

*[Skt. kumuda > த. குமுதம்.]*

**குமுர்தா** *kumurtā,* பெ.(n.) தட்சன் பெண்; daughter of *taṭcaṉ* (அபி.சிந்.).

**குமை** *kumai,* பெ.(n.) பவளம் முத்து நீங்கலாக மற்ற மணிகளை நிறுப்பதற்கு உதவும் சிறு எடை (சுக்கிர நீதி.188); smallest weight used in weighing precious stones other than corals and pearls being the weight of linseed.

*[Skt. ksumā > த. குமை.]*

**குய்யதீபகம்** *kuyyatībagam,* பெ.(n.) மின்மினி (யாழ்.அக.); fire-fly.

த.வ. எரிபூச்சி

*[Skt. guhyadipaka > த. குய்யதீபகம்.]*

**குய்யபாசிதம்** *kuyyabāsitam,* பெ.(n.) கமுக்கச் சொல் (யாழ்.அக.); secret speech.

*[Skt. guhya-bhāṣitā > த. குய்யபாசிதம்.]*

**குர்த்தனம்** *kurttaṉam,* பெ.(n.) கூத்து ஆடும் பொழுது செய்யும் உடற்செயல்களுள் ஒன்று (சிலப்.81, கீழ்க்குறிப்பு); a kind of gesticulation in dancing.

**குரணம்** *kuraṇam,* பெ.(n.) முயற்சி (யாழ்.அக.); effort, perseverance.

*[Skt. guraṇa > த. குரணம்.]*

**குருதுரியம்** *kuruturiyam,* பெ.(n.) முத்தாத்துமாவின் தூயநிலை; (phil.) the highest state attainable in the liberation of the soul.

*[Skt. guru+turīya > த. குருதுரியம்.]*

**குரக்கன்** *kurakkaṉ,* பெ.(n.) கேப்பை (மலை.); ragi, a millet, *Eleusine coracana.*

த.வ. கேழ்வரகு.

*[Sinh. kurrakan > த. குரக்கன்.]*

**குரதாரம்** *kuradāram,* பெ.(n.) எட்டு வகையான மாநிரயங்களுள் ஒன்று (சி.போ. பா.2, 3); a hell, one of eight *magā-naragam.*

**த.வ. பெருநிரயம்.**

**குராசானி** *kurācāṉi,* பெ.(n.) குரோசானி யோமம் (மூ.அ.) என்னும் ஓமம் விளையும் ஒருவகை மூலிகைச் செடி; black henbane.

**குராசானியோமம்** *kurāšāṉiyōmam,* பெ.(n.) குராசானி என்னும் ஓமம் உண்டாகும் ஒருவகை மூலிகைச் செடி; black henbane.

**குராசோ** *kurācō,* பெ.(n.) தென் அமெரிக்காவிலுள்ள ஒருவகைப் பறவை யினங்களைச் சார்ந்தது; the bird belonged to a South America's bird.

இது ஒரு வான்கோழி அளவில் இருக்கும் என்பர். குரோசா தீவில் வாழுகின்றதால் இப்பெயர் பெற்றது (அபி.சிந்.).

**குரான்** *kurāṉ,* பெ.(n.) முகமது நபி மூலமாக இறைவனால் அருளப்பட்டதாகக் கூறப்படும் மறை நூல்; *korāṉ* (க்ரியா.).

**குரூப்பியம்** *kurūpiyam,* பெ.(n.) துத்தநாகம்; zinc.

**குரூபகூபகம்** *kurūba-kūbagam,* பெ.(n.) வேறுபாட்டமைப்பு கொண்ட (விகாரப்பட்ட) இடுப்பு; a deformed pelvis, especially in a female distorted pelvis.

**த.வ. சப்பாணிஇடுப்பு**

*[Skt. krupa+kupakam]*

**குரூபசன்மம்** *kurūpa-šaṉmam,* பெ.(n.) வேறுபாடுடைய (விகாரப்) பிறப்பு; monster birth.

**த.வ. கொடுந்தோற்றப்பிறப்பு**

**குரூபபிண்டம்** *kurūba-piṇḍam,* பெ.(n.) வேறுபாடான (விகாரமான) பிண்டம்; monster fotus.

**த.வ. கொடும்பிண்டம்**

*[குரூப + பிண்டம்.]*

*[Skt. kurūba > த. குரூப.]*

*புள் > (பிள்) > பிண்டு > பிண்டம்.*

**குரூபம்** *kurūpam,* பெ. (n.) 1. இயல்பிலிருந்து மாறுபட்ட (விகாரமான) உருவம், உறுப்புக்கேடு; deformity in features, in limbs. 2.அழகின்மை; ugliness.

**த.வ. கொடுஉரு.**

*[கு + ரூபம்.]*

*[Skt. ku- > த. கு.]*

உருத்தல் = தோன்றுதல். உரு = தோற்றம், வடிவம், வடிவுடைப் பொருள், உடல். உரு → உருவு → உருவம்.

*[த. உருவம் > Skt. rūpa(வ.வ.1.92)]*

வடமொழியில் அழிகேடு, அவமதிப்பு, குறைபாடு, குறை, சிறுமை, தடை, பழிக்கூறு, இகழ்ச்சி போன்ற பொருளுடன் 'கு' முன்னொட்டு இருக்கிறது.

**குரூபி** *kurūpi,* பெ.(n.) இயல்பிலிருந்து மாறுபட்ட உருவமுள்ளவ-ன்-ள்; ugly, ill-shaped, deformed person.

**த.வ. சப்பாணி.**

*[Skt. ku- > த. கு.]*

*த. உருவம் > Skt. rūpa > rūpin > த. ரூபி.*

**குரூரகோட்டம்** *kurūra-kōṭṭam,* பெ.(n.) கழிச்சல் (பேதி) மருந்தாலும் அசையா கெட்டிக் குடல்; costive bowels unaffected by even strong purgatives.

**த.வ. கல்குடல்.**

*[குரூர + கோட்டம்.]*

*குள் > கொள் > கோள் > கோடு > கோட்டம்.*

**குரூரகோட்டி** *kurūra-kōṭṭi,* பெ.(n.) கற்குடலோன்; one with costive bowels.

**குரூரம்** *kurūram,* பெ.(n.) 1. கொடுமை (உரிநி); cruelty, savageness. 2. வேறுபாடு (விகாரம்); ugliness.

**த.வ. கடூரம்.**

*[Skt. krūra > த. குரூரம்.]*

வடமொழியில் kravi என்னும் மூலத்திலிருந்து பிறந்த krūra என்னும் சொல்லிற்கு ஊறு, புண், ஊறுபாடு, வெம்புண், நோவு, தீங்கு, இரக்கமற்ற, கடுப்பான, முரண்பாடான போன்ற பலபொருள்கள் உள்ளன. (மா.வி.). இவற்றுள் கொடுமை வேறுபாடு ஆகிய பொருள்களிலேயே இச்சொல் தமிழில் வழக்கூன்றியுள்ளது.

**குரூரமருந்து** *kurūra-marundu,* பெ.(n.) 1. கொடிய மருந்து; any medicine of a virulent type. 2. வேகமான மருந்து; drastic medicine. 3. உறைப்பான மருந்து; medicine with burning or pungent, acrimonious medicine.

த.வ. கடுமருந்து.

*[குரூர + மருந்து.]*

*[Skt. kurūra > த. குரூர.]*

*மரு → மருந்து.*

**குரூரமாவு** *kurūra-māvu,* பெ.(n.) கொல்ல மாவு; penni-nerved cinnamon - machilus maerantha.

*[குரூர + மாவு.]*

*[Skt. kurūa> த. குரூர.]*

*மா → மாவு.*

**குரூரவதை** *kurūra-vadai,* பெ.(n.) துன்புறுத்திக் கொல்லுகை (சித்திரவதை); cruel butchery, in human murder.

த.வ. துன்புறுத்தல்

*[Skt. krūra+vatai > த. குரூரவதை.]*

**குரூரவாந்திபேதி** *kurūra-vāndi-pēdi,* பெ. (n.) கொடிய கக்கல் கழிச்சல் (வாந்தி பேதி); cholera of a virulent or severe type - cholera morbus.

த.வ. கடுங்கக்கல் கழிச்சல்.

**குரூரன்** *kurūraṉ,* பெ.(n.) கொடியவன்; cruel person.

த.வ. அரம்பன்.

*[Skt. krūra > த. குரூரன். 'ன்' ஆ.பா.ஈறு.]*

**குரூராசயன்** *kurūrāsayaṉ,* பெ.(n.) ள பார்க்க; see *kurūra-kōṭṭi.*

**குரூராட்சம்** *kurū-rāṭcam,* பெ.(n.) ஆந்தை; owl.



**குரோசாணியோமம்** *kurōsāṇi-y-ōmam,* பெ. (n.) **குராசானியோமம்** பார்க்க; see *kurācāṉi-yōmam.*

*[U. khurāsāni+yōmam > த. குரோசாணி யோமம்.]*

**குரோசானி** *kurōšāṉi,* பெ. (n.) **குரோசானியோமம்** பார்க்க; see *kurōšāṉi-yōmam.*

**குரோசானியோமம்** *kurōsāṉiyōmam* பெ. (n.) குராசான்தேசத்தில் விளையும் ஓமம்; *omum* plant growing in *kurāsāṉ.*

**குரோசானியோமப்பத்திரி** *kurōšāṉi-yōma-p-pattiri,* பெ. (n.) குராசான் நாட்டில் விளையும் ஓமச் செடியின் இலை (இது ஒரு கற்ப மூலிகை); leaves of *omum* plant growing in *kurāsāṉ*, a re-juvenating drug.

*[குரோசான்+ஓமம்+பத்திரி.]*

**குரோட்டுசிரிடம்** *kurōṭṭu-siriḍam,* பெ. (n.) முழங்கால் வீக்கம்; synovitis of the knee-joints.

த.வ. மூட்டு வீக்கம்.

**குரோட்டுபலம்** *kurōṭṭu-palam,* பெ.(n.) 1. நாட்டு வாதுமை; Indian almond *teminalia catappa.* 2. ஒரு பெரியமரம்; relnut tree. 11. செகுன்றாவி. (vt)

**குரோடீகரி-த்தல்** *kurōḍi-kari-,* பெ.(n.) முறைப்படுத்துத் தொகுத்தல்; to systematise and summarise.

த.வ. முறைப்படுத்தல்.

*[Skt. krōdikr-, > த. குரோடீகரி-த்தல். 'தல்' தொ.பெ.ஈ.]*

**குரோதபரணி** *kurōda-paraṉi,* பெ.(n.) கண்டங் கத்தரி; prickly night shade - solanum jacquini.



**குரோதம்**[1] *kurōdam,* பெ.(n.) 1. சினம் (கோபம்); anger, wrath. *"குரோதமே குணமாயிருந்தவர்" (சி.சி.பர.லோகா. மறு. 29).* 2. செற்றம், காழ்ப்புணர்ச்சி; malice, rancour. 3. காய்ச்சல்; fever.

**த.வ. வன்மம்.**

*[Skt. krōdha > த. குரோதம்.]*

**குரோதம்**[2] *kurōdam,* பெ.(n.) மார்பு; breast, chest.

*[Skt. krōḍa > த. குரோதம்.]*

**குரோதவல்லபம்** *kurōda-vallapam,* பெ. (n.) ஒரு வகைக் கோரை; a variety of cyperus.

**குரோதன்**[1] *kurōdaṉ,* பெ.(n.) 1. ஒரு வகைச் கோழை (சிலேட்டும)க் கூறு; a form of phlegmatic humour or tendency. 2. கோழை மிகுதியினால் சினம் கொள்பவன்; a man angry, because of his phlegmatic tendency.

**குரோதன்**[2] *kurōdaṉ,* பெ. (n.) சினம் கொண்டவன் (கோபமுள்ளவன்) (வீரபத்திரன்.) (சூடா.); Vīrabhadra, as being wrathful.

**த.வ. காய் சினத்தன்.**

*[Skt. krōda > த. குரோதம் > குரோதன்.]*

*'ன்' ஆ.பா.ஈறு*

**குரோதன** *kurōdaṉa,* பெ.(n.) அறுபதாண்டு வட்டத்தில் ஐம்பத்தொன்பதாம் ஆண்டு (வருடம்); the 59th year of the Jupiter cycle of 60 years.

*[Skt. krōdhana > த. குரோதன.]*

**குரோதனி** *kurōdaṉi,* பெ. (n.) காமங்கொள்ளும் பெண் (காமி); a passionate or amorous woman.

**த.வ. காமி.**

**குரோதி**[1]**-த்தல்** *kurōdi-,* 11 செ.கு.வி.(v.i.) செற்றங் கொள்ளுதல்; to bear rancour.

**த.வ. சீறுதல்.**

*[Skt. krōdha-, > த. குரோதி-.]*

**குரோதி**[2] *kurōdi,* பெ. (n.) செற்றங் கொண்டவன்-ள்; rancorous person.

**த.வ. சீறாடி, சீறாளி.**

*[Skt. krōdhin > த. குரோதி.]*

**குரோதி**[3] *kurōdi,* பெ.(n.) அறுபதாண்டு வட்டத்தில் முப்பத்தெட்டாம் ஆண்டு (வருடம்); the 38th year of the Indian cycle of 60 years.

*[Skt. krōdha > த. குரோதி.]*

**குரோதிமுகம்** *kurōdi-mugam,* பெ. (n.) காண்டா விலங்கு; rhinoceros.

**த.வ. கல்யானை.**

**குல்** *kul,* பெ.(n.) மொத்தம்; all, total (C.G.).

*[U. kull > த. குல்.]*

**குல்கந்து** *kulkandu,* பெ.(n.) சர்க்கரை அல்லது தேன் கலந்து பக்குவப்படுத்திய முளரி (ரோசா)ப்பூ இதழ்; a confection of rose prepared in sugar or honey-candied rose.

**த.வ. தேன்முளரி.**

*[Pers. gul+Ar. gand > த. குல்கந்து]*

**குல்பேரிசு** *kulpērisu,* பெ.(n.) மொத்தத் தீர்வை; total revenue.

*[U. kul-bāris > த. குல்பேரிசு]*

**குல்மகேது** *kulmakēdu,* பெ.(n.) ஆரை; sorrel.

**குல்மரோகம்** *kulmarōkam,* பெ.(n.) மண்ணீரல், ஈரல் முதலியவற்றில் வீக்கம் கண்டு அதனால் ஏற்படும் செரிமானக் கோளாறு (அசீரணம்) முதலிய குணங்கள்; indigestion and its consequent symptoms, due to the enlargement of the spleen, liver etc.- abdominal tumor.

**த.வ. செரியாநோய்.**

**குல்மவாதம்** *kulmavādam,* பெ. (n.) மண்ணீரலைப் பற்றிய ஊதை (வாத) நோய்; a disease of the spleen.

த.வ. ஈரல் ஊதை.

**குல்மாசம்** *kulmāšam,* பெ. (n.) 1. கழுநீர், lotion with which wounds are cleaned 2. புளித்த கஞ்சி; sour - gruel. 3. ஒரு வகை மொச்சை; a kind of beans - *Dolichos genus.*

**குல்மால்பண்ணு-தல்** *kulmāl-paṇṇu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. புரட்டுச் செய்தல் (இ.வ.); to cheat. 2. குழப்பஞ் செய்தல்; to create a hubbub.

த.வ. தகிடுதத்தம் செய்தல், தக்கடி செய்தல்.

*[குல்மால் + பண்ணு-]*

*[U. gulmāl > த. குல்மால்.]*

**குல்யம்** *kulyam,* பெ.(n.) **குல்லியம்** பார்க்க; see *kulliyam.*

**குல்லகி** *kullagi,* பெ.(n.) பூலாச்செடி; black money shrub.

**குல்லயம்**[1] *kullayam,* பெ.(n.) 1. பிட்டம்; buttocks. 2. இறைச்சி (மாமிசம்); flesh, muscle.

**குல்லயம்**[2] *kullayam,* பெ.(n.) கருங்குவளை; blue nelumbo.

**குல்லரிச்சோறு** *kullari-c-coru.,* பெ.(n.) கற்றாழைச்சோறு; aloe pulp.

**குல்லா**[1] *kullā,* பெ.எ.(adj.) வெளியான; open, plain, not hidden.

*[U. khulā > த. குல்லா.]*

**குல்லா**[2] *kullā,* பெ.(n.) 1. தலைக்கவிப்பு; a kind of cap, skull-cap, night cap, fez. *"குல்லாவும் தொங்கற் பரியட்டமாகப் பட்டும் பருத்தியும்" (கோயிலொ. 36).* 2. படகின் பாய்மரத்தைக் கட்டுங்கயிறு (யாழ்ப்.); out-rigger of a boat. 3. கவிப்பு (குல்லா)த் தோணி (வின்.); boat or dhony with an out-rigger.

த.வ. கவிப்பு.

*[U. kulāh > த. குல்லா]*



**குல்லாச்சிப்பாய்** *kullā-c-cippāy,* பெ.(n.) காவல் துறையினன்; lit. one who wears a kullā, policeman.

**குல்லாச்சேவகன்** *kullā-c-cēvagaṉ,* பெ. (n.) **குல்லாச்சிப்பாய்** பார்க்க; see *kullā-c-cippāy.*

*[U. kulla > த. குல்லா.]*

*[Skt. šēvaka > த. சேவகன்.]*

**குல்லாப்போடு-தல்** *kullā-p-pōḍu-,* 9 செ.குன்றாவி.(v.t.) ஏமாற்றுதல்; lit., to cap one, to cajole coax.

*[குல்லா + போடு-,]*

*[U. kullā > த. குல்லா.]*

**குல்லாய்** *kullāy,* பெ.(n.) **குல்லா** பார்க்க; see *kullā.*

*[U. kulla > த. குல்லாய்.]*

**குல்லாயிட்டுப்பிறத்தல்** *kullāyiṭṭu-p-piṟattal,* பெ.(n.) முகத்தில் சவ்வு மூடிப் பிறக்கை; birth of child with a piece of the amniotic membrance oceasionally covering its face like a veil being born with a caul.

த.வ. மூடுமுகப் பிறப்பு.

*[குல்லா + இட்டு + பிறத்தல்.]*

*[U. kulla > த. குல்லா.]*

**குல்லாலி** *kullāli,* பெ. (n.) 1. எல்லாம் வல்லவன் (சர்வ சக்தன்); the omnipotent. 2. திறமையானவன் (சாமர்த்தியசாலி); clever person. *'வைப்பு நிசமாச்சோ குல்லாலி நீயோ' (விறலி விடுதூது. 788).*

த.வ. திறலன்.

*[Ar. kulāli > த. குல்லாலி.]*

**குல்லிகம்** *kulligam,* பெ.(n.) சிவப்புக் குன்றிமணி; crab's eye - abrus precatorius.

**த.வ. செங்குன்றி.**

**குல்லியம்** *kulliyam,* பெ. (n.) எலும்பு; bone.

**குல்லோசிதம்** *kullōšidam,* பெ.(n.) பூனைக் காஞ்சொறி; cowhage - tragia cannabira.



**குல்வார்** *kulvār,* பெ.(n.) குடியானவருடன் தனித்தனியே செய்யும் ஒப்பந்தம்; individual settlement with ryots. (C.G.119).

**த.வ. உழவர் ஒப்பந்தம்.**

*[U. kulwār > த. குல்வார்]*

**குலக்கினி** *kula-k-kiṉi,* பெ.(n.) ஒருவகை அம்மை நோய்; a kind of small pox in which the scabs fall off.

**குலகா** *kulakā,* பெ. (n.) பேய்ப்புடல் (மலை); wild snake - gourd.

**குலசன்** *kulašaṉ,* பெ.(n.) நற்குலத்தோன்; man of respectable family.

**த.வ. குடிப்பிறப்பளான்.**

*[**Skt.** kula-ja > த. குலசன்]*

*குல → குல → குலவு. குலவுதல் = கூடுதல். குல் → குலம் : கூட்டம், குடும்பம், வகுப்பு, குலப்பிரிவு, இனம். த. குலம் > **Skt.** kula. (வ.வ 1 : 127.*

*[**Skt.** kula >kulaja > த. குலசன்.]*

*'ன்' ஆ. பா.ஈறு.*

**குலசுவேதகன்** *kula-suvēdagaṉ,* பெ.(n.) குறட்டைக் கிழங்கு; the pulp of mussel shell creeper.

**குலஞ்சம்** *kulañjam,* பெ.(n.) அரத்தை; galangal- *alpinia galanga.*

**குலடன்** *kulaḍaṉ,* பெ.(n.) ஏற்பாரான்பிள்ளை (சுவிகார புத்திரன் (வின்.)); adopted son.

**த.வ. ஏற்புப்பிள்ளை.**

**குலத்தன்** *kulattaṉ,* பெ.(n.) நற்குலத்தோன்; man of good family or birth.

**த.வ. குலமகன்.**

*[குல் → குலம் > **Skt.** kulasta > த. குலத்தன்.]*

**குலத்திரி** *kulattiri,* பெ.(n.) 1. கற்புக்கரசி (பதிவிரதை); chaste woman. 2. மனைவி (வின்.); the lawful wife.

**த.வ. குலமகள்.**

*குல் → குலம் > **Skt.** kula.*

*[**Skt.** kulastrī > த. குலத்திரி.]*

**குலத்துருமம்** *kula-t-turumam,* பெ.(n.) வெடியுப்பு; pottasium nitrate.

**குலநர்சகம்** *kula-naršagam,* பெ.(n.) ஒட்டகம் (யாழ்.அக.); camel.



**குலப்பசிமாது** *kulappaši-mādu,* பெ.(n.) சீந்திற் கொடி; moon - creeper - meniapermum cordifollum.

**குலபௌ** *kulapau,* பெ.(n.) கணுக்கால்; ankle.

**குலவியூகம்** *kulaviyūgam,* பெ. (n.) படையணிகளுளொன்று(நவவியூகத்தொன்று) (சௌந்த. 1, உரை); a kind of battle-array, one of nava-viyukam (q.v.).

**குலாசலம்** *kulāsalam,* பெ.(n.) பனிமலை (அட்டகுலபர்வதம்); chief mountain ranges of *Jambu-dvipa.*

*[Skt. kula+a-cala > த. குலாசலம்.]*

**குலாசா** *kulāšā*, பெ.எ.(adj.) பரந்த; spacious, roomy, wide.

*[U. khulāsa > த. குலாசா.]*

**குலாசாரம்** *kulāšāram*, பெ.(n.) ஒரு குடும்பம் அல்லது ஒரு பிரிவினர்க்கான ஒழுக்க நடைமுறை, குலவொழுக்கம்; established or time honoured custom or usage of a family or caste.

**த.வ. குடிப்பண்பு.**

*[Skt. kula+ā-cāra > த. குலாசாரம்.]*

குல் → குல → குலவு. குலவுதல் = கூடுதல். குல் → குலம் = கூட்டம், குடும்பம், வகுப்பு, குலப்பிரிவு, இனம். த. குலம் > **Skt.** kula. (வ.வ.1 : 127)..

குலம் + **Skt.** ā-cāra - குலாசாரம் வடமொழிப் புணர்ப்பு.

**குலாசாரியன்** *kulāsāriyan*, பெ.(n.) குலகுரு; family preceptor or priest.

**த.வ. குடிஆசான்.**

*[த. குலம் > **Skt.** kula.]*

*[**Skt.** ācārya > த. ஆசிரியன். 'ன்' ஆ.பா.ஈறு]*

குலாசாரியன் வடமொழிப் புணர்ப்பு.

**குலாட்டு** *kulāṭṭu*, பெ.(n.) 1. மகிழ்ச்சி; joy. 2. கிளர்ச்சி (உற்சாகம்); enthusiasm.

**குலாதனி** *kulādani*, பெ.(n.) கடுரோகினி (மலை.); christmas rose.

**குலாதிக்கன்** *kulādikkan*, பெ.(n.) குடும்பத்தில் உயர்ந்தவன், சிறந்தவன் (குலசிரேஷ்டன்) (வின்.); chief man of the family.

**த.வ. குடித்தலைவன்.**

*[த. குலம் > **Skt.** kula.]*

*[**Skt.** kula+adhika > த. குலாதிக்கன்.]*

**குலாதினி** *kulādini*, பெ.(n.) **குலாதனி** (தைலவ. தைல. 1) பார்க்க; see *kulādani*.

*[Skt. šakulādani > த. குலாதினி.]*

**குலாப்சான்** *kulāp-sān*, பெ.(n.) இனிப்புப் பணியாரவகை (இ.வ); a kind of confectionery.

**த.வ. பாகுபணியாரம், இன்மிதவை.**

*[Ar. gulāb+jāmun > த. குலாப்+சான்.]*

**குலாபி** *kulābi*, பெ.(n.) **குலாபு** பார்க்க; see *kulābu*.

*[U. gulāba > த. குலாபி.]*

**குலாபிமானம்** *kulābimānam*, பெ.(n.) பிறந்த குடியிடத்துக் கொள்ளும் பற்று; love of one's family or caste.

**த.வ. பிறந்தகப்பற்று.**

*[குல(ம்) + அபிமானம்.]*

*[த. குலம் > **Skt.** kula.]*

*[**Skt.** abhimāna > த. அபிமானம். வடமொழிப் புணர்ப்பு.]*

**குலாபு** *kulābu*, பெ.(n.) 1. சிவப்பு முளரி (ரோசா), முட்செவந்தி; damask rose. 2. பன்னீர்; rose-water.

**த.வ. செம்முளரி.**

*[U. gulāba > த. குலாபு.]*

**குலாபுசாயம்** *kulābušāyam*, பெ.(n.) முளரி (ரோசா) நிறச் சாயம்; rose colour.

**த.வ. முளரிச்சாயம்.**

**குலாபுப்பூ** *kulābu-p-pū*, பெ.(n.) முளரி (ரோசா)ப்பூ; rose flower.

*[குலாபு + பூ.]*

*[U. gulābu > த. குலாபு.]*

**குலாபுப்பூவித்து** *kulābu-p-pū-vittu*, பெ.(n.) அரச (இராச)ப் பூ அல்லது முளரி (ரோசா)ப்பூ விதை; rose seed.

**த.வ. முளரி வித்து.**

*[குலாபு + பூ + வித்து.]*

*[U. gulābu > த. குலாபு.]*

*புகு > பூ, விந்து > வித்து.*

**குலாபூ** *kulāpū*, பெ.(n.) அடுக்கு முளரி (ரோசா) இதழ்; cabbage rose petal.

**த.வ. முளரி இதழ்.**

*[குலா + பூ.]*

*[U. gulā > த. குலா.]*

**குலாம்** *kulām*, பெ.(n.) அடிமை; slave, menial servant. *'அந்தப் பிரபுவுக்கு அவன் குலாமாயிருக்கிறான்'.*

*[U. gulāma > த. குலாம்.]*

**குலாமர்** *kulāmar,* பெ.(n.) பணத்திற்கு அடிமையானவர், இவறன்மார் (உலோபிகள்); misers, as slaves to money. *"இச்செல்வம் ............. கொடுக்கறியா திறக்குங் குலாமருக்கு" (பட்டினத். திருப்பா. திருவே. மா. 7).*

த.வ. தொழும்பர்.

*[U. gulāma > த. குலாமர்.]*

**குலாயம்** *kulāyam,* பெ.(n.) 1. பறவைகட்டுங் கூடு; bird's nest. *"சேனந் தனது குலாயெந்தனில்" (கைவல்ய. சந். 124).* 2. மக்களாற் செய்யப்படும் பறவைக் கூடு (பிங்.); bird's cage.

*[Skt. kulāya > த. குலாயம்.]*



**குலாயனம்** *kulāyanam,* பெ.(n.) **குலாயம்**[2] (திவா.) பார்க்க; see *kulāyam.*

*[Skt. kulāyana > த. குலாயனம்.]*

**குலாரி** *kulāri,* பெ.(n.) ஒரு வகை வண்டி (வின்.); chariot, Indian coach.

த.வ. குடாரி.

க. குலாரு; ம. குலால்.

*[Mhr. khulā + த. குலாரி.]*

**குலால்** *kulāl,* பெ.(n.) 1. சிவப்பு; redness. 2. வடநாட்டில் அறுவடைக் காலத்தில் கொண்டாடப்படும் (Holi) பண்டிகையில் பயன்படுத்தும் ஒருவகைச் செந்நிறப் பொடி (இ.வ.); red powder thrown at the time of *Hōli* festival.

*[U. gulāl > த. குலால்.]*

**குலால்வண்டி** *kulāl-vaṇḍi,* பெ.(n.) **குலாரி** (வின்.) பார்க்க; see *kulāri.*

*[குலால் + வண்டி.]*

*[Mhr. kulāl > த. குலால்.]*

வண்டு > வண்டி = சக்கரத்தையுடைய ஊர்தி.

**குலிகாயம்** *kuli-kāyam,* பெ.(n.) ஒரு வகை நீர் வாழ் விலங்கு; an aquatic animal.

**குலிசத்துருமம்** *kuliša-t-turumam,* பெ.(n.) ஒரு வகைக் கள்ளி; opuntia tree.

**குலிசம்** *kulišam,* பெ.(n.) நிரயம் வகைகளுளொன்று (நரக விசேடம்) (சிவதரு. சுவர்க்க நரக. 109); a kind of hell.

**குலீனன்** *kulīṉaṉ,* பெ.(n.) உயர்குலத்தோன் (திவா.); man of noble birth.

த.வ. குடிப்பிறப்பாளன்.

*[Skt. kulina > த. குலீனன்.]*

**குலுத்தாகிதம்** *kulu-t-tāgidam,* பெ.(n.) பூஞ் சாந்துப் பட்டை; a bazzara drug.

**குலேநிலோபர்** *kulēnilōpar,* பெ.(n.) வெண்டாமரைப் பூ; white lotus flower - *nelumbium speciosum.*

**குலைகீசம்** *kulai-kišam,* பெ.(n.) ஆட்டுலா மரம்; a kind of tree.

**குலோடி** *kulōḍi,* பெ.(n.) தொப்புள் பகுதி; navel region.

**குலோப்சாமூன்** *kulōp-jāmuṉ,* பெ.(n.) மைதாமாவைச் சில உருண்டைகளாக உருட்டிப் பொரித்து சருக்கரைப் பாகில் (சீராவில்) போட்டு ஊறவைத்துச் செய்யும் ஓர் இனிப்பு வகை; brownroasted-balls soaked in sugar treacle.

த.வ. பாகுபணியாரம்.

*[Ar. gulābjāmun > த. குலோப்ஜாமூன்.]*

**குலோமிசை** *kulōmišai,* பெ.(n.) வசம்பு; sweet-flag -*calamus indicus.*

**குவசிமரம்** *kuvaši-maram,* பெ.(n.) ஐரோப்பிய நாட்டு மரவகை; jamaica quassia - quassic excelga, a native of Europe.

**குவர்** *kuvar,* பெ.(n.) மேலாக மூடும் பாய் (பாய்மரப் பாய்க்கு மேலுள்ள பாய்); sky-sail. (M.Navi. 84).

த.வ. மீப்பாய்.

*[E. cover > த. குவர்.]*

**குவலயம்** *kuvalayam,* பெ.(n.) நிலவுலகம்; the earth, world. *"குவலய மிசைக் குப்புற்று" (கந்தபு. தாரக. 51).*

த.வ. உலகம்.

*[கு + வலயம்.]*

*[Skt. ku- > த. கு.]*

வள் → வளை → வளையம் = வட்டம், வளையல்.

*[த. வளையம் > Skt. valaya. (வ.வ. 2 : 85)]*

**குவலயம்²** *kuvalayam,* பெ.(n.) 1. நெய்தல் (திவா.); white Indian water - lily. 2.கருங்குவளை; blue nelumbo. *"குவலியத் திருமலர்" (சூடா.).* 3. செங்குவளை (வின்.); purple Indian water lily.

*[த. குவளை > Skt. kuvala, kuvalaya > த. குவலயம்.]*

**குவலையம்** *kuvalaiyam,* பெ.(n.) 1. நீலோற்ப மலர்; blue Indian water lily. 2. அரக்காம்பல், செவ்வாம்பல்; red water - lily.

**குவாகசாரவரிட்டம்** *kuvāga-śāra-varittam,* பெ. (n.) சீமைப்பிசின் கொண்டு அணியமாக்கிய அரிட்டம்; ammonlated tincture of gulacum.

த.வ. பிசினி.

**குவாதோத்பவம்** *kuvā-tōtpavam,* பெ.(n.) கொதிக்க வைத்தது; produced as collyrium.

த.வ. கடுங்காய்ச்சு.

**குவாமா** *kuvāmā,* பெ. (n.) கூவைக் கிழங்கிலிருந்து எடுக்கப்படும் மாவு; Indian arrow-root flour.

த.வ. குச்சுவள்ளி மாவு.

**குவிலேசம்** *kuvi-lēśam,* பெ.(n.) கருங்கொள்; black gram.

**குவேகசுமரம்** *kuvēkasumaram,* பெ.(n.) ஓக்கு மரம்; oak tree.

**குவைனா** *kuvainā,* பெ.(n.) கொய்னா; quinine.

**குளவன்** *kulavan,* பெ.(n.) முருகக் கடவுள்; god *Murukan. 'குளவன் வீற்றிருந்த வளர்புகழ்க் குன்றமும்' (வீரவனப்பு. திருநாட்டு. 23).*

**குளிகாசித்தி** *kuligā-sitti,* பெ.(n.) இதளியம் (இரச) குளிகை முதலியவற்றாற் பெறக்கூடியதாகக் கருதும் வான்வெளியில் பறக்கும் மிகு ஆற்றல் (ஆகாசகமன சக்தி) (வின்.); the power of flying through the air at an enormous speed believed to be acquired by means of mercurial or other pills.

த.வ. குளிகைப்பேறு.

*[குளிகா + சித்தி.]*

*குளம் → குளிகை = உருண்டை மாத்திரை.*

*[த. குளிகை > Skt. gulikā > த. குளிகா.]*

சித்து → சித்தன் = அறிவன், முக்கால அறிவுள்ள முனிவன். சித்தன் ஆற்றலைத் தமிழிற் சித்து என்பதே மரபு (வ.வ.1 : 148).

சித்து → சித்தி. த. சித்தி > Skt. siddhi.

**குளிசதோசம்** *kuliśa-dōśam,* பெ.(n.) கருப்பமாதலை வேண்டும் மகளிர் குளிசங்கட்டிக் கொள்ளும் பொழுது எதிர்ப்பட்ட குழந்தைகளுக்கு வரும் ஒரு வகை நோய் (சீவரட். 221); a child's ailment believed to be the result of encountering a woman when an amulet is fastened on her for favouring pregnancy.

த.வ. குளிசநோய்.

*[குளிசம் + தோசம்.]*

குளம் → குளிகை = உருண்டை மாத்திரை.

*[குளிகை > Skt. gulikā > த. குளிசம்.]*

*[Skt. dōsha > த. தோசம்.]*

**குளோப்பர்** *kuḷōppar,* பெ.(n.) உருண்டை வடிவாய்த் தொங்கும் ஒருவகைக் கண்ணாடி விளக்கு; globe lamp.

**த.வ. கோளவிளக்கு.**

*[E. globe > த. குளோப்பர்.]*



**குளோப்பு** *kuḷōppu,* பெ.(n.) **குளோப்பர்** பார்க்க; see *kuḷōppar.*

*[E. globe > த. குளோப்பு.]*

**குளோப்புக்கொன்னை** *kuḷōppu-k-konnai,* பெ.(n.) யானைப் புளிய மரம்; elephant tamarind tree.

**த.வ. பப்பரப்புளி, பொந்தம், புளிமரம், பூரிமரம்.**

**குறுமா** *kuṟumā,* பெ.(n.) கூட்டாணம் (குழம்புணவின் வகை); a kind of stew seasoned with condiments.

**த.வ. கூட்டாணம்.**

*[U. kormā > த. குறுமா.]*

**குறோகணத்தி** *kuṟō-kaṇatti,* பெ.(n.) **காக்கணத்தி** பார்க்க; see *kākkaṇatti.*

**குனட்டை** *kuṉaṭṭai,* பெ.(n.) 1. குறும்பு; bomischief, pranks. 2. நோய் கொடியதாக மாறுகை; bounfavourable turn, as of a disease.

க. குனஷ்டா; ம. குனஷ்டம்.

*[Skt. ku-naṣṭa > த. குனட்டை.]*

**குனா** *kuṉā,* பெ.(n.) குற்றம் (வின்.); fault, crime.

*[U. gunāh > த. குனா.]*

**குனாசகம்** *kuṉāšagam,* பெ.(n.) 1. சிறுகாஞ்சொறி (மலை.); small climbing nettle.

*[Skt. kunāšaka > த. குனாசகம்.]*

**குனாசம்** *kuṉāšam,* பெ.(n.) குன்றி (மலை.); crab's eye.

*[Skt. kunāša > த. குனாசம்.]*

**கூசா** *kūsā,* பெ.(n.) (நீர், பால் முதலியவற்றை வைத்துக் கொள்ளப் பயன்படுத்தும்) புடைத்த இடைப்பகுதியும், மூடியும் கொண்ட கலன், குடக்கலம்; a small round, short-necked vessel with a lid, golet, water-monkey.

**த.வ. கைச்சாடி.**

*[U. kūza > கூஜா > த. கூசா]*



**கூசாதூக்கு-தல்** *kūjā-tūkku,* 9 செ.கு.வி. (v.i.) தான் சார்ந்தவரை மனநிறைவுபடுத்த செய்ய சிறு பணிகள் செய்து தாழ்ந்து நடத்தல்; to do menial things in support of one to please him.

*[கூஜா + தூக்கு-,]*

*[U. kūza > த. கூஜா > கூசா-,]*

**கூசுமாண்டம்** *kūsumaṇṭam,* பெ.(n.) பூசணி; white gourd cucurbita pepo.

*[Skt. kūṣumāṇḍam > த. கூசுமாண்டம்.]*

**கூசுமாண்டர்** *kūṣumāṇḍar,* பெ.(n.) நிரைய (நரக) உலகங்களுக்குத் தலைவர்; (Šaiva) Lord of hells. *"கூசுமாண்டர் முப்பத்திரண்டு நரகங்களுக்கும் அதிபதியாய்"(சி. போ. பா. 2,3, பக். 204).*

*[Skt. kūṣmāṇḍa > த. கூசுமாண்டர்.]*

**கூட்டிலிப்பனாதி** *kūṭṭili-p-paṉādi,* பெ.(n.) மொச்சைக் காய்; country bean-dolichos (genus).

**கூடசன்** *kūḍasaṉ,* பெ.(n.) பன்னிரண்டு வகைப் (புத்திரருள்) மகன்களுள் கணவன் வீட்டிலில்லாதகாலத்தில்இன்னானென்றறியப்படாத ஒருவனுக்கு ஒருத்தியிடம் தோன்றிய மகன்; son born secretly of a woman when her husband is absent, the real father being unknown, one of twelve *puttiraṉ.*

த.வ. தப்பல்.

[*Skt. gūḍhaq-ja* > *த. கூடசன்.*]

**கூடசாசனம்** *kūḍa-sāśaṉam,* பெ (n.) உண்டாக்கிய ஒலைகள் (சிருஷ்டித்த fabricated document சாசனம்) (கலைமகள் x 56).

**கூடணை** *kūḍaṇai,* பெ.(n.) மயிற் (பீலி) கண் (யாழ்.அக.); eye of peacock.

**கூடத்தசைதன்னியம்** *kūḍatta-śaitaṉṉiyam,* பெ. (n.) மேலான அறிவுருவாய் விளங்கும் நிலையான முழுமுதற்பொருள்; the immutable *Brahman* as the embodiment of supreme knowledge.

த.வ. முதற்பொருள்.

**கூடத்தப்பிரமம்** *kūḍatta-p-piramam,* பெ.(n.) நிலைப்பேறான முழுமுதற் பொருள் (நிர்விகாரப் பிரமம்); the immutable Brahman.

த.வ. முழுமுதல்வன்.

[*Skt. kūṭastha* > *த. கூடத்தப்பிரமம்.*]

**கூடத்தன்**[1] *kūḍattaṉ,* பெ.(n.) 1. முழு முதற் பொருள் (பரப்பிரமம்); supreme soul, eternal and unchangeable (வேதா. சூ. 79, உரை). 2. குலத்தின் முன்னோன் (மூல புருஷன்); the founder of a family.

[*Skt. kūṭastha* > *த. கூடத்தன்.*]

**கூடத்தன்**[2] *kūḍattaṉ,* பெ.(n.) **கூடசன்** பார்க்க; see *kūḍaśaṉ.* "*நும்முடைய கூடத்தர் கூறிய வாக்குக்களே*" (*சித். மரபுகண். 19*).

[*Skt. gūḍaja* > *த. கூடத்தன்*]

**கூடபதம்** *kūḍa-padam,* பெ.(n.) பாம்பு (வின்); snake.

**கூடவற்சை** *kūḍavaṟcai,* பெ.(n.) தவளை; frog.

**கூடன்** *kūḍaṉ,* பெ.(n.) **கூடசன்** பார்க்க; see *kūḍaśaṉ.*

**கூடிலி** *kūḍili,* பெ.(n.) புலால் தின்போன்; flesh eater.

த.வ. புலால்உண்ணி.

**கூதனம்** *kūdaṉam,* பெ.(n.) இடக்கர்ச் சொல் (திவா.); indecent, obscene terms.

த.வ. இடக்கர்.

**கூபகத்திபந்தனம்** *kūbaga-ttibandaṉam,* பெ.(n.) இடுப்பெலும்பைக் கவர்ந்துள்ள நார்; ligaments of the pelvis.

**கூபகத்துருவம்** *kūbaka-t-turuvam,* பெ.(n.) இடுப்பெலும்புக் கூட்டின் ஒடுவம் (மையம்); axix of the pelvis.

**கூபகமானம்** *kūbagamāṉam,* பெ.(n.) இடுப்பெலும்புக் கூடு அல்லது இடுப்புக்குழி (அனாமிகை)யின் குறுக்கு அளவு; the transverse measurement of the pelvis.

**கூபகமானி** *kūbagamāṉi,* பெ.(n.) இடுப்புக்குழி (அனாமிகை)யின் குறுக்களவை உறுதிப்படுத்தும் கருவி; an instrument used for measuring the diameter of the pelvis-pelvimeter.

**கூம்பரிட்டம்** *kūmpariṭṭam,* பெ.(n.) 1. ஆமையோடு; the shell of a tortoise. 2. ஆமணக்கு; castor plant.

**கூம்பூரணம்** *kūmpūraṇam,* பெ.(n.) கொள்ளுக்காய் வேளை; purple wild indiger-*tephrosia purperea.*

**கூர்க்கா** *kūrkkā,* பெ.(n.) நேப்பாள நாட்டில் இருந்து வந்து காவல் காக்கும் பணி செய்பவர்; *Nepali* employed as a guard.

**த.வ. சேமக்காவலன்.**

**கூர்ச்சேகரம்** *kūr-c-cēgaram,* பெ.(n.) தென்னை (மலை.); coconut palm.

**கூர்மசெயந்தி** *kūrma-jayandi,* பெ.(n.) திருமால் எடுத்த ஆமைத் தோற்றரவத்தை (கூர்மாவதாரத்தை)க் கொண்டாடுதற்குரிய திருநாள்; the sacred day on which *viṣnu* incarnated himself as tortoise, a day of festivity.

**கூர்மத்துவாதசி** *kūrma-t-tuvādasi,* பெ.(n.) ஆடவை (ஆனி) மாதத்து 12 ஆம் நாள் மேற்கொண்ட (துவாதசியில்) ஒரு நோன்பு (விரதம்); a fast on the 12th lunar day of the month of Aṉi.

**த.வ. ஆடவைப் பன்னீரி.**

**கூர்மப்புராணம்** *kūrma-p-purāṇam,* பெ.(n.) 1. பதினெண் தொன்ம (புராணங்)களுள் திருமால் ஆமை (கூர்மா) தோற்றரவம் எடுத்தபொழுது அறிவுறுத்திய நல்லுரைகள்; a chief purāṇa narrated by *Viṣṇu,* in his incarnation as tortoise, one of *patineṉ-purāṇam.* 2. வடமொழியிலிருந்து அதிவீரராம பாண்டியன் செய்யுளுருவமாகத் தமிழிலியற்றிய நூல்; a metrical translation of the above in Tamil by *Adivīra-rāma-pāṇḍiyaṉ.*

*[Skt. kūrma+purāṇa > த. கூர்மப் புராணம்.]*

**கூர்மபற்பம்** *kūrma-paṟpam,* பெ.(n.) ஆமையோட்டுச் சாம்பல் (இ.வ.); calcinated medicinal powder of tortoise shell.

**த.வ. ஆமையோட்டுப்பொடி.**

*[Skt. kūrma+bhaṣman > த. கூர்மபற்பம்.]*

**கூர்மபிரிட்டம்** *kūrma-piriṭṭam,* பெ.(n.) ஆமையின் முதுகோடு; shell of the tortoise.

**கூர்மரிசிமுறிப்பு** *kūrmarisi - muṟippu,* பெ.(n.) **கூர்மமுனிமுறிப்பு** பார்க்க; see *kūrmamuṉi-muṟippu.*

**கூர்மமுனிமுறிப்பு** *kūrmamuṉi-muṟippu,* பெ.(n.) மாழைகளை முறித்து தூய்மை (சுத்தி) செய்வதற்கான கூர்ம முனி (ரிஷி) சொன்ன பாகம்; the method or principle laid down in the works of the sage *Kūrmamuṉi* for altering the virtues of metals for purposes of purifying them.

*[கூர்மமுனி + முறிப்பு.]*

*முறி → முறிப்பு.*

**கூர்மயோகம்** *kūrma-yōgam,* பெ.(n.) ஒருவன் பிறக்குங் காலத்து அவனுக்கு உயர்ந்த நிலையைக் கொடுக்குமாறு கோள்கள் நிலை சேர்ந்த ஒரு நல்லூழ் (யோகம்) (சங்.அக.); a peculiar conjunction of planets at the time of one's birth indicative of great success in life.

**த.வ. நற்கோள்நிலை.**

**கூர்மன்** *kūrmaṉ,* பெ.(n.) பத்து (தச) காற்றுகளுள் இமைத்தல், விழித்தல்களைச் செய்யும் காற்று (பிங்.); the vital air of the body which causes closing and opening of eyelids, one of tasa-vayu.

**த.வ. விழிப்புவளி.**

**கூர்மாண்டர்** *kūrmāṇḍar,* பெ.(n.) **கூசுமாண்டர்** பார்க்க; see *kūsumāṇḍar.* *"பாரிடப் படையுடைக் கூர்மாண்டர்" (திருவிளை. திருமணப். 82).*

*[Skt. kūrmānda > த. கூர்மாண்டர்]*

**கூர்மாதனம்** *kūrmādaṉam,* பெ.(n.) 1. கால்மடித்து உட்காருகை; squatting on the floor with the legs crossed. 2. (ஊழ்கத்தின் போது அமர்வதற்குப் பயன்படுத்தும்) ஆமையின் வடிவமைந்த இருக்கை (ஆசன) வகை; wooden seat in forms of a tortoise or with figure of tortoise on it, used for meditation. *"வில் வாதியினாற் செய்க..... கூர்மதானம் (சைவச. பொது. 57).*

**த.வ. பாதமடிப்பு இருக்கை.**

*[Skt. kūrma+ā-sana > த. கூர்மாதனம்.]*

**கூராசாகிகம்** *kūrā-sākigam,* பெ.(n.) தேயிலை; tea.

**கூலங்கசமாய்** *kūlaṅkaṣamāy,* வி.எ.(adv.) (இரண்டுகரையும் உராய்ந்து கொண்டு) முழுவதும்; completely, washing off both the banks.

த.வ. இருகரை புரளி.

*[கூலங்கசம் + ஆய்.]*

*[Skt. kūlañ-kaṣa > த. கூலங்கசம்.]*

'ஆய்' – வி.எ.ஈறு.

**கூலபிந்து** *kūlabindu,* பெ.(n.) எட்டி (சங்.அக.); strychnine-tree.

**கூளிவாசமூலி** *kūḷivāšamūli,* பெ.(n.) கருவூமத்தை; purple stramony.

*[கூளிவாச + மூலி.]*

**கூனிதாரன்** *kūṉi-dāraṉ,* பெ.(n.) கொலையாளி (இ.வ.); murder.

*[கூனி + தாரன்.]*

*[U. khūnī > த. கூனி.]*

**கூனிமித்திரம்** *kūṉi-mittiram,* பெ.(n.) மந்திரத்தால் கொல்லும் இறப்பு; killing by witchcraft or sorcery.

த.வ.சாவிப்பு, சாவம்.

**கெக்கரிசம்** *ke-k-karisam,* பெ.(n.) செங்கழுநீர்; red indian water lilly; American sweet-scented water lilly.

**கெச்ச** *kecca,* 5 செ.கு.வி. (v.i.) ஏவல் வடிவம் போ; go. *"கெச்ச நெறி" (சிவதரு. கோபுர. 129).*

**கெச்சனா** *keccaṉā,* பெ.(n.) கையாந்தகரை; a plant growing in wet places.

**கெச்சு** *keccu,* பெ.(n.) கோடுகளால் வரைந்து காட்டப் பெற்ற மனை முதலியவற்றின் உருவம்; sketch as of a building. *அமீன் கெச்சு (இ.வ.).*

த.வ. வடிவுரு.

*[E. sketch > த. கெச்சு.]*

**கெசகங்காடம்** *keša-kaṅgāḍam,* பெ.(n.) யானை; elephant.

*[கெச + கங்காடம் – கெசகங்காடம்.]*

**கெசகரணம்** *keša-karaṇam,* பெ.(n.) **கசகர்ணம்** பார்க்க; see *kasakarṇam.*

*[Skt. gaja+karna > த. கெசகரணம்.]*

**கெசகன்னம்** *keša-kaṉṉam,* பெ.(n.) **கசகர்ணம்** பார்க்க; see *kaca-karṇam.* (யாழ்.அக.).

*[Skt. gaja+karna > த. கெசகன்னம்.]*

**கெசட்டு** *kešaṭṭu,* பெ.(n.) அரசு செய்தித் திரட்டுத் தாள் (இராஜாங்க விளம்பரப் பத்திரிகை); gazette.

த.வ. அரசிதழ்.

*[E. gazette > த. கெசட்டு.]*

**கெசடம்** *kešaḍam,* பெ.(n.) நாகப்பூ; Ceylon ironwood.

**கெசப்பி** *kešappi,* பெ.(n.) பூடுவகை (மச்சபு. சருவ. 8); liquorice-plant.

**கெசப்பிடி** *keša-p-piḍi,* பெ.(n.) யானைக் கொம்பு; the tusk of an elephant.

**கெசப்பிரியம்** *keša-p-piriyam,* பெ.(n.) இலவம் பிசின்; the gum of silk cotton tree.

**கெசபடசு** *keša-paḍasu,* பெ.(n.) **கெசப்பி** பார்க்க; see *kesapi.*

**கெசபுட்பி** *kešapuṭpi,* பெ.(n.) பெருவேம்பு; mountain neem, *melia azedaracham* alias composita.

**கெசபுடம்** *kesapuḍam,* பெ.(n.) நூற்றொரு புடம்; calcination repeated 101 items.

*[கெசம் + புடம்.]*

**கெசபூகம்** *kesapūgam,* பெ.(n.) துவரை (சித். அக.); dholl.

**கெசராசினி** *kešarāšiṉi,* பெ.(n.) பூலா (சித். அக.); black-berried feather foil.

**கெசம்**[1] *kesam,* பெ.(n.) யானை; elephant. *"கெசதுரக முதலான சதுரங்கம்" (தாயு. சித்தர். 6).*

*[Skt. gaja > த. கெசம்.]*

**கெசம்**[2] *kešam,* பெ.(n.) இரண்டு முழம் கொண்ட அளவு; yard-measure.

*[U. gaz > த. கெசம்.]*

**கெசமாமுட்டி** *keša-mā-muṭṭi,* பெ.(n.) எட்டி (மலை); strychnine tree.

**கெசமூசம்** *kešamūšam,* பெ.(n.) இலைப்பாசி; species of duckweed.

**கெசாசனை** *kešāšaṉai,* பெ.(n.) அரசமரம் (யாழ்.அக.); pipal tree.

**கெசாசைநா** *kešāšainā,* பெ.(n.) கையாந்தகரை (மலை); a plant found in moist places.

**கெண்டகச்சிலை** *keṇḍaka-c-cilai,* பெ.(n.) **கண்டகச்சிலை** பார்க்க; see *kaṇḍaka-c-cilai.*

**கெணசங்கியாபாகம்** *keṇa-šaṅgiyā-bāgam,* பெ.(n.) **கணசங்கியாபாகம்** பார்க்க; see *kaṇasaṅkiyābāgam.*

**கெத்தாமார்** *kettāmār,* பெ.(n.) **கத்தாமார்** பார்க்க (இ.வ.); see *kattāmār.*

*[U. gadhā+mār > த. கெத்தமார்.]*

**கெத்தபரிவிருத்தி** *ketta-parivirutti,* பெ.(n.) கணிய (சோதிட) வாய்பாட்டு வகை(வின்.); the number of synodic revolutions of a planet deducted as the first step in the use of the parivirutti tables

த.வ. பரிப்பு வாய்பாடு.

**கெதாயு** *kedāyu,* பெ.(n.) வாழ்நாள் (ஆயுள்) முடிந்தவன்; one whose life is extinct. *"சமர் புரிந்தவன் றானுங் கெதாய வாயினன்" (பாரத. பதினான்காம். 37).*

**கெதானுகெதிகநியாயம்** *kedāṉugediga-niyāyam,* பெ.(n.) **கதானுகதிகநியாயம்** பார்க்க; see *kadānugadiniyāyam.*

*[Skt. gata-anu-gatika-niyāya > த. கெதானுகெதிகநியாயம்.]*

**கெந்தகமிஞ்சிதம்** *kendakamiñjidam,* பெ.(n.) நாகத்தாளி கள்ளி; manyspined prickly pear.

**கெந்தசாரஞ்சம்** *kenda-sārañjam,* பெ.(n.) சந்தனம்; sandal.

**கெந்தபுட்பபத்திரி** *kendapuṭpapattiri,* பெ.(n.) துளசி; holy basil.

**கெந்தரசம்** *kenda-rašam,* பெ.(n.) நறும்பிசின்; fragrant resin.

**கெந்தனம்** *kendaṉam,* பெ.(n.) கோடகசாலை; a very small plant known as coromandal gendarussa.

**கெந்தனோபிதம்** *kenda-ṉōbidam,* பெ.(n.) பரம்பை; Indian mesquit or arjun as penance tree.

**கெந்தாளிரோகம்** *kendāḷi-rōgam,* பெ.(n.) குன்ம நோய்; gastritis (M.L.).

**கெந்திரதூதிசம்** *kendira-dūtišam,* பெ.(n.) பெரு வழுதலை; brinjal of a larger specis.

**கெந்திவிருட்சம்** *kendi-viruṭcam,* பெ.(n.) **கெந்திவிருட்சோகம்** பார்க்க; see *kendi-viruṭcōgam.*

**கெந்திவிருட்சோகம்** *kendi-viruṭcōgam,* பெ.(n.) முன்னை; spino fire-brand teak.

**கெபூரமயம்** *kepūra-mayam,* பெ.(n.) கொடி மாதுளை; lemon citron.

**கெர்ப்பத்தலைவன்** *kerppa-t-talaivaṉ,* பெ.(n.) சவ்வீரம்; corrosive sublimate.

*[கெர்ப்ப + தலைவன்.]*

**கெர்வம்** *kervam,* பெ.(n.) ஆணவம், செருக்கு; pride, arrogance.

*[Skt. garva > த. கெர்வம்.]*

**கெர்விதம்** *kervidam,* பெ.(n.) செருக்குள்ள சொல்; words spoken in pride. *"மாந்தர் கெர்விதங்கள் பேசி வந்து" (பட்டனத்துப். பத்திரகிரி. பக். 343).*

**கெராசி** *kerāši,* பெ.(n.) பூலா; a tall plant of the phyllanthus genus.

**கெருடக்காந்தகம்** *keruḍa-k-kāndagam,* பெ.(n.) செம்பருந்து; red kite-hallastur indus.



**கெருடாபதி** *kerudā-padi,* பெ.(n.) விஷ்ணு காந்தி; *Vishnu* basil; *Vishnu* plant - ersolvulus alsimoides.

**கெரோசின்** *kerōšin,* பெ.(n.) சீமைத்தண்ணி, மண்ணெய்; kerosine.

*[E. kerosine > த. கெரோசின்.]*

**கெவ்வியமலம்** *kevviya-malam,* பெ.(n.) தயிர்; curd.

**கெவின்பலுக்கா** *kevin-palukkā,* பெ.(n.) கப்பலறைக் கதவு; companion door (Naut.).

*[கெவின் + பலுக்கா.]*

*[E. cabin > த. கெவின்.]*

**கெவின்வாசல்** *kevin-vāšal,* பெ.(n.) கப்பலறைக்குச் செல்லும் வழி; companion-way, stair-case leading to the cabin (Naut).

*[கெவின் + வாசல்.]*

*[E. cabin > த. கெவின்.]*

*வாயில் > வாசல்.*

**கெவுதவரானி** *kevudavarāni,* பெ.(n.) வெண்காக்கணம்; white-flowered mussel-shell creeper.

**கெவுனகம்** *kevunagam,* பெ.(n.) கணங்கன் மரம் (விருட்சம்); an unknown tree supposed to posses high virtues.

**கெவுனகலை** *kevuna-kalai,* பெ.(n.) சூரிய கலை; vital air or prana passing through the right nostril.

*[கெவுனம் + கலை.]*

*கல் > கலை.*

**கெவுனகுளிகை** *kevuna-kuligai,* பெ.(n.) வானில் பறப்பதற்காகச் சித்தர்கள் பயன்படுத்தும் ஒரு வகை இதள் (இரச)க் குளிகை; animated mercurial pills used by Siddhars for flying in the aerial region.

*[கெவுனம் + குளிகை.]*

*குள் > குளி > குளிகை.*

**கெவுனசித்தி** *kevuna-sitti,* பெ.(n.) வானத்தில் பறப்பதற்குண்டான ஆற்றல் (சித்தி); success in the art of flying in the aerial region.

**கெவுனம்** *kevunam,* பெ.(n.) 1. வானம்; sky. 2. காக்கைப் பொன் (அப்பிரகம்); mica. 3. பல புடவி (அண்டம்)களுக்கு இடையிலி லுள்ள இடைவெளி; the inter-spaces or regions between the several planets.

**கெவுனம்பாய்-தல்** *kevunam-pāy-,* 2 செ.கு.வி. (v.i.) வானில் பறத்தல்; to fly in the air.

*[கெவுனம் + பாய்-,]*

**கெவுனயோகம்** *kevuna-yōgam,* பெ.(n.) ஒரு வகை ஓகம் (யோகம்); a kind of yoga practice.

**கெவுனலிகம்** *kevuna-ligam,* பெ.(n.) மூலாதாரம்; one of the six psychic centres in the human system known as sacral plescus.

**கெவுனி** *kevuni,* பெ.(n.) வானில் பறக்கக் கூடிய ஆற்றல் (சித்தி) வாய்ந்த சித்தன்; a Siddha skilled in the art of flying in the sky.

**கெற்பவிப்புருதி** *kerpavippurudi,* பெ.(n.) பெண்கள் வயிற்றில் கட்டி (சூதகம்) கட்டுவதனால் மாதவிடாய் காலத்தில் வயிற்றில் வலியுண்டாகி, சூலுண்டாகாது, உடல் மெலிந்து காணும் ஒரு நோய்; a swelling in the womb occasioned by the suspended flow or failure of the monthly course and it is marked by pain in the abdomen, absence of conception, emaciation etc.

**கெற்பாதகினி** *ker-pādagini,* பெ.(n.) சேவகனார் கிழங்கு; a kind of root, used medicinally.

**கெற்பாதபூதகி** *kerpāda-pūdagi,* பெ.(n.) சிற்றுயிரிகளுக்கு எதிரானது (கிருமி எதிரி); that which destroys worms.

**கெற்பாதனம்** *kerpādanam,* பெ.(n.) **கர்ப்பாதானம்** பார்க்க; see *kar-p-pādānam.*

*[கெற்ப(ம்) + ஆதனம்.]*

*குருத்தல் = தோன்றுதல். குரு → கரு → (கருப்பு) – கருப்பம். கரு = சூல், பீள், முட்டை, சேய், குட்டி. த. கரு > Skt. garbha (வ.வ.1:107).*

*[Skt. ā-dhāna > த. ஆதனம்]*

**கேக்குவிரை** *kēkku-virai,* பெ.(n.) சீமைச் சோம்பு; caraway (M.M.128).

*[கேக்கு + விரை.]*

*[E. cake > த. கேக்கு.]*

**கேகாபலம்** *kēkāpalam,* பெ.(n.) மயில்; peacock.



**கேசம்** *kēšam,* பெ.(n.) 1. மக்கள் தலைமயிர்; human hair. *"குறையிவட் குண்டேற் கேசங் குறைத்தற்கு" (பெருங். வத்தவ. 14:29).* 2. விலங்கின் மயிர் (பிங்.); hair of animals.

klis என்னும் வேரிலிருந்து உருவான kēsa என்னும் சொல் வடமொழியில் மாந்தத் தலையில் முளைக்கும் மயிர், குதிரை, அரிமா ஆகியவற்றின் பிடரிமயிர் ஆகிய பொருள்களுடன் வழக்கிலுள்ளது (மா.வி.). இச்சொல் தமிழில் தலைமுடி என்னும் பொருளுடன் தலை என்னும் பொருளிலும் "கேசாதிபாதம்" என்பன போன்றவற்றில் வருகின்றது.

*[Skt. kēsa > த. கேசம்.]*

**கேசகம்** *kēšagam,* பெ.(n.) அத்தி; fig tree.

**கேசபாரம்** *kēšapāram,* பெ.(n.) பெண் மயிர்; woman's hair.

**கேசரஞ்சகம்** *kēša-rañjagam,* பெ.(n.) **கேசரஞ்சனம்**[1] பார்க்க (தைலவ. தைல. 134); see *kēca-rañjanam.*

*[Skt. kēsa+rañjaka > த. கேசரஞ்சகம்.]*

**கேசரஞ்சனதைலம்** *kēšarañjana-tailam,* பெ. (n.) பொற்றலைக்கையாந்தகரை எண்ணெய்; a scented hair-oil prepared from a plant - Ceylon verbesina marigold.

**கேசரஞ்சனம்**[1] *kēša-rañjanam,* பெ.(n.) 1. பொற்றலைக்கையாந் தகரை (சங்.அக.); Ceylon verbesina. 2. தலை மயிர் வளர்க்கும் எண்ணெய் (தைல) வகை; a kind of hair-oil.

**த.வ. கையாந்தகரை**

*[Skt. kēsa+rañjana > த. கேசரஞ்சனம்.]*

வடமொழியில் தலைமயிர்க்கு வண்ணம் ஊட்டும் எண்ணெய் எனப் பொருள் உள்ளது. தலை மயிர்க்குத் தடவும் எண்ணெய் தலைமயிர் வளர்க்கும் தன்மைத்து எனக் கருதியதால் அவ்வாறு பொருள் வரையப்பட்டுள்ளது.

**கேசரஞ்சனம்**[2] *kēšarañjanam,* பெ. (n.) 1. கரிசலாங்கண்ணி; a plant usually found in wet places. 2. பெருங்குறிஞ்சி; conehead.

**கேசரம்** *kēšaram,* பெ. (n.) 1. பூந்தாது; pollon of flowers. 2. மகிழமரம் (பிங்.); pointed-leaved ape-flower. 3. குங்குமப்பூ; saffron.

*[Skt. kēsar > த. கேசரம்.]*

**கேசரமாதயம்** *kēšaramādayam,* பெ.(n.) மகிழமரம்; ape-flower tree.

**கேசராசம்** *kēšarāšam,* பெ.(n.) 1. கடாரநாரத்தை; seville orange. 2. பொற்றலை; Ceylon verbesina.

**கேசராதனம்** *kēsarādanam,* பெ.(n.) இருக்கை (ஆசன) வகை (தத்துவப். 108, உரை); a yogic posture.

**கேசராதிக்கசாயம்** *kēšarādi-k-kaṣāyam,* பெ. (n.) நாககேசரத்தை முதலாகக் கொண்டு திப்பிலி முதலிய கடைச் சரக்குகளைச் சேர்த்துப் பாண்டு நோய்க்காக இறக்குங் கருக்கு (இதனால் மண் தின்னும் ஆசை நீங்கும்); a kind of docoction prepared with Ceylon iron wood as a chief ingredient

along with other bazaar durgs such as long-pepper etc. and prescribed for dropsical anemia, (it is a curative in morbid desire for eating mud etc).

**கேசராமிலம்** *kēšarāmilam,* பெ.(n.) புளி மாதுளை; sour pomegranate.

**கேசரிப்பவுடர்** *kēšari-p-pavuḍar,* பெ.(n.) **கேசரிப்பொடி** பார்க்க; see *kēšari-p-poḍi.*

*[Skt. kēsarin > த. கேசரி.]*

*[E. powder > த. பவுடர்.]*

**கேசரிப்பொடி** *kēšari-p-poḍi,* பெ.(n.) மஞ்சள் நிறமுள்ள ஒரு வகைப் பொடி; a powder in the colour of saffron.

த.வ. செம்பொடி.

*[Skt. kēsarin > த. கேசரி+பொடி.]*

புள் → பூள் → (பூழ்) → பூழி = தூள், புழுதி. புள் → பூழ்தி → புழுதி → புள் → (பொள்) → பொடி (மு.தா. 127).

**கேசரிபாத்து** *kēšari-bāttu,* பெ.(n.) குங்குமப்பூ சருக்கரை முதலியவை கலந்த கலவைச் சோறு வகை; rice boiled with saffron, sugar and other ingredients.

த.வ. செம்பொடிச்சோறு.

*[Mhr. kēsari-bhāta > த. கேசரிபாத்து.]*

**கேசரிமார்க்கம்** *kēšari-mārkkam,* பெ.(n.) வானத்தினடு; the region of mid-air.

**கேசரியாசனம்** *kēšari-y-āšanam,* பெ.(n.) கணைக்கால்கள் பிட்டத்தைத் தொடவும், விரித்த கைவிரல்கள் துடையிற் படவும், வாய் மலர்ந்தும், பார்வை மூக்கு நுனியை நோக்கியும் இருக்கும் ஓக இருக்கை (யோகாசன) வகை; a yōgic posture in which the legs are disposed in such a way that the left ankle touches the right side and the right ankle touches the left side of perineum, the hands are on the thigh with stretesed fingers the mouth is kept open and the gaze is fixed on the tip of the nose, one of nine *āšanam.*

த.வ. அரிஓகநிலை.

*[Skt. kēsarin + āsana > த. கேசரியாசனம்.]*

**கேசரியோகம்** *kēšari-yōgam,* பெ.(n.) பிறப்புக் (சென்ம) காலத்தில் திங்களுள்ள இடத்துக்கு நடுஇடத்தில் (கேந்திரலக்கினத்தில்) வியாழன் இருக்கும் ஓகம் (சங்.அக.); situation of Jupiter in the Ist, 4th, 7th or 10th house from the position of the moon at the time of the birth of a child, considered auspicious.

*[Skt. kēsarin-yōga > த. கேசரியோகம்.]*

**கேசரிரூபம்** *kēšari-rūpam,* பெ.(n.) சூடம் (கற்பூரம்); camphor.

**கேசரீகம்** *kēšarīgam,* பெ.(n.) நாயுருவி; a plant growing in hedges and thickets.



**கேசருகாசம்** *kēšaru-kāšam,* பெ.(n.) சிறுநீலி; a small species of indigo plant.

**கேசரோமம்** *kēša-rōmam,* பெ.(n.) பூனைக்காலி; velvet been.

**கேசவர்த்தனம்** *kēšavarttanam,* பெ.(n.) ஆனைக் குருந்தோட்டி; common balah.

**கேசவரிட்டம்** *kēšavariṭṭam,* பெ.(n.) பூவா மரம்; a tree bearing no flowers.

**கேசவற்குத்தோழன்** *kēšavaṟku-t-tōḻan,* பெ.(n.) கண்ணனுக்குத் தோழனான, அருச்சுனன் (சூடா.); the friend of *Krisṇa,* Arjuna.

*[கேசவற்கு + தோழன்.]*

*[கேசவன் + கு → கேசவற்கு.]*

*[Skt. kēsa-va > த. கேசவன்.]*

*துள் > தொள் > தொழு > தோழம் > தோழன்*

**கேசவன்** *kēsavan,* பெ.(n.) 1. திருமால்; Visṇu. *'கேசவன்றமர்' (திவ். திருவாய். 2,7,1).* 2. சோழன் (பிங்.); *Chōla* king.

**சக்சுரோகம்** *šaksu-rōgam,* பெ. (n.) கண்ணோய்; disease of the eye (சா.அக.).

**சக்தன்** *šakdaṉ,* பெ.(n.) **சக்திமான்** பார்க்க; see *saktimāṉ.*

**த.வ. திறமையாளன், ஆற்றலாளன்.**

*[Skt. šakta > த. சக்தன்.]*

**சக்தி** *šakti,* பெ.(n.) **சத்தி** பார்க்க; see *šatti.*

**த.வ. ஆற்றல், திறமை, வல்லமை.**

*[Skt. šakti>த. சக்தி.]*

**சக்திபூசை** *šakti-pūšai,* பெ.(n.) பேராற்றலைப் பூசிக்கும் வாமமார்க்கம்; worship of sakti or the principle of energy in Godhead.

**த.வ. காளிவழிபாடு.**

*[சக்தி + பூசை.]*

*[Skt. šakti > த. சக்தி.]*

*[பூசு→பூசி→பூசை = வழிபாடு செய்தல்.]*

**சக்திபோற்றல்** *šakti-pōṟṟal,* பெ.(n.) ஆண் வித்தமிழ்தை (விந்தைக்) காப்பாற்றல்; conservation of energy through preservation of semen in the system (சா.அக.).

*[சக்தி + போற்றல்.]*

*[Skt. šakti → த. சக்தி.]*

**சக்திமாற்றம்** *šaktimāṟṟam,* பெ.(n.) ஒன்றன் வலிமையைப் பிறிதொன்றாக மாற்றுதல்; converting energy from one from into another (சா.அக.).

**த.வ. திறன்.**

*[சக்தி + மாற்றம்.]*

*[Skt. šakti> த. சக்தி.]*

**சக்திமான்** *šaktimāṉ,* பெ.(n.) ஆற்றலுள்ளவன் (இ.வ.); strong man, able or skilful person, a man of powerful personality.

**த.வ. திறலன்.**

*[Skt. šakti-māṉ> த. சக்திமான்.]*

**சக்திமுகம்** *šakti-mugam,* பெ.(n.) அரசாணை; (T.A.S.) royal mandate .

*[சக்தி + முகம்.]*

*[Skt. šakti> த. சக்தி.]*

**சக்தியானுசாரம்** *šaktiyāṉušāram,* பெ. அ. (adv.) ஆற்றலுக்கு ஏற்ப; to the best of one's ability. *"சக்தியானுசாரம் தானஞ் செய்ய வேண்டும்".*

*[Skt. šakti+anu-sāra>த. சக்தியானுசாரம்.]*

**சக்பந்தி** *šakpandi* பெ.(n.) **செக்குபந்தி** பார்க்க; see *šekku-pandi.*

*[U. cakbandi> த. சக்பந்தி.]*

**சக்ரகம்** *šakragam,* பெ.(n.) **சக்கரகம்** பார்க்க; see šakkaragam.

*[Skt. cakraka>த. சக்ரகம்.]*

**சக்ரவத்துப்பிடி-த்தல்** *šakravattu-p-piḍi-,* 4 செ.கு.வி.(v.i.) மாமன்னரென்ற சிறப்புப்பட்டம் எய்துதல்; to proclaim title to sovereignty. *"நடைச் சக்கரவத்துப்பிடிக்கலாம் படி" (ஈடு. 3, 9,9).*

*[சக்ரவத்து + பிடி.]*

*[Skt. cakravarti>த. சக்ரவத்து.]*

**சக**[1] *šaga,* பெ.அ. (adj.) ஒரே துறையில் பணிபுரிபவர்கள்; collegue, fello. *"சக ஆசிரியர்களே ஒன்றுபடுங்கள்! சக எழுத்தாளருக்கு நேர்ந்தது நமக்கும் நேரலாம்"*

**த.வ. உடன்கூட்டு.**

*[Skt. saha>த. சக.]*

**சக**[2] *šaga,* பெ.(n.) கணிதத்தில் கூட்டல்குறி (இலங்.); (in arithmetic) plus sign. *"ஐந்து சக ஐந்து சமன் பத்து".*

**த.வ. கூட்டல்.**

**சககமனம்** *šaga-gamaṉam,* பெ.(n.) உடன்கட்டையேறுகை; self-immolation of a Hindu widow on her husband's funeral pyre, concremation, sati.

**த.வ. மாலை நிலை.**

*[சக + கமனம்.]*

*[Skt. saha > சக.]*

*கம்→கமனம் = செல்லுதல்.*

**சகலரும்** *šagalarum,* பெ.(n.) எல்லோரும், அனைவரும் (அ.வ.); all, everyone. *"சகலரும் இதையே சொல்கிறார்கள்" (கிரியா.).*

*[சகலர் + உம்.]*

*[Skt. sakala>த. சகலர்.]*

**சககாரி** *šaga-gāri,* பெ.(n.) துணைக்காரணம்; secondary cause. *"அடுத்துவருமனன சககாரிகளாம்" (வேதா.சூ.134).*

*[Skt. sahakāri>த. சககாரி.]*

**சகச்சிரம்** *šaga-c-ciram,* பெ.(n.) 1. ஆயிரம்; the number 1000. 2. சிவத்தோன்றியங்கள் இருபத்தெட்டனுள் ஒன்று (சைவச.பொது.332, உரை); an ancient *Šaivam* scripture in sanskrit, one of 28 *Sivāgamam.*

*[Skt. sahasra>த. சகச்சிரம்.]*

**சகசட்சு** *šaga-šaṭcu,* பெ.(n.) கதிரவன் (யாழ்.அக.); sun, as the eye of the world.

*[Skt. jagat-cakṣuḥ> த. சகசட்சு.]*

**சகசண்டி** *šaga-šaṇḍi,* பெ.(n.) பெருமுரடன் (இ.வ.); rough, quarrelsome person.

த.வ. சண்டைக்காரன்.

*[சக + சண்டி.]*

*[Skt. jagat>த.சக]*

**சகசநிட்டை** *šagaša-niṭṭai,* பெ.(n.) பயிற்சியால் (அப்பியாசத்தால்) ஒருவனுக்கு இயற்கையாயமைந்த ஊழ்கம் (நிட்டை); religious meditation that has become second nature by long practice. *"இன்னணஞ் சகசநிட்டை யெய்திய நந்திப்புத்தேள்" (தணிகைப்பு.நந்தியு.147).*

த.வ. இயல்பு ஊழ்கம், தன்மெய்யுணர்வு.

*[Skt. saha-ja+ni-ṣṭha > த. சகசநிட்டை.]*

**சகசமலம்** *šagasa-malam,* பெ.(n.) உயிர்கட்கு இயல்பாயுளதாகிய ஆணவமலம் (சிவப்பிர.2, 20, உரை); the *āṇava-malam,* as an obstructive principle or bond inherent in the soul.

*[சகச(ம்) + மலம்.]*

த.வ. பிறப்பு மலம்.

*[Skt. saha-ja>த. சகசம்.]*

**சகசரநாமம்** *šagašara-nāmam,* பெ.(n.) கடவுளின் ஓராயிரம் திருப் பெயர் (நாமங்)களைக் கூறும் நூல்; sacred book containing thousand names of a deity.

த.வ. ஆயிரம் பெயர்.

*[Skt. sahas-ra-nāma> சகசுரநாமம்.]*

**சகசரநாமார்ச்சனை** *šagašara-nāmārccaṉai,* பெ. (n.) கடவுளுடைய ஓராயிரம் பெயர்(நாமங்)களையும் ஒவ்வொன்றாகச் சொல்லி மலர் முதலியவற்றை அவன் திருவடிகளில் இட்டு வழிபாடுசெய்கை; worship of a deity by offering at its feet a leaf, flower or pinch of saffron on pronouncing each of its thousand names.

த.வ. ஆயிரம் பூசனை.

*[Skt.sahasra-nāma+arcanā> த. சகசர நாமார்ச்சனை.]*

**சகசரம்** *šagašaram,* பெ.(n.) ஆயிரம்; the number 1000.

*[Skt. sahasra>த. சகசுரம்.]*

**சகசரம்** *šagasaram,* பெ.(n.) **சகசா** பார்க்க (வின்.); see *šagašā.*

*[Skt. sahā-jara>த. சகசரம்.]*

**சகசரன்** *šagašaraṉ,* பெ.(n.) தோழன்; friend, companion, associate.

*[Skt. saha-cara>த. சகசரன்.]*

**சகசரிதம்** *šaga-šaridam,* பெ.(n.) உடன் நிகழ்வது; concomitant. *"ஆணவ சகசரிதமாக" (சி.சி.2.80, சிவாக்.).*

த.வ. உடனிகழ்ச்சி.

*[Skt. saha+carita>த. சகசரிதம்.]*

**சகசவேது** *šagaša-v-ēdu,* பெ.(n.) கூறப்பெற்ற பண்பினால் பண்பியைப் பற்றி அறியும் வழி, ஏது (சி.சி.அளவை.10, சிவாக்.); inference by which a thing is determined from a predication of its nature.

*[Skt. saha-ja+hētu>த. சகசவேது.]*

**சகசன்** *šagašaṉ,* பெ.(n.) உடன்பிறந்தவன் (சகோதரன்) (சங்.அக.); brother.

த.வ. பிறவன்.

*[Skt. saha-ja>த. சகசன்.]*

**சகசாலக்கில்லாடி** *šaga-šāla-k-killāḍi,* பெ.(n.) 1. தந்திரக்காரன்; a cunning person. 2. நாடறிந்த மாயவித்தைக்காரன்; a famous magician.

த.வ. படுகில்லாடி.

*[சகசாலம் + கில்லாடி.]*

[Pkt. jaga>Skt. jagat> த. சகம்.]

சலுக்கு → சாலக்கு → சாலம்.

கிள்ளை + ஆடி →கிள்ளையாடி →கில்லாடி.

**சகசாலப்புரட்டன்** *šaga-šāla-p-purāṭṭaṉ,* பெ.(n.) பெருமோசக்காரன்; consummate deceiver, as a magician.

த.வ. பெரும்புரட்டன்.

[சகசாலம் + புரட்டன்.]

[Pkt. jaga→ Skt. jagat→ த. சகம்.]

**சகசாலம்** *šaga-cālam,* பெ.(n.) மாய வித்தை; magical illusion. "மானெனுமோர் சகசாலச் சிறுக்கி" (அருட்பா.vi, தான்பெற்ற.9).

[சக + சாலம்.]

[Pkt. jaga→Skt. jagat→த. சகம் +சாலம்.]

**சகசாலவித்தை** *šaga-šāla-vittai,* பெ.(n.) ஞாலம் புகழும் மாயக்கலை; a famous magic or jugglery.

த.வ. பெரும்மாயக்கலை.

[சக+சால(ம்) + வித்தை.]

[Pkt. jaga>Skt. jagat> த.சகம்.]

**சகசா** *šagaša,* பெ.(n.) சிறுகுறிஞ்சா (மலை); small Indian ipecacuanha.

[Skt. sahā-ja>த. சகசா.]

**சகசாட்சி** *šaga-šāṭci,* பெ.(n.) (உலக முழுவதையுங் காண்பவன்) கதிரவன் (வின்.); sun, as spectator of the whole world.

[Skt. jagat + sāksin > த. சகசாட்சி.]

**சகசாதிசயம்** *šagašādišayam,* பெ.(n.) விந்தை (அதிசயம்) மூன்றனுள் ஒன்று (சீவக.2813, உரை); innate pre-eminence, one of the three *adišayam.*

[Skt. saha-ja+ati-šaya>த. சகசாதிசயம்.]

**சகசாலக்காரன்** *šaga-šāla-kāraṉ,* பெ.(n.) **சகசாலக்கில்லாடி** பார்க்க; see *šaga - šāla -k-killāḍi.*

த.வ. வித்தைக்காரன்.

[சகம் + சாலக்காரன்.]

[Pkt. jaga> Skt. jagat>த. சகம்.]

**சகசிரதாரை** *šagašira-dārai,* பெ.(n.) 1. முத்துமாலை வகை (தக்கயாகப்.106, உரை); a garland of pearls. 2. திருநீராட்டில் (அபிஷேகத்தில்) பயன்படுத்தப்படுந் துளைகளுள்ள தட்டு (இ.வ.); a seive-like vessel used in *abhiṣēkam.*

[Skt. sahasra+tārā> த. சகசிரதாரை.]

**சகசிரம்** *šagaširam,* பெ.(n.) **சகச்சிரம்**[1] பார்க்க (திவா.); see *saga-c-ciram.*

[Skt. sahasra> த. சகசிரம்.]

**சகசுரபேதி** *šagašurabēdi,* பெ.(n.) மாழை (உலோக) மண் வகை; a kind of ore.

**சகசுராரசக்கரம்** *šagašurāra-šakkaram,* பெ.(n.) புத்தரது பாதத்திலுள்ள வரி (இரேகை)ச் சிறப்பு. (விசேடம்) (மணிமே. 5, 104, உரை); a discus-mark on the foot of Lord Buddha, as having thousand spokes.

த.வ. ஆயிரஆரச்சக்கரம்.

[சகசுரார(ம்) + சக்கரம்.]

[Skt. sahasra> த. சகசுரார(ம்).]

[சருக்கு→சருக்கரம்→சக்கரம் (வே.க.239).]

**சகசுராரத்தட்டு** *šagašurāra-t-taṭṭu,* பெ.(n.) **சகத்திரதாரை** பார்க்க; see *šagattira-tārai.*

[சகசுராரம் + தட்டு.]

[Skt. sahasra-dhārā>த. சகசுரார(ம்).]

**சகசை** *šakašai,* பெ.(n.) உடன்பிறந்தாள் (சங்.அக.); sister.

த.வ. பிறவி.

[Skt. saha-jā>த. சகசை.]

**சகசோதி** *šaga-šōdi,* பெ.(n.) 1. பேரொளி; brilliant light that illumines the whole world, over powering light. 2. (உலகிற்கு ஒளியாயிருப்பவன்) கடவுள் (வின்.); God, as the light of the world.

[Skt. jagat+jyotis>த. சசசோதி.]

**சகடோல்** *šagaḍōl,* பெ.(n.) அம்பாரி (வின்.); howdah.

[U. cakdōl>த. சகடோல்.]

**சகத்குரு** *šagat-kuru,* பெ.(n.) பரமகுரு (இ.வ.); preceptor of the world, an eminent religious leader.

[சக(ம்) + குரு.]

[Skt. jagat> த. சகம்.]

**சகத்தன்** *šagattaṉ,* பெ.(n.) நடுவு நிலைமை யுள்ளவன்; unbiassed, impartial person. *"சகத்தனாய் நின்றொழுகும் சால்பு" (பழ.339).*

த.வ. நயனாளன்.

*[Skt. sa-hārda>த. சகத்தன்.]*

**சகத்திரதாரம்** *šagattira-dāram,* பெ.(n.) ஆயிரம் முனைகளையுடைய திருமாலின் சக்கரப்படை (யாழ்.அக.); discus of *Viṣṇu,* as thousand pointed.

த.வ. மாலாழி.

*[Skt. sahas-ra-dhāra>த. சகத்திரதாரம்.]*

**சகத்திரதாரை** *šagattira-dārai,* பெ.(n.) பல கண்களுள்ள பூசை (அபிடேக)த் தட்டு; sieve like vessel used in bathing an idol. *"சகத்திர தாரையாலே.... நீராட்டி" (விநாயகபு. பட்டாபி.74).*

த.வ. ஆயிரம் கண்தட்டு.

*[Skt. sahasra-dhāra>த. சகத்திரதாரை.]*

**சகத்திரபேதி** *šagattira-pēdi,* பெ.(n.) 1. பெருங்காயம்; asafoetida. 2. **சகச்ரபேதி** பார்க்க; see *šagasrapēdi.*

*[Skt. sahasravēdhin> த. சகத்திரபேதி.]*

**சகத்திரம்** *šagattiram,* பெ.(n.) சகச்சிரம்; a kind of ore. *"சகத்திர கோதான பலன்" (சேதுபு.பலதீர்.19).*

*[Skt. sahasra>த. சகத்திரம்.]*

**சகத்திரவீரியம்** *šagattira-viriyam,* பெ.(n.) அருகு (மலை.); hurrially grass.

*[சகத்திர(ம்) + வீரியம்.]*

*[Skt. sahasra>த. சகத்திர(ம்).]*

*வீரம்→வீரி→வீரியம்.*

**சகத்திரவேதி** *šagattira-vēdi,* பெ.(n.) **சகத்திரபேதி** பார்க்க; see *šagattira-pēdi.*

*[Skt. sahasra-vēdhin>த. சகத்திரவேதி]*

**சகத்திராட்சன்** *šagattirāṭcaṉ,* பெ.(n.) (ஆயிரங்கண்ணுடையோன்) இந்திரன் (வின்.); Indra, as thousand eyed.

*[Skt. sahasrākṣa> த. சகத்திராட்சன்.]*

**சகத்து** *šagattu,* பெ.(n.) உலகம்; universe, world, earth.

*[Pkt. jagat → Skt. jagat >த. சகத்து.]*

**சகதண்டம்** *šagad-aṇḍam,* பெ.(n.) உலக உருண்டை; world, as being spherical, universe. *"பெற்றாள் சகதண்டங்க ளனைத்தும்" (பாரத. அருச்சுனன்றீர்.15).*

*[Skt. jagat+aṇḍa> த. சகதண்டம்.]*

**சகதலப்புரட்டன்** *šaga-dala-p-puraṭṭaṉ,* பெ.(n.) பெருஏமாற்றுக்காரன்; consummate cheat, as one capable of over turning or upsetting the whole world.

த.வ. உலகப்புரட்டன்.

*[சக(ம்) + தலம் + த. புரட்டன்.]*

*[Pkt. jaga → Skt. šakti → த. சகம்.]*

**சகதாத்திரி** *šaga-dāttiri,* பெ.(n.) கொற்றவை (துர்க்கை) (உலகத்திற்குத் தாய்) (யாழ்.அக.); see *Durgāi,* as the mother of the universe.

த.வ. வெற்றிச்செல்வி.

*[Skt. jagat+dhātrī>த. சகதாத்திரி.]*

**சகதாத்துமா** *šaga-dāttumā,* பெ.(n.) கடவுள் (உலகத்திற்கு உயிரானவன்); God, as the soul of the universe.

*[Skt. jagat+ātmā> த. சகதாத்துமா]*

**சகதாதான்மியம்** *šagadādāṉmiyam,* பெ.(n.) உலகத்தில் அழுந்திய பற்று (வின்.); earthly connections worldliness, secularity.

*[Skt.jagat+tādātmya>த. சகதாதான்மியம்.]*

**சகதீசன்** *šagad-īšaṉ,* பெ.(n.) கடவுள் (உலகத்திற்குத் தலைவன்); God, as lord of the universe.

த.வ. ஞாலமுதல்வன்.

*[Skt. jagad-īša> த. சகதீசன்.]*

**சகதேவம்** *šagadēvam,* பெ.(n.) உண்கலமாக பயன்படுத்தத் தகாத இலைகளுடைய ஒருவகை மரம்; a kind of tree whose leaves should not be used for serving food. *"சகதேவ முண்முருக்கு" (அறப்.சத.73).*

[Skt. sahadēva>த. சகதேவம்.]

**சகதேவன்** *šagadēvaṉ,* பெ. (n.) பாண்டவர் ஐவரின் இளையோன் (பாரத.); *Šahadēvaṉ,* the youngest of the *Pāṇḍu* princes, one of *Pañja-pāṇḍavar.*

[சகம் + தேவன்.]

[Skt. saha>த. சகம்.]

**சகதேவி¹** *saga-dēvi,* பெ.(n.) நிலமகள் (வின்.); Goddess of the earth.

[சகம் + தேவி.]

[Skt. jagat>த.சகம்.]

**சகதேவி²** *saga-dēvi,* பெ.(n.) நெய்ச்சிட்டி (தைலவ.தைல.64); wild cumin.

[Skt. sahadēvi> த. சகதேவி.]

**சகதேவி³** *šaga-dēvi,* பெ.(n.) திருமகள் (இலக்குமி) (யாழ்.அக.); Lakshmi.

[Skt. jagat> த.சகம் + த. தேவி.]

**சகதேவித்தைலம்** *šagadēvi-t-tailam,* பெ.(n.) நெய்ச்சிட்டியினின்று வடிக்கப்பட்ட தைல மருந்து (தைலவ.தைல.64); a medicinal oil extracted from *šagadēvi.*

[Skt.sahadēvi+tailam > த. சகதேவித் தைலம்.]

**சகந்நாதம்** *šagan-nādam,* பெ.(n.) ஒரிசா மாநிலத்தில் பூரி என்று வழங்கும் (விட்டுணு) மாலியத்தலம்; Puri in Orissa famous as a *Viṣṇu* shrine and place of pilgrimage.

[Skt. jagan-nātha> த. சகந்நாதம்.]

**சகந்நாதன்** *šagan-nādaṉ,* பெ.(n.) 1. கடவுள் (உலகிற்கு இறைவன்); God, as Lord of the world. 2. பூரியில் கோயில் கொண்டுள்ள திருமால்; *Viṣṇu* worshipped in Jagannath.

**த.வ. உலகிறைவன்.**

[Skt. jagan-nātha > த. சகந்நாதன்.]

**சகநாதன்** *šaga-nādaṉ,* பெ.(n.) **சகந்நாதன்** பார்க்க; see *sagan-nādaṉ.* *"தைய லோர்புறம் வாழ் சகநாதனே" (தாயு. பொன்னை.59).*

[Skt. jagat + nātha> த. சகநாதன்.]

**சகநாயகன்** *šaga-nāyagaṉ,* பெ.(n.) காந்தம் (யாழ்.அக.); magnet.

**சகப்பிராந்தி** *šaga-p-pirāndi,* பெ.(n.) உலகவின்பத்தால் ஏற்படும் மயக்கம்; infatuation in worldly enjoyments and attractions.

**த.வ. மண்ணுலகப்பற்று.**

[Skt. jagat +bhrānti>த. சகப்பிராந்தி.]

**சகப்புரட்டன்** *šaga-p-puraṭṭaṉ,* பெ.(n.) **சகதலப்புரட்டன்** பார்க்க; see *šagatala-p-puraṭṭaṉ.*

[சக+புரட்டன்.]

[Skt. jagat>த. சக.]

**சகப்புரட்டு** *šaga-p-puraṭṭu,* பெ.(n.) பெருமோசம் (இ.வ.); audacious swindling.

[சகம்+புரட்டு.]

[Skt. jagat>த. சகம்.]

**சகப்புரளி** *šaga-p-puraḷi,* பெ.(n.) **சகப்புரட்டு** பார்க்க (இ.வ.); see *šaga-p-puraṭṭu.*

[சகம்+புரளி.]

[Skt. jagat> த. சகம்.]

**சகபாடி¹** *šaga-pāḍi,* பெ.(n.) ஒருசாலை மாணாக்கன்; classmate, school-fellow.

**த.வ. பள்ளித்தோழன்.**

[Skt. saha-pāṭhi>த. சகபாடி.]

**சகபாடி²** *šaga-pāḍi,* பெ.(n.) **சகலபாடி** பார்க்க; see *šagala-pāḍi.*

**சகபாடி³** *šaga-pāḍi,* பெ.(n.) கூடப்பாடுவோன் (யாழ்.அக.); accompanist.

**த.வ. உடன்பாடி.**

[Skt. saha-pāṭhin> த. சகபாடி.]

**சகம்¹** *šagam,* பெ. (n.) உலகம் (பிங்.); earth, world, universe.

[Pkt. jaga>**Skt.** jagat> த. சகம்.]

**சகம்²** *šagam,* பெ.(n.) 1. **சகாப்தம்** பார்க்க; see *šagāptam.* 2. குறிப்பிட்ட காலங்களிலிருந்து தொடங்கிக் காலங்கணிக்க வழங்கப்பட்டு வரும் ஆண்டு மானம்; era, in general.

[Skt. šaka> த. சகம்.]

**சகம்³** *šagam,* பெ.(n.) 1. பாம்புச்சட்டை (சங்.அக.); slough of a serpent. 2. சட்டை (அக.நி.); coat.

[Skt. jahaka> த. சகம்.]

**சகமாதா** *šaga-mādā,* பெ.(n.) மலைமகள் (பார்வதி) (கூர்மபு.திருக்கலியாண.23); *Pārvati.*

*[Skt. jaga+mātā> த. சகமாதா.]*

**சகமார்க்கம்** *šaga-mārkkam,* பெ.(n.) கடவுளைப் போல் வடிவம் பெறுதற்குரிய ஒக (யோக) நெறி; *yōgā,* as the path leading to *cārūppiyam. "சகமார்க்கம்.... அட்டாங்க யோகமுற்று முழத்தல்" (சி.சி.8, 21).*

**த.வ. தோழமைநெறி.**

*[Skt. saha+mārga> த. சகமார்க்கம்.]*

**சகமீன்றவள்** *šagam-īnraval,* பெ.(n.) (உலகங்களைப் பெற்றவள்) உமை (பிங்.); *Pārvati,* as the mother of the universe.

*[சகம் + ஈன்றவள்]*

*[Skt. šaha> த. சகம்]*

*ஈல் →ஈன் → ஈன்ற + அவள்.*

**சகமுனியா** *šagamuniyā,* பெ.(n.) மாமூதா என்னுங் கொடி (M.M.); gum scam-mony.

**சகர்ப்பபிராணாயாமம்** *šagarppa-pirāṇāyāmam,* பெ.(n.) மந்திரத்தோடு செய்யப்படும் வளிநிலை (பிராணாயாமம்) (திருக்காளத்.பு. ஞானயோ. 16); restraint of breath, practised with the use of mantras.

**த.வ. மந்திர வளியோகம்.**

*[Skt. sa-kalpa+pirāṇāyāma> த. சகர்ப்பபிராணாயாமம்.]*

**சகரர்** *šagarar,* பெ.(n.) கடலுண்டாகுமாறு (பூமியை)த் தோண்டியவரான சகரமக் (புத்திரர்)கள்; the sons of sagara, who are believed to have dug out of the sea. *"சகரர் தொட்டலாற் சாகர மெனப் பெயர் தழைப்ப" (கம்பரா.அகலி.43).*

**த.வ. கடலகழர்.**

*[Skt. sāgara> த. சகரர்.]*

இத்தொன்மக்கதையின் மூலம் தென்தமிழகக்கந்தபுராண காலத்து ஆகலாம். கடல் கொண்ட குமரி நாட்டின் கிழக்கிலிருந்ததாகக் கூறப்படும் இந்துமாக்கடல் பகுதிக்குத் தொடுகடல் எனும் பெயர் இருந்தது. தோண்டிய கடல்தொடுகடல் எனப்பட்டது. கடல்வழி மரத்தோணிப் போக்குவரத்துக்கு இடைஞ்சலாக இருந்த தீவுநில இணைப்புகளை வெட்டிக்கால்வாய் உண்டாக்கிய பழந்தமிழக மன்னர் மரபினர் கடலர் (சகரர்) – கடலகழர் எனும் பெயர் பெற்றிருக்கலாம்.

**சகராதனம்** *šagarādanam,* பெ. (n.) ஒகவிருக்கை (யோகாசன) வகை (தத்துவப்.109, உரை); *(šaiva)* a yogic posture.

*[சகரா + ஆதனம்.]*

*[Skt. sakara>த. சகர.]*

**சகரூபன்** *šaga-rūban,* பெ.(n.) உடன்பிறந்தவன் (யாழ்.அக.); brother.

*[Skt. saha+rūpa> த. சகரூபன்.]*

*த. உருவம் > Skt. rūpa.*

**சகலகலாவல்லவன்** *šagala-kalā-vallavan,* பெ.(n.) எல்லாக் கலைகளுங் கற்றுத் தேர்ந்தவன்; person well-versed in all branches of learning.

*[சகலம் + கலா + வல்லவன்.]*

*[Skt. sakala+kalā> த. சகலகலா.]*

*த. கலை > Skt. kalā*

**சகலகலாவல்லி** *sagala-kalā-valli,* பெ.(n.) (கலைகளனைத்திற்கும் உரியவள்) கலைமகள்; Kalaimagaḷ, as the Goddess of all learning. *"சகலகலாவல்லி மாலை" (குமர. பிர.சகல).*

**த.வ. அருங்கலைச்செல்வி.**

**சகலகுணசம்பன்னன்** *šagala-kuṇa-cam-pannan,* பெ.(n.) நற்குணங்களெல்லாம் நிரம்பியவன்; one endowed with all good qualities.

**த.வ. சான்றோன்.**

*[சகல + குணம் + சம்பன்னன்.]*

*[Skt. sakala>த. சகல + குணம் + panna.]*

**சகலத்திராள்** *šagala-t-tirāḷ,* பெ. (n.) எல்லோரும் (இ.வ.); all persons, including men, women and children.

**த.வ. ஐந்திணையார்.**

*[Skt.sakala > சகலம் + த. திரள்>திராள்.]*

**சகலபாசனம்** *šagala-pāšaṉam,* பெ. (n.) அருகன் முக்குடையுள் ஒன்று (சூடா.); an umbrella of Arhat, one of mu-k-kuḍai.

*[Skt. sakala+bhāajana →த. சகலபாசனம்.]*

**சகலபாடி** *šagala-pāḍi,* பெ.(n.) **சகலன்** பார்க்க; see *sakalaṉ.*

*[சகலம் + பாடி.]*

*[Skt. sakula>த. சகல.]*

*படு → பாடி*

**சகலம்**[1] *šagalam,* பெ.(n.) 1. எல்லாம்; all, the whole. *"சகலத்திற்குநேத்திரமாகி நின்றோன்" (உத்தரரா.அசுவமேத.1).* 2. **சகலாவத்தை** பார்க்க; see *sagalāvattai. "கலாதிசேர்ந்த சகலமாந் தன்மை" (சிவப்பிர.உண்மை.4, 12).*

**த.வ. எல்லாம்.**

*[Skt. sa-kala> த. சகலம்.]*

**சகலமங்கலை** *šagala-maṅgalai,* பெ.(n.) மலைமகள் (யாழ்.அக.); *'Malaimagaḷ.*

*[Skt. sakala + த. மங்கலம் > மங்கலை.]*

**சகலமோகினி** *šagala-mōgiṉi,* பெ.(n.) உலகத் தோற்றத்திற்குக் காரணமாயுள்ள மாயை சக்தி (வின்.); *māyā,* the power of illusion in creation, personified as a female principle obscuring the mind.

**த.வ. மாயை மகள்.**

*[Skt. sakala+mōhiṉi> த. சகலமோகினி.]*

**சகலர்** *šagalar,* பெ.(n.) கடை மக்கள் மும்மலமுடைய ஆதன்; souls of the lowest class subject to mummalam. *"அஞ்ஞான ரச்சகலத்தர் சகலராம்" (திருமந்.498).*

*[Skt. sakala> த. சகலர்.]*

**சகலவியாபி** *šakala-viyāpi,* பெ.(n.) **சர்வவியாபி** பார்க்க; God, as omni present.

**த.வ. அனைத்தூடி.**

*[Skt. sa-kala+vyāpin> த. சகலவியாபி.]*

**சகலன்** *šagalaṉ,* பெ.(n.) தன் மனைவியின் உடன் பிறந்தாள் கணவன் (பிங்.); wife's sister's husband.

*[Skt. sakula> த. சகலன்.]*

**சகலாகமபண்டிதர்** *šagalāgama-paṇḍidar,* பெ. (n.) சிவஞானசித்தியார் இயற்றிய அருணந்தி சிவாசாரியர்; *Aruṇanti-Šivācāriyar,* the author of *Šiva-ñāṉa-cittiyār,* as learned in all the *Āgamās.*

*[சகலாகமம் + பண்டிதர்.]*

*[Skt. sa-kala+āgama>த. சகலாகமம்.]*

*பண்டு → பண்டம் → பண்டிதம் → பண்டிதர்*

**சகலாத்துக்கீரை** *šagalāttu-k-kīrai,* பெ.(n.) கீரை வகை (வின்.); sorrel.

*[சகலாத்து + கீரை.]*

*[Port. escarlata > U.saklāt + த. சகலாத்து + கீரை.]*

**சகவாசம்** *šagavāšam,* பெ.(n.) நட்பு; association, friendship, intercourse.

*[Skt. saha-vāsa> த. சகவாசம்.]*

**சகவாசி** *šaga-vāši,* பெ.(n.) நண்பன் (பாண்டி.); associate.

*[Skt. saha-vāsin> த. சகவாசி.]*

**சகளதத்துவம்** *šagaḷa-tattuvam,* பெ.(n.) வழிபாடு (கிரியை) மிகுந்து அறிவு குறைந்த தூயமெய்ப்பொருள் (ஈச்சுர தத்துவம்) (சி.சி.1,65, ஞானப்.); *(Šaivam.)* the function of God in which the principle of energy predominates over that of wisdom.

*[சகளம் + தத்துவம்.]*

*[Skt. sakala>த. சகளம்+தத்துவம்.]*

**சகளபஞ்சகம்** *šagaḷa-pañjagam,* பெ.(n.) மாநோன்புடையாரது (மகாவிரதருடைய) முழுமையான பணி விடைசெய்கைக்குரிய மது மச்சிய மாங்கிச முத்திரை இணைவிழைச்சு என்பன (தக்கயாகப். 51, உரை); the five categories, viz., drink, fish, flesh, pose and coition, required in *Šakaḷa* worship of *mākāviratar.*

*[Skt. sakala+pañcaka>த. சகளபஞ்சகம்.]*

**சகளீகரணஞ்செய்-தல்** *šagaḷīkaraṇañ-cey-,* 1 செ.கு.வி.(v.i.) உடல் நிலம் புரள, வலம் வந்து வழிபடுதல் (சங்.அக.); to perform *aṅga-niyāšam* and *kara-niyāšam.*

**த.வ. உருள்தண்டம்.**

*[Skt. šakali> சகளீ + த. கரணம் + செய்–.]*

**சகளீகரி–த்தல்** *šakalikari-,* 4 செ.கு.வி. (v.i.) உருவங்கொள்ளுதல் (சிவப்பிர.4, அவ.); to assume form.

*[Skt. šakalikr-, > த. சகளிகரி–.]*

**சகன்**[1] *šagan,* பெ.(n.) உலக நாயகன்; Lord of the Universe. *"குறைவில்சகன் சூழ்கொள்பவர்க்கு" (சி.போ.8, 2).*

*[Skt. jagat> த. சகன்.]*

**சகன்**[2] *šagan,* பெ.(n.) தோழன்; companion.

*[Skt. sakhā> த. சகா.]*

**சகன்மகதாது** *šaganmaga-tādu,* பெ.(n.) செயப்படு பொருள் குன்றாவினை (பி.வி.35, உரை); transitive verb, as a verb accompanied by an object.

*[Skt. sakarmaka + த. தாது.]*

**சகன்மகர்த்தரிப்பிரயோகம்** *šaganma-karttari-p-pirayōgam,* பெ.(n.) செயப்படு பொருள் குன்றாவினை கொண்ட செய்வினை வழக்கு (பி.வி.36, உரை); active voice of a transitive verb.

*[Skt. sakarma +kartari-prayoga.]*

**சகன்மம்** *šaganmam,* பெ.(n.) **சகன்மகதாது** பார்க்க; see *šaganmaga-tādu.*

**சகனம்**[1] *šaganam,* பெ. (n.) பிருட்டம் (பிங்.); buttocks, rumb.

*[Skt. jaghana> த. சகனம்.]*

**சகனம்**[2] *šaganam,* பெ.(n.) **சகாப்தம்** பார்க்க; see *šagāptam. "ஏழஞ்சிருநூ றெடுத்தவாயிரம் வாழுநற் சகன மருவா நிற்ப" (சங்கற்ப.பாயி.).*

*[Skt. šaka> த. சகனம்.]*

**சகாகோடிசங்கம்** *šagākōdi-šangam,* பெ. (n.) **சதகோடிசங்கம்** பார்க்க (வின்.); see *šadakōdi-šangam.*

**சகாகௌலம்** *šagā-kaulam,* பெ.(n.) நிரைய (நரக) வகை (யாழ்.அக.); a hell.

**சகாசீரகம்** *šagāširagam,* பெ.(n.) சீமைச்சீரகம் (இந்துபா.96); caraway.

**சகாத்தம்** *šagāttam,* பெ.(n.) **சகாப்தம்** பார்க்க; see *šagāptam. "எண்ணிய சகாத்தமெண்ணூற் றேழின்மேல்" (கம்பரா. தனியன்.).*

**த.வ. நூறாண்டு, நூற்றாண்டு**

*[Skt. šakābda> த. சகாப்தம்.]*

**சகாத்தன்** *šagāttan,* பெ.(n.) தோழன் (யாழ்.அக.); companion, friend.

*[Skt. sakhā+āpta> த. சகாத்தன்.]*

**சகாதேவன்** *šagādēvan,* பெ.(n.) **சகதேவன்** பார்க்க; see *šaga-dēvan.*

*[Skt. sahā> த. சகா + த.தேவன்.]*

**சகாதேவி** *šagā-dēvi,* பெ.(n.) **சகதேவி**[2] பார்க்க; see *šaga-dēvi.*

*[Skt. saha> த. சகா + த. தேவி.]*

**சகாப்தம்** *šagāptam,* பெ.(n.) கி.பி.78–ல் தொடங்குவதும் சாலிவாகனன் பெயரால் வழங்குவதுமான ஆண்டுமானம்; sālivāhana era commencing from 78 A.D.

*[Skt. šakābda> த. சகாப்தம்.]*

**சகாபாடி** *šagāpādi,* பெ.(n.) **சகபாடி** பார்க்க; see *šaga-pādi.*

**சகாமியம்** *šagāmiyam,* பெ.(n.) பயன்கருதிச் செய்யும் வினை; acts performed in expectation of reward, opp. to nis - kāmiyam.*"சாபாதிக்குச் சகாமியமே யேது"* (வேதா. சூ. 179).

*[Skt. sa-kāmya→ த. சகாமியம்.]*

**சகாயதனம்** *šagāya-tanam,* பெ.(n.) உதவியாகக் கொடுக்கும் பணம்; grant in aid.

*[சகாயம் + தனம்.]*

*[Skt. sahāya+> த. சகாயம்.]*

**சகாயம்** *šagāyam,* பெ.(n.) 1. துணை (பிங்.); help, aid, support, patronage. 2. விலைநயம்; cheapness, low or moderate price. *'சகாயமாக வாங்கினேன்'.* 3. நலம் (சௌக்கியம்); relief, ease, improvement in health. *'எனக்கு உடம்பு கொஞ்சம் சௌக்கியம்தான்' (இ.வ.).*

**த.வ. உதவி.**

*[Skt. sahāya> த. சகாயம்.]*

**சகாயன்** *šagāyaṉ,* பெ.(n.) 1. உதவி செய்வோன்; assistant, helper. 2. தோழன் (பிங்.); companion, friend.

*[Skt. sahāya> த. சகாயன்.]*

**சகாயி[1]–த்தல்** *šagāyi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. உதவி செய்தல்; to assist, help. 2. மலிவாய்க் கொடுத்தல்; to sell cheap.

**த.வ. உதவுதல்.**

*[Skt. sahāya> த. சகாயி–.]*

**சகாயி[2]** *šagāyi,* பெ.(n.) **சகாயன்** பார்க்க; see *šakāyaṉ.*

*[Skt. sahāya> த. சகாயி.]*

**சகார்த்தத்திருதியை** *šagārtta-t-tirudiyai,* பெ.(n.) உடனிகழ்ச்சிப் பொருளில்வரும் மூன்றாம் வேற்றுமை (பி.வி. 6, உரை); (gram.) the instrumental case in the sense of concomitance.

*[Skt.sahārtha+trtiyā>த.சகார்த்தத்திருதியை.]*

**சகாரி** *šagāri,* பெ.(n.) (சகர்களின் பகைவன்) விக்கிரமாதித்தன் (வின்.); *Vikramāditya* of Ujjayini, as the enemy of the *šakas.*

*[Skt. šaka+ari> த. சகாரி.]*

**சகாவாங்கு–தல்** *šagā - vāṅgu* - 5 செ. குன்றாவி.(v.t.) பின்வாங்குதல்; *to withdraw, to retreat.*

*[Skt. sakhā → த. சகா + த. வாங்கு–.]*

**சகானா** *šagāṉā,* பெ.(n.) ஒரு வகை அராகம் (பரத.இராக.55); (Mus.) a specific melody - type.

*[U. sahānā> த. சகானா.]*

**சகி[1]** *šaki,* பெ.(n.) தோழன்; male companion. *"சிந்தை கலந்தசகியாகச் சேர்ந்து" (உத்தரரா.அனுமப்.45).*

*[Skt. sakhi> த. சகி.]*

**சகி[2]** *šaki,* பெ.(n.) தோழி; female companion, lady's maid.

*[Skt. sakhi> த. சகி.]*

**சகி[3]–த்தல்** *šagi-ttal,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. பொறுத்தல் (சூடா.); to bear, brook, tolerate, forbear. 2. மன்னித்தல் (இ.வ.); to excuse, forgive.

*[Skt. sah> த. சகி–.]*

**சகித்தல்** *šagittal,* தொ. பெ.(vbl.n.) சமாதி இன்ப – துன்பங்களை ஒரு நிகராக நுகர்கை; (*Vēdānta*) treating pleasure and pain alike, one of *camāti-catka-campattu. "அமர்செயுஞ் சுகதுக்காதி யனுபவிப்பது சகித்தல்" (கைவல். தத்துவ.9).*

**த.வ. பொறுத்தல்.**

*[Skt. sah> த. சகித்தல்.]*

**சகித்துவம்** *šagittuvam,* பெ.(n.) தோழமை (யாழ்.அக.); companionship, friendship.

*[Skt. sakhi-tva> த. சகித்துவம்.]*

**சகிதம்** *šagitam,* கு.வி.எ.(adv.) கூட; together, in company with. *தன்சினேகிதன் சகிதம் வந்தான்.*

*[Skt. sahita> த. சகிதம்.]*

**சகிதன்[1]** *šagitaṉ,* பெ.(n.) உடன் கூடியவன்; one in company with another. *"உமாசகிதா போற்றி" (சிவரக.கணபதிகுமர.4).*

*[Skt. sahita > த. சகிதன்.]*

**சகிதன்[2]** *šagitaṉ,* பெ.(n.) அஞ்சி நடுங்குபவன் (சூடா.); timid person, coward.

*[Skt. cakita> த. சகிதன்.]*

**சகிப்பாளி** *šagippāḷi,* பெ.(n.) பொறுமை யுள்ளவன்; one who bears with patience; one who forgives.

*[Skt. caki > த. சகிப்பு+ஆளி.]*

**சகிப்பு** *šagippu,* பெ.(n.) பொறுக்கை; bearing, sustaining, enduring, forgiving.

**த.வ. பொறுமை, பொறை.**

*[Skt. caki > த. சகிப்பு.]*

**சகிப்புத்தன்மை** *šagippu-t-taṉmai,* பெ.(n.) பொறுத்துக் கொள்ளும் குணம்; tolerance. *'விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையும் சகிப்புத் தன்மையும் இல்லாவிட்டால் நட்பு என்பதே இயலாதே?.*

**த.வ. பொறையுடைமை.**

*[Skt. caki → த. சகிப்பு + தன்மை.]*

**சகு** *šagu,* பெ.(n.) நெய்ப்பரிசி (சவ்வரிசி) (மூ.அ.); sago.

*[Malay. sagu> த. சகு.]*

**சகுணத்தியானம்** *šaguṇa-t-tiyāṉam,* பெ. (n.) கடவுளைக் குணவுருவங்களுடையவராக ஊழ்கம் செய்கை (தியானிக்கை); meditation on God, as having from and attributes.

[*Skt.sa-guṇa+dhyāna>த. சகுணத்தியானம்.*]

**சகுல்யன்** *šagulyaṉ,* பெ.(n.) பேரனுக்குப் பேரன் முதலிய கொடிவழியொன்றிற் பிறந்த உரிமைப் பங்காளி (தாயாதி); distant relation, remote kinsman, said to apply to a grandson's grandson, and sometimes extended to one of tenth remove.

**த.வ. தாயன், தாயப்பங்காளி.**

[*Skt. sa-kulya> த. சகுல்யன்.*]

**சகுலாட்சம்** *šagulāṭcam,* பெ. (n.) வெள்ளறுகு (மலை.); white bermuda grass.

[*Skt. šakulākṣaka> த. சகுலாட்சம்.*]

**சகுனக்காரன்** *šakuṉak-kāraṉ,* பெ.(n.) குறிகூறுவோன் (இ.வ.); fortune teller.

**த.வ. புள்கணியன்.**

[*சகுனம் + காரன்.*]

[*Skt. šakuna> த. சகுன(ம்).*]

**சகுனசாத்திரம்** *šaguṉa-šāttiram,* பெ. (n.) அறுபத்துநாலு கலையுள் புள்குறிணர்த்தும் நூல்; science of augury, one of *aṟubattu-nālu-kalai.*

**த.வ. புள்குறி(நிமித்த)நூல், புள்ளோர்ப்புகல்.**

[*Skt. sakuna+ šastra> த. சாத்திரம்.*]

**சகுனத்தடை** *šaguṉa-t-taḍai,* பெ.(n.) கெட்டது காட்டும் குறி; ill-omen.

**த.வ. புள்தடை.**

[*சகுனம் + தடை.*]

[*Skt. šakuna> த. சகுனம்.*]

**சகுனப்பிழை** *šaguṉa-p-piḻai,* பெ.(n.) **சகுனத்தடை** பார்க்க; see *saguṉa-t-taḍai.*

[*சகுனம் + பிழை.*]

[*Skt. šakuna> த. சகுனம்.*]

**சகுனிகிரகம்** *šaguṉi-kiragam,* பெ.(n.) குழந்தை பிறந்த ஆறாம் நாளிலேனும், ஆறாம் மாதத்திலேனும், ஆறாம் ஆண்டிலேனும் குழந்தை அல்லது தாயை வருத்துவதாகக் கருதப்படும் ஒரு தீக்கோள் (சீவரட்.227); an evil planet supposed to cause distress to an infant or its mother on the 6th day, 6th month or 6th year of its birth.

**த.வ. ஆறாம் கேடு.**

[*Skt. šakuni+graha> த. சகுனிகிரகம்.*]

**சகுனிமாமன்** *šaguṉi-māmaṉ,* பெ.(n.) சகுனியைப் போல் கெடுமதியுடையோன்; evil counsellor, as *šakuni.*

[*Skt. šakuni> த. சகுனி + மாமன்.*]

**சகேரா** *šakērā,* பெ.(n.) பண்டசாலை (வின்.); store, treasure, hoard.

[*U. zakhīrā> த. சகேரா.*]

**சகோத்தி** *sakōtti,* பெ.(n.) உடனிகழ்ச்சியணி (அணியி.21); a figure of speech.

[*Skt. sahōkti> த. சகோத்தி.*]

**சகோடன்** *šagōḍaṉ,* பெ.(n.) பிறனுக்குண்டான கருப்பத்தோடு திருமணமான பெண்ணிடம் அந்தக் கருப்பத்திற் பிறந்தவன் (மநு.9, 173); son begotten by another father but born after marriage, as received with the bride one of twelve *puttiraṉ.*

[*Skt. sahōḍha> த. சகோடன்.*]

**சகோத்திரன்** *šagōttiraṉ,* பெ.(n.) ஒரே குலத்தில் பிறந்தவன்; a kinsman belonging to the same *kulam.*

**த.வ. ஒரு பிதிரன், ஒரு கிளையன்.**

[*Skt. sa-gōtra> த. சகோத்திரன்.*]

**சகோதரன்** *šagōdaraṉ,* பெ.(n.) 1. உடன் பிறந்தவன் (சூத.ஞான.7, 15); brother. 2. தந்தையுடன் பிறந்தான், தாயுடன் பிறந்தாள் இவர்கள் மகன் (இ.வ.); son of the father's brother or mother's sister, cousin.

**த.வ. பிறவன்.**

[*Skt. sahōdara> த. சகோதரன்.*]

**சகோதரி** *šagōdari,* பெ.(n.) 1. உடன் பிறந்தாள்; sister. 2. தந்தையுடன் பிறந்தான் தாயுடன் பிறந்தாள் இவர்கள் மகள் (இ.வ.); daughter of the father's brother or mother's sister, cousin.

த.வ. பிறவி.

[Skt. sahōdari> த. சகோதரி.]

**சங்க** *šaṅga,* பெ.(n.) 1. கக்கம்; the space below the arm-pit between the hip and the bend of arm. 2. அக்குள்; arm-pit (சா.அக.).

**சங்கங்காட்டிலுமரி** *šaṅgaṅ-kāṭṭilumari,* பெ.(n.) நாகர வண்டு; a kind of golden-coloured beetle supposed to live under the tree, four spined monetia (சா.அக.).

**சங்கங்கோலகம்** *šaṅgaṅ-gōlagam,* பெ.(n.) மிளகாய் நங்கை; dhoby's itch (சா.அக.).

**சங்கதோசம்** *šaṅga-dōšam,* பெ.(n.) பெற்றோர் தம் புணர்ச்சிக்குப் பிறகு குழந்தைகளைக் குளியாமற் தொடுவதால் ஏற்பட்ட குற்றம் (தோசம்); a morbid affection in children due to parents handling them, immediately after sexual intercourse without having a bath.

[Skt. saṅ-ga+dōsa> த. சங்கதோசம்.]

**சங்கநாபி** *šaṅga-nābi,* பெ.(n.) 1. ஒரு கடைச் சரக்கு; a bazaar drug. 2. வெண்ணாபி; white aconite (சா.அக.).

**சங்கபதம்** *šaṅga-padam,* பெ.(n.) அறநூல்களுளொன்று (வின்.); a treatise on Hindu law.

[Skt. šaṅkha+pada>த. சங்கபதம்.]

**சங்கபாடாணம்** *šaṅga-pāḍāṇam,* பெ.(n.) பிறவி நஞ்சு வகை (மூ.அ.); a mineral poison (சா.அக.).

**சங்கபோட்டம்** *šaṅga-pōṭṭam,* பெ.(n.) புணர்ச்சி; sexual intercourse (சா.அக.).

**சங்கமம்** *šaṅgamam,* பெ.(n.) 1. இயங்கு திணைப் பொருள்; living creatures, as capable of locomotion, opp. to *nilai-t-tiṇai* 2. சங்கமசொத்து (இக்.வ.); movable property.

[Skt. jaṅgama>த. சங்கமம்.]

**சங்கமர்** *šaṅgamar,* பெ.(n.) ஒருசார் வீரசைவர்; a class of *Virašaivas,* lingayats.

[Skt. saṅ-gama>த. சங்கமர்]

**சங்கமரூபம்** *šaṅgama-rūbam,* பெ.(n.) சிவவுருவம் (சங்.அக.); a manifested form of *Šivaṉ.*

[Skt. saṅ-gama+rūpa> த. சங்கமரூபம்.]

**சங்கமலிங்கம்** *šaṅgama-liṅgam,* பெ.(n.) சங்கம வகுப்பினன் (வின்.); person belonging to the *Jaṅgama* sect.

[Skt. jaṅgama+liṅga> த. சங்கமலிங்கம்.]

**சங்கமாண்டி** *šaṅgamāṇḍi,* பெ.(n.) 1. இலங்கங்கட்டிகளுள் ஒருவகையார் (திருநெல்.); a sect of lingayats. 2. இரந்துண்ணும் இனத்தாருள் ஒருவகையார் (இ.வ.); a sub-sect of *āṇḍi* caste.

[சங்கமம் + ஆண்டி.]

[Skt. saṅ-gama > த. சங்கமாம்.]

**சங்கயம்** *šaṅgayam,* பெ.(n.) ஐயம்; doubt. *"சங்கய மெய்தி யநேகாந்திகமாம்" (மணிமே.29, 230).*

[Skt. saṃšaya> த. சங்கயம்.]

**சங்கருடணன்** *šaṅgaruḍaṇaṉ,* பெ.(n.) திருமாலின் ஐந்து நிலைகளுள் ஒன்று (அஷ்டாதச.தத்துவ.பக்.23); a manifestation of *Visṇu,* as destroyer, one of four *viyūgam.*

[Skt. saṅkarsaṇa> த. சங்கருடணன்.]

**சங்கரசாதி** *šaṅgara-šādi* பெ.(n.) கலப்புச் சாதி (சீவக.116, உரை); mixed castes.

[Skt. saṅgara+jāti>த. சங்கரசாதி.]

**சங்கரநமச்சிவாயர்** *šaṅgara-namaccivāyar,* பெ.(n.) 18–ஆம் நூற்றாண்டிலிருந்தவரும் நன்னூல் விருத்தியுரை இயற்றியவருமான புலவர்; a commentator on *Naṉṉūl,* 18th C.

**சங்கரநாராயணன்** *šaṅkara-nārāyaṇaṉ,* பெ. (n.) அரி அர(ன்) வடிவமான சிவத் திருமேனி; manifestation of God in the combined form of *Šiva* and *Visṇu.*

[Skt. šaṅkara+nārāyaṇa> த. சங்கர நாராயணன்.]

**சங்கரம்**[1] *šaṅkaram,* பெ.(n.) இனக்கலப்பு; mixture of castes.

[Skt. saṅ-kara>த. சங்கரம்.]

**சங்கரம்**[2] *šaṅkaram,* பெ.(n.) 1. போர்; war, battle. 2. நஞ்சு; poison.

[Skt. saṅ-gara>த. சங்கரம்.]

**சங்கரர்** *šaṅkarar,* பெ.(n.) போர்வீரர் (யாழ்.அக.); warriors.

[Skt. saṃhāra>த. சங்கரர்.]

**சங்கரன்**[1] *šaṅgaraṉ,* பெ.(n.) 1. நலஞ் செய்பவன் (சிலப்.10, 186, உரை); dispenser of happiness. 2.சிவன்; *Šivaṉ.* *"சங்கரன் காண்" (தேவா.725, 6).* 3. பதினோரு (ஏகாதச) உருத்திரருள் ஒருவர் (திவா.); a Rudra, one of *ēgādaša-ruttira.*

[Skt. šaṅ-kara>த. சங்கரன்.]

**சங்கரன்**[2] *šaṅgaraṉ,* பெ.(n.) கலப்பினத்துள் பிறந்தவன்; a person born of a mixed caste, hybrid. *"சதுர்வேதஞ் சொலுமிதனைச் செய்திடானேற் சங்கரனாய் விடுவன்" (சிவரக. சிவடுண்டி.46).*

[Skt. saṅ-kara>த. சங்கரன்.]

**சங்கரன்பெண்டிர்** *šaṅgaraṉ-peṇḍir,* பெ.(n.) கவுரிபாடாணம்; a prepared yellow oxide of arsenic (சா.அக.).

**சங்கராசனம்** *šaṅgarāšaṉam,* பெ.(n.) இரண்டு கால்களையும் மடக்கி, பாதங்களையும் நெருக்கி, முகப்பின் மேல் நிற்கும் ஓர் இருக்கை (ஆசனம்); a posture in yoga practice in which the man rests on his knees with folded legs while feet remain close together (சா.அக.).

**சங்கராசாரியார்** *šaṅgarācāriyār,* பெ.(n.) அத்வைத மதநிறுவனரும் உபநிடத்து பிரமசூத்திரம் பகவத்கீதைகட்கு விரிவுரைகளும் பிற வடநூல்களும் செய்தவருமாகிய பெரியவர்; the celebrated teacher of Advaita philosophy and author of commentaries on Upaniṣads, *vēdānta sūtra* and Bhagavadgita and many original works in Sanskrit.

[Skt. šaṅkarācārya> த. சங்கராச்சாரியர்.]

**சங்கராதனம்** *šaṅgarādaṉam,* பெ.(n.) இருகால்களையும் மடக்கி இருபாதத்தையுங் கூட்டி நேரேயூன்றி இருகான் முகப்பின்மேல் நிற்பது (யாழ்.அக.); a standing posture with legs bent and feet close together.

[Skt. saṅ-kara>த. சங்கரன்+ ஆதனம்> த. சங்கராதனம்.]



**சங்கராந்தி** *šaṅgarāndi,* பெ.(n.) **சங்கிராந்தி** பார்க்க; see *šaṅgirāndi.*

[Skt. saṅ-krānti> த. சங்கராந்தி.]

**சங்கராபரணம்** *šaṅgarāparaṇam,* பெ.(n.) பண்வகை (பரத.இராக.55, உரை); a specific melody type.

[Skt. šaṅkarābharaṇa> த. சங்கராபரணம்.]

**சங்கராவாசம்** *šaṅgarāvāšam,* பெ.(n.) கருப்பூர வகை (மூ.அ.); a kind of camphor.

[Skt. saṅ-karāvāsa> த. சங்கராவாசம்.]

**சங்கரி**[1] *šaṅgari,* பெ.(n.) மலைமகள் (பிங்.); Malaimagal.

[Skt. šaṅkari> த. சங்கரி.]

**சங்கரி**[2]**-த்தல்** *šaṅgari-,* 4 செ.கு.வி.(v.i.) அழித்தல்; to destroy, annihilate.

[Skt. saṃ-hāra> த. சங்கரி-.]

**சங்கரீகரணம்** *šaṅgarī-karaṇam,* பெ.(n.) இனக்கலப்பு (வின்.); mixing of castes.

[Skt. saṅ-karīkaraṇa> த. சங்கரீகரணம்.]

**சங்கருடம்** *šaṅgaruḍam,* பெ.(n.) எதிரிடை (யாழ்.அக.); opposition.

[Skt. saṅkarṣa> த. சங்கருடம்.]

**சங்கரோகம்** *šaṅgarōgam,* பெ.(n.) வளி (வாத)கோழை (சிலேட்டுமம்)களினால்இரண்டு தாடைகளிலும், சிவந்து, வீங்கிப் பழுத்துடைந்து மூன்று நாளைக்குள் இறப்பை யுண்டு பண்ணும் ஒரு நோய்; a phleg matic disease in which the tonsils are inflamed, glands swollen with redness of the parts and the characteristic exudation makes its appearance, resulting in a fatal termination within three dyas, probably Diphtheria (சா.அக.).

*[**Skt.** saṅka-rōga>த. சங்கரோகம்.]*

**சங்கல்வகோட்டம்** *šaṅgalva-kōṭṭam,* பெ.(n.) பேரொலி ஆரவாரம்; Arabian costus - Costus speciosus (சா.அக.).

**சங்கலம்**[1] *šaṅgalam,* பெ.(n.) **சங்கலனம்** பார்க்க (சங்.அக.); see *šaṅgalaṉam.*

**சங்கலம்**[2] *šaṅgalam,* பெ.(n.) ஊன் (யாழ்.அக.); flesh, meat.

*[**Skt.** jaṅgala> த. சங்கலம்]*

**சங்கலனம்**[1] *šaṅgalaṉam,* பெ.(n.) 1. கலப்பு; blending, inter mixture. 2. **சங்கலிதம்,**[2] பார்க்க; see *šaṅgalidam.*

*[**Skt.** saṅkalana> த. சங்கலனம்.]*

**சங்கலனம்**[2] *šaṅgalaṉam,* பெ.(n.) தொகுக்கை; collecting. *"நீர்வேலிச் சங்கரபண்டித ரவர்களாற் சங்கலனஞ் செய்யப்பட்டு...பதிப்பிக்கப்பட்டது" (தாதுமாலை, முகப்புப் பக்கம்).*

*[**Skt.** saṅkalana> த. சங்கலனம்.]*

**சங்கலார்** *šaṅgalār,* பெ.(n.) பகைவர்; enemies, foes. *"சங்கலாரிடை வளைத்த சக்கரத்தை" (பாரத.பதின்மூ.142).*

*[**Skt.** saṅga> த. சங்கலார்.]*

**சங்கலிகிதம்** *šaṅgaligidam,* பெ. (n.) சங்கர் லிகிதர் என்ற முனிவரிருவரால் இயற்றப்பெற்றதும், அறநூல் பதினெட்டனுள் ஒன்றுமாகிய நூல்; a Sanskrit text book on Hindu law described two stages, *šaṅkha* and likhita, one of 18 *taruma-nūl.*

*[**Skt.** šaṅkha-likhita> த. சங்கிலிகிதம்.]*

**சங்கலிதம்** *šaṅgalidam,* பெ.(n.) 1. கலப்பு (பிங்.); blending, intermixture. 2. எட்டு (அட்ட) கணிதங்களுள் ஒன்றான எண் கூட்டல் (பிங்.); (math.) addition, aggregation, summation, one of *aṭṭa-kaṇidam.* 3. குறித்த கணிதமுறை யொன்றன்படித் தொடர்ந்து செல்லும் எண்களின் தொடர் அல்லது அவற்றின் கூட்டல்; (Math.) progression, series of numbers or quantities, increasing or decreasing according to some mathematical order.

*[**Skt.** saṅ-kalita> த. சங்கலிதம்.]*

**சங்கவாதவத்திரோகம்** *šaṅgavātavatti-rōgam,* பெ.(n.) வளி (வாயு)யானது கீழ் வயிற்று முகத்தை அடைத்து நீரை உள்ளில் சேர்த்துக் கட்டுப்படுத்துவதாலேற்படும் நோய்; suppression of urine due to vayu prevailing upon the downmost portion of the abdomen i.e., about the genital region, and obstructing the urethra (சா.அக.).

**த.வ.** அடிவயிற்று கழலை.

**சங்கவிடம்** *šaṅgaviḍam,* பெ.(n.) 1. வெள்ளை நஞ்சு; white arsenic. 2. பாம்பு இன நஞ்சு; animal poisons (சா.அக.).

**சங்கற்பசிராத்தம்** *šaṅgaṟpa-sirāttam,* பெ. (n.) வேள்வி நெருப்பின்றி இறந்தோர் பொருட்டுச் செய்யுஞ் சடங்கு (சிராத்தம்); (*brāh.*) the *šrādda* performed without sacrificial oblations.

*[**Skt.** saṅ-kaṟpa+šrāddha> த. சங்கற்ப சிராத்தம்.]*

**சங்கற்பஞானம்** *šaṅgaṟpa-ñāṉam,* பெ.(n.) அறிவிற்குரிய அறிவு அறிபொருள்கள் (சிசி. 11,2, சிவாக்.); relative knowledge. *"ஞானம்" (சி.சி.11, 2, சிவாக்.).*

*[**Skt.** saṅkalpa+ **Pkt.** ñana< **Skt.** jñana> த. சங்கற்பஞானம்.]*

**சங்கற்பநிராகரணம்** *šaṅgaṟpa-nirākaraṇam,* பெ.(n.) மெய்கண்ட சாத்திரங்களுள் ஒன்றானதும் உமாபதி சிவாசாரியரால்

இயற்றப் பெற்றதுமான நூல்; a text book on *Šaiva Siddhānda* Philosophy by *Umāpadi-Civācāriyar*, being a statement and refutation of the doctrines of some of the *Šaiva* sects related to the same *Siddhānda*, one of 14 *meykaṇda-šāttiram*.

*[Skt. saṅkalpa+nir-ākarana> த.சங்கற்ப நிராகரணம்.]*

**சங்கற்பம்** *šaṅgaṟpam,* பெ.(n.) 1. உறுதியுள்ளம் (மனோநிச்சயம்); mental resolve, solemn vow, determination. 2. சடங்குத் தொடக்கத்தில் அச்சடங்கினைச் செய்வதாகக் கூறும் உறுதிக் கட்டுரை; a declaration of intention made at the commencement of any ritual. 3. ஒருவன் தன்பட்டறிவால்பொருளின் குணங்களினின்று இன்னபொருளென்று துணியும் துணிவு (சி.போ.பா.2, 2, 171); determination of an object from a consideration of its properties. 4. கருத்து; purpose, intention, design, motive. *"மறைநூற் சங்கற்பவிதிப்படி" (திருவிளை. மலயத்துவச.18).* 5. கொள்கை; doctrine. *"அழகிது நீங்கள் சங்கற்பம் நிராகரித்தமை" (சங்கற்ப.பாயி.).* 6. மனப்பாங்கு (சித்தவிருத்தி); volition, mental activity. *"அடத்தக்கது மனச்சங்கற்பம்" (திருக்கருவை.கலித்.33).*

**த.வ. மனவுறுதி, கடைப்பிடி.**

*[Skt. saṅ-kalpa> த. சங்கற்பம்.]*

**சங்கற்பமாசம்** *šaṅgaṟpa-mā̌šam,* பெ.(n.) 1. சாந்திரமான மாதம்; lunar month. 2. இரண்டு காருவா (அமாவாசைகளை)க் கொண்ட மாதம் (விதான.குணாகுண.81, உரை); a solar month in which two new moon days occur.

**த.வ. இரு காருவா மாதம்.**

*[சங்கற்பம் + மாசம்.]*

*மாதம் > மாசம்.*

**சங்கற்பனை** *šaṅgaṟpaṉai,* பெ.(n.) **சங்கற்பம்** பார்க்க; see *šaṅgaṟpam.*

*[Skt. saṅ-kalpanā> த. சங்கற்பனை.]*

**சங்கற்பனைஞானம்** *šaṅgaṟpaṉai-ñāṉam,* பெ.(n.) **சங்கற்பஞானம்** பார்க்க; see *šaṅgaṟpa-ñāṉam. "ஞாதிரு ஞானஞேயந் தங்கிய ஞானஞ் சங்கற்பனை ஞானமாகும்" (சி.சி. 11, 2).*

*[Skt. saṅkalpanā+ñāna<jñāna> த. சங்கற்பனைஞானம்.]*

**சங்கற்பி-த்தல்** *šaṅgaṟpi-,* 4 செ.கு.வி. (v.i.) உறுதி செய்து கொள்ளுதல்; to determine, resolve. *"துவரைப் பிரானுக்கே சங்கற்பித்து" (திவ்.நாய்ச்.1, 4).*

**த.வ. உறுதியேற்றல்.**

*[Skt. saṅ-kalpa> த. சங்கற்பி-.]*

**சங்கற்பிதம்** *šaṅgaṟpidam,* பெ.(n.) முன்னே உறுதி செய்யப்பட்டது (சி.சி.2, 59, ஞானம்); that which was will or pre - determined.

**த.வ. உறுதிப்பாடு.**

*[Skt. saṅ-kalpita> த. சங்கற்பிதம்.]*

**சங்கனனம்** *šaṅgaṉaṉam,* பெ.(n.) நரம்பு (சூடா.); nerves, tendons, veins.

*[Skt. saṃ-hanana> த. சங்கனனம்.]*

**சங்காசம்** *šaṅgāšam,* பெ.(n.) ஒப்புமை (வின்.); likeness, similarity, resemblance.

*[Skt. saṅ-kāša> த. சங்காசம்.]*

**சங்காடகம்** *šaṅgāḍagam,* பெ.(n.) கொக்கோகத்திற் சொல்லியுள்ள 64 கலைகளில் ஒன்று; one of the 64 postures in the embrace of or sexual intercourse with women, described in the Erotic science of the sage named Kokkogamuni (சா.அக.).

*[Skt. saṅ-kāṭa>த. சங்காடகம்.]*

**சங்காத்தி** *šaṅgātti,* பெ.(n.) தோழன்; friend, intimate acquaintance, companion. *"அளகைக்கோன்றன் சங்காத்தி" (தேவா. 886, 5).*

*[Skt. saṅ-ghāta> த. சங்காத்தி.]*

**சங்காதோசம்** *šaṅgā-tōšam,* பெ.(n.) பேய்க்கோளாறு; demoniac possession.

*[Skt. šaṅkā+dōṣa> த. சங்காதோசம்.]*

**சங்காரகர்த்தா** *śaṅgāra-karttā,* பெ.(n.) (அழித்தற் தொழிலைச் செய்பவன்) சிவன்; *Śiva,* as the destroyer of the worlds.

[*Skt. saṃ-hāra+kartā>த.சங்கார கர்த்தா.*]

*த. கரு → கருத்தன் →* **Skt.** *karta*

**சங்காரம்**[1] *śaṅgāram,* பெ.(n.) 1. அழிக்கை (சூடா.); destruction, annihilation, dissolution in general. 2. மூலகாரணத்தில் அனைத்தும் ஒடுங்கும் உலகவழிவு (சி.சி. 1, 33, ஞானப்.); periodical destruction of the universe reducing it to the primitive *Māya,* one of *pañca-kiruttiyam,* q.v. 3. அடக்குகை (வின்.); suppression, restraining.

[*Skt. saṃ-hāra> த. சங்காரம்'.*]

**சங்காரம்**[2] *śaṅgāram,* பெ.(n.) **சங்காரித்தம்** (சூடா.) பார்க்க; see *śaṅgārittam.*

[*Skt.saṃ-hāra>த.சங்காரம்.*]

**சங்காரமூர்த்தி** *śaṅgāra-mūrtti,* பெ.(n.) அழித்தற் தொழிலைப் புரியும் சிவன்; *Śivaṉ,* the God of destruction. *"சங்காரமூர்த்தி ஆறுமாக" (சி.சி.1, 47, மறை.).*

[*Skt.saṃ-hāra+mūrti>த.சங்காரமூர்த்தி.*]

**சங்காரன்** *saṅgāraṉ,* பெ.(n.) அழிப்பவன்; destroyer. *"அந்தகாசுர சங்காரனை" (சிவரக.கத்தரிப்.15).*

[*Skt. saṃ-hāra> த. சங்காரன்.*]

**சங்காராதனம்** *saṅgārā-daṉam,* பெ.(n.) ஒகவிருக்கை (யோகாசன) வகை (தத்துவப்.108, உரை); (*Śaiva*) a yogic posture.

[*சங்காரா(ம்) + ஆதனம்.*]

[*Skt. saṃ-hāra>த. சங்காராம்.*]

**சங்காரி** *śaṅgāri,* பெ.(n.) குதிரைவாலி (மலை.); horse-tail millet.

[*Skt. saṃ-hārin> த. சங்காரி.*]

**சங்காரித்தம்** *saṅgārittam,* பெ.(n.) ஏழு மேகங்களுள் பூவைப் பொழியும் மேகம்(பிங்.); celestial cloud which rains flowers, one of *catta-mēgam,* q.v.

[*Skt. saṃ-hṛta> த. சங்காரித்தம்.*]

**சங்காவர்த்தம்** *śaṅgā-varttam,* பெ.(n.) சங்கினுட் பக்கத்துச் சுழியைப் போன்ற முறிவு; an ulcer resembling the inner spiral of a conch, an ulcer of a spiral form (சா.அக.).

**சங்காவியத்துக்குப்பார்-த்தல்** *śaṅgā-viyattukku-p-pār-,* 4 செ.கு.வி.(v.i.) பேதலிப்பு நீங்க மந்திரித்தல் (யாழ்ப்.); to attempt by magic to relieve one who is panicstricken.

[*Skt.śaṅkā+bhaya>த.சங்காரியம் + பார்-.*]

**சங்காவியம்** *śaṅgāviyam,* பெ.(n.) அச்சத்தால் நிகழும், தன்வயப்படா (அவச) நிலை (யாழ்ப்.); state of panic.

த.வ. பேதலிப்பு.

[*Skt. śaṅka+bhaya> த. சங்காவியம்.*]

**சங்கான்பெண்டிர்** *śaṅkāṉ-peṇḍir,* பெ.(n.) கவுரி பாடாணம்; a prepared yellow oxide of arsenic (சா.அக.).

**சங்கிதம்** *śaṅgidam,* பெ.(n.) ஐயப்பட்டது (சி.சி.6, 5, சிவாக்.); that which is questioned or doubted.

[*Skt. śaṅkita> த. சங்கிதம்.*]

**சங்கிதன்** *śaṅgidaṉ,* பெ.(n.) தீரமில்லாதவன்; a timid person (சா.அக.).

**சங்கிதாமந்திரம்** *śaṅgidā-mandiram,* பெ.(n.) மந்திரவகை (தத்துவப்.70, உரை); (*Śaiva*) a group of mantras.

[*சங்கிதா + மந்திரம்.*]

[*Skt. saṃhitā → த. சங்கிதா*]

**சங்கிதை** *śaṅgidai,* பெ.(n.) 1. செய்தித் தொகுதி; தொகுப்பியம் collection, extensive compilation, any systematically arranged collection of texts or verses. *"வாயு சங்கிதை".* 2.திருமறையை (வேதத்தை)ப் பதப்பிரிப்பின்றித் தொடர்ச்சியாக ஓதும் பாடம்; a continuous hymnal text of the *vēda,* formed out of the padas or individual words by proper phonets changes. 3. மறையின் (வேதத்தின்) ஒரு பகுதி; the collection of mantras in *Rig-vēda,* etc.

"ஒட்டரிய சங்கிதைகளும்" (கலிங்.170). 4. வரலாறு (இலக்.அக.); history.

*[Skt. saṃ-hitā> த. சங்கிதை.]*

**சங்கியை** *śaṅgiyai,* பெ.(n.) 1. எண் (சங்.அக.); number. 2. எண்ணிக்கை; calculation, reckoning. 3. மதி (புத்தி) (இலக்.அக.); intellect.

*[Skt. saṅ-khyā> த. சங்கியை.]*

**சங்கிரகக்கிராணி** *śaṅgiraga-k-kirāṇi,* பெ. (n.) வயிறு பொருமி, சோறு செரியாது, எருவாய் (அபானம்) சூடாகி, வாந்தி, மயக்கங் கண்டு, கண்ணிரண்டும் சுழலும் ஒரு வகைக் கழிச்சல்; a form of diarrhoea characterised by the following symptoms viz. rumbling noise, in the stomach, indigestion, purging, burning pain at the anus, fever, vomitting, giddiness, whirling of the eyes etc. - Lienteric diarrhoea (சா.அக.).

*[Skt. saṅ-graha + grahaṇi> த. சங்கிரகக் கிராணி]*

**சங்கிரகக்கூர்மை** *śaṅgiraga-k-kūrmai,* பெ. (n.) கடலுப்பு (வின்.); sea-salt.

**சங்கிரகம்** *śaṅgiragam,* பெ.(n.) சுருக்கம்; compendium, abridgement, epitome. "தர்க்கசங்கிரகம்".

த.வ. சங்கிரகம்.

*[Skt. saṅ-graha> த. சங்கிரகரணம்.]*

**சங்கிரகி-த்தல்** *śaṅgiragi-,* 4 செ.கு.வி.(v.i.) சுருக்குதல்; to abridge, summarise. "இம்மூன்று விருத்தத்தினாலும் சங்கிரகித்துச் சொன்ன" (சி.சி.1, 14, சிவாக்.).

*[Skt. saṅ-graha> த. சங்கிரகி-.]*

**சங்கிரந்தனன்** *śaṅgirandaṉaṉ,* பெ.(n.) இந்திரன் (பிங்.); Indiran.

*[Skt. saṅ-krandana> த. சங்கிரந்தனன்.]*

**சங்கிரம்** *śaṅgiram,* பெ. (n.) காடு (பிங்.); jungle, forest.

*[Skt. Perh. jāṅgala> த. சங்கிரம்.]*

**சங்கிரமசாதி** *śaṅgirama-sādi,* பெ.(n.) **சங்கரசாதி** பார்க்க (யாழ்.அக.); see *śaṅgarasādi.*

**சங்கிரமணம்** *śaṅgiramaṇam,* பெ. (n.) 1. ஒரு கோள் ஓர் ஓரை (இராசி)யிலிருந்து அடுத்த ஓரை (இராசி)க்குச் செல்லுகை; (Astron.) passage of a planet from one sign of the zodiac to another. 2. கதிரவன் ஓர் ஓரை (இராசி)யிலிருந்து அடுத்த ஓரை (இராசி)க்குச் செல்லுகை; (Astron.) sun's passage from one sign of the zodiac to another. 3. கதிரவன் (சூரியன்) ஓர் ஓரை (இராசி)யிற் புகும் காலம்; (Astron.) exact time when the sun enters a sign of the zodiac.

த.வ. ஓரைச்செலவு.

*[Skt. saṅ-kramaṇa> த. சங்கிரமணம்.]*

**சங்கிரமதுருவம்** *śaṅgirama-turuvam,* பெ.(n.) புதுவருடம் பிறக்கும் நாட்பொழுது (வின்.); (Astron.) the time of day at which the new year commences.

த.வ. புத்தாண்டு நேரடி.

**சங்கிரமம்** *śaṅgiramam,* பெ. (n.) 1. **சங்கிரமணம், 1, 2** பார்க்க; see *saṅgiramaṇam.* "சீர்தரு சங்கிரமத்தினும்" (விதான. தெய்வவழி.1). 2. சென்று பற்றுகை; meeting, approaching, entering into relationship. "சித்துக்கன்றிச் சடத்துக்குச் சங்கிரமங் கூடாது" (சி.சி.8, 28, சிவஞா.).

*[Skt. saṅ-krama> த. சங்கிரமம்.]*

**சங்கிரமி-த்தல்** *śaṅgirami-,* 4 செ.கு.வி.(v.i.) 1. ஓரை (இராசி) மாறுதல் (விதான. குணாகுண.81); (Astron.) to pass from one sign of the zodiac to another. 2. நோய் பரவுதல்; to spread, as a contagious disease. 3. சேர்தல்; to meet, encounter, enter. "முதல்வன் திருவருள், ஆன்மாவின் மாட்டுஞ் சங்கிரமித்துச் சென்று" (சி.போ.பா.7, 2, பக்.155).

த.வ. கலத்தல்.

*[Skt. saṅkram> த. சங்கிரமி-.]*

**சங்கிராணி** *śaṅgirāṇi,* பெ.(n.) வயிறூதி, சீழ், சீதம், நெய் போலும் மற்றும் பல விதமாய்க் கழிந்து, எருவாய்க் கடுத்து, வலியை உண்டாக்கும் ஒரு வகைக் கழிச்சல் (சீதபேதி); an acute form of dysentery accompanied by distension of abdomen, mucous discharge, passing of stool in varied forms, irritation of the anus attended with pain etc. (சா.அக.).

*[Skt. saṅ-grahaṇi> த. சங்கிராணி.]*

**சங்கிராந்தசமவாதம்** *śaṅgirānda-śamavādam,* பெ.(n.) பாசுபதம் (சி.போ.பா. அவை. பக்.50); a *Śaiva* sect.

*[சங்கிராந்த(ம்) + சமம் + வாதம்.]*

*[Skt. saṅ-krānta>த. சங்கிராந்தம் + த. சமம் + Skt. vata.]*

**சங்கிராந்தவாதசைவன்** *śaṅgirāndavāda-Śaivaṉ,* பெ. (n.) **சங்கிராந்தவாதி** பார்க்க; see *śaṅgirānda-vādi.*

**சங்கிராந்தவாதம்** *śaṅgirānda-vādam,* பெ.(n.) மலம் நீங்கிய ஆன்மாவின் கண் திருவருள் தோன்றும் தன்மை, அதனை அருள் வடிவம் என்று கூறும் சமயம் (சங்கற்ப.11); (*Śaiva*) the doctrine which holds that the grace of Siva reflects itself in the soul in its perfect state, making it an embodiment of divinity itself.

**த.வ. உள்ளங்கோயில் கோட்பாடு.**

*[Skt. saṅ-krānta-vāda>த. சங்கிராந்த வாதம்.]*

**சங்கிராந்தவாதி** *śaṅgirānda-vādi,* பெ.(n.) சங்கிராந்தவாத சமயத்தைச் சார்ந்தவன் (சி.சி.9, 1, நிரம்ப.); follower of the doctrine of *śaṅgirāndavādam.*

*[Skt. saṅ-kirānta-vādin> த. சங்கிராந்தவாதி.]*

**சங்கிராந்தி-த்தல்** *śaṅgirāndi-,* 4 செ.கு.வி. (v.i.) தொடர்புபடுத்தல்; to become connected, related. *"முத்தான்மாவிற் சிவசத்தி சங்கிராந்திக்கும்" (சி.சி.10, 1, ஞானப்.).*

*[Skt. saṅ-krānta> த. சங்கிராந்தி-.]*

**சங்கிராந்தி** *śaṅgirāndi,* பெ.(n.) 1. மாதப்பிறப்பு; beginning of a month, passage of the sun from one sign of the zodiac to another. *"ஆசில் சங்கிராந்தி தன்னோடயனத்தில்" (சரசோ.தெய்வ.4, சங்.அக.).* 2. பொங்கல் விழா கொண்டாடும் தைமாதம் முதல் நாள்; tai, when *poṅkaṟ-paṇḍigai* is celebrated.

**த.வ. மாதநாள், மாதப்பிறப்பு.**

*[Skt. saṅ-krānti> த. சங்கிராந்தி.]*

**சங்கிராமம்**[1] *śaṅgirāmam,* பெ. (n.) மலைமேல்வழி (யாழ்.அக.); hill path.

*[Skt. saṅkrāma> த. சங்கிராமம்.]*

**சங்கிராமம்**[2] *śaṅgirāmam,* பெ.(n.) போர் (திவா.); war, battle.

*[Skt. saṅ-grāma> த. சங்கிராமம்.]*

**சங்கிராமவிலக்கணம்** *śaṅgirāma-v-ilakkaṇam,* பெ.(n.) அறுபத்துநான்கு கலைகளுள் ஒன்றாகிய போர்த்தொழிற்கலை (வின்.); art of warfare, one of *aṟupattunālu-kalai,* q.v.

**த.வ. போர்நூல்.**

*[சங்கிரராம(ம்) + இலக்கணம் சங்கிராம(ம்) ]*

*[Skt. saṅ-grāma> த. இலக்கணம்.]*

**சங்கிரியம்** *saṅgiriyam,* பெ.(n.) நெய்; ghee, clarified butter (சா.அக.).

**சங்கிருதம்**[1] *śaṅgirudam,* பெ.(n.) வடமொழி (வின்.); sanskrit.

*[Skt. saṃ-s-kṛta> த. சங்கிருதம்.]*

**சங்கிருதம்**[2] *śaṅgirudam,* பெ.(n.) கலப்பு (யாழ்.அக.); mixture.

*[Skt. saṅ-kṛta> த. சங்கிருதம்.]*

**சங்கிருதி**[1] *śaṅgirudi,* பெ.(n.) ஒற்றொழித்து ஓரடிக்கு 24 எழுத்துக் கொண்டதாய்த் தமிழில் வழங்கும், வடமொழிச் சந்தம் (வீரசோ.யாப்.33, உரை); metrical line of 24 letters exclusive of consonants adopted from sanskrit.

**த.வ. வடசந்தம்.**

*[Skt. saṅkṛti> த. சங்கிருதி.]*

**சங்கிருதி**[2] *šaṅgirudi,* பெ.(n.) பேரழிவு; destruction.

*[Skt. saṃ-hṛti> த. சங்கிருதி]*

**சங்கிலிகரணம்** *šaṅgili-karaṇam,* பெ.(n.) இயற்கைக்கு மாறான புணர்ச்சி (யாழ்.அக.); unnatural coition.

த.வ. வன்புணர்வு.

*[Skt. saṅkalīkaraṇa> த. சங்கிலிகரணம்.]*

**சங்கிலிதம்** *šaṅgilidam,* பெ.(n.) **சங்கலிதம்** பார்க்க (j.); see *šaṅgalidam.*

*[Skt. saṅ-kalita> த. சங்கிலிதம்.]*

**சங்கின்குடியோன்** *šaṅgiṉ-kuḍiyōṉ,* பெ.(n.) நாகரவண்டு (யாழ்.அக.); a gold-coloured beetle.

**சங்கின்னராகம்** *šaṅginṉa-rāgam,* பெ.(n.) (Mus.) a specific தனிச்சிறப்புடைய பண்வகை (திவா.); melody-type.

*[Skt.saṅkīrṇa-rāga> த. சங்கின்னராகம்.]*

**சங்கினி** *šaṅgiṉi,* பெ.(n.) 1. காமநூல்கள் கூறும் நால்வகைப் பெண்களில், மூன்றாம் வகையினள் (கொக்கோ.1, 11-14); (Erot.) the third of the four classes into which women are classified in *kāma-šāstra.* 2. பத்து வகை நாடியு ளொன்று (சிலப்.3. 26, உரை); a principal tubular vessel of the human body, one of *taša-nāḍi,* q.v. 2. சங்கங்குப்பி (மலை.); smooth volkameria.

*[Skt. šaṅkhinī> த. சங்கினி.]*

**சங்கீதக்கச்சேரி** *šaṅgīda-k-kaccēri,* பெ.(n.) துணை இன்னியங்களுடன் நிகழும் பாட்டரங்கம்; music performance with accompaniments.

த.வ. பல்லியப்பாட்டரங்கம்.

*[Skt. saṅ-gīta+U.kachahri> த.சங்கீதக் கச்சேரி.]*

**சங்கீதக்காரன்** *šaṅgīdakkāraṉ,* பெ.(n.) 1. இசையில் வல்லவன்; musician. 2. கிறித்தவப் பாடல்களைப் பாடுவோன்; psalmist.

*[சங்கீதம் + காரன்.]*

த.வ. வாணன்.

*[Skt. saṅ-gīta> த. சங்கீதம்.]*

**சங்கீதக்கியானம்** *šaṅgīda-k-kiyāṉam,* பெ.(n.) இசையறிவு; knowledge of music, skill in music.

*[Skt. saṅ-gīta+jñāna> த. சங்கீதக் கியானம்.]*

**சங்கீதசாகித்தியம்** *šaṅgīda-šāgittiyam,* பெ.(n.) 1. இசைப் பாடல்கள்; the arts of music and poetry. 2. இசைப் பயிற்சி (யாழ்.அக.); practice in the art of music.

த.வ. பண்இலக்கியம்.

*[Skt. saṅ-gīta+sāhitya> த. சங்கீத சாகித்தியம்.]*

**சங்கீதப்பாரி** *šaṅgīda-p-pāri,* பெ.(n.) பாட்டுடன் ஊர்க்காவல் செய்யும் இராக் காவலாளர் (Pd.); night watch patrolling the streets with instrumental music.

த.வ. இராக்காவல்பாடகன்.

*[Skt. saṅ-gīta+U.pahra> த. சங்கீதப்பாரி.]*

**சங்கீதப்பிரியர்** *šaṅgīda-p-piriyar,* பெ.(n.) இசை ஆர்வலர்; music affectionate.

*[Skt. saṅ-gīta+priya த. சங்கீதப்பிரியர்.]*

**சங்கீதபூசணம்** *šaṅgīda-pūsaṇam,* பெ.(n.) இசைவல்லுநருக்கு வழங்கும் சிறப்புப் பட்டம்; a title given to musicians.

த.வ. இசைமாமணி.

*[Skt.saṅ-gīta+bhūṣaṇa>த. சங்கீதபூசணம்]*

**சங்கீதப்பெட்டி** *šaṅgīda-p-peṭṭi,* பெ.(n.) இசைக் கருவி வகை (இக்.வ.); hand-harmonium.

த.வ. நொடிப்பிசைப்பெட்டி.

*[சங்கீதம் + பெட்டி.]*

*[Skt. saṅ-gīta> த. சங்கீதம்.]*

**சங்கீதம்**[1] *šaṅgīdam,* பெ.(n.) 1. இசை (பிங்.); music. 2. இசைநூல்; art or science of music. 3. இசைப்பாட்டு (கிறித்.);psalm, hymn.

*[Skt. saṅ-gīta> த. சங்கீதம்.]*

**சங்கீதம்²** *šaṅgīdam,* பெ.(n.) கச்சோரம், 2. (தைலவ.தைல.) பார்க்க; spiked garland flower.

**சங்கீதலோலன்** *šaṅgīda-lōlaṉ,* பெ.(n.) இசையில் பெரிதும் ஈடுபட்டவன்; one who revels in music, a votary of music.

த.வ. இசையார்வலன்.

*[Skt. saṅ-gīta+lōla> த. சங்கீதலோலன்.]*

**சங்கீதவாத்தியம்** *šaṅgīda-vāttiyam,* பெ.(n.) இசைக்கருவி; musical instrument.

*[சங்கீதம் + வாத்தியம்.]*

*[Skt. saṅ-gīta> த. சங்கீதம்.]*

**சங்கீதி** *šaṅgīdi,* பெ.(n.) கலந்துரையாடல் (யாழ்.அக.); conversation.

*[Skt. saṅgīti> த. சங்கீதி.]*

**சங்கீர்ணசாதி** *šaṅgīrṇa-šādi,* பெ.(n.) ஒன்பது எழுத்துக் காலங் கொண்ட தாளவளவை (பரத.தாள.47, உரை); (Mus.) a sub-division of time measure consisting of nine *akṣara-kālam* q.v.

த.வ. இருசீர்த்தாளம்.

*[Skt. saṅ-kīrṇa+jāti> த. சங்கீர்ணசாதி.]*

கருவிளங்கனி, புளிமா போன்ற யாப்பு வகைக்குரிய தாளம்.

**சங்கீர்ணம்** *šaṅgīrṇam,* பெ.(n.) **சங்கீரணம்** பார்க்க (இலக்.அக.); see *saṅgīraṇam.*

*[Skt. saṅ-kīrṇa> த. சங்கீர்ணம்.]*

**சங்கீர்த்தனம்** *šaṅgīrttaṉam,* பெ.(n.) 1. சொல்லுகை; telling, reciting. 2. புகழ்கை (வின்.); celebration, praise. 3. கரிசு (பாவ) அறிக்கை (R.C.); confession to a priest.

*[Skt. saṅ-kīrtana> த. சங்கீர்த்தனம்.]*

**சங்கீர்தம்** *šaṅgīrdtam,* பெ.(n.) 1. ஒன்று சேர்கை; combination, amalgamation. 2. புணர்ச்சி; copulation.

*[Skt. sam-hitā> த. சங்கீர்த்தம்.]*

**சங்கீரணம்** *šaṅgīraṇam,* பெ.(n.) 1. கலப்பு; mixing, commingling, coalescing. 2. கலவையணி (தண்டி.87); (Rhet.) a composite figure of speech in which several figures of speech are blended. 3. **சங்கீர்ணசாதி** பார்க்க (பரத.தாள.47); see *saṅgīrṇa-sādi.* 4. மத்தள வகை (பரத.ஒழிபி. 13); a kind of *mattaḷam.*

*[Skt. saṅ-kīrṇa> த. சங்கீரணம்.]*

**சங்குட்டம்** *šaṅguṭṭam,* பெ.(n.) எதிரொலி (யாழ்.அக.); echo, reverberation.

*[Skt. saṅ-ghuṣṭa> த. சங்குட்டம்.]*

**சங்குத்தான்** *šaṅguttāṉ,* பெ.(n.) கிறித்தவக் கோயிலைச் சார்ந்த பணியாளன்; (R.C.) sexton of a church.

*[E. sacristan> த. சங்குத்தான்.]*

**சங்கேசுரரசம்** *šaṅgēšura-rašam,* பெ.(n.) கெந்தி, நாதப் பொடி, இதளியப் பொடி, வெண்காரம், பலகறை, நீலத்துத்தம் இவற்றைச் சேர்த்தரைத்து, ஆயுள்வேத முறைப்படி புடமிட்டெடுத்து நோய்க்காகக் கொடுக்கும் மருந்து; a medicine prepared by mixing sulphur, calcined zinc and mercury, berax, cowries and blue vitriol in due proportions and grinding them all together the product is then calcined according to Ayurvedic method. It is prescribed for consumption (சா.அக.).

**சங்கேதம்¹** *šaṅgedam,* பெ.(n.) 1. குறி; preconcerted sign, signal. 2. உடன்படிக்கை; agreement, stipulation, understanding between parties. 3. சாதிசமயங்களால் உளதாகும் ஒற்றுமையுணர்ச்சி (குறள், 735, உரை); sense of solidarity due to religious or social identify. 4. குழூஉக்குறி; conventional terms limited to trades, professions. 5. உறுதிமொழி; word of assurance. *"எனக்கோர் சங்கேதஞ் சொன்னால்" (சேதுபு.சாத்தி.17).*

*[Skt. saṅ-kēta> த. சங்கேதம்¹.]*

**சங்கேதம்²** *šaṅgēdam,* பெ.(n.) கோயிலுக்கு இறையிலியாக விடப்பட்ட மானிய நிலம் (நாஞ்சி.); land assigned to a temple and made tax-free.

**சங்கேதமொழி** *šaṅgēda-moḻi,* பெ.(n.) குறியீடு (அ) குழூஉக்குறி (பரிபாஷை) வார்த்தை; technical term; code word (சா.அக.).

*[சங்கேதம் + மொழி.]*

*[Skt. saṅ-kēta> த. சங்கேதம்.]*

**சங்கேதமொழிப்பிரயோகம்** *šaṅgēda-moḻippirayōgam,* பெ.(n.) சாத்திரார்த்தம்; use of term or technical expression; technicality (சா.அக.).

*[Skt. saṅ-kēta> த. மொழி + pra-yōga.]*

**சங்கேதி** *šaṅgēdi,* பெ. (n.) பார்ப்பனருள் ஒரு வகையினர் (இ.வ.); a sub-sect among Brahmins.

*[Skt. saṅ-gēti> த. சங்கேதி.]*

**சங்கேப்பம்** *šaṅgēppam,* பெ. (n.) சுருக்கம்; abstract, epitome, compendium, abridgement.

*[Skt. saṅ-ksēpa> த. சங்கேப்பம்.]*

**சங்கேமாயி** *šaṅgēmāyi,* பெ.(n.) ஒரு சேணிய (யுனானி) கடைச் சரக்கு; a bazaar drug useful in unani system (சா.அக.).

**சங்கை**[1] *šaṅgai,* பெ.(n.) 1. ஐயம்; doubt, hesitation, suspicion. *"சங்கையுந் துணிவும்" (திவ்.பெரியதி.4, 5, 8).* 2. அச்சம் (வின்.); fear, terror, apprehension. 2. பூதபிசாசு முதலியவை; evil spirit. *"சங்கையஞ்சார்.... பங்கயத்தானடிப் பக்தர்களே" (திருநூற்.68).*

*[Skt. šaṅkā> த. சங்கை¹.]*

**சங்கை**[2] *šaṅgai,* பெ.(n.) 1. எண்ணம்; motive, thought. *"சங்கையிற் சழக்கிலன்" (கம்பரா.சம்பா.28).* 2. வழக்கம் (வின்.); custom, usage.

*[Skt. samjñā> த. சங்கை².]*

**சங்கைப்பாடு** *šaṅgai-p-pāḍu,* பெ.(n.) ஐயப்பாடு; doubt, uncertainty. *"எங்கள் குடியிருப்புச் சங்கைப்பா டென்னத்தகாது" (தெய்வச்.விறலிவிடு.233).*

*[Skt. šaṅkā+> த. சங்கை+பாடு.]*

**சங்கைவிடம்** *šaṅgai-viḍam,* பெ.(n.) பாம்பைத் தொடுதல், பார்த்தல் முதலியவற்றால் தோன்றிய அச்சத்தாலாகிய நோய் (சீவரட்.); suffering caused by fear at the sight or touch of serpents.

*[Skt. šaṅkā+ viṣa> த. சங்கைவிடம்.]*

**சங்கோசகம்** *šaṅgōšagam,* பெ.(n.) இறப்பை யுண்டாக்கும் ஒரு நச்சுக் கிழங்கு; a poisonous root causing death (சா.அக.).

**சங்கோசபரிவாரம்** *šaṅgōša-parivāram,* பெ.(n.) தக்கோரை மதித்தழைப்பதற்கென்று, அரசனால் நியமிக்கப்பட்ட சிறு கூட்டத்தார் (சிலப்.28, 89, உரை); a small company of men appointed by a king to receive guests.

*[Skt. saṅ-kōca+parivārā> த. சங்கோச பரிவாரம்.]*

**சங்கோசபிசுனம்** *šaṅkōša-pišuṉam,* பெ.(n.) செஞ்சாந்து (குங்குமம்); English saffron - croeus sativus (சா.அக.).

**சங்கோசம்** *šaṅgōšam,* பெ.(n.) 1. சுருங்குகை; contracting, shrinking. *"மாயையிதற் கிருதருமஞ் சங்கோச விகாச மென்றாம்" (வேதா.சூ.60).* 2. கூச்சம்; bashfulness, shyness, coyness, ticklishness.

*[Skt. saṅ-kōca> த. தங்கோசம்.]*

**சங்கோசனகாரி** *šaṅgōšaṉa-kāri,* பெ.(n.) துவர்ப்புப் பொருள் (பைஷஜ.12); astringents.

*[Skt. saṅ-kōcana+> த. சங்கோசனகாரி.]*

**சங்கோசி** *šaṅkōši,* பெ.(n.) கூச்சம் நிறைந்தவர் (அ.வ.); shy person. *"அவன் சரியான சங்கோஜி; பெண்களை சரியாக நிமிர்ந்துகூடப் பார்க்கமாட்டான்" (கிரியா.).*

**சங்கோபனம்** *šaṅgōbaṉam,* பெ.(n.) மறைவு (சங்.அக.); secrecy.

*[Skt. saṅ-gō-pana> த. சங்கோபனம்.]*

**சங்கோலம்** *šaṅgōlam,* பெ.(n.) தயிர்; curd (சா.அக.).

**சங்சேபம்** *šaṅkṣēbam,* பெ.(n.) சுருக்கம்; abstract, epitome.

*[Skt. saṅ-kṣēpa> த. சங்சேபம்.]*

**சச்சந்தன்** *šaccandaṉ,* பெ.(n.) சீவகனுடைய தந்தை (சீவக.); father of *šivagaṉ.*

*[Skt. satyan-dhara> த. சச்சந்தன்.]*

**சச்சம்** *šaccam,* பெ.(n.) உண்மை (வின்.); truth, genuineness.

*[Skt. satya> த. சச்சம்.]*

**சச்சம்பிரதாயம்** *šaccampiratāyam,* பெ. (n.) நல்ல வரன்முறை; good custom or approved usage. *"சச்சம்பிரதாயந் தாமுடையோர் கேட்டக்கால்" (உபதேசரத்.58).*

*[Skt.sat-sampradāya>த. சச்சம்பிரதாயம்.]*

**சச்சற்புடம்** *šaccaṟpuḍam,* பெ.(n.) இரண்டு குருவும், ஓர் இலகுவும், ஒரு புலுதமுமாக எட்டு மாத்திரை கொண்ட தாளவகை (பரத.தாள.11); (mus.) a variety of time-measure represented by one of *pañja-tāḷam* (q.v.).

த.வ. எண்மாத்திரைத்தாளம்.

*[Skt. caccat-puṭa> த. சச்சற்புடம்.]*

**சச்சனம்** *šaccaṉam,* பெ.(n.) நாவல்; common jaumoon-*Eugenia jambolina* (சா.அக.).

**சச்சாரம்** *saccāram,* பெ.(n.) யானைக்கூடம்; elephant-stable. *"வாசமுறு சச்சாரமீ தென்னை.... மத்தகசமென வளர்த்தாய்" (தாயு. மௌனகுரு.1).*

*[T. satjjāramu<sāmajāgāra< த. சச்சாரம்.]*

**சச்சிக்காரம்** *šacci-k-kāram,* பெ.(n.) உப்பு வகை; impure carbonate of soda.

*[Skt. sarjikā-kṣāra> த. சச்சிக்காரம்.]*

**சச்சிதானந்தன்** *šaccidāṉandaṉ,* பெ. (n.) உளதாயிருத்தல் மெய்யறிவு இன்பம் என்னும் முக்குணங்களையுடைய பரம்பொருள்; the Supreme Spirit, as having the threefold attributes of existence, knowledge and bliss.

*[Skt.šat+cit+ānanda>த. சச்சிதானந்தன்.]*

**சச்சிதானந்தை** *šaccidāṉandai,* பெ.(n.) உளதாயிருத்தல். மெய்யறிவு, இன்பம் என்னும் முக்குணங்களுடைய உமாதேவி (சக்தி சொரூபம்); the Supreme *Šakti,* as having the three fold attributes of existence, knowledge and bliss. *"அகண்டாகார சச்சிதானந்தையை யறியாதபேர்" (சி.சி. 148 சிவாக்.)*

*[Skt.sat+cit+ā-nanda>த.சச்சிதானச்தை.]*

**சச்சினி** *šacciṉi,* பெ.(n.) ஆறாவது மாதம்; the sixth month (சா.அக.).

**சச்சுருவம்** *šaccuruvam,* பெ.(n.) மெய்யுருவம் (இ.வ.); exact resemblance or likeness.

*[Skt.tad-rūpa>Tu.sadrūpa>த.சச்சுருவம்.]*

**சச்சுவாயு** *šaccuvāyu,* பெ. (n.) 1. தூய்மைக்கேடான காற்று; contaminated air. 2. மாசடைந்த காற்று; impure air or gas. 3. கரியமில வாயு; carbonic acid gas (சா.அக.).

த.வ. கெடுங்காற்று.

*[T.tcaccu+vāyu>த.சச்சுவாயு.]*

**சச்சை** *šaccai,* பெ.(n.) 1. ஆராய்ச்சி; research, investigation, deliberation, discussion. 2. பலமுறை ஓதுகை; repeated reading, recitation. *"சச்சை மறையின்" (பாரத. இராச.114).*

*[Skt. carcā> த. சச்சை.]*

**சச்சையன்** *šaccaiyaṉ,* பெ.(n.) உண்மைப் பொருளானவன்; God, as reality. *"சச்சையனே மிக்க தண்புனல்.... விச்சையனே" (திருவாச.6, 31).*

*[Skt. sattā> த. சச்யைன்.]*

**சசகதி** *šaša-kadi,* பெ.(n.) குதிரை நடை ஐந்தனுள் முயலோட்டம் போன்ற நடை (திவா.); a hare-like pace of horse, one of the five *ašuva-kadi* (q.v.).

**சசகம்** *šasagam,* பெ.(n.) சசம் பார்க்க; see *šašam.*

*[Skt. šašaka> த. சசகம்.]*

**சசிருங்கம்** *šaša-širuṅgam,* பெ.(n.) முயற்கொம்பு; hare's horn, a term figuratively used for indicating an impossibility or sometimes rarity (சா.அக.).

**சசமதம்** *šaša-nadam,* பெ.(n.) மான்மணத்தி (கத்தூரி) (மூ.அ.); musk.

*[சசம்+மதம்.]*

*[Skt. šuša> த. சச(ம்).]*

**சசலம்** *šašalam,* பெ.(n.) ஈரம்; dampness (சா.அக.).

**சசவிசாணம்** *šaša-višāṇam,* பெ.(n.) முயற்கொம்பு (இல்பொருட்கு எடுத்துக்காட்டாகக் காட்டப்படுவது) (வேதா.சூ.57, உரை); hare's horn, a term for illustrating an impossibility.

*[Skt. šaša+viṣāṇa> த. சசவிசாணம்.]*

**சசாங்கன்** *šašāṅgaṉ,* பெ. (n.) நிலவன் (முயற்கறையுடையவன்); moon as have marked.

*[Skt. šašāṅka> த. சசாங்கன்.]*

**சசி**[1] *šaši,* பெ.(n.) 1. **சசாங்கன்** (பிங்.) பார்க்க; see *šašāṅgaṉ.* 2. கருப்பூரம் (சூடா.); camphor. 3. இந்துப்பு (தைலவ.தைல.119); rock-salt. 4. கடல் (அக.நி.); sea.

*[Skt. šašīnom-sing ofšašin> த. சசி [1].]*

**சசி**[2] *šaci,* பெ.(n.) இந்திராணி; wife of Indraṉ.

*[Skt. šacī> த. சசீ.]*

**சசிசேகரன்** *šaši-šēkaraṉ,* பெ.(n.) சந்திரனைத் தலையில் சூடிய சிவன்; *Šiva*, as wearing the moon on his head.

*[Skt. šacī> த. சசீ.]*

**சசிதரன்** *šaši-taraṉ,* பெ.(n.) **சசிசேகரன்** பார்க்க (பிங்.); see *saši-šēgaraṉ.*

**சசிப்பிரியம்** *šaši-p-piriyam,* பெ.(n.) 1. முத்து (மூ.அ.); pearl. 2. வெள்ளாம்பல்; white indian water - lily.

*[Skt. šaši+priya> த. சசிப்பிரியம்.]*

**சசிபுடபுத்தி** *šaši-puḍa-putti,* பெ.(n.) குறிப்பிட்ட நேரத்திலேற்படும் நிலவின் நிலை (வின்); true motion of the moon in a given time

*[சசிபுடம் + புத்தி.]*

*[Skt. šaši+puṭa> த. சசிபுடம்.]*

**சசிபுடம்** *šaši-puḍam,* பெ.(n.) குறித்த காலத்தில் கோள்சாய்விலிருந்து நிலவு நிற்கும் நிலை (வின்.); (Astron.) true longitude of the moon.

*[Skt. šaši-puṭa> த. சசிபுடம்.]*

**சசிமணாளன்** *šaši-maṇāḷaṉ,* பெ.(n.) (சசியின் கணவன்) இந்திரன் (சூடா.); Indraṉ, as husband of *šaši.*

*[சசி + மணாளன்.]*

*[Skt. šaci>த.சசி.]*

**சசியுப்பு** *šaši-y-uppu,* பெ.(n.) இந்துப்பு; rock salt; sindh salt (சா.அக.).

**சசிவர்ணபோதம்** *šaši-varṇa-pōdam,* பெ.(n.) தத்துவராயர் தமிழில் இயற்றிய ஒரு மறைமுடிவு நூல்; a *vēdānda* work in Tamil by *uattuvarāyar.*

*[Skt. šaši-varṇa-bōdha> த. சசிவர்ண போதம்.]*

**சசிவல்லவன்** *šaši-vallavaṉ,* பெ.(n.) **சசிமணாளன்** பார்க்க (பிங்.); see *šaši-maṇāḷaṉ.*

*[சசி + வல்லவன்.]*

*[Skt. šaci > த. சசி.]*

**சசிவன்** *šašivaṉ,* பெ.(n.) 1. அமைச்சன்; minister. 2. நண்பன்; friend.

*[Skt. saciva> த. சசிவன்.]*

**சசுந்தரம்** *šašundaram,* பெ.(n.) ஒரு கடைச் சரக்கு; a bazaar drug (சா.அக.).

**சசுபாகிதம்** *šašubāgidam,* பெ.(n.) முக்கூட்டு நெய்; நோய் தீர்ந்தவுடன் தலைமுழுகக் கொடுப்பது; a mixture of three oils viz., cow's ghee, gingelly oil and castor oil. It is prescribed for patients to have an oil bath immediately after cure (சா.அக.).

த.வ. முக்கூட்டெண்ணெய்.

**சசேலசநானம்** *šašēasnāṇam,* பெ.(n.) சாச்சடங்கில் உடுத்த உடையோடு முழுகுகை; ceremonial bathing without undressing oneself.

*[Skt. sa-cēla+šnāna>த. சசேலஸ்நானம்.]*

**சசோபநேத்திரபாகம்** *śaśōbanēttirabāgam,* பெ.(n.) கண் நோவெடுத்து, குத்தல் கண்டு, பீளை சேர்ந்து, சீழும் நீரும் வடிந்து விழியில் எரிச்சலை யுண்டாக்கும் ஒரு கண்ணோய்; an eye disease attended with symptoms of itching sensation, pricking pain, suppuration of the eyes, deposit of mucous matters, slimy discharge lacrimation and inflammation with burning sensation (சா.அக.).

**த.வ. குத்தல் கண்ணோய்.**

**சஞ்சத்தகர்** *śañattagar,* பெ.(n.) போரில் வீரச் செய்கை ஒன்றைச் செய்வதாகச் சூளுரை செய்து, அச்சூளுரைப்படியே தவறாது நடக்கும் அரசவீரக் கூட்டத்தார்; a band of warrior-kings who, under a vow, perform a heroic deed in battle. *"அருச்சுனனைச் சஞ்சத்தகரொழிந்தார் வந்து அறை கூவிக்கொண்டு" (பாரதவெண்.772, உரைநடை).*

**த.வ. சூள்மாறாமறவர்.**

*[Skt. sam-śaptaka> த. சஞ்சத்தகர்.]*

**சஞ்சம்** *śañjam,* பெ.(n.) 1. பூணூல் (வின்.); sacred cord or thread worn by the twice-born. 2. கச்சு (யாழ்.அக.); sash.

*[T. tjannidamu<, yajñōpavita>த. சஞ்சம்.]*

**சஞ்சமஞ்சம்** *sañja-mañjam,* பெ.(n.) ஆரவாரம் (கோஷ்டம்); Arabian costus-costus speciosus (சா.அக.).

**சஞ்சமனம்** *śañjamaṉam* பெ.(n.) முப்பிணிக் கூறுகளைச்சமனப்படுத்தி, அதனாலுண்டான சினங்களை அமைதிப் (சாந்தம்)படுத்தி, உடம்பினின்று கழிவு ஏற்படாமல் செய்யும் மருந்து; medicine rectifying the deranged humoursin this system and calm their excitement without promoting the excretions (சா.அக.).

**த.வ. சீர்செய் மருந்து.**

**சஞ்சயம்**[1] *śañjayam,* பெ.(n.) கூட்டம் (யாழ்.அக.); assembly, multitude, collection.

*[Skt. saṃ-śaya> த. சஞ்சயம்.]*

**சஞ்சயம்**[2] *śañjayam,* பெ.(n.) ஐயம் (இலக். அக.); doubt.

*[Skt. saṃ-śaya> த. சஞ்சயம்.]*

**சஞ்சயன்** *śañjayaṉ,* பெ. (n.) திருதராட்டிரனுடைய தேர்ப்பாகன்; the cahrioteer of *Dhṛtarāṣṭra*, a character in the Mahabharatam. *"சஞ்சயன் றனை வருகவென்று" (பாரத.சஞ்சயன்றூது. 2).*

*[Skt. sañ-jaya> த. சஞ்சயன்.]*

**சஞ்சயனம்** *śañjayaṉam,* பெ.(n.) பால் தெளித்தலாகிய ஈமச்சடங்கு; funeral ceremony in which the ashes and bones of a cremated body are collected, sprinkled with milk and thrown into sacred waters.

**த.வ. பால்தெளி.**

*[Skt. sañ-cayana> த. சஞ்சயனம்.]*

**சஞ்சரம்** *śañjaram,* பெ.(n.) 1. **சஞ்சலம்** பார்க்க; see *sañjalam. "சஞ்சரத் திரைக்கரங்களால்" (பாரத.சம்பவ.40).* 2. உடல் (இலக்.அக.); body. 3. வழி (சங்.அக.); way, path.

*[Skt. sañ-cāra> த. சஞ்சரம்.]*

**சஞ்சரி-த்தல்** *śañjari-,* 4 செ.கு.வி.(v.i.) 1. நடமாடுதல்; to move about. 2. திரிதல்; to wander, range, haunt, as beasts. 3. வாழ்தல்; to lodge, dwell, abide. *"மாலவிடஞ் சஞ்சரியாமல்" (தனிப்பா.ii, 25, 57).* 4. நெறிதப்பி ஒழுகுதல் (இ.வ.); to lead immoral life.

*[Skt. sañ-car> த. சஞ்சரி.]*

**சஞ்சரிகம்** *śañjarigam,* பெ.(n.) **சஞ்சரீகம்** பார்க்க; see *śañjarīgam. "சஞ்சரிக நறுமலர்த்தார்" (பாரத.அருச்சுனன்றீர்.36).*

**சஞ்சரீகம்** *śañjarīgam,* பெ.(n.) வண்டுவகை; a large black bee, beetle. *"சஞ்சரீக மிசைபாட" (மச்சபு.நைமிசா.9).*

*[Skt. cañcarīka> த. சஞ்சரி.]*

**சஞ்சலசீவனன்** *šañjala-šivaṉaṉ,* பெ.(n.) ஒன்பான் மணியுளொன்று; topaz (சா.அக.).

**சஞ்சலம்¹** *šañjalam,* பெ.(n.) 1. காற்று; wind. 2. மின்னல்; lighting.

*[Skt. šañjala> த. சஞ்சலம்.]*

**சஞ்சலம்²** *šañjalam,* பெ.(n.) 1. நிலையின்மை; fickleness, unsteadiness. 2. விரைந்து அசைகை; rapid motion. 3. நடுக்கம் (உரி.நி.); trembling, shivering, tremulousness. 4. துன்பம்; sorrow, grief, trouble. *"சாந்துணையுஞ் சஞ்சலமே தான்" (நல்வழி.28).* 5. நோய்; disease, ailment. *"அவன் சஞ்சலமாய்க் கிடக்கிறான்" (வின்.).*

*[Skt. cañcala> த. சஞ்சலம்.]*

**சஞ்சலரகிதன்** *šañjala-ragidaṉ,* பெ.(n.) மனக்கலக்கமற்றவன் (தாயு.கருணாகர.1); a person of undisturbed equanimity; one who is resolute and steadfast.

*[Skt. cañcala+rahita> த. சஞ்சலரகிதன்.]*

**சஞ்சலனம்** *šañjalaṉam,* பெ.(n.) அச்சத்தால் உண்டாகும் நடுக்கம் (யாழ்.அக.); trepidation.

*[Skt. cañjalana> த. சஞ்சலனம்.]*

**சஞ்சலைசீவகன்** *šañjalai-šivagaṉ,* பெ.(n.) குருந்தம் (புட்பராகம்) (யாழ்.அக.); topaz.

**சஞ்சனம்** *šañjaṉam,* பெ. (n.) அணிகலன்களால் எழும் ஒலி (யாழ்.அக.); tinkling of ornaments.

*[Skt. jhañjhana> த. சஞ்சனம்.]*

**சஞ்சா** *šañjā,* பெ.(n.) ஆற்றும் மருந்து; healling balm (சா.அக.).

**சஞ்சாமாருதம்** *šañjā-mārudam,* பெ.(n.) **சண்டமாருதம்** பார்க்க; see *šaṇḍa-mārudam.*

*[Skt.jhañjhā+māruta>த. சஞ்சாமாருதம்.]*

**சஞ்சாயக்குளி** *šañjāya-k-kuḷi,* பெ.(n.) அரசாங்கத்தில் நடத்தும் முத்துக்குளி; pearl - fishery undertaken by the government.

*[சஞ்சாயம் + குளி.]*

*[Skt. cañcāyam> த. சஞ்சாயம்.]*

**சஞ்சாயகம்** *šañjāyagam,* பெ.(n.) வண்டு; bee. *"சஞ்சாயகமங்குச் சார்ந்தால்" (கச்சி.வண்டுவிடு.396).*

*[Skt. cañcāya> த. சஞ்சாயகம்.]*

**சஞ்சாரசமாதி** *šañjārašamādi,* பெ.(n.) பசி தாகத்தை அமைதி (சாந்தி) செய்து கொண்டு நடக்கையிலும், இருக்கையிலும் இருபுருவ நடுவில் (கேசரி) மனத்தை நாட்டிக் கடைப்பிடிக்கும் ஒரு நிலைமை; a state or condition in which one after appeasing his hunger and thirst, concentrates his mind even while walking and sitting during his wakeful life (சா.அக.).

*[சஞ்சாரம் + சமாதி.]*

*[Skt. šañcāra> த. சஞ்சாரம்.]*

**சஞ்சாரபிரேதம்** *šañcāra-pirēdam,* பெ. (n.) நடைப்பிணம் மக்கட்பதர்; a good for nothing person, worthless fellow. *சிவபூசையில்லாதான்...சஞ்சார பிரேதமெனக் கூறலாமே" (சிவரக.கத்தரிப்.19).*

த.வ. நடைப்பிணம்.

*[Skt.sañ-cāra+preta>த.சஞ்சார பிரேதம்.]*

**சஞ்சாரம்¹** *šañjāram,* பெ.(n.) 1. உலா; travelling, touring. 2. நடமாட்டம்; movement, frequenting. 3.அமைக்கப்படாது இயற்கையில் அமைந்த விடுதி (இ.வ.); natural habitat. 4. நெறிதப்பிய ஒழுக்கம்; immoral life. 5. நடனத்திற்குரிய பாதவைப்பு வகை ஐந்தனுள் ஒன்று (சிலப்.3, 12, பக். 81, கீழ்க்குறிப்பு); (*Nāṭya*) one of the five modes of stepping in a dance. 6. எடுப்பிசையும் இறங்கிசையும் கலத்தல் (ஆரோகண அவரோகண) (வின்.); (Mus.) modulations of the voice in singing the notes of the gamut.

*[Skt. sañ-cāra> த. சஞ்சாரம்.]*

**சஞ்சாரம்²** *šañjāram,* பெ.(n.) **சமுசாரம்** பார்க்க; see *šamucāram.*

*[Skt. sam-sāra> த. சஞ்சாரம்.]*

**சஞ்சாரம்**³ *šañjāram,* பெ.(n.) 1. தொற்று நோய்; contagious disease. 2. நாக மணி (ரத்தினம்); *Nāgaratna*, a fabulous gem.

*[Skt. sañcāra> த. சஞ்சாரம்.]*

**சஞ்சாரவியாதி** *šañjāra-viyādi,* பெ.(n.) தொற்று நோய் (வியாதி.) (இ.வ.); contagion, infectious, disease.

*[Skt.sañ-cāra+viyāti>த. சஞ்சாரவியாதி.]*

**சஞ்சாரன்** *šañjāran,* பெ.(n.) 1. உயிர்; life. 2. திரிந்து வாழ்பவன்; one leading a wandering life (சா.அக.).

*[Skt. šañ-cāra> த. சஞ்சாரன்.]*

**சஞ்சாரி**¹ *šañjāri,* பெ. (n.) 1. அலைந்து திரிவோன்; wanderer, traveller. 2. இசையின் பல வகை; (Mus.) a melody type having a considerable variety of notes.

*[Skt.sañ-cāri→sañ-cārin> த. சஞ்சாரி.]*

**சஞ்சாரி**² *šañjāri,* பெ.(n.) 1. குடியானவன்; cultivator,farmer.2.பெருங்குடும்பமுடையவன்; a man having a large family.

*[Skt. saṃ-sāri> த. சஞ்சாரி.]*

**சஞ்சாரிகன்** *šañjārigan,* பெ.(n.) தூதன் (யாழ்.அக.); ambassador, messenger.

*[Skt. sañcārika> த. சஞ்சாரிகன்.]*

**சஞ்சாலி** *šañjāli,* பெ.(n.) பெரிய துமுக்கி (வின்.); large gun.

*[U. janjāl> த. சஞ்சாலி.]*

**சஞ்சாலிகம்** *šañjāligam,* பெ.(n.) **சஞ்சரிகம்** (சூடா.) பார்க்க; see *šañjarigam.*

**சஞ்சாவாதம்** *šañjāvādam,* பெ.(n.) காற்றும் மழையும் (யாழ்.அக.); wind and rain, stormy weather.

*[Skt. jhañjhā+vāta> த. சஞ்சாவாதம்.]*

**சஞ்சாளிகம்** *sañjāligam,* பெ.(n.) **சஞ்சரிகம்** (சூடா.) பார்க்க; see *sañjārigam.*

**சஞ்சி** *šañji,* பெ.(n.) பை (இ.வ.); bag, pouch.

**த.வ. தூக்குப்பை.**

*[T. sañci> த. சஞ்சி.]*

**சஞ்சிகை** *šañjigai,* பெ.(n.) புத்தகம் அல்லது தாளிகையின் பகுதி; part, as of a book; issue, number, as of a periodical.

*[Skt. sañ-cikā> த. சஞ்சிகை.]*

**சஞ்சிதம்** *šañjidam,* பெ.(n.) 1. சேர்த்து வைக்கப்பட்டது: what is stored up, accumulated. 2. தொடக்கம் கண்டறியப்படாத காலந்தொட்டு ஈட்டப்பட்டுள்ள கருமத்தில் துய்த்துத்தீர்ந்ததுபோக எஞ்சியது; accumulated karma of former births that still remains to be experienced, one of three karumam, q.v. *"பிராயச்சித்தஞ் சஞ்சிதந் தவிர்க்கு மன்றே" (பிரபோத.39, 18).*

*[Skt. sañ-cita> த. சஞ்சிதம்.]*

**சஞ்சிமூலி** *sañji-mūli,* பெ.(n.) உயிர்ப்பிக்கச் செய்யும் (சஞ்சீவி) மருந்து; elixir (சா.அக.).

*[சஞ்சி+ த. மூலி.]*

*[Skt. sañi > த. சஞ்சி.]*

**சஞ்சீவகரணி** *šañjīva-karaṇi,* பெ.(n.) 1. மூர்ச்சைதீர்த்து உயிர்தரு(ம்) மருந்து (மூ.அ.): medicine that restores suspended animation. 2. புளியமரம் (பிங்.); tamarind tree.

*[Skt. sañ-jīva-karaṇi> த. சஞ்சீவகரணி.]*

**சஞ்சீவராயர்** *šañcīva-rāyar,* பெ.(n.) அனுமன் (M.E.R.95 of 1923); *Hanuman.*

*[Skt.sañjīva+K.rāyaru>த. சஞ்சீவராயர்.]*

**சஞ்சீவனம்**¹ *šañjīvanam.* பெ.(n.) உயிர்ப்பிக்கை (யாழ்.அக.); restoring to life, resuscitating.

*[Skt. sañ-jīvana> த. சஞ்சீவனம்.]*

**சஞ்சீவனம்**² *šañjīvanam,* பெ.(n.) நிரய வகை (மணிமே. 6, 181. அரும்.); a hell.

*[Skt. sañ-jīvana> த. சஞ்சீவனம்.]*

**சஞ்சீவனி** *šañjīvaṇi,* பெ.(n.) **சஞ்சீவி** பார்க்க; see *šañjīvi. "சஞ்சீவனி கண்ட செம்பொ னிமயாசலத்தில்" (திருவாவடு.கோ.113).*

*[Skt. sañ-jīvani> த. சஞ்சீவனி.]*

**சஞ்சீவனை** *šañjīvanai,* பெ.(n.) 1. **சஞ்சீவி** பார்க்க; see *šañjīvi.* 2. நாங்கூழ்; earth-worm.

*[Skt. Perh. sañ-jīvanā> த. சஞ்சீவனை.]*

**சஞ்சீவி** *šañjīvi,* பெ.(n.) 1. உயிர்ப்பிக்கும் மருந்து அல்லது மூலிகை; medicine or herb for reviving one from swoon or death. *"மூர்ச்சை கடிதகல வலியவரு ஞான சஞ்சீவியே" (தாயு.சின்மயானந்த.3).* 2. சீந்தில்; gulancha.

*[Skt. sañ-jīvi> த. சஞ்சீவி.]*

**சஞ்சீவிபருவதம்** *šañjīvi-paruvadam,* பெ.(n.) இறந்தவரைப் பிழைப்பிக்கும் மூலிகை யுடையதாக இராமாயணத்துக் கூறப்பட்ட ஒரு மலை; a mountain mentioned in Ramayana, as producing herbs which restore the dead to life.

*[Skt. sañ-jīvi+paruvata> த. சஞ்சீவி பருவதம்.]*

**சஞ்சீவிமூலிகை** *šañjīvi-mūligai,* பெ.(n.) உயிர்தரும் ஒருவகை மருந்துப் பச்சிலை (வின்.); revivifying roots or herbs.

**த.வ. உயிரூட்டி.**

*[சஞ்சீவி + மூலிகை.]*

*[Skt. sañjīvi> த. சஞ்சீவி.]*

**சஞ்சீவினி** *šañjīvini,* பெ.(n.) **சஞ்சீவி** பார்க்க; see *šañjīvi. "சோருமுயிர் பரக்குஞ் சஞ்சீவினிபோல்" (திருவாவடு.கோ.66).*

**சஞ்சுவிருதம்** *šañjuvirudam,* பெ.(n.) பறவை; bird (சா.அக.).

**சஞ்சேபம்** *šañjēbam,* பெ.(n.) சுருக்கம்; epitome, abstract.

*[Skt. sañ-kṣēpa> த. சஞ்சேபம்]*

**சஞ்சோதனம்** *šañjōdaṉam,* பெ.(n.) வளி, பித்த, கோழையின் தலைமை உடம்பில் அதிகமாகத் தங்காமலும், அப்படிச் சேர்ந்தாலும், கழிவு வழியாக வெளிப்படுத்தும் மருந்து; medicine preventing the accumulation of the deranged humours or discharging them even if retained, by excretions (சா.அக.).

*[Skt. sañjōtana> த. சஞ்சோதனம்]*

**சட்கோணம்** *šaṭ-kōṇam,* பெ.(n.) ஆறுகோணம் பார்க்க; see hexagon. *"சட்கோண நெடுந்தேர் மிசை" (பாரத. பதினாறாம்.65).*

*[Skt. ṣaṭ-kōṇa> த. சட்கோணம்.]*

**சட்சம்** *šaṭcam,* பெ.(n.) சுரவரிசையில் ஒன்று (சிலப்.3, 26, உரை); (Mus.) a note of the gamut.

*[Skt. ṣaḍ-ja> த. சட்சம்.]*

**சட்சமயம்** *šaṭ-šamayam,* பெ.(n.) அறுசமயம்; the six *vēdic* religious systems. *"சட்சமயவேத" (திருப்பு.132).*

*[சட் + சமயம்.]*

*[Skt. ṣaṭs-samaya>த. சட்சமயம்.]*

**சட்சரணம்** *šaṭšaraṇam,* பெ.(n.) வண்டு; beetle (சா.அக.).

**சட்சு** *šaṭu-dīṭcai,* பெ. (n.) கண் (சிசி.2,61,மறைஞா.); eye.

*[Skt. cakṣuḥ> த. சட்சு.]*

**சட்சுதீட்சை** *šaṭcu-dīṭcai,* பெ.(n.) குரு, சீடனைத் தனது அருட்பார்வையால் அறிவுமுண்டாகும்படி செய்வது; gracious look, as a mode of initiation.

**த.வ. கண்குருவம்.**

*[Skt. cakṣuḥ+dīkṣā → த. சட்சுதீட்சை]*

**சட்சுபீடை** *šaṭcu-pīḍai,* பெ.(n.) கண் வலி; pain of the eyes (சா.அக.).

*[சட்சு + பீடை.]*

*[Skt. cakṣḥ> த. சட்சு.]*

**சட்சுருதிதைவதம்** *šaṭšurudi-daivadam,* பெ.(n.) எண்ணிரு (சோடச) சுரங்களுள் ஒன்று; (Mus.) lowest variety of the sixth note of the gamut, one of *cōḍaša-šuram,* q.v.

*[Skt. saṭ-šruti+daivada>த. சட்சுருதி தைவதம்.]*

**சட்சுருதிரிசபம்** *saṭ-surudi-riṣabam,* பெ.(n.) பதினாறு (சோடச) சுரங்களுள் ஒன்று; (Mus.) middle variety of the second note of the gamut, one of *cōdaša-šuram,* q.v.

*[Skt. saṭ-šruti+ṛṣbaha> த. சட்சுருதி ரிசபம்.]*

**சட்சுரோகம்** *šatšurōgam,* பெ.(n.) கண்ணோய்; disease of the eyes (சா.அக.).

*[Skt. cakṣuh+rōga> த. சட்சுரோகம்.]*

**சட்சுவை** *šat-šuvai,* பெ.(n.) அறுசுவை; the six kinds of tastes (சா.அக.).

*[சட் + சுவை.]*

*[Skt. sat> த. சட்.]*

**சட்டகன்** *šattagan,* பெ.(n.); நீள உறங்குவோன்; one who indulges in excessive sleep-*Hypersomnambulist* (சா.அக.).

**த.வ. நெட்டுறங்கி.**

**சட்டி**[1] *šatti,* பெ.(n.) வளர்பிறை மற்றும் தேய்பிறையில் வரும் ஆறாம் பக்கல் (விதான. குணாகுண.6); the sixth tidi of a bright or dark fortnight.

**த.வ. அறுமி.**

*[Skt. ṣaṣṭhī> த. சட்டி.]*

**சட்டி**[2] *šatti,* பெ.(n.) அறுபது; sixty. *"சட்டி விரத வத்தியாயம்" (மச்சபு.).*

*[Pkt. satthi<ṣaṣṭi> த. சட்டி.]*

**சட்டிபூர்த்தி** *šatti-pūrtti,* பெ.(n.) அறுபதாம் அகவை நிறைவு; attainment of one's sixtieth birthday. 2. **சட்டிபூர்த்திசாந்தி** பார்க்க; see *satti-pūrtti-cānti.*

**த.வ. அறுபான் நிறை.**

*[சஷ்டி + பூர்த்தி.]*

*[Skt. ṣaṣṭi+Pūrti.]*

**சட்டிபூர்த்திசாந்தி** *šatti-pūrtti-cānti,* பெ.(n.) அறுபதாம் வயது நிரம்பிய நாளில் செய்யுஞ் சடங்கு; ceremony performed on one's sixtieth birthday.

**த.வ. அறுபதாம் சடங்கு.**

*[Skt. ṣaṣṭi+pūrti+šānti> த. சட்டிபூர்த்தி சாந்தி.]*

**சட்டிரசவர்க்கம்** *šat-iraša-varkkam,* பெ.(n.) அறுசுவைத் தொகுதி; the six palatable elements of a meal. *"சட்டிரசவர்க்கத் தமுதருந்தி" (கொண்டல்விடு.412).*

*[Skt. ṣaḍ-rasa+varga> த. சட்டிரசவர்க்கம்.]*

**சட்டிவிரதம்** *šatti-viradam,* பெ.(n.) திங்கள்தோறும் வளர்பிறை ஆறாம் பக்கலில் மேற்கொள்ளும் நோன்பு; religious observance on the sixth day of the bright fortnight in every month.

*[Skt. ṣaṣṭhī+vrata> த. சட்டிவிரதம்.]*

**சட்டினி** *šattini,* பெ.(n.) துவையல் வகை; chutney, a kind of strong relish.

**த.வ. பச்சினி.**

*[U. caṭni]*

**சட்டு** *šattu,* பெ.(n.) ஆறு (தைலவ.பாயி.30); six.

*[Skt. ṣaṭ> த. சட்டு.]*

**சட்டுவர்க்கம்** *šattu-varkkam,* பெ.(n.) 1. அறுசுவை; the six flavours. 2. பிறப்பிய (சாதக)க் கணிப்பின் அறுவகைப் பிரிவு; (Astrol.) the six main modes of casting a horoscopical chart.

*[Skt. ṣaḍ-varga> த. சட்டுவர்க்கம்.]*

**சட்பதம்** *šat-padam,* பெ.(n.) அறுகால்; beetle, as six legged. *"சட்பதங் குடைந்தெழு தாமம்" (செவ்வந்தி.4, நினைத்தது.4).*

*[Skt. ṣaṭ-pada> த. சட்பதம்.]*

**சட்பலம்** *šat-palam,* பெ.(n.) ஆறு வகைக் கடைச்சரக்கு; the six kinds of bazaar drugs (சா.அக.).

**சட்பாவம்** *šat-bāvam,* பெ.(n.) உடலில் உண்டாகும் இருத்தல், தோன்றுதல், உருத்திரிதல், வளர்தல், சுருங்குதல், அழிதல் என்ற ஆறுநிலைகள்; the six states of the physical body, viz., *iruttal, tōnṟudal, uru-t-tiridal, valardal, curuṅgudal, alidal.* *"சட்பாவம்... இயைந்திடாப் புற்கலன் றன்னை" (காசிக.யோக.13).*

**த.வ. ஆறுநிலை.**

*[Skt. ṣaḍ-bhāva> த. சட்பாவம்.]*

**சட்பித்துதயிலம்** *šatpittu-tayilam,* பெ.(n.) ஆயுள் வேத முறைப்படி, தலை நோய் முதலியவற்றிற்கு அணியம் செய்து மூக்கில் ஆறு துளியிடும் மெய்ம்மருந்து (தைலம்); an Ayur vedic preparation of medicated oil, 6

drops of which are administered into the nostrils in oase of cerebral complaints (சா.அக.).

த.வ. ஆறுதுளி மருந்து.

**சட்பிதாபுத்திரிகம்** *šaṭ-bidā-puttirigam,* பெ. (n.) பஞ்சதாளங்களுள் ஒன்று (பரத. தாள.13); (Mus.) a variety of time measure, one of *pañja-tāḷam*, q.v.

*[Skt. ṣaṭ-pitā-putraka> த. சட்பிதா புத்திரிகம்.]*

**சட்ரசநிகண்டு** *šaṭraša-nigaṇḍu,* பெ.(n.) வடமொழி நூலினின்று மொழி பெயர்த்த சட்ரச (ஷட்ரச) நிகண்டு என்னும் நூல்; a vocabulary translated into Tamil from Sanskrit (சா.அக.).

**சட்ரசம்** *šaṭrašam,* பெ.(n.) அறுசுவை; the six distinctive tastes.

*[Skt. saḍ-rasa> த. சட்ரசம்.]*

**சட்ரசம்பரிமாறுகை** *šaṭrašam-pari-māṟugai,* பெ.(n.) பூதக்கலம் (நெல்லை.); serving of food by the bride to the bridegroom for the first time at the marriage.

*[Skt. saḍ-rasa > சட்ரசம்+ த. பரிமாறுகை > த. சட்ரசம்பரிமாறுகை.]*

**சட்னி** *šaṭṉi,* பெ.(n.) **சட்டினி** பார்க்க; see *šatiṉi.*

த.வ. பச்சினி.

*[U. caṭnī> த. சட்னி.]*

**சடக்கரம்** *šaḍakkaram,* பெ.(n.) குமரக் கடவுளுக்குரிய ஆறெழுத்துக்களாலாகிய மந்திரம் (இலக்.அக.); the mantra of six letters, sacred to God *Kumaran.*

த.வ. ஆறெழுத்து மந்திரம்.

*[Skt. ṣaḍ-akṣara> த. சடக்கரம்.]*

**சடகாசம்** *šaḍa-kāšam,* பெ.(n.) 1. மூச்சுக் குழல் வெடிப்பு; rupture or ulcar of the respiratory organs. 2. நுரையீரல் வெடிப்பு; fissure of the lungs (சா.அக.).

**சடங்கர்** *šaḍaṅgar,* பெ.(n.) **சடங்கவி** பார்க்க; see *šaḍaṅkavi. "சடங்கர் வாயடங்கிட" (பெருந்தொ.1814).*

*[Skt. ṣaḍ-aṅga> த. சடங்கர்.]*

**சடங்கவி** *šaḍaṅkavi,* பெ.(n.) வேதத்துக்குரிய ஆறங்கங்களையும் அறிந்தவன்; one who is well versed in the six *vēdāṅgas. "புத்தூர்ச் சடங்கவி மறையோன் றன்பால்" (பெரியபு. தடுத்தாட்7).*

த.வ. ஆறங்கவித்தகன்.

*[Skt. ṣaḍ-aṅga-vit> த. சடங்கவி.]*

**சடங்கன்** *šaḍaṅgaṉ,* பெ. (n.) கந்தக செய்நஞ்சு. இது 32 பிறவிச் செய்நஞ்சுகளுள் ஒன்று; (In siddha medicine) one of the 32 kinds of native arsenic; any poisonous compound of sulphur (சா.அக.).

**சடசம்** *šaḍašam,* பெ.(n.) ஒரு வகை இருமல்; a kind of cough (சா.அக.).

**சடசீதி** *šaḍašīdi,* பெ.(n.) 1. சரராசியின் ஏழாம் பாகையிலும், திரராசியின் ஐந்தாம் பாகையிலும் உபயராசியின் ஒன்பதாம் பாகையிலும், கதிரவன் நிற்கச் சம காரியங்கள் செய்யத்தகாவென்று விலக்கப்பட்ட காலம் (விதான. குணாகுண. 33); (Astron.) time when the sun is in the 7th degree of šararāši 5th degree of *tira-rāši*, and 9th degree of *usaya-rāši*, considered inauspicous. 2. **சடசீதிமுகம், 1** (சைவச.பொது.15) பார்க்க; (Astron.) see *šadašīdi-mugam.*

*[Skt. ṣaḍ-aśīti> த. சடசீதி.]*

**சடசீதிமுகம்** *saḍašīdi-mugam,* பெ.(n.) 1. ஆடவை (ஆனி), கன்னி (புரட்டாசி), சிலை (மார்கழி), மீனம் (பங்குனி) மாதங்கள் பிறக்கும் நாள் (சைவச.பொது.14); (Astron.) the first day of *āṉi, Puraṭṭāši, Mārkaḻi,* and *Paṅguṉi* months. 2. கதிரவன் தனுசு 26வது பாகையிலும், மீனம் 22வது பாகையிலும், மிதுனம் 18வது பாகையிலும், கன்னி 14வது பாகையிலும், செல்லும் காலம் (செந்.X, 378); (Astron.) time when the sun is in the 26th

degree of *tanucu*, 22nd degree of *minam*, 18th degree of *midunam*, and 14th of *kanni*.

த.வ. கோளோட்டம்.

தெ. சடசீதிமுகம்

*[Skt. ṣaḍ-aśiti> த. சடசீதி + த. முகம்.]*

**சடத்துவசாத்திரம்** *šaḍattuva-šāttiram,* பெ. (n.) பொய்த்தன்மையைக் குறிக்கும் நூல்; science which treats of the laws of nature and especially of the forces and general properties of matter-physics (சா.அக.).

*[Skt. ṣaḍ-adhvā+šāstra>த. சடத்துவ சாத்திரம்.]*

**சடத்துவா** *šaḍ-attuvā,* பெ.(n.) ஆவி (ஞான.68, 1, உரை); (*šaivam*) six paths to liberation.

*[Skt. ṣaḍ-adhvā> த. சடத்துவா.]*

**சடதன்** *šaḍadan,* பெ.(n.) முட்டாள்; an idiot (சா.அக.).

*[Skt. ṣaḍ> த. சட → த. சடதன்.]*

**சடதை** *šaḍadai,* பெ.(n.) 1. மடமை; modesty. 2. அறியாத்தனம்; idioey, void of understanding. 3. அறியாமை; ignorance. 4. அறியாப் பெண்; a simple woman, simpletion (சா.அக.).

*[சடதன் →சடதை]*

**சடா** *šaḍā,* பெ.(n.) காற்சோடுவகை; slippers with pointed toes, usually worn by muhammadans.

*[U. chedao> த. சடா.]*

**சடாக்கரம்** *šaḍākkaram,* பெ.(n.) **சடக்கரம்** பார்க்க; see *šaḍakkaram.* *"ஆய்க்குஞ் சடாக்கர மில்லாத நாவிற்கும்" (தனிப்பா.ii, 141, 357).*

*[Skt. ṣaḍ-akṣāra> த. சடாக்கரம்.]*

**சடாட்சரம்** *šaḍāṭcaram,* பெ.(n.) ஆறு மந்திர எழுத்துகள்; the six mantric letters. (சா.அக.).

*[Skt. saḍ-akṣara.]*

**சடாதாரம்** *šaḍādāram,* பெ.(n.) ஆறாதாரம்; the six mystic cakras in the body.

*[சடா + தாரம்.]*

*[Skt. ṣaḍ> த. சடா.]*

**சடாமுத்திரை** *šaḍā-muttirai,* பெ.(n.) **சபாமுத்திரை** பார்க்க; see *šabā-muttirai* (சா.அக.).

**சடானனன்** *saḍ-ānanan,* பெ.(n.) ஆறுமுகன்; God *Kumāra*, as being six faced. *"மனோலய முற்றமெய்ப் பண்பினைக்காட்டிய சடானனனை" (குமர.பிரபந்.முத்துக்.4).*

*[Skt. saḍ-ānana> த. சாடனைன்.]*

**சடுத்தாசனம்** *šaḍuttāšanam,* பெ.(n.) **சலாசனம்** பார்க்க (சைவச.பொது.523, உரை); see *šalāšanam.*

**சடுரசம்** *šaḍurašam,* பெ.(n.) அறுசுவை; the six flavours.

*[Skt. ṣaḍ-rasa> த. சடுரசம்.]*

**சடுவர்க்கம்** *šaḍu-varkkam,* பெ.(n.) **சட்டுவர்க்கம்**[2] பார்க்க ; see *šaṭṭu-varkkam.*

**சடுவிதவாதம்** *šaḍuvidavādam,* பெ.(n.) அறுவகை ஊதை (வாதம்); the six kinds of rheumatic or nervous affections (சா.அக.).

**சடையரசன்** *šaḍaiyarašan,* பெ.(n.) 1. வாணக்கெந்தி; stick sulphur. 2. குழாய்க் கெந்தி; roll sulphur (சா.அக.).

**சடோகரம்** *šaḍōkaram,* பெ.(n.) 1. புண்ணாற்றல்; healing of sores. 2. அகரு; aloe wood - *Agallocah* (சா.அக.).

**சடோதரம்** *šaḍōtaram,* பெ.(n.) 1. வயிற்றளைச்சல்; dysentry or flux. 2. செரியாத பண்டங்களினால் ஏற்பட்ட குடற்கோளாறு; disorder of bowels due to indigestive substances (சா.அக.).

**சண்டகன்** *šanḍagan,*பெ.(n.) இலிங்க பாடாணம் (மூ.அக.); a mineral poison.

*[Skt. prob.canḍaka> த. சண்டகன்.]*

**சண்டகோலாகலம்** *šanḍa-kōlākalam,* பெ.(n.) நிரய வகை (சேதுபு.துராசார.22); a hell.

*[Skt. canḍa-kōlākaala> த. சண்டகோலாகலம்]*

**சண்டகோலாலம்** *šaṇḍa-kōlālam,* பெ.(n.) **சண்டகோலாகலம்** பார்க்க (சிவதரு. சுவர்க்கநரக.180); see *saṇḍa-kōlākalam.*

*[Skt. caṇḍa-kōlāhala> த. சண்டகோலாலம்]*

**சண்டத்துவம்** *šaṇḍattuvam,* பெ.(n.) ஆண் தன்மை யில்லாமை; impotency (சா.அக.).

**சண்டபானுரசம்** *šaṇḍabāṉurašam,* பெ.(n.) குளிர்க் காய்ச்சலுக்குக் கொடுக்கும் ஆயுள் வேத மருந்து; an Ayurvedic medicine prescribed for fever from chillness or cold (சா.அக.).

**சண்டமாருதசிந்தூரம்** *šaṇḍa-māruda-šindūram,* பெ.(n.) சிந்தூர வகை (வின்.); a medicinal powder.

*[Skt. caṇḍa+māruta>கண்டமாருதம் + த. சிந்தூரம்> த. சண்டமாருதசிந்தூரம்.]*

**சண்டரசம்** *šaṇḍa-rašam,* பெ.(n.) ஒரு வகை இனிப்புப் பற்பம்; a compound of mercury oxide (சா.அக.).

**சண்டன்**[1] *šaṇḍaṉ,* பெ.(n.) அலி (பிங்.); eunuch, hermaphrodite.

*[Skt. saṇḍa> த. சண்டன்.]*

**சண்டன்**[2] *šaṇḍaṉ,* பெ.(n.) புளி (மலை.); tamarind tree.

*[Skt. ciñcā> த. சண்டன்.]*

**சண்டாளக்கரு** *šaṇḍāḷa-k-karu,* பெ.(n.) கழுதைக் கொழுப்பு; ass'es fat (சா.அக.).

**சண்டேசானுக்கிரகர்** *šaṇḍē-šāṉukkira-gar,* பெ.(n.) சண்டேசுரருக்கு அருள்புரிந்த சிவமூர்த்தம்; *Šiva*, as bestowing grace on *šaṇḍēšura-nāyaṉār.*

*[Skt. caṇḍēšvara+kira-kar > த. சண்டேசானுக்கிரகர்.]*

**சண்டைக்குச்சூரன்** *šaṇḍaikku-c-cūraṉ,* பெ. (n.) 1. கோழி; fowl. 2. சேவல்; cock (சா.அக.).

**சண்மதம்** *šaṉ-madam,* பெ. (n.) மறைநெறிக்குட்பட்ட ஆறுமதம்; six *vēdic* religious; six systems of philosophy.

*[Skt. ṣaṇ-mata> த. சண்மதம்.]*

**சண்முகக்கொடியோன்** *šaṇmuga-k-koḍiyōṉ,* பெ.(n.) 1. கோழி; fowl. 2. சேவல்; cock (சா.அக.).



**சண்முகசாலம்** *šaṇmuga-šālam,* பெ.(n.) அகத்தியர் செய்த நூற்களிலொன்று; one of the several treatises compiled by sage Agastiya; a book on magic (சா.அக.).

**சண்முகமுத்திரை** *šaṇ-muga-muttirai,* பெ. (n.) **சண்முகிமுத்திரை** (செந்.X, 423) பார்க்க; see *šaṇ-mugi-muttirai.*

*[Skt. ṣaṇ-mukha>சண்முக(ம்)+ த. முத்திரை.]*

**சண்முகத்திராவகம்** *šaṇmuga-t-tirāvagam,* பெ.(n.) கொங்கணவன் ஊதை (வாத) பாவியத்திற் (காவியத்திற்) சொல்லியுள்ள ஒருவகை எரிநீரகம் (திராவகம்); an acid preparation contemplated in konganava works on Alchemy (சா.அக.).

**சண்முகப்பிரியை** *šanmuga-p-piriyai,* பெ.(n.) அராக (இராக) வகை (பரத.இராக.104); (Mus.) a specific melody type.

*[Skt. sanmukha-priyā> த. சண்முகப் பிரியை.]*

**சண்முகன்** *šanmugan,* பெ.(n.) ஆறுமுகன்; Arumugam, as six-faced. *"சண்முகன் பாங்க ரேகி" (கந்தபு. வள்ளியம்மை.194).*

*[Skt. san-mukha> த. சண்முகன்.]*

**சண்முகிமுத்திரை** *šan-mugi-muttirai,* பெ. (n.) நீராடும் போது காது, கண், மூக்குத்துளைகளை முறையே பெருவிரல், சுட்டுவிரல், அணிவிரல்களால் மூடும் முத்திரை; a hand-pose in bathing in which earholes, eyes and nostrils are closed respectively by thumb, forefinger and ring-finger.

*[சண் + முகி + முத்திரை.]*

*[Skt. san > த. சண்.]*

**சணபுட்பிகை** *šana-putpigai,* பெ.(n.) கிலுகிலுப்பை; rattle-wort - *crotalaria laburnifolia* (சா.அக.).

**சணபேதி** *šana-bēdi,* பெ.(n.) கணப் பொழுதில் மாழைகளை வேறு பிரித்துப் பொன்னாக்கும் மருந்து; medicine capable of trausmuting metals into gold in a moment (சா.அக.).

**சணப்பொழுது** *šana-p-poludu,* பெ.(n.) நொடிநேரம் (இ.வ.); short space of time, a moment's time.

த.வ. கணப்பொழுது.

*[Skt. ksana> சணம் + த. பொழுது.]*

**சணம்** *šanam,* பெ.(n.) **சணப்பொழுது** பார்க்க; see *šana-p-poludu.*

*[Skt. ksana> த. சணம்.]*

**சணாய்**[2] *šanāy,* பெ.(n.) **சண்கம்** பார்க்க; see *šangam. "கொழுந்துபடு சணாயும்" (பெருங். உஞ்சைக்.49, 107).*

**சத்தக்கட்டை** *šatta-k-kattai,* பெ.(n.) முத்திரைக்காசின், ஓசைக்குறைவு (இ.வ.); dullaness of metallic ring in a coin.

*[Skt. šabda > சத்த(ம்)+ த. கட்டை.]*

**சத்தக்கருவி** *šatta-k-karuvi,* பெ.(n.) தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக் கருவி, மிடற்றுக் கருவி என்ற ஐவகைப்பட்ட இசைக்கருவி (பிங்.); musical instrument, of five kinds, viz., *tōr-karuvi, tulai-k-karuvi, narambu-k-karuvi, kañja-k-karuvi, mitarru-k-karuvi.*

*[சத்த(ம்) + கருவி.]*

*[Skt. šabda > த. சத்த.]*



**சத்தக்கேடு** *šattakkēdu,* பெ.(n.) செவிடு; deafness, wanting, in the sense of hearing (சா.அக.).

*[சத்த(ம்) + கேடு.]*

*[Skt. šabha > த. கேடு.]*

**சத்தகம்** *sattagam,* பெ.(n.) 1. ஏழு கூடியது; aggregate of seven. 2. அரிசி, ஆடை, பணம் முதலிய எழுபொருள்களை பார்ப்பனர்

எழுவர்க்குத் தானஞ்செய்யும் ஈமக்கடன் வகை (வின்.); a funeral ceremony, in which seven kinds of things as rice, clothes, money, etc. are offered as gift to seven Brahmans.

*[Skt. šaptaka> த. சப்தகம் →சத்தகம்.]*

**சத்தகன்னி** *šatta-kaṉṉi,* பெ.(n.) சிவசத்தியின் வேறுபட்ட வடிவங்களான ஏழு கன்னியர்; the seven Deities or supreme divinities, called also sakthis (personified energies) as shown above (சா.அக.).

*[சப்தம் + சத்த(ம்) + கன்னி.]*

**சத்தகன்னிகை** *šatta-kaṉṉigai,* பெ. (n.) **சத்தமாதர்** பார்க்க (சங்.அக.); see *šattamātar.*

*[சத்த + கன்னிகை.]*

*[Skt. சப்த → த. சத்த.]*

*கன்னி →கன்னிகை*

**சத்தகுணம்** *šatta-kuṇam,* பெ.(n.) ஒலி (சத்தம்); sound (சா.அக.).

*[சத்த(ம்) + குணம்.]*

*[Skt. šabda> த. சத்த(ம்).]*

**சத்தகுலாசலம்** *šatta-kulāšalam,* பெ.(n.) நிலத்தைத் தாங்குவனவாகக் கூறப்படும் இமயம், ஏமகூடம், கயிலை, நிடதம், நீலமலை, மந்தரம், விந்தம் என்னும் ஏழுமலைகள் (சங்.அக.); the seven mountain's belived to support the earth, viz., *imayam, ēmakūdam, kailai, nidadam, nīlakiri, mandaram, vindam.*

**சத்தங்கட்டு-தல்** *šattaṅ-kaṭṭu,* 5 செ.கு.வி. (v.i.) களைக்கட்டு (வ.); to sound effectively.

**சத்தங்காட்டு-தல்** *šattaṅ-kāṭṭu-tal,* செ.கு.வி. (v.i.) 1. ஒலியெழுப்புதல்; to give a vocal signal; to call; halloo, make a noise. 2. தீய ஆவிகள் விலகும்படி கைதட்டுதல்; to clap hands for scaring a way snakes of wild beasts. 3. ஏதமுறுகாலம் முதலியவற்றில் முறையிட்டுக் கூவுதல்; to cry of bawl out, as a signal in case of danger.

*[சத்தம் + காட்டு-.]*

*[Skt. šabda> த. சத்த(ம்).]*

**சத்தசமுத்திரம்** *šatta-šamuttiram,* பெ.(n.) ஏழுகடல் (சூடா.); the seven concentric seas of the terrestrial sphere.

*[Skt. saptan + samudra > த. சப்த சமுத்திரம்→சத்தசமுத்திரம்.]*

**சத்தசாட்டரணை** *šatta-šāṭṭaraṇai,* பெ.(n.) **சத்திசாட்டரணை** பார்க்க; see *šatti-šāṭṭaraṇai* (சா.அக.).

**சத்தசாத்திரம்** *šatta-šāttiram,* பெ.(n.) எழுத்துச் சொற்களைப் பற்றிய இலக்கண நூல்; grammar, as the science of sounds and words.

*[Skt. šabda+šāstra> த. சத்தசாத்திரம்.]*

**சத்தசிப்பி** *šatta-šippi,* பெ.(n.) கிளிஞ்சில் (இ.வ.); mollusc.

*[சத்த(ம்) + சிப்பி.]*

*[Skt. šabda> த. சத்த(ம்)]*

*இப்பி > சிப்பி.*

**சத்தசுரம்** *šatta-šuram,* பெ.(n.) ஏழிசை (சங்.அக.); the seven notes of the gamut.

*[சத்த(ம்) + சுரம்.]*

*[Skt. saptan→சப்தம் →சத்த(ம்).]*

**சத்ததந்தி** *šatta-tandi,* பெ.(n.) ஏழிசையிசைக்கும் ஏழுகம்பிகளையுடைய வீணைவாச்சியம் (இ.வ.); *vīṇai,* as having seven strings or wires representing the seven šuram.

*[சத்த(ம்) + தந்தி.]*

*[**Skt.** saptan → சப்தம் → சத்த(ம்).]*

**சத்ததாது** *šatta-tātu,* பெ.(n.) உடம்பின் அமைப்பிலுள்ள இரதம், செங்குருதி, எலும்பு, தோல், இறைச்சி, மூளை, வித்தமிழ்து என்ற எழுவகைப் பொருள்கள் (சூடா.); the seven constituent elements of the human body, viz., *iradam, utira, elumbu, tōl, iṟaicci, mūḷai, šukkilam. cen-kurudi vitlamildu.*

*[சத்த(ம்) + தாது.]*

*[**Skt.** saptan > த.சத்த(ம்).]*

**சத்ததாரணை** *šatta-dāraṇai,* பெ.(n.) தொண்கவனவூழ்கம் (நவதாரணையுளொன்று) (திவா.); one of *nava-tāraṇai.*

*[சத்த(ம்) + த. தாரணை.]*

*[**Skt.** sabda> த. சத்த(ம்).]*

**சத்ததாளம்** *šatta-tāḷam,* பெ.(n.) துருவதாளம், அடதாளம், ஏகதாளம், திரிபுடைதாளம், ரூபகதாளம், சம்பைதாளம், மட்டிய தாளம் என்ற எழுவகைத் தாளங்கள்; seven common varieties of time measure, viz., *turuva-tāḷam, ada-tāḷam, ēga-tāḷam, tiripudai-tāḷam, rūbaga-tāḷam, cambai-tāḷam, maṭṭiya-tāḷam.*

*[சத்த(ம்) + த. தாளம்.]*

*[**Skt.** sabtan> த. சப்தம் → சத்த(ம்).]*

*தாள் > தாளம்*

**சத்ததானம்** *šatta-tāṉam,* பெ.(n.) வெடியுப்பு; saltpetre.

*[**Skt.** šabda+sthāna> த. சத்ததானம்.]*

**சத்ததீவு** *šatta-tīvu,* பெ.(n.) ஏழு தீவு; the seven concentric continents with Mt. *Mēru* as their centre.

*[சத்த(ம்) + தீவு.]*

*[**Skt.** saptan> த. சப்தம் → சத்த(ம்).]*

**சத்தநதி** *šatta-nadi,* பெ.(n.) கங்கை, யமுனை, சரசுவதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி என்ற ஏழு தெய்வத் தன்மை வாய்ந்த ஆறுகள் (சங்.அக.); the seven sacred rivers, viz., *kaṅgai, yamuṉai, saracuvati, ñarumadai, kāvēri, kumari, kōdāvari.*

*[**Skt.** šaptan→nadi→த.சப்தநதி →சத்த நதி]*

**சத்தநரகம்** *šatta-naragam,* பெ.(n.) எழுநிரயம்; the seven hells.

*[**Skt.** šaptan+naraka → த. சப்தநரகம் → த. சத்த நரகம்.]*

**சத்தநாரசம்** *šatta-nārašam,* பெ.(n.) உடம்பில் வயிறு, நெஞ்சு முதலிய உறுப்புகளில் இட்டு ஒலியை கண்டு பிடிக்கும் சலாகை; an instrument by which cavities as stomach, cheast etc., are sainded - stethescope (சா.அக.).

**சத்தநாராசம்** *šattanārāšam,* பெ.(n.) அட்டை; leech (சா.அக.).

**சத்தநிலை** *šatta-nilai,* பெ.(n.) பனங்கள்; palmyra toddy (சா.அக.).

**சத்தநூல்** *šatta-nūl,* பெ.(n.) **சத்தசாத்திரம்** பார்க்க (பி.வி.18, உரை); see *šatta-šāttiram.*

**சத்தப்பிரகரணம்** *šatta-p-pirakaraṇam,* பெ.(n.) ஒரு மறை முடிவு நூல்; a treatise on *vēdānta* in seven chapers of parts.

*[**Skt.** saptan > த. சத்தப்பிரகாரணம்.]*

**சத்தப்பிரதி** *šatta-p-piradi,* பெ. (n.) கேள்விமூலம் தெரிவது (வின்.); knowing only by hearsay.

*[Skt. šabda +Prati> சப்தபிரதி → த. சத்தப்பிரதி]*

**சத்தப்பிரபஞ்சம்** *šatta-p-pirapañcam,* பெ.(n.) சொல்லுலகம் (சி.போ.பா.பக்.136); (*Šaiva*) the universe of sound, a division of the *satta-pirapañjam* (சா.அக.).

*[Skt. šabda+pra-pañca>த. சத்தப்பிரபஞ்சம்]*

**சத்தப்பிரமம்** *šatta-p-piramam,* பெ.(n.) 1. ஒலிவடிவாகிய முழுமுதற்பொருள் கடவுள்; word-Brahman, sound or word identified withs the supreme being. 2. அறுபத்துநாலு கலையுள் இசை வேறுபாடு அறியும் வித்தை; the art of modulation of sounds. one of *arupattunālu-kalai* q.v.

*[Skt. šabda+brahma>த. சத்தப்பிரமம்]*

**சத்தப்பிரமவாதம்** *satta-p-pirama-vādam,* பெ.(n.) (நாதமே) ஓசையே முழு முதற்பொருள் (பிரமம்) என்னுங் கொள்கை(சி.போ.பா.அவை.); the philosophic system which holds that sound is Brahman.

*[Skt. šabda-brahma-vāda> த. சத்தப் பிரமவாதம்.]*

**சத்தப்பிரமாணம்** *šatta-p-piramāṇam,* பெ.(n.) மெய்யுணர்வு விளக்கத்திற்காக மறை முதலியவற்றைக் கொண்டு அறியும் ஓர் அளவை; verbal authority; revelation or scripture, as a means of acquiring correct knowledge.

த.வ. மெய்யுணர்வு அளவை.

*[Skt. šabda-pramāṇa> த. சத்தப் பிரமாணம்.]*

**சத்தபரிபூரணம்** *sattapari-pūraṇam,* பெ.(n.) யகாரம்; the mystic letter `ya' referring to cerebral region (சா.அக.).

**சத்தபரியாவாசம்** *šattapariyā-vāšam,* பெ.(n.) காஞ்சிரை; nux vomica (சா.அக.).

**சத்தபருணி** *šatta-paruṇi,* பெ.(n.) ஏழிலைப் பாலை (மலை.); seven leaved milk-plant.

*[Skt. saptan-parṇa> த. சப்தபருணி→ சத்தபருணி.]*



**சத்தபுரி** *šattapuri,* பெ.(n.) அயோத்தி, மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்ற ஏழு தெய்வத்தன்மை பெற்ற நகரங்கள் (சங்.அக.); the seven sacred cities, viz., *Ayōtti, Madurai, Māyai, Kāši, Kāñji, Avandi, Tuvāragai.*

*[சத்த(ம்) + புரி.]*

*[Skt. sabtan> த. சப்தம் → சத்தம்.]*

**சத்தபோடம்** *šattapōḍam,* பெ.(n.) செய்யான்; a venomous centipede (சா.அக.).

**சத்தபோதம்** *šattapōdam,* பெ.(n.) **பூதணம்** பார்க்க; see *būdaṇam* (சா.அக.).

**சத்தம்**[1] *šattam,* பெ.(n.) 1. ஒலி (சூடா.); voice. 2. சொல் (பி.வி.6); word, vocable. 3. பெயர்; name. *"தத்துவ சத்தஞ் சாரும்" (சி.சி.2, 71).* 4. **சத்தசாத்திரம்** பார்க்க; see *šatta-šāttiram. "சத்தமுஞ் சோதிடமு மென்றாங்கு" (நாலடி.52).* 5. **சத்தப்பிரமாணம்** பார்க்க; see *šatta-p-piramāṇam.*

*[Skt. šabda> த. சத்தம்.]*

**சத்தம்**[2] *šattam,* பெ.(n.) ஏழு (சூடா.); seven.

*[Pkt. satta →Skt. saptan> த. சத்தம்.]*

**சத்தமண்டலம்** *šatta-maṇḍalam,* பெ.(n.) ஏழுலகங்கள் (வின்.); seven regions of the universe.

*[சத்த(ம்) + மண்டலம்.]*

*[Pkt. sabtan → த. சப்தம் → சத்தம்.]*

**சத்தமருத்து** *šattamaruttu,* பெ.(n.) கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு, மேல், கீழ், பலயோனியுயிர்கள் இவற்றினின்று வரும் ஏழுவகைக் காற்று (பிங்.); the seven kinds of winds.

**சத்தமருந்து** *šatta-marundu,* பெ.(n.) ஏழு வகை மருந்துகள்; the seven kinds of medicines (சா.அக.).

*[சத்த(ம்) + மருந்து.]*

*[Skt. saptan → த. சப்தம் → சத்த(ம்).]*

**சத்தமன்** *šattamaṉ,* பெ.(n.) யாவரினுஞ் சிறந்தவன் (இலக்.அக.); most excellent person.

*[Skt. sat-tama> த. சத்தமன்.]*

**சத்தமாங்கிசம்** *šatta-māṅgišam,* பெ.(n.) (ஏழில் ஓர் அம்சம்) ஓரையை ஏழாகப் பிரித்துக் கோள்களின் நிலையைக் குறிக்குஞ் சக்கரம் (சோதிட.சிந்.123); (Astrol.) lit., one seventh part. A horoscopical chart wherein the position of each planet is determined by dividing its *rāši* into seven parts.

*[Skt. šaptama+amša > த. சத்தமாங்கிசம் → சத்தமாங்கிசம்.]*

**சத்தமாதர்** *šatta-mādar,* பெ. (n.) சிவ சத்தியின் வடிவவேறுபாடுகளான ஏழு மாதர்கள்; the seven divine mothers or personified energies of the principal deities.

*[சப்த →சத்த(ம்) + த. மாதர்.]*

*[Skt. sapta → த. சப்த → சத்த.]*

**சத்தமாதாக்கள்** *šatta-mādākkaḷ,* பெ.(n.) **சத்தமாதர்** (சிலப்.20, 37, உரை) பார்க்க; see *šatta-mādar.*

*[சத்த(ம்) + த. மாதாக்கள்.]*

*[Skt. saptan → த. சப்தம் → சத்தம்.]*

**சத்தமி** *šattami,* பெ.(n.) 1. ஏழாம் பக்கல் (திதி) (விதான. குணாகுண.7); the seventh titi in a lunar fortnight. 2. ஏழாம் வேற்றுமை (பி.வி.6, உரை); (Gram.) the locative case, as the seventh.

*[Skt. saptami> த. சப்தமி → சத்தமி.]*

**சத்தமேகம்** *šattamēgam,* பெ.(n.) சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீல வருணம் என்ற ஏழு மேகங்கள் (பிங்.); the seven celestial clouds under the control of Indra, viz., *šamvarttam, āvarttam, puṭkalāvarttam, šaṅgāridam, turōṇam, kālamugi, nīlavaruṇam. "சத்தமேகங்களும் வச்ரதரனாணையிற் சஞ்சரித்திட வில்லையோ" (தாயு.பரிபூ.9).*

*[சத்த(ம்) + மேகம்.]*

*[Skt. saptan → த. சப்தம் → சத்த(ம்).]*

**சத்தராசிகம்** *šattarāšigam,* பெ.(n.) கணித வகை (வின்.); (math) rule of seven, a compound proportion in which seven terms are given.

*[Skt.saptanrāši→த.சப்தராசிகம்→ சத்தராசிகம்.]*

**சத்தரி** *šattari,* பெ.(n.) ஊசிக்காந்தம்; magnet (சா.அக.).

**சத்தரிசிகள்** *šatta-rišigaḷ,* பெ.(n.) அகத்தியன், புலத்தியன், அங்கிரசு, கௌதமன், வசிட்டன், காசிபன், மார்க்கண்டன் முதலான இருடிகள் எழுவர்; (பிங்) the seven sages.

*[Skt. saptarṣi> த. சப்தரிசிகள்→ சத்தரிசிகள்.]*

**சத்தரிசிமண்டலம்** *šattariši-maṇḍalam,* பெ.(n.) ஏழு இருடிகளாகிய ஏழு விண்மீன்களில் தோன்றும் மண்டிலம்; ursa major or the great Bear, the seven chief stars of which are personified as sapta ṛi ṣi.

*[சத்தரிசி + மண்டிலம் → மண்டலம்.]*

*[Skt. saptarṣi+ த. சப்தரிசி → சத்தரிசி.]*

**சத்தலோகம்** *šatta-lōgam,* பெ.(n.) பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம், தரா, கஞ்சம் என்ற ஏழுவகை மாழைகள் (உலோகங்கள்) (திவா.); the seven metals, viz., *poṉ, veḷḷi, cembu, irumbu, īyam, tarā, kañjam.*

*[Skt. saptan+lōha> த. சத்தலோகம்.]*

**சத்தவருக்கம்** *satta-varukkam,* பெ.(n.) நெல்லி, வெட்டிவேர், இலாமிச்சை வேர், சடாமாஞ்சி, இலவங்கம், ஏலம், திராட்சை என்ற ஏழுவகை மருந்துப் பொருள்கள் (சங்.அக.); the seven vegetable drugs, viz., *nelli, veṭṭi-vēr, ilāmiccai-vēr, cadāmāñji, ilavaṅgam, ēlam, tirāṭcai.*

*[Skt. saptan+varga → த. சத்தவருக்கம்.]*

**சத்தவிடங்கத்தலம்** *šatta-viḍaṅga-t-talam,* பெ.(n.) தியாகராசமூர்த்தி கோயில் கொண்டுள்ள ஆரூர், நாகை, நள்ளாறு, மறைக்காடு, காறாயல், வாய்மூர், கோளிலி என்ற ஏழு தலங்கள் (திருவாரூ.25–26, அரும்.); the seven shrines celebrated for the manifestation of *Šivan* as *Thyāgarājar*, viz. *Arūr, Nāgai, Naḷḷāṟu, Maṟaikkāḍu, Kāṟāyal, Vāymūr, Kōḷili.*

*[சத்தம் + விடங்கம் + தலம்.]*

*[Skt. saptan → த. சப்தம் →சத்தம்.]*

**சத்தவுதகிருதம்** *šattavuda-kirudam,* பெ.(n.) புண்ணின் மேல் தடவும் ஒரு மருந்து நெய்; a medicatede oil used for wounds as an external application (சா.அக.).

**சத்தவெடி** *šatta-veḍi,* பெ.(n.) இலக்குக் குறியாது சுடும்வெடி (இ.வ.); aimless shooting.

*[சத்தம் + த. வெடி.]*

*[Skt. šabda → த. சத்த(ம்)]*

**சத்தவேகமணி**[1] *šattavēga-maṇi,* பெ.(n.) இதளிய மணிவகையுளொன்று; a kind of consolidated mercurial pill (சா.அக.).

**சத்தவேகமணி**[2] *šatta-vēga-maṇi,* பெ.(n.) மருந்து வகை (தஞ்.சர.iii, 58); a kind of medicine.

**சத்தறி** *šattaṟi,* பெ.(n.) நவகண்ட மூதண்டம்; the oldest of the seven worlds (சா.அக.).

**சத்தாகம்**[1] *šattāgam,* பெ.(n.) ஏழு நாளைக்குள் பாகவதம் போன்ற தொன்மங்களைப் படித்துப் பொருள் கூறுகை (இ.வ.); an exposition of a religious work as *Bhāgavata*, in seven days.

*[Skt. saptāha> த. சப்தாகம் → சத்தாகம்.]*

**சத்தாகம்**[2] *šattāgam,* பெ.(n.) **சத்தாவரணம்** பார்க்க (இ.வ.); see *šattāvaraṇam.*

**சத்தாங்கசெவிடு** *šattāṅga-seviḍu,* பெ.(n.) முழுச் செவிடு; complete deafness; stone-deafness (சா.அக.).

**சத்தாங்கமும்** *šattāṅgamum,* கு.வி.எ.(adv.) அரசாட்சிக்குரிய ஏழுறுப்புகளும் மற்றும் அனைத்தும்; lit., all the seven limbs (of a kingdom.) wholly. *"சத்தாங்கமும் தோற்றுவிட்டான்".*

*[Skt. saptāṅga> த. சத்தாங்கம்.]*

**சத்தாங்கோபகாரம்** *šattāṅgōbakāram,* பெ.(n.) அன்னம், பருகுமுணவு, அம்பரம், மந்திரம், தாசபாலனம், காராமயத்திரிதயமோசனம்,

சவச்சேமம் என்ற உடல் தொடர்பாக நிகழும் ஏழுவகைத் தயாவிருத்தி (வின்.); the seven acts of beneficence relating to the body, viz., *annam, pānam, ambaram, mandiram, tāsa-pālanam, karāmayat tiritaya-mōšanam, cavaccēmam.*

*[Skt. saptānga + upakāra > த. சத்தாங் கோபகாரம்.]*

**சத்தாண்டுமூலி** *šattāṇḍu-mūli,* பெ.(n.) சித்தர்கள் பசியாமல் இருக்க வேண்டி ஏழு ஆண்டிற்கொரு முறை உண்ணும் மூலி; an unknown rare drug supposed to be taken by siddhars once in seven years to avoid hunger (சா.அக.).

*[சத்த(ம்) + ஆண்டு + மூலி.]*

*[Skt. šaptan → த. சப்தம் → சத்த(ம்)]*

**சத்தாமாத்திரம்** *šattāmāttiram,* பெ.(n.) தாழ்நிலையுள்ளதாயிருக்கை; bare existence. *"சுயம்பிரகாசமாய்...சத்தாமாத்திரமாய் இருக்குமென்னில்" (சி.சி.6, 9, ஞானப்.).*

*[Skt. sattā-mātra > த. சத்தாமாத்திரம்.]*

**சத்தாய்–த்தல்** *šattā-y-,* 4 செ. குன்றா.வி.(v.t.) 1. தொந்தரவு செய்தல்; to tease, torment. 2. பகடித்தல் (இ.வ.); to ridicule, mock at.

*[U. satānā > த. சத்தாய்–.]*

**சத்தார்** *šattār,* பெ.(n.) சாய்வு (இ.வ.); oblique, slanting or sloping direction.

*[U. sattār > த. சத்தார்.]*

**சத்தார்த்தம்** *šattārttam,* பெ.(n.) சொல்லின் படி அமைந்த பொருள் (சித். மரபுகண்.18); literal meaning.

*[Skt. šabda+artha > த. சத்தார்த்தம்.]*

**சத்தாவத்தை** *šattāvattai,* பெ.(n.) ஆதனுக்கு நிகழக்கூடிய அறியாமை, ஆவரணம், விட்சேபம், பரோட்சஞானம், அபரோட்ச ஞானம் சோகநிவர்த்தி, தடையற்றவானந்தம் என்னும் எழுவகை நிலைகள் (உபநி.17, உரை); (Advaitam) the seven states of the soul from ignorance and self-delusion to the knowledge of Brahman and consequent felicity, viz., *ariyāmai āvaranam, viṭcēpam, parēṅcañānam, aparōṭcañānam, sōga-ni varttitaḍaiyarra-v-ānandam.*

*[Skt. šaptan+ava-sthā → த. சப்தாவத்தை → சத்தாவத்தை.]*

**சத்தாவரணம்** *šattāvaraṇam,* பெ.(n.) விழாக்கொண்டாட்ட முடிவில், வழிபாட்டிற் குரிய தெய்வத்திருமேனி சுற்றுமதிலுக் குள்ளேயே ஏழுதரஞ் சுற்றுகை; procession of the idol seven times round the shrine, made towards the close of festivals.

*[Skt. saptan+ā-varaṇa > த. சப்தா வரணம் → சத்தாவரணம்.]*

**சத்தாவாசி** *šattāvāši,* பெ.(n.) பூசபத்திரி; an unknown drug (சா.அக.).

**சத்தானபேதி** *šattāna-bēdi,* பெ.(n.) நல்ல கழிச்சல் மருந்து; a cathartic (சா.அக.).

**சத்தி[1]–த்தல்** *šatti-,* 4 செ.கு.வி.(v.i) ஒலித்தல்; to sound, utter a noise.

*[Skt. šabda > த. சத்தி–.]*

**சத்தி[2]–த்தல்** *šatti-,* 4 செ.குன்றா.வி.(v.t.) வாயாலெடுக்கை (இ.வ.); to vomit.

*[Skt. chard > த. சத்தி–.]*

**சத்தி[3]** *šatti,* பெ.(n.) 1. வாயாலெடுக்கை (பிங்.); vomiting. 2. வேம்பு (மலை.); neem. 3. கொம்மட்டி (மலை.); a small water-melon. 4. பேய்ப்புல்; wild snake-gourd.

**சத்தி[4]** *šatti,* பெ.(n.) குடை (பிங்.); umbrella.

*[cf. chatra > த. சத்தி.]*

**சத்தி[5]** *šatti,* பெ.(n.) இசைச்செய்யுள் (அக.நி.); a melodious verse.

*[Skt. šabda > த. சத்தி.]*

**சத்திக்காய்ச்சல்** *šatti-k-kāyccal,* பெ.(n.) கக்கலோடு கூடிய காய்ச்சல்; fever accompanied by vomiting (சா.அக.).

**சத்திக்கூர்மைக்கல்** *šatti-k-kūrmaikkal,* பெ. (n.) படிகக்கல்; red crystal or cashmere stone (சா.அக.).

**சத்திசெய்–தல்** *šatti-šey-,* செ.குன்றாவி.(v.t.) வாயிலெடுக்கை (திவா.); to vomit.

*[Skt. chardi> த. சத்தி-.]*

**சத்திதத்துவம்** *šatti-tattuvam,* பெ.(n.) தூமெய்ப்பொருள்களுள் ஒன்றாய்ச் சிவனது வினையாற்றலுக்கு இடமாய்ச் தூமாயை காரியப்படுவதாயுள்ள விருத்தி (சி.போ.பா.2, 2, பக்.139); (Šaivam) stage or region in which action is manifest, presided over by the kiriyA-catti of Šivaṉ, one of five šutta-tattuvam, q.v.

*[சத்தி + தத்துவம்.]*

*[Skt. šakti → த. சக்தி →சத்தி ]*

**சத்திதீட்சை** *šatti-tīṭcai,* பெ. (n.) தீக்கைவகை யுளொன்று (ஞானவதி); a mode of religious initiation.

*[Skt. šakti+diikṣa → த. சத்திதீட்சை.]*

**சத்திநாதம்** *šatti-nādam,* பெ. (n.) 1.பொன்னிறம்; golden colour. 2. பொன்னிமிளை; bismuth of a golden colour. 3. ஏமாப்பிரகம் (சங்.அக.); yellow mica.

**சத்திநிபாதம்** *šatti-nipādam,* பெ.(n.) (பக்குவ முடைய ஆதனிடத்தில் இறைவனின்) திருவருள் பதிகை; (Saiva) settling of the divine grace in the sould when it is ripe. *"ஒழிப்பன் மலஞ்சதுர்த்தா சத்திநிபாதத்தால்" (சி.சி.8, 2).*

*[சத்தி + நிபாதம்.]*

*[Skt. šakti+ni-pāta> த. சத்திநி.]*

**சத்திநிபாதன்** *šatti-nipādaṉ,* பெ.(n.) திருவருள் பதியப்பெற்றவன்; one on whom the divine grace has settled. *"உலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கு நிகழ்த்தியது" (சி.சி.8, 15).*

*[Skt. sakti+ni-pāta > த. சத்திநிபாதன்.]*

**சத்திப்பு** *šattippu,* பெ.(n.) கக்கல் (M.L.); vomitting.

*[Skt. chard> த. சத்திப்பு.]*

**சத்திபீடம்** *satti-pīdam,* பெ.(n.) மலைமகளின் திருவருள் நிறைந்த ஆலயம்; (*Šaiva*) shrine where *Šivā's Šakti* is considered to predominate.

*[சத்தி + பீடம்.]*

*[Skt. šakti→சக்தி →த. சத்தி.]*

**சத்திபூசை** *šatti-pūšai,* பெ.(n.) **சக்திபூசை** பார்க்க; see *šakti-pūšai.*

*[சத்தி + பூசை.]*

*[Skt. šakti → த. சத்தி]*

**சத்திமத்து** *šatti-mattu,* பெ.(n.) நினைமுறை (ஞானவதி); (*Šaivam*) a mode of religious initiation. *"சத்தி மத்தாலாத லத்துவா சுத்திபண்ணி" (சி.சி.8, 6).*

*[Skt. šakti-mat> த. சத்திமத்து.]*

**சத்தியக்கடுதாசி** *šattiya-k-kaḍutāši,* பெ.(n.) உறுதிமொழி ஆவணம் (J.); affidavit.

*[Skt. satya +Port. cardy→ த. சத்தியக் கடுதாசி]*

**சத்தியங்கேள்–தல்** *šattiyaṅ-kēḷ-,* 11 செ. குன்றாவி.(v.t.) உறுதிமொழி வாங்குதல் (வின்.); to put one on oath.

*[சத்தியம் + கேள்]*

*[Skt. satya → த. சத்தியம்.]*

*கேள்–தல் = தொ.பெ.ஈறு*

**சத்தியசந்தன்** *šattiya-šandaṉ,* பெ.(n.) உண்மை விளம்பி; truthful man.

*[Skt. satya-sandha> த. சத்தியசந்தன்.]*

**சத்தியசந்தை** *šattiya-šandai,* பெ.(n.) உண்மை விளம்பி; truthful woman.

*[Skt. satya→ த. சத்தியசந்தை]*

**சத்தியசம்பன்னன்** *šattiya-šambaṉṉaṉ,* பெ.(n.) **சத்தியசந்தன்** பார்க்க; see *šattiya-šandaṉ.*

[*Skt. satya+sam-paṉṉa > த.சத்தியம் பன்னன்.*]

**சத்தியஞ்செய்-தல்** *šattiyañ-šey-,* 1. செ. குன்றாவி.(v.t.) உறுதி மொழிதல்; to swear, take oath, as in a court of justice.

[*சத்தியம் + செய்*]

[*Skt. satya → த. சத்தியம்.*]

*செய்.தல் = தொ.பெ.ஈறு*

**சத்தியஞானம்** *šattiya-ñāṉam,* பெ.(n.) மெய்யுணர்வு (மணிமே.27, 286, உரை); true, valid knowledge.

[*Skt.satya+Pkt.ñāna→jñāna த.சத்தியஞானம்.*]

**சத்தியநாதர்** *šattiya-nādar,* பெ.(n.) சித்தருள் ஒருவர் (சது.); name of a great siddha.

[*Skt. satya+nātha → த. சத்தியநாதர்.*]

**சத்தியநிருவாணம்** *šattiya-niruvāṇam,* பெ. (n.) **சத்தியோநிர்வாணதீட்சை** பார்க்க; see *šattiyō-nirvāṇa-tīṭcai.*

[*Skt. satya+nirvāṇa→ த. சத்தியநிருவாணம்.*]

**சத்தியப்பிரமாணம்** *šattiya-p-piramāṇam,* பெ.(n.) 1. உண்மை; veracity, truth. 2. உறுதிமொழி; taking oath, swearing, as of witnesses.

[*Skt.satya+pra-māṇa→த.சத்தியப்பிரமாணம்.*]

**சத்தியப்பிரமாணிக்கம்** *šattiya-p-piramāṇikkam,* பெ. (n.) **சத்தியப்பிரமாணம்** (வின்.); see *šattiya-p-piramāṇam.*

[*Skt. satya+pra-māṇika→ த. சத்தியப்பிரமாணிக்கம்.*]

**சத்தியப்பொருள்** *šattiya-p-poruḷ,* பெ.(n.) உள்பொருள் (சி.போ.பா.6, பக்.114, சுவாமிநா.); reality.

[*சத்தியம் + பொருள்*]

[*Skt. satya → த. சத்தியம்.*]

**சத்தியபாமை** *šattiyapāmai,* பெ.(n.) கண்ணன் உகந்த தேவியருளொருத்தி (பாகவத.10, 25, 1); a favourite wife of *kṛṣṇa.*

[*Skt. satya-bhāmā> த. சத்தியபாமை.*]

**சத்தியம்**[1] *šattiyam,* பெ.(n.) 1. உண்மை (திவா.); truth, veracity, sincerity 2. உறுதிமொழி; oath,swearing.3.துன்பம், துன்பமேற்படுத்துதல், துன்பத்தைத் தாங்குதல், துன்பத்தை நீக்கும் முறை ஆகிய நான்கு வகைப்பட்ட புத்தமத உண்மைகள் தத்துவங்கள் (மணிமே. 20, 5. உரை); the four fold truths, viz., *tukkam, tukkōṟpatti, tukkanivāraṇam, tukka-nivārṇamārkkam.*

[*Skt. satya> த. சத்தியம்.*]

**சத்தியம்பண்ணு-தல்** *šattiyam-paṇṇu-,* 5 செ.கு.வி.(v.i.) **சத்தியஞ்செய்** பார்க்க; see *šattiyañ-cey-.*

[*சத்தியம் + பண்ணு.*]

[*Skt. satya → த. சத்தியம்.*]

*செய்.தல் = தொ.பெ.ஈறு*

**சத்தியயுகம்** *šattiya-yugam,* பெ.(n.) (உண்மையே நிகழ்ந்த) நீண்ட கிருதயுகம்; krtayuga, as the age of truth.

[*Skt. satya+yuga த. சத்தியயுகம்.*]

**சத்தியலேக்கியம்** *šattiya-lēkkiyam,* பெ.(n.) சிற்றூர்களும் பெரியநாடும் தம்முள் ஒற்றுமை குறித்து எழுதிக் கொள்ளும் ஆவணம் (சுக்கிரநீதி, 94); deed of agreement between villages and province.

[*Skt. satya+lēkhya> த. சத்தியலேக்கியம்.*]

**சத்தியலோகம்** *šattiya-lōgam,* பெ.(n.) மேலேழுலகத்துள் நான்முகன் வசிப்பதாகக் கருதப்படும் உலகம் (பிங்.); an upper world, abode of *Brahmā,* seventh of *mēl-ēḻ-ulagam,* q.v.

[Skt. satya + lōka→ த. சத்தியலோகம்.]

**சத்தியவசனம்** *šattiya-vašanam,* பெ.(n.) 1. உண்மைமொழி; true statement. 2.உண்மைபேசுகை(குமரே.சத.3); truthfulness.

[Skt.satya+vacana→ த.சத்தியவசனம்.]

**சத்தியவந்தன்** *šattiyavandān,* பெ.(n.) **சத்தியசந்தன்** பார்க்க; see *sattiyašandan.*

[Skt. satya-vantaḥ> த. சத்தியவந்தன்.]

**சத்தியவாசகம்** *šattiya-vāšagam,* பெ.(n.) **சத்தியவசனம்** பார்க்க; see *satya-vašanam.*

[சத்தியம் + வாசகம்.]

[Skt. satya → த. சத்தியம்.]

வாசி → வாசகம்

**சத்தியவாதி** *šattiya-vādi,* பெ.(n.) **சத்தியசந்தன்** பார்க்க; see *šattiya-šandan.*

[Skt. satya-vādin> த. சத்தியவாதி.]

**சத்தியவான்** *šattiyavān,* பெ. (n.) 1. **சத்தியவந்தன்** பார்க்க; see *satiyavandan.* 2. சாவித்திரியின் கணவன் (நல்.பாரத. சாவித்திரி.14); the husband of *Šāvitri.*

[Skt. satyavān> த. சத்தியவான்.]

**சத்தியவிரதன்** *šattiyaviradan,* பெ.(n.) உண்மைபேசுதலையே நோன்பாக உடையவன்; one who scrupulously adheres to truth, as under a vow. 2. தருமன்; Dharmaputra, the eldest of the five *Pāṇḍavas.* *"சத்திய விரதன்றம்பி"(பாரத. அருச்சுனன்றவ.31).*

[Skt. satya+vrata> த. சத்தியவிரதன்.]

**சத்தியானிருதம்** *sattiyānirudam,* பெ.(n.) (மெய்யும் பொய்யும் கலந்த) வாணிகத் தொழில்; commerce, trade, as mixed with truth and falsehood. *"சத்தியானிருதம் வாணிக விருத்தி" (காஞ்சிப்பு. ஒழுக்.37).*

[Skt. satya+anṛta> த. சத்தியானிருதம்.]

**சத்தியோசாதம்** *šattiyōšādam,* பெ.(n.) 1. சிவன் ஐம்முகங்களுள் மேற்கு நோக்கியது; a face of Šivan which looks westward, one of *Šivan-ai-m-mugam,* q.v. *"சத்தியோசாதத்திற் காமிக மாதியைந்தும்" (சைவச. பொது.331).* 2. ஒரு சிவனியமந்திரம்; a *Šaiva* mantra. *"சத்தியோசாதத் தபிடேகஞ் சாதிக்க" (சைவச.பொது.136).*

[Skt. sad-yō-jāta> த. சத்தியோசாதம்.]

**சத்தியோசாரவிரணம்** *šattiyōšāraviranam,* பெ.(n.) பக்குடன் கூடியிருக்கும் புண்; a scab wound (சா.அக.).

**சத்தியோநிர்வாணதீட்சை** *šattiyōnirvāṇa-tīṭcai,* பெ.(n.) மாணாக்கனை உடனே வீடுபேறு எய்துவிக்கும் அவிப்பு தீக்கை (நிர்வாண தீட்சை) வகை (சி.சி.8, 4, சிவஞா.); (*šaivam.*) a kind of *nirvāṇa-tīṭcai* which enables the disciple to attain salvation instantaneously.

[Skt.sadyaḥ+nirvāṇa+dīkṣā→ த. சத்தியோநிர்வாணதீட்சை.]

**சத்தியோநிர்வாணம்** *šattiyō-nirvāṇam,* பெ.(n.) **சத்தியோநிர்வாணதீட்சை** பார்க்க; see *šattiyōnirvāṇa-tīṭcai.*

[Skt. šadyaḥ+nirvāṇa→ த. சத்தியோ நிர்வாணம்.]

**சத்தியோவிரணம்** *šattiyō-viraṇam,* பெ.(n.) நேரக்கூடாததால் அல்லது காயங்களினால் உண்டாகும் ஒரு புண்; an extended or elongated would or sore which is traumatic or accidental in its character (சா.அக.).

[Skt. sadyaḥ+vraṇa→ த. சத்தியோவிரணம்.]

**சத்திரக்கத்தி** *šattira-k-katti,* பெ.(n.) **சத்திரம்** பார்க்க; see *šattiram.*

[சத்திரம் + கத்தி.]

[Skt. šastra> சத்திரம்]

**சத்திரக்கருவி** *šattira-k-karuvi,* பெ.(n.) தமிழ் மருத்துவத்தின் படி உடம்பின் பாகத்தை அறுத்துப் பண்டுவம் (சிகிச்சை) செய்வதற்கான 26 கருவிகள்; (In the siddha system of medicine) the twenty six instruments used in surgery according to Tamil system of medicine (சா.அக.).

*[சத்திரம் + கருவி.]*

*[Skt. šaṣtra > சத்திரம்]*

**சத்திரக்குறடு** *sattirakkuṟaḍu,* பெ.(n.) அறுவை மருத்துவத்தில் பயன்படுத்தும் குறடு; surgical pincers (சா.அக.).

*[சத்திரம் + குறடு.]*

*[Skt. šastra > சத்திரம்]*



**சத்திரக்கத்திரி** *sattira-k-kattiri,* பெ.(n.) அறுவை மருத்துவத்தில் பயன்கொள்ளும் கத்திரி; scissors used in operation (சா.அக.).

*[சத்திரம் + கத்திரி.]*

*[Skt. šastra > சத்திரம்]*

**சத்திரக்கருமம்** *šattira-k-karumam,* வி.(v.) கத்தி கொண்டறுக்கும் பண்டுவம்; surgical operation (சா.அக.).

**த.வ. அறுவைப் பண்டுவம்**

*[சத்திரம் + கருமம்.]*

*[Skt. šastra> சத்திரம்]*

**சத்திரகன்மம்** *šattira-kaṉmam,* பெ.(n.) ஆயுதத்தாலறுத்துச் செய்யும் பண்டுவம்; surgical operation. *"வைத்திய சத்திர கன்மத்தால்" (சிவசம.68).*

*[Skt. šastra > சத்திரம் + த. கருமம் → கன்மம் → சத்திரகன்மம்.]*

**சத்திரகோசம்** *šattira-kōšam,* பெ.(n.) கத்தி கொண்டறுக்கும் நோய்; instrument case, surgical case, a disease requiring operation (சா.அக.).

*[Skt. šastra + த. கோசம் → சத்திரகோசம்.]*

**சத்திரசலாகை** *šattirašalāgai,* பெ.(n.) புண்களைத் தூய்மை செய்யும் இரும்புச் சலாகை; an iron or steel probe used for exploring wounds (சா.அக.).

**த.வ. அறுவைச்சலாகை**

*[Skt. šastra > சத்திரம் + த. சலாகை → சத்திரசலாகை.]*

**சத்திரசாலை** *šattira-šālai,* பெ.(n.) **சத்திரம்**[1] பார்க்க (யாழ்.அக.); see *šattiram.*

**சத்திரசிட்கா** *šattira-šiṭkā,* பெ.(n.) அறுவை மருத்துவத்தில் எளிதான பண்டுவமான கட்டு கட்டல், பத்தை கட்டல், தூய்மை செய்தல் முதலியவற்றைக் கூறும் நூல்; that branch of surgery which is connected with less operations such as bandagings, application and dressings - Minor surgery (சா.அக.).

**த.வ. அறுவைமருத்துவ நூல்**

**சத்திரசேதனம்** *šattira-šēdaṉam,* பெ.(n.) 1. கத்தியாலறுக்கை; operation with knife. 2. கத்தியால் துண்டித்தல்; amputation with knife or saw (சா.அக.).

**த.வ. அறுவை**

**சத்திரசோபுட்பம்** *šattirašōpuṭpam,* பெ.(n.) குழலாதொண்டை; caper shurb-*Caparis aphylla* (சா.அக.).

**சத்திரட்சதை** *šattiraṭ-šadai,* பெ.(n.) கத்தி கொண்டறுக்கை; operating with a knife (சா.அக.).

**சத்திரண்டம்** *šattirandam,* பெ.(n.) அரக்கு; lac; shellac (சா.அக.).

**சத்திரப்படை** *šattira-p-padai,* பெ.(n.) அறுவை மருத்துவக் கருவிகள்; surgical instruments in general (சா.அக.).

*[Skt. šastra>த.சத்திரம்]*

*படை → சத்திரப்படை.*

**சத்திரப்பிரதிட்டை** *šattira-p-piradittai,* பெ. (n.) நற்செயல் ஏழுள் (சப்தசந்தானத்தில்) ஒன்றாகிய உண்டிச்சாலை கட்டிவைக்குந் தருமம்; building a choultry for public use, one of *šapta-šandānam.*

*[Skt. šastra+prati-ṣṭhā → த. சத்திரப் பிரதிஷ்டை → சத்திரப்பிரதிட்டை.]*

**சத்திரப்பிரயோகம்** *šattira-p-pirayōgam,* பெ.(n.) 1. கத்தியை உடம்பிற் செலுத்துதல்; inserting knife into the body. 2. அறுவை மருத்துவம்; operative surgery (சா.அக.).

*[Skt. šastra+pra-yōgā → த. சத்திரப் பிரயோகம்.]*

**சத்திரபதி** *šattira-padi,* பெ.(n.) (குடையை யுடைய தலைவன்) அரசன்; king, emperor, as the lord having an umbrella. *"சத்திரபதி கனகனெற்றி நேராகவர" (இராமநா. பாலகா.17).*

*[Skt. šastra+pati → சத்திரபதி.]*

**சத்திரம்[1]** *šattiram,* பெ.(n.) பல நாட்கள் செய்யும் வேள்வி (யாக) வகை; a sacrifice lasting many days. *"திருந்திய சத்திரயாகம்" (மச்சபு. நைமிசா.33).*

*[Skt. sattra> த. சத்திரம்.]*

**சத்திரம்[2]** *šattiram,* பெ.(n.) 1. கைவிடாப்படை (பிங்.); weapon used in close combat; hand-weapon, as sword, lance. 2. வேல் (பிங்.); spear, javelin. 3. இரும்பு (பிங்.); iron. 4. அறுவைமருத்துவத்திற்குரிய கத்தி; surgeon's knife, lancet. 5. எசுர் வேதத்தின் ஓர் உட்பிரிவு (சிலப்.13, 141, உரை); a sub-division of the *yajur-vēda.*

*[Skt. šastra> த. சத்திரம்.]*

**சத்திரம்[3]** *šattiram,* பெ.(n.) குடை; umbrella. *"சத்திர மேந்தித் தனியொரு மாணியாய்" (திவ்.பெரியாழ்.1, 9, 6).*

*[Skt. chatra> த. சத்திரம்.]*

**சத்திரம்[4]** *šattiram,* பெ.(n.) இறும்பூது (பிங்.); wonder.

*[Skt. citra> த. சத்திரம்.]*

**சத்திரம்வை-த்தல்** *šattiram-vai-,* செ.குு.வி. (v.t.) ஆயுதத்தாற் புண்ணையறுத்தல் (இ.வ.); to perform a surgical operation.

*[Skt. šastra > த. சத்திரம் + வை-.]*

**சத்திரமேயோதி** *šattiramēyōdi,* பெ.(n.) புண் ஆற்றுமருந்து; any drug or composition useful in the cure of wounds, medicines used for healing operated wounds and sores-vulnerary (சா.அக.).

**சத்திரயாகம்** *šattira-yāgam,*பெ.(n.) **சத்திரம்** பார்க்க; see *šattiram.*

*[Skt. šattra+yāga > சத்திரயாகம்]*

**சத்திரவாள்** *šattiravāl,* பெ.(n.) அறுக்கும் கை வாள்; a small hand - saw used in surgery (சா.அக.).

*[சத்திரம் + வாள்]*

*[Skt. šastra> சத்திரம்]*

**சத்திரவித்தை** *šattira-vittai,* பெ.(n.) 1. ஆயுதம் பயிலுங் கல்வி; art of using weapons. 2. அறுவை மருத்துவம்; (J) surgery.

*[Skt. šastra + த. வித்தை.]*

**சத்திரவிதி** *šattira-vidi,* பெ.(n.) 1. சித்த நூற்படி அறுவை செய்வதற்காக வேண்டிய 26 ஆயுத விளத்தங்களையும், அவைகளின் இலக்கணங்களையும் கூறும் நூல்; (In siddha medicine), that branch of science which

treats about the description, uses, etc. of the 26 instruments and their employment in operation-surgery. 2. புண், கட்டி இவைகளை அறுப்பதில் கடைப்பிடிக்க வேண்டிய முறைகளைப் பற்றிய விதி; rules of surgery regarding the mode of operating wounds, abscess etc., and the principles involved in each case (சா.அக.).

த.வ. அறுவைநெறிநூல்

*[Skt. šastra + vidhi→ த. சத்திரவிதி.]*

**சத்திரவைத்தியம்** *šattira-vaittiyam,* பெ.(n.) அறுவை மருத்துவம் (இக்.வ.); surgery.

*[Skt. šastra + vaidya> த. சத்திர வைத்தியம்.]*

**சத்திராப்பை** *šattirāppai,* பெ.(n.) 1. இரும்புச் சட்டி; iron vessel or kettle. 2. அறுவை மருத்துவத்தில் பயன்படும் சிறு கரண்டி; a spoon used in surgery (சா.அக.).

**சத்தரி[1]** *šattiri,* பெ.(n.) **சத்திரியன்** பார்க்க (இ.வ.); see *šattiriyan.*

**சத்திரி[2]–த்தல்** *šattiri-,* 4 செ.குன்றாவி.(v.t.) கருவியால் அறுத்து மருத்துவஞ் செய்தல்; to open, as a tumour.

*[Skt. šastra> த. சத்திரி–த்தல்.]*

**சத்திரித்தல்** *šattirittal,* பெ.(n.) 1. பொதுவாகக் கத்தியாற் கீறுதல்; simple opening as abscess or tumour with knife. 2. கருவியால் அறுத்துப் பண்டுவம் செய்து மருந்திடல்; treating by operation and administering medicine (சா.அக.).

*[Skt. šastri → த. சத்திரித்தல்.]*

**சத்திரிய குலக்கரு** *šattiriyakula-k-karu,* பெ.(n.) அரச குலத்தில் உதித்த பெண்ணின் கருப்பிண்டம்; the fetus of the woman of a royal family (சா.அக.).

த.வ. அரசக்கரு

*[சத்திரிய(ன்) + குலம் + கரு.]*

*[Skt. kṣatiriya>சத்திரிய]*

**சத்திரியநாபி** *šattiriya-nābi,* பெ.(n.) 1. நாபி வகை (மூ.அ.); red variety of aconite. 2. வச்சநாபிக்கு ஒரு மாற்று மருந்து (வின்.); an antidote to *vaccanābi.*

*[Skt. kṣatriya+nābhi> த. சத்திரியநாபி.]*

**சத்திரியன்** *sattiriyan,* பெ.(n.) அரசகுலத்தான் (வின்.); a person of the *kṣatriyan* caste.

*[Skt. kṣatriya> த. சத்திரியன்.]*

**சத்திரீகம்** *šattirīgam,* பெ.(n.) கத்தியால் அறுத்துச் செய்யும் மருத்துவம்; operation done by the use of knife, surgery, (சா.அக.).

**சத்திவங்கம்** *šatti-vaṅgam,* பெ.(n.) காரீயம்; black lead (சா.அக.).

**சத்திவிப்புருதி** *šattivippuruti,* பெ.(n.) ஐந்து வகைப் புண்களுள் ஒன்று; one of the five kinds of cancer (சா.அக.).

**சத்திவினாசினி** *šattivināšini,* பெ.(n.) அதிவிடயம்; Indian atees-*Aconitum heterophyllum* (சா.அக.).

**சத்தினாதம்** *šattinātam,* பெ. (n.)1. பொன்னிமிளை;gold-pyrites. 2. பெண்ணின் நாதம்; semen-like fluid in a female (சா.அக.).

**சத்துடியாவம்** *šattuḍi-yāvam,* பெ.(n.) விருத்தி அல்லது மருது; winged myrobalan-*Terminalia alata* (சா.அக.).

**சத்துமன்** *šattuman,* பெ.(n.) நன்கு பயிற்சி பெற்ற மருத்துவன் (அனுபோக வைத்தியன்); a quack or vitapathic practitioner-vitapath (சா.அக.).

**சத்துராதி** *šatturādi,* பெ.(n.) **சத்துருவாதி** பார்க்க (இ.வ.); see *šatturuvāti.*

*[Skt. šatru+arāti> த. சத்துராதி.]*

**சத்துருக்கன்[1]** *šatturukkan,* பெ.(n.) மார்பில் நான்கு சுழிகளுள்ள குதிரை (அசுவசா.19); a

horse which has four curl marks on its breast.

*[Skt. catur> த. சத்துருக்கன்.]*

**சத்துருக்கன்²** *śatturukkaṉ,* பெ.(n.) **சத்துருக்கனன்** பார்க்க; see *satturukkaṉaṉ.* *"சத்துருக்கன்னெனச் சாற்றினன் நாமம்" (கம்பரா.திருவவ.123).*

**சத்துருக்கனன்** *śatturukkaṉāṉ,* பெ.(n.) இராமனுடைய கடைசித் தம்பி; youngest brother of Rama.

**சத்துருசங்காரம்** *śatturu-caṅgāram,* பெ.(n.) பகைவரை அழிக்கை; destruction of foes. *"சத்துருசங்கார வேலா".*

*[Skt. śatru+saṃ-hāra>த. சத்துருசங்காரம்.]*

**சத்துருத்தானம்** *śatturu-t-tāṉam,* பெ.(n.) (பிறப்பிய (சாதக)னுக்கு பகையிடம்) இலக்கினத்துக்கு ஆறாம்வீடு (விமே.உள்.236, உரை); (Astrol.) the sixth house from the ascendant, as being inimical to *śādagaṉ.*

*[Skt. śatru+sthāna> த. சத்துருத்தானம்.]*

**சத்துருதுரந்தரன்** *śatturu-turandaraṉ,* பெ.(n.) பகைவென்று முடிப்போன்; one who subdues his foes. *"வென்றிதானடையான் றென்னன் சத்துருதுரந்தரன்" (இறை, 18, 149, உதா.).*

*[Skt. śatru+dhurandhara→த.சத்துருதுரந்தரன்.]*

**சத்துருநாமத்தீ** *śatturu-nāma-t-tī,* பெ.(n.) நஞ்சு வகை; a mineral poison.

**சத்துருபட்சத்தார்** *śatturu-paṭcattār,* பெ.(n.) பகையினத்தவர்; hostile side or party. *"வீமன்... சத்துருபட்சத்தாரை விநாசஞ் செய்து" (பாரதவெண்.782, உரைநடை).*

*[Skt. śatru+paksa→த.சத்துருபட்சத்தார்.]*

**சத்துருபாடாணம்** *śatturu-pāḍāṇam,* பெ.(n.) நச்சுத்தன்மையற்ற கத்தூரி மஞ்சள் (வின்.); yellow zedoary.

**சத்துருவுப்பு** *satturu-v-uppu,* பெ.(n.) வெடியுப்பு; nitre-potassium nitrate, salt petre (சா.அக.).

**சத்துருவாதி** *śatturu-vādi,* பெ.(n.) பகைவன் (இ.வ.); foe, enemy.

**சத்துரோதம்** *śattu-rōdam,* பெ.(n.) கெம்பு; ruby (சா.அக.).

**சத்துவக்கேடு** *śattuva-k-kēḍu,* பெ.(n.) 1. வலுவின்மை; weakness. 2. நரம்புத் தளர்ச்சி; nervous debility (சா.அக.).

**சத்துவசக்தி** *śattuva-śakti,* பெ.(n.) இயல்பாயுளதாம் ஆற்றல்; potential energy (சா.அக.).

*[Skt. sat-tva+sakti > த. சத்துவசக்தி]*

*[த. சத்தி >Skt. sakti]*

**சத்துவரம்¹** *śattu-varam,* பெ.(n.) விரைவு; haste, hurry.

*[Skt. sa-tvaram> த. சத்துவரம்.]*

**சத்துவரம்²** *śattuvaram,* பெ.(n.) வேதிகை (யாழ்.அக.); dais, pial.

*[Skt. catvara> த. சத்துவரம்.]*

**சத்துவாரி** *śattuvāri,* பெ.(n.) (பெரும்பாலும் ஒருவனுடைய) நாற்பது வயதில் வரும் வெள்ளெழுத்து (இ.வ.); longsight, as usually occuring in the fortieth year of a person.

*[Skt. catvāriṃśat> த. சத்துவாரி.]*

**சத்துவாலம்¹** *śattuvālam,* பெ.(n.) 1. வேள்விக்குழி (ஓம குண்டம்); the sacrificial pit. 2. கருப்பம்; pregnancy.

*[Skt. sadvāra > த. சத்துவாலம்.]*

**சத்துவாலம்²** *śattuvālam,* பெ.(n.) தருப்பைப்புல் (சங்.அக.); darbha grass.

*[Skt. śād-vala> த. சத்துவாலம்.]*

**சத்துவேது** *śattu-vēdu,* பெ.(n.) நேர்மையான காரணம் (சங்.அக.); (log.) true cause.

*[Skt. sat+hētu> த. சத்துவேது.]*

**சத்துளமிருகக்கொம்பு** *šattuḷa-miruga-k-kombu,* பெ. (n.) கல்யாண(காண்டாவிலங்கு)க் கொம்பு; horn of rhinoceros (சா.அக.).

**சத்தெடுக்காச்செம்பு** *šatteḍukkāccembu,* பெ.(n.) களிம்புள்ள செம்பு; ordinary copper with verdigris, copper green (சா.அக.).

**சத்தை** *šattai,* பெ.(n.) 1. உளதாந்தன்மை; being, existence. 2. பலன் (கொ.வ.); effect, use. 3. **சத்து, 1, 4, 5** பார்க்க; see *sattu.*

*[Skt. sat-tā> த. சத்தை.]*

**சத்ரேசன்** *šatrēšaṉ,* பெ.(n.) சத்துருத் தானாதிபதி (சாதகசிந்.1098); (Astrol.) lord of the sixth house from the ascendent.

*[Skt. šatru+īša> த. சத்ரேசன்.]*

**சதக்கிரதம்** *šadakkiradam,* பெ.(n.) மின்னல் (யாழ்.அக.); lightning.

*[Skt. šatahradā> த. சதக்கிரதம்.]*

**சதக்கிரது** *šada-k-kiradu,* பெ.(n.) (வேள்வி நூறு செய்தவன்) இந்திரன் (இரகு. யாகப்.58); Indra, as one who performed hundred sacrifices.

த.வ. நூறுவேள்வியன்

*[Skt. šata-kratu> த. சதக்கிரது.]*

**சதக்கிராணி** *šadakkirāṇi,* பெ.(n.) ஒரு வகைக் கழிச்சல் நோய்; a kind of diarrhoea (சா.அக.).

**சதக்கிருதன்** *šata-k-kirudaṉ.* பெ.(n.) **சதக்கிரது** பார்க்க (வின்.); see *sada-k-kiradu.*

**சதக்கினா** *sadakkiṉā,* பெ.(n.) அரக்கு; sealing wax, shellac (சா.அக.).

**சதக்கினி** *šadakkiṉi,* பெ.(n.) நூற்றுவரைக் கொல்லி என்னும் மதிற்பொறி (சிலப்.15, 216, உரை); a deadly machine mounted on forts, as killing hundred persons at a time.

த.வ. நூற்றுவர்க்கொல்லி

*[Skt. šata-ghnī> த. சதக்கினி.]*

**சதக்கேசம்** *šadakkēšam,* பெ.(n.) நீரடி முத்து; hydrogogue nut - *Hydnocarpus inebrians* (சா.அக.).

**சதகண்டம்** *šada-kaṇḍam,* பெ.(n.) பொன்; gold (சா.அக.).

**சதகம்** *šadagam,* பெ.(n.) 1. நூறு பாடல் களுள்ள சிற்றிலக்கிய வகை (இலக்.வி.847); a poem of 100 stanzas. 2. நூற்றாண்டு (நாஞ்.); century.

*[Skt. šataka> த. சதகம்'.]*

**சதகாசம்** *šadakāšam,* பெ.(n.) 1. நுரையீரல் கோளாறடைந்து இருமும்போது அரத்தம் வெளிவருவதுடன் நெஞ்சுவலி, நொதிக்கும் வலி முதலிய குணங்களைக் காட்டும் ஒரு வகை ஈளைநோய்; a kind of asthma affecting the lungs. Its is marked by bloody discharge followed by soring pain in the chest. 2. அரத்தம் கக்கும் இருமல்; cough attended with vomitting of blood-*Hemoptysis* (சா.அக.).

**சதகும்பம்** *šadakumbam,* பெ.(n.) பொன்மலை; mountain from which gold is dug out (சா.அக.).

**சதகோடி** *šada-kōḍi,* பெ.(n.) 1. நூறுகோடி; hundred crores. *"சதகோடி மின்சேவிக்க" (கம்பரா.மிதிலை.31).* 2. மழுவாய்தம் (வச்சி ராயுதம்) (பிங்.); thunderbolt of Indra, as having 100 edges.

*[சத(ம்) + கோடி.]*

*[Skt. šata + த. சத(ம்).]*

**சதகோடிசங்கம்** *šada-kōḍi-saṅgam,* பெ. (n.) பெருங்கூட்டம் (வின்.); very large assembly.

*[Skt. sata > சதம்+த. கோடி+ த. சங்கம் > த. சதகோடிசங்கம்.]*

**சதங்கம்** *šadaṅgam,* பெ.(n.) குளிர்ச்சி தரும் அறுவகைச் சரக்குகள்; the six cooling drugs (சா.அக.).

**சதச்சதம்** *šada-c-cadam,* பெ.(n.) சதபத்திரம் பார்க்க (யாழ். அக.); see šada-pattiram

**சதசஞ்சீவி** *šada-šañjīvi,* பெ. (n.) நீண்ட ஆயுளையுடையோன் (பாண்டி.); long lived person.

*[Skt. šata+sañ-jīvi> த. சதசஞ்சீவி.]*

**சதசத்து** *šada-cattu,* பெ.(n.) 1. உளதும் இலதும்; reality and illusion, entity and non-entity. *"ஆன்மா... நித்தனாய்ச் சதசத்தாகி" (சி.சி.7, 2).* 2. ஆதன்; (*šaiva*) soul. *"தத்துவம்... சதசத்துமன்று" (சி.சி.6, 5).*

*[Skt. sat+a-sat> த. சதசத்து.]*

**சதசபகந்திரம்** *šadašapagandiram,* பெ.(n.) மலவாயிற் (ஆசனவாய்) காணும் குறிக்கட்டி (பவுத்திரம்)யை சரிவரப் பண்டுவம் செய்யாததினால், மறுபடியும் கிளைத்துக் குதறி, புழுக்களுண்டாகி எருவாயைச் சுற்றிலும் அரித்திடும் நோய் வகை; a kind of fistula in ano which, if not properly treated or neglected, will develope ulcers and the worms which are bred, burrow anal orifice (சா.அக.).

த.வ. குதக்குரு

**சதசல்லியம்** *šada-šlliyam,* பெ.(n.) பெருந்தொந்தரவு; great nuisance; worry from various causes.

*[Skt. sata+šalya> த. சதசல்லியம்.]*

**சதசிருங்கம்** *šadaširuṅgam,* பெ.(n.) நூற்றுக் கணக்கான அடையாளங்கள்; hundreds of innumerable symptoms (சா.அக.).

*[Skt. sata+sṛnga→ த. சதசிருங்கம்.]*

**சதசு** *šadašu,* பெ.(n.) கல்வியாளர் கூடும் அவை; assembly, especially of learned men.

த.வ. அறிஞர் அவை, கல்விக்களம்

**சதசுக்கிலம்** *šada-šukkilam,* பெ.(n.) கருவிழியிலாவது பார்வையிலாவது காயம் படுவதாலேற்படும் கண்ணோய்; a disease of the eyes due to an injury to the iris or to the lens (சா.அக.).

**சதசுலோகம்** *šada-šulōgam,* பெ.(n.) சொற்பொருள் (பதார்த்த) குணங்களைப் பற்றிய நூறு பாடல்களடங்கிய ஓர் ஆயுள் வேத நூல்; an Ayurvedic materia medica written in 100 stanzas, treating of plants and drugs (சா.அக.).

**சதஞ்சீவி** *sadañjīvi,* பெ.(n.) (நூறாண்டு வாழ்பவன்) நீள் ஆயுளுடையோன்; long lived person, as living hundred years. *"சதஞ்சீவியாயிரு" (வின்.).*

த.வ. நீடுவாழி

*[Skt. šata+jīvi> த. சதஞ்சீவி.]*

**சதத்துவம்** *šadattuvam,* பெ.(n.) இயல்பு (சுபாவம்); nature. 2. இயற்குணம் (சுபாவப் பழக்கம்); second nature (சா.அக.)

**சததசுரம்** *šadada-šuram,* பெ.(n.) 1. பகலில் ஒரு முறையும், இரவில் ஒரு முறையும் வரும் முறைக் காயச்சல். இதனால் அதிக உணவு கொள்ளும்; fever occurring once in the day and once in the night, and in such cases, one is inclined to take more food. 2. எப்பொழுதும் காய்ச்சல் இருத்தல்; kala-azar or tuberculosis in which there is always a rise of temperature (சா.அக.).

*[சதத(ம்) + சுரம்.]*

*[Skt. šatata→ சதத(ம்).]*

**சததம்** *šadadam,* வி.எ.(adv.) எப்பொழுதும்; constantly, always, ever.

*[Skt. satatam> த. சததம்.]*

**சததளம்** *sada-daḷam,* பெ.(n.) (நூறு இதழ்களை யுடையது) தாமரை; lotus, as having hundred petals. *"சததளமின் வழிபடு தையலை" (மீனாட்.பிள்ளைத்.2).*

[சத(ம்) + தளம்.]

[Skt. šata > சதம்.]

**சததாரை[1]** *šada-dārai,* பெ.(n.) **சதகோடி,** 2 பார்க்க (யாழ்.அக.); see *šada-kōḍi.*

[சத(ம்) + தாரை.]

[Skt. šata > சதம்.]

**சததாரை[2]** *šadadārai,* பெ.(n.) இடி; thunder.

**சதநியுதம்** *šada-niyudam,* பெ.(n.) கோடி; one hundred lakhs, crore. *"நிரந்தகற்ப சதநியுத நிகழ" (சிவதரு.ஐவகை.10).*

[Skt. šata+ni-yuta → த. சதநியுதம்.]

**சதபத்திரம்** *šada-pattiram,* பெ.(n.) 1. **சததளம்** பார்க்க; see *šadataḷam. "விழைவுபடப் பொதிவிரிசத பத்திரவீ" (இரகு.நகர.16).* 2. கிளி (யாழ்.அக.); parrot. 3. மயில்; peacock. 4. வெண்ணாரை; white crane. 5. தச்சன் கருவி; carpenter's implement, woodpecker.

[Skt. šata-patra> த. சதபத்திரம்.]

**சதபத்திரி** *šada-pattiri,* பெ.(n.) 1. **சததளம்** பார்க்க (திவா.); see *šadataḷam.* 2. ஆடு தின்னாப் பாளை (மலை.); worm-killer.

[Skt. šata-patra > த. சதபத்திரி]

**சதபதம்** *šadapadam,* பெ.(n.) 1. நூறு கால்களையுடைய ஓர் உயிரினம்; any creature or insect with 100 legs. 2. பூரான்; centepede (சா.அக.).

**த.வ.** ஆயிரக்காலி

[சத(ம்) + பதம்.]

[Skt. šata → த. சதம்]

**சதபதுமம்** *šada-padumam,* பெ.(n.) **சததளம்** பார்க்க (மலை.); see *sada-taḷam.*

[Skt. šata+padma> சதபதுமம்]

**சதம்[1]** *šadam,* பெ.(n.) 1. நூறு (பிங்.); a hundred. 2. ஒரு ரூபாயில் நூற்றிலொரு பங்கு மதிப்புள்ளதாய் இலங்கையில் வழங்கும் செப்பு நாணயம்; cent, a ceylon coin = 1/100 rupee.

[Skt. šata> த. சதம்[1].]

**சதம்[2]** *šadam,* பெ.(n.) 1. இலை; leaf. 2. இறகு; feather.

[Skt. chada> த. சதம்[2].]

**சதம்[3]** *šadam,* பெ.(n.) அறுபட்ட பயிர் (வின்.); vegetable plant pruned to prevent over growth; cropped grain.

[Skt. šada> த. சதம்[3].]

**சதம்[4]** *šadam,* பெ.(n.) அழிவற்றது; that which is perpetual, eternal. *"ஊருஞ்சதமல்ல வுற்றார்சதமல்ல" (பட்டினத்.திருவேகம்பமா.13).*

[Skt. šāšvata> த. சதம்[4].]

**சதம்[5]** *šadam,* பெ.(n.) இறுதி (அக.நி.); end, termination.

[Skt. kṣata> த. சதம்[5].]

**சதம்பவாசி** *šadambavāši,* பெ.(n.) கற்பரி நஞ்சு (பாடாணம்); a kind of native arsenic; a mineral poison (சா.அக.).

**சதமகன்** *šada-magaṉ,* பெ.(n.) **சதக்கிரது** பார்க்க; see *šadakkiradu. "சதமகனுடல மெல்லாங் காதுளானல்லே னென்றான்" (திருவிளை.விறகு.39).*

[Skt. šata-makha> த. சதமகன்.]

**சதமன்யு** *šada-maṉyu,* பெ.(n.) **சதக்கிரது** பார்க்க; see *šada-k-kiradu.*

[Skt. sata-manyu> த. சதமன்யு.]

**சதமானம்** *šata-māṉam,* பெ.(n.) நூற்றுக்குரிய விழுக்காடு (வீதம்) (இ.வ.); percentage.

**த.வ.** விழுக்காடு

[சத + மானம்]

[Skt. šata → த. சதம்]

**சதமுகக்குருவி** *šatamuga-k-kuruvi,* பெ.(n.) ஒரு வகைக் குருவி; a mystic sparrow (சா.அக.).

**சதமுனை** *šada-muṉai,* பெ.(n.) **சதகோடி, 2** பார்க்க (வின்.); see *šadakōḍi.*

*[சத + முனை]*

***[Skt.** šata → த. சதம்]*

**சதயம்** *šadayam,* பெ.(n.) கும்பவோரை (ராசி)ஓரையின் கூறான இருபத்து நான்காம் நாண்மீன் (நட்சத்திரம்) (பிங்.); the 24th nakṣatra, part of Aquarius.

***[Skt.** šatabhiṣaj> த. சதயம்.]*

**சதர்கர்ச்சு** *šadar-karccu,* பெ.(n.) ஊர் வருமானத்திலிருந்து ஏரிச் சீரமைப்பு (மராமத்து) முதலியவற்றின் பொருட்டு அரசாள்வோர் விட்டுக் கொடுக்கும் தொகை (R.T.); remission or allowance made by the Government, of a certain percentage of the revenue raised from a village, for repairing tanks, giving alms to mendicants, and other incidental expenses.

*[U. sādir+kirc> த. சதர்கர்ச்சு.]*

**சதர்வாரித்து** *šadar-vārittu,* பெ.(n.) 1. **சாதல்வார்** பார்க்க; see *sādalvār.* 2. பொதுத்துறை அலுவலகத்திற்குத் தேவையான மை, எண்ணெய், தாள் (காகிதம்) இவற்றின் பொருட்டுக் குடிகளிடம் தண்டல் (வசூல்) செய்து வந்த தொகை; charge formerly livied on ryots for supplying the public office with ink, paper, oil and the like.

*[U.sādir+wārid > த.சதர்வாரித்து.]*

**சதரதாலத்து** *šadar-adālattu,* பெ.(n.) தலைமை முறைமன்றம் (C.G.); chief court of justice.

*[U.sadr+adālat> த.சதரதாலத்து.]*

**சதரமீன்** *šadar-amīṉ,* பெ.(n.) முறைமன்ற நடுவருக்கு மகமதியராட்சியில் வழங்கிய பெயர்; the name given to the subordinate judge during Muhammadan rule.

*[U. sadr+amīn> த. சதரமீன்.]*

**சதருத்திரீயம்** *šada-ruttirīyam,* பெ.(n.) உருத்திரர்க்குரிய மறை (வேத) மந்திரம்; a *vēdic* hymn addressed to Rudraṉ or *Šivaṉ* in his hundred aspects.

***[Skt.** šata-rudrīya> த. சதருத்திரீயம்.]*

**சதவிகிதம்/சதவீதம்** *šadavigidam/šada-vīdam,* பெ.(n.) (ஒரு குறிப்பிட்ட) மொத்தத்தை நூறாக மாற்றும்போது மொத்தத்துக்கு இவ்வளவு என்று அடையும் மதிப்பு; விழுக்காடு; percentage. *"இருபதுக்குப் பத்து மதிப்பெண் வாங்கினால், பெற்ற மதிப்பெண்ணின் சதவீதம் ஐம்பது / சில பொருள்களின் விலை நூற்றுப்பத்து சதவீதம் உயர்ந்துள்ளது" (கிரியா.).*

**த.வ. விழுக்காடு**

***[Skt.** šata+vi-hita →த. சதவிகிதம்]*

**சதவிசர்ப்பி** *šada-višarppi,* பெ.(n.) கருவி (ஆயுதம்) முதலியவற்றால் அடிபட்டுப் புண்ணேற்பட்டவர்களுக்கு, அரத்தம் கெட்டுத் தடிக்கும்போது, எண்ணிறந்த கருநிறச் செந்நிற கொப்புளங்களை யுண்டாக்கும் நோய்; innumeral red and blue septic vesicles on the skin due to the contamination of blood with putrefied matter, arising from wounds caused by weapons (சா.அக.).

***[Skt.** šata+visarpi →த. சதவிசர்ப்பி.]*

**சதவுருத்திரம்** *šada-v-uruttiram,* பெ.(n.) **சதருத்திரீயம்** பார்க்க; see *šada-ruttirīyam.* *"சதவுருத்திரத்தினாலே முக்கணா ரமுதையாட்டி" (குற்ற.தல.திருமால்.149).*

***[Skt.** šata-rudra> த. சதவுருத்திரம்.]*

**சதவூசிக்காந்தம்** *šada-v-ūsikkāndam,* பெ.(n.) பத்து அல்லது அதற்கு மேற்பட்ட ஊசிகளைப் பிடிக்கும் காந்தம்; a magnet having the power of attracting ten or several needles (சா.அக.).

*[சதம் + ஊசிக்காந்தம்.]*

*[Skt. šata > த. சதம்.]*

**சதனம்**[1] *šadaṉam,* பெ.(n.) **சதம்**[2] பார்க்க (பிங்.); see *šadam.*

*[Skt. chadana> த. சதனம்.]*

**சதனம்**[2] *šadaṉam,* பெ.(n.) 1. இலை; leaf. 2. இறகு; feather. 3. நீர்; water (சா.அக.).

**சதனம்**[3] *šadaṉam,* பெ.(n.) வீடு; house. *"அச்சதன மேவருந் தபோதனன்" (பாரத. அருச்சுனன்றீர்.61).*

*[Skt. sadana> த. சதனம்.]*

**சதா**[1] *šadā,* பெ.(n.) 1. மரக்கலம் (திவா.); canoe, boat. 2. பழுது (J.); defect in timber; decay in fruit; rottenness. 3. காலத்தாழ்வு, தாமதம்; delay, procrastination, as of a business. *"அதைச் சதாவிலே விடாதே" (இ.வ.).*

*[Pkt. jahājā> த. சதா.]*

**சதா**[2] *šadā,* கு.வி.எ.(adv.) எப்பொழுதும்; always, continually, perpetually. *"சதாவின் மொழியால்" (திருப்பு.186).*

*[Skt. sadā> த. சதா.]*

**சதாக்கினி** *šadākkiṉi,* பெ.(n.) தேள் (எப்பொழுதும் தீயைப் போன்ற கொடுக்குடையது) (சங்.அக.); scorpion, as always having a fiery sting.

*[Skt. sadāgni> த. சதாக்கினி.]*



**சதாகதி** *šadā-gadi,* பெ.(n.) காற்று (இடைவிடாமற் சஞ்சரிப்பது); wind as being in perpetual motion. *"சதாகதி மைந்தனும்" (பாரத.புட்ப.15).*

*[சதா + கதி.]*

*[Skt. sadā → த. சதா.]*

*கது → கதி (மு. தா. 58)*

**சதாகாசம்** *šadāgāsam,* பெ.(n.) (மாங்கிசபேதி) தசையைக் கரைக்குமொரு வகை வயிற்றுப் போக்கு; a mineral capable of curing overgrowth of flesh in the system or ordinarily dissolving flesh (சா.அக.).

**சதாகாலம்** *šadā-kālam,* கு.வி.எ.(adv.) **சதா**[2] பார்க்க; see *šadā.*

**சதாகுழை** *šadā-kuḻai,* பெ.(n.) குக்கில்; Indian gum or resin - *vateria indica* (சா.அக.).

**சதாங்கம்** *šadāṅgam,* பெ.(n.) தேர் (இரதம்) (சங்.அக.); chariot, car.

*[Skt. šatāṅga> த. சதாங்கம்.]*

**சதாசார்வகாலம்** *šadā-šārva-kālam,* கு.வி.எ. (adv.) **சதா**[2] பார்க்க (இ.வ.); see *sadā.*

*[சதா+சார்வ+காலம்]*

*[Skt. sadā+sarva+ த. சதாசார்வ(ம்)]*

**சதாசாரம்** *šadā-šāram,* பெ.(n.) நல்லோரொழுக்கம்; practice of the good or virtuous men; good old custom; approved usage. *"சதாசாரம் விசாரணையே" (வேதா. சூ.146).*

*[Skt. sad-ācāra> த. சதாசாரம்.]*

**சதாசிவத்தி** *šadāšivatti,* பெ.(n.) சீனக்காரம் (மூ.அ.); alum.

*[Skt. sadā-šiva-šakti> த. சதாசிவத்தி.]*

**சதாசிவதத்துவம்** *šadā-šiva-tattuvam,* பெ.(n.) சிவ மெய்ப்பொருள் ஐந்தனு ளொன்று

(திருக்கோ.112, உரை); (*šaivam*) the state in which *šivaṉ* manifests himself as *Šadāšivam.*

*[சதாசிவம் + தத்துவம்.]*

*[Skt. sadāšiva> த. சதாசிவம்.]*

**சதாசிவதினம்** *šadā-šiva-diṉam,* பெ.(n.) பேரிறைவ (மகேச்சுர)னுடைய ஆயுட்காலம் இரண்டு கூடின காலம் (சங்.அக.); (*šaivam*) period equal to twice the life time of *Mahēšvaraṉ.*

*[Skt. sadāšiva+dina> த. சதாசிவதினம்.]*

**சதாசிவதேவர்** *šadā-šiva-dēvar,* பெ.(n.) ஐந்து முகமும் பத்துக்கையும் இரண்டு பாதமுமுடைய சிவனுருவம் (சங்.அக.); (*šaivam*) one of the manifestations of *šiva* having five faces, ten hands and a pair of feet.

*[சதாசிவம்+தேவர்]*

*[Skt. sadāšiva→த. சதாசிவம்]*

**சதாசிவநாள்** *šadāšiva-nāḷ,* பெ.(n.) சகடு (உரோகிணி), கை (அஸ்தம்), முக்கோல் (திருவோணம்), கொடிறு (பூசம்), பனை (அனுடம்), முரசு (உத்திரட்டாதி), உத்திரம், (உத்திராடம்), தோணி (இரேவதி) ஆகிய நாண்மீன்கள் (சோதிட கிரக.38); the *nāṉ-miṉ, urōgiṉi, astam, tiruvōṇam, pūšam, aṉušam, uttiraṭṭādi, uttiram, uttirāḍam, irēvadi.*

*[சதாசிவம் + நாள்.]*

*[Skt. šadāšiva> த. சதாசிவம்.]*

**சதாசிவம்**[1] *šadāšivam,* பெ.(n.) 1. (பஞ்ச கர்த்தாக்களில்) படைப்பு முதலிய தொழில் புரியும் ஐவருள் முதல்வராய், உயிர்களுக்கு அருள் செய்யும் பொருட்டுச் சிவன் மேற்கொள்ளும் வடிவம் (சி.சி.1, 65); (*šaivam*) manifestation of *šiva* bestow in grace upon sentiment beings, highest of five *kart-tākkaḷ,* q.v., one of nine *civa-pētam,* q.v. 2. உருவாய் விளங்குதற்கு முன் உயிர்களின் பொருட்டுச் சிவன் மேற்கொள்ளும் அருவுருவாகிய வடிவம்; (*šaivam*) manifestation of *šiva* when designing the salvation of souls, before he assumes visible forms for the purpose. *"சிவம் சத்திநாதம் விந்து சதாசிவந் திகழுமீசன்" (சி.சி.2, 74).*

**த.வ. அருஉருவன், இறைத்தோன்றல், அறாஇன்பன்**

*[Skt. sadāšiva> த. சதாசிவம்.]*

**சதாசிவம்**[2] *šadāšivam,* பெ.(n.) துணி வழலை (சவுக்காரம்) (தஞ்.சர.iii, 51); soap.

**சதாசிவவடிவம்** *šadāšiva-vaḍivam,* பெ.(n.) இலங்கமாய் அருவுருவத்திருமேனி கொண்ட சிவவடிவம்; (*šaivaṉ*) *šiva* manifested in *linga*, when he is said to have a form and yet no form.

*[சதாசிவம் + வடிவம்.]*

*[Skt. sadāšiva → த. சதாசிவம்.]*

*படி → வடி → வடிவு → வடிவம்*

**சதாசிவன்** *šadāšivaṉ,* பெ. (n.) உயிர்கள் மாட்டு அருளிச் செய்யும் நல்லான்; *šivaṉ,* in his highest form, one of five *karttākkaḷ,* q.v.

*[Skt. sadāšiva > த. சதாசிவன்.]*

**சதாசிவன்வாசம்** *šadāšivaṉ-vāsam,* பெ.(n.) 1. பொன்மலை; mountain containing gold ore. 2. கைலாச மலை; mount kailas (சா.அக.).

**சதாசேர்வை** *šadā-sērvai,* பெ.(n.) நாளும் தொடரும் ஊழியம் (S.I.I.i, 127); perpetual devotion.

*[Skt. sadā+sēvā> த. சதாசேர்வை.]*

**சதாட்டகம்** *šadāṭṭagam,* பெ.(n.) நூற்றெட்டு; one hundred and eight. *"அகோர சதாட்டகத்தைப் பகர்ந்து" (சிவதரு.பரி.26).*

*[Skt. šatāṣṭaka> த. சதாட்டகம்.]*

**சதாநந்தம்** *šadānandam,* பெ.(n.) முடிவிலா இன்புறவு (இ.வ.); perpetual happiness, eternal bliss.

**த.வ.** அறாஇன்பம்

*[Skt. sadā+ā-nanda > த. சதாநந்தம்.]*

**சதாநிருத்தமூர்த்தி** *sadā-nirutta-mūrtti,* பெ. (n.) ஐந்தெழுத்தே திருமேனியாகக் கொண்டு நந்தியாதி பக்தர்கள் வணங்கும்படி ஐந்தொழில் (பஞ்சகிருத்திய) தாண்டவம் செய்யும் சிவத் திருமேனி (மூர்த்தம்) (சங்.அக.); *Šivan* having the five lettered mantra for his form and performing his dance to the delight of his ardent devotees Nandi and others.

*[Skt. sadā + nṛtta + mūrti > த. சதா நிருத்தமூர்த்தி.]*

**சதாபடம்** *šadāpaḍam,* பெ.(n.) எருக்கு (மலை.); madar.

**சதாபதி**[1] *sadāpadi,* பெ.(n.) மரவட்டை (வின்.); a kind of millipede living in trees.

*[Skt. šata-padi > த. சதாபதி.]*

**சதாபதி**[2] *šadā-padi,* பெ.(n.) கடவுள் (வின்.); God.

*[சதா + பதி.]*

*[Skt. sadā > த. சதா.]*

**சதாபரி** *šadāpari,* பெ.(n.) தங்கம்; gold.

**சதாபலம்** *šadā-palam,* பெ.(n.) எலுமிச்சை (பிங்.); sour lime.

*[Skt. sadā+phala > த. சதாபலம்.]*

**சதாபிடேகம்** *šadābiḍēgam,* பெ.(n.) எண்பது வயதிற்கு மேற்பட்டு வாழ்ந்து, ஆயிரம் பிறை கண்டவர்க்குச் செய்யுஞ் சடங்கு (விதான. நல்வினை.17); ceremony performed when a man is past 80 years and has seen 1000 crescent moons.

**த.வ.** ஆயிரம்பிறைநாளணி

*[Skt. šata+abhi-ṣēka > த. சதாபிடேகம்.]*

**சதாபுசம்** *šadāpuṣam,* பெ.(n.) வண்டுவகை (வின்.); a kind of beetle.

**சதாபுட்பம்** *šadā-puṭpam,* பெ.(n.) 1. வெள்ளெருக்கு; white madar. 2. முல்லை; jasmine.

*[Skt. sadā + puṣpa > த. சதாபுட்பம்.]*

**சதாபுட்பி** *šadā-puṭpi,* பெ.(n.) எருக்கு (தைலவ.தைல.73); madar.

*[Skt. sadā+puṣpa > த. சதாபுட்பி.]*



**சதாபூடம்** *šadā-pūḍam,* பெ.(n.) **சதாபடம்** பார்க்க; see *šadā-paḍam.*

**சதாமூர்க்கம்** *šadā-mūrkkam,* பெ.(n.) பாம்பு கொல்லி (மலை.); a plant belived to cure snake - bite.

*[Skt. sadā+mūrkha > த. சதாமூர்க்கம்.]*

**சதாய்–த்தல்** *šadāy-,* 4 செ.குன்றாவி.(v.t.) ஏளனம் செய்தல் (Madr.); to ridicule, mock at.

*[U. satānā > த. சதாய்–.]*

**சதாயுசு** *sadāyušu,* பெ.(n.) (நூறு வயதுள்ளோன்) வயது முதிர்ந்தவன்; ripe old man, as having lived hundred years.

*[சதா + ஆயுள் → ஆயுசு → சதாயுசு.]*

*[Skt. šatā → த. சதா.]*

**சதாயுசோன்** *šadāyušōn,* பெ.(n.) 1. நூறு வயதுடையோன்; one aged 100 years -

centenarian. 2. கிழவன்; an old man. 3. வயது முதிர்ந்தவன்; an elderly person (சா.அக.).

*[Skt. šatā → த. சதா + த. ஆயுள் > ஆயுசு ஆயுசோன்.]*

**சதாவர்த்தி** *šadāvartti,* பெ.(n.) **சதாவிருத்தி** பார்க்க; see *šadā-virutti.*

*[Skt. šadā+vṛtti → த. சதாவர்த்தி.]*

**சதாவாதம்** *šadāvādam,* பெ.(n.) தீராத ஊதை (வாதம்); chronic rupture (சா.அக.).

*[Skt. sadā + vata→ த. சதாவாதம்.]*

**சதாவிருத்தி** *šadā-virutti,* பெ.(n.) சாலை முதலியவற்றில் வழிப்போக்கர் முதலாயினார்க்குத் நாள்தோறும் அளிக்கும் உணவுப்பொருள் (இ.வ.); daily provisions to travellers and mendicants, as in a choultry.

*[Skt sadā+vṛtti> த. சதாவிருத்தி.]*

**சதானகம்** *šadāṉagam,* பெ.(n.) 1. இடுகாடு; burial ground. 2. சுடுகாடு; cremation ground (சா.அக.).

**சதானிகன்** *šadāṉigaṉ,* பெ.(n.) 100 காலாட் படைக்குத் தலைவன் (சுக்கிரநீதி, 73); captain of a unit of 100 infantry men.

*[Skt. šatānika> த. சதானிகன்.]*

**சதி** *šadi,* பெ.(n.) 1. கற்புடையவள் (பிங்.); good, virtuous or faithful wife. 2. சகடு (உரோகிணி) (பிங்.); the fourth naksatra. 3. பார்வதி (பிங்.); Pārvati. 4. இறந்தவனோடு மனைவி உடன்கட்டையேறுகை; suttee; self-immolation of a widow along with her deceased husband.

*[Skt. satī > த. சதி]*

**சதிபதி** *šati-padi,* பெ.(n.) 1. சிவபெருமான் (வின்.); *Šivaṉ,* as lord of *Pārvatī.* 2. மணவிணையர் (தம்பதி) (இ.வ.); husband and wife.

*[Skt. satī+pati> த. சதிபதி]*

**சதிபுருடநியாயம்** *sadi-puruḍa-niyāyam,* பெ.(n.) கணவன் மனைவியர் தம்மிலுள்ள உரிமை (சங்.அக.); mutual rights and duties of husband and wife.

*[Skt. satī+puruta+nyāya> த. சதிபுருட நியாயம்.]*

**சதீலம்** *šadīlam,* பெ.(n.) 1. மூங்கில் (மலை.); bamboo. 2. காற்று (சங்.அக.); wind.

*[Skt. satila> த. சதீலம்.]*

**சதீனகம்** *šadīṉagam,* பெ.(n.) பயறு (மலை.); pulse.

*[Skt. satīnaka> த. சதீனகம்.]*

**சதீனம்** *šadīṉam,* பெ.(n.) **சதீனகம்** பார்க்க (மலை.); see *šadīṉagam.*

**சதுங்கம்** *šaduṅgam,* பெ.(n.) பறவை; a bird.

**சதுசுருதிதைவதம்** *šadu-šurudi-taivadam,* பெ.(n.) பதினாறு (சோடசசுரப்) குரலோசைகளுளொன்று; middle variety of the sixth note of the gamut, one of *šōḍaša-šuram,* q.v.

*[Skt. catur+šruti+dhaivata> த.சதுசுருதி தைவதம்.]*

**சதுசுருதிரிசபம்** *šadu-šurudi-riṣabam,* பெ.(n.) **சதுசுருதிதைவதம்** பார்க்க; see *sadu-suruti-taivadam.*

*[Skt. catur+šruti+ṛṣabha > த.சதுசுருதி ரிசபம்.]*

**சதுட்கசாயம்** *šaduṭ-kašāyam,* பெ.(n.) கடுஞ்சினம், மானம், மாயை, கடும்பற்றுள்ள மாயை என்ற தீய எண்ணங்கள் (மேருமந். 397, உரை); (Jaina.) the four evil thoughts, viz., *kurōdam, māṉam, māyai, lōbam.*

*[Skt. catur+kasāya> த. சதுட்கசாயம்.]*

**சதுட்கிகை** *šaduṭkigai,* பெ.(n.) கட்டட உறுப்புகளுளொன்று; (S.I.I.ii, 87) a part of a building .

*[Skt. catuṣ → த. சதுட்கிகை.]*

**சதுட்டயம்** *šaduṭṭayam,* பெ.(n.) 1. நான்கன் தொகுதி; aggregate of four. *"சாதன சதுட்டயம்".* 2. நடுவம்; (Astrol.)1st, 4th, 7th and 10th houses from the ascendant. *"கேந்திரங்கண்டஞ் சதுட்டயமென்று" (விதான.மரபி.3).*

*[Skt. catuṣṭaya> த. சதுட்டயம்.]*

**சதுட்பாதம்** *šaduṭpādam,* பெ.(n.) 1. விலங்கு (வின்.); quadruped. 2. நாய்; dog. 3. கரணம் பதினொன்றனுள் காருவாவின் முற் பகுதியில் நிகழுங் காலக்கூறு (வீமே.உள்.26, உரை); (Astron.) a division of time, first half of the new moon day, one of eleven *karaṉam.*

*[Skt. catuṣ-pāda> த. சதுட்பாதம்.]*

**சதுதாரம்** *šadu-dāram,* பெ.(n.) அகட்டகம்; one of the six mystic centres of the human body in the genital region (சா.அக.).

**சதுரிகை** *šadurigai,* பெ.(n.) தவ (தபசு) நாள்; (chr.) lent.

*[Skt. caturikā> த. சதுரிகை.]*

**சதேகமுத்தர்** *šadēga-muttar,* பெ.(n.) இப்பிறப்பிலேயே தன்னையறிவதற்கு உலகப் பற்றினின்று விலகியவர்கள்; that type of a person who has attained liberation of soul, having been restored from the influence of worldly maya or bondage (சா.அக.).

*[Skt. sa-dēha+mukta → த. சதேக முத்தர்.]*

**சதேகமுத்தி** *šadēga-mutti,* பெ.(n.) உயிர் முத்தி; final deliverance in the embodied condition of the soul, dist. fr. *videga-mutti.*

*[சதேக+முத்தி.]*

*[Skt. sa-dēha>சதேகம்]*

*[த. முத்தி> Skt. mukti]*

**சதேகரு** *sadēgaru,* பெ.(n.) இலவங்கப்பட்டை (மூ.அ.); cinnamon bark.

**சதேகை** *šadēgai,* பெ. (n.) உயிர் உள்ளொழுக்கத்திற் (நிஷ்டை) பொருந்தியிருக்கை (சி.சி.4, 35, மறை.); (*šaivam*) the mystic union in *šadēga-mutti.*

*[Skt. sa-dēha> த. சதேகை.]*

**சதேசன்** *šadēšaṉ,* பெ. (n.) நூறு சிற்றூர்களுக்குத் தலைவன் (யாழ்.அக.); chief of a hundred villages.

*[Skt. šatēša> த. சதேசன்.]*

**சதேந்திரர்** *šadēndirar,* பெ.(n.) 42 பவணேந்திரரும், 32 வியந்தரேந்திரரும், 22 கற்பேந்திரரும், சந்திரன், சூரியன், நரேந்திரன், மிருகேந்திரன் என்ற நால்வரும் ஆகிய இந்திரர் நூற்றுவர் (மணிமே.27, 171, உரை); (Jaina) the hundred Indras, viz., 42 *pavaṇēndirar,* 332 *viyandarēndirar,* 22 *kaṟpēndirar, cantiraṉ, cūriyaṉ, narēndiran, mirukēntiraṉ.*

*[Skt. šata+indra> த. சதேந்திரர்.]*

**சதேரன்** *šadēraṉ,* பெ.(n.) பகைவன் (யாழ்.அக.); foe, enemy.

*[Skt. šatēra> த. சதேரன்.]*

**சதோகநாதர்** *šadōga-nādar,* பெ.(n.) நவநாத சித்தருள் ஒருவர் (சது.); a šiddhar, one of *nava-nāda-šittar,* q.v.

**சதோகரு** *šadōgaru,* பெ.(n.) **சதேகரு** பார்க்க (வின்.); see *šadēgaru.*

**சதோடம்** *šadōḍam,* பெ.(n.) குற்றத்துடன் கூடியது; that which has flaws or defects. *"சகுணமெனச் சதோடமென வவையிரண்டில்" (திருவிளை.மாணிக்க.66).*

*[Skt. sa-dōṣa> த. சதோடம்.]*

**சதோதயம்** *šadō-tayam,* பெ.(n.) எப்பொழுதும்; always. *"வேண்டுவ தந்து சதோதயம் ஆதரிப்பர்" (இரக்ஷணிய.13).*

*[சதம் + உதயம்.]*

*[Skt. šasu> சதம்.]*

**சந்த** *šanda,* கு. பெ.அ.(adj.) தூய்மையான (R.C.); saintly.

*[It. santo> த. சந்த.]*

**சந்தகபுட்பம்** *šandaga-putpam,* பெ.(n.) இலவங்கம் (மலை.); cloves.

*[Skt. candana-puṣpa> த. சந்தகபுட்பம்.]*

**சந்தகன்** *šandagan,* பெ.(n.) திங்கள் (யாழ்.அக.); moon.

*[Skt. candaka> த. சந்தகன்.]*

**சந்தசு** *šandašu,* பெ.(n.) 1. யாப்பு; metre. 2. மறையுறுப்புகளுளொன்றாய் யாப்பிலக்கணங் கூறும் நூல்; science of *Vēdic* prosody, one of six *Vēdāṅgam.* *"சந்தசுமுதலிய ஆறங்கங்களும்" (வேதா.சூ.6, உரை).* திருமறை (சங்.அக.); *Thirumaṟai.*

*[Skt. chandas> த. சந்தசு.]*

**சந்தசுரம்** *šandašuram,* பெ.(n.) பொதுநிலைக் காய்ச்சல் (சாதாரண சுரம்); common fever without complications (சா.அக.).

*[சந்த + சுரம்.]*

*[Skt. chandas→ த. சந்த.]*

**சந்தஞ்சம்** *šandañjam,* பெ.(n.) 1. ஆண் மக்கட்குரிய கையமைதி வகைகளுள் ஒன்று (சிலப்.பக்.92, கீழ்க்குறிப்பு.); (*Nāṭya*) one of the hand poses appropriate to men. 2. ஈக்கள் மொய்த்துத் துன்புறுத்திடக் காய்கின்ற இருப்புக்கடாரத்தில் கிடத்தித் திருடர்களைத் தண்டிக்கும், நிரயச்சிறப்பு (சேதுபு.தனுக்கோ.13); a hell where thieves or dacoits are punished by being thrown into a boiling iron - cauldron, flies hovering about, and molesting them.

*[Skt. san-daṃša> த. சந்தஞ்சம்.]*

**சந்ததம்** *šandadam,* பெ.(n.) எப்பொழுதும்; always, perpetually, for ever. *"சந்ததமுஞ் சிந்தித்தே" (மாறனலங்.663).*

*[Skt. santatam> த. சந்ததம்.]*

**சந்ததாவர்ணி** *šandadā-varni,* பெ.(n.) பொன் வண்ணச்சாலி; an unknown plant supposed to be always yellow in colour (சா.அக.).

**சந்ததி** *šandadi,* பெ.(n.) 1. வழித்தோன்றல்; descendant, heir. *"சந்ததி யெனக்கு நீயே" (பிரபோத.2, 33).* 2. மகன் (பிங்.); son. 3. குலம்; lineage, pedigree.

த.வ. பிறங்கடை

*[Skt. santati> த. சந்ததி.]*

**சந்ததிப்பிரவேசம்** *šandadi-p-piravēšam,* பெ.(n.) தலைமுறை தலைமுறையாய்; from generation to generation. *"ஆசந்திராற்கம் சந்ததிப்பிரவேசமே இறையிலியாக" (S.I.I. V.331).*

*[Skt. santati+pra-vēša> த. சந்ததிப் பிரவேசம்.]*

**சந்ததிமுட்டு – தல்** *šandadi-muṭṭu-,* 5. செ.கு.வி. (v.i.) குலமற்றுப்போதல்; to become heirless or issueless.

த.வ. காலற்றுபோதல்

*[சந்ததி + முட்டு–.]*

*[Skt. santati→ த. சந்ததி]*

**சந்தநதிவித்து** *šanda-nadi-vittu,* பெ.(n.) இடையீடின்றித் தொடர்ந்து ஊறும் வித்தமிழ்து; semen secreted constantly (சா.அக.).

*[சந்தநதி + வித்து.]*

*[Skt. saṇta-nati→ த. சந்தநதி]*

**சந்தயம்** *šandayam,* பெ.(n.) 1. ஐயம்; doubt. *"சந்தயந் தீரீர்" (மாறனலங்.303, உரை).* 2. ஐயவணி (மாறனலங்.136); (Rhet.) figure of speech which consists in expressing a doubt.

*[Skt. san-dēha> த. சந்தயம்.]*

**சந்தர்ப்பணை** *šandarppaṇai,* பெ.(n.) பார்ப்பானுக்கு விழாவிற்செய்யும் விருந்து

(சமாராதனை) (தைலவ.தைல.43); feast given to Brahmins on religious or festive occasions.

[Skt. san-tarp-paṇa> த. சந்தர்ப்பணை.]

**சந்தர்ப்பம்** *šandarppam,* பெ.(n.) 1. சமயம்; circumstance, opportunity. 2. முன் பின்னமைவு; context. *'சந்தர்ப்பத் தைநோக்கிப் பாடலுக்குப் பொருள் கொள்ள வேண்டும்.'*

[Skt. san-darbha> த. சந்தர்ப்பம்.]

**சந்தலீலை** *šanda-līlai,* பெ.(n.) 1. நாற் கால் உயிரி (சீவன்) போற் புரியும், புணர்ச்சி; four legged cohabitation. 2. கொக்கோகத்திற் சொல்லியுள்ள, 64 காமவிளையாட்டுகளில் ஒன்றாகிய, (பசுகரணம் என்பதைப் போன்ற) விலங்குப்புணர்ச்சி; human sexual intercourse like animals called pasukarnam-one of 64 sexual postures mentioned in the Erotic Science (சா.அக.).

[Skt. sanda + līlā → த. சந்தலீலை.]

**சந்தனு** *sandaṉu,* பெ.(n.) வீடுமற்குத் தந்தையான திங்கட்(சந்திர)குலத்தரசன் (பிங்.); a king of the lunar race, father or *Bhīsmaṉ* (சா.அக.).

[Skt. santanu> த. சந்தனு.]

**சந்தனுமுன்பெற்றோன்** *šandaṉu-muṉ-perrōṉ,* பெ.(n.) சந்தனுவின் முதற் புதல்வன் வீடுமன் (சூடா.); *Bhīṣmaṉ,* the eldest son of santanu.

[சந்தனு + முன்பெற்றோன்.]

[Skt.santanu>த.சந்தனு.]

**சந்தனுமுன்மைந்தன்** *šandaṉu-muṉ-maindaṉ,* பெ.(n.) **சந்தனுமுன்பெற்றோன்** பார்க்க (பிங்.); see *šandaṉu-muṉ-perrōṉ*

[சந்தனு + முன் + மைந்தன்.]

[Skt. santanu → த. சந்தனு]

**சந்தா** *šandā,* பெ.(n.) செய்தித்தாள் முதலியவற்றுக்குச் செலுத்த வேண்டிய கட்டணம் (இக்.வ.); money subscription.

[U. candā> த. சந்தா.]

**சந்தாக்கு** *šandākku,* பெ.(n.) சவப்பெட்டி; (Muham.) coffin.

[Arab. sandāh> த. சந்தாக்கு.]

**சந்தாதார்** *šandādār,* பெ. (n.) உறுப்புக்கட்டணம் கொடுப்பவன் (இக்.வ.); subscriber.

[U. candā-dār> த. சந்தாதார்.]

**சந்தாபம்** *šandābam,* பெ.(n.) 1. சுடுகை (திவா.); socrching, burning. 2. மனத்துன்பம்; distress, affliction. *"சந்தாபந் தீர்ந்த சட கோபன்" (திவ்.திருவாய்.நூற்.15).* 3. எண் வகை நிரயங்களுள் ஒன்று (சி.போ.பா. 2, 3, பக்.230.); one of eight kinds of nirayam. 4. செய்த கரிசு (பாவத்து)க்கு இரங்குகை (R.C.); repentance, confession, penitence.

[Skt. san-tāpa> த. சந்தாபம்.]

**சந்தாமப்பம்** *šandāmappam,* பெ.(n.) எருக்கு (மலை.); madar.

**சந்தாமியம்** *šandāmiyam,* பெ.(n.) வயிரம் (வச்சிரம்); diamond (சா.அக.).

**சந்தாயம்** *šandāyam,* பெ.(n.) 1. சஞ்சாயம், (இ.வ); management of lands, etc., by the proprietors themselves. 2. குமுகாயம் (சமுதாயம்), 5. (R.T.); anything held, in common by villagers.

[Skt. sam-ud-āya> த. சந்தாயம்.]

**சந்தாயநிலம்** *šandāya-nilam,* பெ.(n.) பொதுநிலம் (P.T.L.); land held in common.

[சந்தாய(ம்) + நிலம்.]

[Skt. sam-ud-āya→ த. சந்தாய(ம்).]

**சந்தாயயானம்** *šandāya-yāṉam,* பெ.(n.) ஓர் அரசன் பின்தொடரும் பகைவனை வழி

முறையினால், நண்பனாகச் செய்துகொண்டு முன்னிற்கும் பகைவனை எதிர்த்துச் செல்லுஞ் செலவு (சுக்கிரநீதி, 336); the march of a king against his enemy in front, making an ally of the enemy who attacks him from behind.

*[Skt. sandhāya+yāna> த. சந்தாயயானம்.]*

**சந்தானக்குறி** *šandāṉa-k-kuṟi,* பெ.(n.) கருத்தரித்தலை உறுதிசெய்யும் குறிகள்; sign or symptom of pregnancy (சா.அக.).

**த.வ. கருஅடையாளம்**

*[சந்தானம் + குறி.]*

*[Skt. san-tāna→ த. சந்தானம்.]*

**சந்தானகுரு** *šandāṉa-guru,* பெ.(n.) மரபு வழி அறிவாசிரியன் (யாழ்.அக.); hereditary guru or spiritual teacher.

*[சந்தானம் + குரு.]*

*[Skt. san-tāna> த. சந்தானம்]*

**சந்தானச்சாபம்[1]** *šandāṉa-c-cābam,* பெ.(n.) தலைமுறையில்லாமற் போகும்படி செய்யும் தீமொழி – சாவம் (I.M.P. Tn.328); curse that prevents progeny.

*[Skt. san-tāna+šāpa →த. சந்தானச்சாபம்.]*

**சந்தானச்சாபம்[2]** *šandāṉa-c-cābam,*பெ.(n.) குடும்ப முழுவதும் நசிக்கவொட்டாமல் பிறராற் பாதுகாக்கப்படுஞ் சிறுகுழந்தை (திவ். அமலனாதி.5, வ்யா, பக்.64–65); child kept away in hiding or safe custody in order that the line may not become extinct by a catastrophe.

*[Skt.san-tāna+šāpa>த. சந்தானச்சாபம்.]*

**சந்தானசர்வோத்தம்** *šandāṉa-šarvōttam,* பெ (n.) சிவ துணைத்தோன்றியங்களுளொன்று; a treatise on *šaivaism,* one of *Upāgamam.*

**சந்தானசன்னிமாத்திரை** *šandāṉa-šaṉṉi māttirai,* பெ.(n.) குளிர் சுரத்துக்குக் கொடுக்கும் மாத்திரை; a pill prescribed fer typhoid fever and delirium (சா.அக.).

**சந்தானதருமம்** *šantāṉa-darumam,* பெ.(n.) நற்கதியடைய வேண்டிச் செய்யப்படும் அறம்; meritorious act done with the hope of attaining salvation. (சா.அக.).

*[சந்தான(ம்) + தருமம்.]*

*[Skt. san-tāna → சந்தான(ம்).]*

**சந்தானபரணி** *šandāṉa-baraṇi,* பெ.(n.) பெரு மருந்து; Indian birth-wort-aristolochia indica (சா.அக.).

**சந்தானபரம்பரை** *šandāṉa-parambarai,* பெ.(n.) மெய்கண்ட தேவர் முதல்வராக வந்த சிவணியக் கொண்முடிபைக் கற்பித்து (சைவசித்தாந்தத்தை உபதேசித்து) வந்த சிவகுரு (சைவாசாரிய), கொடிவழி (பரம்பரை); the line of succession of *šaiva Acāryas* who promulgated the *šaiva šiddhānta* philosophy, *Meykaṇḍa-tēvar,* being regarded as the first among them.

*[Skt. san-tāna+ paramparā> த. சந்தானபரம்பரை.]*

**சந்தானம்[1]** *šandāṉam,* பெ.(n.) 1. வழித்தோன்றல் (சந்ததி); offspring, progeny, issue. *"துதிவாணிவீரம் விசயம் சந்தானம்" (தனிப்பா.).* 2. குலம் (வமிசம்); descent, lineage, pedigree. 3. தொடர்பு; uninterrupted succession. 4. குரு (பரம்பரை); line of succession in spiritual preceptorship. *"மெய்கண்ட சந்தானம்".* 5. சிவத்தோன்றியம் இருபத்தெட்டனுள் ஒன்று (சைவச. பொது. 335, உரை.); an ancient *šaivam* scripture in sanskrit, one of 28 *šivāgamam.* 6. தேவருலகத்து ஐவகை மரங்களுள் ஒன்று (திவா.); a tree of svarga, one of *pañja-taru.*

*[Skt. san-tāna> த. சந்தானம்.]*

**சந்தானம்²** *šandānam,* பெ.(n.) அம்பு எய்கை; shooting an arrow.

*[Skt. san-dhāna> த. சந்தானம்.]*

**சந்தானமறிப்பு** *šandāna-marippu,* பெ.(n.) 1. பிள்ளை பெறுவதைத் தடுத்தல்; birth-control. 2. பிள்ளையில்லாமற் செய்தல்; to make a woman barren or sterile (சா.அக.).

*[சந்தானம் + மறிப்பு.]*

*[Skt. santāna → த. சந்தான(ம்).]*

**சந்தானரேகை** *šandāna-rēgai,* பெ.(n.) கை வரி (ரேகை) வகை (திருவாரூ.குற.Ms.); (Palmistry) a line in Palm of hand.

*[Skt. san-tāna+rēkha> த. சந்தான ரேகை.]*

**சந்தானலட்சுமி** *šandāna-latcumi,* பெ.(n.) மகப்பேறுருடையவள் (புத்திரபாக்கியம்); offspring, progeny, considered as wealth.

*[Skt. san-tāna+lakṣmī> த. சந்தான லட்சுமி.]*

**சந்தானவிரதம்** *šandāna-viradam,* பெ.(n.) மகப்பேறடையச் செய்யும் நோன்பு (வின்.); religious observance for obtaining offspring.

*[Skt. san-tāna+vrata> த. சந்தானவிரதம்.]*

**சந்தானிகசைவாசாரியர்** *šandānika-šaivāšāriyar,* பெ.(n.) சந்தான குரவர் மாணவகர் (சிஷ்ய) மரபில் வந்த (சைவக்குரவர்) (I.M.P. N.A.276); a *šaivam* priest owing allegiance to *cantāna-kuravar.*

*[Skt. sāntānika + šaivāsāriyā > த. சந்தானிகசைவாசாரியர்.]*

**சந்தித்தம்** *šandittam,* பெ.(n.) ஐயம் கொள்ளப்பட்டது; that which is in doubt. *"சந்தித்தமாயிருக்கின்ற வஸ்துவில்" (சி.சி.2, 59, ஞானப்.).*

*[Skt. san-digdha> த. சந்தித்தம்.]*

**சந்திபந்தனம்** *šandibandanam,* பெ.(n.) 1. நரம்பு; nerve. 2. மூட்டுகளை இறுகக் கட்டும் தசை நார்; fibrous tissue by which muscles are attached to bones or other parts - *Tendon* (சா.அக.).

*[சந்தி + பந்தனம்]*

*[Skt. santi→ த. சந்தி]*

**சந்தியாம்சம்** *šandiyāmšam,* பெ.(n.) வழிகள் சந்திக்கும்காலம்; ஓகம், the period at the end of each yuga.

*[Skt. sandhyā+amša> த. சந்தியாம்சம்.]*

**சந்தியாமடம்** *šandiyā-madam,* பெ.(n.) நிலையான வழிபாடு செய்தற்குரிய நீர்க்கரை மண்டபம்; stone - building beside a tank or river where religious duties are performed. *"சந்தியா மடத்தேகித் தபோதனர்" (திருவாலவா.63, 10).*

*[சந்தியா + மடம்.]*

*[Skt. san-dhyā → த. சந்தியா.]*

**சந்தியாமண்டபம்** *šandiyā-mandabam,* பெ.(n.) **சந்தியாமடம்** பார்க்க; see *šandiyā-madam.*

*[சந்தியா + மண்டபம்.]*

*[Skt. san-dhyā → த. சந்தியா.]*

**சந்தியாராகம்** *šandiyā-rāgam,* பெ.(n.) செவ்வானம் (வின்.); crimson colour of the evening sky.

*[Skt. sandhyā + rāga → த. சந்தியா ராகம்.]*

**சந்தியை¹** *šandiyai,* பெ.(n.) **சந்தி³, 1** பார்க்க; see *šandi³, 1.*

*[Skt. sandhyā> த. சந்தியை.]*

**சந்தியை²** *šandiyai,* பெ.(n.) மல்லிகை (சங்.அக.); jasmine.

*[Skt. candrikā> த. சந்தியை.]*

**சந்திர** *šandira,* பெ.(n.) வெள்ளாடு; goat (சா.அக.).

**சந்திரகணம்** *šandira-gaṇam,* பெ.(n.) நூலின் முதற் செய்யுளின் முதலில் அமையும்படிப் புளிமாங்காய் என்னும் வாய்பாடு பற்றிவரும் நற்கணச்சீர்வகை (பிங்.); metrical foot consisting of one *nirai*, and two *nēr*, considered auspicious at the commencement of a poem.

*[சந்திர(ம்) + கணம்.]*

*[Skt. candra → த. சந்திர(ம்).]*

**சந்திரகபாலம்** *šandira-kabālam,* பெ.(n.) படுஞாயிறுநோய் (பரராச1, 24); pain in the head, recurring in the evenings.

*[சந்திர(ம்) + கபாலம்.]*

*[Skt. candra > த. சந்திர(ம்)]*

**சந்திரகம்** *šandiragam,* பெ.(n.) வண்டு (பிங்.); beetle.

*[Skt. cañcarika > த. சந்திரகம்.]*

**சந்திரகலை** *šandira-kalai,* பெ.(n.) 1. நிலவின்கூறு; digit of the moon. 2. நிலவொளி; moon light. *"சந்திரகலையால் எனக்கு நீர் பொழிவ சந்திரகாந்தம்" (அரிச்.பு.விவாக.20).* 3. தலைமுடியிற் பெண்கள் அணிந்துகொள்ளும் ஓரணி; crescent shaped ornament for the hair, worn by women. *"சந்திரகலையார் மேகக் கருங்குழலை" (பிரமோத்.பிரதோஷ.5).* 4. இடைகலை; breath passing through the left nostril.

*[சந்திர(ன்) + கலை.]*

*[Skt. candra → த. சந்திரன்.]*

**சந்திரகாசம்** *šandira-kāšam,* பெ.(n.) 1. சிவன் இராவணனுக்குக் கொடுத்த வாள்; the sword presented by *Šivaṉ* to *Rāvaṇa.* 2. **சந்திரகாசரசம்** பார்க்க (பதார்த்த.122.); see *šandira-kāša-rašam.*

*[Skt. candra-hāsa > த. சந்திரகாசம்.]*

**சந்திரகாசரசம்** *šandirakāša-rašam,* பெ.(n.) நீர் வடிவான ஒருவகை மருந்து (பதார்த்த. 1221.); a kind of decoction or medical infusion.

*[Skt. candra-hāsa+rasa > த.சந்திர காசரசம்.]*

**சந்திரகாஞ்சம்** *šandira-kāñjam,* பெ.(n.) சந்தனம்; sandal (சா.அக.).

**சந்திரகாந்தக்கல்** *šandira-kānda-k-kal,* பெ.(n.) **சந்திரகாந்தம்** பார்க்க (சிலப்.10, 25, உரை.); see *šandira-kāndam.*

*[சந்திரன் + காந்தம் + கல்.]*

*[Skt. candra → த. காந்தம் + த.கல்.]*

**சந்திரகாந்தச்சிலை** *šandira-kānda-c-cilai,* பெ.(n.) **சந்திரகாந்தம்** பார்க்க (வின்.); see *šandira-kāndam.*

*[சந்திர(ன்) + காந்தம் + சிலை.]*

*[Skt. candra → சந்திர(ன்).]*

**சந்திரகாந்தச்சேலை** *šandira-kānda-c-cēlai,* பெ.(n.) சேலைவகை (பஞ்ச.திருமுக.116.); a kind of saree.

*[சந்திரன் + காந்தம் + சேலை.]*

*[Skt. candra → சந்திர(ம்).]*

**சந்திரகாந்தம்** *šandira-kāndam,* பெ.(n.) நிலவினொளியில் நீர்கால்வதாகிய கல்வகை; moon stone, a crystal said to emit water when exposed to moon light, as moon-beloved. *"சந்திரகாந்த மென்னும் தண்மணி" (சீவக.585).*

**த.வ. நிலாக்கல்**

*[சந்திர(ன்) + காந்தம்.]*

*[Skt. candra → த. சந்திரன்.]*

**சந்திரகாந்தமணி** *šandira-kānda-maṇi,* பெ.(n.) **சந்திரகாந்தக்கல்** (பிங்.); see *šandira-kānda-k-kal.*

*[சந்திர(ன்) + காந்தம் + மணி.]*

*[Skt.candra → த. சந்திரன்.]*

**சந்திரகாந்தாரி** *šandira-kāndāri,* பெ.(n.) பண்வகை (பரத.இராக.103.); a specific melody type.

**சந்திரகாந்தி** *šandira-gāndi,* பெ.(n.) ஒரு வகைப் பூஞ்செடி (பதார்த்த.255); moon-flower, Ipomaea.

*[சந்திர(ம்) + காந்தி.]*

*[Skt. candra→ த. சந்திரம்.]*

*காந்தம் → காந்தி*

**சந்திரகாம்புயம்** *šandira-gāmbuyam,* பெ. (n.) வெண்டாமரை (மலை.); white lotus.

*[Skt. candrakāmbuja> த. சந்திரகாம் புயம்.]*

**சந்திரகாரம்** *šandira-gāram,* பெ.(n.) மதி (அ) திங்கள் போன்று வட்டமான தங்க வளையங்கள் கோக்கப் பெற்ற மாலைவகை (இ.வ.); a necklace of moon-like gold ringlets.

*[Skt. candra+gāra → த. சந்திரகாரம்.]*

**சந்திரகி** *šandiragi,* பெ.(n.) மயில்; peacock. *"நீலச்சந்திரகி மேல்கொடு" (திருப்பு.896).*

*[Skt. candrakī> த. சந்திரகி.]*



**சந்திரகிரகணம்** *šandira-giraganam,* பெ. (n.) கருங்கோள் செங்கோள் (இராகு கேதுக்)களால் நிலவு மறைக்கப்படுகை; lunar eclipse.

**த.வ. நிலாமறை, கோள்மறை.**

*[Skt.andra + grahana>த.சந்திரகிரகணம்.]*

*கிரகணம் = பற்றுகை*

**சந்திரகுப்தன்** *šandira-guptan,* பெ.(n.) 1. கி.மு. நான்காம் நூற்றாண்டிலிருந்த மோரிய குலத்துப் பேரரசன்; the famous Maurya Emperor of the 4th century B.C. 2. **சித்திரகுத்தன்** பார்க்க (யாழ்.அக.); see *šittirakuttan.*

*[சந்திர(ன்) + குப்தன்.]*

**சந்திரகும்பம்** *šandira-kumbam,* பெ.(n.) நிலவினை முன்னிருத்தி (உத்தேசித்து) மந்திரபூர்வமாக அமைத்துள்ள கும்பம் (வின்.); a sanctified water-pot dedicated to the moon.

*[சந்திர(ன்) + கும்பம்]*

*[Skt. candra> த. சந்திர(ன்).]*

**சந்திரகுரு**[1] *šandira-guru,* பெ.(n.) வெண்முத்து (சிலப்.14, 195, அரும்.); white pearl.

*[சந்திர(ன்) + குரு]*

*[Skt. candra> த. சந்திரன்.]*

**சந்திரகுரு**[2] *šandira-guru,* பெ.(n.) (வெண்ணிறமுடைய அசுரகுரு) சுக்கிரன் (சிலப்.14, 195, உரை); *cukkiran,* as the white-complexioned preceptor of *Asuras.*

*[சந்திர(ன்) + குரு]*

*[Skt. candra> த. சந்திர(ன்).]*

**சந்திரகுலம்** *šandira-kulam,* பெ.(n.) அரசகுலம் மூன்றனுள் திங்களைக் குலமுதல்வ னாகக் கொண்ட மரபு; lunar race, as of kings descended from the moon, one of three *irāša-kulam,* q.v.

**த.வ. திங்கள்மரபு**

*[சந்திர(ன்) + குலம்]*

*[Skt. candra> த. சந்திர(ன்).]*

**சந்திரசாலிகை** *šandira-šāligai,* பெ.(n.) **சந்திரசாலை** பார்க்க (யாழ்.அக.); see *šandira-šālai.*

*[சந்திர(ன்) + சாலிகை]*

**[Skt.** *candra→* **த.** *சந்திர(ன்).]*

**சந்திரசாலை** *šandira-šālai,* பெ.(n.) நிலாமுற்றம் (யாழ்.அக.); terrace on the house-top, as a place for enjoying moon light.

*[சந்திர(ன்) + சாலை]*

**[Skt.** *candra→* **த.** *சந்திர(ன்).]*

**சந்திரசிலை** *šandira-šilai,* பெ.(n.) **சந்திரகாந்தம்** பார்க்க; see *šandira-kāndam.*

*[சந்திர(ன்) + சிலை]*

**[Skt.** *candra→* **த.** *சந்திர(ன்)]*

**சந்திரசுத்தசுபுடம்** *šandira-šuttasupuḍam,* பெ.(n.) வானத்தில் நிலவு நிற்கும் உண்மை நிலை (செந்.viii, 218); (Astron.) moon's geocentric longitude or true position.

**[Skt.** *candra+šuddha+sphuṭa>த. சந்திரசுத்த புடம்.]*

**சந்திரசுவணம்** *šandira-šuvaṇam,* பெ.(n.) குதிரைப்பற் செய்நஞ்சு (சங்.அக.); a mineral poison.

**[Skt.** *candra + su-parṇa → த. சந்திரசுவணம்.]*

**சந்திரசூடன்** *šandira-šūḍan,* பெ.(n.) **சந்திரசேகரன்** பார்க்க; see *šandira-šēkaran.*

*[சந்திர(ன்) + சூடன்]*

**[Skt.** *candra→* **த.** *சந்திர(ன்).]*

**சந்திரசேகரம்** *šandira-sēgaram,* பெ.(n.) 586 கோபுர (சிகர)ங்களையும் 64 மேனிலைக் கட்டுகளையுமுடைய கோயில் (சுக்கிரநீதி, 230); a temple with 586 towers and 64 storeys.

*[சந்திர(ம்) + சேகரம்]*

**[Skt.** *candra→* **த.** *சந்திர(ம்).]*

**சந்திரசேகரன்** *šandira-šēgaran,* பெ.(n.) பிறைசூடி சிவன்; *Šivan,* as having the moon on his crown. *"சந்திரசேகர னமருந் தானங்கள்" (பெரியபு. கோச்செங்.14).*

**[Skt.** *canda-šēkhara>* **த.** *சந்திரசேகரன்.]*

**சந்திரஞானம்** *šandira-ñāṉam,* பெ.(n.) சிவத்தோன்றியம் இருபத்தெட்டனுள் ஒன்று (சைவச.பொது.334, உரை.); an ancient ***Šaiva*** scripture in sanskrit, one of 28 *šivāgamam,* q.v.

**[Skt.** *candra-jñāna>* **த.** *சந்திரஞானம்.]*

**சந்திரத்தீவு** *šandira-t-tīvu,* பெ.(n.) குரு ஆண்டிற்கு அணித்தாக வடதிசையிலுள்ள தீவு (சி.போ.பா.2, 3, பக்.208); an island to the north of *kuruvarudam.*

*[சந்திர(ம்) + தீவு]*

**[Skt.** *candra→* **த.** *சந்திர(ம்)]*

**சந்திரதீபம்** *šandira-tībam,* பெ.(n.) பிரிட்டிசு தீவு; the Brittish Isles (சா.அக.).

*[சந்திர + தீபம்]*

**[Skt.** *candra→* **த.** *சந்திர]*

*தீவம் → தீபம்.*

**சந்திரதரிசனம்** *šandira-darišaṉam,* பெ.(n.)
1. குழந்தைக்கு மங்கலக் காலத்தில் நிலவை முதன்முதற் காட்டுஞ் சடங்கு (வின்.); ceremony of showing the moon to a child for the first time in an auspicious evening.
2. வளர்பிறையில் முதன்முதல் நிலவு கட்புலனாகுகை; sighting of the moon in the sky for the first time after new moon.

**த.வ. நிலாக்காட்சி**

**[Skt.** *candra+daršana>* **த.** *சந்திர தரிசனம்.]*

**சந்திரதிசை** *šandira-dišai,* பெ. (n.) (குபேரனது திசை) வடக்கு (திவா.); north, as *Kubēra's* quarter.

*[சந்திரன் + திசை]*

*[**Skt.** candra→ த. சந்திரன்.]*

**சந்திரப்பிறை** *šandira-p-pirai,* பெ.(n.) 1. மகளிரணியும் பிறைபோன்ற கழுத்தணி; crescent-shaped necklace of women.

*[சந்திரன் + பிறை]*

*[**Skt.** candra→ த. சந்திரன்]*

**சந்திரபதம்** *šandira-padam,* பெ.(n.) நிலவு (சந்திர) மண்டலம் (திவ்.திருநெடுந்.5, வ்யா.); lunar region.

*[சந்திர(ன்) + பதம்]*

*[**Skt.** candra→ த. சந்திர(ம்).]*

**சந்திரபாணி** *šandira-pāṇi,* பெ.(n.) வயிரக் கல்; diamond. *"சந்திரபாணி தகைபெறு கடிப்பிணை" (சிலப்.6, 104.).*

*[**Skt.** candra + pāṇi → த. சந்திரபாணி.]*

**சந்திரபாவலி** *šandira-bāvali,* பெ.(n.) மாதர்கள் காதில் அணியும் நிலவு வடிவான ஓராபரணம் (இ.வ.); moon-shaped ear-ornament worn by women.

*[**Skt.** candra+bāvali → த. சந்திரபாவலி.]*



**சந்திரபிம்பம்** *šandirabimbam,* பெ.(n.) நிலவுமண்டலம்; disc or orb of the moon.

*[**Skt.** candra+bimba → த. சந்திரபிம்பம்.]*

**சந்திரபீசம்** *šandira-pīšam,* பெ.(n.) தம்பலப்பூச்சி (மூ.அ.); cochineal insect.

**சந்திரபுட்கரணி** *šandira-putkaraṇi,* பெ.(n.) திருவரங்கத்து (சீரங்கத்து)க் கோயிலிலுள்ள பொய்கை; a small tank inside the *Šrīraṅgam* temple. *"தாழ்பிறப் பேழறுக்கு நன்னீருறை சந்திரபுட்கரணியு மேவும்" (குருகூர்ப்.5).*

*[**Skt.** candra + puṣkariṇi → த. சந்திர புட்கரணி.]*

**சந்திரபுடம்**[1] *šandira-puḍam* பெ.(n.) நிலவொளியில் வைத்தெடுக்கும் மருந்துப்புடம் (Med.); calcination for medical purpose, done in moon light.

*[சந்திரம் + புடம்]*

*[**Skt.** candra + த. சந்திரம்.]*

**சந்திரபுடம்**[2] *šandira-puḍam,* பெ.(n.) 1. வானத்தில் நிலவு (சந்திரன்) தோன்றும் நிலை (வின்.); (Astron.) moon's longitude. 2. **சந்திரசுத்தசுபுடம்** பார்க்க; see *šandirašutta-šupudam.*

*[**Skt.** candra+sphuṭa> த. சந்திரபுடம்.]*

**சந்திரமண்டலம்** *šandira-maṇḍalam,* பெ.(n.) 1. நிலவி (சந்திர)னது வட்டம்; orb or disc of the moon. *"சந்திரமண்டலம்போற் றாமோதரன் கையில்... ஏறி" (திவ்.நாய்ச்., 4).* 2. ஞாயிற்று (ஆதித்த) மண்டலத்திற்கு மேலுள்ளதும் வானுலகத்தைச் சார்ந்ததுமாகிய உலகம் (சி.போ.பா.2, 3); the region or sphere of the moon belived to be above the sun's region. 3. கபாலமத்தியிலுள்ள ஓர் ஓகவிடம் (யோகஸ்தானம்) (வேதா.கட்.50); (*yōga*) moon centre in the central portion of the skull, belived to be the seat of *parā-šakti.*

**த.வ.** திங்கள்மண்டிலம்

*[சந்திர(ன்) + மண்டலம்.]*

*[**Skt.**candra→சந்திர(ன்).]*

**சந்திரமணி** *šandira-maṇi,* பெ.(n.) **சந்திரகாந்தம்** பார்க்க (யாழ்.அக.); see *šandira-gāndam.*

[சந்திர(ன்) + மணி.]

[Skt.candra→சந்திர(ன்).]

**சந்திரமத்திமபுத்தி** *šandira-mattima-putti,* பெ.(n.) நிலவினது சராசரி கதி (வின்.); (Astron.) mean motion of the moon in the fixed time, as a day, an hour.

[சந்திரமத்திமம் + புத்தி.]

[Skt.candra+madhya→த. சந்திரமத்திமம்.]

**சந்திரமத்தியம்** *šandira-mattiyam,* பெ.(n.) துங்கமத்தியம் கழித்து தூய்மைச் செய்யப் படாத நிலவின் (சந்திர)கதி (செந்.viii, 218); (Astron.) mean longitude of the moon.

[Skt.candra+madha→த. சந்திரமத்தியம்.]

**சந்திரமதி** *šandiramadi,* பெ.(n.) அரிச் சந்திரன் மனைவி (அரிச்.பு.); *Hariščandra's* queen.

**சந்திரமந்தோச்சம்** *šandira-mandōccam,* பெ.(n.) கதிவலயத்திலிருந்து திங்கள் (சந்திரன்) செல்லும் அதிக தூரம்; (Astron.) apsis of the moon.

[Skt. candra+mandōccam→ த. சந்திரமந்தோச்சம்.]

**சந்திரமவுலி** *šandiramavuli,* பெ.(n.) வைப்பு நஞ்சு (நீலபாடாணம்); a kind of arsenic (native) (சா.அக.).

**சந்திரமாசம்** *šandira-māsam,* பெ.(n.) இரண்டு மறை உலா மதிகட்கிடைப்பட்ட காலம் (சாந்திரமான மாதம்) (C.G.); lunar month.

[Skt. candra → த. சந்திர(ன்).]

மாதம் → மாசம்.

**சந்திரமாலை** *šandira-mālai,* பெ.(n.) கழுத்தணி வகை (இ.வ.); a kind of necklace.

[சந்திர(ம்) + த. மாலை.]

[Skt. candra → த. சந்திர(ம்).]

**சந்திரமானம்** *šandira-mānam,* பெ.(n.) **சாந்திரமானம்** பார்க்க (வின்.); see *šāndira-mānam.*

[Skt. candra→ சந்திரன் + த. மானம்→ சந்திரமானம்.]

**சந்திரமுருகு** *šandira-murugu,* பெ.(n.) பிறை வடிவாயமைந்த காதணி வகை; crescent shaped ear-ornament.

[Skt. candra + U.candramuru+ த. முருகு.]

**சந்திரமோலி** *šandira-mōli,* பெ.(n.) **சந்திரமௌலி** பார்க்க; see *šandira-mauli.*

**சந்திரமௌலி** *šandira-mauli,* பெ.(n.) **சந்திரசேகரன்** பார்க்க; see *šandira-Šēgaran.* *"சந்திரமௌலி சீர் வெண்டாமரை" (பிரபுலிங்.வசவண்ணர்வ.45).*

[Skt. candra+mauli> த. சந்திரமௌலி.]

**சந்திரயோகம்** *šandira-yōgam,* பெ.(n.) பிறப்பு ஓரையிலிருந்து ஏழாமிடம் முதல் பன்னிரண்டாம் இடம் வரையும் ஏழு கோள்கள் வரிசையாய் நிற்கும் ஓகம் (சங்.அக.); (Astrol.) a peculiar conjunction of planets in a horoscope in which there are seven planets from the seventh house to the twelfth house calculated from *pirappōrai.*

[Skt. candra+yōga→ த. சந்திரயோகம்.]

**சந்திரரோகம்[1]** *šandira-rōga,* பெ.(n.) வெறியன் (உன்மத்தம்); moon-struck (சா.அக.).

**சந்திரரோகம்[2]** *šandira-rōgam,* பெ.(n.) 1. தொழுநோய்; a kind of leprosy. 2. பைத்தியம்; lunacy.

[Skt. candra+rōga> த. சந்திரரோகம்.]

**சந்திரரோகி** *šandira-rōgi,* பெ.(n.) பித்துப் (பைத்தியம்) பிடித்தவன்; a man in the moon, mad man (சா.அக.).

[Skt. candra+rōgin→ த. சந்திரரோகி.]

**சந்திரரேகை[1]** *šandira-rēgai,* பெ.(n.) **சந்திரகலை[1]** பார்க்க; see *šandira-kalai.*

[Skt. candra+rekhā→ த. சந்திரரேகை.]

**சந்திரரேகை**[2] *šandira-rēgai,* பெ.(n.) கைவரி (ரேகை) வகை; (palmistry) a line in palm of hand. *"மருவுசீத சந்திரரேகையினால்" (திருவாரூ.குற. Ms.).*

*[Skt. candra+rēkhā> த. சந்திரரேகை.]*

**சந்திரலக்கினம்** *šandira-lakkinam,* பெ.(n.) குறிப்பிட்டா ரொருவர் பிறந்த காலத்தில் திங்களிருக்கும் ஓரை; (Astrol.) zodiacal sign occupied by the moon at the time of one's birth.

*[Skt. candra+lagna→ த. சந்திரலக்கினம்.]*

**சந்திரலவணம்** *šandira-lavaṇam,* பெ.(n.) 1. இந்துப்பு; rock salt. 2. கருப்பூரம் (மூ.அ.); camphor.

*[Skt. candra+lavaṇa→த. சந்திரலவணம்.]*

**சந்திரலேகை** *šandira-lēgai,* பெ.(n.) **சந்திரகலை, 1.** பார்க்க; see *šandira-kalai.*

*[Skt. candra-lēkha> த. சந்திரலேகை.]*

**சந்திரலோகம்** *šandira-lōgam,* பெ.(n.) **சந்திரமண்டலம், 2.** பார்க்க; see *šandira-maṇḍalam,* 2.

*[சந்திரன் + உலகம்]*

*[Skt. candra + த. சந்திர(ன்)]*

*[த. உலகம் >Skt. Loka ]*

**சந்திரவங்கி** *šandira-vaṅgi,* பெ.(n.) பிறைவடிவாயமைந்த தலையணி வகை; crescent shaped ornament for head.

*[சந்திரன் + வங்கி.]*

*[Skt. candra> த. சந்திரன்.]*

**சந்திரவட்டக்குடை** *šandira-vaṭṭa-k-kuḍai,* பெ.(n.) அரசச் சின்னங்களில் ஒன்றாகிய வெண்கொற்றக்குடை (கொ.வ.); state umbrella in the form of a moon, one of king's paraphernalia.

*[சந்திர(ம்) + வட்டம்குடை.]*

*[Skt. candra→ த. சந்திர(ன்).]*

**சந்திரவட்டம்** *šandira-vaṭṭam,* பெ.(n.) **சந்திரவட்டக்குடை** பார்க்க; see *šandira vaṭṭa-k-kuḍai. "வெண்சந்திரவட்ட மேலாட" (காளத்.உலா.171).*

*[சந்திர(ம்) + வட்டம்.]*

*[Skt. candra→ த. சந்திர(ம்).]*

**சந்திரவம்சம்** *šandira-vamšam,* பெ.(n.) **சந்திரகுலம்** பார்க்க; see *šandira-kulam.*

*[Skt. candra+vaṃša→ த. சந்திரவம்சம்.]*

**சந்திரவலயம்** *šandira-valayam,* பெ.(n.) சிலம்புவடிவா யமைந்த இன்னியவகை (J.); brass-ring filled with pebbles, worn on each thumb by a street-singer and used as a small tabour.

*[சந்திர(ம்) + த. வலயம்.]*

*[Skt. candra→ த. சந்திர(ம்).]*

**சந்திரவளையம்** *šandira-vaḷaiyam,* பெ.(n.) 1. தோற்கருவி வகை (சிலப்.3, 27, உரை); a kind of drum. 2. **சந்திரவலயம்** பார்க்க; see *šandiravalayam.*3.தொட்டில் முதலியவற்றைத் தொங்கவிடுவதற்கு மேற்கூரையில் மாட்டு கின்ற வளைய வகை; rings fixed on the ceiling for suspending a swing. 4. கிணற்றுள் வட்டமாக அமைத்து இறக்கப்படும் நெல்லிக்கட்டை; a circular frame of nelli tree fixed at the bottom of a well.

*[சந்திர(ம்) + வளையம்.]*

*[Skt. candra→ த. சந்திர(ம்).]*

**சந்திரவாதி** *šandira-vādi,* பெ.(n.) நிலாவுலகம் அடைவதே முத்தியென்று தருக்குவோன் (த.நி.போ.287); one who holds that final liberation consists in reaching the moon's world.

*[Skt. candra+vādin > த. சந்திரவாதி.]*

**சந்திரவாள்** *šandira-vāḷ,* பெ.(n.) **சந்திரகாசம், 1** பார்க்க; see *šandirakāšam,* 1. *"எவ்வகைப் படையும் வெல்லுஞ் சந்திரவாளு மீந்தான்" (உத்தரரா. வரையெடுத்.75).*

[சந்திர(ம்) + த. வாள்.]

[Skt. candra→ த. சந்திர(ம்).]

**சந்திரவாளி** *šandira-vāḷi,* பெ.(n.) சேலைவகை (இ.வ.); a kind of saree.

[சந்திர(ம்) + வாளி.]

[Skt. candra→ த. சந்திர(ம்).]

**சந்திரன்** *šandiraṉ,* பெ.(n.) 1. திங்கள்; moon. 2. குபேரன்; *kubēraṉ. "சந்திரதிசை" (திவா.).* 3. இடைகலை; breath of the left nostril. *"சந்திர னொடுங்கி நிற்பத் தபனனே சரிக்குமாறு" (பாரத.வாசுதேவனை.8).*

**த.வ. நிலவு, திங்கள்**

[Skt. candra> த. சந்திரன்.]

**சந்திரன்சிப்பி** *šandiraṉ-cippi,* பெ.(n.) முத்துச்சிப்பி (யாழ்.அக.); oyster-shell containing pearl.

[சந்திர(ம்) + சிப்பி.]

[Skt.candra>சந்திரன்]

**சந்திரனுப்பு** *šandiraṉuppu,* பெ.(n.) இந்துப்பு; rock-salt (சா.அக.).

**சந்திராட்டமம்** *šandirāṭṭamam,* பெ.(n.) பிறப்பிய ஓரையினின்று எட்டாமிடத்திலமைந்த நாண்மீன்களுடன் திங்கள் கூடியிருக்கும் நிலை; (Astrol.) conjunction of the moon with the constellations at the eighth house from the *piṟappiya ōrai,* considered inauspicious.

[Skt. candrāṣṭama > சந்திராஷ்டமம் → த. சந்திராட்டமம்.]

**சந்திராதபம்** *šandirādabam,* பெ.(n.) நிலவொளி (இலக்.அக.); moon light.

[Skt. candra+ā-tapa> த. சந்திராதபம்.]

**சந்திராதித்தம்** *šandirādittam,* பெ.(n.) அருகனது முக்குடையுள் ஒன்று (சிலப்.11, 1, உரை); an umbrella of Arhat, one of *mu-k-kuḍai*

[Skt. candrāditya> த. சந்திராதித்தம்.]

**சந்திராதித்தவரையும்** *šandirāditta-varaiyum,* வி.எ. (adv.) திங்கள், ஞாயிறுள்ள வரையில்; as long as moon and sun endure. *"இத்தன்மம் சந்திராதித்தவரையும் நடக்கக் கடவதாகவும்"* (S.I.I.i, 109).

[சந்திராதித்த(ம்) + வரையும்.]

[Skt. candrāditya > த. சந்திராதித்தம்.]

**சந்திராதித்தவல்** *šandirādittaval,* வி.எ.(adv.) **சந்திராதித்தவரையும்** பார்க்க; see *šandirāditta-varaiyum. "இத்தேவர்க்குச் சந்திராதித்தவல் இறுப்பார்களாகவும்" (S.I.I.iii, 94).*

[Skt.candrāditya-vat>த. சந்திராதித்தவல்.]

**சந்திராபீடன்** *šandirāpīḍaṉ,* பெ.(n.) **சந்திரசேகரன்** பார்க்க (யாழ்.அக.); see *šandira-sēgaraṉ.*

[Skt. candra+ā-pīḍa> த. சந்திராபீடன்.]

**சந்திராயுதம்** *šandirāyudam,* பெ.(n.) பிறைவடிவான அம்பு; a crescent headed arrow.

[Skt.candra + a-yudha> த. சந்திராயுதம்.]

**சந்திராலோகம்** *šandirā-lōgam,* பெ.(n.) ஓர் அணியிலக்கண நூல்; a treatise on rhetoric.

[Skt. candrālōka> த. சந்திராலோகம்.]

த. உலகம் → **Skt.** லோகம்

**சந்திராவர்த்தம்** *šandirāvarttam,* பெ.(n.) ஞாயிறுமறையும் நேரத்திலிருந்து நள்ளிரவு வரை உள்ளதாகிய தலைநோய் வகை (சீவரட்); severe head-ache which begins at sunset and leves only after midnight.

[Skt. candrāvarta> த. சந்திராவர்த்தம்.]

**சந்திரி**[1] *šandiri,* பெ.(n.) பல ஆண்டுகளின் திங்கள், நாள் முதலியவற்றின் குறிப்பு (கொ.வ.); almanac, calendar, usually of several years.

[U. jantri> த. சந்திரி.]

**சந்திரி²** *šandiri,* பெ.(n.) **சந்திரகம்²,** 3 பார்க்க; see *šandiragam³.* *"சந்திரியோலையைக் கண்டு" (இராமநா.அயோத்.2).*

**சந்திரிகம்** *šandirigam,* பெ.(n.) **சந்திரகம்²,** 3 பார்க்க; see *šandiragam²*

**சந்திரிகை** *šandirigai,* பெ.(n.) 1. நிலவு (திவா.); moon light. 2. பேரேலம் (மலை.); greater cardamom.

*[Skt. candrikā > த. சந்திரிகை.]*

**சந்திரரோதயக்குளிகை** *šandirōdaya-k-kuḷigai,* பெ.(n.) குதம்பைச் சித்தர் முறைப்படி செய்து குளிர்க்காய்ச்சல், காய்ச்சல் போன்றவற்றிற்குக் கொடுக்கும் மாத்திரை; a pill prepared according to the process of kudambai siddha and prescribed for fever and delirum (சா.அக.).

**த.வ.நிலாக்குளிகை**

*[சந்திரோதயம்+குளிகை.]*

*[Skt. candra+udaya →த. சந்திரோதயம்.]*

**சந்திரோதயம்** *šandirōdayam,* பெ.(n.) 1. நிலாத்தோற்றம்; moon rise. 2. குளிர்ச்சியைத் தரும் ஒருவகை மாத்திரை (பதார்த்த. 1221); (Med.) a cooling pill.

**த.வ. நிலாவுதயம்**

*[சந்திர(ன்)+ உதயம்.]*

*[Skt.candra→த.சந்திர(ன்).]*

**சந்திரோபராகம்** *šandirōba-rāgam,* பெ.(n.) **சந்திரகிரகணம்** பார்க்க; see *šandira-giraganam.*

*[Skt. candra+uparāga > த. சந்திரோபராகம்.]*

**சந்திரோபாலம்பனம்** *šalndirōpālambanam,* பெ. (n.) காதலருட்பிரிந்தோர் பிரிவுத் துன்பத்தால் திங்களைப் பழித்துக் கூறுகை; reproach of the moon by a lover in separation. *"சந்திரோபாலம்பனப் படலம்" (நைடத.).*

*[Skt.candra+upā-lambhana>த. சந்திரோபாலம்பனம்.]*

**சந்திவாதம்** *šandi-vādam,* பெ.(n.) கீல்வாயு என்னும் நோய் (பைஷஜ.190); rheumatism.

*[Skt. san-dhi + vāta > த. சந்திவாதம்.]*

**சந்திவிக்கிரகம்** *šandi-vikkiragam,* பெ.(n.) ஐந்து சூழ்ச்சிகளுள் (பஞ்சதந்திரங்களுள்) ஒன்றாகிய அடுத்துக் கெடுக்கை; associating with a foe with a view to ruin him, one of *pañjatandiram.*

*[Skt. san-dhi+vi-graha→ த. சந்திவிக்கிரகம்.]*

**சந்திவிக்கிரகி** *šandi-vikkiragi,* பெ.(n.) அமைச்சன் (இ.வ.); minister.

*[Skt.sandhi+vi-graha→த. சந்திவிக்கிரகி.]*

**சந்துக்கினம்** *šandukkinam,* பெ.(n.) பெருங்காயம்; asafoetida (சா.அக.).

**சந்துகோபம்** *šandu-kōbam,* பெ.(n.) காரணம் இல்லாமலே மூட்டுகளுக்கேற்படும் அழற்சி; inflammation of a joint (சா.அக.).

**சந்துட்டன்** *šanduṭṭan,* பெ.(n.) பொந்திகை (திருப்தி)யுடையவன்; one who is happy, contented. *"ராஜனும் சந்துஷ்டனாய்" (குருபரம்.102, பன்னீ.).*

*[Skt. san-tuṣṭa> த. சந்துட்டன்.]*

**சந்துட்டி** *šanduṭṭi,* பெ.(n.) **சந்தோச(ட)ம்** 1, 2 பார்க்க; see *šandōšam,1,2.*

*[Skt. san-tuṣṭi> த. சந்துட்டி.]*

**சந்தூக்கு** *šandūkku,* பெ.(n.) பெட்டி (வின்.); chest, box, coffer.

*[U. sandūq> த. சந்தூக்கு.]*

**சந்தூக்குசட்தி** *šandūkku-šaṭti,* பெ.(n.) கருவூலப் பேழை ஆய்வுச் சோதனை (வின்.); inspection of coffers or treasury.

*[U. sandūq+jhaḍti> த. சந்தூக்குசட்தி.]*

**சந்தேகக்காரன்** *šandēga-k-kāran,* பெ.(n.) 1. எதனிடத்தும் ஐயங் (அச்சம்) கொண்டவன்; suspicious, mistrustful person. 2 . (சந்தேகிக்கப்பட்டவன்) ஐயப்பாட்டிற்குரியவன் (இ.வ.); suspect.

*[சந்தேகம் + காரன்.]*

*[Skt. san-dēha → த. சந்தேகம்.]*

**சந்தேகப்பிராணி** *šandēga-p-pirāṇi,* பெ.(n.) மிக எளிதில் ஐயப்படுவோன்; one who is suspicious by nature (கிரியா.).

த.வ. ஐயங்கொளி

*[Skt. san-dēha + prāṇin → த. சந்தேகப்பிராணி.]*

**சந்தேகம்** *šandēgam,* பெ.(n.) 1. ஐயம்; doubt, uncertainty, hesitation. *"இதிலோ சந்தேகமில்லை" (தாயு.தேசோ.3).* 2. குற்றம் பற்றிக் கொள்ளும் ஐயம்; suspicion. 3. இல்லாமை; deficiency, want, used euphemistically. *"சாப்பாட்டுக்குச் சந்தேகம்"* (J.). 4. பேரிடர்; peril, risk.

த.வ. ஐயம்

*[Skt. san-dēha> த. சந்தேகம்.]*

**சந்தேகவாரணம்** *šandēga-vāraṇam,* பெ.(n.) ஒழுக்கங்கள் பதினான்கனுள் ஒன்றாகிய ஐயந்தெளிவிக்கை (வின்.); clearing of doubts, one of 14 *tayā-virutti,* q.v.

*[Skt. san-dēha+vāraṇa> த. சந்தேக வாரணம்.]*

**சந்தேகாலங்காரம்** *šandēgālaṅgāram,* பெ.(n.) ஐயவணி (Rhet.); a figure of speech.

*[Skt.san-dēha+alan-kāra>த. சந்தேகாலங் காரம்.]*

**சந்தேகி¹-த்தல்** *šandēgi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. துணிவு கொள்ளாதிருத்தல்; to doubt, hesitate. 2. (குற்றமுளதாக) ஐயப்படுதல்; to suspect.

த.வ. ஐயப்படுதல்

*[Skt. san-dēha> த. சந்தேகி-.]*

**சந்தேகி²** *šandēgi,* பெ.(n.) பார்க்க; சந்தேகக் காரன்; see *sandēga-k-kāraṉ.*

*[Skt. san-dēhi> த. சந்தேகி.]*

**சந்தேசம்** *šalndēšam,* பெ.(n.) தூது; message, embassy.

*[Skt. san-dēša > சந்தேசம்.]*

**சந்தை** *šandai,* பெ.(n.) 1. மறை; the *vēdas.* *"சந்தைகளுல் சாகையாகி" (காஞ்சிப்பு. கழுவா.232).* 2. மறை முதலியவற்றை, குரு சொல்ல மாணாக்கன் இரண்டு அல்லது மூன்று முறை அவற்றைத் திரும்பச் சொல்வது; recital of the *vēdic* text, etc., by a disciple following his preceptor's lead. *"வேதச் சந்தை சொல்லி" (திருவாலவா.56, 19).* 3. பதிக முதலியவற்றுள் செய்யுள்தோறும் திரும்பத் திரும்பவருஞ் சொல்; refrain, burden. *"நமச்சிவாயவெனுஞ் சந்தையாற் றமிழ்ஞானசம்பந்தன் சொல்" (தேவா.1177, 11).* 4. செய்யுள் (இலக்.அக.); verse, stanza. 5. சிந்தித்தற்குரிய பெரியோர் கூற்று; utterance of great men. *"ஆளவந்தார் அருளிச்செய்த சந்தை" (ஈடு.1, 1, 1).*

*[Skt. chandas> த. சந்தை.]*

**சந்தைசொல்(லு)-தல்** *šandai-šol-,* 8. செ.குன்றாவி.(v.t.) மறை முதலியன ஓதுதல்; to recite the *vēdas,* etc. *"வேதச்சந்தை சொல்லி" (திருவாலவா.56, 19).*

*[Skt. chandas>சந்தை + த. சொல்(லு)-.]*

**சந்தைவை-த்தல்** *šandai-vai-,* 4 செ.கு.வி. (v.i.) பிறர் திருப்பிச் சொல்லும்படி மூலபாடம் முதலியன சொல்லுதல்; to lead the recitation of a text, disciples and others following in chorus.

*[Skt. sandas>சந்தை + த. வை-.]*

**சந்தோகசூத்திரம்** *šandōga-šūttiram,* பெ.(n.) சாமவேதபுலவனுக்குரிய கற்பநூல்; *sūtra* prescribing the rites and rituals of the *šāma-vēda* sect. *"இக்கோத்திரத்துச் சந்தோக சூத்திரத்து" (S.I.I.ii, 522, 54).*

*[Skt. chandō-ga+sūtra> த. சந்தோக சூத்திரம்.]*

**சந்தோகன்** *šandōgan,* பெ.(n.) 1. சாம வேதத்துக்கு உரியவன்; brahmin belonging to the *šāma-vēda* sect. 2. மறையொன்றால் மட்டும் அறியப்படும் பரம்பொருள்; God, as one who can be realised only through *Vēdās. "சந்தோகன்... சாமவேதி" (திவ்.பெரியதி.5, 5, 9).*

*[Skt. chandō-ga> த. சந்தோகன்.]*

**சந்தோசம்** *šandōšam,* பெ.(n.) 1. மகிழ்ச்சி; pleasure, delight. 2. மனநிறைவு; satisfaction, gratification. 3. நன்கொடை (இ.வ.); present.

*[Skt. san-tōṣa> த. சந்தோசம்.]*

**சந்தோசி-த்தல்** *šandōši-,* செ.கு.வி.(v.i.) 1. மகிழ்தல்; to rejoice. 2. பொந்திகை அடைதல்; to be gratified.

*[Skt. san-tōṣa> த. சந்தோசி-த்தல்.]*

**சந்தோடகினி** *šandōḍagiṉi,* பெ.(n.) துன்பநீக்கம் to get rid of sufferings (சா.அக.).

**சந்தோடம்** *šandōḍam,* பெ.(n.) **சந்தோசம்** பார்க்க; see *šandōšam "சந்தோடமோட டக்கன்றனைத் தான் பார்த்திடலோடும்" (பிரபோத.5, 27).*

*[Skt. san-tōṣa> த. சந்தோடம்.]*

**சந்தோபிசிதம்** *šandōbišidam,* பெ.(n.) **சந்தோவிசிதி** பார்க்க (திவா.); see *šandōvišidi.*

**சந்தோபிசிதி** *šandōbišidi,* பெ. (n.) **சந்தோவிசிதி** பார்க்க (வின்.); see *sandōvišidi.*

*[Skt. candō-vicit → த. சந்தோபிசிதி.]*

**சந்தோவிசிதி** *šandōvišidi,* பெ.(n.) மறையின் ஓசைகளை (சந்தங்களை) உணர்த்தும் நூல் (சி.போ.பா.1, 1, பக்.62); treatise on prosody, especially *vēdic.*

*[Skt. candō-viciti> த. சந்தோவிசிதி.]*

**சந்நத்தம்** *šannattam,* பெ.(n.) **சன்னத்தம்** பார்க்க; see *šaṉṉattam.*

**சந்நத்தன்** *šannattaṉ,* பெ.(n.) **சன்னத்தன்** பார்க்க; see *šṉṉattaṉ.*

**சந்நதம்** *šannadam,* பெ.(n.) **சன்னதம்** பார்க்க; see *šaṉṉadam.*

**சந்நபித்தம்** *šannapittam,* பெ.(n.) கண்டதுண்டம்; the name for several pieces sliced or eut off (சா.அக.).

**சந்நம்** *šannam,* பெ.(n.) 1. அராவிய பொடி; fine particles obtained by filing as of metals. 2. சிறுகெம்புக் கற்கள்; small fine rubies (சா.அக.).

**சந்நிகிதம்** *šannigidam,* பெ. (n.) அண்ணணியம்; மிக அருகிலுள்ளது (மணிமே.14, 29, உரை); that which is near or proximate.

**த.வ. அண்மைநிலை**

*[Skt. san-ni-hita> த. சந்நிகிதம்.]*

**சந்நிதானம்** *šannidāṉam,* பெ.(n.) **சன்னிதானம்** பார்க்க; see *saṉṉidāṉam.*

*[Skt. šan-ni-dhāna>சந்நிதானம்.]*

**சந்நிதி** *sannidi,* பெ.(n.) **சன்னிதி** பார்க்க; see *šaṉṉidi.*

*[Skt. šan-ni-dhi → த. சன்னிதி → சந்நிதி.]*

**சந்நிதித்துவாரம்** *sannidi-t-tuvāram,* பெ.(n.) கோயிற்கதவு தாழிட்டிருக்குங்கால் கருவறையில் உள்ள (மூல விக்கிரகத்தைக்) மூலவரை வழிபடுவதற்கு உதவியாகத் திருமதிலில் அமைக்கப்பட்ட புழை (இ.வ.); aperture in the wall of a temple through which the deity can be seen even when the door is shut.

*[Skt.san-ni-dhi + dvāra. > த. சந்நிதித்துவாரம்]*

**சந்நிபாதம்** *šanni-pādam,* பெ.(n.) **சன்னிபாதம்** பார்க்க; see *saṉṉi-pādam.*

*[Skt. šan-ni-pāta > த. சந்நிபாதம்.]*

**சந்நியசி—த்தல்** *šanniyaši-,* 4 செ.கு.வி. & செ.குன்றாவி.(v.i.&v.t.) **சன்னியசி—த்தல்** பார்க்க; see *sanniyaši-,.*

*[Skt. šan-ñyas→ த. சன்னியசி→ சந்நியசி.]*

**சந்நியம்** *sanniyam,* பெ.(n.) 1. உடல் (தேகம்); body. 2. மரமஞ்சள்; tree turmeric-*coscinum.fenestratum.* (சா.அக.).

**சந்நியாசம்** *šanniyāšam,* பெ.(n.) **சன்னியாசம்** பார்க்க; see *šanniyāsam.*

*[Skt. san-nyāsa→ த. சன்னியாசம் → சந்நியாசம்.]*

**சந்நியாசயோகம்** *šanniyāša-yōgam,* பெ.(n.) 1. ஆதன் (சீவான்மா) பரவாதனோடு (பரமான்மாவோடு) ஒன்றுதற்கு அடிப்படையாகும் பற்றொழிகை (சர்வசங்க பரித்தியாகம்); complete renunciation as a means to the *jīvātman* becoming one with *paramātman.* 2. துறவியாதலை (சன்னியாசியாதலை) உணர்த்தும் கோள்நிலை (கிரகநிலை); configuration of planets at birth of a person, indicating that he is destined to become a *šanniyāši.*

த.வ. பற்றுநீக்கம்

*[Skt. san-nyāsa + yōga→ த. சந்நியாசயோகம்.]*

**சந்நியாசி** *šanniyāši,* பெ.(n.) **சன்னியாசி** பார்க்க; see *šanniyāsi.*

*[Skt. san-nyāsa → த. சந்நியாசி]*

**சந்நியை** *šanniyai,* பெ.(n.) தோழி; a female companion (சா.அக.).

**சந்நிருத்தகுதம்** *šannirutta-kudam,* பெ.(n.) எருவாய்ச் சுருக்கம்; contraction of the orifice of the anus (சா.அக.).

**சந்நிரோதனம்** *šanni-rōdanam,* பெ.(n.) **சன்னிரோதனம்** பார்க்க; see *sanni-rōdanam.*

*[Skt. san-ni-rōdhana→ த. சன்னிரோதனம் → சந்நிரோதனம்.]*

**சந்நிவேசம்** *šanni-vēšam,* பெ.(n.) **சன்னிவேசம்** பார்க்க; see *sanni-vēsam.*

*[Skt. san-ni+vēša→ த. சன்னிவேசம் → சந்நிவேசம்.]*

**சநாதனதர்மம்** *šanādana-darmam,* பெ.(n.) **சனாதனதர்மம்** பார்க்க; see *sanādana-darmam* (சா.அக.).

*[சநாதன(ம்) + தருமம்.]*

*[Skt. šanātana→ த. சநாதனம்.]*

**சநிட்குடி** *šaniṭ-kuḍi,* பெ.(n.) ஏலம்; cardamon-*elleteria cardamomum* (சா.அக.).

**சநிதம்** *šanidam,* பெ.(n.) பிறப்பு; birth, child-birth (சா.அக.).

*[Skt. jan→ த. ஜனிதம் → சநிதம்.]*

**சநுக்கிரகம்** *šanukkiragam,* பெ.(n.) வடமொழி (பேரகத்.141); sanskrit.

*[Skt. saṃskṛta> த. சநுக்கிரகம்.]*

**சநுசம்** *šanušam,* பெ.(n.) மிளகு; black pepper - *Pipernigrum* (சா.அக.).

**சநைர்மேகம்** *šananari-mēgam,* பெ.(n.) ஒருவகை வெள்ளை நோய் (மேக நோய்). இதனால் சிறுநீர் கொஞ்சம் கொஞ்சமாக மிருதுவைப் பெற்று இறங்கும்; a venereal disease signifying the contraction of the urethra. It is marked by little dribbling out while trying to make water stricture of urine (சா.அக.).

**சப்சாகொட்டடி** *šapšā-koṭṭaḍi,* பெ.(n.) சேலை வகை (இ.வ.); a saree of dark green colour.

*[சப்சா + கொட்டடி.]*

*[Persn. sabzā> சப்சா.]*

**சப்சாசேலை** *šapšā-šēlai,* பெ.(n.) ஒருவகைப் பட்டுச்சேலை (இ.வ.); a kind of silk cloth worn by women.

*[சப்சா + சேலை.]*

*[U. sabza→ த. சப்சா.]*

**சப்சாடா** *šapšāḍā,* பெ.(n.) முழுவதும் (இ.வ.); completely.

*[U. sāñjāḍā> த. சப்சாடா.]*

**சப்சீ** *šapci,* பெ.(n.) கீரை வகைகள் (இ.வ.); greens.

*[U. sabzi> த. சப்சீ.]*

**சப்தக்கிரந்தி** *šapda-k-kirandi,* பெ.(n.) மான், அகங்காரம், ஐம்பூதங்களின் நுண்ணிலைகள் (பஞ்சதன் மாத்திரை) என்னும் ஏழு மெய்ப் பொருள்கள் (தத்துவங்கள்) (சித்.சா.ஞான.10); (*šaivam*) the seven principles in metaphysics, viz., *māṉ, agaṅkāram, pañja-taṉ-māttirai.*

*[Skt. saptan+grandhi> த. சப்தக்கிரந்தி.]*

**சப்தகம்** *šapdagam,* பெ.(n.) 1. ஏழு கொண்டது; a collection of seven. 2. ஏழு தானம், கொடுக்கப்படும் ஒரு சவச் சடங்கு; a religious ceremony performed on the 12the day after death in which 7 things are given as charity (சா.அக.).

*[Skt.saptan→ த. சப்தகம்.]*

**சப்தசந்தானம்** *šapda-šandāṉam,* பெ.(n.) தடாக நிலைகோள் (பிரதிஷ்டை), நிலத்தடியில் செல்வத்தை புதைக்கை (தனநிட்சேபம்), பார்ப்பனச்சேரி நிலைகோள் (அக்கிரகாரப் பிரதிஷ்டை), தேவாலயநிலை கோள் (பிரதிஷ்டை) முதலான ஏழு வகையான நற்பெருஞ்செயல்களைச் செய்தலால் ஏற்படுங் புகழ்; fame resulting from seven kinds of great deeds, viz., *tadāga-p-piradisṭai, taṉa-nitcēpam, akkirakāra-p-piraḍsṭai, tēvālaya-p-piradiṣṭai, nandavaṉa-p-pira-ḍisṭai, pirapanda-nirmāṇam, cattira-p-piratišḍai*

*[Skt. saptan + san-tāna >த.சப்தசந்தானம்.]*

**சப்தசமுத்திரம்** *šapda-šamuttiram,* பெ.(n.) ஏழுகடல்; the seven circular concentric oceans.

*[Skt.saptan+samudra> த.சப்தசமுத்திரம்.]*

**சப்தசரி** *šapdašari,* பெ.(n.) ஏழு சரமுள்ள கழுத்தணிவகை; a kind of necklace having seven strands. *"சப்தசரியொன்றிற் கோத்த முத்து வட்டமும்" (S.I.I.ii, 143).*

*[சப்த(ம்) + சரி.]*

*[Skt. sapta → த. சப்த(ம்).]*

*சுரி → சரி*

**சப்தசாகரம்** *šapda-šāgaram,* பெ.(n.) (ஓசைமிக்க கடல்) **சப்தசமுத்திரம்** பார்க்க; see *šapta-šamuttiram.*

*[Skt. šabda+sāgara> த. சப்தசாகரம்.]*

**சப்தசாதி** *šapda-šādi,* பெ.(n.) ஏழு பிறப்பு; the seven kinds of birth (சா.அக.).

*[Skt. saptan+jāti → த. சப்தசாதி.]*

**சப்தசாலம்** *šapda-šālam,* பெ.(n.) ஒலித் திரள்; series of sounds. *"சங்கீதம் அர்த்த மில்லாத சப்தஜாலந்தானே" (கோபால கிருஷ்ணபாரதி, 62).*

*[Skt. šabda+jāla> த. சப்தசாலம்.]*

**சப்தசுரம்** *šapta-šuram,* பெ.(n.) ஏழிசை; (Mus.) the seven notes of the gamut.

*[Skt. saptan+svara> த. சப்தசுரம்.]*

**சப்தசோதனைக்குழல்** *šapda-šōdaṉai-k-kuḻal,* பெ.(n.) இதயத் துடிப்பறியுங் கருவி (இக்.வ.); stethescope.

*[சப்தசோதனை + குழல்.]*

*[Skt. sabda+šōdhana → த. சப்தசோதனை.]*



**சப்ததாது** *šapda-tādu,* பெ.(n.) உடம்பின் எழு வகைத் தாதுக்கள்; the seven constituent parts of the body (சா.அக.).

**த.வ. ஏழமூல**

*[சப்த(ம்) + தாது.]*

*[**Skt.** sapta + த. சப்த(ம்)]*

**சந்திரிகாபைரவி** *šandirikā-bairavi,* பெ.(n.) இசை வகை (பரத.இராக.102); (Mus.) a specific melody-type .

*[**Skt.** candrikā+bhairavi> த. சந்திரிகா பைரவி.]*

**சப்ததாளம்** *šapda-tālam,* பெ.(n.) ஏழுவகைத் தாளம்; (Mus.) seven common varieties of time measure.

*[சப்த(ம்) + தாளம்.]*

*[**Skt.** saptan→த. சப்த(ம்).]*

**சப்தபாலம்** *šapda-pālam,* பெ.(n.) குதிரை எருது ஒட்டகம் இவற்றின் அழுக்கைப் போச் கப் பயன்படுத்தும் கருவி (சுக்கிரநீதி, 325); a kind of brush used in grooming horse, ox or camel.

*[**Skt.** sapta+phāla> த. சப்தபாலம்.]*

**சப்தபுரி** *šapda-puri,* பெ.(n.) ஏழு தெய்வத்தன்மை நிறைந்த நகரங்கள்; the seven sacred cities.

*[சப்த(ம்) + புரி.]*

*[**Skt.** sapta → த. சப்த(ம்).]*

**சப்தம்**[1] *šapdam,* பெ.(n.) ஒலி, ஓசை (சூடா.); sound, voice.

*[**Skt.** šabda> த. சப்தம்[1].]*

**சப்தம்**[2] *šaptam,* பெ.(n.) ஏழு (சூடா); seven.,

*[**Pkt.** satt→**Skt.** saptan> த. சப்தம்[2].]*

**சப்தம்**[3] *šapdam,* பெ.(n.) (நாட்.) பாடமும் சொற்கட்டுகளும் மாறிமாறி வரும் அமைப்பு அல்லது உருப்படி; suggestive and expressive use of gestures communicating the meaning of individual words (கிரியா.).

**சப்தமண்டலம்** *šapda-maṇḍalam,* பெ.(n.) எழு வகை விண் மண்டிலங்கள் (சது.); the seven regions of the universe, viz.

*[சப்தம் + மண்டலம்.]*

*[**Skt.**saptan → த. சப்த(ம்)]*

**எழு வகை மண்டலங்கள் :** 1. முகில் (மேக) மண்டிலம் 2. கதிரவ (சூரிய) மண்டிலம், 3. திங்கள் (சந்திரன்) மண்டிலம், 4. விண்மீன் (நட்சத்திர) மண்டிலம், 5. கோள் (கிரக) மண்டிலம், 6. ஏழு முனிவர்கள் (ஸப்தரிஷி) மண்டிலம், 7. துருவ மண்டிலம் என்று விட்ணு (விஷ்ணு) புராணமும், வாயு மண்டிலம், வருண மண்டிலம், சந்திர மண்டிலம், சூரிய மண்டிலம், நட்சத்திர மண்டிலம், அக்கினி மண்டிலம், திரிசங்கு மண்டிலம் என்று சதுரகராதி கூறுகின்றன.

**சப்தமருத்து** *šapda-maruttu,* பெ.(n.) ஏழு மண்டலங்களிலும் உள்ள ஏழு வளி (வாயுக்கள்); the seven winds of the universe residing in the *šaptamaṇḍalam.*

*[**Skt.** saptan+marut → சப்தமருந்து.]*

**எழு வகை வாயுக்கள்:** 1. ஆவகம், பிரவகம், சம்வகம், உத்வகம், விவகம், பரிவகம், பராவகம் என்பன.

**சப்தராசிகம்** *šapda-rāšigam,* பெ.(n.) கணித வகை; (Math.) the rule of seven, a kind of compound proportion.

*[**Skt.** sapta-rāšika> த. சப்தராசிகம்.]*

**சப்தரிசிமண்டலம்** *šapdariši-maṇḍalam,* பெ.(n.) ஏழு விண்மீன்கள் அடங்கிய ஒரு விண்மீன் கூட்டம்; ursa major or the great bear (கிரியா.).

*[சப்தரிசி + மண்டலம்.]*

*[**Skt.** saptaṛṣi → த. சப்தரிசி.]*

**சப்தவர்க்கம்** *šapda-varkkam,* பெ.(n.) 1. அரசு, படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு,

அரண் என்ற அரசியற்குரிய ஏழுறுப்புகள்; the seven elements constituting a Government according to the Hindu polity, viz., *arašu, padai, kudi, kūl, amaiccu, natpu, aran*. 2. **சத்த வருக்கம்** பார்க்க; see *šatta-varukkam.*

*[Skt. saptan+varga> த. சப்தவர்க்கம்.]*

**சப்தவாதம்** *šapda-vādam,* பெ.(n.) ஒரு நரம்பு நோய்; a kind of nervous disease (சா.அக.).

*[Skt. sapta+vāta → த. சப்தவாதம்.]*

**சப்தவாயு** *šapda-vāyu,* பெ.(n.) **சப்தமருத்து** பார்க்க; see *šapda-marttdu* (சா.அக.)

*[Skt. sapta+vāyu → த. சப்தவாயு.]*

**சப்தவேதி** *šapda-vēdi,* பெ.(n.) ஒலியின் மூலம் பொருளை இலக்காக வைத்து அம்பு எய்யும் வித்தை; the art of shooting at an unseen object, judging its position by sound.

த.வ. ஒலியிலக்கு

*[Skt. šabda-vēdhin> த. சப்தவேதி.]*

**சப்தறா** *šapdarā,* பெ.(n.) கப்பலின் முன்னணியத்திலிருந்து வெளியே புறப்படும் உத்திரம் (M.Navi.81); bowsprit.

த.வ. அணியக்கால்

**சப்தறாசேர்பறுவான்** *sapdarā-cērparuvān,* பெ.(n.) சப்தறாவுக்கு அருகிலுள்ள, சிறிய உத்திரம்; (M.Navi.82) spirit-sail gaff.

**சப்தறாபோயிபந்து** *šapdarā-pōyipandu,* பெ.(n.) கப்பலின் முன்னணியத்தின் (சப்தறாவின்) அடிப்பக்கத்தைக் கட்டுவதற்கு உதவுங் கயிறு அல்லது சங்கிலி (M.Navi.85); bowspirit gammoning.

த.வ. அணியக்கனல்கயிறு

**சப்தறாலவுரான்** *šapdarā-lavurān,* பெ.(n.) கப்பலின் முன்னணியத்தின் (சப்தறா மரத்தின்) பக்கப் பற்றுக்கோடு (ஆதாரம்); bow spirit shrouds.

**சப்தாகபாராயணம்** *šapdāga-pārāyanam,* பெ.(n.) **சத்தாகம்** பார்க்க (கொ.வ.); see *šattāgam.*

*[Skt. sa ptāha + parāyana த. சப்தாகபாராயணம்.]*

**சப்தாகம்** *šapdāgam,* பெ.(n.) **சத்தாகம்** பார்க்க (இ.வ.); see *šattāgam.*

*[Skt. saptāha> த. சப்தாகம்.]*

**சப்தாங்கம்** *šapdāngam,* பெ.(n.) **சப்தவர்க்கம், 1.** பார்க்க; see *sapda-varkkam.*

*[Skt. saptānga → த. சப்தாங்கம்.]*

**சப்தார்த்தம்** *šapdārttam,* பெ.(n.) **சத்தார்த்தம்** பார்க்க (இ.வ.); see *sattārttam.*

*[Skt. šabda+artha> த. சப்தார்த்தம்.]*

**சப்தி** *šapti,* பெ.(n.) கைப்பற்றுகை (legal) attachment.

*[U. zapti> த. சப்தி.]*

**சப்திசெய்–தல்** *šapti-cey-,* 1. செ.குன்றாவி. (v.t.) வரி முதலியவைகட்கு ஈடாகச் சொத்துக்களை அதிகாரிகள் அரசு வசப் படுத்துதல்; (legal) to attach property, to distrain.

த.வ. கைப்பற்றல்

*[U. zabti + ஜப்தி > சப்தி > த. செய் > த. சப்திசெய்–.]*

**சப்தியிலிரு–த்தல்** *šaptiyil-iru-,* 4 செ.கு.வி. (v.i.) பொருள்கள் நீதிமன்றத்தின் கட்டுப் பாட்டில் (ஆதீனத்தில்) இருத்தல்; (legal) to be under sequestration.

*[U. zabti> த. சப்தி + இல் + இரு–.]*

**சப்நிவீசு** *šapnivišu,* பெ.(n.) எழுத்தர்; writer, scribe.

*[U. sabnivis> த. சப்நிவீசு.]*

**சப்பங்கம்** *šappangam,* பெ.(n.) **சப்பங்கி[3]** (M.M.) பார்க்க; see *šappangi.*

**சப்பங்கி[1]** *šappangi,* பெ.(n.) சப்பான் அரசாங்கம் (வின்.); Japan.

*[Chin. zhi-pan-kwe> த. சப்பங்கி.]*

**சப்பங்கி**[2] *šappańgi,* பெ.(n.) ஒரு வகை மரம் (வின்.); sappan-wood, m.tr. caesalpina sappan.

*[**Malay**. sapang> த. சப்பங்கி.]*

**சப்பங்கி**[3] *šappanńgi,* பெ.(n.) மந்தமான அறிவுள்ளவன்; slow, dull person (யாழ்ப்) ஒ.நோ.சோப்பனாங்கி.

**சப்பங்கிச்சாயம்** *šappańgi-c-cāyam,* பெ.(n.) சப்பங்கி வேரிலிருந்து எடுக்கும் வண்ணம்; colour or dye from the root of *cappańgi.*

*[**Skt**. sapang > சப்பங்கி + த. சாயம் → த. சப்பங்கிச் சாயம்.]*

*சால் → சாய் → சாயம்*

**சப்பங்கு** *šappańgu,* பெ.(n.) **சப்பங்கி**[2] பார்க்க; see *šappańgi.*

**சப்பளாத்தி** *šappaḷātti,* பெ.(n.) 1. பருத்த உடலுடையவன்-ள்; corpulent person. 2. திறமையில்லாதவ-ன்-ள்; unintelligent, dull person.

**சப்பன்னம்** *šappaṉṉam,* பெ.(n.) ஐம்பத்தாறு; the number 56. *"சப்பன்னபாசை" (வின்.).*

*[**Pkt**. cappanaca > த. சப்பன்னம்.]*

**சப்பு**[1] *šappu,* பெ.(n.) வழலைக்கட்டி (சவுக்காரம்) (இ.வ.); soap.

*[**E**. soap > த. சப்பு.]*

**சப்பு**[2] *šappu,* பெ.(n.) காரணம்; cause.

*[**Arab**. sabab> த. சப்பு.]*

**சப்போட்டா** *šappōṭṭā,* பெ.(n.) மண் வண்ணத்தோலும், வெளிர்ப் பழுப்பு நிறச் சதைப் பகுதியுமுடைய சிறு பழம்; sapota plum (க்ரியா.).

**த.வ. மண்ணிப்பழம், சீமைஇலுப்பை**



**சப்ராசி** *šaprāsi,* பெ.(n.) வில்லையூழியன்; (C.G.) liveried peon, orderly, as wearing a badge .

*[**U**. caprāsi> த. சப்ராசி.]*

**சப்சா** *šapjā,* பெ.(n.) 1. கருமயிலை வண்ணம் (நிறம்); iron-grey, as the colour of a horse. 2. திருநீற்றுப்பச்சை; sweet basil.

*[**U**. sabza> த. சப்ஜா.]*

**சபக்கத்தொடர்ச்சி** *šabakka-t-toḍarcci,* பெ.(n.) நற்பக்கத்தினின்று (சபக்கத்தினின்று) எடுத்துக்காட்டும் தொழில் (வியாத்தி) (மணிமே.29, 72); affirmative statement of invariable concomitant illustrated by an affirmative example.

*[**Skt**. sa-pakṣa> சபக்கம் + தொடர்ச்சி > த. சபக்கத்தொடர்ச்சி.]*

**சபக்கம்** *šabakkam,* பெ.(n.) நெருப்புண்மை துணியப்பட்ட அடுக்களைபோலத் துணியப்பட்ட பொருள் முன்பு வெளியான இடம்; an instance in which the major term is found concomitant with the middle term, as kitchen when fire is the major term. *"சபக்கத்துண்டாதலும்" (மணிமே.29, 123).*

*[**Skt**. sa-pakṣa > த. சபக்கம்.]*

**சபட்சம்** *šabaṭcam,* பெ.(n.) **சபக்கம்** பார்க்க; see *sabakkam.*

*[**Skt**. sa-paksa> த. சபட்சம்.]*

**சபதக்காரன்** *šabada-k-kāran,* பெ.(n.) சூளுரை செய்வோன் (இ.வ.); one who bets or takes a vow.

*[சபதம் + காரன்.]*

*[**Skt.** šapatha> த. சபதம்.]*

**சபதபம்** *šaba-dabam,* பெ.(n.) மறை யொழுக்கங்கள் (வைதிகவொழுக்கங்கள்) (கொ.வ.); religious or devotional exercises.

*[**Skt.** japa+tapas> த. சபதபம்.]*

**சபதம்** *šabadam,* பெ.(n.) சூளுரை; asseveration by oath, vow. *"சில சபதந்தனைப் பண்ண" (இராமநா. உயுத்.57).* 2. போட்டி (பந்தயம்) (வின்.); wager.

**த.வ. சூளுரை, சூள்**

*[**Skt.** šapatha> த. சபதம்.]*

**சபதம்போடு-தல்** *šabadam-pōḍu-,*20 செ.கு.வி. (v.t.) 1. உறுதி செய்தல்; to take vow. 2. போட்டி போடுதல் (பந்தயங்கட்டுதல்) (கொ.வ.); to lay a wager.

**த.வ. சூளுரைத்தல்**

*[சபதம் + போடு-.]*

*[**Skt.** šapatha → த. சபதம்.]*

**சபதமாயிரு-த்தல்** *šabadamāy-iru-,* 4 செ.கு.வி. (v.i.) இறுமாந்திருத்தல் (இ.வ.); to be haughty and reserved.

*[**Skt.** sapatha→ த. சபதம் + த. ஆய் + த. இரு> த. சபதமாயிரு-.]*

**சபப்நாமா** *šabap-nāmā,* பெ.(n.) முறை மன்றத்தின் ஆணையை நேரில் நிறைவேற் றாமைக்குச் சிற்றூர் அலுவலர் (கிராமாதிகாரி) முதலியவரைக் கொண்டு நயனகக் கட்டளையர் (அமீனா) செய்து கொள்ளும் மெய்ச்சான்று (அத்தாட்சி) (இ.வ.); (legal) return of a process server reporting the circumstances under which service of summons, etc., could not be effected on a person, usually attested by village officer.

*[**Skt.** sapadi+**U.** nāmā > த. சபப்நாமா.]*

**சபப்பு** *šabappu.* பெ.(n.) காரணம்(C.G.); reason, explanation .

*[**U.** sabab> த. சபப்பு.]*

**சபர்**[1] *šabar,* பெ.(n.) கப்பற் செலவு (வின்); voyage.

**த.வ. கடற்செலவு**

*[**U.** safar> த. சபர்.]*

**சபர்**[2] *šabar,* பெ.(n.) பொறுத்தற் குறிப்பு; expr. signifying 'silence!' 'pause'.

*[**U.** ṣabr> த. சபர்.]*

**சபர்**[3] *šabar,* பெ.(n.) அரபி ஆண்டில் இரண்டாம் மாதம்; the second month in the Arabic year.

*[**Arab.** safar> த. சபர்.]*

**சபரசிந்தாமணி** *šabara-šindāmaṇi,* பெ.(n.) மலையாளத்து மலைவாணர்கள் சாவமிடும் (சபிக்கும்) சாவிப்பு (மாரண) மந்திரத்தைக் கூறும் ஒரு கருநாடக மந்திர நூல்; a carnatic treatise on black art or sorcery practised by the mountaineers of Malabar (சா.அக.).

**சபரணை**[1] *šabaraṇi,* பெ.(n.) ஆதரவு (யாழ்.அக.); support.

*[**Skt.** saṃ-rakṣaṇa> த. சபரணை[1].]*

**சபரணை** *šabaraṇai,* பெ.(n.) 1. நிறைவு; fulness. 2. முன்னேற்பாடு (ஆயத்தம்); readiness. 3. ஒழுங்கு; propriety. *"செட்டுஞ் சபரணையு மாயிருந்தான்" (நெல்லை.).*

*[**Skt.** sam-pūrṇa> த. சபரணை.]*

**சபரம்** *šabaram,* பெ.(n.) கெண்டை மீன் (பிங்.); carp, silvery, attaining 5 inch in

length-Barbus chola.

[Skt. šaphara> த. சபரம்.]



**சபரன்** *šabaran,* பெ.(n.) வேடன்; hunter.

[Skt. šabara> த. சபரன்.]

**சபரி**[1] *šabari,* பெ.(n.) இராமனின் அருள் பெற்றவளாக, இராமாயணத்திற் கூறப்படும் ஒரு வேட்டுவப் பெண்; a huntress devotee who won the blessings of *Srī Rāma.*

[Skt. šabarī> த. சபரி¹.]

**சபரி**[2] *šabari,* பெ.(n.) **சபரியை** பார்க்க (வேதாரணி. இராமநாத.12); see *šabariyai.*

**சபரியை** *šabariyai,* பெ.(n.) பூசை; worship. *"சபரியை விதிமுறை புரிகுவார்" (திருவிளை. திருமணப்.60).*

[Skt. saparyā> த. சபரியை.]

**சபலங்கெட்டவன்** *šabalaṅ-keṭṭavaṉ,* பெ.(n.) பயனற்றவன் (இ.வ.); a useless or good for nothing fellow.

*[சபலம் + கெட்டவன்.]*

[Skt. sa-phala → த. சபலம்.]

**சபலம்** *šabalam,* பெ.(n.) நிலையிலாவுள்ளம்; transitory person.

த.வ. அலைவுளம்

[Skt. sa-phala> த. சபலம்.]

**சபலன்** *šabalaṉ,* பெ. (n.) புலனடக்கமில்லாதவன் (இ.வ.); a fickle minded person, one unable to control his senses.

[Skt. capala> த. சபலன்.]

**சபலி** *šabali,* பெ.(n.) மாலையொளி; evening twilight (சா.அக.).

[Skt. sabali> த. சபலி.]

**சபலை** *šabalai,* பெ.(n.) 1. மின்னல் (பிங்.); lightning. 2. மனத்திட்பமற்றவள் (இ.வ.); fickle-minded woman. 3. திருமகள் (சங்.அக.); Tiru magaḷ, the Goddess of wealth, as inconstant.

[Skt. capalā> த. சபலை.]

**சபவடம்** *šaba-vaḍam,* பெ.(n.) உருச்செய்யும் மாலை (செபமாலை); string of beads for keeping count in prayer, rosary. *"சபவடமும் வெண்ணூல் மார்பும்" (திருவாலவா.27, 51).*

*[சபம் + வடம்.]*

[U. japa + த. வடம் > த. சபவடம்.]

**சபவிசாரணை** *šaba-visāraṇai,* பெ.(n.) சவ ஆய்வு; coroner's inquest.

*[சபம் + விசாரணை.]*

[ த. சவம் > Skt. சபம்.]

**சபவேள்வி** *šaba-vēḷvi,* பெ.(n.) மந்திரவழிபாடு (செபயாகம்) (சி.சி.8, 23, சிவஞா.); recitation of mantras.

*[சபம் + வேள்வி.]*

[Skt. japa → த. சபம்.]

**சபா** *šabā,* பெ.(n.) கலை நிகழ்ச்சிகளை உறுப்பினர்களுக்காக நடத்தும் ஓர் அமைப்பு; organization conducting cultural programmes. *"நாடக சபா/வருடம் தவறாமல் இசை விழாக்களை நடத்தும் சபாக்கள்" (க்ரியா.).*

த.வ. அவை

*[த. அவை → சவை → சபை → Skt. sabha.]*

*அமைதல் = நெருங்குதல், கூடுதல். அமை = கூட்டம். அமை → அவை → சபை → சபா.*

**சபாக்கிரமம்** *šabā-k-kiramam,* பெ.(n.) தொழுகைக்குக் கூடும் கிறித்துவ மதக் கூட்டத்தின் கோட்பாடுகள் (R.C.); church rules.

[Skt. šabhā+krama> த. சபாக்கிரமம்.]

**சபாகம்பம்** *šabā-kāmbam,* பெ.(n.) அவைக்கு அஞ்சுகை (இலக்.அக.); stage-fright, nervousness on facing an audience.

[சபா + கம்பம்.]

[த. சபை → Skt. sabhā → த. சபா]

கம் → கம்பம் =அச்சம், நடுக்கம்

**சபாகாரியம்** *šabā-kāriyam,* பெ.(n.) அவையோர் செய்யும் செயல் (T.A.S.i.249); business transacted by an assembly.

[Skt. sabhā→த. சபா + த. காரியம்.]

**சபாகுசுமம்** *šabā-gusumam,* பெ.(n.) செம்பரத்தை மலர் (சி.சி.2, 67, சிவாக்.); Hibiscuss flower.

[சபா + த. குசுமம்.]

[Skt. jaba → த. சபா]

கும் → குசு → குசுமம். குசுமம் = மலர்



**சபாசனம்** *šabāšanam,* பெ.(n.) ஒருவனுக்குச் செய்யும் மதிப்புரவு (மரியாதை) (சங்.அக.); honour done to a person.

[Skt. sabhājana> த. சபாசனம்.]

**சபாசு** *šabāšu,* பெ.(n.) 'மிகநன்று' எனப் பொருள்படும் குறிப்புச்சொல்; expression signifying 'well done!, bravo! excellent' a term of cheering. *"சபாசென்று மெச்சிக் கொடுக்கு மதிகாரமே" (திருவேங்.சத.41).*

த.வ. வல்லே, வலே

[U. shābāsh → த. சபாசு]

**சபாத்தியட்சன்** *šabāttiyatcan,* பெ.(n.) அவைத் தலைவன்; president of an assembly.

[Skt.sabhā+adhyakṣa>த.சபாத்தியட்சன்.]

**சபாதாம்பூலம்** *šabā-tāmbūlam,* பெ.(n.) திருமணம் முதலிய காலங்களில் வந்துள்ள மக்களுக்கு வழங்கும் வெற்றிலை முதலியன (இ.வ.); betel, arecanuts, etc., distributed at a public meeting or at a marriage.

[சபா + தாம்பூலம்]

[Skt. sabhā → த. சபா.]

தம்பரம் → தம்பலம் → தாம்பூலம். (தமி.வ.58)

**சபாநாதன்** *šabā-nādan,* பெ.(n.) 1. **சபாத்தியட்சன்** பார்க்க; see *šabāttiyatcan.* 2. **சபாபதி** பார்க்க; see *šabāpadi.*

[சபா + நாதன்.]

[த. அவை → த. சபை]

[Skt. sabhā + nātha. > த. சபாநாதன்.]

**சபாநாயகன்** *šabā-nāyagan,* பெ. (n.) 1. **சபாத்தியட்சன்** பார்க்க; see *šabāttiyatcan.* 2. **சபாபதி** பார்க்க; see *sabāpadi.*

[Skt. சபா + நாயகன்.]

**சபாநாயகர்** *šabā-nāyagar,* பெ.(n.) பேரவைத் தலைவர்; speaker of the legislature (கிரியா.).

[சபா + நாயகர்.]

**சபாபதி** *šabā-padi,* பெ.(n.) சிதம்பர அவையின் தலைவன் –நடராச மூர்த்தி; *Naṭarāja*, as the lord of the sacred hall at Chidambaram.

[Skt. sabhā-pati> த. சபாபதி.]

**சபாமண்டபம்** *šabā-mandabam,* பெ.(n.) அவை கூடும் மண்டபம்; assembly-room, public hall.

*[சபா + மண்டபம்.]*

***[Skt. sabhā > த. சபா + த. மண்டபம்.]***

**சபாமணி** *šabā-maṇi,* பெ.(n.) **சபாவணி** பார்க்க; see *šabāvaṇi.*

***[U. chipā'oni> த. சபாமணி.]***

**சபாமுத்திரை** *šabā-muttirai,* பெ.(n.) இரண்டு கைகளையும் இணைத்து சிறு விரல்களால் நீரை விடுவது; (In Agama Philosophy), to let water flow out through the fingers by uniting the two palms (சா.அக.).

**சபாமூப்பன்** *šabā-mūppan,* பெ.(n.) கிறித்தவக் கோயிலின் முதன்மைப் பாதிரியார்; (R.C.) church warden.

***[Skt. sabhā → த. சபா + த. மூப்பு > மூப்பன்> த. சபாமூப்பன்.]***

*(M.sabhāmūpam)*

**சபாரஞ்சகம்** *šabā-rañjagam,* பெ.(n.) அவையிலுள்ளோர் மனத்தைக் கவர்வது; that which is pleasing to an audience, as a speech.

***[Skt. sabhā >rañjaka→த. சபாரஞ்சகம்.]***

**சபாரஞ்சிதம்** *šabārañjidam,* பெ.(n.) **சபாரஞ்சகம்** பார்க்க; see *šabā-rañjagam.*

***[Skt. sabhā +rañjita →த. சபாரஞ்சிதம்]***

**சபாலை** *šabālai,* பெ.(n.) மின்னல்; lightning (சா.அக.).

***[Skt. jvālā → த. சுவாலை → சபாலை.]***

**சபாவணி** *šabāvaṇi,* பெ.(n.) 1. ஒப்படைப் பொருளைப் பறித்துக் கொள்ளுகை; embezzlement. 2. வரி (தீர்வை)யில்லாது போகும்படி நிலத்தைக் கணக்கில் கொண்டு வராது மறைத்து விடுகை; non-mention in the records of a piece of land with a view to evade payment of revenue.

***[U. chipā'oni> த. சபாவணி.]***

**சபி[1]-த்தல்** *šabi-,* 4. செ.குன்றாவி.(v.t.) வெகுண்டுரைத்தல் (சவித்தல்); to curse, utter an imprecation. *"தலையற்று விழுகவெனச் சபித்தா ரன்றே" (உத்தரரா. திக்குவி.94).*

**த.வ. சாவித்தல், சவித்தல்**

***[Skt. šap> த. சபி-.]***

**சபி[2]-த்தல்** *šabi-,* 4. செ.குன்றாவி.(v.t.) மந்திரத்தை நிரல்பட சொல்லுதல்; to recite, as *mantrās*; to pray.

***[Skt. jap> த. சபி-.]***

**சபிகர்** *šabikar,* பெ.(n.) அவையோர்; members of an assembly.

***[Skt. sabhika> த. சபிகர்.]***

**சபிண்டர்** *šabindar,* பெ.(n.) முன்னோர்க்குப் பிண்டச்சோறு (பிதிர்ப்பிண்டம்) இடுதற்குரிய ஏழு தலைமுறைக்குட்பட்ட தாய்வழி முன்னோர்; agnates up to the seventh degree, as participating in *pindam* offered to a common ancestor, sometimes extended to certain maternal relations also.

***[Skt. sa-pinda> த. சபிண்டர்.]***

**சபிண்டி** *šabindi,* பெ.(n.) **சபிண்டீகரணம்** பார்க்க; see *sabindi-garaṇam. "அத்தலத்திற் செயத்தகுஞ் சபிண்டி" (சேதுபு.சங்கரபாண்.55).*

***[Skt. sa-pindi > த. சபிண்டி.]***

**சபிண்டீகரணம்** *šabindi-garaṇam,* பெ.(n.) முன்னோர்கட்குரிய ஈமச்சடங்கை இறந்தவனுக்கும் உரிமையாதற் பொருட்டு, பெரும்பாலும் இறந்த பன்னிரண்டாம் நாள் செய்யப்படும் பிண்டப் படையல் (சிராத்தம்) (திருவானைக். கோச்செங்.15); *Śrāddha,*

usually performed on the 12th day after death for the purpose of including the deceased among the manes.

த.வ. பிண்டப்படையல்

[Skt. sapiṇḍī > சபிண்டி + த. கரணம் > சபிண்டீகரணம்.]

**சபினம்** *šabiṉam,* பெ.(n.) வசம்பு (மலை.); sweet flag.

[Skt. jaṭilā> த. சபினம்.]

**சபீசதீட்சை** *šabīsa-dīṭcai,* பெ.(n.) அறிவொழுக்கங்களில் சிறந்துள்ள சைவசமய நெறிமுறைகள் செய்து வரும்படி அறிவுறுத்தும், வினைமுறை தீக்கை (தீட்சை) வகை (சி.சி.8, 3, சிவாக்.); (*šaivam*) a mode of initiation in which the guru gives a properly qualified and learned disciple instructions on routine religious duties, a kind of *kiriyāvadi*, q.v.

[Skt. sa-bīja+dīkṣā> த. சபீசதீட்சை.]

**சபீசை** *šabīsai,* பெ.(n.) **சபீசதீட்சை** பார்க்க (சி.சி.8, 4, ஞானப்.); see *šabīša-dīṭcai.*

[Skt. sa-bīja → த. சபீசை.]

**சபீனம்** *šabīṉam,* பெ.(n.) **சபினம்** பார்க்க (சங்.அக.); see *šabiṉam.*

[Skt. jaṭilā→ த. சபினம் → சபீனம்.]

**சபு** *šabu,* பெ.(n.) துணிவழலை (சவுக்காரம்); soap (சா.அக.).

**சபுத்தி** *šabutti,* பெ.(n.) பற்றுகை (ஜப்தி); (legal) attachment. 'சபுத்தி வாரண்டுப் பியோனொடு' (பஞ்ச. திருமுக. 1583.).

[Arab. zabt> த. சபுத்தி.]

**சபுபிளாசுத்திரி** *šabu-piḷāšuttiri,* பெ.(n.) துணிவழலை (சவுக்கார)ச் சீலை; soap plaster (சா.அக.).

**சபுனீற்று** *šabu-ṉīṟṟu,* பெ.(n.) 1. துணி வழலைக் கல் (சவுக்காரக் கல்); soap stone - *saponite.* 2. மாக்கல்; stealite (சா.அக.).

**சபேடம்** *šabēḍam,* பெ.(n.) உள்ளங்கை; palm of the hand (சா.அக.).

**சபேடிகை** *šabēḍigai,* பெ.(n.) கைத்தலத்தால் அறைகை (இ.வ.); slapping.

[Skt. capēṭikā> த. சபேடிகை.]

**சபேதா** *šabēdā,* கு. பெ.எ.(adj.) வெண்மையான (இவ.); white.

[U. safetā> த. சபேதா.]

**சம்**[1] *šam,* பெ.(n.) வடமொழித் தொடரின் தொடக்கத்தில் வளமைப்பொருளில் வரும் வடசொல் முன்னொட்டு (இலக்.அக.); a sanskrit word meaning prosperity used as a prefix, as in *Šāṅkaraṉ.*

[Skt. šam> த. சம்.]

**சம்**[2] *šam,* பெ.(n.) நிறைவு மிகுதி சிறப்பு முதலிய பொருள்களில் வரும் வடமொழி யிடைச் சொல்; a sanskrit particle meaning completeness, abundance or excellence - used as prefix, as in *sandōsam.*

[Skt. sam> த. சம்.]

**சம்காரம்** *sam-hāram,* பெ.(n.) அழித்தல் (இ.வ.); destruction, annihilation. *"சூரசம்ஹாரம்" (கிரியா.).*

**சம்சயம்** *šamšayam,* பெ.(n.) **சமுசயம்** பார்க்க; see *šamušayam.*

**சம்சர்க்கம்** *šamšarkkam,* பெ.(n.) 1. சேர்க்கை; association. 2. புணர்ச்சி; sexual union.

[Skt. saṃ-sarga> த. சம்சர்க்கம்.]

**சம்சா** *šamšā,* பெ.(n.) கரண்டி (இந்துபாக.65); spoon.

[U. camca> த. சம்சா.]

**சம்சாயி**[1] *šamšāyi,* பெ.(n.) 1. கடன் (இ.வ.); debt, liabilities. 2. நிறைவு செய்கை; satisfying one's needs.

[U. samjāish> த. சம்சாயி.]

**சம்சாயி²–த்தல்** *šamsāyi-,* 4. செ.கு.வி.(v.i.) ஏற்பாடு செய்தல் (இ.வ.); to make arrangements, settle.

*[U. samjāish > த. சம்சாயி–.]*

**சம்சாயிசி** *šamsāyiši,* பெ.(n.) விளக்கம்; (C.G.) explanation.

*[Skt. samjāna > த. சம்சாயிசி.]*

**சம்சாயி³–த்தல்** *šamsāyi-,* 4. செ.குன்றாவி.(v.t.) அமைதிப்படுத்துதல் (இ.வ.); to reconcile hostile parties, bring to an understanding.

*[U. samjāna > த. சம்சாயி–த்தல்.]*

**சம்சாரசீவன்** *šamšāra-sīvaṉ,* பெ.(n.) வினைத்தொடர்பால் நிரயகதி, விலங்குகதி, மக்கட்கதி தேவகதிகளில் உழலும் உயிர் (மேருமந்.71, உரை); (Jaina.) Átman that passes through *naraga-kadi maṉusya-kadi* and *tēva-kadi* by the bondage of *karma.*

*[Skt. saṃsāra+jīva > த. சம்சாரசீவன்.]*

**சம்சாரம்** *šamšāram,* பெ.(n.) **சமுசாரம்** பார்க்க (இ.வ.); see *šamu-šāram.*

*[Skt. saṃ-sāra > த. சம்சாரம்.]*

**சம்சாரி¹** *šamsāri,* பெ.(n.) குடியானவன்; person of large family.

*[Skt. saṃ-sāri > த. சம்சாரி.]*

**சம்சாரி²** *šamsāri,* பெ.(n.) நிலத்தில் பயிரிடுபவர்; உழவர்; farmer, cultivator. *"மழையே இல்லையென்றால் சம்சாரி எப்படிப் பிழைப்பான்?" (கிரியா.).*

*[Skt. saṃ-sāri > த. சம்சாரி]*

**சம்சிலேசம்** *šamšilēšam,* பெ.(n.) சேர்க்கை (ஈடு.); union.

*[Skt. saṃ-šlēṣa > த. சம்சிலேசம்.]*

**சம்சோதனம்** *šamšōdaṉam,* பெ. (n.) வயிற்றால் போக்கியும் வாயாலெடுத்தும் உடம்பை தூய்மையாக்கல்; a medication which purifies the system by purgative and vomiting (சா.அக.).

**சம்ஞாகந்தம்** *šamñā-gandam,* பெ.(n.) குறிப்பு, 18 (சி.போ.பா.அவை.பக்.38); (Buddh) mind and the five senses.

*[Skt.saṃ-jñā+skandha > த.சம்ஞாகந்தம்.]*

**சம்ஞை** *šamñai,* பெ.(n.)1. செய்கை; significant gesture. 2. குறியீடு; technical term.

*[Skt. sam-jñā > த. சம்ஞை.]*

**சம்பத்தி** *šambatti,* பெ.(n.) 1. பேறு; attainment, acquisition. 2. **சம்பத்து** பார்க்க; see *šambattu.* *"ஒடிவி லியமாதி சம்பத்தியுள்ளோ னாகி" (சூத.ஞானயோ.5, 3).*

*[Skt. sam-patti > த. சம்பத்தி.]*

**சம்பத்து¹** *šambattu,* பெ.(n.) செல்வம்; wealth, prosperity.

*[Skt. sam-pad > த. சம்பத்து.]*

**சம்பத்து²** *šambattu,* பெ.(n.) பொன்; gold. *"மேனாளிற் சம்பத்துதிக்குந் தரணி தராசென்ன" (பத்ம.தென்றல்விடு.3).*

*[Skt. sampat > த. சம்பத்து.]*

**சம்பத்துவேட்டம்** *šambattu-vēṭṭam,* பெ.(n.) ஐந்து தாளத்தொன்று (பரத.தாள.14); (Mus.) a variety of time measure, one of *pañja-tāḷam,* q.v.

*[Skt. sampadvēṣṭa > த. சம்பத்துவேட்டம்.]*

**சம்பந்தக்காரர்** *šambanda-k-kārar,* பெ.(n.) **சம்பந்தக்குடியார்** பார்க்க (இ.வ.); see *šampanda-k-kuḍiyār.*

*[Skt. sambandha > த. சம்பந்தக்காரர்.]*

**சம்பந்தக்குடியார்** *šambanda-k-kuḍiyār,* பெ. (n.) உறவாடிகள் (சம்பந்திகள்) (இ.வ.); relatives by marriage.

*[Skt. sambandha > சம்பந்தம் + த. குடியார் > த. சம்பந்தக்குடியார்.]*

**சம்பந்தகிரேத்தன்** *šambanda-girēttaṉ,* பெ.(n.) நாணயமற்றவன்; lit., worthy householder. Unreliable person, used ironically.

*[Skt. sam - panna + gṛhāstha > த. சம்பந்தகிரேத்தன்.]*

**சம்பந்தங்கல—த்தல்** *šambandaṅ-kala-,* 3 செ.கு.வி. (v.i.) மக்கள் தம் திருமணத்தால் தொடர்புடைய பெற்றோர் உறவு கொள்ளுதல் (இ.வ.); to contract relationship, as parents by marriage of their children.

த.வ. மணஉறவாடல்

*[சம்பந்தம்+கல—த்தல்]*

*[Skt. sam-bandha > த. சம்பந்தம்]*

**சம்பந்தங்கூறல்** *šambandaṅ-kūṟal,* பெ.(n.) மண உறுதியின் போது இருதிறத்தாரும் கள்ளுண்டு தங்கள் உறவுமுறையைக் கூறிக் கொள்ளுகை; proclamation of relationship by the headmen of bridegroom's and bride's parties, exchanging drinks of toddy on the betrothal day.

த.வ. உறவுகூறல்

*[சம்பந்தம்+கூறல்]*

*[Skt. sam-bandha> த. சம்பந்தம்]*

**சம்பந்தச்சொல்** *šambanda-c-col,* பெ.(n.) இனமான சொல் (பாண்டி.); correlative word.

*[சம்பந்தம்+சொல்]*

*[Skt. sam-bandha> த. சம்பந்தம்]*

**சம்பந்தத்திரயம்** *šambanda-t-tirayam,* பெ. (n.) சமானாதிகரண்யசம்பந்தம் விசேடண விசேடியபாவ சம்பந்தம் லட்சிய லட்சணபாவ சம்பந்தம் என்னும் மூவகைப் பட்ட தொடர்பு (வேதாந்தசாரம், பக்.79); the three kinds of relation, *camā-ṉātikaraṇya-campantam, vicēṭaṇā-vicēṭiya-pāva-campantam, laṭciya-laṭcaṇa-pāva-campandam.*
*[Skt. campantam+traya> த. சம்பந்தத்திரயம்.]*

**சம்பந்தப்பட்ட** *šambanda-p-paṭṭa,* கு. பெ. அ.(adj.) குறிப்பிட்ட ஒன்றோடு தொடர் புடைய; connected with something; related, concerned. *திரைப்படம் சம்பந்தப்பட்ட துறைகள்; திருட்டில் சம்பந்தப்பட்ட இருவர் கைது (கிரியா.).*

*[சம்பந்தம்+பட்ட]*

**சம்பந்தப்படுத்து** *šambanda-p-paḍuttu,* கு.வி.எ. (adv.) குற்றத்தில் மற்றொருவரையும் தொடர்புபடுத்திக் கூறுதல்; implicate. *கள்ளக்கடத்தல் தொடர்பாகக் கைதாகியி ருப்பவர் சில உயர் அதிகாரிகளையும் அதில் சம்பந்தப்படுத்தியிருப்பதாகத் தெரிகிறது (கிரியா.).*

**சம்பந்தப்பொருள்** *šambanda-p-poruḷ,* பெ.(n.) ஆறாம் வேற்றுமைப் பொருள்; significance of genitive case.

*[சம்பந்தம்+பொருள்]*

*[Skt. sam-bandha > த. சம்பந்தம்]*

**சம்பந்தம்** *šambandam,* பெ.(n.) 1. தொடர்பு; relation, connection, relevancy, agreement. 2. திருமணத்தால் ஏற்படும் உறவு; alliance, relationship by marriage. 3. **சன்னிகரிடம்** பார்க்க (சி.சி.அளவை. 6, மறைஞா.); see *šaṉṉigariḍam.*

*[Skt. sam-bandha> த. சம்பந்தம்.]*

**சம்பந்தம்பேசு-தல்** *šambandam-pēsu* 5. செ.கு.வி.(v.i.) மணம் பேசுதல் (இ.வ.); to negotiate a marriage.

*[சம்பந்தம்+பேசு-தல்]*

***[Skt. sam-bandha> த. சம்பந்தம்]***

**சம்பந்தவாட்டி** *šambanda-v-āṭṭi,* பெ.(n.) பெண் கொடுத்து உறவு (சம்பந்தஞ்) செய்தவள் (இ.வ.); woman having married son or daughter.

*[சம்பந்தம்+ஆட்டி]*

***[Skt. sam-bandha> த. சம்பந்தம்]***

**சம்பந்தி-த்தல்** *šambandi-* 4 செ.கு.வி. (v.t.) 1. சேர்த்தல்; to connect, blend, mix. intr. 2. உறவாதல்; to become related.

***[Skt. sambanam> த. சம்பந்தி-த்தல்.]***

**சம்பந்தி** *šambandi-* பெ.(n.) உறவாளி, விழைவன் பெண் கொண்டு கொடுத்து உறவு கொள்பவன்; parent of bride and bridegroom.

**த.வ. உறவாளி**

***[Skt. sam+bandati. > த. சம்பந்தி]***

**சம்பம்[1]** *šambam,* பெ.(n.) 1. இருதலைச்சூலம் (வச்சிராயுதம்); thunderbolt, the weapon of Indra. *"மூசுசம்ப முசலங் கணையம்வாள்" (குற்றா.தல.மந்தமா.99).* 2. மரவைரம் (பிங்.); close grain; core, as of a tree.

***[Skt. šamba> த. சம்பம்.]***

**சம்பம்[2]** *šambam,* பெ.(n.) புனைவுப் பகட்டு (இடம்பம்); ostentation, show..

***[Mhr. jambha>Skt. ḍambha>த. சம்பம்.]***

**சம்பம்[3]** *šambam,* பெ.(n.) அங்கநாடு (யாழ்.அக.); the country of *Aṅgam.*

***[Skt. campā> த. சம்பம்.]***

**சம்பர்க்கம்** *šambarkkam,* பெ.(n.) சேர்க்கை; union, contact, association.

***[Skt. sam-parka> த. சம்பர்க்கம்.]***

**சம்பர்க்கார்த்தம்** *šambarkkārttam,* பெ.(n.) 1. கதிரவ மறைப்பில் (சூரிய கிரகணத்தில்) கதிரவன் (சூரியன்) நிலா (சந்திரன்) இவற்றின் பாதிக் குறுக்களவைக் கூட்டி வந்த அளவு (சூடா.உள்.436, உரை); (Astron.) sum of the semi-diameters of the sun and the moon in a solar eclipse. 2. நிலவு மறைப்பில் (சந்திர கிரகணத்தில்) நிலா பூமியின் சாயையிவற்றின் பாதிக்குறுக்களவைக் கூட்டிவந்த அளவு (சூடா.உள்.443, உரை); (Astron.) sum of the semi-diameters of the moon and the earth's shadow in a lunar eclipse.

**த.வ. கோளக்குறுக்கம்**

***[Skt. sam-parka+ardha> த. சம்பர்க் கார்த்தம்.]***

**சம்பரசூதன்** *šambara-šūdaṉ,* பெ.(n.) **சம்பரசூதனன்** பார்க்க (உரி.நி.); see *šambara-šūdaṉaṉ.*

**சம்பரசூதனன்** *šambara-šūdaṉaṉ,* பெ.(n.) 1. சம்பரனைக் கொன்ற காமன் (பிங்.); *Kāma,* the Hindu god of love, as the slayer of *Šambara.* 2. **சம்பராரி, 2** பார்க்க; see *šambarāri.*

***[Skt. šambara-sūdana>த.சம்பரசூதனன்.]***

**சம்பரநாரை** *šambara-nārai,* பெ.(n.) ஒரு நாரை; a red crane (சா.அக.).



**சம்பரம்**[1] *šambaram,* பெ.(n.) சரபம் என்னும் எண்காற் பறவை (பிங்.); a fabulous eight-legged creature.

*[Skt. sambara> த. சம்பரம்.]*

**சம்பரம்**[2] *šambaram,* பெ.(n.) சம்பிரமம், 1, 2, 3 பார்க்க (இ.வ.); *šampiramam.*

**சம்பரன்** *šambaran,* பெ.(n.) 1. காமனால் கொல்லப்பட்ட; அரக்கன் *Asuran* killed by *Kāman. "சம்பரனுக் கொருபகைவா" (கந்தபு. காமதக.99).* 2. தசரதனாற் கொல்லப்பட்ட அரக்கன்; an *Asuran* killed by *Dašarathan. "சம்பரனைக் குலத்தோடுந் தொலைத்து" (கம்பரா.கையடை.8).*

*[Skt. šambara> த. சம்பரன்.]*

**சம்பராரி** *šambarāri,* பெ.(n.) 1. சம்பரனது பகைவன்; lit., the enemy of *Šambaran. "சம்பராரி நாணேற்றுந் தனுவைப் பொருவ" (திருப்போ.சந்.சிற்றில்.9).* 2. தசரதன்; *Daša-rathan.*

*[Skt. šambara+ari> த. சம்பராரி.]*

**சம்பவப்பிரமாணம்** *šambava-p-piramānam,* பெ.(n.) பொருளின் இயற்கைக் குணத்தைச் சுட்டிச் சொல்வதாகிய ஓர் அளவை; (log.) statement relating to the properties of natural objects, physical facts, etc.

*[Skt.sam-bhava+pra-māna> த. சம்பவப் பிரமாணம்.]*

**சம்பவம்** *šambavam,* பெ.(n.) 1. பிறப்பு; birth, origin. *"சம்பவச்சருக்கம்" (பாரத.).* 2. நிகழ்ச்சி; occurrence, event. 3. சம்பவப் பிரமாணம் (மணிமே.27:55, உரை); பார்க்க see *šambava-p-piramānam.*

*[Skt. sam-bhava> த. சம்பவம்.]*

**சம்பவர்** *šambavar,* பெ.(n.) இருபத்து நான்கு தூய நீரவருள் (தீர்த்தங்கரருள்) ஒருவர் (திருக்கலம்.காப்பு.உரை); Jaina Arhat, one of 24 *tirttangarar.*

*[Skt. sam-bhava> த. சம்பவர்.]*

**சம்பவி-த்தல்** *šambavi-,* 4 செ.கு.வி.(v.i.) நிகழ்தல்; to happen, occur, come to pass.

*[Skt. sam-bhava> த. சம்பவி-.]*

**சம்பளங்கி** *šambalangi,* பெ.(n.) நக்கவாரத் தீவு; Nicobar islands.

*[Malay. sam-balang> த. சம்பளங்கி.]*

**சம்பற்காத்தம்** *šambar-gāttam,* பெ.(n.) **சம்பர்க்கார்த்தம்** பார்க்க; see *šambar-k-kārttam.*

**சம்பன்னகிருகத்தன்** *šambanna-kirugattan,* பெ.(n.) நாணயமற்றவன்; lit., worthy householder, unreliable person, used ironically.

*[Skt.sam-panna+grah-stha> த. சம்பன்ன கிருகத்தன்.]*

**சம்பாசணம்** *šambāšanam,* பெ.(n.) ஒருவரோடொருவர் பேசுகை; conversation, dialogue.

த.வ. உரையாட்டு, உரையாடல்

*[Skt. sambhāsana> சம்பாஷணம் > த. சம்பாசணம்.]*

**சம்பாசணை** *šambāšanai,* பெ.(n.) ஒருவரோடொருவர் உரையாடுவதுபோல் எழுதிய பாடம்; lesson in the form of a dialogue.

*[Skt. sambhāsana> த. சம்பாசணை.]*

**சம்பாசி-த்தல்** *šambāsi-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஒருவரோடொருவர் பேசுதல்; to converse.

*[Skt. sambhasana> த. சம்பாசி-.]*

**சம்பாவனை** *šambāvanai,* பெ.(n.) 1. மதிப் புரவு; honour. 2. வெகுமானம்; offering, gift.

*[Skt. sambhāvanā> த. சம்பாவனை.]*

**சம்பாவிதம்** *šambāvidam,* பெ.(n.) நிகழக் கூடியது; that which is probable or likely.

*[Skt. sam-bhāvita> த. சம்பாவிதம்.]*

**சம்பிரஞ்ஞாதசமாதி** *šampiraññāda-samādi,* பெ. (n.) **சவிகற்பசமாதி** பார்க்க; see *šavigarpa-šamādi.*

*[Skt. sam-pra-jñāta+samādhi > த. சம்பிரஞ்ஞாதசமாதி.]*

**சம்பிரதம்** *šambiradam,* பெ.(n.) 1. விளைவு; that which is caused; effect, result. *"வித்தின்றிச் சம்பிரதமில்" (பழ.327).* 2. வியத்தகு செயல் செய்வதாக, ஒரு பொருள் தோன்றுமாறு அமைத்துப்பாடும் கலம்பக வுறுப்பு (திவா.); a constituent theme in *kalambagam* which apparently relates the wondrous performances of a magician but really signifies ordinary things. 3. விண்ணுலகத்தார் செய்யும் மாயக்கலை (இந்திரசாலம்); magic, jugglery. *"மணி வண்ணன் மலையுமோர் சம்பிரதம்" (திவ்.பெரியாழ்.3, 6, 10).*

*[Skt. sam-bhṛta > த. சம்பிரதம்.]*

**சம்பிரதாபனம்** *šambiradābanam,* பெ.(n.) அளறு (நரக) வகை (மணிமே.6, 181, அரும்.); a hell.

த.வ. நிரயம்

*[Skt. sampratāpana> த. சம்பிரதாபனம்.]*

**சம்பிரதாயக்காரன்** *šambiradāya-k-kāran,* பெ.(n.) **சம்பிரதாயத்தன்** பார்க்க; see *šambiradāyasttan.*

*[Skt. sam-pra-dāya > த. சம்பிரதாயம் + காரன்.]*

**சம்பிரதாயத்தன்** *šambiradāyattan,* பெ.(n.) 1. முன் வழக்க வொழுக்கங்களைப் பின் பற்றுபவன் (அனுசரிப்பவன்); one who respects customs or traditions, a traditionist. 2. திறமைசாலி (சாமர்த்தியசாலி); clever, skilfulman.

த.வ. மரபாளி, தொன்மரவன்

*[Skt. sam-prādaya + stha > த. சம்பிரதாயத்தன்.]*

**சம்பிரதாயம்** *šambiradāyam,* பெ.(n.) 1. குருமரபாக வந்த அறிவுரை (உபதேசம்); tradition, traditional doctrine or knowledge transmitted from teacher to disciple. 2. தொன்று தொட்ட வழக்கம்; time honoured custom, established usage. *"சாசுவத சம்பிரதாய மோராமல்" (தாயு.சின்மயா.9).* 3. வல்லமை (சாமர்த்தியம்); skill, cleverness, artfulness, shrewdness. *"இந்திரலோக மழித்தவன் சம்பிரதாயஞ்சுட" (திருப்பு.12).*

த.வ. அறிவர் உரை, பண்டாடு பழநடை

*[Skt. sam-pra-dāya> த. சம்பிரதாயம்.]*

**சம்பிரதாயி** *šambiradāyi,* பெ.(n.) **சம்பிரதாயத்தன்** பார்க்க; see *šambiradāyattan.*

*[Skt. sam-pra-dāyi> த. சம்பிரதாயி.]*

**சம்பிரதாரணை** *šambira-dāranai,* பெ.(n.) ஆராய்ந்து செய்யுந் தீர்மானம் (யாழ்.அக.); decision after due deliberation.

*[Skt. sam-pra + dhārana> த. சம்பிர தாரணை.]*

**சம்பிரதானம்** *šambira-tānam,* பெ.(n.) 1. கொடை; donation, gift. 2. நான்காம் வேற்றுமைப் பொருள்; meaning of dative case. *"ஒழியாது கொள்பவன் சம்பிரதானம்" (பி.வி.9).*

த.வ. கொடை

*[Skt. sam-pra-dāna> த. சம்பிரதானம்.]*

**சம்பிரதி** *šambiradi,* பெ.(n.) 1. தலைமைக் கணக்கன் (I.M.P. Mr.225); public accountant; accountant in a temple or a zemindary. 2. சிற்றூர்க்கணக்கனுக்கு உதவி செய்யும் எழுத்தன் (C.G.82); assistant to a village accountant; writer, clerk. 3. வட்டத் தலைமைக் கணக்கன் (இ.வ.); taluk head accountant.

*[Te. samprati> த. சம்பிரதி.]*

**சம்பிரமம்** *šambiramam,* பெ.(n.) 1. பரபரப்பு; confusion, agitation, flurry. 2. களிப்பு; elation, high spirit. *"தீரசம்பிரம வீரா" (திருப்பு.94).* 3. சிறப்பு; splendour, pomp, excellence. *"கல்யாணசம்பிரமம் சொல்லத் தரமன்று".* 4. நிறைவு; fulness, plenty, sumptuousness. *ஆகாரம் சம்பிரமமாகக் கிடைத்தது (இ.வ.).* 5. வெள்ளை நீர் நஞ்சு (வின்.); a mineral poison.

*[Skt. sam-bhrama> த. சம்பிரமம்.]*

**சம்பிரமலோலன்** *šambirama-lōlan,* பெ.(n.) பகட்டுக்காரன் (வின்.); pompous person.

*[Skt. sam-bhrama + lola> த. சம்பிரம லோலன்.]*

**சம்பிரமி-த்தல்** *šampirami-,* 4 செ.கு.வி. (v.i.) மகிழ்தல் (தக்கயாகப்.109, உரை); to be glad.

*[Skt. sambhrama> த. சம்பிரமி-.]*

**சம்பிராத்தி** *šambirātti,* பெ.(n.) பேறு; anything obtained, blessing, acquisition. *"மற்றுமேற்பட்ட சம்பிராத்தியும்"* (T.A.S.i. : 280).

*[Skt. sam-prāpti> த. சம்பிராத்தி.]*

**சம்பிரேட்சியம்** *šampirēṭciyam,* பெ.(n.) ஆராய்ந்தறிகை (வின்.); deliberation, consideration.

*[Skt. samprēkṣya> த. சம்பிரேட்சியம்.]*

**சம்பினத்தாதி** *šambina-t-tādi,* பெ.(n.) வாயு விளங்கம்; wind-killer- *Embelia ribes* (சா.அக.).

**சம்புகானா** *šambu-gānā,* பெ.(n.) சிவப்பு வண்ணத் தரைவிரிப்பு (இரத்தினக் கம்பளம்) (இ.வ.); carpet.

**த.வ. தரைவிரிப்பு**

*[U. jamkāna> த. சம்புகானா.]*

**சம்புகேச்சுரம்** *šambu-kēccuram,* பெ.(n.) ஆனைக்கா; a *šiva* shrine.

*[Skt. Jambukešvara> த. சம்புகேச்சுரம்.]*

**சம்புத்தி** *šambutti,* பெ.(n.) ஒருமைவிளி (பி.வி.5, உரை); vocative singular.

*[Skt. šam-buddhi> த. சம்புத்தி.]*

**சம்புபட்சம்** *šambu-paṭcam,* பெ.(n.) தூ(சுத்தமாயை)யுலகத்தில் தொழில் புரியும் சிவபேதங்கள் (சி.போ.பா.2 : 4, பக்.223); the manifestations of *šiva* functioning in the universe of pure *māya,* viz., *šadāšivan* and dist. fr. *anu-paṭcam.*

*[Skt. šam-bhu+pakṣa> த. சம்புபட்சம்.]*

**சம்புரோட்சணம்** *šambu-rōṭcaṇam,* பெ.(n.) துப்புரவிற்காகக் கோயில்களில் செய்யும் நடப்புகள்; purificatory ceremony, as in a temple.

**த.வ. தூவிகம்**

*[Skt. saṃ-prōkṣaṇa> த. சம்புரோட் சணம்.]*

**சம்புரோட்சணை** *šamburōṭcaṇai,* பெ.(n.) **சம்புரோட்சணம்** பார்க்க; see *camburōṭcaṇam.*

*[Skt. saṃ-prōkṣaṇa> த. சம்புரோட் சணை.]*

**சம்பூகை** *šambūgai,* பெ.(n.) கிளிஞ்சில்; bi-valve-shell; mollusc (சா.அக.).

**சம்பூயயானம்** *šambūya-yāṉam,* பெ.(n.) திறன் வாய்ந்த சிற்றரசர் பலரோடு, ஓர் அரசன் தன் பகைவன்மேற் செல்லுகை (சுக்கிரநீதி, 337); the march of a king with his able feudatories to meet his enemy.

**த.வ. படையியக்கம்**

*[Skt. sambhūya+yāna> த. சம்பூயயானம்.]*

**சம்பூர்த்தி** *šambūrtti,* பெ.(n.) **சம்பூரணம், 1, 2** பார்க்க (இ.வ.); see *šambūraṇam.*

*[Skt. sam-pūrtti> த. சம்பூர்த்தி.]*

**சம்பூரணம்** *šambūraṇam,* பெ.(n.) 1. நிறைவு; fulness, completion. 2. முடிவு பல பெண் குழந்தைகளைப் பெற்றுச் சலித்தோர் மேலும்

பெறுதலில் வெறுப்புற்று, இதுவே கடைப்பெண்ணாக என்று பிறந்த பெண் குழந்தைக்கிடும் பெயர்; name given to a female child by parents who have had enough of female children and wish to have no more. end, termination. 3. மிகுதி; abundance, plenty. 4. **சம்பூரணராகம்** (சிலப்.13, 106, உரை) பார்க்க; see *šambūraṇa-rāgam.*

*[Skt. sam-pūrṇa> த. சம்பூரணம்.]*

**சம்பூரணராகம்** *šambūraṇa-rāgam,* பெ. (n.) எல்லா இசை, ஒலிக்குறிப்புகளும் (சுரங்களும்) அமைந்த பண்; primary melody type, as containing all the notes of the gamut.

த.வ. நிறைபண்

*[Skt. sam-pūrṇa+rāga→ சம்பூரணராகம்.]*

**சம்பேதனம்** *šambēdaṉam,* பெ.(n.) கரையச் செய்யும் வேதிப்பொருள் (கர்த்தா); a dissolving agent as gastric juice-catalysis (சா.அக.).

**சம்போக்கு** *šambōkku,* பெ.(n.) கப்பற் கூட்டம்; fleet of ships (R.).

*[Persn. sumbuk> த. சம்போக்கு.]*

**சம்போகம்** *šambōgam,* பெ.(n.) 1. புணர்ச்சி; sexual enjoyment. 2. இருவரும் துய்க்கும் இன்பம்; the sexual pleasures enjoyed by both. 3. ஒத்த இன்பம்; sexual enjoyments shared equally (சா.அக.).

த.வ. புணர்ச்சி

*[Skt. sam-bhoga> த. சம்போகம்.]*

**சம்போகவிவரணம்** *šambōga-vivaraṇam,* பெ.(n.) புணர்ச்சியைப் பற்றியும், தொழிலியற்றும் விளத்தங்களையும், காமநுகர்ச்சியின் இன்பங்களையும் விளக்கமாகக் கூறும் நூல்; that branch of sexual science dealing particularly about sexual intercourse, the process of the effecting it successfully and the sexsual pleasures and enjoyments derived from it Physiology of coitus (சா.அக.).

த.வ. புணர்ச்சிநூல்

*[Skt. sam - bhoga + vivarana > த. சம்போகவிவரணம்.]*

**சம்போகியடிக்கடி** *šambōgi-yaḍikkaḍi,* பெ.(n.) சேவல்; cock, so called from its frequent copulation (சா.அக.).

**சம்போதனம்** *šambōdaṉam,* பெ.(n.) பன்மைவிளி (பி.வி.17); vocative plural.

*[Skt. sambōdhana> த. சம்போதனம்.]*

**சம்போதனை** *šambōdaṉai,* பெ.(n.) விளி வேற்றுமை (வின்.); vocative case.

*[Skt. sambōdhana> த. சம்போதனை.]*

**சம்போர்** *sambōr,* பெ.(n.) பூதம் (அக.நி.); goblin.

*[Skt. šambara> த. சம்போர்.]*

**சம்மதக்கைச்சீட்டு** *šammadakkai-c-ciṭṭu,* பெ.(n.) **சம்மதிப்பத்திரம்** பார்க்க; see *šammadi-p-pattiram.*

*[Skt.sam-mata+ U.ciṭṭhi> த.சம்மதக்கைச் சீட்டு.]*

**சம்மதம்** *šammadam,* பெ.(n.) 1. உடன்பாடு; approval, acquiescence, consent. *"ஈது பயவாதிகள் சம்மதம்" (தாயு.எங்கு.3).* 2. நட்பு; friendship. *"தானஞ் சம்மத மின்சொல்" (காசிக.தீர்த்.7).* 3. கொள்கை (யாழ்.அக.); opinion.

*[Skt. sam-mata> த. சம்மதம்.]*

**சம்மதன்** *šammadaṉ,* பெ.(n.) 1. நண்பன்; friend. 2. மைத்துனன்; wife's brother.

*[Skt. sam-mata> த. சம்மதன்.]*

**சம்மதி**[1] *šammadi,* பெ.(n.) **சம்மதம், 1** பார்க்க; see *šammadam, "தனியேகச் சம்மதியின்றேல்" (சிவரக.கணபதியு.10).*

*[Skt. sam-mati> த. சம்மதி.]*

**சம்மதி²–த்தல்** *šammadi-* 4 செ.கு.வி.(v.i.) உடன்படுதல்; to agree, consent, acquiesce.

*[Skt. sam-mati> த. சம்மதீ²-.]*

**சம்மதி³–த்தல்** *šammati-,* 4 செ.குன்றாவி.(v.t.) நன்கு மதித்தல்; to esteem, regard, approve. *"சதுரமென்று தம்மைத் தாமே சம்மதித்து" (திவ்.திருவாய்.9. 1: 5).*

*[Skt. sam-mati> த. சம்மதி-.]*

**சம்மதிப்பு** *šammadippu,* பெ.(n.) உடன்பாடு (சம்மதம்) (வின்.); willingness, consent.

**த.வ. இணக்கம்**

*[Skt. sam-mati> த. சம்மதிப்பு.]*

**சம்மதிபத்திரம்** *šammadi-pattiram,* பெ.(n.) உடன்படிக்கை ஆவணம் (சாசனம்); (C.G.) deed of agreement.

*[Skt. sam-mati+patra> த. சம்மதிபத்திரம்.]*

**சம்மதிவசனம்** *šammadi-vašanam,* பெ.(n.) மேற்கோள் (இ.வ.); a text or except cited as authority.

*[Skt. sam-mati> த. சம்மதிவசனம்.]*

**சம்மந்தம்** *šammandam,* பெ.(n.) தொடர்பு (சம்பந்தம்) (வின்.); connection. உறவு relationship.

*[சம்பந்தம் + சம்மந்தம்.]*

**சம்மந்தி** *šammandi,* பெ.(n.) **சம்பந்தி** பார்க்க; see sambandi

**சம்மன்** *šamman,* பெ.(n.) நடுவர் மன்ற அதிகாரியின் அழைப்புக் கட்டளை; order to be issue by court officer.

**த.வ. அழைப்பாணை, விளியாணை**

*[E. summons> த. சம்மன்.]*

**சம்மனசு** *šammanašu,* பெ.(n.) தேவதூதன் (R.C.); divine spirit, angel.

*[Skt. su-manas> த. சம்மனசு.]*

**சம்மார்ச்சனம்** *šammārccanam,* பெ.(n.) துடைப்பத்தாற் பெருக்குகை (சங்.அக.); sweeping.

*[Skt. sammārjana> த. சம்மார்ச்சனம்.]*

**சம்மாரம்** *sammāram,* பெ.(n.) அழிவு; destruction.

*[Skt. saṃ-hāra> த. சம்மாரம்.]*

**சம்மானம்¹** *šammānam,* பெ.(n.) 1. முகமனுரை (உபசாரச் சொல்) (திவா.); compliment. 2. அன்பளிப்பு; gift, reward, present. *"பாடிப் பறை கொண்டு யாம்பெறு சம்மானம்" (திவ்.திருப்பா.27).* 3. இறையிலி நிலம் (வின்.); land exempt from tax.

*[Skt. sam-māna> த. சம்மானம்.]*

**சம்மிதை** *šammidai,* பெ.(n.) 1. ஏதாவதொரு கலையைப் பற்றிக் கூறும் நூல், சாரங்கதர சம்மிதை; a treatise on any branch of knowledge or science, for example sarangadara sammidah, an Ayurvedic science. 2. சரகசம்மிதை; a medical treatise by charaka (சா.அக.).

**த.வ. நூல், பொத்தகம்**

**சம்மியஞானம்** *šammiyañānam,* பெ.(n.) பேரறிவு; supreme wisdom (சா.அக.).

**சம்மிராட்டு¹** *šammirāṭṭu,* பெ.(n.) தனியாணைப் பேரரசன்; supreme ruler, paramount sovereign.

*[Skt. sam-rāṭ> த. சம்மிராட்டு.]*

**சம்மிராட்டு²** *šammirāṭṭu,* பெ.(n.) ஆண்டொன்றுக்கு வெண்பொற்காசுகள் ஒரு கோடிக்கு மேல் பத்துக்கோடி வரை வருவாயாக வுடைய அரசன் (சுக்கிரநீதி,26); king whose annual revenue is above 1 crore and below 10 crores of silver coins.

*[Skt. samrāṭ> த. சம்மிராட்டு.]*

**சம்மேளனம்** *šammēḷanam,* பெ.(n.) 1. கலப்பு; mixing intermingling. 2. கூட்டம் (இக்.வ.); conference.

[Skt. sam-mēlana> த. சம்மேளனம்.]

**சம்மோகம்** *šammōgam,* பெ.(n.) **சம்மோகனம்** பார்க்க; see *šammōganam.*

**சம்மோகனம்** *šammōganam,* பெ.(n.) ஈர்ப்பு, (அ) வயப்படுத்துகை (வசீகரம்); fascination, delusion, infatuation.

[Skt. sammōhana> த. சம்மோகனம்.]

**சம்யுக்தசமவாயம்** *šamyukta-šamavāyam,* பெ.(n.) அயல்வழித் தொடர்பு; intimate relation with that which is in direct contact with another.

[Skt.sam-yukta+samavāya>த. சம்யுக்த சமவாயம்.]

**சம்யுக்தாட்சரம்** *šamyuktāṭcaram,* பெ.(n.) வடமொழிக் கூட்டு மெய்யெழுத்து; conjunct consonant in Sanskrit.

த.வ. மெய்ம்மயக்கம்

[Skt.sam-yukta+akṣara> த. சம்யுக்தாட் சரம்]

**சம்யோகசம்பந்தம்** *šamyōga-sambandam,* பெ.(n.) இருபொருள்கள் கூடியிருத்ததால் ஏற்படும் தொடர்பு; direct material contact.

[Skt. saṃ-yōga+sam-bandhaṃ > த. சம்யோகசம்பந்தம்.]

**சம்யோகம்** *šamyōgam,* பெ.(n.) 1. சேர்க்கை; combination, union. *"அவனது ஞானசக்தி சம்யோகத்தால்" (சி.சி.பாயி.5, சிவாக்.).* 2. புணர்ச்சி; copulation. 3. **சம்யோக சம்பந்தம்** பார்க்க; see *šamyōga-šambandam.*

[Skt. saṃ-yōga> த. சம்யோகம்.]

**சம்ரட்சணம்** *šamraṭcaṇam,* பெ.(n.) காப்பாற்றுகை; preservation, maintenance, protection.

[Skt. samrakṣaṇa> த. சம்ரட்சணம்.]

**சம்ரட்சணை** *šamraṭcaṇai,* பெ.(n.) **சம்ரட்சணம்** பார்க்க; see *šamraṭcaṇam.*

**சம்ரட்சி-த்தல்** *šamraṭci-,* 4 செ.குன்றாவி. (v.t.) காப்பாற்றுதல்; to maintain, support, protect.

[Skt. samrakṣ> த. சம்ரட்சி-.]

**சம்ரம்பம்**[1] *šamrambam,* பெ.(n.) பரபரப்பு; activity. *"கிரியாசத்தி சம்ரம்பத்தோடு அகங்காரங் கிளம்பி" (சி.சி.2 : 62, ஞானப்.).*

[Skt. saṃ-rambha> த. சம்ரம்பம்.]

**சம்ரம்பம்**[2] *šamrambam,* பெ.(n.) முயற்சி (அஷ்டப்பிர.80); diligence.

[Skt. samrambha> த. சம்ரம்பம்.]

**சம்வகம்** *šamvagam,* பெ.(n.) ஏழு மருந்துகளுள் ஒன்று; one of *capta-marundu.*

[Skt. saṃ-vaha> த. சம்வகம்.]

**சம்வச்சரம்** *šamvaccaram,* பெ.(n.) ஆண்டு; year. *"அறுபதினாயிரம் சம்வச்சரபலன்" (இராமநா.).*

த.வ. யாண்டு

[Skt. saṃ-vatsara> த. சம்வச்சரம்.]

**சம்வத்சரவாரியம்** *šamvatcara-vāriyam,* பெ.(n.) ஆண்டுதோறும் தெரிந்தெடுக்கப்படும் சிற்றூர் செயற்பாட்டவை (நிருவாக சபை) (I.M.P.Rd.241); supervising committee elected annually by a village assembly.

[சம்வத்சர+வாரியம்]

[Skt. saṃ-vatsara> த. சம்வத்சர]

**சம்வர்த்தம்** *šamvarttam,* பெ.(n.) 1. ஏழு முகில்களுள் (சத்த மேகங்களுள்) மணி பொழியும் முகில் (பிங்.); a celestial cloud which rains gems, one of *catta-mēgam.* 2.வடமொழியிலுள்ள அறநூல் பதினெட்டனுள் ஒன்று; a Sanskrit text-book of Hindu law, one of 18 *taruma-nūl,.*

[Skt. saṃ-varta> த. சம்வர்த்தம்.]

**சம்வரம்** *šamvaram,* பெ.(n.) **சம்வரை** பார்க்க; see *šamvarai.*

**சம்வரை** *šamvarai,* பெ.(n.) ஒன்பது வகைக் கறி யுணவில் ஆதனை வினை அணுகவொட் டாதபடி தடுப்பது (சீவக.2814, உரை); (Jaina.) that which impedes the inflow of karma into the soul, one of *nava-padārttam.*

*[Skt. saṃ-vara> த. சம்வரை.]*

**சம்வற்சரம்** *šamvaṟcaram,* பெ.(n.) **சம்வச்சரம்** பார்க்க; see *šamvaccaram.*

**சம்வன்னம்** *šamvaṉṉam,* பெ.(n.) தன்வய மாக்குதல் (வசிகரித்தல்); to gain love (சா.அக.).

**சம்வாகம்** *šamvāgam,* பெ.(n.) நெல்லும் புல்லும் நிறைந்த மலையூர் (தி.வா.); fertile town on a hill abounding in paddy, etc.

*[Skt. saṃ-vāha> த. சம்வாகம்.]*

**சம்வாதம்** *šamvādam,* பெ.(n.) 1. தருக்கம்; disputation, debate. 2. **சம்பாசணம்** பார்க்க; see *šambāšaṉam.*

*[Skt. saṃ-vāda> த. சம்வாதம்.]*

**சம்வாதிசுரம்** *šamvādišuram,* பெ.(n.) வாதி இசையுடன் (சுரம்) ஒத்தொலிக்கும் பண் (சுரம்) (Mus. of India. P. 26); a note which is in consonance with the *vātsvaram.*

*[Skt.saṃvādi+svara>த. சம்வாதிசுவரம்.]*

**சம்வாரம்** *šamvāram,* பெ.(n.) உதட்டுச் சுருக்கம்; compression of lips (சா.அக.).

**சம்வித்து** *šamvittu,* பெ.(n.) அறிவு; consciousness, intelligence. *"இந்திரியாதி களனைத்தினும் வியாபித்து நிற்கும் சம்வித்து" (சிவசம.42).*

*[Skt. saṃ-vit> த. சம்வித்து.]*

**சம்விற்பத்திரம்** *samviṟ-pattiram,* பெ.(n.) அரசர்கள் தம்முட் பகைமையின்றி ஒத்து வாழ்வதற்கு, எழுதிக் கொள்ளும் ஆவணம் (சுக்கிரநீதி, 94); treaty of friendship and co-operation between kings.

*[Skt. saṃ-vit+patra> த. சம்விற்பத்திரம்.]*

**சம்வேகம்** *šamvēgam,* பெ.(n.) அறத்திலும் அறப்பயனிலும் ஆசையுடைமை (சீவக.3133, கீழ்க்குறிப்பு); (Jaina.) desire of virtue and its fruits.

*[Skt. saṃ-vēga> த. சம்வேகம்.]*

**சமக்காளம்** *šama-k-kāḷam,* பெ.(n.) விரிப்பு வகை (இ.வ.); carpet.

*[U. jamkāna> த. சமக்காளம்.]*

**சமக்கிரதம்** *šamakkiradam,* பெ.(n.) வடமொழி (சமற்கிருதம்); Sanskrit language. *"பாவினங்களுட் சமக்கிரதமும் வேற்றுப்பாடையும் விரவிவந்தால்" (யாப்.வி. பக். 461).*

*[Skt. saṃ-s-kṛta> த. சமக்கிரதம்.]*

**சமக்கிரமாய்** *šamakkiram-āy,* பெ.(n.) நிறைவாய்; fully, completely.

*[Skt. samagra> சமக்கிரம் + ஆய் > த. சமக்கிரமாய்.]*

**சமகலி** *šamagali,* பெ.(n.) உடல் அசைவுகளுள் ஒன்று (சிலப்.பக்.81); (*Nāṭya*) a gesticulation of the limbs.

*[Skt. sama-skhalatikā> த. சமகலி.]*

**சமகோலம்** *šama-kōlam,* பெ.(n.) பாம்பு; snake (சா.அக.).

**சமசத்தமம்** *šama-šattamam,* பெ.(n.) வியாழன் நின்ற ஓரை (இராசி)க்கு ஏழாம் ஓரை (இராசி)யிலே வெள்ளி (சுக்கிரன்) நிற்கும் நிலை; (Astrol.) horoscopic position in which Venus occupies the seventh house from that of Jupiter. *"பொன்னவனின்ற ராசிக் கேழதாய்ப் புகன்ற ராசி தன்னிலே வெள்ளி நின்றாற் சமசத்தமப்பே ராகும்" (சங்.அக.).*

*[Skt. sama+saptama> த. சமசத்தமம்.]*

**சமசம்** *šamašam,* பெ.(n.) ஒருவகை மது (சோமரசம்) வைத்தற்குரிய கைப்பிடியுள்ள வேள்வியேனம்; a sacrifical vessel with a handle for keepinhg *šōma* juice.

"வேள்வியிற் சமசம்போலும்" (காஞ்சிப்பு. ஒழுக்கப்.03).

[Skt. camasa> த. சமசம்.]

**சமசாதி** *šama-šādi,* பெ.(n.) ஒத்த இனத்தார் (இ.வ.); homogeneous race.

[Skt. sama+jāti> த. சமசாதி.]

**சமசி**[1] *šamaši,* பெ.(n.) நிறைவு; முடிவு (பூர்த்தி) (வின்.); completeness, fulness.

[Skt. samṛddhi> த. சமசி.]

**சமசி**[2] *šamaši,* பெ.(n.) **சமசை** பார்க்க; see *šamašai.*

**சமசு** *šamašu,* பெ.(n.) கலகக் கூட்டம் (இ.வ.); seditious assembly, faction, junto.

[Skt. samāja> த. சமசு.]

**சமஞ்சசம்** *šamañjašam,* பெ.(n.) உருவொப்புமை; conformity, resemblance. "பொன் சமஞ்சஸங் காண்பதற்கு" (S.I.I.vi., 149).

[Skt. samañ-jasa> த. சமஞ்சசம்.]

**சமஞ்சிதன்**[1] *šamañjidan,* பெ.(n.) ஊர் அல்லது ஊரவையின் (சபையின்) கணக்கன்; accountant of a village or its assembly. "திருவனந்தபுரத்துச் சபையும் சமஞ்சிதனும்... கூடி" (T.A.S.II, 174).

[Skt. samañcita> த. சமஞ்சிதன்.]

**சமஞ்சிதன்**[2] *šamañjitan,* பெ.(n.) கோயில் வேலைக்காரன் (S.I.I.v, 339); temple servant.

[Skt. samañcita> த. சமஞ்சிதன்.]

**சமட்சம்** *šamaṭcam,* பெ.(n.) நேருரை (இ.வ.); presence.

[Skt. sam-akṣam> த. சமட்சம்.]

**சமட்டியாத்தி** *šamaṭṭiyātti,* பெ. (n.) தொகுபடு (அவிபக்த) சொத்து (கொ.வ.); joint or undivided property.

[Skt. samaṣṭi+āoti> த. சமட்டியாத்தி.]

**சமத்காரம்** *šamat-kāram,* பெ.(n.) 1. பேச்சுத் திறமை; cleverness, skill in speaking. 2. செய்யுணயம்; poetic charm. 3. தோற்றம்; aspect, manifestation. "சொரூபத்தியற் சமத்காரந்தான்" (ஞானவா.வில்வ.12).

[Skt. camat-kāra> த. சமத்காரம்.]

**சமத்தம்** *šamattam,* பெ.(n.) எல்லாம்; all, everything.

[Skt. samasta> த. சமத்தம்.]

**சமத்தானபதி** *šamattānapadi,* பெ.(n.) அரசன்; ruler of a state, king, chief.

[Skt.saṃ-sthāna+pati>த.சமத்தானபதி.]

**சமத்தானம்** *šamattānam,* பெ.(n.) 1. அரசாண்மை நிலம் (அ) ஆள்புலம் (இராச்சியம்); kingdom, state, dominion. 2. தலைநகரம் (வின்.); place of residence, especially of a king or chief; capital.

[Skt. saṃsthāna> த. சமத்தானம்.]

**சமத்தானவித்துவான்** *šamattāna-vittuvān,* பெ.(n.) அரசவைப் புலவன்; poet-laureate, court poet.

[Skt. saṃsthāna+vidvān→ த. சமத்தானவித்துவான்]

**சமத்தானாதிபதி** *šamattānādipadi,* பெ.(n.) **சமத்தானபதி** பார்க்க; see *samattānapadi.*

[Skt. saṃsthāna + adhi-pati > த. சமத்தானாதிபதி]

**சமதக்கினி** *šamadakkini,* பெ.(n.) பரசுராமனது தந்தையாகிய முனிவர்; a *Rṣi* father of *Parašurāman.*

[Skt. jamadagni> த. சமதக்கினி.]

**சமதரிசி** *šama-darisi,* பெ.(n.) பொது நோக்குடையவன் (இ.வ.); one who views impartially.

[Skt. sama-darši> த. சமதரிசி.]

**சமதன்**[1] *šamadan,* பெ.(n.) **சம்மதன், 1** பார்க்க; see *šammadan.*

**சமதன்**[2] *šamadan,* பெ. (n.) பொறிவாய விப்பவன் (சங்.அக.); one who enables another to subdue his senses.

*[Skt. šama-da> த. சமதன்².]*

**சமதானநிலை** *šama-dāna-nilai,* பெ.(n.) சமனிசை (மத்தியஸ்தாயி.); middle octave.

*[சமதானம்+நிலை]*

*[Skt.sama+sthāna> சமதானம்]*

**சமதிருட்டி** *šama-dirutti,* பெ.(n.) அதி காலையில் வியாழன் மறைய, வெள்ளி உதிக்கும் நன்றல்லா (தோஷ) காலம் (விதான. குணாகுண.49); inauspicious time in early mornings when Venus rises just as Jupiter sets.

*[Skt. sama+drsti> த. சமதிருட்டி.]*

**சமதீதம்**[1] *šamadidam,* பெ.(n.) கழிந்தது (சங்.அக.); that which is past.

*[Skt. sam-atita> த. சமதீதம்.]*

**சமதீதம்**[2] *šamadidam,* பெ.(n.) ஒன்றியம் (ஐக்கியம்) (யாழ்.அக.); union.

*[Skt. samati-tā> த. சமதீதம்.]*

**சமந்தகம்** *šamandagam,* பெ.(n.) கண்ண பிரான் கழுத்தில் அணிந்த தெய்வமணி வகை; a gem of miraculous virtue worn by *Krsna* on his neck.

*[Skt. syamantaka> த. சமந்தகம்.]*

**சமந்தகமணி** *šamandaga-mani,* பெ.(n.) **சமந்தகம்** (பாகவத.10, சத்தியாபா, 7) பார்க்க; see *šamandagam.*

*[Skt. samantaka + த. மணி> த. சமந்தகமணி]*

**சமந்தகவிரத்னம்** *šamandaga-v-iratnam,* பெ.(n.) **சமந்தகம்** பார்க்க; see *šamandagam. "சமந்தக விரத்னந் தாவென" (பிரபோத.26 : 34).*

*[Skt.syamantaka+ratna>த.சமந்தகவிரத்னம்]*

**சமந்தபத்திரன்** *šamandapattiran,* பெ.(n.) புத்த தேவன்; lord Buddha.

*[Skt.samanta-bhadra > த.சமந்தபத்திரன்.]*

**சமமுகம்** *šama-mugam,* பெ.(n.) முகநளிநயம் (அபிநயம்) பதினான்கனுள் ஊழ்கஞ்செய்வது (தியானிப்பது) போல அசையாது நேர்முக மாயிருக்கும் நளிநயம் (அபிநயம்) (சது.); (*Nātya*) holding one's head erect and steady as if in contemplation, one of 14 *muga-v-abi-nayam,* q.v.

**சமமூலம்** *šama-mūlam,* பெ.(n.) வளையலுப்பு; glass gall-felvitri (சா.அக.).

**சமர்ச்சனம்** *šamarccanam,* பெ.(n.) வழி படுகை (இ.வ.); worshipping, offering obeisance.

*[Skt. sam-arccana> த. சமர்ச்சனம்.]*

**சமர்த்தம்** *šamarttam,* பெ.(n.) அறநூல்களில் (சுமிருதிகளில்) நெறிப்படுத்திய சடங்கு; rites prescribed by the smrtis. *"சமர்த்தமென்றும் புகழ்ந் தெவருமேத்துந் தருமம்" (கூர்மபு. அழற்கரும.5).*

*[Skt. smārta> த. சமர்த்தம்.]*

**சமர்ப்பணம்** *šamarppanam,* பெ.(n.) கடவுளர் - பெரியோர்களுக்குக் காணிக்கை முதலாயின அளிக்கை; dedication, votive offering.

த.வ. படையல்

*[Skt. samarppana> த. சமர்ப்பணம்.]*

**சமர்ப்பணை** *šamarppanai,* பெ.(n.) **சமர்ப்பணம்** பார்க்க; see *šamarppanam.*

**சமர்ப்பி-த்தல்** *šamarppi-,* 4 செ.குன்றாவி. (v.t.) கடவுளர் - பெரியோர்களுக்குக் காணிக்கை முதலாயின அளித்தல்; to offer, as to God; to dedicate, as a book. *"ஈசனிடத் தெப்பொருளுஞ் சமர்ப்பித்து" (ஞானவா.அருச்.13).*

த.வ. படை-த்தல்

*[Skt. samarppi> த. சமர்ப்பி-.]*

**சமரதம்** *śama-radam,* பெ.(n.) நால்வகைத் தேர்(இரதம்)களுள்ஒன்று (பத்ம.தென்றல் விடு.67, உரை); a class of chariots, one of four *iradam*.

*[Skt. samaratha> த. சமரதம்.]*

**சமரதி** *śama-radi,* பெ.(n.) கலவி வகை; a mode of sexual enjoyment.

*[Skt. samarati> த. சமரதி.]*

**சமரவி** *śama-ravi,* பெ.(n.) கோள்களின் நடுநிலையைக் குறிக்கும் கதிரவன் நிரைகோடு, (வின்.); (Astron.) sun's true longitude as the middle of an eclipse.

*[Skt. samaravi> த. சமரவி.]*

**சமரிக்கேசு** *śamari-k-kēśu,* பெ.(n.) சுருக்கமாக உசாவுகை (விசாரணை) செய்யப்படும் வழக்கு (இ.வ.); a judicial enquiry conducted summarily.

*[E. summary +case> த. சமரிக்கேசு.]*

**சமலம்** *śamalam,* பெ.(n.) 1. மலம்; ordure, refuse. 2. அழுக்கு (யாழ்.அக.); impurity.

*[Skt. sa-mala> த. சமலம்.]*

**சமலன்** *śamalaṉ,* பெ.(n.) (மலத்தோடு கூடியவன்) சிற்றுயிர் (சீவான்மா); soul, as being with malam. *"சமலர்க்குப் பாசந் தடுத்து" (சைவச.ஆசா.23).*

*[Skt. sa-mala> த. சமலன்.]*

**சமலாவத்தை** *śamalāvattai,* பெ.(n.) ஆதன் (ஆன்மா) மலத்தோடு கூடியிருக்கும் பொழுது அடையும் நிலை (சி.சி.4, 36, மறைஞா.); (*Śaivam*) condition of the soul when it is subject to malam.

*[Skt. sa-mala+avasthā> த. சமலாவத்தை.]*

**சமவசரணம்** *śamavaśaraṇam,* பெ.(n.) கேவலியிடமிருந்து அறிவுரை பெறுதற்குப் பூமிக்குமேலே 5000 விற்கிடைத் தூரத்தில் தேவர்களால் உருவா(நியமி)க்கப்பட்ட சினாலயம் (Jaina.); heavenly pavilion erected by the Gods at a distance of 5000 bow lengths above the earth for receiving sacred instructions from *kēvali*, the perfected soul. *"சமவசரணச்சருக்கம்" (மேருமந்.).*

*[Skt. sama-vaśaraṇa> த. சமவசரணம்.]*

**சமவாகாரம்** *śama-vāgāram,* பெ.(n.) தேவர் அரக்கர்களுடைய வீரச் செயல்களைக் காட்டுவதாய் மூன்று உறுப்புகளைக் (மூன்றங்களைக்) கொண்ட உருவக வகை (சிலப்.பக்.84); (Drama) species of drama in three acts representing the heroic deeds of gods or demons, one of ten *rūpagam*, q.v.

*[Skt. sam-avākāra> த. சமவாகாரம்.]*

**சமவேதசமவாயம்** *śamavēda-śamavāyam,* பெ.(n.) காட்சிக்குக்கரணியமான பொறி புலத் தொடர்பு (சன்னிகரிடம்) ஆறுனுள் நீக்கமின்றியிருப்பதனோடு நெருங்கியுள்ள நற்றொடர்பு (தருக்கசங்.நியாய.31); (log.) intimate relation of an object with that which is intimately united with another, one of six *caṉṉikaridam*, q.v.

*[Skt. sam-avēta+sam-avāya> த. சமவேத சமவாயம்.]*

**சமற்கிருதம்** *śamaṟ-kirudam,* பெ.(n.) வடமொழி; the Sanskrit language.

*[Skt. saṃs-kṛta> த. சமற்கிருதம்.]*

**சமன்சாரிசெய்-தல்** *śamaṉsāri-śey-,* 1 செ.கு.வி.(v.i.) அழைப்பாணை (சம்மன்) நிறைவேற்றுதல் (கொ.வ.); to serve summons.

*[E.summons>த. சம்மன்→த.சமன்+சாரிசெய்- .]*

**சமனத்துவயம்** *śamaṉa-t-tuvayam,* பெ.(n.) ஒரு மூலிகை; an unknown drug (சா.அக.).

**சமாக்கினி** *śamākkiṉi,* பெ.(n.) 1. வயிற்றுத்தீ; want of the chief solvent fluid in the digestive process. 2. இயல்பான பசி; moderate-appetite (சா.அக.).

**சமா** *šamā,* பெ.(n.) குழுமம்; company.

*[U. jamā> த. சமா.]*

**சமாகமம்** *šamāgamam,* பெ.(n.) சேர்க்கை; union.

*[Skt. sam-ā-gama> த. சமாகமம்.]*

**சமாகிதம்** *šamāgidam,* பெ.(n.) ஒருவன் முயலுந்தொழிலின் பயன் அத்தொழிலாற் கைகூடாது (சித்தியாகாது) வேறொன்றாற் கைகூடுவதாகக் கூறும் அணி (தண்டி.71); (Rhet.) figure of speech in which an effect is described as proceeding from something other than its natural cause.

**த.வ. அயற்காரணஅணி**

*[Skt. sam-ā-hita> த. சமாகிதம்.]*

**சமாகோராத்திரம்** *šamāgōrāttiram,* பெ.(n.) பகலிரவுகள் நாழிகையளவில் ஒத்தநாள் (பாண்டி.); equinox.

**த.வ. நடுநாள்**

*[Skt.sama+ahōrātra>த. சமாகோராத்திரம்.]*

**சமாச்சிரயம்** *šamācciraуam,* பெ.(n.) ஆற்றலில்லாத ஒருவன் தன்னைக் காப்பாற்று பவனைச் சார்ந்தொழுகை (சுக்கிரநீதி, 336); dependence of a weak person upon his protector.

**த.வ. புகலிடச்சார்பு**

*[Skt. sam-ā-šraya> த. சமாச்சிரயம்.]*

**சமாசம்**[1] *šamašam,* பெ.(n.) அவை (சபை); assembly, association.

*[Skt. sam-āja> த. சமாசம்[1].]*

**சமாசம்**[2] *šamāšam,* பெ.(n.) தொகைமொழி; (Gram.) compound word. *"நன்மொழியா னுரைத்தார்கள் சமாசம்" (வீரசோ.தொகை.6).*

**த.வ. தொகை**

*[Skt. samāsa> த. சமாசம்.]*

**சமாசம்**[3] *šamāšam,* பெ.(n.) நஞ்சு வகைகளில் ஒன்று (யாழ்.அக.); a mineral poison.

**சமாசன்** *šamāšan,* பெ.(n.) **சமாசம்**[2] பார்க்க; see *šamāšam. "கற்பவர் கூறுஞ் சமாசன்களே" (பி.வி.20).*

**சமாசாரபத்திரிகை** *šamāšāra-pattirigai,* பெ.(n.) வணிகச் செய்தித்தாள் (இக்.வ.); newspaper.

**த.வ. செய்தித்தாள்**

*[Skt.sam-ā-cāra+patrikā> த. சமாசாரப் பத்திரிகை.]*

**சமாசாரம்** *šamāšāram,* பெ.(n.) செய்தி; news, intelligence, information.

*[Skt. sam-ā-cāra → த. சமாசாரம்.]*

**சமாசிரயணம்** *šamāširayaṇam,* பெ.(n.) சமயத் தலைவன் (ஆசாரியன்) சங்கு சக்கர முத்திராதானஞ் செய்து மாலியம் (வைணவத்துவம்) அளிக்கும் சடங்கு; initiation ceremony in which a priest brands upon his disciple's shoulders the marks of discus and conch.

*[Skt. samā-šrayaṇa> த. சமாசிரயணம்.]*

**சமாசிரயம்** *šamāširayam,* பெ.(n.) பால்; milk (சா.அக.).

**சமாசோக்தி** *šamā-šōkti,* பெ.(n.) 1. ஒட்டணி (தண்டி.51, உரை); (Rhet.) a figure of speech. 2. அடைமொழி ஒப்புமையாற்றல் களால் அல்பொருட் செய்தி தோன்றப் புகழ்பொருட் செய்தியைச் சொல்லும் அணி (அணியி.23); (Rhet.) a figure of speech in which the description of an object in question suggests something else owing to similarity in action or attributes.

**த.வ. அல்பொருளணி**

*[Skt. samāsōkti> த. சமாசோக்தி.]*

**சமாதானக்கொடி** *šamādāṉa-k-koḍi,* பெ.(n.) அமைதியைத் (சமாதானத்தை) தெரிவிக்குங் கொடி (வின்.); flag of truce.

த.வ. அமைதிக்கொடி

*[Skt. sam-ā-dhāna +த. கொடி > த. சமாதானக் கொடி.]*

**சமாதானத்தினாவி** *šamādāṉa-t-tiṉāvi,* பெ.(n.) அமைதியின் அதிதேவதை (கிறித்.); the spirit of peace.

*[Skt. sam-ā-dhāna > த. சமாதானத் தினாவி.]*

**சமாதானநீதிவான்** *šamādāṉa-nidivāṉ,* பெ.(n.) நயன்மை (நீதி) அதிகாரி (J.); justice of the peace.

த.வ. நயனாளன், நாயன்

*[Skt. sam-ā-dhāna+niti > த. சமாதான நீதிவான்.]*

**சமாதானம்**[1] *šamādāṉam,* பெ.(n.) 1. அமைதி; peace, tranquillity, equanimity. 2. உடன்பாடு; reconciliation, compromise. 3. தடைக்குவிடை; answer to an objection; explanation. 4. இன்பதுன்பங்களைப் பொருட்படுத்தாத மனநிலை (வின்.); stoicism; indifference to pain or pleasure, as of a yogi or sage. 5. இறைவிருப்பு (சமாதி சட்கசம்பத்துள்) கொள்கைகளுள் ஒன்றான சிந்தனை எளிதாக நிகழுமாறுள்ள மனநிலை; (Phil.) state of mind which facilitates contemplation, one of *šamādi-caṭka-šambattu,* q.v. *"சித்தஞ் சிந்திக்கு மாறு சரசமாய்வைக்குமித்தைச் சமாதான மென்பர்" (கைவல்.தத்துவ.10).* 6. உடன்பாடு (வின்.); consent, agreement.

*[Skt. sam-ā-dhāna> த. சமாதனம்.]*

**சமாதானம்**[2] *šamādāṉam,* பெ.(n.) மனவொருக்கம் (நாநார்த்த.909); concentration of mind.

*[Skt. sam-ā-dāna> த. சமாதானம்.]*

**சமாதானலங்கனம்** *šamādāṉa-laṅgaṉam,* பெ. (n.) அமைதிக்கேடு உண்டாக்குகை (இ.வ.); breach of peace.

*[Skt. sam-ā-dhāna+laṅghana> த.சமாதானலங்கனம்]*

**சமாதானி** *šamādāṉi,* பெ.(n.) நடுக் கற்றவன்–ள் (யாழ்.அக.); even-tempered person.

*[Skt. sam-ā-dāna> த. சமாதானி.]*

**சமாதி** *šamādi,* பெ.(n.) 1. எண்ணுறுப்பு ஒகங்களுள் மனத்தைப் பரம்பொருளோடு, ஒன்றிணைத்து நிறுத்துகை (சிலப்.14, 11, உரை); (*yōga*) intense contemplation of God, identifying oneself with him, one of *aṣṭāṅga-yōgam.* 2.மனவுறுதி (சங்கற்பம்); will, as of God. *"பிஞ்ஞுகன் சமாதியாலே" (திருவாலவா.16:5).* 3. **கல்லறைக்குழி** பார்க்க; see *kallaṟai-k-kuḻi.* 4. தொழுநோயாளியை உயிருடன் புதைக்கை; burial alive of a leper (R.E.). 5. ஒன்றன் வினையை, ஒப்புடைப் பொருள்மேல் ஏற்றிச் சொல்லுகையாகிய செய்யுட் குணம் (தண்டி.24); (Rhet.) attribution of a deed to a person or thing other than its agent, a merit of poetic composition.

த.வ. 1. மனவொழுக்கம், 2. கல்லறை

*[Skt. samādhi > த. சமாதி.]*

**சமாதிக்கல்**[1] *šamādi-k-kal,* பெ.(n.) கல்லறையை மூடுங்கல்; tomb-stone.

*[Skt. samādhi > சமாதி + த. கல் > த. சமாதிக்கல்.]*

**சமாதிக்கல்**[2] *šamādi-k-kal,* பெ.(n.) மணிக்குடல் (மூ.அ.); small intestines.

**சமாதிக்குழி** *šamādi-k-kuḻi,* பெ.(n.) 1. நிமிர்ந்து உட்கார்ந்த நிலையிலேயே இறந்த துறவியை அடக்கஞ் செய்யுங் குழி; grave for interring the remains of an ascetic in an

erect sitting posture. 2. கல்லறை; grave. "அவனுமொளித்தான் சமாதிக்குழி புகுந்தே" (தனிப்பா.i, 238, 8).

[Skt. samādhi>சமாதி+த.குழி>த.சமாதிக்குழி.]

**சமாதிகநீர்** *šamādiga-nīr,* பெ.(n.) சித்தர்கள் கமுக்கமாய் உருவாக்கும் ஐங்காயச் செயநீர்; a pungent liquid extracted from a foetus by a secret process known only to siddhars (சா.அக.).

**சமாதிசட்கசம்பத்து** *šamādi-šaṭka-šampattu,* பெ.(n.) சமம், தமம், விடல் அல்லது உபரதி, சகித்தல் அல்லது திதிட்சை, சமாதானம், சிரத்தை என்ற அறுகுணங்களும் நிறைகை யாகிய கோட்பாடு (கைவல்.தத்துவ.9); (Phil.) the six principles of conduct, considered as wealth, viz., *šamam, tamam, viḍal (or) ubaradi, šagittal (or) tititcai, šamādāṉam, šrattai,* one of *šādaṉa-šaduṣṭayam* q.v.

*[Skt. šama+ādi+ṣaṭka+sam-pad> த. சமாதிசட்கசம்பத்து.]*

**சமாதிட்டன்** *šamādiṭṭaṉ,* பெ.(n.) **சமாதிமான்** பார்க்க; see *šamādimāṉ.*

*[Skt. samādhi+stha> த. சமாதிட்டன்.]*

**சமாதிபெறு-தல்** *šamādi-peṟu-,* 5 செ.கு.வி. (v.i.) குருவினிடம் ஊழ்கவொருக்கம் (தியானநிட்டை) பெறுதல் (வின்.); to get initiated into yogism.

**த.வ. ஊழ்கநிறைபெறுதல்**

*[Skt. samādhi+த. பெறு> த. சமாதி + பெறு-.]*

**சமாதிமான்** *šamādimāṉ,* பெ.(n.) தவத்திலிருப்பவன் (சங்.அக.); person absorbed in the contemplation of God, yogi.

**த.வ. ஓகி, தவசி**

*[Skt. samādhi-mān> த. சமாதிமான்.]*

**சமாதியடை-தல்** *šamādi-y-aḍai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. அகவழிபாட்டு வழிமுறை (ஓக) நிலையில் அமர்தல்; to sit in yogic contemplation. 2. வீடுபேறு (சித்தி) பெறுதல்; to die, said euphemistically an ascetic.

*[சமாதி+அடை-தல்.]*

*[Skt. samādhi> சமாதி]*

**சமாதியில்வை-த்தல்** *šamādiyil-vai-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. இறந்த துறவி முதலியோரை அமர வைத்துப் புதைத்தல்; to bury in a sitting posture, as the remains of an ascetic. 2. கேடுசெய்தல் (இ.வ.); to slay, crush out utterly.

**த.வ. அமர்வுஅடக்கம்**

*[சமாதி+இல்+வை+(த்)தல்]*

*[Skt. samādhi> சமாதி]*

**சமாதியுப்பு** *šamādi-y-uppu,* பெ.(n.) 1. உடம்பு அழுகாதிருத்தற்பொருட்டு கல்லறையில் இடும் உப்பு; salt cast into the grave at interment to prevent putrefaction. 2. நல்லடக்கம் (சமாதி) செய்த இடத்தினின்று எடுக்கும் உப்பு; salt from a corpse taken some years after burial.

*[சமாதி+உப்பு]*

*[Skt. samadhi > சமாதி]*

**சமாப்தி** *šamāpti,* பெ.(n.) முடிவு; end, conclusion, completion.

*[Skt. sam-āpti> த. சமாப்தி.]*

**சமாபந்தி** *šamāpandi,* பெ.(n.); அரசுக்குச் செலுத்த வேண்டிய வரிப்பணத்தைக் குறித்து ஏற்படும் யாண்டிறுதி வருவாய்க் கணிப்பு; annual settlement of revenue.

**த.வ. ஆண்டுவரிக்கணிப்பு, வரித்தணிக்கை**

*[U. jamābandi> த. சமாபந்தி.]*

**சமாபந்தித்தீர்ப்பு** *samābandi-t-tīrppu,* பெ.(n.) தீர்மானங்கள் (W.G.); orders or particulars of revenue orders at *šamāpandi.*

[சமாபந்தி+தீர்ப்பு]

[U. jamābandi > த. சமாபந்தி]

**சமாபனம்** *šamāpaṉam,* பெ.(n.) **சமாப்தி** பார்க்க; see *šamāpti.*

[Skt. sam-ā-pana > த. சமாபனம்.]

**சமாய்-த்தல்** *šamāy-,* 4 செ.கு.வி.(v.i.) ஒரு செயலைத் திறமையோடு செய்தல் (இ.வ.); to do excellently.

த.வ. திறனாடல்

[U. jamāi > த. சமாய்-.]

**சமாராதனை** *šamārādaṉai,* பெ. (n.) பார்ப்பனர் உணவு (பிராமண போசனம்) (Brah.); feeding of Brahmins.

த.வ. பார்ப்புணவு

[Skt. sam-ā-rādhana > த. சமாராதனை.]

**சமால்கொட்டை** *šamāl-koṭṭai,* பெ.(n.) 1. நேர் வாளவிதை; croton seed. 2. இன்புலவு வகை (இக்.வ.); a kind of sweet meat.

[சமால்+கொட்டை]

[U. jamāl+ > த. சமால்]

**சமாலம்பம்** *šamālambam,* பெ.(n.) பூசுகை (சங்.அக.); smearing; coating.

[Skt. samā-lambha > த. சமாலம்பம்.]

**சமாலேபனம்** *šamālēbaṉam,* பெ.(n.) சாணியால் மெழுகுகை (சங்.அக.); cleansing floor with cow-dung solution.

[Skt. sam-ā-lēpana > த. சமாலேபனம்.]

**சமாவர்த்தனம்** *šamāvarttaṉam,* பெ.(n.) பதினாறு (சோடச) நோன்புகளுள் குருவினிடமிருந்து (ஆசாரியனிடமிருந்து) மறை (வேதம்) ஓதி, மீண்டு வந்ததும் மாணியநோன்பு (பிரமசரிய விரதம்) நீங்கும்படி செய்யும் சடங்கு (சீவக.822, உரை); ceremony observed on the return home of a *Brahmacārin* after finishing his *Vēdic* studies at his preceptor's house, one of *šōḍaca-camskāram,* q.v.

[Skt. sam-ā-vartana > த. சமாவர்த்தனம்.]

**சமாவர்த்தனை** *šamāvarttaṉai,* பெ.(n.) **சமாவர்த்தனம்** பார்க்க; see *šamāvarttaṉam.*

[Skt.sam-ā-vartana → த. சமாவர்த்தனை.]

**சமாவேசம்** *šamā-vēšam,* பெ.(n.) 1. நன்கு தெய்வமேறுகை (ஆவேசிக்கை); entrance, possession, as by spirits. *"சமாவேசமாகிய கபாலமுத்தியும்" (சி.சி.8 : 12, மறைஞா.).* 2. மணமக்களின் முதற்சேர்க்கை; consummation of marriage.

[Skt. sam-ā-vēša > த. சமாவேசம்.]

**சமானகோத்திரன்** *šamāṉa-kōttiraṉ,* பெ.(n.) 1. ஒரே குல மரபைச் (கோத்திரத்தை) சேர்ந்தவன்; person of the same clan.

த.வ. ஒருகுடியன்

**சமானதை** *šamāṉadai,* பெ.(n.) **சமானம்,** 1.பார்க்க;see *šamāṉam.* *"சிவசமானதையாயிருக்கும்" (சிவப்.பிரபந்.சிவஞானபாலை. திருப்பள்.1).*

[Skt. samāna-tā > த. சமானதை.]

**சமானம்** *šamāṉam,* பெ.(n.) 1.ஒப்பு; likeness, equality. 2. ஒத்துள்ளது; that which is equal or similar.

[Skt. samāna > த. சமானம்.]

**சமானரகிதம்** *šamāṉa-ragidam,* பெ.(n.) ஒப்பற்றது; that which is incomparable or unequalled.

[Skt. samāna+rahita > த. சமானரகிதம்.]

**சமானாதிகரணசம்பந்தம்** *šamāṉādi-karaṇa-šambandam,* பெ.(n.) ஒரே தொடரியத்தில், ஒரு பொருளையே பற்றிவரும் பல சொற்களுக்குள்ள தொடர்பு (சம்பந்தம்) (வேதா.சூ.117); appositional relation, in a sentence, of words having the same

denotation but different connotations.

**சமானாதிகரணியம்** *šamāṇādikaraṇiyam*, பெ.(n.) **சமானாதிகரணசம்பந்தம்** பார்க்க (வேதா.சூ.117, உரை); see *šamānādi-karaṇa-šambandam.*

*[Skt.sāmānādhi-karaṇya> த.சமானாதி காணியம்.]*

**சமானார்த்தபதம்** *šamāṇārtta-padam*, பெ.(n.) ஒரு பொருட்பன்மொழி (பி.வி.18); synonyms, words having the same meaning.

*[Skt.samānārtha+>pada->த.சமானார்த்தபதம்.]*

**சமானோதகன்** *šamānōdagaṉ*, பெ.(n.) எட்டாந் தலைமுறை முதல் பதினான்காந் தலைமுறைவரையும், முன்னோர்கட்கு எள்ளுந் தண்ணீரும் விடுதற்கு உரிமையுள்ள தாயாதியர்; (legal) agnates from the 8th to the 14th degree, extended to remoter agnates also if the relationship can be clearly established, as connected through libations of water.

*[Skt. samānōdaka> த. சமானோதகன்.]*

**சமிக்கத்தக்க** *šamikka-t-takka*, பெ.(n.) செரிமானமாகக் கூடிய; digestable (சா.அக.).

**சமிக்கை** *šamikkai*, பெ.(n.) 1. செய்கை; signal, hint, gesture, as winking of the eyes. 2. குறியீட்டுப் பெயர்; technical term in art or science.

*[Skt. sam-jñā> த. சமிக்கை.]*

**சமிஞ்ஞாட்சரம்** *šamiññāṭšaram*, பெ.(n.) இயற்பெயர், தந்தை பெயர், ஊர்ப்பெயர், குடிப்பெயர்களைக் குறிக்க வழங்கும் முதற் குறிப்பெழுத்து; a letter, often an initial, denoting name of a person or thing.

**த.வ. முன்னெழுத்து**

*[Skt. sam-jñā+akṣara> த. சமிஞ்ஞாட்சரம்.]*

**சமிஞ்ஞை** *šamiññai*, பெ.(n.) 1. **சமிக்கை**, 1. பார்க்க; see *šamikkai*, 2. பெயர் (த.நி. போ.25); name, appellation.

*[Skt. samjñā> த. சமிஞ்ஞை.]*

**சமித்தம்** *šamittam*, பெ.(n.) வேள்வி மண்டபம்; sacrifical hall. *"நின்றதோர் சமித்தங் கண்டான்" (கம்பரா.பொழிலிறுத்த.49).*

*[Skt. sam-iddha> த. சமித்தம்.]*

**சமித்து** *šamittu*, பெ.(n.); வேள்விக்குரிய சுள்ளிகள் sacrificial fuel. *"சமித்தேந்திய காவன் மன்னன்" (பாரத.சம்பவ.57).*

*[Skt. samidh> த. சமித்து.]*

**சமிதி** *šamidi*, பெ.(n.) 1. அவை (சபை)க் கூட்டம்; association, conference. 2. கருமந் தொடர்ந்து பற்றாமைப் பொருட்டுக் கடைப் பிடிக்கும் ஒழுக்கமான நிறை; (Jaina.) restraints observed for arresting the inflow of karma. *"கோபனஞ் சமிதி தம்மம்" (மேருமந்.99).* 3. **சமீகம்** (யாழ்.அக.) பார்க்க; see *šamīgam.*

*[Skt. samiti> த. சமிதி.]*

**சமிதை** *šamidai*, பெ.(n.) வேள்வி (யாகத்து)க் குரிய ஆல், அரசு, அத்தி, இத்தி, மா, பலாசு, வன்னி, நாயுருவி, கருங்காலி என்பவற்றின் சுள்ளி; sacrificial fuel, of which there are nine kinds, viz., *āl, arašu, atti, itti, mā, palāšu, vaṉṉi, nāyuruvi, karuṅgāli.* *"புண்ணியப் பலாசின் கண்ணிறை சமிதை" (பெருங். இலாவண.3, 14).*

*[Skt. samidhā> த. சமிதை.]*

**சமிதைக்கிரிகை** *šamidai-k-kirigai*, பெ.(n.) மந்திரமுன்னிட்டு வேள்விச்சுள்ளிகளை தீ (அக்னி) யிலிட்டு, வேள்வி செய்யுஞ் செயல்; act of kindling sacred fire by throwing *šamidai* into sacrifical pit with appropriate mantras. *"சமிதைக்கிரிகை சால் புளிக் கழிப்பி" (பெருங். இலாவாண.3 :81).*

*[Skt.samidhā+kriyā>த.சமிதைக் கிரிகை.]*

**சமிபாடு** *šami-pāḍu,* பெ.(n.) 1. செரிக்கும் (சீரணிக்கும்) காலம்; time required for digestion. 2. செரித்தல் (சீரணம்); digestion.

*[சமி+பாடு]*

*[Skt. šam > த. சமி]*

**சமியன்** *šamiyaṉ,* பெ.(n.) அருகன் (வின்.); (Jaina.) arhat.

*[Skt. samyama> த. சமியன்.]*

**சமிர்த்தி** *šamirtti,* பெ.(n.) நிறைவு; fulness, abundance. *"அன்னசமிர்த்தி" (குற்றா.தல. சிவபூசை.46).*

*[Skt. samṛddhi> த. சமிர்த்தி.]*

**சமிரணன்** *šamiraṇaṉ,* பெ.(n.) **சமீரணன்** பார்க்க; see *šamīraṇaṉ. "சமிரணன்றன் மதலை" (சேதுபு. இராமதீர்.68).*

**சமிராட்டு** *šamirāṭṭu,* பெ.(n.) **சம்மிராட்டு** பார்க்க; see *sammirāṭṭu. "சுராட்டுமச் சமிராட்டு மானானே" (சேதுபு.கோடிதீர்.48).*

*[Skt. sam-rāṭ> த. சமிராட்டு.]*

**சமீகம்** *šamīgam,* பெ.(n.) போர் (ஆ.நி.); war, battle, fight.

*[Skt. samīka> த. சமீகம்.]*

**சமீசணம்** *šamīšaṇam,* பெ.(n.) ஆராய்ச்சி (யாழ்.அக.); investigation.

*[Skt. sam-īkṣaṇa> த. சமீசணம்.]*

**சமீந்தார்** *šamīndār,* பெ.(n.) குடிகளிடம் தாமே வரி தண்டுதல் செய்து அரசுக்கு மொத்த வரி செலுத்தி (பூமியை) ஆள்வோர்; zemindar, landed proprietor paying land-tax to Government.

**த.வ. நிலக்கிழார்**

*[U. zamīn-dār> த. சமீந்தார்.]*

**சமீந்தாரி** *šamīndāri,* பெ.(n.) 1. சிற்றூர் நிலச்சொத்து; estate of a zemindar. 2. **சமீந்தார்** பார்க்க; see *šamīndār.*

**த.வ. நிலக்கிழமை**

*[U. zamīn-dār> சமீந்தார் > த. சமீந்தாரி.]*

**சமீபம்** *šamībam,* பெ.(n.) அண்மை; nearness, proximity. *"நஞ்சமீபத்தில் வாவென்று" (மச்சபு.ஆதிசி.8).*

*[Skt. sam-īpa> த. சமீபம்.]*

**சமீபலசணை** *šamība-lašaṇai,* பெ.(n.) ஒரு பொருளை உணர்த்துஞ் சொல் அப்பொருளினை அடுத்துள்ள பிறிதொரு பொருளை உணர்த்து வதாகிய இலக்கணை (சி.சி.பு.28, சிவாக்.); (Log.) variety of *ilakkaṇai* in which a word denotes an object which is in the vicinity of what it normally signifies, as *kaṅgaikkaṇidai-c-cēri.*

**த.வ. பிறிதுணர் இலக்கணம்**

*[Skt.samīpa+lakṣaṇā> த. சமீபலசணை]*

**சமீபலபசணை** *šamība-laṭṣaṇai,* பெ.(n.) **சமீபலசணை** பார்க்க; see *šamībalašaṇai.*

**சமீபவிலக்கணை** *šamība-v-ilakkaṇai,* பெ.(n.) **சமீபலட்சணை** பார்க்க; see *šamība-laṭṣaṇai.*

**சமீபி-த்தல்** *šamībi-,* 4 செ.குன்றாவி.(v.t.) கிட்டுதல்; to approach, come close.

***M.*** *samīpikka.*

*[Skt. samīpa> த. சமீபி-.]*

**சமீரணம்** *šamīraṇam,* பெ.(n.) 1. கிடாரை (மலை.); seville orange. 2. எலுமிச்சை; bergamotte orange.

*[Skt. sam-īraṇa> த. சமீரணம்.]*

**சமீரணன்** *šamīraṇaṉ,* பெ.(n.) காற்றுக் கடவுள் (வளிச்செல்வன்); air, wind-god. *"சமீரணன் றுடைப்ப மன்னோ" (கம்பரா.மாரீச.15).*

*[Skt. sam-īraṇa> த. சமீரணன்.]*

**சமீரணி** *šamīrani,* பெ.(n.) வளிமகன் (வாயு புத்திரன்); *Bhīman,* as son of *Vāyu.* *"சங்கையுறாது சமீரணி கேட்டு" (பாரத. புட்ப. 79).*

*[Skt. samīrani> த. சமீரணி.]*

**சமீரன்** *šamīran,* பெ.(n.) **சமீரணன்**(உரி.நி.) பார்க்க; see *šamīranan.*

*[Skt. sam-īra> த. சமீரன்.]*

**சமீன்** *šamīn,* பெ.(n.) **சமீந்தாரி** பார்க்க; see *šamīndāri.*

*[U. zamīn> த. சமீன்.]*

**சமீனம்** *šamīnam,* பெ.(n.) ஆண்டிற்கு ஒருமுறை உண்டாவது (யாழ். அக.); that which is produced once a year.

*[Skt. samīna> த. சமீனம்.]*

**சமு** *šamu,* பெ.(n.) 729 யானைகளும் 729 தேர்களும் 2187 குதிரைகளும் 3645 காலாட்களும் அடங்கிய படை (சூடா.); large army consisting of 729 elephants, 729 chariots, 2187 horses and 3645 foot-soldiers.

*[Skt. camū> த. சமு.]*

*பழந்தமிழ் படைவகுப்பில் 9x9=81 கொண்ட நாற்படை அடுக்காகிய அணிவகுப்பு நிலவியது. 9x9x9=729 யானைப்படை, தேர்ப்படைகளும அதன் மும்மடங்காகிய குதிரைப்படையும் (2187) ஐம்மடங்காகிய (3645) காலாட்படையும் ஒரு பெரும்படை எனப்பட்டது. இதனை வடமொழியாளர் 'சமு' என்னும் சேனையாகக் கருதினர்.*

**சமுக்கா**[1] *šamukkā,* பெ.(n.) திசையறிகருவி (J.); mariner's compass.



**சமுக்கா**[2] *šamukkā,* பெ.(n.) **சமுக்காக்குழல்** பார்க்க; see *šamukkā-k-kulal.*

**சமுக்காக்குழல்** *šamukkā-k-kulal,* பெ.(n.) தொலைநோக்குக் கண்ணாடி (வின்.); telescope.

த.வ. தொலைநோக்கி

*[Skt. camukkā+ த. குழல்→சமுக்காக்குழல்.]*

**சமுக்காரம்** *šamukkāram,* பெ. (n.) தூய்மைப்படுத்தும் விழா (சமற்காரம்) (யாழ்.அக.); purificatory ceremony.

*[Skt. sam-s-kāra> த. சமுக்காரம்.]*

**சமுக்காளக்கோட்டுப்புலி** *šamukkāla-k-kōttuppuli,* பெ.(n.) புலி வகை (யாழ்.அக.); a kind of tiger.

*[சமுக்காளம்+கோட்டுப்புலி]*

*[U. jāmkāna > த. சமுக்காளம்.]*

**சமுக்காளம்** *šamukkālam,* பெ.(n.) **சமக்காளம்** பார்க்க; see *šamakkālam.*

**சமுக்கு** *šamukku,* பெ.(n.) குதிரை மாடு முதலியவற்றின் முதுகில் இவர்ந்தூருதற்கு இடப்பெறுந் தவிசு: saddle. *"இடப முதுகிடைச் சமுக்கிட்டேறி" (திருப்பு.902).*

த.வ. சேணம்

*[U. jamkhāna > த. சமுக்கு.]*

**சமுகங்கா-த்தல்** *šamugaṅ-kā-,* 4 செ.கு.வி. (v.i.) 1. அருள் (தயை) வேண்டிப் பிறரிடம் (சேவை) பணி செய்தல் (இ.வ.); to serve as attendant for favour. 2. ஒருவரது நல்ல நேரம் கிடைத்தற்குக் காத்திருத்தல்; to wait one's convenience.

*[சமுகம்+கா-த்தல்]*

*[Skt. sam-mukha>த.சமுகம்]*

**சமுகங்கொடு-த்தல்** *šamugaṅ-kodu-,* 4 செ.கு.வி.(v.i.) தெளிவாயிருத்தல் (பிரசன்னம்); to attend, used respectfully. *"அத்தருணம் தாங்களும்சமுகங்கொடுத்துச் சிறப்பித்துச்*

*சொல்லுமாறு வேண்டுகின்றோம்".*

**த.வ.** செவ்விதருதல்

*[சமுகம்+கொடு]*

*[**Skt.** sam-mukha> த. சமுகம்]*

**சமுகசேவை** *šamuga-šēvai,* பெ.(n.) அரசன், குரு முதலானோரது ஆள்கணத்தில் (சன்னி தானத்தில்) செய்யும் ஊழியம் (வின்.); serving or waiting on a king, guru, etc.

*[**Skt.** sam-mukha+sēvā> த. சமுகசேவை]*

**சமுகத்தார்** *šamugattār,*பெ.(n.) அமைச்சர்கள் (வின்.); councillors, courtiers.

*[**Skt.** sam-mukha> சமுகம் > த. சமுகத்தார்.]*

**சமுகம்** *šamugam,* பெ.(n.) 1. இறையகம் (சன்னிதானம்); august presence, as of a king, guru. 2. நேருரை (பேட்டி); audience, interview, as of a superior. *அந்தப் பிரபுவின் சமுகம் கிடைக்கவில்லை.* 3. பெரியோரை முன்னிலைப்படுத்த வழங்கும் மதிப்புரவுச் சொல்; a term of respect, used in addressing persons of rank.

*[**Skt.** sam-mukha> த. சமுகம்.]*

**சமுகமளி-த்தல்** *šamugamaḷi,* 4 செ.கு.வி. (vi.) நேரில் வருகை தருதல் (இலங்.); be present (in a meeting). *கூட்டத்திற்குப் பலர் சமுகமளித்திருந்தனர் .*

*[சமுகம்+அளி]*

**சமுசயப்பட்டவன்** *šamušaya-p-paṭṭavaṉ,* பெ. (n.) **சந்தேகக்காரன்** பார்க்க (இ.வ.); see *šandēga-k-kāraṉ.*

**த.வ.** ஐயமுடையன்

*[**Skt.** sam-šaya > த. சமுசயம் + பட்டவன்.]*

**சமுசயம்** *šamušayam,* பெ.(n.) 1. ஐயம்; doubt, hesitation. 2. குற்றம் பற்றிக் கொள்ளும் ஐயம் (சந்தேகம்); suspicion.

*[**Skt.** saṃ-šaya> த. சமுசயம்.]*

**சமுசயவாதி** *šamušaya-vādi,* பெ.(n.) எதனையும் ஐயுறுபவன் (சந்தேகிப்பவன்) (வின்.); sceptic.

*[**Skt.** sam-šaya+vadin.> த. சமுசயவாதி]*

**சமுசாகி** *šamušāgi,* பெ.(n.) தொந்தரை; worries. *அவனுக்குச் சமுசாகி அதிகம் (கொ.வ.).*

**சமுசாகிசெய்-தல்** *šamušāgi-cey-,*1 செ.கு.வி. (v.i.) 1. மனநிறைவு (திருப்தி) செய்தல்; to satisfy. 2. போக்குச் சொல்லுதல் (இ.வ.); to give evasive explanations.

**சமுசாரக்காரன்** *šamušāra-k-kāraṉ,* பெ.(n.) பெரிய குடும்பத்தை உடையவன் (இ.வ.); a man having a large family.

**த.வ.** பெருங்குடும்பி

*[**Skt.** sam-sāra > த. சமுசாரம்+காரன்.]*

**சமுசாரபந்தம்** *šamusāra-bandam,* பெ.(n.) இல்லற வாழ்க்கையில் கட்டுப்படல்; bondage of married life (சா.அக.).

**த.வ.** குடும்பக்கட்டு

*[**Skt.** saṃ-sāra+bandha>த. சமுசாரபந்தம்]*

**சமுசாரம்**[1] *šamušāram,* பெ.(n.) 1. உலக வாழ்க்கை; cycle of mundane existence; worldly life. *"சமுசாரத்தின் புத்தி நீங்குமாறருளும் பார்ப்பதி" (விநாயகபு.2, 7).* 2. குடும்பம்; family. 3. மனைவி (இ.வ.); wife.

*[**Skt.** saṃ-sāra> த. சமுசாரம்.]*

**சமுசாரம்**[2] *šamu-šāram,* பெ. (n.) 1. **சமாசாரம்** (நாஞ்.) பார்க்க; see *šamāšāram.* 2. பொருண்மை, செய்தி (விஷயம்); business, affair. *உன்னிடத்தில் ஒரு சமுசாரம் சொல்ல வேணும்.*

*[**Skt.** samācāra> த. சமுசாரம்.]*

**சமுசாரவாட்டி** *šamušāra-v-āṭṭi,* பெ.(n.) பெரிய குடும்பத்தையுடையவன் (இ.வ.); a woman having a large family.

*[**Skt.** šam-sāra> த. சமுசாரம் + ஆட்டி.]*

**சமுசாரவாளி** *šamušāra-v-āḷi,* பெ.(n.) **சமுசாரக்காரன்** பார்க்க (இ.வ.); see *šamušārakkāraṉ.*

*[Skt. sam-sāra > த. சமுசாரம் + த. ஆளி.]*

**சமுசாரவிருத்தி** *šamušara-virutti,* பெ.(n.) குடும்ப நிகழ்ச்சி (J.); family cares or concerns.

*[Skt.saṃ-sāra+vṛtti→த. சமுசாரவிருத்தி]*

**சமுசாரி** *šamusāri,* பெ.(n.) 1. இல்வாழ்வான் (கிருகத்தன்); married person, house holder. 2. **சமுசாரக்காரன்** பார்க்க; see *šamušārakkāraṉ.* 3. குடியானவன்; husbandman, farmer. 4. கரும (கர்ம)த் தொடர்புடையவன்; one involved in the cycle of births as a result of karma. *"சேதனன்றான் சமுசாரியோ" (சி.சி.வரலாறு).*

**த.வ. குடும்பி**

*[Skt. saṃ-sārī > த. சமுசாரி.]*

**சமுசாரித்தொழில்** *šamusāri-t-toḻil,* பெ.(n.) உழவுத்தொழில்; husbandry.

*[சமுசாரி+தொழில்]*

*[Skt.sam-sāri > த. சமுசாரி]*

**சமுசாரிமகன்** *šamušāri-magaṉ,* பெ.(n.) நல்ல குடும்பத்திற் பிறந்தவன் (வின்.); man born of good family.

*[சமுசாரி+மகன்]*

*[Skt. sam-sārī > த. சமுசாரி]*

**சமுசு** *šamušu,* பெ.(n.) 1. கலகக் கூட்டம் (யாழ்.அக.); seditious or riotous assembly. 2. துராலோசனை (வின்.); evil counsel, plot.

*[Skt. sam-aj> த. சமுசு.]*

**சமுசுசெலுத்து-தல்** *šamušu-šeluttu-,* 5 செ.கு.வி.(v.i.) கெடு சிந்தனைபடி நடத்தல் (R.); to put the plot in execution.

*[சமுசு+செலுத்து-]*

*[Skt. sam-aj > த. சமுசு]*

**சமுத்தி**[1] *šamutti,* பெ.(n.) **சமிர்த்தி** பார்க்க; see *šamirtti.*

*[Skt. samṛddhi > த. சமுத்தி.]*

**சமுத்தி**[2] *šamutti,* பெ.(n.) **சமசை** பார்க்க; see *šamašai.*

**சமுத்திகட்டு-தல்** *šamutti-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) செய்யுளின் முடிப்புறுப்பை நிறைவு செய்தல்; to complete a šamasai.

*[சமுத்தி+கட்டு-]*

*[Skt. samṛddhi + த. சமுத்தி]*

**சமுத்திபாடு-தல்** *šamutti-pāḍu-,* 5 செ.கு.வி. (v.i.) **சமுத்திகட்டு-தல்** பார்க்க; see *šamutti-kaṭṭu-.*

*[சமுத்தி+பாடு-]*

*[Skt. samṛddhi > சமுத்தி]*

**சமுத்திரக்கடம்பு** *šamuttira-k-kaḍambu,* பெ.(n.) வெண்கடம்பு (L.); seaside Indian oak.

*[Skt.samudra+kadamba> த. சமுத்திரக கடம்பு.]*

**சமுத்திரக்கல்லுப்பு** *šamuttira-k-kalluppu,* பெ.(n.) கடலினுள் பாறைகளில் உறைந் திருக்கும் கல்லுப்பு; rock salt found adhering to the surface of rocks at the bottom of the sea from where it is dug out (சா.அக.).

*[சமுத்திரம்+கல்+உப்பு]*

*[Skt. šamudra → சமுத்திரம்]*

**சமுத்திரக்கபம்** *šamuttira-k-kabam,* பெ.(n.) **சமுத்திரகோசம்** பார்க்க (மூ.அ.); see *šamuttira-kōsam.*

*[Skt. samudra+kaba > த. சமுத்திரகபம்.]*

**சமுத்திரகலசநியாயம்** *šamuttira-kalasa-niyāyam,* பெ.(n.) கடலில் நிரம்ப நீரிருப்பினும் முகக்கும் முகவையளவே நீர் கொள்ளுதல் போலும் நெறி (சி.சி.8, 13, சிவாக்.); principle of sea and cup,

illustrating the fact that the knowledge one can acquire is limited to one's mental capacity, as the cup can hold only its own measure of water though a large quantity is available in the sea.

த.வ. நாழிமுகப்பு நெறி

*[Skt. samudra + த. கலசம் + nyāya → த. சமுத்திரகலச நியாயம்.]*

**சமுத்திரகோசம்** *šamuttira-kōšam,* பெ.(n.) கடனுரை (வின்.); cuttlefish bone, as sepiae.

*[Skt. samudra+kōṣa> த. சமுத்திர கோசம்.]*

**சமுத்திரச்செடி** *šamuttira-c-ceḍi,* பெ.(n.) சமுத்திரப்பாலை (பாண்டி.); elephant creeper.

*[சமுத்திரம்+செடி]*

*[Skt. samudra> சமுத்திரம்]*

**சமுத்திரசித்தி** *šamuttira-citti,* பெ.(n.) ஆரால் மீன் (மலை.); lamprey, brownish, attaining 15 in. in length-Rhynchobdella aculeata.

*[Skt. samudra+siddhi> த. சமுத்திரசித்தி]*



**சமுத்திரசுண்டி** *šamuttira-suṇḍi,* பெ.(n.) கிளிஞ்சில் (வின்.); bivalve mollusc.

*[சமுத்திரம்+சுண்டி–]*

*[Skt. samudra > சமுத்திரம்]*

**சமுத்திரசோகி** *šamuttira-šōgi,* பெ.(n.) **சமுத்திரப்பாலை** (மலை.) பார்க்க; see *šamuttira-p-pālai.*

*[Skt.samudra+sōgi> த.சமுத்திரம் + சோகி.]*

**சமுத்திரத்தானம்** *šamuttira-t-tāṉam,* பெ.(n.) கடலாட்டு; sea-bath (சா.அக.).

**சமுத்திரதோயம்** *šamuttira-tōyam,* பெ.(n.) முடக்கொற்றான் வகை; lesser balloon vine, s.cl., cardiospermum canescens (சா.அக.).

*[Skt. samudra+tōya> த. சமுத்திரதோயம்.]*

**சமுத்திரநாதம்** *šamuttira-nādam,* பெ.(n.) முப்பு; (In Alchemy) qunit, essence salt or the mystio three salts (சா.அக.).

**சமுத்திரநீலக்கல்** *šamuttira-nīlakkal,* பெ.(n.) நீலப் பவளம்; acorus (சா.அக.).

**சமுத்திரப்பச்சை** *šamuttira-p-paccai,* பெ.(n.) **சமுத்திரப்பாலை** பார்க்க; see *šamuttira-p-pālai.*

**சமுத்திரப்பழம்** *šamuttira-p-paḻam,* பெ.(n.) கடல் மீன்; sea-fish.

**சமுத்திரப்பாலை** *šamuttira-p-pālai,* பெ.(n.) மருந்துக்கொடி வகை (L.); elephant creeper, m.cr., Argyreia speciosa.

*[சமுத்திரம் + பாலை.]*

*[Skt.samudra > த. சமுத்திரம்.]*



**சமுத்திரப்புளியன்** *šamuttira-p-puḷiyaṉ,* பெ.(n.) இரிக்கி (இ.வ.); scimitar pod.

*[Skt.samudra >த.சமுத்திரம் + த. புளியன்.]*

**சமுத்திரபகவான்** *šamuttirabagavāṉ,* பெ. (n.) **சமுத்திரராசன்** பார்க்க; see *šamuttira-rāšaṉ.*

*[Skt.samudra+bhagavān> த. சமுத்தி பகவான்.]*

*[த. பகவான் > Skt. bhagavān.]*

**சமுத்திரம்** *šamuttiram,* பெ.(n.) 1. கடல் (பிங்.); sea, ocean. 2. ஒன்றையடுத்துப் பதினான்கு சுன்னம் கொண்ட பேரெண் (பிங்.); a very large number, one followed by fourteen cyphers. 3. **சமு** (பிங்.) பார்க்க; see *šamu.* 4. மிகுதி; large quantity, abundance. 5. **சமுத்திரதோயம்** (வின்.) பார்க்க; see *šamuttira-tōyam.*

*[Skt. samudra> த. சமுத்திரம்.]*

**சமுத்திரமட்டப்பாரை** *šamuttira-maṭṭa-p-pārai,* பெ.(n.) கடல் மீன் வகை; a kind of mackerel, caranx.



**சமுத்திரராசன்** *šamuttira-rāsaṉ,* பெ.(n.) கடற்குரிய கடவுள் வருணன்; *Varuṇaṉ,* the sea-god.

*[Skt. samudra+rāja> த. சமுத்திரராசன்.]*

*[த. அரசன் > Skt. rāja.]*

**சமுத்திரலவணம்** *šamuttira-lavaṇam,* பெ.(n.) ஐந்து உப்பு (பஞ்சலவணத்துள்) வகையுள் ஒன்றாகிய கடலுப்பு; sea-salt, one of *pañja-lavaṇam,* q.v.

த.வ. கடலுப்பு

*[Skt. samudra+lavaṇa.]*

**சமுத்திரவருணக்கல்** *šamuttira-varuṇakkal,* பெ.(n.) (கடல் நிறம் போன்ற பச்சைக்கல்) படிகப் பச்சை (வின்.); Beryl, as being sea - green.

*[சமுத்திரம் + வருணம் + கல் .]*

*[Skt.samudra>த. சமுத்திரவருணக்கல் .]*

*த. வண்ணம் > Skt. Varṇa*

**சமுத்திரவருணச்சிலை** *šamuttira-varuṇa-c-cilai,* பெ.(n.) 1. **சமுத்திரவருணக்கல்** பார்க்க; see *šamuttira-varuṇa-k-kal.* 2. கருங்கல் வகை; a variety of granite stone.

*[Skt. samudra+Varṇa+ த. சிலை.]*

*த. வண்ணம் > Skt. Varṇa*

**சமுத்திரவிலாசம்** *šamuttira-vilāšam,* பெ.(n.) தன்னைப் பிரிந்திருக்கும் தலைவனைக் குறித்துத் தலைவி கடற்கரையிலிருந்து புலம்புவதாகப் பாடும் சிற்றிலக்கியவகை; poem in which a maiden laments on the sea-shore her lover's separation.

த.வ. நெய்தல்நிலப்பா

*[Skt.samudra+vi-lāsa→த.சமுத்திரவிலாசம்.]*

**சமுத்திராந்தம்** *šamuttirāndam.* பெ.(n.) 1. சிறுகாஞ்சொறி; small climbing nettle. 2. பருத்தி (வின்.); Indian cotton plant. 3. சாதிக்காய்; nutmeg.

**சமுத்திராப்பச்சை** *šamuttirā-p-paccai.* பெ. (n.) **சமுத்திரப்பாலை** (வின்.) பார்க்க; see *šamuttira-p-pālai.*

**சமுத்திராப்பழம்** *šamuttirā-p-paḻam,* பெ.(n.) கீழைத் தீவுகளினின்று மருந்தின் பொருட்டுக் கடல் வழியாகக் கொண்டு வரப்பட்டதாகக்

கூறப்படும் குந்தளப்பழம் (வின்.); a medicinal fruit said to have been brought to India from the eastern islands.

த.வ. குந்தளப்பழம், கடற்பழம்

[Skt.samudra+phal(K.pan)(M.samudra-p-palam)> த. சமுத்திராப்பழம்.]

**சமுதாடு** *šamudādu,* பெ.(n.) ஈட்டி வகை; dagger. *"வேல்சமுதாடு வீரவாள் காட்டுதல்" (பரத.பாவ.20).*

*[U. jamdhār> த. சமுதாடு.]*

**சமுதாளி** *šamudāḷi,* பெ.(n.) **சமுதாடு** (வின்.) பார்க்க; see *šamudādu.*

**சமுதிதபிரயோசனம்** *šamudida-pira-yōsaṉam,* பெ. (n.) பகிர்ந்துண்ணுகை (R.C.); communion of saints.

*[Skt. samudita + prayōjana>த. சமுதித பிரயோசனம்.]*

**சமுயமினி** *šamuya-miṉi,* பெ.(n.) காலனின் தலைநகர் (சி.போ.பா.2, 3, பக்.206); yama's capital.

*[Skt. sam-yamini> த. சமுயமினி.]*

**சமுவரம்** *šamu-varam,* பெ.(n.) **சம்வரை** (சி.போ.பா.அவை. பக்.40) பார்க்க; see *šamvarai.*

*[Skt. sam-vara> த. சமுவரம்.]*

**சமுற்கம்** *šamuṟkam,* பெ.(n.) இரண்டு அல்லது பல அடிகள் சொல்லளவில் ஒத்தும் பொருளளவில் வேறுபட்டும் வரும் மிறைக்கவி (வின்.); stanza in which two or more lines correspond in sound but differ in sense.

த.வ. பொருள்முரண் அணி

*[Skt. sam-ud-ga> த. சமுற்கம்.]*

**சமுற்பவம்** *šamuṟpavam,* பெ.(n.) பிறப்பு (யாழ்.அக.); birth, origin.

*[Skt. sam-ud-bhava> த. சமுற்பவம்.]*

**சமுன்னதி** *šamuṉṉadi,* பெ.(n.) செருக்கு (அகந்தை) (வின்.); self-conceit, arrogance.

*[Skt. sam-unnati> த. சமுன்னதி.]*

**சமுனையம்** *šamuṉaiyam,* பெ.(n.) ஈரம்; moisture (சா.அக.).

**சமூ** *šamū,* பெ.(n.) **சமு** (சங்.அக.) பார்க்க; see *šamu.*

**சமூகக்காடு** *šamūga-k-kādu,* பெ.(n.) ஊராரின் தேவைகளை நிறைவு செய்யவும் சுற்றுச்சூழலைப் பாதுகாக்கவும் பொது இடங்களில் வளர்க்கப்படும் காடு; social forestry (கிரியா.).

த.வ. பொதுக்காடு

*[Skt. samūha + த. சமூகம் + த. காடு.]*

**சமூகசேவகி** *šamūga-šēvagi,* பெ.(n.) குமுகாயத்திலெழும் சிக்கலைத் தீர்த்தல், ஏழைகளுக்கு உதவுதல் போன்ற ஊழியத்தில் ஈடுபட்டுள்ள பெண்; a woman social worker (கிரியா.).

த.வ. பொதுநலப்பணிமடந்தை

**சமூகம்**[1] *šamūgam,* பெ.(n.) திரள்; assembly, multitude. *"சுரசமூகமும்" (பாரத.குருகுல.27).*

த.வ. குமுகம், மன்பதை

*[Skt. samūha> த. சமூகம்.]*

**சமூகம்**[2] *šamūgam,* பெ.(n.) தேர், யானை, பரி, காலாள் என்பவை மும்மடி கொண்ட படை வகுப்பு (திவா.); a division of an army consisting of three times the unit required for *pirataṉai.*

*[Skt. camūka> த. சமூகம்.]*

**சமூகவாதம்** *šamūga-vādam,* பெ.(n.) காரணியத்தின் கூட்டமே காரியமாம் என்று கொள்ளும் (வாதம்) தருக்கம் (சி.போ.பா.2, 2, பக்.142); a doctrine which holds that the effect is simply the aggregate of its causes and nothing more.

*[Skt. samūha +vāda →த. சமூகவாதம்.]*

**சமூகவியல்** *šamūgaviyal,* பெ.(n.) குழுவாக வாழும் மனிதர்களைப் பற்றியும், சமூக அமைப்பைப் பற்றியும் ஆராயும் படிப்பு; sociology. *"சமூகவியல் துறை/சமூகவியல் பேராசிரியர்" (கிரியா.).*

*[சமூகம் + இயல்.]*

*[Skt. samūha → த. சமூகம் ]*

**சமூகவிரோதி** *šamūga-virōdi,* பெ.(n.) குமுகாயத்துக்குக் கேடு விளைவிக்கும் செயல்களில் ஈடுபடுபவர்; racketeer, antisocial element (கிரியா.).

**த.வ.** பொதுநலப்பகைவன்

*[Skt.samūha+virōdhin→த. சமூகவிரோதி]*

**சமூகனி** *šamūgaṉi,* பெ.(n.) துடைப்பம் (யாழ்.அக.); broom.

*[Skt. sam-ūhanī> த. சமூகனி.]*

**சமூலம்**[1] *šamūlam,* பெ.(n.) வேர்முதல், இலையீறாகவுள்ள எல்லாம் (தைலவ.தைல.41); whole, all.

*[Skt. sa-mūla> த. சமூலம்.]*

**சமூலம்**[2] *šamūlam,* கு.வி.எ..(adv.) முழுவதும்; wholly.

*[Skt. sa-mūla > த. சமூலம்.]*

**சமேதராக** *šamēdarāga,* கு.வி.எ. (adv.) (அ.வ.) (மணவினையர் (தம்பதி) ஒன்று கூடி இணைந்து, உடனிருக்க; (of married people) together, (of gods) along with his or her consort. *"தாங்கள் தம்பதி சமேதராகத் திருமணத்திற்கு வந்து சிறப்பிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்/வள்ளி தெய்வானை சமேதராகக் காட்சியளிக்கும் முருகன் படம்" (கிரியா.).*

**த.வ.** உடனாக

*[Skt. samēta > த. சமேதர் + ஆக.]*

**சமேதன்** *šamēdaṉ,* பெ.(n.) கூடியிருப்பவன்; companion, associate. *"அம்பைசமேதனா யமர்தலினால்" (சங்.அக.).*

**த.வ.** உடனாளி

*[Skt. samēta> த. சமேதன்.]*

**சமேதார்** *šamēdār,* பெ.(n.) படையதிகாரி (சுபேதார்)க்கு அடுத்த அலுவலன்; Indian military officer of the rank of lieutnant, second to the subhadar.

**த.வ.** சாமந்தன்

*[U. jamdār> த. சமேதார்.]*

**சமைதார்** *šamaidār,* பெ.(n.) **சமேதார்** (வின்.) பார்க்க; see *šamēdār.*

**சமோகி** *šamōgi,* பெ.(n.) அடிக்கடி ஒருவர் கையிலிருந்து மற்றொருவர் கைக்கு மாறி துய்த்தாளப்படும் ஊர் (கிராம) நிலங்கள் N.A. (R.T.); tenure in which village or lands of a community are held individually under periodical distribution.

**த.வ.** காலநிரல் ஆள்நிலம்

*[Skt. sama-bhōgya > த. சமோகி.]*

**சய்யம்** *šayyam,* பெ.(n.) சருக்கரை; sugar (சா.அக.).

**சயகாசரோகம்** *šayagāša-rōgam,* பெ.(n.) நுரையீரலில் ஏற்படும் புற்று நோய் (சயரோகம்); a tubercular disease of the lungs-*Pulmonary consumption or phthisis* (சா.அக.).

**த.வ.** ஈரல்புற்று

**சயங்கொண்டசோழமண்டலம்** *šayaṅ-koṇḍa-cōḻa-maṇḍalam,* பெ.(n.) முதலாம் இராசராசனது சிறப்புப் பெயரால் வழங்கிய, தொண்டை மண்டலம்; (I.M.P.N.A.297) *Toṇḍai-maṇḍalam* called after the sur name of the chola king Raja Raja I.

**த.வ.** வெற்றிகொண்டசோழன்

*[Skt.jaya>த.சயம்+கொண்ட+சோழமண்டலம்.]*

**சயங்கொண்டசோழன்** *šayaṅ-koṇḍa-cōḻaṉ,* பெ.(n.) முதலாம் இராசராசனின் சிறப்புப் பெயர்களுள் ஒன்று (S.I.I.11, 7); a

surname assumed by the chola king Raja-Raja I.

[*Skt.jaya* > த. *சயம் + கொண்டசோழன்.*]

**சயங்கொண்டதொண்டைமண்டலம்** *šayaṅ-koṇḍa-toṇḍai-maṇḍalam,* பெ.(n.) **சயங்கொண்டசோழமண்டலம்** பார்க்க (I.M.P.Madr.315); see *šayaṅ-koṇḍa-cōḻa-maṇḍalam.*

[*Skt.jaya* > த. *சயம் + கொண்டதொண்டை மண்டலம்.*]

**சயங்கொண்டமண்டலம்** *šayaṅ-koṇḍa-maṇḍalam,* பெ.(n.) **சயங்கொண்டசோழ மண்டலம்** பார்க்க (I.M.P.N.A.390); see *šayaṅ-koṇḍa-šōḻa-maṇḍalam.*

[*Skt.jaya* > த. *சயம் + கொண்டமண்டலம்.*]

**சயங்கொண்டான்** *šayaṅ-koṇḍāṉ,* பெ.(n.) 11-ம் நூற்றாண்டினரும் கலிங்கத்துப்பரணி இயற்றியவருமான புலவர்; the author of the *kaliṅgattu-p-paraṇi,* 11th C. *"பரணிக்கோர் சயங்கொண்டான்" (தனிப்பா.).*

[*சயம்+கொண்டான்.*]

[*Skt. jaya* > த. *சயம்*]

**சயசய** *šaya-šaya,* பெ.(n.) வெற்றி குறித்த வாழ்த்து மொழி; expr. meaning `may victory attend thee!' - addressed to kings and great personages.

த.வ. உகேஉகே

[*Skt. jaya+jaya* > த. *சயசய.*]

**சயசீலன்** *šaya-šīlaṉ.* பெ.(n.) வெற்றிச் செல்வன்; victorious person.

[*Skt. jaya+šīla* > த. *சயசீலன்.*]

**சயசெம்பு** *šaya-šembu,* பெ.(n.) மாசுடைச் செம்பு; impure copper (சா.அக.).

**சயத்தம்பம்** *šaya-t-tambam,* பெ.(n.) வெற்றித்தூண்; triumphal column. *"சயத்தம்பம் பல நாட்டி" (கலிங்.10).*

[*Skt. jaya+stambha*> த. *சயத்தம்பம்.*]

**சயத்திரதன்** *saya-t-tiradaṉ,* பெ.(n.) பாரதத்திற் கூறப்படும் சிந்துநாட்டரசனும் துரியோதனன் தமக்கை கணவனுமான வீரன் (பாரத.பதின்மூன்றாம்.117); a hero mentioned in *Mahābhārata,* king of the sindhu country and brother-in-law of *Duryōdhana.*

[*Skt. jayad-ratha*> த. *சயத்திரதன்.*]

**சயதம்** *šayadam,* பெ.(n.) 1. உடம்பில் அரத்தக் கேட்டினால் ஏற்படும் கண்டமாலை, சயநோய் முதலியன; an idiopathic blood disease producing tubercle, struma or scrofula; phthisis etc. - *Tubercular diseases.* 2. இடுப்பெலும்பின் ஒரு பகுதி; that portion of the hip bone (சா.அக.).

**சயதரன்** *šayadaraṉ,* பெ.(n.) கலிங்கத்துப் பரணித் தலைவனான முதற் குலோத்துங்கன் சிறப்புப் பெயர்; a surname of *kulōttuṅga, 1.* the hero of *kaliṅgattu-p-paraṇi.*

[*Skt. jaya-dhara*> த. *சயதரன்*]

**சயதாளம்** *šaya-tāḷam,* பெ.(n.) ஒன்பது (நவ) வகை தாளங்களுள் ஒன்று (திவா.); (Mus.) a variety of time-measure, one of *nava-tāḷam,* q.v.

[*Skt. jaya* > த. *சயம் +* த. *தாளம்.*]

**சயந்தகுமாரன்** *šayanda-kumāraṉ,* பெ.(n.) **சயந்தன்** (சிலப்.3, 2, அரும்.) பார்க்க; see *šayandaṉ.*

[*Skt. jayanta+kumāra* > *சயந்தகுமாரன்>* த. *குமரன்* > **Skt.** *குமாரன்.*]

**சயந்தமம்** *šayandamam,* பெ.(n.) சாதி அடையாளம் (லிங்கம்); vermilion- *Bisulpheret of mercury* (சா.அக.).

**சயந்தன்** *šayandaṉ,* பெ.(n.) இந்திரனின் மகன்; Indra's son. *"இந்திர சிறுவன் சயந்தருகென" (சிலப் 3:119)*

[*Skt. jayanta*> *சயந்தன்.*]

**சயந்தி** *šayandi,* பெ.(n.) 1. பிறந்தநாட் பெருவிழா; birthday celebration. 2. வாத மடக்கி (மலை.); wind-killer. 3. சிற்றகத்தி (தைலவ.தைல.89); common sesban.

**த.வ. வெள்ளணிநாள்**

*[Skt. jayanti> த. சயந்தி.]*

**சயபத்திரம்** *šaya-pattiram,* பெ.(n.) தருக்கத்தில் தடைவிடைகளை முறைமையாக ஆய்ந்து அவையோரளிக்கும் வெற்றியாவணம் (பு.வெ.8, 19, உரை); certificate of success; record of contentions with the final decision of a learned council.

**த.வ. நாநலவாகை**

*[Skt. jaya+Patra> த. சயபத்திரம்.]*

**சயபருவதம்** *šaya-paruvadam,* பெ.(n.) காவிரியாறு தோன்றும் மலை; a mountain. *"ஆம்பல்பூத்த சயபருவத மடுவிலே" (இராமநா.பக்.21).*

*[Skt. sahya+Parvata> த. சயபருவதம்.]*

**சயபித்தம்** *šaya-pittam,* பெ.(n.) (வின்.) எலும்புருக்கி நோய்; tuberculosis.

*[சய + பித்தம்.]*

*[Skt. kṣaya> த. சயம்]*

**சயபேரி** *šaya-pēri,* பெ.(n.) **சயபேரிகை** பார்க்க; see *šaya-bērigai.*

**த.வ. வெற்றிமுரசு**

**சயபேரிகை** *šaya-bērigai,* பெ.(n.) வெற்றி முரசு; drum of victory.

**த.வ. வெற்றிபேரிகை**

*[சய + பேரிகை.]*

*[Skt. jaya > த. சயம்]*

**சயம்[1]** *šayam,* பெ.(n.) 1. வெற்றி; triumph, victory. *"தண்ணீர்ப்பந்தர் சயம்பெறவைத்தும்" (திருவாச.2, 58).* 2. கதிரவன் (சூரியன்) (அக.நி.); sun.

*[Skt. jaya> த. சயம்.]*

**சயம்[2]** *šayam,* பெ.(n.) 1. **சயரோகம்** பார்க்க; see *šaya-rōgam. "சயந்தான் பிரமேகம்" (விநாயகபு.69, 62).* 2. சிதைவு (வின்.); waste, loss.

*[Skt. kṣaya> த. சயம்.]*

**சயம்[3]** *šayam,* வி.எ.(adv.) தானாக; of one's own accord. *"சயமே யடிமை தலைநின்றார்" (திவ்.திருவாய்.8, 10, 2).*

*[Skt. svayam> த. சயம்.]*

**சயம்பு** *šayambu,* பெ.(n.) 1. தானாக உருவானது (நீல. வேதவாத.3); that which is self-existent. 2. சிவன் (பிங்.); *Śivan.* 3. பிரமன் (உரி.நி.); *Brahmā.* 4. அருகன்; Arhat. *"சங்கர னீசன் சயம்பு" (சிலப்.10, 186).*

**த.வ. தான்தோன்றி**

*[Skt. svayam-bhū> த. சயம்பு.]*

**சயம்புலிங்கம்** *šayambu-lingam,* பெ.(n.) திருக்கோயிலிலுள்ள இலங்கத்தொன்று (சைவச.பொது.431); one of *parārtta-lingam.*

*[Skt.svayam-bhū+linga>த.சயம்புலிங்கம்.]*

**சயமகள்** *šaya-magaḷ,* பெ.(n.) 1. (வெற்றிக் குரிய பெண்) கொற்றவை; *Durgā,* as Goddess of victory. *"கலைமகள் சயமகள்" (தேவா.569, 11).* 2. இரட்டை (மிதுன) யோரை (திவா.); gemini of the zodiac.

*[சயம்+மகள்.]*

*[Skt. jaya> த. சயம்]*

**சயமங்கலம்** *šaya-mangalams,* பெ.(n.) ஒள்ளூரியம் (வைடூரியம்) போன்ற கண்ணும் பல நிறத்தினையுமுடைய குதிரை (சுக்கிரந்தி. 317); a horse of variegated colour with eyes like cat's eye.

*[சயம்+மங்கலம்.]*

*[Skt. jaya > த. சயம்]*

**சயமரம்[1]** *šaya-maram,* பெ.(n.) தன் விழைவு வரைவு (சுயம்வரம்); self-choice of a husband by a princess or a daughter of

a *kṣatriya* at a public assembly of suitors. *"சயமர மறைதுமேனும்" (சூளா.மந்திர.119).*

*[Skt. svayam-vara> த. சயமரம்.]*

**சயமரம்²** *šaya-maram,* பெ.(n.) வெற்றிக் குறியான தோரணம்; triumphal arch. *"எத்திசையுஞ் சயமரங் கோடித்து" (திவ். பெரியாழ்.1, 1, 8).*

*[சயம்+மரம்.]*

*[Skt. jaya > த. சயம்]*

**சயரோகம்** *šaya-rōgam,* பெ.(n.) சயபித்தம் பார்க்க; see *šayapittam.*

*[Skt. kṣaya+rōga → த. சயரோகம்.]*

**சயலட்சுமி** *šaya-laṭcumi,* பெ.(n.) கொற்றவை; the Goddess of victory.

*[Skt. jaya+lakṣmi> த. சயலட்சுமி.]*

**சயவிசயர்** *šaya-višayar,* பெ.(n.) மாலுலகத்தில் (வைகுண்டத்தில்) திருமால் கோயிலின் வாயில்காவலரான இருவர்; the twin-deities guarding the portals of *Viṣṇu's* residence at *Vaiguṇḍam.* *"பரந்தாமன் சீர்ப் புனைமணி வாயில் காத்தபுகழ்ச் சயவிசயர்" (பாகவ.7, 1, 8).*

*[Skt. jaya+vijaya> த. சயவிசயர்.]*

**சயனக்கிருகம்** *šayaṉa-k-kirugam,* பெ.(n.) பள்ளியறை; bed-room.

*[Skt. šayana+gṛha →த. சயனக்கிருகம்.]*

**சயனம்** *šayaṉam,* பெ.(n.) 1. படுக்கை (திவா.); bed, couch. 2. படுத்திருக்கை; lying down, taking rest. 3. உறக்கம் (நித்திரை) செய்கை; sleeping. 4. புணர்ச்சி; sexual union.

*[Skt. šayana> த. சயனம்.]*

**சயனாதனம்** *šayaṉādaṉam,* பெ.(n.) ஒகவிருக்கை (யோகாசன) வகை (தத்துவப். 109, உரை); (*Šaiva.*) a yogic posture.

*[சயனம்+ஆதனம்.]*

*[Skt. šayana> சயனம்]*

**சயனாதி** *šayaṉādi,* பெ.(n.) கனவு (சொற்பனம்); dream (சா.அக.).

**சயனி-த்தல்** *šayaṉi-,* 4 செ.கு. வி.(v.i.) 1. படுத்தல்; to lie down, take rest. 2. கண் வளர்தல் அல்லது (நித்திரை) உறங்குதல்; to sleep. 3. புணர்தல்; to have sexual intercourse.

**த.வ. உறங்கல்**

*[Skt. šayana> த. சயனி-.]*

**சயனிப்பு** *šayaṉippu,* பெ.(n.) 1. உறக்கம் (நித்திரை); slumber. 2. புணர்கை; the act or state of having intercourse, cohabitation (சா.அக.).

*[Skt. šayana → த. சயனிப்பு.]*

**சயி-த்தல்** *šayi-,* 4 செ.குன்றாவி.(v.t.) வெல்லுதல்; to conquer. *"சலங்கொடு சயித்த வினை" (சேதுபு.கத்துரு.110).*

*[Skt. jay > த. சயி-.]*

**சயித்தகம்** *šayittagam,* பெ.(n.) சிற்ப நூல் முப்பத்திரண்டனுள் ஒன்று (இருசமய. சிற்பசாத்.3); a treatise on architecture, one of 32 *širpa-nūl.*

*[Skt. caityaka> த. சயித்தகம்.]*

**சயித்தம்** *šayittam,* பெ.(n.) அறிவன் கோயில் (சைத்தியம்); Buddhist temple. *"வானோங்கு சிமையத்து வாலொளிச் சயித்தம்" (மணிமே. 28. 131).*

*[Skt. caitya> த. சயித்தம்.]*

**சயித்தான்** *šayittāṉ,* பெ.(n.) பேய்; satan, devil.

*[U. shaitān> த. சயித்தான்.]*

**சயித்தி** *šayitti,* பெ.(n.) அரசு (சங்.அக.); pipal.

*[Skt. caitya> த. சயித்தி.]*

**சயிதூன்** *šayitūṉ,* பெ.(n.) ஒலிவை யெண்ணெய்; olive oil-olivae oleum (சா.அக.).

**சயிந்தம்** *šayindam,* பெ.(n.) 1. இலிங்கம்; vermilion. 2. இந்துப்பு; rock-salt or sindh salt (சா.அக.).

**சயிந்தர்** *šayindar,* பெ.(n.) சிந்து நாட்டினர்; people of sind. *"விராடர் மயிந்தர் சயிந்தர்களே" (கலிங்.317).*

*[Skt. sindhu> த. சயிந்தர்.]*

**சயிந்தவலவணம்** *šayindava-lavaṇam,* பெ.(n.) ஐந்துவகை உப்பில் (பஞ்சலவனத்துள்) ஒன்றும் சிந்து நாட்டில் உண்டாவதுமாகிய கல்லுப்பு வகை; a kind of rock salt found in sind, one of *pañja-lavaṇam*, q.v.

*[Skt. saindhava+lavaṇa> த. சயிந்தவ லவணம்.]*

**சயிந்தவி** *šayindavi,* பெ.(n.) ஓர் (இராகம்) பண் (பரத.இராக.55); (Mus.) a specific melody-type.

*[Skt. saindhavī> த. சயிந்தவி.]*

**சயிரேகம்** *šayirēgam,* பெ.(n.) மேக வண்ணக் குறிஞ்சி (மலை.); western Ghats blue nail dye.

*[Skt. sairēyaka> த. சயிரேகம்.]*

**சயிலகோபன்** *šayila-kōbaṉ,* பெ.(n.) (மலைகளின் மீது சினமுடையவன்) இந்திரன்; Indra, as one angry with mountains. *"தருவுடைச் சயிலகோபனும்" (கம்பரா. திருவவ.106).*

*[Skt. šaila+kōpa> த. சயிலகோபன்.]*

**சயிலநீர்** *šayila-nīr,* பெ.(n.) 1. தூய்மையான கங்கை; pure water. 2. பாறை நீர்; rock-water (சா.அக.).

*[சயிலம்+நீர்.]*

*[Skt. šaila>சயிலம்]*

**சயிலவருக்கு** *šayila-varukku,* பெ.(n.) மலை விளை மூலி; mountain herb (சா.அக.).

*[Skt. šaila + varga → த. சயிலவருக்கு.]*

**சயிலங்கமாலை** *šayilaṅga-mālai,* பெ.(n.) வெட்டிவேர் (மலை.); cuscus grass.

**சயிலம்** *šayilam,* பெ.(n.) மலை (பிங்.); mountain.

*[Skt. šaila> த. சயிலம்.]*

**சயிலாதி**[1] *šayilādi,* பெ.(n.) (மலைகளுள் முதன்மையானது) கயிலை (பிங்.); Mt. *Kailās,* as the foremost of mountains.

*[Skt. šaila > த. சயிலம் + ஆதி.]*

**சயிலாதி**[2] *šayilādi,* பெ.(n.) (சிலாதனுக்குப் புத்திரன்) நந்தி; Nandi, son of *Šilāda. "சயிலாதி—வாய்மொழியும்" (காஞ்சிப்பு. குமர.20).*

*[Skt. šailādi> த. சயிலாதி.]*

**சயிலுப்பு** *šayiluppu,* பெ.(n.) வளையலுப்பு (மூ.அ.); glass-gall.

*[Skt. šaila > த. சயிலம் + உப்பு.]*

**சயிலேகம்** *šayilēgam,* பெ.(n.) ஒரு நறுமணப் பண்டம்; a kind of fragrant resin, one of 32 *ōmāligai. "எண்ணுஞ் சயிலேக மின்புழுகு" (சிலப்.6, 77, உரை).*

*[Skt. šailēya> த. சயிலேகம்.]*

**சயு** *šayu,* பெ.(n.) 1. பெரும்பாம்பு; big snake. 2. மலைப்பாம்பு; mountain snake (சா.அக.).

**சர்க்கராகசுமரி** *šarkkarāga-šumari,* பெ.(n.) மூத்திரப்பையில் கல் உண்டாகும் நோய் (இங்.வை.); gravel.

*[Skt. šarkarā+ašmari> த. சர்க்கராகசுமரி]*

**சர்க்கரா** *šarkkarā,* பெ.(n.) நோய் வகை (M.L.); (Med.) calculus.

**சர்க்கரைபேரி** *šarkkarai-pēri,* பெ.(n.) பேரி வகை (இ.வ.); a kind of pear.

**சர்க்கா** *šarkkā,* பெ.(n.) கையினால் நூல் நூற்கும் கருவி ராட்டினம் (G.Sm.D.I.i, 264); hand spinning wheel.

த.வ. இராட்டை

*[U. carkhā> த. சர்க்கா.]*

**சர்க்கார்** *šarkkār,* பெ.(n.) 1. அரசு;; government. 2. தாழ்வாரம் (வின்.); veranda under a sloping roof.

*[U. sarkār> த. சர்க்கார்.]*

**சர்க்கார்காரியத்தன்** *šarkkār-kāriyattan,* பெ.(n.) அரசு அலுவலன் (உத்தி யோகஸ்தன்); public servant.

*[U. sarkār+kārya-stha → த.சர்க்கார் காரியத்தன்.]*

**சர்க்கார்தட்டி** *šarkkār-tatti,* பெ.(n.) அரசு (சர்க்கார்) உத்தரவு பெற்று கடை முகப்பில் வெயிற்படாதபடி இடும் தட்டி (இ.வ.); lit., screen put upon official sanction, screen, awning of a shop-window.

*[சர்க்கார்+தட்டி.]*

*[U. sarkār > த. சர்க்கார்]*

**சர்க்காரூழியம்** *šarkkār-ūliyam,* பெ.(n.) ஊதியமின்றி அரசாங்கத்துக்குச் செய்யும் வேலை (R.T.); work done for Government without remuneration.

த.வ. அரசுஊழியம்

*[சர்க்கார்+ஊழியம்]*

*[U. sarkār + சர்க்கார்]*

**சர்க்கில்தார்** *šarkkildār,* பெ.(n.) நாட்டின் செயலலுவல் புரியும் அலுவலன் (உத்தியோகத்தன்) (இ.வ.); executive officer in charge of a circle.

*[E. circle > த. சர்க்கில் + தார்.]*

**சர்க்கீல்** *šarkkīl,* பெ.(n.) மராட்டியர் ஆட்சியில் அரசியற் பணி செய்து வந்த அமைச்சர் (R.T.); the minister or chief officer vested with general control over administration, under Mahratta Government.

*[U. sarkhail > த. சர்க்கீல்.]*

**சர்க்கூட்டு** *šarkkūttu,* பெ.(n.) ஊர்சுற்றுச் செலவு (பிரயாணம்) (இ.வ.); tour, circuit.

*[E. circuit> த. சர்க்கூட்டு.]*

**சர்க்கெல்** *šarkkel,* பெ.(n.) **சர்க்கீல்** (R.T.) பார்க்க; see *šarkkīl.*

*[U. sarkhail → த. சர்க்கெல்.]*

**சர்க்கோடு** *šar-k-kōdu,* பெ.(n.) **சர்க்கூட்டு** (இ.வ.) பார்க்க; see *šarkkūttu.*

**சர்க்கோணம்** *šar-k-kōnam,* பெ.(n.) மலைமகள் (சாமளாதேவி) திருவீற்றிருக்கும் அறுகோணவிருக்கை; a hexagonal magical diagram forming the seat of the Goddess samala.



**சர்த்தி-த்தல்** *šartti-,* 4 செ.குன்றாவி.(v.t.) வாயாலெடுக்கை; vomit. *"சீறி மிகவே சர்த்திக்கும்" (பாலவா.931).*

*[Skt. chardi> த. சர்த்தி-.]*

**சர்தார்** *šardār,* பெ.(n.) அரசாங்க மேலதிகாரிகளுள் ஒருவன்; an officer of rank.

*[U. sardār> த. சர்தார்.]*

**சர்நாமா** *šarnāmā,* பெ.(n.) மேல்முகவரி (விலாசம்) (C.G.); superscription, address of a letter.

*[U. sarnāma> த. சர்நாமா.]*

**சர்ப்பகேது** *šarppa-kēdu,* பெ.(n.) அரவக் கொடியோன், துரியோதனன்; *Duryōdhana,* as having a banner with serpent-ensign. *"தன் மைந்தனையு முடனேவினன் சர்ப்பகேது" (பாரத.பதின்மூன்றாம்.81).*

*[Skt. sarpa-kētu> த. சர்ப்பகேது.]*

**சர்ப்பயாகம்** *šarppa-yāgam,* பெ.(n.) பாம்புகள் சாகும்படி செய்யும் வேள்வி (யாகம்) (பாகவத.); sacrificial rite for the destruction of serpents.

த.வ. அரவவேள்வி

*[Skt. sarpa+yāga> த. சர்ப்பயாகம்.]*

**சர்ப்பராச்சி** *šarpparācci,* பெ.(n.) பீநாறிச் சங்கு; smooth volkameria.

**சர்ப்பராசி** *šarppa-rāši,* பெ.(n.) நாணல் (சங்.அக.); kaus.

*[Skt. sarpa-rāši> த. சர்ப்பராசி.]*

**சர்ப்பராட்சியம்** *šarppa-rāṭciyam,* பெ.(n.) அக்கமணிக்காய் (உருத்திராட்சம்); olive linden-*Eleocarpus* tuberculatus (சா.அக.).

**சர்ப்பனை** *šarppaṉai,* பெ.(n.) ஏய்ப்பு; hyporcrisy, deception. *"சாமங்கடோறு மிவர்செய்யும் பூசைகள் சர்ப்பனையே" (பட்டினத்.பொது.44).*

*[Skt. sarppana> த. சர்ப்பனை.]*

**சர்ப்பாராதி** *šarppārādi,* பெ.(n.) 1. கருடன்; brahminy kite. 2. கீரி; mungoose. 3. மயில்; pea-cock (சா.அக.).

**சர்ப்பாரூடம்** *šarppārūḍam,* பெ.(n.) கணிய (ஆரூட) வகை (தஞ்.சர.iii, 34); (Astrol.) a mode of prediction.

*[Skt. sarpa+a-rudha→ த. சர்ப்பாரூடம்.]*

**சர்ப்பிராசி** *šarppirāši,* பெ.(n.) உணவு, உறைவிடம் முதலியன உதவுகை (வின்.); providing accomodation, etc.; supplying.

*[U. sarbarāhi> த. சர்ப்பராசி.]*

**சர்ப்பி** *šarppi,* பெ.(n.) நெய்; ghee. *"சர்ப்பிசமுத்திரம்".*

*[Skt. sarpis> த. சர்ப்பி.]*

**சர்ப்பிராகி** *šarppirāgi,* பெ.(n.) **சர்ப்பிராசி** பார்க்க; see *šarppirāši.*

*[Persn. sarba-rāhi> த. சர்ப்பிராகி.]*

**சர்ப்பிராயி** *šarppirāyi,* பெ.(n.) **சர்பிராகி** பார்க்க; see *šarppirāgi.*

**சர்பத்து** *šarbattu,* பெ.(n.) **சரபத்து** பார்க்க; see sarapattu.

*[U. sharbat> த. சர்பத்து.]*

**சர்பரா** *šarbarā,* பெ.(n.) உணவு முதலியன உதவுகை; purveying. supplying. *"சர்பராவுக்கெனப் பொருள் பறித்தான்" (இ.வ.).*

*[U. sarbarāh> த. சர்பரா.]*

**சர்பராசு** *šarba-rāšu,* பெ.(n.) (adj.) புகழ்பெற்ற (வின்.); distinguished, famous.

*[U. sarfarāz> த. சர்பராசு.]*

**சர்மம்** *šarmam,* பெ.(n.) சருமம் பார்க்க; see *šamam.*

*[Skt. carman> த. சர்மம்.]*

**சர்மா** *šarmā,* பெ.(n.) பார்ப்பனர் (பிராமணர்) பெயர்களின் பின் சேர்க்கப்படும் பட்டப் பெயர்; honorific title added at the end of names of Brahmins.

*[Skt. šarmā> த. சர்மா.]*

**சர்மாசனம்** *šarmāšaṉam,* பெ.(n.) சருமாசனம் பார்க்க; see *šammāšam.*

*[Skt. carman+ā-sana> த. சர்மாசனம்.]*

*த. ஆதனம்* > **Skt.** *ā-sana.*

**சர்வஅக்கிரகாரம்** *šarva-akkiragāram,* பெ.(n.) முற்றூட்டாக (சர்வமானியமாக) விடப்பட்ட இறையிலி நிலம் (பிரமதாயம்) (R.T.); village granted to Brahmins tax-free.

*[Skt.sarva+agra-hāra>த.சர்வஅக்கிரகாரம்.]*

**சர்வஇனாம்** *šarva-iṉām,* பெ.(n.) **சர்வ மானியம்** பார்க்க; see *šarva-māṉiyam.*

*[Skt. sarva+U. inām> த. சர்வஇனாம்.]*

**சர்வஉத்தரவு** *šarva-uttairavu,* பெ.(n.) விருப்பப்படி உத்தரவு முதலியன எழுதிக் கொள்ளும்படியாக ஒருவனுக்குக் கையெழுத்

திட்டுக் கொடுத்த தாள் (பாண்டி.); carte blanche, signed paper given to a person to write his own terms on it.

*[சர்வம்+உத்தரவு.]*

*[**Skt.** sarva > த. சர்வம்]*

**சர்வக்கியானம்** *šarva-k-kiyāṉam,* பெ.(n.) முற்ற (பூரண) பேரறிவு; (chr.) omniscience.

*[**Skt.** sarva+jñāna→ த. சர்வக்கியாணம்]*

**சர்வகடையம்** *šarva-kaḍaiyam,* பெ.(n.) கையணி வகை (parav.); a kind of bracelet.

**சர்வகர்த்திருத்துவம்** *šarva-karttiruttvam,* பெ.(n.) எல்லாவற்றையும் இயற்றுந் தன்மை; power to create all things.

*[**Skt.** sarva+kartṛ-tva> த. சர்வகர்த் திருத்துவம்]*

**சர்வகலாசாலை** *šarva-kalā-šālai,* பெ.(n.) பல்கலைக் கழகம்; university

*[சர்வம்+கலை+சாலை]*

*[**Skt.** sarva > சர்வ > த. கலை > **Skt.** கலா > த. கலா]*

**சர்வகலையகராதி** *šarva-kalai-y-agarādi,* பெ.(n.) எல்லாக் கலைகளையும் விளக்கும் அகராதி (பாண்டி.); encyclopaedia.

*[சர்வம்+கலை+அகராதி]*

*[**Skt.** sarva> சர்வம்]*

**சர்வகாடி** *šarva-kāḍi,* பெ.(n.) கடும் புளிப்பா யிருக்கும் ஊறுகாய் (காடி) (இ.வ.); very strong vinegar.

*[சர்வம்+காடி.]*

*[**Skt.** sarva> சர்வம்]*

**சர்வகிரகணம்** *šarva-kiragaṇam,* பெ.(n.) வான கோள்களின் முழு மறைப்பு (கிரகணம்) (C.G.); total eclipse.

**த.வ. நிறை ஒளிமறை**

*[**Skt.** sarva+grahaṇa> த. சர்வகிரகணம்.]*

**சர்வகொள்ளை** *šarva-koḷḷai,* பெ.(n.) முழுக்கொள்ளை (இ.வ.); whole sale plunder.

*[சர்வம்+கொள்ளை]*

*[**Skt.** sarva>சர்வம்]*

**சர்வசக்தி** *šarva-sakti,* பெ.(n.) முழு (சர்வ) வல்லமையுடையவன்; he who is omnipotent. *"சர்வசக்தி திரித்ததாகையாலே" (திருவிருத். 51, வ்யா.).*

*[**Skt.** sarva+šakti> த. சர்வசக்தி.]*

**சர்வசத்திமத்துவம்** *šarva-sattimat-tuvam,* பெ.(n.) பெருவல்லமையுடைமை (விவேகசிந்.பக்.4); omnipotence.

*[**Skt.**sarva+šakti-mat+tva>த. சர்வசத்தி மத்துவம்.]*

**சர்வசங்கநிவிர்த்தி** *šarva-saṅga-nivirtti,* பெ.(n.) எல்லாப் பொருளினும் பற்றுவிடுகை; renunciation of all worldly ties. *"சர்வசங்க நிவிர்த்தி வந்த தபோதனர்கள்" (சி.சி.8, 35).*

**த.வ. முற்றாகப்பற்றறுத்தல்**

*[**Skt.**sarva-saṅga+ni-vṛtti> த. சர்வசங்க நிவிர்த்தி.]*

**சர்வசங்கபரித்தியாகம்** *šarva-saṅga-parittiyāgam,* பெ.(n.) **சர்வசங்கநிவிர்த்தி** பார்க்க; see *šarva-saṅga-nivirtti.*

*[**Skt.** sarva-saṅga+ parityāga > த. சர்வசங்கபரித்தியாகம்.]*

**சர்வசங்காரகாலம்** *šarva-šaṅgāra-kālam,* பெ.(n.) உலக முழுதும் அழியுங்காலம்; the day of universal destruction, the Doomsday.

**த.வ. பேரழிவுக்காலம்**

*[சர்வ+சங்காரம்+காலம்]*

*[**Skt.**sarva+sam-hara>சர்வசங்காரம்+காலம்]*

**சர்வசாட்சி** *šarva-šāṭci,* பெ.(n.) (எல்லா வற்றையுங் காண்பவர்) கடவுள்; God, as observing everything.

*[**Skt.** sarva+sākṣin> த. சர்வசாட்சி.]*

**சர்வசாதகம்** *šarva-šādagam,* பெ.(n.) 1. எல்லா வகையாலும் உதவியாவது; that which is helpful in every day. 2. வேங்கை (மலை.); East Indian kino.

*[Skt. sarva+sādhaka> த. சர்வசாதகம்.]*

**சர்வசாமானியம்** *šarva-šāmāṉiyam,* பெ.(n.) மிகப் பொதுநிலையானது (சாதாரணமானது); anything very common.

*[Skt. sarva+sāmānya> த. சர்வ சாமானியம்.]*

**சர்வசாரம்** *šarva-šāram,* பெ.(n.) நூற்றெட்டுப் நிடதங்களுள் ஒன்று; an *upaniṣad,* one of 108.

*[Skt. sarva-sāra> த. சர்வசாரம்.]*

**சர்வசாரமூலிகை** *šarva-šāra-mūligai,* பெ.(n.) கற்றாழை, நீராரை, சிறுசின்னி, பற்பாடகம், வெள்ளறுகு, வல்லாரை, பெருங்கரந்தை, விஷ்ணுகாந்தி, சிவனார் வேம்பு ஆகிய ஒன்பது மூலிகைகளுக்கு வழங்கும் பொதுப்பெயர் (தைலவ.தைல.135, 38, உரை); a general name for the nine important medicinal plants, viz., *kaṟṟāḻai, nīrārai, siṟušiṉṉi, paṟ-pāḍagam, veḷḷaṟugu, vallārai, peruṅ-karandai, viṣṇu-gāndi, šivaṉār vēmbu.*

**த.வ. ஒன்பான்மூலிகை**

*[சர்வம்+சாரம்+மூலிகை.]*

*[Skt. sarva > சர்வ.]*

**சர்வசித்திரசம்** *šarva-sitti-rašam,* பெ.(n.) மருந்து வகை (பதார்த்த.1214); a medicine.

*[Skt. sarva+siddhi+rasa> த. சர்வசித்தி ரசம்.]*

**சர்வசித்து** *šarva-šittu,* பெ.(n.) வடமொழியாளரின் அறுபது ஆண்டுகளுள் இருபத்தொன்றாவது; the 21st year of the Jupiter cycle.

*[Skt. sarva-jit> த. சர்வசித்து.]*

**சர்வசுதந்திரம்** *šarva-šudandiram,* பெ.(n.) முழுவுரிமை; absolute right.

*[Skt. sarva+sva-tantra> த. சர்வசுதந்திரம்.]*

**சர்வசுவதானம்** *šarva-šuva-dāṉam,* பெ.(n.) எல்லாச் சொத்தையும் கொடுத்துவிடுகை; donation of one's entire property.

*[சர்வசுவ(ம்)+தானம்.]*

*[Skt. sarva + sva > த. சர்வசுவ(ம்).]*

**சர்வசுவாதீனம்** *šarva-šuvādīṉam,* பெ.(n.) 1. **சர்வசுதந்திரம்** பார்க்க; see *šarva-šudandiram.* 2. முற்றும் கட்டுப்படுதல்; absolute control.

*[Skt. sarva+svādhīna> த. சர்வசுவாதீனம்.]*

**சர்வஞ்ஞத்துவம்** *šarvaññattuvam,* பெ.(n.) முற்றுமுணர்ந்தவனாயிருக்குந் தன்மை; omniscience.

*[Skt. sarva-jña-tva> த. சர்வஞ்ஞத்துவம்.]*

**சர்வஞ்ஞை** *šarvaññadai,* பெ.(n.) (முற்றறிவுடையோன்) கடவுள்; God, as omniscient.

*[Skt. sarva-jña> த. சர்வஞ்ஞன்.]*

**சர்வத்தியாகம்** *šarva-t-tiyāgam,* பெ.(n.) முற்றத் துறக்கை; complete renunciation.

*[Skt. sarva+tyāga> த. சர்வத்தியாகம்.]*

**சர்வத்திர** *šarvattira,* வி.எ.(adv.) எங்கும்; everywhere, in every case.

*[Skt. sarva-tra> த. சர்வத்திர.]*

**சர்வத்திரரும்** *šarvattirarum,* பெ.(n.) எல்லாரும் (இ.வ.); all people.

*[Skt. sarva-tva> த. சர்வத்திரரும்.]*

**சர்வதா** *šarvadā,* கு.வி.எ.(adv.) எப்பொழுதும்; at all times, always.

*[Skt. sarva-dā> த. சர்வதா.]*

**சர்வதாரி** *šarvadāri,* பெ.(n.) வடமொழியாளரின் அறுபது ஆண்டுகளுள் இருபத்திரண்டாவது; the 22nd year of the Jupiter cycle.

*[Skt. sarva-dhārin> த. சர்வதாரின்.]*

**சர்வதும்பால-இனாம்** *šarvadumbāla-iṉām,* பெ.(n.) அரசு முத்திரையோடு கூடி உரிமையைக் கொடுக்கும் ஆவண(ம்) (சன்னது) மூலமாகப் பிரித்தாளும் இறையிலி நிலம் (R.T.); land granted rent-free under a dumbala or sanad.

[**Skt.** *sarva+***U.** *dumbālā+***U.** *iṉām> த. சர்வதும்பால-இனாம்.*]

**சர்வதுமாலா** *šarva-dumālā,* பெ.(n.) **சர்வதும்பால-இனாம்** (வின்.) பார்க்க; see *šarvadumbāla-iṉām.*

[**Skt.** *sarva+dumbāla> த. சர்வதுமாலா.*]

**சர்வதேசம்** *šarva-dēšam,* பெ.(n.) அனைத் துலக நாடுகள்; international. *"உலக வங்கி ஒரு சர்வதேச நிறுவனம் / இந்தக் கருத் தரங்கில் சர்வதேச நிபுணர்கள் கலந்து கொள்வார்கள்" (கிரியா.).*

[**Skt.** *sarva + த. தேயம் → தேசம் → த. சர்வதேசம்.*]

**சர்வதோபத்திரம்** *šarvadōpattiram,* பெ.(n.) 1. மிறைக்கவி (தண்டி.95, உரை); a fantastic metrical composition. எல்லாப் பக்கங்களிலும் போர் புரியுமாறு அமைக்கப்பட்ட படை வகுப்பு (வியூகம்); array of an army with fronts in all directions.

[**Skt.** *sarvatō-bhadra> த. சர்வதோ பத்திரம்.*]

**சர்வதோமுகமா-தல்** *šarvatōmugamā-,* 6 செ.கு.வி.(v.i.) எல்லா வழியிலும் நோக்கி நிற்றல்; to face all directions. *"விமலமுமாய்ச் சர்வதோமுகமாயிருக்கிற சிவஞானம்" (சி.சி.10, 5, மறைஞா.).*

**த.வ. பன்னோக்கு முகமாதல்**

[**Skt.** *sarvatō-mukha> த. சர்வதோ முகம் + ஆ-தல்.*]

**சர்வப்பிராயச்சித்தம்** *šarva-p-pirāyac cittam,* பெ.(n.) எல்லாத் தீங்குகளும் நீங்கும்படி பெரும்பாலும் இறப்புக் (மரண) காலத்தில் செய்து கொள்ளும் சடங்கு (இ.வ.); ceremony for the explation of all sins, performed generally at the time of death.

**த.வ. அனைத்துக்கரிசு நீக்கச்சடங்கு**

[**Skt.** *sarva +praya-c-citta >த. சர்வப் பிரயச்சித்தம்.*]

**சர்வம்** *šarvam,* பெ.(n.) முழுதும்; whole.

[**Skt.** *sarva> த. சர்வம்.*]

**சர்வமங்கலை** *šarva-maṅgalai,* பெ.(n.) (எல்லா நல்கையுஞ் செய்பவள்) மலைமகள்; *Malaimagaḷ,* as the dispenser of all blessings.

[**Skt.** *sarva-maṅgalā> த. சர்வமங்கலை.*]

**சர்வமானியம்** *šarva-māṉiyam,* பெ.(n.) எவ்வகை வரியுமில்லாது துய்த்தாளப்படும் நிலம்; rent-free grants; land exempt from all kinds of tax.

**த.வ. முற்றூட்டு**

[**Skt.** *sarva+mānya> த. சர்வமானியம்.*]

**சர்வமுக்தியார்நாமா** *šarvamuktiyār-nāmā,* பெ.(n.) எல்லாவற்றுக்குமாகக் கொடுக்கும் அதிகார ஆவணம் (C.G.); general power of attorney.

**த.வ. முற்றதிகார ஆவணம்**

[**Skt.** *sarva+* **U.** *mukhtārnāma> த. சர்வமுக்தியார்நாமா.*]

**சர்வமுகாசா** *šarva-mukāšā,* பெ.(n.) ஊழியம் புரிய வேண்டிய கட்டுப்பாட்டுக் குட்படாத இறையிலியாக விடப்பட்ட சிற்றூர் (மானிய கிராமம்) (R.T.); village granted without any condition of service.

[**Skt.***sarva+ persn. mukāsa > த. சர்வமுகாஸா → சர்வமுகாசா.*]

**சர்வமுகூர்த்தம்** *šarva-mugūrttam,* பெ.(n.) எல்லா நற்கருமங்கட்குமுரிய நல்வேளை; time held auspicious for all ceremonies.

த.வ. நன்முழுத்தம்

*[Skt. sarva+muhūrta> த. சர்வமுகூர்த்தம்.]*

**சர்வமுட்டாள்** *šarva-muṭṭāḷ,* பெ.(n.) அடி மடையன் (இ.வ.); absolute idiot.

*[சர்வம்+முட்டாள்]*

*[Skt. sarva > சர்வம்]*

**சர்வர்** *šarvar,* பெ.(n.) (ஓட்டல் போன்ற) உணவுச்சாலையில், உணவு பரிமாறும் வேலையைச் செய்பவர்; waiter; (in India) server.

த.வ. படையலன், பரிமாறி

*[E. server> த. சர்வர்]*

**சர்வரசம்** *šarva-rašam,* பெ.(n.) கறியுப்பு (R.); common salt.

*[Skt. sarva+rasa> த. சர்வரசம்.]*

**சர்வரோகநிவாரணி** *šarvarōganivāraṇi,* பெ.(n.) அனைத்து நோய்களையும் குணப் படுத்தவல்லது; cure all, panacea. *"இந்த மூலிகை ஒரு சர்வரோகநிவாரணி" (கிரியா.).*

த.வ. அனைத்து நோய் நீக்கி

*[Skt. sarva + rōga+ni-vāraṇa → த. சர்வரோகநிவாரணி.]*

**சர்வலோத்திரம்** *šarva-lōttiram,* பெ.(n.) காகோளி; caper-shrub-*Capparis aphylla* (சா.அக.).

*[Skt. sarva +lōdhra→த. சர்வலோத்திரம்.]*

**சர்வவல்லமை** *šarva-vallamai,* பெ.(n.) எல்லாம் வல்லனாந் தன்மை; omnipotence. *"சர்வ வல்லமையுள்ள தெய்வத்தின் முன்பாக".*

த.வ. பேராற்றல்

*[சர்வம்+வல்லமை]*

*[Skt. sarva> சர்வம்]*

**சர்வவித்தியாகரநூல்** *šarva-vittiyāgara-nūl,* பெ.(n.) **சர்வகலையகராதி** (பாண்டி.) பார்க்க; see *šarva-kalai-y-agarādi.*

*[சர்வம்+வித்தியாகரம்+நூல்]*

*[Skt. sarva+vidyākara>சர்வவித்தியாகரம்]*

**சர்வவியாபி** *šarva-viyābi,* பெ.(n.) (எங்கும் நிறைந்தவன்) கடவுள்; God, as omnipresent.

த.வ. எங்கும்பரவி

*[Skt. sarva-vyāpin> த. சர்வவியாபி.]*

**சர்வவில்லங்கசுத்தி** *šarva-villaṅga-šutti,* பெ.(n.) சொத்தின் பேரில் எவ்வகை முறை கேடுமின்றியிருக்கை; freedom from all encumberance; clearness of title-used in conveyancing.

த.வ. அவ்வில்லங்கச்செப்பம்

*[Skt. sarva+ த. வில்லங்கம் + šuddhi→ சர்வவில்லங்கசுத்தி.]*

**சர்வன்**[1] *šarvaṉ,* பெ.(n.) சிவன்; *Šivaṉ.*

*[Skt. šarva> த. சர்வன்.]*

**சர்வன்**[2] *šarvaṉ,* பெ.(n.) சிவனது பதினொரு உருத்திரருள் ஒருவர் (ஏகாதசருத்திர ரொருவர்) (தக்கயாகப்.443. உரை); one of *ēgātas-ruttirar,* q.v.

*[Skt. šarva> த. சர்வன்.]*

**சர்வாங்கசவரம்** *šarvaṅga-savaram,* பெ.(n.) உடல் முழுதும் மயிர் மழிக்கை (இ.வ.); shaving the whole body.

த.வ. முழுமழிக்கை

*[Skt. sarva+aṅga+kṣaura> த. சர்வாங்க சவரம்.]*

**சர்வாங்கசுந்தரன்** *šarvāṅga-sundaraṉ,* பெ.(n.) எல்லா உடலுறுப்பமைதிகளாளும் நிரம்பிய(அவயவங்களும்) அழகன்; one perfect in every limb; embodiment of beauty.

த.வ. முழுமேனியழகன்

*[Skt. sarva+aṅga+sundara>த. சர்வாங்கசுந்தரன்.]*

**சர்வாங்கதகனபலி** *šarvāṅga-tagaṉabali,* பெ.(n.) முற்றும் எரித்து விடுவதாகிய கருமியம் (பலி) (Chr.); whole burnt-offering, holocaust.

[Skt. sarva + aṅga + த. தகனம் + Skt. bali > சர்வாங்கதகனபலி.]

**சர்வாங்கதகனம்** *šarvāṅga-taganam,* பெ. (n.) 1. முழுமையும் எரிக்கை; burning the whole. 2. **சர்வாங்கதகனபலி** (வின்.) பார்க்க; see *šarvāṅga-taganabali.*

**த.வ. முற்றெரிவு**

[Skt. sarva + aṅga > சர்வாங்கம் + த. தகனம் → சர்வாங்கதகனம்.]

**சர்வாங்கவாயு** *šarvāṅga-vāyu,* பெ.(n.) நோய் வகை (கடம்ப.பு.இலீலா.132); a disease.

[Skt. sarva + aṅga + vāyu > த. சர்வாங்கவாயு.]

**சர்வாணி**[1] *šarvāṇi,* பெ.(n.) (சர்வனுடைய மனைவி) மலைமகள் (சிவரக.தாருகன்.30); *Malaimagaḷ,* as the spouse of *Šarvan.*

[Skt. šarvāṇi > த. சர்வாணி.]

**சர்வாணி**[2] *šarvāṇi,* பெ.(n.) பார்ப்பன (பிராமண)க் கூட்டத்துள் எல்லார்க்கும் ஒப்பக் கொடுக்கும் பொருள்(பூரி) (தட்சிணை); (*Brāh.*) distribution of small money gifts to every one in a company of Brahmins.

[Skt. sarvāṇi > த. சர்வாணி.]

**சர்வாத்துமகத்துவம்** *šarvāttumagattuvam,* பெ.(n.) எல்லாவற்றிலும் ஊடுருவியிருக்கை (விவேகசிந்.4); all pervasiveness, immanence.

**த.வ. அனைத்து ஊடாட்டம்**

[Skt. šarva+ātman+mahat-tva > த. சர்வாத்துமகத்துவம்.]

**சர்வாதிகாரம்** *šarvādigāram,* பெ.(n.) தனிமனிதன் அல்லது ஓர் அமைப்பு எல்லா அதிகாரங்களையும் வைத்துக் கொண்டு அடக்கி ஆளும் முறை; dictatorship. *"சர்வாதிகார ஆட்சியை மக்கள் ஒழித்திருக்கிறார்கள்" (கிரியா.).*

**த.வ. முற்றதிகாரம்**

[Skt. šarva > த. சர்வம் + த. அதிகாரம் → சர்வாதிகாரம்.]

**சர்வாதிகாரி**[1] *šarvādigāri,* பெ.(n.) எல்லா செயல் (காரியம்) களையுங் கவனிக்கும் அதிகாரி; general superintendent.

**த.வ. முற்றதிகாரி**

[Skt. sarva > சர்வம் + த. அதிகாரி → சர்வாதிகாரி.]

**சர்வாதிகாரி**[2] *šarvādigāri,* பெ.(n.) அரசியல் முதலிய செயல்களைத் தனித்து நிருவகிப் போன் (இக்.வ.); dictator.

[Skt. sarvā > சர்வம் + த. அதிகாரி → சர்வாதிகாரி.]

**சர்வாதித்தியம்** *šarvādittiyam,* பெ.(n.) பெரு விருந்து; public feast.

[Skt. sarva + diatya > த. சர்வாதித்தியம்.]

**சர்வாந்தர்யாமி** *šarvāndaryāmi,* பெ.(n.) (எங்கும் உள்ளிருந்து நியமிப்பவன்) கடவுள்; God, as Immanent.

**த.வ. அனைத்துள்ளகன்**

[Skt. sarva+antaryāmin > த. சர்வாந்தர் யாமி.]

**சர்வே** *šarvē,* பெ.(n.) நில அளவை, (land) survey. *"சர்வே எண்/சர்வே கல்" (கிரியா.).*

**த.வ. அளவை**

[E. survey > த. சர்வே.]

**சர்வேக்கல்** *šarvē-k-kal,* பெ.(n.) அரசு நில அளவையாளர் நிலத்தை அளந்து பிரித்திடும் எல்லைக்கல்; boundary stone fixed in surveying.

**த.வ. அளவைக்கல், எல்லைக்கல்**

[சர்வே+கல்]

[E. survey > சர்வே]

**சர்வேச்சுரன்** *šarvēccuran,* பெ.(n.) (எல்லா வுயிர்க்கும் நாதன்) கடவுள்; God, as the Lord of all.

[Skt. šarva+īšvara > த. சர்வேச்சுரன்.]

**சர்வேசன்** *šarvēšan,* பெ.(n.) **சர்வேச்சுரன்** பார்க்க; see *šarvēccuran.* *"சர்வேசவென்று நான்" (தாயு. கருணாகர.1).*

[Skt. šarva+īša > த. சர்வேசன்.]

**சரகாடி** *šaragāḍi,* பெ.(n.) **சர்வகாடி** (வின்.) பார்க்க; see *šarva-kāḍi.*

**சரச்சா** *saraccā,* பெ.(n.) கடகத்தினின்றுங் கொண்ட வாக்கிய எண்; (Astron.) sine of ascensional difference.

*[Skt. cara-jyā> த. சரச்சா.]*

**சரச்சுவதி** *šaraccuvadi,* பெ.(n.) 1. கலைமகள்; *Kalaimagaḷ.* 2. ஓர் ஆறு; a river. *"சாமியோடு சரச்சுவதியவள்" (தேவா.432, 8).*

*[Skt. sarasvatī> த. சரச்சுவதி.]*

**சரச்சொதி** *šaraccodi,* பெ.(n.) 1. **சரசுவதி**[1] பார்க்க; see *sarasvatī.* 2. மலைமகள்; *Malaimagaḷ "சுருதி சருவாணி சரச்சொதி" (கூர்மபு.திருக்கல்.22).*

*[Skt. sarasvatī> த. சரச்சொதி.]*

**சரசக்காரன்** *šaraša-k-kāraṉ,* பெ.(n.) 1. இனிய குணமுள்ளவன்; courteous, sweet-natured person. 2. பகடியன் (விகடன்); a mimic.

*[சரசம்+காரன்]*

*[Skt.sarasa > த. சரசம்]*

**சரசகேளிக்கை** *šaraša-kēḷikkai,* பெ.(n.) மகளிர் விளையாட்டு; love play (சா.அக.).

**சரசங்காட்டு-தல்** *šarašaṅ-kāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) உறுப்பசைவால் (அ) விளையாட்டு செய்தல் (அங்க சேட்டைகளால் பரிகசித்தல்) (இ.வ.); to ridicule by mimicking.

*[சரசம்+காட்டு]*

*[Skt. sa-rasa>சரசம்]*

**சரசச்சேட்டை** *šaraša-c-cēṭṭai,* பெ.(n.) காமச் செய்கை (சேட்டை); wanton sport (சா.அக.).

*[Skt.sa-rasa+cēṣṭa த. சரசச்சேட்டை.]*

**சரசசல்லாபம்** *šaraša-šallābam,* பெ.(n.) **சரசப்பேச்சு** பார்க்க; see *šaraša-p-pēccu.*

*[Skt.sa-rasa+sallāba> த. சரசசல்லாபம்.]*

**சரசப்பேச்சு** *šaraša-p-pēccu,* பெ.(n.) 1. காதற்பேச்சு; amorous talk. 2. வேடிக்கைச் சொல் (வார்த்தை); pleasantry, jest. *"தாயென்ற நீலிக்குஞ் சரசப்பேச்சு மாச்சு" (தனிப்பா.i, 388, 41).*

*[சரசம்-பேச்சு]*

*[Skt. sa-rasa > சரசம்]*

**சரசபம்** *šarašabam,* பெ.(n.) கடுகு (தைலவ.); mustard.

*[Skt. sarṣapa> த. சரசபம்.]*

**சரசம்**[1] *šarašam,* பெ.(n.) 1. இனிய குணம்; courteousness, sociability. 2. பகடி (பரிகாசம்) (வின்.); joking, mimicry, banter. 3. காமச் செய்கை (சேஷ்டை); amorous gestures. *"சரசவித மணவாளா" (திருப்பு. 133).* 4. மலிவு; cheapness, lowness of price. 5. தேக்கு (மலை.); teak. 6. உண்மை; truth. *"சரசம் போன் முந்துன் வளவிற் சிலவுடைமை வைத்து வைத்தே னென்றாய்" (விறலிவிடு.803).*

*[Skt. sa-rasa> த. சரசம்.]*

**சரசம்**[2] *šarašam,* கு.வி.எ.(adv.) இனிமையாக; sweetly, pleasantly. *"சரசம் வாசியென்று சொல்வை" (அழகர்கல.25).*

*[Skt. sa-rasa> த. சரசம்.]*

**சரசமாடு-தல்** *šarašam-āḍu,* 5 செ.கு.வி. (v.t.) போலியாக நடித்தல், ஏமாற்றுதல்; to feign. *"யாரிடம் சரசமாடுகிறாய்" (கிரியா.).*

*[சரசம்+ஆடு]*

*[Skt. sa-rasa> த. சரசம் + ஆடு]*

**சரசயனம்** *šara-šayaṉam,* பெ.(n.) **சரதல்பம்** பார்க்க; see *šaradalbam.*

*[Skt. šara+šay-ana> த. சரசயனம்.]*

**சரசலீலை** *šaraša-līlai,* பெ.(n.) புணர்ச்சி (அ) காம (சுரத) விளையாட்டு (இ.வ.); amorous caressing; dallying.

*[Skt. sarasa+līlā> த. சரசலீலை.]*

**சரசா** *šarašā,* பெ.(n.) **சரச்சா** (வின்.) பார்க்க; (Astron.) see *šaraccā.*

**சரசாங்கி** *šarašāṅgi,* பெ.(n.) மேள கர்த்தாக்களு ளொன்று (சங்.சந்.47); (mus.) a primary *rāga.*

*[Skt. sarasāṅgi> த. சரசாங்கி.]*

**சரசி** *šaraši,* பெ.(n.) 1. இனிய குணமுள்ளவ-ன்-ள்; courteous, sweet-natured person. 2. கிண்டல் செய்பவன்-ள் (பரிகாசக்காரன்-(வின்.); jester, humorist.

*[Skt. sa-rasa> த. சரசி.]*

**சரசிசம்** *šarašišam,* பெ.(n.) (தடாகத்தில் தோன்றுவது) தாமரை (சங்.அக.); lotus, as born in a pond.

*[Skt. sarasi-ja> த. சரசீசம்.]*

**சரசீருகம்** *šara-šīrugam,* பெ.(n.) **சரசிசம்** (சங்.அக.) பார்க்க; see *šarašišam.*

*[Skt. sarasi-ruha> த. சரசீருகம்.]*

**சரசு** *šarašu,* பெ.(n.) நீர் நிலை; a tank, pond, lake. *"பால்புரை வாவிகள் சரசு" (திருக்காளத்.பு.14, 8).*

*[Skt. saras> த. சரசு.]*

**சரசுராதி** *šarašurādi,* பெ.(n.) பெரு மருந்து; Indian birthwort-*Aristolochia indica* (சா.அக.).

**சரசுவதி[1]** *šarašuvadi,* பெ.(n.) 1. நான்முகன் (பிரமன்) தேவியாகிய கலைமகள் (சூடா.); the spouse of *Brahmāṉ,* the divine embodiment of speech and learning. 2. ஓர் ஆறு; a river. 3. பள்ளிக்கூடத்திற்கு முதலில் வரும் பையன் (இ.வ.); boy who is earliest in class-attendance.

*[Skt. sarasvati> த. சரசுவதி.]*

**சரசுவதி[2]** *šarašuvati,* பெ.(n.) நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; an upanisad, one of 108.

*[Skt. sarasavati-rahasya> த. சரசுவதி.]*

**சரசுவதி[3]** *šarašuvadi,* பெ.(n.) பண் வகை (பரத.ராக.104); a specific melody-type.

*[Skt. sarasvati> த. சரசுவதி.]*

**சரசுவதிகிருதம்** *šarašuvadi-kirudam,* பெ.(n.) **சரசுவதிநெய்** பார்க்க; see *šarašuvadi-ney.*

*[Skt.sarasvati+ghṛta → த.சரசுவதிகிருதம்]*

**சரசுவதிநெய்** *šarašuvati-ney,* பெ.(n.) நினைவாற்றல் முதலியவற்றை வளர்க்கும் (விருத்தி) மருந்துவகை (J.); medicinal ghee for improving memory, voice, etc.

*[சரசுவதி+நெய்]*

*[Skt.sarasvatī > சரசுவதி]*

**சரசுவதிபண்டாரம்** *šarašuvadi-paṇḍāram,* பெ.(n.) (கலைமகளின் பொருளறை) (பொக்கிசம்) நூலகம், புத்தக சாலை; library, as the treasure-house of *sarasvatī.*

*[சரசுவதி+பண்டாரம்]*

*[Skt. sarasvatī > சரசுவதி]*

**சரசுவதிபீடம்** *šarašuvadi-pīḍam,* பெ.(n.) 1. (கலைமகள் தங்குமிடம்) கல்வியாளன்; learned man, as the abode of *šarasvadi.* 2. கல்வி விளங்கும் இடம்; seat of learning. 3. **சிக்குப்பலகை** (இ.வ.) பார்க்க; see *šikku-p-palagai.*

*[சரசுவதி+பீடம்]*

*[Skt. sarasvatī>சரசுவதி]*

பீடு → பீடம்

**சரசுவதிபூசை** *šarašuvadi-pūšai,* பெ.(n.) தொள்ளிராவில் (நவராத்திரியில்) கலைமகள் (சரசுவதி) தேவியைப் பூசிக்கும் ஒன்பதாம் நாள்; the ninth day of *Navarāttiri* when *šarasvadī* is worshiped by the Hindus.

*[சரசுவதி+பூசை]*

*[Skt. sarasvatī>சரசுவதி]*

பூசி → பூசை

**சரசுவதிமனோகரி** *šarašuvadi-manōgari,* பெ.(n.) பண் வகை (பரத.ராக.103); (mus.) a specific melody-type.

*[Skt. sarasvatī+manohari> த. சரசுவதி மனோகரி.]*

**சரணக்கிரந்தி** *šarana-k-kirandi,* பெ.(n.) 1. கணுக்கால் சதை; that portion of the muscle between the knee and the ankle. 2. கணுக்கால்; ankle (சா.அக.).

*[Skt.carana+granthi→த. சரணக்கிரந்தி.]*

**சரணகோசம்** *šarana-kōšam,* பெ.(n.) மேற்சோடு (Pond); stockings.

*[Skt.carana+kōša> த. சரணகோசம்.]*

**சரத்து** *šarattu,* பெ.(n.) 1. ஆள்வினையுடைமை (சிரத்தை); diligence. *"சரத்துளதீரன்"* (பிரதாப. விலா.2). 2. பந்தயம்; wager. *'சரத்துப் போட்டுக் கொண்டிருக்கிறேன்'* (இ.வ.).

*[U. shart > த. சரத்து.]*

**சரத்தொட்டி** *šarattotti,* பெ.(n.) நீர்த்தொட்டி; water-tube (சா.அக.).

**சரந்தம்** *šarandam,* பெ.(n.) எருது; bull. (சா.அக.).

**சரப்பம்** *šarappam,* பெ.(n.) மயிர்; hair. (சா.அக.).

**சரபத்து**[1] *šarapattu,* பெ.(n.) இன்சுவைப் பருகவகையுளொன்று; a kind of sherbet.

*[U. sharbat> சர்பத் > த. சரபத்து.]*

**சரபத்து**[2] *šarapattu,* பெ.(n.) கம்பி (தந்தி) களமைந்த வாத்தியவகை; a kind of guitar with catgut strings.

*[U. sarod> > த. சரபத்து².]*

**சரபா** *šarabā,* பெ.(n.) உணவு முதலியன உதவுகை; purveying.

*[U. sarbarāh> த. சரபா.]*

**சரம்**[1] *šaram,* பெ.(n.) **சரத்ருது** (பிங்) பார்க்க; see *sarat-rudu.*

*[Skt. šarad> த. சரம்¹.]*

**சரம்**[2] *šaram,* பெ.(n.) இசையொலி (இசைச்சுரம்); musical note. *"பாடு மென்மைச் சரங்கொடு" (திரு. வாலவா. 57, 31).*

*[Pkt. sara> த. சரம்².]*

**சரமகவி** *šarama-kavi,* பெ.(n.) இறந்தவர்மீது இரங்கிப்பாடும் கையறுநிலைப் பாட்டு (கவி); elegy, dirge.

*[Skt. carma+kavi> த. சரமகவி.]*

**சரமகிரியை** *šarama-kiriyai,* பெ.(n.) ஈமக் கடன் (உத்திரக் கிரியை); funeral rites.

*[Skt. carama+kriyā> த. சரமகிரியை.]*

**சரமசுலோகம்** *šarama-šulōgam,* பெ.(n.) 1. **சரமகவி** பார்க்க; see *šarama-kavi.* 2. இறைவனிடம் தஞ்சமேற்பு (பிரபத்தி) முதலாவனற்றைத் தெரிவிக்குஞ் செஞ்சொல் (அ) வடமொழிச் செய்யுள் (சுலோகம்) (அஷ்டாதச முமுக்ஷூப்); verse which teaches the means of attaining final bliss.

*[Skt. carama+šlōka> த. சரமசுலோகம்.]*

**சரமண்** *šaraman,* பெ.(n.) தூய்மையானமண்; dhoby's earth. (சா.அக.).

**சரமதசை** *šarama-tašai,* பெ.(n.) இறக்கும் தறுவாய்; dying moments, last moments. *"பட்டர் சரமதசையிலே அருளிச் செய்த வார்த்தை" (ஈடு. 10, 10, 7).*

*[Skt. carama+dašā> த. சரமதசை.]*

**சரமதிசை** *šarāma-tišai,* பெ.(n.) சரமதசை பார்க்க; see *šarama tašai* (சா.அக.).

[சரமதசை → சரமதிசை]

**சரமதேகதாரி** *šarama-dēgadāri,* பெ.(n.) முத்திக்கு முன்னுள்ள கடைசி உடல முடையோன்; (Jaina) one who has taken a mortal body for the last time before final deliverance.

*[Skt.carma+dēha+dārin>த.சரமதேகதாரி.]*

*தாரி – தரிப்பவன் என்னும் பொருள்பயக்கும் ஓர் ஈறு.*

**சரமம்** *šaramam,* பெ.(n.) 1. முடிவு; end, finality. *"சரம முலகந் தவத்தழலாற் சாரும்"* (வேதாரணிய. திரிசங்.18) 2. மேற்கு (இலக்.அக.); west.

*[Skt. carma> த. சரமம்.]*

**சரமநாதம்** *šara-nādam,* பெ.(n.) ஓரைக்கு உற்ற சித்திரை, ஆடி, ஐப்பசி, தை மாதம் (வின்.); the month *cittiraiaṭi, aippaci* or tai corresponding to its appropriate *cara-rāci.*

*[Skt. cara+ñāda> த. சரமநாதம்.]*

**சரமை** *šaramai,* பெ.(n.) பெண்ணாய்; bitch, female dog (சா.அக.).

**சரமோபாயம்** *šaramōbāyam,* பெ.(n.) பரமனையே ஆம்புடை (உபாயமாகப்)யாகப் பற்றுகை (பிரபத்தி); *(vaišṇ)* absolute surrender to God, as the final means of salvation.

*[Skt. carama+upāya> த. சரமோபாயம்.]*

**சரயு** *šarayu,* பெ.(n.) அயோத்திக்கருகிலுள்ள ஓர் ஆறு; a rivers on which stands the ancient city of *Ayōdhyā.* *"சரயுவென்பது தாய்முலை யன்னது" (கம்பரா. பாலகா. ஆற்றுப். 12).*

*[Skt. sarayū> த. சரயு.]*

**சரராசி** *šara-rāši,* பெ.(n.) வழிநடைச் செலவுப் (பயணம்) முதலியவற்றுக்கு நற்காலமாகக் கொள்ளப்படும் மேடம், கற்கடகம், துலாம், மகரம் என்னும் ஓரை (இராசி)களுள் ஒன்று (விதான மரபி. 5, உரை); one of the four signs of the zodic, viz. mēṭam, karkaṭakan, tulām, makaram, auspicious for activities involvingmovement.

*[Skt. cara-rāsi> த. சரராசி.]*

**சரலகம்** *šaralagam,* பெ.(n.) நீர், தண்ணீர்; water (சா.அக.).

**சரவணப்பொய்கை** *šaravana-p-poygai,* பெ.(n.) இமயமலைச்சாரலிலுள்ளதும் முருகக் கடவுள் தோன்றிய இடமுமான நாணற் புல் உள்ள நீர்நிலை (பு.வெ. 9, 21, உரை); a sacred pond in the *Himālayas* amidst a thicket of kaus, where *Murugan* was born.

*[Skt. šara-vaṇa + த. பொய்கை → சரவணப்பொய்கை.]*

**சரவணபவன்** *šaravaṇa-bavaṇ,* பெ.(n.) (நாணற் பொய்கையிற் பிறந்தவன்) முருகக் கடவுள்; *Kandan,* as born in *šaravāṇa-p-poygai.* *"சரவணத்தின் பாங்கரின் வருதலாலே சரவணபவனென்றானான்" (கந்தபு. திருவிளை. 16.).*

*[Skt. šara-vaṇa+bhava>த.சரவணபவன்.]*

**சரவணோற்பவன்** *šaravaṇōrpavaṇ,* பெ.(n.) **சரவணபவன்** பார்க்க; see *šaravaṇa-bavaṇ.*

*[Skt. šara-vana+ud-bhava> த. சரவணோற்பவன்.]*

**சரவாச்சம்** *šaravāccam,* பெ.(n.) கறியுப்பு (வின்.); comman salt.

*[Skt. sarva-rasa> த. சரவாச்சம்.]*

**சரற்காலம்** *šarar-kālam,* பெ.(n.) 1. கூதிர்காலம்; autumn. *"சரற்கால சந்திரனிடையுவாவில் வந்து" (திவ். நாய்ச். 7,3).* 2. கார்காலம் (திவா.); rainy season.

*[சரத்து+காலம்]*

*[Skt. sarat> த. சரத்]*

**சரா** *šarā,* பெ.(n.) குறிப்பு (இ.வ.); remarks, note.

*[U. sharah> த. சரா.]*

**சராங்கு** *šarāṅgu,* பெ.(n.) 1. தோணிக்காரர் கண்காணி; native boatswain, chief of a lascar crew, skipper of a small native vessel. 2 தொடர்வண்டியில் வேலை செய்யும் தொழிலாளிகளுள் ஒருவன்; a railway mechanic.

[U. sar-hang> த. சராங்கு.]

**சராசரந்தாங்கி** *šarāšarantāṅgi*, பெ.(n.) 1. இளவழுக்கை; tender cocoanut. 2. மூன்று திங்கள் (மாதம்) ஆன கருப்பிண்டம்; three month foetus 3. நீர்ச்சுழல் வண்டு; whirling beetle in water (சா.அக.).

**சராத்தி** *šarātti*, பெ.(n.) இயங்குடைமைப் பொருள் (சங்கம) (C.G.); movable property.

[Skt. cara+āsti> த. சராத்தி.]

**சராதீதை** *šarātīdai*, பெ.(n.) மலைமகள் (கூர்மபு. திரக்கலியாண.23.); *pārvati*.

[Skt. cāratīta> த. சராதீதை.]

**சராப்பு** *šarāppu*, பெ. (n.) 1. பணப் பொறுப்பாளன்; teller employed by banks and commercial firms. 2. கருவூல (பொக்கிச) வேலைக்காரன்; treasury assistant. 3. காசுக்கடைக்காரன்; banker, dealer in precious metals.

த.வ.காசாளன்

[Skt. sarrāf> த. சராப்பு.]

**சராப்புகடை** *šarāppu-k-kaḍai*, பெ.(n.) காசுக்கடை (madr); a place of business where precious metals are sold.

த.வ. காசுக்கடை.

[Skt. sarrāf >சராப்பு]

**சராய்**[1] *šarāy*, பெ. (n.) காற்சட்டை; trousers.

**சராய்**[2] *šarāy*, பெ.(n.) வழிப்போக்கர் தங்கற்குரிய விடுதி (R.T.); mansion, rest house for travellers, caravansary.

[U. sarā> த. சராய்².]

**சராயம்** *šarāyam*, பெ.(n.) 1. வரவர வரி (தீர்வை) மிகுதிப்படும் நிலம்; land held on a progressive rent for a term of years. 2. முன் நிலவரித்தள்ளுபடி (வஜாச்) செய்ததற்குப் ஒத்ததன்மை (பிரதி)யாகத் தீர்வையில் அதிகமாகக் கூட்டும் வரி (M.N.A.D.I. 285.); additions, made to the assessment, of a sum equal to the amount of temporary remissions.

[U. shrāyam> த. சராயம்.]

**சராயு** *šarāyu*, பெ.(n.) கருப்பப் பை; womb.

[Skt. jarāyu> த. சராயு.]

**சராயுசம்** *šarāyušam*, பெ.(n.) உயிர்த் தோற்றம் நான்கனுள் கருப்பையினின்று தோன்றுவன(சி.சி. 2, 89.); viviparous animals, one of four *uyir-t-tōṟṟam*.

[Skt. jarāyu-ja> த. சராயுசம்.]

**சராரோபம்** *šarārōbam*, பெ.(n.) **சராசனம்** (சூடா) பார்க்க; see *šarāšaṉam*.

[Skt. šara+ā-rōpa> த. சராரோபம்.]

**சராவிகை** *šarāvigai*, பெ.(n.) மடக்குக்கட்டி; an abscess raised at the margin and depressed in its centre.

**சரிங்கம்** *šariṅgam*, பெ.(n.) மொச்சைக்காய்; country bean or green beans-*Dolichous* (genus) (சா.அக.).

**சரித்திரகாரன்** *šarittira-kāraṉ*, பெ.(n.) வரலாற்றாசிரியன்; historian.

[சரித்திரம்+காரன்]

[Skt. caritra >சரித்திரம்]

**சரித்திரம்** *šarittiram*, பெ.(n.) 1. வரலாறு; histroy, biography. *"எம்மான் சரித்திரங் கேட்டோர்" (சிவரக. பசாசு. 42)*. 2. ஒழுக்கம்; conduct. *"அவன் சரித்திரம் நன்றாயில்லை" (இ.வ.)*.

த.வ. வரலாறு.

[Skt. caritra> த. சரித்திரம்.]

**சரிதம்** *šaridam,* பெ.(n.) 1. **சரித்திரம்1** பார்க்க; see *šarittiram, "ஆரிச்சந்திரன்றன் சரிதமதை"* (அரிச். பு. பாயி. 13). 2. **சரித்திரம்,** பார்க்க; see *sarittiram "நெறியில் சரிதமும்" (பாரத. வேத்திர. 40)*

*[Skt. carita> த. சரிதம்.]*

**சரிதை** *šaridai,* பெ.(n.) 1. **சரித்திரம்** பார்க்க; see *sarittiram. "வேடம் பலவாஞ் சரிதை கண்டேன்"* (தேவா. 830, 3). 2. **சரியை** பார்க்க; (siva) see *šariyai. "சரிதை நற்கிரியை யோகம்"* (பிரபுலிங். சித்தரா. 69). 3. இரவலர்க்கு வழங்கும் பொருள்; alms. *"இன்றுநீர் சரிதை போகி நம்மிடை வருக" (யசோதர.1, 22).*

*[Skt. carita> த. சரிதை.]*

**சரியாபாதம்** *šariyā-pādam,* பெ.(n.) சிவாகமப் பகுதி நான்கனுள் ஒன்று (பெரியபு. தில்லைவா. சூச. பக். 59).; (siva) one of the four sections into which *śivāgamam* is divided.

*[Skt. caryā+த. பாதம் → த. சரியாபாதம்.]*

**சரியாவான்** *šariyāvān,* பெ.(n.) தொண்டு (சரியை) செய்பவன். (சி.சி. 12, 5, சிவாக்.); one who practises the religious duties of *šariyai.*

*[Skt. caryā+வான்> த. சரியாவான்.]*

**சரியையில்ஞானம்** *šariyaiyil-ñānam,* பெ.(n.) சிவபெருமானைக் குறித்த ஒன்றல் (தியானம்) உணர்வில் (பாவனை) உறைப்பான ஓர் அனுபவ உணர்ச்சி. (சி. போ. பா. 8, 1, பக். 357); (siva) ecstatic state in the meditation on *šivan.*

*[Skt. caryā>சரியை+ த. இல் + Skt. jñāna > த. சரியையில்ஞானம்.]*

**சரியையில்யோகம்** *šariyaiyil-yōgam,* பெ.(n.) மனத்தின்கண் சிவபெருமானை நினைத்து ஒன்றுதல் (தியானிக்கை) (சி. போ. பா. 8, 1, பக். 357); (šivam) meditation on *šivan.*

*[Skt. caryā > த. சரியை + த. இல் Skt. yoga.]*

**சரியையிற்கிரியை** *šariyaiyir-kiriyai,* பெ.(n.) ஆவரண வடிவங்களில் ஒருவரைப் பூசிக்கை. (சி. போ. பா. 8, 1, பக். 357).; (saivam) worship of *šiva's* manifested forms in a temple.

*[Skt. caryā + த. இல் + Skt. kriyas> த. சரியையிற்கிரியை.]*

**சரியையிற்சரியை** *šariyaiyir-šariyai,* பெ.(n.) திருக்கோயிலில் அலகிடல் மெழுகல் முதலிய திருப்பணிச்செயல் (சி. போ. பா. 8, 1. பக். 357).; (*Šaiva*) personal service in temple, such as cleaning.

*[Skt.caryā+ த.இல் +caryā→த. சரியையில் சரியை.]*

**சரிலம்** *šarilam,* பெ.(n.) தண்ணீர்; cold water (சா.அக.).

**சரிற்புதல்வன்** *šarir-pudalvan,* பெ.(n.) (கங்கா நதியின் புத்திரன்) வீடுமன்; *Bhīsman,* as the son of the river Ganges. *"சரிற்புதல்வனுக்கு நல்லறக்கடவுளுக்கு முறையா" (பாரத. வாரணா. 54).*

*[சரித்+புதல்வன்]*

*[Skt. sarit > த. சரித்]*

**சரீரக்கனப்பு** *šarīra-k-kanappu,* பெ.(n.) உடற்குருதி (அரத்த) மிகுதியால் உடல் கனமாயிருக்கை; heaviness of body as in plethora.

*[சரீரம்+கனப்பு]*

*[Skt.šarīra> த. சரீரம்]*

**சரீரக்கூறு** *šarīra-k-kūru,* பெ.(n.) 1. உடலின் பகுதி; component or anatomical parts of the body. 2. **சரீரப்போக்கு** பார்க்க; *see sarira-p-pōkku. "சரீரக்கூறு அறிந்து மருந்து கொடுக்க வேண்டும்" (இ.வ.).*

*[சரீரம்+கூறு]*

*[Skt. šarīra > சரீரம்]*

**சரீரசகாயம்** *šarira-šagāyam,* பெ.(n.) உடலுழைப்பாற் செய்யக்கூடிய உதவி (இ.வ.); help afforded by personal labour.

*[Skt. šarira+sahāya > த. சரீரசகாயம்.]*

**சரீரசம்பந்தம்** *šarira-šambandam,* பெ.(n.) 1. அரத்த உறவு; blood relationship. 2. புணர்ச்சி (இ.வ.); sexual intercourse.

*[Skt. šarira+sam-bandha>த.சரீர சம்பந்தம்.]*

**சரீரசம்ரட்சனை** *šarira-šamratcanai,* பெ.(n.) 1. உடலைப் போற்றுகை; protection of care of the person. 2. வாழ்க்கைப்படி (சீவனாம்சம்) (இக். வ.); maintenance.

*[Skt. šarira+samraksana→ த. சரீர சம்ரட்சணை.]*

**சரீரசரீரிபாவம்** *šarira-šariri-bāvam,* பெ.(n.) உடலுக்கும் (சரீரத்திற்கும்) உயிர்க்கும் (சரீர முடையவனுக்கும்) உள்ள உறவு (சம்பந்தம்) (சி. போ. பா. 8, 4, பக். 375); relationship of body and soul.

**த.வ. உடலுயிர் உறவு**

*[Skt. šarira-šariri-bhāva > த. சரீரசரீரி பாவம்.]*

**சரீரசாத்திரம்** *šarira-šāttiram,* பெ.(n.) உடற்கூறு பற்றிய நூல் (இக்.வ.); physiology.

**த.வ. உடற்கூற்றுநூல்**

*[Skt. šarira + šāstra → த. சரீரசாஸ்திரம் → சரீரசாத்திரம்.]*

**சரீரத்திரயம்** *šarira-t-tirayam,* பெ.(n.) பருவுடல், நுண்ணுடல் காரண உடல்கள்; (phil.) three kinds of bodies, viz. *tūla-šariram, cūkkuma-šariram, kārana-šariram.*

*[Skt. šarira+traya+ > த. சரீரத்திரயம்.]*

**சரீரத்துபானம்** *šarirattubānam,* பெ.(n.) முலையமுது; women's breast milk.

*[Skt. sarira> த. சரீரம் + த. அத்து + Skt. pāna→சரீரத்துபானம்.]*

**சரீரதண்டனை** *šarira-dandanai,* பெ.(n.) மெய்வருத்தம்; corporal punishment.

*[சரீரம்+தண்டனை]*

*[Skt. sarira> த.சரீரம்]*

**சரீரதருமம்** *šarira-darumam,* பெ.(n.) **சரீரப்போக்கு** பார்க்க; *see šarira-p-pōkku.*

*[சரீரம் + தருமம்.]*

*[Skt. šārira > த.சரீரம்.]*

**சரீரப்பழுது** *šarira-p-paludu,* பெ.(n.) உறுப்புக் குறைவு (அங்கவீனம்)(R); deformity.

*[சரீரம்+பழுது]*

*[Skt. šarira> த. சரீரம்]*

**சரீரப்போக்கு** *šarira-p-pōkku,* பெ.(n.) உடல் நிலை; nature of the body, constitution.

*[சரீரம்+போக்கு]*

*[Skt. šarira> த. சரீரம்]*

**சரீரபதனம்** *šarira-padanam,* பெ.(n.) இறப்பு; lit. falling off of the body, death. *"சரீரபதனபர்யந்தஞ் செய்யப்படும் நித்தியகன் மாதிகள்" (சிவசம. 69).*

*[சரீரம்+பதனம்]*

*[Skt. šarira> த. சரீரம்]*

**சரீரபந்தம்** *šarira-bandam,* பெ.(n.) **சரீர சம்பந்தம்** பார்க்க; see *šarira-šambandam.*

**சரீரம்** *šariram,* பெ.(n.) 1. உடல் (பிங்); body. 2. தனியொருவர்; individual person. *"இப் பன்னிருவருக்குஞ் சரீரம்பிரதி ஆழாக்கு நெய்யும்" (S.i.i.iii, 3).*

*[Skt. šarira> த. சரீரம்.]*

**சரீரயாத்திரை** *šarira-yāttirai,* பெ.(n.) பிழைப்பு (சீவனம்); livelihood, as means of sustaining the body.

*[Skt. šarira+yatra> த. சரீரயாத்திரை.]*

**சரீரவதை** *šarira-vadai,* பெ.(n.) உடல் உறும் துன்பம் (காயக்கிலேசம்) (வின்); mortification of body by austere penance.

*[சரீரம் + வதை.]*

*[Skt. šarira> த. சரீர.]*

**சரீரவாக்கு** *šarira-vākku,* பெ.(n.) **சரீரப்போக்கு** (வின்) பார்க்க; see *šarira-p-pōkku T. bāgu*

*[Skt. šarira> சரீரம் + த. வாக்கு → சரீரவாக்கு.]*

**சரீரவாகு** *šarira-vāku,* பெ.(n.) **சரீரப்போக்கு** பார்க்க; see *šarira-p-pōkku.*

*[Skt. šarira> சரீரம் + த. வாகு > த. சரீரவாகு.]*

**சரீரி** *šariri,* பெ.(n.) (சரீரத்தை) உடையது) உயிர்; soul, as the owner of the body.

*[Skt. šaririn> த. சரீரி.]*

**சரீராவரணம்** *šarirāvaraṇam,* பெ.(n.) தோல்; the skin covering the body; integument (சா.அக.).

*[சரீரம் + ஆவரணம்.]*

*[Skt. šarira+a-varaṇa →த. சரீராவரணம்.]*

**சருக்கராபம்** *šaru-k-karābam,* பெ.(n.) மணி (இரத்தின) வகை (சுக்கிரநீதி, 186.); a kind of gem.

*[Skt. šarka-rābha> த. சருக்கராபம்.]*

**சருப்பணம்** *šaruppaṇam,* பெ.(n.) குதிரை கதிவகை (சுக்கிர நீதி, 72); a pace of horse.

*[Skt. sarpaṇa> த. சருப்பணம்.]*

**சருப்பதோபத்திரம்** *šaruppadōpattiram,* பெ.(n.) 1. சதுரமொன்றில் 64 அறைகள் அமைத்து அவற்றில் 32 எழுத்துள்ள செய்யுளை இருமுறை எழுதிச் சதுரத்தின் எந்தபக்கத்தினின்று தொடங்கினும், அது படிக்கவரும்படி அமைக்கப்படும் மிறைக்கவி (தண்டி. 95, உரை); a fancy verse of 32 letters which, when entered twice in a square of 64 compartments, will read identically from any corner of the square.. 2. **சர்வதோபத்திரம் 2.** பார்க்க; see, *šarvadō-pattiram "போரியூகஞ் சருப்பதோ பத்திரமாக வணிசெய்து"* (பாரத. ஒன்பதாம். 10). 3. பலநிறப்பொடிகளைக் கொண்டு வேள்வி (ஓம)க் குண்டத்திற்கு முன்பாக இடும் கோலம்; figure drawn with powders of varied colours on the floor of a sacrificial ground. *"நுண்பொடிகடொக்க பன்னிறச் சருப்பதோ பத்திரந் துணையும்" (காஞ்சிப்பு. திருக்கண். 24).*

*[Skt. sarvatōbhadra> த. சருப்பதோ பத்திரம்.]*

**சருப்பாங்கக்கல்** *šaruppāṅga-k-kal,* பெ.(n.) ஒரு வகைக்கல் (M.M. 248); serpentine hydrous silicate of magnesia.

*[Skt. sarpa + aṅga + த.கல்> த. சருப்பாங்கக்கல்.]*

**சருபந்து** *šarubandu,* பெ.(n.) **சருவந்து** பார்க்க; see *šaruvandu.*

**சருமகன்** *šaru-magaṉ,* பெ.(n.) **சருமகாரன்** பார்க்க; see *šarumakāraṉ.*

**சருமகாரன்** *šaruma-kāraṉ,* பெ.(n.) செம்மான்; leather-worker.

*[Skt. carma > சருமம் + த.காரன் → த. சருமகாரன்.]*

**சருமசோபை** *šaruma-šōbai,* பெ.(n.) தோல் தடித்திருக்கையாகிய நோய் (இங்.வை.); hypertrophy of the skin.

*[Skt. carman+šōphā> த. சருமசோபை.]*

**சருமபந்தம்** *šaruma-bandam,* பெ.(n.) மிளகு (தைலவ. தைல. 5); black pepper.

*[Skt.dharmapattana> த. சருமபந்தம்.]*

**சருமம்** *šarumam,* பெ.(n.) 1. தோல்; skin, hide, leather. *"தைப்பமை சருமத்து"* (தொல். சொல். 402, உரை) 2. தோலாலாகிய பாய் (பிங்.); skin commonly of antelope or tiger, used as seat or bed. 3. கேடயம் (சங். அக.); shield. 4. மரப்பட்டை; bark of a tree.

*[Skt. carman > த. சருமம்.]*

**சருமன்**[1] *šarumaṉ,* பெ.(n.) **சருமகன்** (வின்) பார்க்க; see *šarumagaṉ.*

*[Skt. carman > த. சருமன்[1].]*

**சருமன்**[2] *šarumaṉ,* பெ.(n.) **சர்மா** பார்க்க; see *šarmā. "சருமன் வருமன்... சார்த்தி வழங்குமியற் பெயர்கள்" (திருவானைக். கோச்செங். 69).*

*[Skt. šarman > த. சருமன்[2].]*

**சருமாசனம்** *šarumāšaṉam,* பெ.(n.) ஒரு வகை ஒகவிருக்கை (யோகாசனம்); a kind of yogic posture.

*[Skt. carmāsana > த. சருமாசனம்.]*

**சருவக்கியன்** *šaruvakkiyaṉ,* பெ.(n.) முற்றறி வுடையோன்; God, as omniscient. *"உயர் சருவக்கியன்" (வாயசங். பாசுப. 10).*

*[Skt. sarva-jña → த. சர்வஞ்ஞன் → சருவக்கியன்.]*

**சருவகம்** *šaruvagam,* பெ.(n.) 1. தண்ணீர்; water. 2. மனம்; mind.

**சருவசங்காராதனம்** *šaruva-šaṅgārā-daṉam,* பெ.(n.) ஒகவிருக்கை (யோகாசன) வகை. (தத்துவப். 108, உரை); *(Šivaṉ)*a yogic posture.

*[Skt. sarva+saṃhāra > த. சருவ சங்காரம் + த. ஆதனம் → சருவசங்காராதனம்.]*



**சருவசத்தி** *šaruva-šatti,* பெ.(n.) மலைமகள் (பார்வதி) (கூர்மபு. திருக்கலியாண.23); *Pārvati.*

*[Skt. sarva-šakthi> த. சருவசத்தி.]*

**சருவசாதகம்** *šaruva-šadagam,* பெ.(n.) **சர்வசாதகம்** பார்க்க; see *šarva-šādagam.*

*[Skt.sarva+sādhaka → த. சருவசாதகம்.]*

**சருவசித்து**[1] *šaruva-šittu,* பெ.(n.) எல்லா வற்றையும் வென்றவன்; all-conqueror. *"சருவசித்தாகிமே லக்ஷயனாகுவாய்" (சரபேந்திர. குற. 17. 8).*

*[Skt. sarva-jit> த. சருவசித்து.]*

**சருவசித்து**[2] *šaruvašittu,* பெ. (n.) **சர்வசித்து** பார்க்க; see *šarva-šittu.*

*[Skt. sarva-jit → த. சர்வசித்து → சருவசித்து.]*

**சருவணம்** *šaruvaṇam,* பெ.(n.) 1. உண்ணல்; to eat. 2. வாய்; the mouth (சா.அக.).

**சருவதா** *šaruvadā,* வி.எ.(adv.) **சர்வதா** பார்க்க; see *šarvadā. "இருவரன்பும் சருவதா ஒருவரன்பாக" (சிலப். 1, 62, உரை).*

*[Skt.sarva-dā→த. சர்வதா → சருவதா.]*

**சருவதாரி** *šaruvatāri,* பெ.(n.) **சர்வதாரி** பார்க்க; see *šarvadāri.*

*[Skt. sarva-dhārin → த. சர்வதாரி → சருவதாரி.]*

**சருவந்து** *šaruvandu,* பெ.(n.) தலைக்கவசம்; helmet. *"சருவந்து கைக்கொண்டு" (இரகு. திக்குவி. 232).*

*[U. sarband>širō-bandha →த. சருவந்து.]*

**சருவம்** *šaruvam,* பெ.(n.) **சர்வம்** பார்க்க; see *šarvam.* *"சருவநஞ்சிவைபோம்" (பதார்த்த. 1020).*

*[Skt. sarva > த. சருவம்.]*

**சருவமுத்திப்பிரசங்கம்** *šaruva-mutti-p-pirašaṅgam,* பெ.(n.) எல்லாரும் முத்தி பெறலாமென்ற கொள்கை; theory of universal salvation.

*[Skt.sarva-mukti-prasaṅga> த.சருவ முத்திப்பிரசங்கம்.]*

**சருவரி** *šaruvari,* பெ.(n.) 1. இரவு; night. *"சருவரி வாரல்" (பதினொ. திருவலஞ். 7).* 2. இருள் (பிங்.); darkness, gloom.

*[Skt. šarvarī> த. சருவரி.]*

**சருவவியாபி** *šaruva-viyābi,* பெ.(n.) **சர்வ வியாபி** பார்க்க; see *šarva-viyābi.*

*[Skt.sarva+vyāpin→த. சர்வவியாபி → சருவவியாபி.]*

**சருவாங்கம்** *šaruvāṅgam,* பெ.(n.) 1. உடம்பு முழுதும்; body as a whole. 2. எல்லா உறுப்புகள்; all organs.

*[Skt.sarva+aṅga → த. சர்வாங்கம் → சருவாங்கம்.]*

**சருவிதம்** *šaruvidam,* பெ.(n.) உண்ணல்; eating (சா.அக.).

**சருவே** *šaruvē,* பெ.(n.) நில முதலியவற்றை அளக்கை (இக்.வ.); measurement of land, etc.

*[E. survey> த. சருவே.]*

**சருவோக்தம்** *šaruvōktam,* பெ.(n.) சிவாகமங்கள் இருபத்தெட்டனுள் ஒன்று. (சைவச பொது. 335, உரை); an ancient *šaivam* scripture in Sanskrit, one of 28 *Šivāgamam* q.v.

*[Skt. šarvōkta> த. சருவோக்தம்.]*

**சரூபாயனம்** *šarūbāyaṉam,* பெ.(n.) வழிபாட்டு உருபோடுதல் (செபம்); prayers (சா.அக.).

**சரூர்** *šarūr,* பெ.(n.) விரைவு; promptitude, dispatch.

*[U. zarūr> த. சரூர்.]*

**சரை¹-த்தல்** *šarai-ttal,* 4 செ.கு.வி.(v.i.) முதுமையடைதல்; to grow old. *"சரைத்ததென் யாக்கை" (ஞானவா. சித். 20).*

*[Skt. jarā> த. சரை¹-.]*

**சரை²** *šarai,* பெ.(n.) 1. நரை மயிர் (பிங்.); grey hair. 2. கிழத்தனம்; old age, decrepitude. *"நிகரிலாத் தருமமே சரைமரண நீக்கி" (சிவரக. வருணராச. 35).*

*[Skt. jarā> த. சரை².]*

**சரோசம்** *šarōšam,* பெ. (n.) **சரோருகம், 1** (சூடா.) பார்க்க; see *šarōrugam.*

*[Skt. sarō-ja> த. சரோசம்.]*

**சரோசரம்** *šarōšaram,* பெ.(n.) இரும்பு; iron (சா.அக.).

**சரோசனம்** *šarōšaṉam,* பெ.(n.) சினத்தோடு கூடயிருக்கை; being in anger.

*[Skt. sa-rōṣaṇa> த. சரோசனம்.]*

**சரோருகம்** *šarōrugam,* பெ.(n.) 1. தாமரை; lotus. *"முக சரோருகத்தினார்" (பாரத. வாரணா. 65).* 2. அளறு (நரக)வகை (சிவதரு. சுவர்க்க நரக. 108.); a hell.

*[Skt. sarō-ruha> த. சரோருகம்.]*

**சரோருகன்** *šarōrugaṉ,* பெ.(n.) (தாமரை யினின்று தோன்றியவன்) நான்முகன்; *brahmāṉ,* as born in lotus. *"கமலமென் பொகுட்டுமேவிய வரசரோருகன்" (கம்பரா. திருவவ. 5).*

*[Skt. sarō-ruha> த. சரோருகன்.]*

**சரோவரம்** *šarōvaram,* பெ.(n.) சிறந்த பொய்கை; lake of special excellence.

*[Skt. sarō-vara> த. சரோவரம்.]*

**சல்தி** *šaldi,* வி.எ.(adv.) விரைவு; quickly.

*[U. jaldī> த. சல்தி.]*

**சல்லகண்டம்** *šalla-kaṇḍam,* பெ.(n.) புறா (யாழ்.அக.); dove.

*[Skt. jhalla-kantha> த. சல்லகண்டம்.]*

**சல்லரி** *šallari,* பெ.(n.) பூடுவகை; (M.M.404) apium graveolens.

*[E. celery> த. சல்லரி.]*

**சல்லாத்து** *šallāttu,* பெ.(n.) மா, பலா முதலிய பழங்களைத் துண்டாக நறுக்கிக் கூட்டிச் செய்யும் ஒருவகை இனிப்புணவு; salad.

த.வ. பழக்கூட்டு

*[E. salad> த. சல்லாத்து.]*

**சல்லாபத்தரு** *šallāba-t-taru,* பெ.(n.) வினா விடையாக நாடகவரங்கிற் பாடும் பாடல் (வின்.); stage song in the form of a duet.

*[Skt.sallāpa+dhruva > த. சல்லாபத்தரு.]*

**சல்லாபம்** *šallābam,* பெ.(n.) 1. கலந்துரையாடல் pleasant conversation, dialogue. 2. காதற்பேச்சு; a amorous talk. *"சல்லாப மாதுலீலர்" (குற்றா. குற. 16).* 3. வினா விடை (திவா); catechism, discourse in the form of questions and answers.

*[Skt. sallāpa> த. சல்லாபம்.]*

**சல்லாபன்** *šallāban,* பெ.(n.) மகிழ்நன் (பிங்.); jovial person.

*[Skt. sallāpa> த. சல்லாபன்.]*

**சல்லாரி** *šallāri,* பெ.(n.) மரவகை (வின்.); a tree, harwigia.

**சலக்கரணை** *šalakkaraṇai,* பெ.(n.) 1. ஏந்து வசதி (சௌகரியம்); convenience, pleasantess, comfortableness. *"இவ்விடத் துக்கு அவ்விடம் சலக்கரணை"* (இ.வ.) 2. தணிவு. (வின்.); all eviation, mitigation; reduction of a debt in one's favour. 3. உரிமை (வின்.); privilege, prerogative.

K.salakaraṇe

*[Skt.saukarya → த. சலக்கரணை.]*

**சலலியம்** *šalaliyam,* பெ.(n.) முள்ளம்பன்றி; porcupine (சா.அக.).



**சலவுகம்** *šalavugam,* பெ.(n.) 1. ஆண்குறி; the genital organ of a male. 2. இலிங்கம்; the penis (சா.அக.).

**சலாக்கியம்** *šalākkiyam,* பெ.(n.) **சிலாக்கியம்** பார்க்க; see *šilakkiyam.*

*[Skt. šlāghya> த. சலாக்கியம்.]*

**சலாகாபுருடர்** *šalāgā-purudar,* பெ.(n.) 24 தூய நீரவர் (தீர்த்தங்கரரை) உள்ளிட்ட 63 சமண (சைன)ப் பெரியோர்கள் (Jainam.); saints, 63 in number, including the 24 *Tīrttaṅgarar.*

*[Skt. šlāghā+puruṣa> த. சலாகாபுருடர்.]*

**சலாசத்து** *šalāšattu,* பெ.(n.) **சிலாசத்து** பார்க்க (இ.வ.); see *šilāšattu.*

*[Skt. šilā-jatu> த. சலாசத்து.]*

**சலாசலம்** *šalā-šalam,* பெ.(n.) ஆன் (பசு); cow (சா.அக.).

**சலாசலலிங்கம்** *šalāšala-lingam,* பெ.(n.) வழிபாட்டிற்குரிய இலலிங்கங்கள் (சைவச. பொது.123); various kinds of *linga*, such as *vāṇa-lingam*, *irattina-lingam*, etc., used for both private and public worship.

[*Skt.* *cala+ā-cala+linga> த. சலாசல லிங்கம்.*]

**சலாசனம்** *šalā-šaṉam,* பெ.(n.) வழிபாட்டில் சிவவிலங்கம் அமைதற்குரிய (அனந்தர், தன்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், பதுமம் என்ற அறுவகை) இருக்கை (ஆசனம்) (சைவச.பொது.523); (šaivam.) pedestals imagined for seating a *linga* when bathing it for worship, six in number, viz., *aṉantar, taṉmam, ñāṉam, vairākkiyam, aisuvariyam, padumam.*

[*Skt.* *cala+ā-sana> த. சலாசனம்.*]

[*த. ஆதனம்>*Skt.* ā-sana.*]

**சலாஞ்செய்-தல்** *šalāñ-cey-,* 1. செ.குன்றாவி. (v.t.) 1. கையை நெற்றியில் வைத்து வணக்கம் செலுத்தும் முறை; to salute by raising the hand to the forehead. 2. வணங்குதல் (உரி.நி.); to bow in obeisance. *"குறவர் மகட்குச் சலாமிடற் கேக்கறு குமரனை" (மீனாட். பிள்ளைத். காப்பு.4).*

[*U.* *salām> த. சலாம் + த. செய்-.*]

**சலாடு** *šalāḍu,* பெ.(n.) காய்கறிகள்; vegetables (சா.அக.).

**சலாந்தரு** *šalān-daru,* பெ.(n.) நாட்டியவுறுப்பு வகை (*Nāṭya*); a saluting pose in dancing. *"தள்ளரிய சலாந்தருவும்" (குற்றா.தல, தருமசாமி.55).*

[*U.* *salām+dhruva> த. சலாந்தரு.*]

**சலாபத்து** *šalābattu,* பெ.(n.) 1. விடுதலை தன்வயம் (சுவாதீனம்) (வின்.); freedom, liberty. 2. எளிமை (சுலபம்); ease, facility. *"இதைச் சலாபத்தாய் முடிக்கலாம்".* 3. பெரியது (விசாலம்); commodiousness, spaciousness. *"இடம் சலாபத்தாயிருக்கிறது"* (இ.வ.).

[*U.* *salāmat> த. சலாபத்து.*]

**சலாம்** *šalām,* பெ.(n.) வணக்கம் (வந்தனம்); salutation. *"மாலயன்.... சலாமிடு" (திருப்பு.189).*

[*U.* *salām> த. சலாம்.*]

**சலாவத்து** *šalāvattu,* பெ.(n.) **சலாபத்து** பார்க்க; see *šalābattu.*

[*Skt.* *U.* *salāmat → த. சலாபத்து → சலாவத்து.*]

**சலான்** *šalāṉ,* பெ.(n.) 1. பணத்துடன் கருவூலகத்திற்கு (கஜானா) அனுப்பும் விவரக்குறிப்புச் சான்று (நமூனா.) (C.G.); a form of particulars concerning money remitted to a treasury. 2. பணம் கட்டும்படி வழக்குமன்றம் (கோர்ட்டு) வழங்கும் ஆணை (உத்தரவு) (இ.வ.); order issued by a court directing deposit of moeny.

[*U.* *calān> த. சலான்.*]

**சலிசு** *šališu,* பெ.(n.) **சலீசு** பார்க்க; see *šalīšu.*

**சலிதம்** *šalidam,* பெ.(n.) 1. வெறுப்பு; hatred. 2. இளைப்பு; emaciation (சா.அக.).

**சலிகம்** *šaligam,* பெ.(n.) போர் (ஆ.நி.); war.

[*Skt.* *samika> த. சலீகம்.*]

**சலீசு** *šalīšu,* பெ.(n.) 1. எளிமை (சுலபம்); ease, facility. 2. மலிவு; cheapness.

[*U.* *salis> த. சலீசு.*]

**சலூன்** *šalūṉ,* பெ.(n.) முடி திருத்தகம்; hair dressing saloon.

*[E. saloon > த. சலூன்]*

**சலேசரம்** *šalēšaram,* பெ.(n.) 1. நீர்ப் பறவை; water bird. 2. மீன்; fish. (சா.அக.).

**சலேருகம்** *šalērugam,* பெ.(n.) செங்கழுநீர்; red Indian water lily - Nympae oderata. (சா.அக.).

**சலோகிதம்** *šalōgidam,* பெ.(n.) வயல் நெட்டி (அ) நீர் நெட்டி; a species of pith plant - Aeschynomenle aspera. (சா.அக.).

**சலோதயம்** *šalōdayam,* பெ.(n.) பேறு காலத்திற் பனிக்குடம் உடைகை; flooding at the beginning of delivery.

*[Skt. jala+udaya > த. சலோதயம்]*

**சலோதரசன்னிபாதம்** *šalōdara-šaṉṉi-pādam,* பெ.(n.) வயிற்றுப்பிசத்தாலேற்படும் குளிர் காய்ச்சல்; typhoid fever as a result of abdominal dropsy. (சா.அக.).

*[சலம் + உதரம் + சன்னி+ பாதம்]*

**சலோதரம்** *šalōdaram,* பெ.(n.) ஒரு வகையான வயிற்றுப்பிச நோய்; ropsy, ascitis.

*[Skt. jala+udara > த. சலோதரம்]*

**சலோபாதை** *šalōpādai,* பெ.(n.) 1. சிறுநீர் கழிப்பதில் தொல்லை; difficulty in passing urine-*Dysuria*. 2. உடற் கழிவை வெளி யேற்றுவதில் தொல்லை; a term loosely employed for evacuations by stool, urine and other excrements. (சா.அக.).

*[Skt. jala+upādhi > த. சலோபாதை]*

**சவ்வச்சரலவணம்** *šavvaccara-lavaṇam,* பெ.(n.) நாட்பட்ட வயிற்று நோவைப் போக்கும் ஒரு வகை யுப்பு; a kind of salt used in chronic dyspepsia and it also tends to remove chronic colic. (சா.அக.).

**சவ்வர்ச்சலம்** *šavvarccalam,* பெ.(n.) **சவ்வர்ச்சலவணம்** பார்க்க; see *savvarccalavaṇam.*

**சவ்வர்ச்சலலவணம்** *šavvarccalalavaṇam,* பெ.(n.) ஐவகை உப்புகளுள் ஒன்று; mineral alkali, natron, one *pañja-lavaṇam.*

*[Skt. sauvrarcala+lavana > த. சவ்வர்ச்சலவணம்]*

**சவ்வாது** *šavvādu,* பெ.(n.) ஒரு வகைப் பூனையினின்று கொள்ளப்படும் மணப் பொருள்; a kind of scent being the secretion of the civet cat, civet. *"கலவைபுழுகொடு சவ்வாதார்ந்த" (தனிப்பா. i, 227:21).*

*[U. zabād → சவ்வாது]*

**சவ்வியசாசி** *šavviyašāši,* பெ.(n.) இடக் கையாலும் அம்பு தொடுப்பவனான அருச்சுனன் (பாரத. அருச்சனன்றீர்.44); Arjuna, as shooting arrows with his left hand also.

*[Skt. savya+sācin> த. சவ்வியசாசி]*

**சவர்**[1] *šavar,* பெ.(n.) **சபர்**[1] (வின்.) பார்க்க; see *šabar.*

*[U. safar > த. சவர்]*

**சவர்**[2] *šavar,* பெ.(n.) அரபியர் ஆண்டின் இரண்டாம் திங்கள் (பெரியவரு.28); the second Arabic month.

*[Ar. safar > த. சவர்]*

**சவர்க்குந்தா** *šavar-k-kundā,* பெ.(n.) கப்பலின் மேலிடத்துள்ள மூன்றாம் பாய்மரம்; top-gallant mast.

*[U. saba+kunda > த. சவர்க்குந்தா]*

**சவர்க்குந்தாபாஞ்சிறா** *šavar-k-kundā-pāñjiṟā,* பெ.(n.) சவர்க்குந்தாவில் கயிறு மாட்டுஞ் சட்டம்; cross - trees at the head of the top-gallant mast.

**சவர்ணவிருத்தி** *šavarṇa-virutti,* பெ.(n.) ஆவணமெழுதும் வேலை; profession of writing documents.

த.வ. **ஆவணவேலை**

*[Skt. savarṇa +vṛtti> த. சவர்ணவிருத்தி]*

**சவர்ப்பருவான்** *šavar-p-paruvāṉ,* பெ.(n.) கப்பலின் மூன்றாம் மேற்பாய் சுருட்டும் குறுக்குமரம்; top - gallant yard.

*[U. sabar-p-paruvāṉ > த. சவர்ப்பருவான்]*

**சவர்ப்புளோதி** *šavar-p-puḷōti,* பெ.(n.) பாய்மரத்தின் பின் கயிறு; top-gallant back-stay.

**சவர்பாய்** *šavarpāy,* பெ.(n.) சவர்மரத்திற் கட்டப்படும் பாய் (M.Navi. 83); top-gallant sail.

*[சவர்+பாய்]*

*[U. sabar > த. சவர்+பாய்]*

**சவர்மரம்** *šavar-maram,* பெ.(n.) காவி மரத்துக்கு மேலுள்ள பாகம் (M. Navi. 81); top gallant mast .

*[சவர்+மரம்]*

*[U. sabar > த. சவர்]*

**சவர்லவளான்** *šavar-lavaḷāṉ,* பெ.(n.) பாய் மரத்தின் மேற்கயிறு; top-gallant rigging.

*[U. sabar +lavaḷāṉ> த. சவர்லவளான்]*

**சவர அலகு** *šavara-alagu,* பெ.(n.) முகத்தை மழிப்பதற்குப் பயன்படும் இரண்டு பக்கங் களிலும் கூரிய விளிம்புடைய இரும்பினா லான மெல்லிய தகடு, மழிதகடு (யாழ்ப்.); blade.

**த.வ. மழிப்பி**

*[Skt. kṣaura > த. சவர+அலகு]*



**சவரக்கத்தி** *šavara-k-katti,* பெ.(n.) முகம் மழிப்பதற்குதவுங் கத்தி; razor.

*[Skt. kṣaura > த. சவரம்+கத்தி]*



**சவரக்காரன்** *šavara-k-kāraṉ,* பெ.(n.) **சவரகன்** பார்க்க; see *šavaragaṉ.*

**த.வ. பரியாரி, மழிப்பாளன், நாவி**

*[Skt. kṣauraka > த. சவரக்காரன்]*

**சவரகன்** *šavaragaṉ,* பெ.(n.) முகம்மழிக்குந் தொழிலாளி; barbar.

*[Skt. kṣauraka > த. சவரகன்]*

**சவரட்சணை** *šavaraṭšaṇai,* பெ.(n.) காப்பாற்றுகை; preservation, maintenance, protection.

*[Skt. samrakṣaṇā > த. சம்ரட்சணம் > சம்ரட்சணை > சவரட்சணை]*

**சவரணை** *šavaraṇai,* பெ.(n.) **சவரட்சணை** பார்க்க; see šavaraṭ šaṇai.

**சரவரம்** *šavaram,* பெ.(n.) மயிர் மழிக்கை; shaving. "சம்பந்தனுக்கு... தலைச்சவரம் பண்ணுவதேன்" (தமிழ்நா.108).

*[Skt. kṣaura > த. சவரம்]*

**சவரன்**[1] *šavaraṉ,* பெ.(n.) இங்கிலாந்து (ஐரோப்பிய) நாட்டின் பொற்காசு (பவுன் நாணயம்) (உ.வ.); pound sterling.

*[E. sovereign > த. சவரன்]*

**சவரன்²** *šavaran,* பெ.(n.) எட்டு கிராம் பொன் கொண்ட ஓர் அளவு; பவுன்; a measure of gold equal to eight grams sovereign formerly equal to a pound. *நாங்கள் பெண்ணுக்கு இருபது சவரன் நகை போடுகிறோம்.*

**சவரியார்** *šavariyār,* பெ.(n.) சேவியர் என்ற அர்ச்சியசிட்டர்; St. Xavier.

*[E. St.Xavier > த. சவரியார்]*

**சவரியார்குழம்பு** *šavariyār-kulambu,* பெ.(n.) ஒரு வகைக் கழிச்சல் மருந்து; St. Xavier's purgative mixture.

*[சவரியார்+குழம்பு]*

*[E. St.Xavier > த. சவரியார்]*

**சவனிக்கை** *šavanikkai,* பெ.(n.) 1. திரை; screen, curtain. 2. நாடகவரங்கிலிடுந் திரை; curtain used on the stage. 3. **சவனிக்கை மண்டபம் (வின்)** பார்க்க; see *šavanikkai-mandabam.*

**த.வ. அரங்கத் திரை**

*[Skt. javanikā > த. சவனிக்கை]*

**சவனிக்கைத்தரு** *šavanikkai-t-taru,* பெ.(n.) சவனிக்கைப்பாட்டு பார்க்க; see *šavanikkai-p-pāttu.*

**சவனிக்கைப்பாட்டு** *šavanikkai-p-pāttu,* பெ.(n.) நாடகவரங்கில் நடிகன் தோன்றும் போது பாடும் பாட்டு (வின்.); song on the appearance of an actor on the stage.

*[சவனிக்கை+பாட்டு]*

*[Skt. javanikā > த. சவனிக்கை]*

**சவனிக்கைபடித்தல்** *šavanikkai-paḍittal,* பெ.(n.) நாடகவரங்கில் கடைசி நடிகன் வரும் பொழுது பாடும் பாட்டு (வின்.); song sung when the last player in a performance enters and dances on the stage.

*[சவனிக்கை+படித்தல்]*

*[Skt. javanikā > த. சவனிக்கை]*

**சவனிக்கைபிடி-த்தல்** *šavanikkai-piḍi-,* 4 செ.கு.வி.(v.i.) நடிகர்கள் வருமுன் நாடகத்திரையைப் பிடித்தல் (வின்.); to hold a curtain before actors in a performance, when they are about to show themselves on the stage.

*[சவனிக்கை+பிடி-]*

*[Skt. javanikā> த. சவனிக்கை]*

**சவனிக்கைமண்டபம்** *šavanikkai-mandapam,* பெ.(n.) வீதிப்புறப்பாட்டின் பின்உலாத்திருமேனி (உற்சவ மூர்த்தி) வீற்றிருக்கும் விடையாற்றுமண்டபம் (வின்.); hall in which a deity takes rest after procession.

*[சவனிக்கை+மண்டபம்]*

*[Skt. javanikā> த. சவனிக்கை]*

**சவனிகை** *šavanikai,* பெ.(n.) **சவனிக்கை** (வின்) பார்க்க; see *šavanikkai.*

*[Skt. javanikā> த. சவனிக்கை > சவனிகை]*

**சவாசனம்** *šavāšanam,* பெ.(n.) அவையோர்; councillors. *"சவாசனங்களுந் தானுமே மகிழ்ந்து" (உத்தரரா. அசுவமே. 127).*

*[Skt. sabhā+jana> த. சவாசனம்]*

**சவாசு** *šavāšu,* பெ.(n.) 'மிகநன்று' எனப் பொருள்படும் குறிப்புச்சொல்; expression signifying "well done!" 'bravol', excellent a term of cheering.

*[U. shābāsh> த. சபாசு → சவாசு]*

**சவாது** *šavādu,* பெ.(n.) படி (நகல்) (வின்.); copy, transcript, duplicate.

*[U. sawād > த. சவாது]*

**சவாப்தார்** *šavā-p-dār,* பெ.(n.) **சவாப்புதாரி** பார்க்க; see *savāppu-dāri.*

**சவாப்நவீசு** *šavāpnavišu,* பெ.(n.) 1. முறைமன்ற நடுவரின் மொழிபெயர்ப்பாளர்; interpreter and clerk of a magistrate. 2. செயலாளர்; secretary.

*[U. jawābnawis → சவாப்நவீசு]*

**சவாப்பு** *šavāppu,* பெ.(n.) மறுமொழி, விடை (உ.வ.); answer, reply.

*[U. jawāb → சவாப்பு]*

**சவாப்புதாரி** *šavāpputāri,* பெ.(n.) பொறுப்பாளி (உ.வ.); responsible person.

*[U. jawab+dār> த. சவாப்புதாரி]*

**சவாபுட்பம்** *šavāputpam,* பெ.(n.) முளரி, முட்செவ்வந்தி (யாழ்.அக.); rose.

**சவாய்** *šavāy,* பெ.(n.) கப்பலிற் பாய் மரந்தாங்குங் கயிறு; stay, rope supporting mast (naut).

*[U. sawāi(rīt)→ சவாய்]*

**சவாரி** *šavāri,* பெ.(n.) 1. வண்டி முதலியவற்றிற் செல்லுகை; ride, drive. 2. சுற்றுச் செலவு (பிரயாணம்); circuit, tour. *"துரை சவாரியிலிருக்கிறார்" (இ.வ.).* 3. ஊர்தி (வாகனம்) (வின்.); conveyance, vehicle.

த.வ. இவரி

*[U. sawār → சவாரி]*

**சவாரிசெய்-தல்** *šavārišey-,* செ.கு.வி.(v.i.) ஊர்திகளில் ஏறிச் செல்லுதல்; to ride, drive.

த.வ. இவர்ந்துசெல்லுதல்

*[சவாரி + செய்தல்] [U. sawār> த. சவாரி]*

**சவாரிபோ-தல்** *šavāri-pō-,* செ.கு.வி.(v.i.) 1. சுற்றுச் செலவு (சுற்றுப் பிரயாணம்) போதல்; to go on circuit or tour. 2. **சவாரிசெய்-,** பார்க்க; see *savāri-cey-.*

*[சவாரி+போ-]*

*[U. sawār> த. சவாரி]*

**சவால்[1]** *šavāl,* பெ.(n.) 1. வினா; question, interrogation. 2. மூர் என்னுஞ் சாதியினர்க்குள் வழங்கும் ஒரு வகைப் பாட்டு (வின்.); a sacred song of the Moors.

*[U. sawāl → த. சவால்]*

**சவால்[2]** *šavāl,* பெ.(n.) அறைகூவல் (இக்.வ.); challenge.

*[Persn. suwāl > Arab. sual > த. சவால்]*

**சவால்சவாப்பு** *šavāl-šavāppu,* பெ.(n.) வினாவிடை; question and answer. (C.G.).

*[U. sawal+jawb> த. சவால்சவாப்பு]*

**சவாலக்கம்** *šavālakkam,* பெ.(n.) வயிரம் உண்டாகும் இடங்களிலொன்று; one of the diamond-producing countries.

*[Skt. saurivaka> த. சவாலக்கம்]*

**சவான்** *šavān,* பெ.(n.) 1. வலுவான ஆள்; strong robust person. 2. பணியாளன்; peon. 3. காவலன்; costable.

*[U. javāna → ஜவான்> த. சவான்]*

**சவிகற்பக்காட்சி** *šavikarpak-kātci,* பெ.(n.) ஒரு பொருளின் பெயர் இனம், குணம் முதலிய எல்லாக் கூறுகளும நிறைந்த அறிவு, (சி.சி.அளவை. 3, மறைஞா.); (Log), differentiated knowledge in which a thing understood in all its bearings.

*[சிவிகற்பம்+காட்சி]*

*[Skt. sa-vikarpak > த. சவிகற்பகம்]*

**சவிகற்பசமாதி** *šavikarpašamāti,* பெ.(n.) கொங்கணவர் வாத காவியத்திற் சொல்லியுள்ள ஐந்துவகை சமாதிகளுளொன்று (இது ஞேயம், ஞாதுரு ஞானம் என்னும் வேறுபடவுணரும் உணர்ச்சியோடு கூடிய யோக நிலை); one of the five kinds of samadhi (abstract meditation) contemplated in Kongavanava works (3000) on Alohemy. (It is a meditation in which the sense of unity is aware of the differentiations between the knower and the known. so it is the one in which the mind is in a lesser degree. It consists of two kinds . vis. sathanu and Tvisanu as mentioned in the above stanzas.

*[Skt. sa-vikal+samādhi> த. சவிகற்பசமாதி]*

**சவிகற்பஞானம்** *šavikarpañānam*, பெ.(n.) ஒரு மனிதன் அல்லது பொருள் தன்னை அடைந்த மாத்திரத்தில் அதன் குணாகுணம் முதலிய முழுத் தன்மைகளையும் தானே உணரும் அறிவு; a faculty of divining by mental operation, the qualities and properties of an object coming in contact with him or of persons approaching him - psychometrical knowledge.

[*Skt. sa-vikalpa-janām*> த. சவிகற்பஞானம்]

**சவிகற்பம்** *šavikarpam*, பெ. (n.). **சவிகற்பக் காட்சி** பார்க்க; see *sa-vikalpa-k-kātci*. (சி.சி.அளவை 3, ஞான)

**சவிசங்கம்** *šavišangam*, பெ.(n.) 1. ஒரு வகை வூதை நோய்; a kind of rheumatism. 2. எண்பது வகை வளிநோயுள் ஒன்று; one of the eighty kinds of flatulency in the human system.

**சவித்தாரம்** *šavittāram*, பெ. (n.) 1. விரிவுடையது; that which is wide or eleborate. 2. இன்றியமையாச் செயல் (இ.வ.); anything of importance or consequence.

[*Skt. sa-vistāra*> த. சவித்தாரம்]

**சவித்திரு** *šavittiru*, பெ.(n.) பன்னிரு ஞாயிற்றுக் கடவுள்களுள் ஒருவர்; sun-god, one of *tuvātacātittar*.

[*Skt. savitṛ*> த. சவித்திரு]

**சவிதா** *šavitā*, பெ.(n.) பகலவன்; sun. *"சந்திரன் சவிதா வியமானனானீர்" (தேவா. 613, 3).*

[*Skt. savitē*> த. சவிதா]

**சவிர்சங்கி** *šaviršangi*, பெ.(n.) சிறுதகரி (சிறு பீரங்கி) (வின்.); small cannon.

[*U. jabarjangi*→ த. சவிர்சங்கி]

**சவிலைக்கொடி** *šavilai-k-kodi*, பெ.(n.) ஒருவகைக் கொடி; a creeper-Rubia mangith.

[*Skt. savili*> த. சவிலை]

**சவுக்கியக்குறைவு** *šavukkiya-k-kuraivu*, பெ.(n.) 1. நலக்குறைவு; ill health. 2. நலங்குன்றுகை; alight indisposition. (சா.அக.).

[சவுக்கியம் + குறைவு]

[*Skt. savili*> சௌக்கியம் > த. சவுக்கியம்]

**சவுக்கியம்** *šavukkiyam*, பெ.(n.) 1. நலம்; health. 2. மலங்கழிக்கை; the act of clearing the bowels. (சா.அக.).

[*Skt. saukhya*> த. சவுக்கியம்]

**சவுக்கியமுறைவிளக்கம்** *šavukkiyamurai-vilakkam*, பெ.(n.) தூய்மை விளக்கம் (புதுவை. வழக்கு); hygiene.

[சவுக்கியம் + முறை+விளக்கம்]

[*Skt. saukhya*> த. சவுக்கிய(ம்)]

**சவுக்கியவீனம்** *šavukkiya-vīnam*, பெ.(n.) நலக்குறைவு; break of health, ill-health. (சா.அக.).

[சவுக்கியம் + ஈனம்]

[*Skt. saukhya*> த. சவுக்கியம்]

**சவுக்கிரியா** *šavukkiriyā*, பெ.(n.) எரி பூடு (அ) பூண்டு; garlic. (சா.அக.)

**சவுகதநூல்** *šavugada-nūl*, பெ.(n.) புத்தர்களுக்குரிய முப்பிடகம்; Buddhist scriptures.

[சவுகத + நூல்]

[*Skt. saugata*> த. சவுகத(ம்)]

**சவுகதன்** *šavugadan*, பெ.(n.) புத்தன்; Budhan. *"தன்னே ரில்லாச் சவுகதன்". (பிரபோத. 18,18)*

[*Skt. sugata*> த. சவுகதன்]

**சவுகந்திகம்** *šavukandigam,* பெ.(n.) செங்கழுநீர்; red Indian water lily - Nymphae lotus alias N.odorata. (சா.அக.)

**சவுகந்திரா** *šavugandirā,* பெ.(n.) கந்தகம்; sulphur.(சா.அக.)

**சவுகரியம்** *šavukariyam,* பெ.(n.) நலம்; convenience.

*[**Skt**. saukarya> த. சவுகரியம்]*

**சவுசம்** *šavušam,* பெ.(n.) தூய்மை; cleansing, ablution. *"ஒருங்குறச் சவுச முடித்த பின்". (குற்றா. தல. சிவபூ. 19)*

*[**Skt**. šauca> த. சவுசம்]*

**சவுசன்னியம்** *šaušanniyam,* பெ.(n.) 1. இனிய குணம்; kindly disposition, amiability. 2. நட்பு, உறவின் நெருக்கம்; friendship, intimacy.

*[**Skt**. saujanya> த. சௌசன்னியம்]*

**சவுடால்** *šavuḍāl,* பெ.(n.) **சவடால்** பார்க்க; see *savaḍāl.*

**சவுடோல்** *šavuḍōl,* பெ.(n.) அம்பாரி (வின்.); howdah.

*[**U**. haudah→ சவுடோல்]*

**சவுண்டம்** *šavuṇḍam,* பெ.(n.) **சவுண்டி** பார்க்க; see *savuṇḍi.*

**சவுண்டி** *šavuṇḍi,* பெ.(n.) திப்பிலி (மலை.); long pepper.

*[**Skt**. šauṇḍi > த. சவுண்டி]*

**சவுத்தியம்** *šavuttiyam,* பெ.(n.) வெள்ளி; silver.(சா.அக.)

**சவுத்திராந்திகம்** *šavuttirāndigam,* பெ.(n.) புத்தமதப் பிரிவு; a Buddhist sect.

*[**Skt**. sautrāhtika> த. சவுத்திராந்திகம்]*

**சவுத்திராந்திகன்** *šavuttirāndigan,* பெ.(n.) சவுத்திராந்திக பிரிவைச் சேர்ந்த புத்த மதத்தினர்; follower of sautrāntika sect of Buddhism.

*[**Skt**. sautrāhtika>த. சவுத்திராந்திகன்]*

**சவுதலியா** *šavutaliyā,* பெ.(n.) கப்பலின் முகப்புக்கட்டை; Bowsprit (Navt).

*[**Skt**. savadari→ த. சவுதலியா]*

**சவுதாகிரி** *šavutākiri,* பெ.(n.) குதிரைக்காரன்; horsse - dealer.

*[**Persn**. saudāgari> த. சவுதாகிரி]*

**சவுதி** *šavuti,* பெ.(n.) 1. மறைநெறியறிந்த பார்ப்பான்; Brahmin proficient in vēdic rituals. *"மாதவச் சவுதிமார்கள் வந்தனர்". (சிவரக நைமிசா 44)* 2. மறை நிகழ்வுகளை நடத்துபவன்; one who performs vēdic sacrifices.

*[**Skt**. šrautin> த. சவுதி]*

**சவுந்தம்** *šavuntam,* பெ.(n.) ஒருவகை நஞ்சு; a kind of native arsonic. (சா.அக.)

**சவுந்தரம்**[1] *šavuntaram,* பெ.(n.) அழகு; beauty especially of fearaler. (சா.அக.)

*[**Skt**. saundarya> த. சவுந்தரியா > சவுந்தரம்]*

**சவுந்தரம்**[2] *šavuntaram,* பெ.(n.) **சவுந்தரியம்** பார்க்க; see savundariyam. *"சவுந்தர மானே". (அருட்பா, 1, வடிவுடை. 26)*

*[**Skt**. saundarya> த. சவுந்தரம்]*

**சவுந்தரி** *šavuntari,* பெ.(n.) 1. அழகுடையவள்; a beautiful woman. 2. மலைமகள் (யாழ்.அக.); goddess pārvati.

*[**Skt**. sundari> த. சவுந்தரி]*

**சவுந்தரிகை** *šavuntarikai,* பெ.(n.) சோலை வெண்தேக்கு; looking glass plant. (சா.அக.).

**சவுந்தரியம்** *šavuntariyam,* பெ.(n.) அழகு; beauty. *"பெயர் சவுந்தரியலகரியென". (சௌந்த பாயி.6)*

*[**Skt**. saundarya> த. சவுந்தரியம்]*

**சவுப்பு** *šavuppu,* பெ.(n.) முறை மன்றத்துக்குத் திரும்பும் அழைப்புக் கட்டளையிற் கண்டிருக்கும் விவரம் (இ.வ.); return on a court - process.

*[**Arab**. sawb> சவுப்பு]*

**சவுபஞ்சம்** *šavupañjam,* பெ.(n.) புனல் முருங்கை; forest drum-stick. (சா.அக.)

**சவுபாக்கியசுண்டி** *šavupākkiyašuṇḍi,* பெ.(n.) ஆயுள் வேத முறைப்படி தயாரித்த ஒரு இளகியம் (இதை குன்மம் கிராணி, பிரசவ சுரம் முதலிய நோய்களுக்குக் கொடுக்கப்படும்); an ayurvedic preparation of an electuary prescribed for dyspesia, chronic diarrboea and pusrperal fever.(சா.அக.)

**சவுபாக்கியம்** *šavupākkiyam,* பெ.(n.) 1. சுக்கு; dried ginger. 2. ஒரு வானியல் . (சோதிட) நூல்; a kind of astrology. (சா.அக.)

**சவுபாக்கியம்**[1] *šavupākkiyam,* பெ.(n.) ஏந்துகள்; auspiciousness.

**த.வ. பெரும்பேறு.**

*[**Skt**. saubhāgya> த. சவுபாக்கியம்]*

**சவுபாச்சியம்**[2] *šavupācciyam,* பெ.(n.) நீர் முள்ளி; water thistle - *Barleria longifelia.*

**சவுபானம்** *šavupāṉam,* பெ.(n.) மாடிப்படி; stair, ascending series or scale. *"சவுபான நன்னெறி விரும்பவில்லை". (தாயு. சிற்சுசோ 4)*

*[**Skt**. sōpāna> த. சவுபானம்]*



**சவுமியம்** *šavumiyam,* பெ.(n.) அமைதி; calmness, gentleness. *"சவுமியப் படிவமும்".* (பிரபோத. 14,5) 2. பொதுமை; patience.

*[**Skt**. saumya> த. சவுமியம்]*

**சவுமியன்** *šavumiyaṉ,* பெ.(n.) பண்பாளன்; noble or gentle person. *"வாழ்வர் சவுமியர்". (பிரபோத. 9,7)*

*[**Skt**. saumya> த. சவுமியன்]*

**சவுரசம்** *šavurašam,* பெ.(n.) 1. அரத்தத்திலுண்டான ஒருவகைப் பூச்சி; a minute organism found in the blood. 2. மலப்பூச்சியாலுண்டாகும் ஒருவகை நோய்; a disease due to the worm in the intestines. (சா.அக.)

**சவுரம்** *šavuram,* பெ.(n.) **சவரம்** பார்க்க; see savaram. (சா.அக.)

**சவுரமாதம்** *šavuramātam,* பெ.(n.) பகலவன் ஒரு கோளை (இராசியை)க் கடந்து செல்லும் நாளளவாற் கணக்கிடப்பெறும் மாதம்; solor month.*(விதான. குணாகுண. 80)*

*[சவுரம் + மாதம்]*

*[**Skt**. saura> த. சவரம்]*

**சவுரர்** *šavurar,* பெ.(n.) பகலவனை வழிபடும் மதத்தினர்; sun-worshippers. *"சைவரேயன்றியல்லாச் சவுரர் சாத்தர்". (விநாயக 4.68 :36)*

[Skt. saura> த. சவுரர்]

**சவுரியம்** *šavuriyam,* பெ.(n.) சூரத்தனம்; bravery, valour.

[Skt. šaurya> த. சவுரியம்]

**சவுரேசுரம்** *šavurēšuram,* பெ.(n.) நொச்சி; five-leaved chaste tree - vitex negundo. (சா.அக.).

**சவுல்** *šavul,* பெ.(n.) களிப்பு; gaiety, merrymood.

[U. caul> த. சவுல்]

**சவுனாகம்** *šavunākam,* பெ.(n.) **சவுநாயகம்** பார்க்க; see *savunāyagam.* (சா.அக.)

**சவுனாதிதம்** *šavunātitam,* பெ.(n.) விராலி; bog myrtle - Dodonaea. (சா.அக.).

**சற்கரி—த்தல்** *šarkari-,* 4 செ.குன்றாவி.(v.t.) விருந்தோம்புதல்; to accord welcome, show hospitality. *"தனதிருநாள் வணங்கினரைத் தலையிற் சொல்லால் விழியாற் சற்கரித்தான்" (ஞானவா. வைரா. 56).*

[Skt. sat-kar> த. சற்கரி—த்தல்]

**சற்கருமம்** *šar-karumam,* பெ.(n.) நற்செய்கை; good deed, meritorious act. *"சற்கருமஞ் செய்வோர்தம் பக்க மேகி" (குசேலோ. குசேலர்தந். 126).*

[சற்+கருமம்]

[Skt. sat> த. சற்]

**சற்காரம்** *šar-kāram,* பெ.(n.) ஓம்புகை; welcome, hospitality. *"கண்டெழுந்து சற்காரஞ் செய்து" (பிரபோத. 11, 87).*

[Skt. sat-kāra> த. சற்காரம்]

**சற்காரியம்** *šarkāriyam,* பெ.(n.) **சற்கருமம்** பார்க்க; see *sa-karumam.*

[சற்+காரியம்]

[Skt. sat> த. சற்]

**சற்காரியவாதம்** *šarkāriya-vādam,* பெ.(n.) தோற்றத்துக்கு (உற்பத்திக்கு) முன்னும் காரியப் பொருள் காரணப்பொருளில் உள்ளது என்னுங் கொள்கை (சி.போ.பா.1,2,பக். 64); (Phil.) doctrine of causation according to which an effect is held to exist in its cause.

[Skt. sat-karya+vētam> த. சற்காரியவாதம்]

**சற்குணம்** *šarkuṇam,* பெ.(n.) நற்குணம்; good nature, nobility of character.

[சற்+குணம்]

[Skt. sat> த. சற்]

**சற்குணன்** *šarkuṇan,* பெ.(n.) குணவான்; person of noble character, virtuous man. *"மாசனங்காள் சற்குணர்நீ ரென்றிருந்தேன்" (தனிப்பா.).*

[சற்குணம் → சற்குணன்]

**சற்குரு** *šarkuru,* பெ.(n.) அறிவாசிரியன்; spiritual preceptor. *"சற்குருவுங் கண்ணாரக் காணின்" (தனிப்பா.* ii, 116, 296).

[சற்+குரு]

[Skt. sat> த. சற்]

**சற்சங்கம்** *šaršangam,* பெ.(n.) நல்லோருடன் கூடுகை; association with the good. *"பேருவகைக் கடறழவு சற்சங்கம்"* (இரகு. தேனுவ. 108).

**சற்சலம்** *šaršalam,* பெ.(n.) தெளிந்த நீர் (திவா.); fresh, limpid water.

[சத் + சலம்]

[Skt. sat> த. சற்]

**சற்சவுக்கம்** *šaršavukkam,* பெ.(n.) **சச்சவுக்கம்** பார்க்க; see *saccavukkam.*

[சச்சவுக்கம் → சற்சவுக்கம்]

**சற்சனர்** *śar-śaṉar,* பெ.(n.) நல்லோர்; good, virtuous persons. *"நகர்க்குறுதி சேர்ந்திடும் சற்சனர்களாம்" (குமரே. சத. 76).*

*[Skt. sat+jana> த. சற்சனர்]*

**சற்சுகாதி** *śar-śukāti,* பெ.(n.) பெருமருந்து (மலை.); Indian birthwort.

*[Skt. sat+sukha+ādi> த. சற்சுகாதி]*

**சற்சூத்திரன்** *śar-śūttiraṉ,* பெ.(n.) ஊனுண்ணலை ஒழித்துச் சமய ஒழுக்கத் தோடிருக்குஞ் சூத்திரவகுப்பினன் (சி.போ. பா. சிறப்புப்பாயி. பக். 26); sect of śūdras who abstain from animal food and are strict in religious observances.

*[Skt. sat+sudraṉ> த. சற்சூத்திரன்]*

**சற்பம்** *śarpam,* பெ.(n.) பாம்பு; serpent. *"சற்பவெம் பதாகை வேந்தன்" (பாரத.வாசு. 9).*

*[Skt. sarpa> த. சற்பம்]*

**சற்பனை** *śarpaṉai,* பெ.(n.) **சர்பனை** பார்க்க; see *śarpaṉai. "ஆறு முகவேலா மலர்த் தாரீயா துற்றதென்ன சற்பனையோ" (தனிப்பா. ii, 57, 140).*

**சற்பாத்திரம்** *śar-pāttiram,* பெ.(n.) கொடை (தானம்) பெறுதற்குத் தகுதியானவன்; worthy recipient for gifts, virtuous person. *"சற்பாத்திரமிருக்க மிருதானமது குணமிலார்க் கீந்த பேரும்" (குமரே. சத. 95).*

*[Skt.sat+pātra> த. சற்பாத்திரம்]*

**சற்பாவம்** *śarpāvam,* பெ.(n.)1. உளதாந் தன்மை; existance. *"அஞ்ஞான விலேச சற்பாவ வுடன்பாட்டால்" (வேதா.சூ. 162).* 2. நால்வகைக் குருசேவைகளுள் நற்குருவை இறையுருவாய்க் கருதிப் போற்றுகை (பாவிக்கை) (வேதா. சூ. 12); the conception that guru is a manifestation of the supreme being, one of four *kuru-cēvai,* q.v.

*[Skt.sat+bhāva> த. சற்பாவம்]*

**சற்பிரசாதம்** *śar-piraśādam,* பெ.(n.) படையல் சோறு (நற்குருணை); sacrament of Lord's supper.

*[Skt.sat+preesādam> த. சற்பிரசாதம்]*

**சற்புத்தி** *śarputti,* பெ.(n.) நல்லறிவு; noble mind.

*[Skt.sat+putti> த. சற்புத்தி]*

**சற்புத்திரமார்க்கம்** *śarputtiramārkkam,* பெ.(n.) சமயவொழுக்க வழி; a mode of religious discipline.

*[Skt.sat + putra + mārkkam> த. சற்புத்திரமார்க்கம்]*

**சற்புத்திரன்** *śar-puttiraṉ,* பெ.(n.) நற்குண நற்செய்கையுள்ள புதல்வன்; good, virtuous, dutiful son.

*[Skt. sat+putra> த. சற்புத்திரன்]*

**த.வ. நற்புதல்வன்.**

**சற்புருடன்** *śar-puruḍaṉ,* பெ.(n.) உத்தமன்; good, virtuous person. *"ஐயவிங்கி வரெலாந் சற்புருடர்" (அறப். சத. 16).*

*[Skt. sat+puruṣa> த. சற்புருடன்]*

**சன்** *śaṉ,* பெ.(n.) ஆண்டு (இ.வ.); year.

*[U. san→த. சன்]*

**சன்மக்கவிச்சு** *śaṉma-k-kaviccu,* பெ.(n.) பிறப்பிலேயே உடம்பிலுண்டான புலால் நாற்றம்; the smell of a rotten flesh, from the natural perspiration of the body. (சா.அக.)

*[சன்மக்+கவிச்சு]*

*[Skt.janma> த. சன்மக்]*

**சன்மகாலம்** *śaṉma-kālam,* பெ.(n.) 1. பெண்கள் கருப்பமடைந்து குழந்தை பெறுதற்குரிய காலம்; the time of delivery after full - term of pregnancy. 2. குழந்தை பிறந்த நேரம்; the time of a child's birth.

[சன்ம+காலம்]

[Skt.janma> த. சன்மம்]

**சன்மச்சனி** *šanma-c-cani,* பெ.(n.) தீங்கின் அறிகுறியாய்ப் பிறப்புக்கோளில் இருக்கும் காரி (சனி); saturn occupying one's *canma-rāci*, generally considered malignant.

[Skt.janma+cani> த. சன்மச்சனி]

**சன்மசாபல்லியம்**[1] *šanmašāpalliyam,* பெ.(n.) 1. இறத்தல்; death. 2. பிறவிப்பேறு; the fruitful results derived from one's birth. (சா.அக.)

[Skt.janma+sapalya> த. சன்மசாபல்லியம்]

**சன்மபல்லியம்**[2] *šanma-šāpalliyam,* பெ.(n.) பிறவிப்பயனைப் பெறுகை; realisation of one's life - purpose.

[Skt.janma+sapalya> த. சன்மபல்லியம்]

**சன்மசூலை** *šanma-šūlai,* பெ.(n.) பிறவிச் சூலைநோய் (பிறக்கும் பொழுதே பெருங் குடல் கோளாறுகளினால் ஏற்படும் வயிற்று வலி); a condition of colic in the vermiform appendix of the large intestine occasioned by inflammation - vermicular colic or Appendicular colic. (சா.அக.)

[Skt.janma+culai> த. சன்மசூலை]

**சன்மதினம்** *šanmadinam,* பெ.(n.) சன்ம நாள் பார்க்க; see *sanma-nal.*

[Skt.janma+dina> த. சன்மதினம்]

**சன்மநட்சத்திரம்** *šanmanatcattiram,* பெ.(n.) பிறந்த நாண்மீன்; natal star. (சா.அக.)

[Skt.janma+naksatra> த. சன்மநட்சத்திரம்]

**சன்மநாள்**[1] *šanma-nāḷ,* பெ.(n.) ஒருவரின் பிறந்த நாள்; birthday.

[சன்ம+நாள்]

[Skt.janma> த. சன்ம]

**சன்மநாள்**[2] *šanma-nāḷ,* பெ.(n.) பிறந்த நாளைக் குறித்து பெருமை கொண்டாடல்; celebration of birthday ceremony. (சா.அக.)

**சன்மநோய்** *šanma-nōy,* பெ.(n.) பிறவி நோய்; a disease present at birth, congenital disease. (சா.அக.)

[சன்ம+நோய்]

[Skt.janma> த. சன்ம]

**சன்மப்பகை** *šanma-p-pagai,* பெ.(n.) 1. இயற்கைப் பகை; natural enmity. *"பூனைக்கும் எலிக்கும் சன்மப்பகை".* 2. தீராப்பகை; inveterate enmity. *"அவனுக்கும் இவனுக்கும் சன்மப் பகை".*

த.வ. பிறவிப்பகை

[சன்ம+பகை]

[Skt.janma> த. சன்ம]

**சன்மப்போழ்து** *šanma-p-pōḻtu,* பெ.(n.) பிள்ளை பெறும் சமயம்; பேறு காலம்; delivery time, the approximate time of giving birth to a child. (சா.அக.)

[சன்ம+போழ்து]

[Skt.janma+poḷdu]

**சன்மபாடை** *šanma-pāḍai,* பெ.(n.) தாய் மொழி; mother-tongue.

[Skt.janma+parda> த. சன்மபாடை]

**சன்மபாவம்** *šanmapāvam,* பெ.(n.) தன் முன்னோர் செய்த தீவினைப் பயனால் தான் பிறந்த போது தன்னுள் தோன்றும் கரிசு (பாவம்); original sin, dist. fr. *kanma-pāvam.*

[Skt.janma+paba> த. சன்மபாவம்]

**சன்மபீதம்** *šaṉmapīdam,* பெ.(n.) கடற்றாமரை; a big variety of lotus - sea-lotus. (சா.அக.)

**சன்மபூமி** *šaṉma-pūmi,* பெ.(n.) பிறப்பிடம்; one's native land, motherland.

**சன்மம்**[1] *šaṉmam,* பெ.(n.) பிறப்பு; birth. *"சன்மம் பலபல செய்து" (திவ். திருவாய். 3,10,1).*

*[Skt. janma+ த. சன்மம்]*

**சன்மம்**[2] *šaṉmam,* பெ.(n.) தோல் (சி.சி.2,61, சிவாக்.). skin.

**சன்மமலடு** *šaṉma-maladu,* பெ.(n.) வெளிக் காரணங்களினால் ஏற்படாமல் உடலியல் பினாலே ஏற்படும் மலட்டுத் தன்மை (இதனால் வயிற்றில் மூன்று மடிப்புகள் விழுந்து இடுப்பு பருத்து உடம்பும் பெருக்கும்); natural incapability of re-production in women without due regard to external causes. (The condition is marked by three folds of the skin in the stomach broad hip and corpulency. (சா.அக.)

*[Skt. janman+ த. மலடு]*

**சன்மமெடு-த்தல்** *šaṉmam-edu-,* செ.கு.வி. (v.i.) மீண்டும் பிறத்தல்; to be born again.

**சன்மராசி** *šaṉmarāši,* பெ.(n.) ஒருவன் (சாதகன்) பிறந்த காலத்திற் நிலவு (சந்திரன்) இருந்த நிலை; zodiacal sign occupied by the moon at the time of one's birth. (சா.அக.)

*[Skt. janman+rasi> த. சன்மராசி]*

**சன்மலக்கனம்** *šaṉma-lakkaṉam,* பெ.(n.) ஒருவன் பிறக்கும் பொழுது தோன்றும் (இலக்கனம்) ஓரையின் உதயம்; (Astrol) the ascendant.

**சன்மவாரம்** *šaṉma-vāram,* பெ.(n.) **சன்மதினம்** பார்க்க; see *šaṉma-tiṉam.*

**சன்மன்** *šaṉmaṉ,* பெ.(n.) **சர்மா** பார்க்க; see *šarmā. கண்ணின் மணி நிகர் சன்மனும்" (பாரத. வேத்திரகீய. 44).*

*[Skt. sarman> த. சர்மா + சன்மன்]*

**சன்மாந்திரம்** *šaṉmāntiram,* பெ.(n.) முற்பிறப்பு; previous birth. (சா.அக.)

**சன்மார்க்கசித்தியார்** *šaṉ-mārkka-sittiyār,* பெ.(n.) பண்டாரசாத்திரத்துள் ஒன்றானதும் அம்பலவாண தேசிகரியற்றியதுமான மெய்ப் பொருள் நூல் (சித்தாந்த சாஸ்திரம்); a treatise on Saiva siddhānta by *Ampalavāna - tēcikar*, one of *paṇṭāra-cātti-vam, q.v.*

**சன்மார்க்கம்** *šaṉmārkkam,* பெ.(n.) 1. நன்னெறி; good contact, morality, the path of virtue. *"சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்க னேனையும்" (தாயு. சின்மய. 1).* 2. அறிவு (ஞான)நெறி (சி.சி.8,22); (Saiva) the path of wisdom.

**த.வ. நன்னெறி**

*[Skt. sat+markha. > த. சன்மார்க்கம்]*

**சன்மானம்** *šaṉmāṉam,* பெ.(n.) **சம்மானம்** பார்க்க; see *šammāṉam.*

**த.வ. அன்பளிப்பு**

**சன்மி**[1] *šaṉmi,* பெ.(n.) இப் பூமியில் வந்து பிறந்தவன்; one who has taken birth . this world. (சா.அக.)

*[Skt. janmi> த. சன்மி.]*

**சன்மி**[2] *šaṉmi,* பெ.(n.) நிலக்கிழார்; land owner.

*[M. janmi> த. சன்மி]*

**சன்மிப்பு** *šaṉmippu,* பெ.(n.) பிறக்கு; தன்மை; the state of being born. (சா.அக.)

*[சன்மி – சன்மிப்பு]*

**சன்மினி** *šaṉmiṉi,* பெ.(n.) கொற்றவைக்குத் தொண்டு புரியும் பெண்பேய் (திவா.); demoness attendant on Durgā.

*[**Skt**. šarmiṇī > த. சன்மினி]*

**சன்வாது** *šaṉvādu,* பெ.அ. (adj.) ஆண்டு தோறும் (இ.வ.); yearly. *"சன் வாது பாக்கி".*

*[**U**. san-wār > த. சன்வாது]*

**சன்னத்தம்** *šaṉṉattam,* பெ.(n.) ஆயத்தம்; preparedness, readiness. *"அடைவொடு சன்னத்த மாருவர்" (திருக்காளத். பு. 28, 39).*

த.வ. அணியம்

*[**Skt**. san-naddha > த. சன்னத்தம்]*

**சன்னத்துமானியம்** *šaṉṉattu-māṉiyam,* பெ.(n.) சன்னது மூலமாக விடப்பட்ட ஒரு வகை இறையிலி (இனாம்) நிலம் (C.G.); rent - free land granted under a sanad.

*[**U**. sanad+mānya > த. சன்னத்துமானியம்]*

**சன்னத்தன்** *šaṉṉattaṉ,* பெ.(n.) 1. பெய்யுறை பூண்டவன்; person clad with armour. *"சன்னத் தனாகித் தனுவேந்துதற் கேதுவென்றான்" (கம்பரா.நகர்நீ.126).* 2. *போர்முதலியவற்றுக்குஅணியமாயிருப்பவன்;* one who is ready for any emergency; one armed and prepared for war. *"சன்னத் தனானாலெவர்வந்து சமர்க் கெதிர்ப்பார்" (பிரபோத. 26, 99).*

*[**Skt**. san-naddha > த. சன்னத்தம்]*

**சன்னதக்காரன்** *šaṉṉada-k-kāraṉ,* பெ.(n.) தெய்வ மேறிக் குறி சொல்பவன் (வின்); one who acts as soothsayer under inspiration of a deity.

*[சன்னதம்+காரன்.]*

*[**Skt**. sannadam > த. சன்னதம்.]*

**சன்னதங்கேள்–தல்** *šaṉṉadaṅkēḷ-,* செ.கு.வி. (v.i.) குறிகேட்டல் (இ.வ.); to consult oracle.

*[சன்னதம்+கேள்–]*

*[**Skt**. sannadam > த. சன்னதம்]*

**சன்னதம்** *šaṉṉadam,* பெ.(n.) 1. வெறி (ஆவேசம்); temporary possession by a spirit. *"சன்னதமானது குலைந்தாற் கும்பி லெடங்கே" (தண்டலை. 34).* 2. தெய்வங் கூறுகை (வின்.); oracle, utterance of oracles. 3. கடுஞ்சினம் (வின்.); rage fury. 4. வீறாப்பு (வின்.); vanity elation.

*[**Skt**. sannam > த. சன்னதம்.]*

**சன்னதி** *šaṉṉadi,* பெ.(n.) 1. **சன்னிதி** பார்க்க (உ.வ.); see *šaṉṉidi.* 2. அண்மை நிலை; nearness, proximity. 3. தெய்வம் குரு பெரியோர் இவர்களின் திருமுன்பு; presence of deity guru or some great person. 3. கோயில்; temple. 4. **சன்னி தானம்** பார்க்க; see *šaṉṉi-dāṉam.*

*[**Skt**. san-nidhi > த. சன்னதி]*

**சன்னது** *šaṉṉatu,* பெ.(n.) அரசாங்க முத்திரையோடு உரிமையைக் கொடுக்கும் ஆவணம்; grant, charter, patent, document creating rights and given under the seal of the ruling authority.

*[**U**. sanad > த. சன்னது]*

**சன்னல்** *šaṉṉal,* பெ.(n.) பலகணி, காலதர்; window.

*[**Port**. janella > த. சன்னல்]*



**சன்னாசி** *šaṉṉāsi,* பெ.(n.) **சன்னியாசி** பார்க்க; see *šaṉṉiyāsi. "சன்னாசியார் சடலம்படுத்து" (பதினொ. ஆளு. திருவந். 66).*

**சன்னி**[1] *šaṉṉi,* பெ.(n.) 1. **சந்நிநாயகம்** பார்க்க; see *šanni-nāyagam.* 2. **சந்நிகுன்மம்** பார்க்க; see *šanni-kuṉmam.* 3. காட்டுக் கரணை; common Indian hellet - Pavelta indica. 4. குளிர் நோய்; disease due to extreme chillness. (சா.அக.)

**சன்னி**[2] *šaṉṉi,* பெ.(n.) பேருள்ளது; that which has a name. *"யாவையுந் தோற்செவி யுடைய சன்னியாம்" (மேருமந். 1352).*

**சன்னிக்கட்டி** *šaṉṉi-k-katti,* பெ.(n.) காதுவீக்கம்; tumour near or in, the ear.

*[சன்னி + கட்டி]*

*[**Skt.** sanni> த. சன்னி]*

**சன்னிக்கட்டு** *šaṉṉi-k-kattu,* பெ.(n.) 1. இசிவு நோய்க் கட்டு அல்லது குறி; symptoms of apoplexy. 2. இசிவு நோய்த் தொடர்பானது; predisposing causes of apoplexy. 3. போலி இசிவு; a soporous state resembling apoplexy - False apoplexy or par-apoplexy. (சா.அக.)

*[சன்னி + கட்டு]*

*[**Skt.** sanni> த. சன்னி]*

**சன்னிக்காய்ச்சல்** *šaṉṉi-k-kāyccal,* பெ.(n.) 1. இசிவுடன் கூடிய குளிர்க்காய்ச்சல்; thphus fever exhibiting the symptoms of delirimi, typhoid fever with marked cerebral complications. 2. மூளைக் காய்ச்சல்; fever affecting the brain as in apoplexy-brain fever. (சா.அக.)

*[சன்னி + காய்ச்சல்]*

**சன்னிக்கிருமி** *šaṉṉi-k-kirumi,* பெ.(n.) வீட்டுப் புறக் கடையின் புழுதியில் மாட்டு சாணத்தில் அல்லது மனித மலத்திற் காணப்படும் இசிவு நோயையுண்டாக்கும் புழு; the micro-organism in the rubbish in the backyard of the dwelling house or in the faces of cattle or human beings. It produces a powerful toxin which causes tatanus. (சா.அக.).

**சன்னிக்குடோரி** *šaṉṉi-k-kōdāri,* பெ.(n.) சன்னி நோய் கொண்ட காலையில் தலையைக் கீறிப் புகட்டும் மருந்து; the medicine applied in cases of apoplexy by scarification. (சா.அக.)

**சன்னிக்கோட்டி** *šaṉṉi-k-kōtti,* பெ.(n.) வலிப்பு நோய் வகை; convulsions.

*[சன்னி + கோட்டி]*

**சன்னிகணாயன்** *šaṉṉi-kaṇāyaṉ,* பெ.(n.) **சன்னிநாயகம்** (வின்.) பார்க்க; see *šāṉṉi-nāyagam.*

**சன்னிகம்** *šaṉṉikam,* பெ.(n.) **சதுகமரம்** பார்க்க; see *šadukamaram.*

**சன்னிகரிடம்** *šaṉṉi-karidam,* பெ.(n.) காட்சிக்குக் காரணமாய்ப் பொறியும் புலனும் அடுத்து நிற்கும் சையோகம், சையுத்தசம வாயம், சையுத்த சமவேதசமவாயம், சமவாயம், சமவேதசமவாயம், விசேடண விசேடியபாவமாகிய அறுவகைச் சம்பந்தம் (சி.சி.அளவை. 6, மறைஞா.); relation existing between a sense-organ and its object as the cause of perception of six kinds viz., caiyōkam, caiyutta-camavāyam, caiyutta camavēta-camavāyam, camavāyam, camavēta - camavāyam, vicēṭaṇa-vicēṭiya-pāvam.

**சன்னிகுணம்** *šaṉṉi-kuṇam,* பெ.(n.) வலிப்பு அல்லது இசிவு; spasmodic convulsion which is a characteristic symptom of apoplexy. (சா.அக.)

[சன்னி + குணம்]

[Skt. sanni> த. சன்னி]

**சன்னிகுன்மம்** *šaṉṉi-kuṉmam,* பெ.(n.) **சந்நிகுன்மம்** பார்க்க; see *sannikuṉmam.* (சா.அக.)

[சன்னி + குன்மம்]

**சன்னிசயித்தியம்** *šaṉṉi-šayittiyam,* பெ.(n.) 1. இசிவு நோயில் காணும் குளிர்; a condition of the body which is bathed in cold sweat through apoplexy. 2. மூடு சன்னி; catalepsy. (சா.அக.)

**சன்னிசேட்டை** *šaṉṉi-šēṭṭai,* பெ.(n.) 1. நினைவு தடுமாற்றத்திற்கு பின்னதாக ஏற்படும் ஒரு வகை மூளைப் பிறழ்ச்சி; the mental derangement as in frenzy or delirium following a violent agitation of mind. 2. இசிவு நோயின் கெட்ட குறிகள்; the bad or unfavourable symptoms of apoplexy, delivium or tetanus. (சா.அக.)

[சன்னி + சேட்டை]

**சன்னித்தலைவலி** *šaṉṉi-t-talaivali,* பெ.(n.) இசிவு நோயில் ஏற்படும் தலைவலி இது தலையின் கோளாறினால் உண்டாகும்; headache in apoplexy as a result of cerebral affections. (சா.அக.)

[சன்னி + தலைவலி]

[Skt. sanni> த. சன்னி]

**சன்னித்துடிப்பு** *šaṉṉi-t-tuḍippu,* பெ.(n.) 1. இசிவு நோயுற்ற போது காணும் நெஞ்சுத் துடிப்பு; violent tremulous beating of the heart - Delirium cordis. 2. இசிவு நோயிலுண்டாகும் நாடித் துடிப்பு; irregularity of pulse in apoplexy or delirium. (சா.அக.)

[சன்னி + துடிப்பு]

[Skt. sanni> த. சன்னி]

**சன்னிதானம்** *šaṉṉitāṉam,* பெ.(n.) 1. திருமுன்பு; presence. *பெரியோரது சன்னிதானத்தில் அடக்கமாயிருக்க வேண்டும்".* 2. கடவுளின் திருமுன்பு; sacred presence of a deity. 3. வெறியேறுகை; entrance or advent of divine spirit. *"தாவி லாவாகன சன்னிதான சன்னி ரோதனந் தான் மேவவமைத்து" (சிவரக. பசாசுமோ. 11).* 4. மடத்துத் தலைவர்கள் போன்ற பெரியோரைக் குறிக்க வழங்கும் மதிப்புரவுச் சொல்; a term of respect, used in addressing or referring to great personages, especially in mutts. *"சன்னிதானத்தைத் தரிசிக்க வந்தேன்"*

**சன்னிதானம்பண்ணு-தல்** *šaṉṉāṉam-paṉṉu-,* செ.குன்றாவி.(v.t.) 1. திருமுன்பு கொணர்தல் (வின்.); to bring into the presence. 2. தெய்வ வெறி ஏறியிருத்தல்; to be present, as the divine spirit entering idol.

[சன்னி+தானம்+பண்ணு-,]

[Skt. san-ni-dhana > த. சன்னிதானம்]

**சன்னிதானமுத்திரை** *šaṉṉidāṉa-muttirai,* பெ.(n.) பெருவிரல்களுயர்ந்து முன்கைகள் (முட்டிகள்) இணைந்த கைமுத்திரைவகை (செந். x, 425); juxtaposition of the two fists with thumbs erect, used in religious worship.

[சன்னிதான + முத்திரை]

[Skt. san-ni-dhāna > த. சன்னிதான(ம்)]



**சன்னிதி** *šannidi,* பெ.(n.) 1. அண்மைநிலை (பி.வி.19, உரை); nearness, proximity. 2. தெய்வம் குரு பெரியோர் இவர்களின் திருமுன்பு; presence of deity guru or some great person. 3. கோயில்; temple. 4. **சன்னிதானம்** பார்க்க; see *šannidānam.*

*[Skt. san-ni-dhi > த. சன்னதி]*

**சன்னிதிக்கடா** *šannidi-k-kadā,* பெ.(n.) சிறு தெய்வத்திற்குக்காக வெட்டப்படும் ஆட்டுக்கடா; sheep reared for sacrifice to a deity.

*[சன்னிதி+கடா]*

*[Skt. san-ni-dhi > த. சன்னிதி]*

**சன்னிதிப்படு-தல்** *šannidi-p-padu-,* செ.குன்றா வி.(v.t.) முன்னிலையிற் சேருதல்; to enter into one's presence.

*[சன்னிதி + படு]*

**சன்னிதியிலடி-த்தல்** *šannidiyilladi-,* செ.குன்றாவி.(v.t.) உறுதி கூறுதல்; to take oath.

*[சன்னி + அடி]*

**சன்னிதோடம்** *šannidōam,* பெ.(n.) 1. இசிவு நோயினைப் போல, மண்டைக்குள் அரத்தம் பாயாமலே, அரத்தாதிக்கத்தினால் வெறும் குறிகள் மட்டுமே காணும் இசிவு; congestion without extravasation of blood; but followed by mere symptoms resembling those of true apoplexy - congestive apoplexy. 2. பல காரணங் களினால் இசிவு இல்லாமலே அவைத் தொடர்பான தீக் குறிகள் காணும் போலி இசிவு நோய்; attacks without apparent apoplexy, exhibiting only certain symptoms from various causes : a condition resembling apoplexy but without cerebral hemorrhage. 3. மயக்கம் வாய்குளறல் முதலிய இசிவு நோயின் முற் குறிகள்; premonitary sysptoms of apoplexy such as giddiness, faltering speech etc. (சா.அக.)

**சன்னிநரம்பு** *šanni-narambu,* பெ.(n.) காலின் கட்டைவிரல்நரம்பு (சன்னியை உண்டாக்கும் நரம்பு) (வின்.); nerves of the great toe, as causing lock jaw when injured.

*[சன்னி + நரம்பு]*

*[Skt. sanni > த. சன்னி]*

**சன்னிநாயன்** *šanni-nāyan,* பெ.(n.) **சந்நிநாயகம்** பார்க்க; see *šanni-nāyagam.* (சா.அக.)

**சன்னிநோய்** *šanni-nōy,* பெ.(n.) **சன்னி** பார்க்க; see *šanni.* (சா.அக.)

**சன்னிப்பிதற்றம்** *šanni-p-pidarram,* பெ.(n.) இசிவுக் காய்ச்சலால் காணும் வாய் குழறல்; incoherant talk or delirious utterances through typhoid fever; delirious talks. (சா.அக.)

*[சன்னி + பிதற்றம்]*

**சன்னிப்பைத்தியம்** *šanni-p-paittiyam,* பெ.(n.) இசிவு நோயுற்றதாலுண்டாகும் மூளைப் பிறழ்ச்சி (இதனால் தன்னை மறந்து கூச்சலிடல், பினத்தல், கடுஞ் செய்கைகள் முதலிய தீய குணங்களோடு கூடிய மனோ நிலைமை ஏற்படும்); a kind of tetanus characterised by an expansive emotional state (such as incoherent speech, crying or bawling out, delusions, violent tendencies etc. as distinguished from real insanity with depression). (சா.அக.)

**சன்னிபாதக்காய்ச்சல்** *šannipāda-k-kāyccal,* பெ.(n.) இசிவுடன் கூடிய காய்ச்சல்; typhus fever. (சா.அக.)

*[சன்னிபாதம் + காய்ச்சல்]*

[Skt. sanni > த. சன்னி]

**சன்னிபாதசிர்க்கரம்** *šannipāda-širkkaram,* பெ. (n.) **சந்நிபாதசிர்க்கரா ரோகம்** பார்க்க; see *šannipāta-širkkarārōgam.* (சா.அக.)

**சன்னிபாதசுரக்கட்டி** *šannipāda-šura-k-katti,* பெ.(n.) இசிவுக் காய்ச்சலினா லுண்டாகும் ஆறாத கட்டி; a chronic abscess following typhoid fever - post typhoid abscess. (சா.அக.)

**சன்னிபாதசுரம்** *šannipādašuram,* பெ.(n.) **சன்னிபாதக்காய்ச்சல்** பார்க்க; see *šanni-pāda-k-kāyccal.*

[சன்னி + பாதம் + சுரம்]

[Skt. sanni > த. சன்னி]

**சன்னிபாதபிதற்றல்** *šanni-pāda-pitarral,* பெ.(n.) **சந்நிபாதபிதற்றல்** பார்க்க; see *šannipāda-pitarral.* (சா.அக.)

**சன்னிபாதபைரவம்** *šanni-pāta-pairavam,* பெ.(n.) நீடித்து அல்லது அடுத்தடுத்து வரும் பலவிதக் காய்ச்சலைக் குணப்படுத்த வேண்டி 18 வகை மூலிகைகளைச் சமனிடை கொண்டு கருக்கிட்டுக் கொடுக்கும் ஓர் ஆயுள் வேத மருந்து; an Ayurvedic decoction composed of 18 drugs taken in equal measure and prescribed for various kinds of fevers chronic or intermittent. (சா.அக.)

**சன்னிபாதம்** *šannipādam,* பெ.(n.) 1. சன்னி பார்க்க (மூ.அ.); see šanni. 2. கண்டகுப்சம், சிம்பகம், தாந்திரிகம், பக்கின நேத்திரகம், ருக்தாகம், சிஃகுலீகம், பிரலாபம், அந்தகம், இரத்தஷ்டீவி, சித்தவிப்பிரமம், சீதாங்கம், கர்ணிகம், அபின்னியாசம் என்ற பதின்மூன்று வகைப்பட்ட சன்னிநோய் (சீவரட். 22); diseases resulting from the morbid condition of the three bodily humours 13 in number viz., *kantakupcam, cimpakam, tāntirikam, pakkina-nēttirakam, ruktākam, cikkulikam, piralāpam, antakam, iratta.stivi, cittavippiramam, citāṅkam, karnikam, apinniyācam.* (சா.அக.)

**சன்னிபாதமதம்** *šanni-pātamatam,* பெ.(n.) வெண்ணீர் (விந்துப்) பெருக்கத்தினால் மதங்கொண்டு எழும்பிய காமக் காய்ச்ச லினால் ஏற்பட்ட சன்னி பாதக் குறிகள்; complex symptoms of delirium exhibited through fever due to sexual excitement arising from the accumulation of semen or virile power in the system. (சா.அக.)

**சன்னிபாதமூலம்** *šanni-pāda-mūlam,* பெ.(n.) **சந்நிபாதமூலம்** பார்க்க; see *šanni-pāda-mūlam.*

**சன்னிபாதம்** *šannipādam,* பெ.(n.) **சந்நிபாதம்** பார்க்க; see *šanni-pādam.* (சா.அக.)

**சன்னிபிற–த்தல்** *šanni-pira-,* செ.கு.வி.(v.i.) இசிவு நோயுண்டாதல்; being in a state of delirium.

[Skt. sanni + த. பிற–,]

**சன்னிபோக்கி** *šanni-pōkki,* பெ.(n.) இசிவுநோயை விலக்கக் கூடிய மருந்து; any drug or medicine efficient in preventing or affording relief in cases of apoplexy - anti - apoplectic. (சா.அக.)

[சன்னி + போக்கி]

[Skt. sanni > த. சன்னி]

**சன்னிமயக்கம்** *šanni-mayakkam,* பெ.(n.) இசிவுநோயால் ஏற்பட்ட உணர்ச்சியற்ற மெய் மயக்கம்; stupor or deep sleep attended with complete unconsciousness - Apoplectic coma. (சா.அக.)

[சன்னி + மயக்கம்]

[Skt. sanni > த. சன்னி]

**சன்னிமாந்தம்[1]** *šanni-mānddam,* பெ.(n.) மாந்தத்தினால் குழந்தைகளுக்குக் காணும் இசிவோடு கூடிய வலிப்பு; convulsion from

indigestion or gastric disturbances due to over indulgence in eating and drinking found in children in whom it is a predisposing cause of typhoid.

*[சன்னி + மாந்தம்]*

*[**Skt**. sanni > த. சன்னி]*

**சன்னிமாந்தம்²** *šaṉṉi-māndam,* பெ.(n.) உணவு செரியாமையால் (அசீரணத்தால்) குழந்தைகளுக்க வரும் மாந்த வகை (சீவரட்.); converlsions of children due to indigestion.

*[சன்னி + மாந்தம்]*

**சன்னிமிட்டான்** *šaṉṉi-miṭṭāṉ,* பெ.(n.) மூஞ்சுறு; grey musk shrew; Indian musk rat - Crocidura caerulea. (சா.அக.)



**சன்னிமூர்ச்சை** *šaṉṉi-mūrccai,* பெ.(n.) **சன்னிமயக்கம்** பார்க்க; see *šaṉṉi-mayakkam.* (சா.அக.)

**சன்னியசி-த்தல்** *šaṉṉiyaši-,* 4 செ.கு.வி. (v.i.) துறத்தல்; to renounce the world, become an ascetic.

*[**Skt**. san-nyas > த. சன்னியசி-,]*

**சன்னியநாயன்** *šaṉṉiya-nāyaṉ,* பெ.(n.) **சந்நிநாயகம்** பார்க்க; see *šanni-nāyagam.* (சா.அக.)

**சன்னியாசம்¹** *šaṉṉiyāšam,* பெ.(n.) உலகத் தொடர்பை விட்டு முற்றும் துறந்து, முத்தியடைய வேண்டி கொள்ளும் துறவு (இது நால்வகைத் துறவு நிலைகளில் ஒன்று, அதாவது கடைசி நிலை); asceticism consisting in renouncing all worldly affections and possessions with a view to work out for salvation. It is one of the four states and the last stage of the religious act contemplated in a man's life. (சா.அக.)

**த.வ. துறவு**

**சன்னியாசம்²** *šaṉṉiyāšam,* பெ.(n.) 1. குடீசகம், பகூதகம், அம்ஸம், பரமஅம்ஸம் என்ற நால்வகைப்பட்ட துறவு; rrenunciation of the world asceticism of four kinds viz., kuṭīcakam, pakūtakam, hamsam, parama-hamsam. 2. நூற்றெட்டுச் சிற்றிலக்கியங்களுள் ஒன்று; an upaniṣad, one of 108.

*[**Skt**. san-nyāsa > த. சன்னியாசம்]*

**சன்னியாசமுத்திரை** *šaṉṉiyāša-muttirai,* பெ.(n.) கோல், குவளை, துவராடை ஆகிய துறவிகட்குரிய அடையாளங்கள் (w.); distinctive marks of a sannyāsin, as staff, water-pot, salmon-coloured.

*[**Skt**. san-nyāsa > த. சன்னியாச]*



**சன்னியாசி**[1] *šaṉṉiyāši,* பெ.(n.) துறவிகள்; one who has abandoned or renounced worldly affairs, religious, mendicant of four classes viz.,

[**Skt**. *san-nyāsin > த. சன்னியாசி*]

**சன்னியாசி**[2] *šaṉṉiyāši,* பெ.(n.) **சன்னியசி-** பார்க்க; see *šaṉṉiyaši-. "சன்னியாசித் தனன்று" (குமரே. சத. 81).*

**சன்னியாசிரோகம்** *šaṉṉiyāši-rōgam,* பெ.(n.) உடலை அசைவறச் செய்யும் நோய்வகை (பைஷஜ. 235); catalepsy.

**சன்னிரோதனம்** *šaṉṉi-rōdaṉam,* பெ.(n.) கடவுளது இறையுணர்வை ஓரிடத்து நிறுத்துகை; circumscribing the divine presence to a particular spot or place. *"சன்னிதான சன்னிரோதனந்தான் மேவவமைத்த" (சிவரக. பசாசுமோ. 11).*

[**Skt**. *san-ni-rōdhana > த. சன்னி ரோதனம்*]

**சன்னிரோதனமுத்திரை** *šaṉṉi-rōtaṉa-muttirai,* பெ.(n.) முட்டிகளை இணைக்குங் கைமுத்திரைவகை (செந். x, 425); juxtaposition of two fists with thumbs bent in, used in religious worship. (சா.அக.)

**சன்னிவலிப்பன்** *šaṉṉi-valippaṉ,* பெ.(n.) மாட்டு நோய்வகை; a kind of cattle disease.

*[சன்னி+வலிப்பன்]*

[**Skt**. *sanni > த. சன்னி*]

**சன்னிவாதசுரம்** *šaṉṉi-vāda-šuram,* பெ.(n.) மார்பு, கழுத்து, நெற்றி வியர்த்து, விக்கலுடன் வாய்பிதற்றி, மேல் மூச்சுடன் வயிறு கழிந்து காணும் ஒருவகைக் காய்ச்சல்; a form of rheumatic fever attended with perspiration in the region of the chest, neck and forehead. hiccough, impaired speech, hard-breathing diarrhoea and other characteristic symptoms of apoplexy. (சா.அக.)

**சன்னிவாதசுரம்** *šaṉṉi-vātašuram,* பெ.(n.) **சன்னிபாதசுரம்** பார்க்க; see *šaṉṉipāta-šuram.*

**சன்னிவாதசூலை** *šaṉṉi-vāta-šulai,* பெ.(n.) உடம்பில் வளி தங்குவதினால் கை, கால், மூட்டுகளில் மோது கட்டி, உடம்பு வீங்கி, அயர்ந்து, நரம்பு தோன்றி, நாவு குளறி, காது மந்தித்து, கை, கால் குளிர்ந்து காணும் ஒரு வகைச் சூலை நோய்; a gouty condition of the system forming a predisposing cause of apoplexy. It then exhibits all the symptoms of apoplexy but chiefly the rigidity of the joints, swelling, fatigue, nervous affection. faltering speech, deafness, chillness of the extremities and other cerebral disturbances. (சா.அக.)

**சன்னிவாதசெவிடு** *šaṉṉivāta-ševiḍu,* பெ.(n.) காது அல்லது மூளையின் கோளாறினால் உடம்பு வெளுத்து மயக்கம் முதலிய இசிவு நோய்க் குறிகளால் ஏற்படும் செவிட்டுத் தனம்; complete or partial deafness, due to the aural and sevebral disturbances and marked by swimming in the head. vertigo paleness of the skin etc - A peplectiform deafness. (சா.அக.)

**சன்னிவாதத்தலைநோய்** *šaṉṉi-vāta-t-talainōy,* பெ.(n.) நெஞ்சடைத்து பெரு மூச்சுண்டாகி, இரண்டு காதிலும் ஆப்படித்தாற் போல கேளாது, வாய் பேசாது உணர்ச்சியறிவில்லாத குணங்களைக் காட்டும்; a form of neuralgic head-ache exhibiting almost all the symptoms of apoplexy, due to suspension of senseperceptions such as affection of the chest, deep sigh, in audibleness, as if stuck with a plug in the ear speechlessness, unconsciousness etc. (சா.அக.)

**சன்னிவாதம்** *šaṉṉi-vātam,* பெ.(n.) வாத பித்த சிலேட்டுமம் மிகுமாகில் உடம்பில் வெப்பு மிகுந்து மூளையைத் தாக்கி அதனால் சீதள முண்டாகி எப்பொழுதும் கெடுதியையே விளைவிக்கும் ஊதைநோய்; rheumatism always attended with chillness as a result of excess of heat due to the cerebral affections manifested by the derangements of the three humours in the system. (சா.அக.)

**சன்னிவிசபாகம்** *šaṉṉi-viṣapākam,* பெ.(n.) மதுபானம், அபினி சாப்பிடல் முதலிய காரணங்களினால் உடம்பில் வீக்கம் ஏற்பட்டு, அதனால் இசிவு நோய்க்குரிய குறிகளைக் காட்டுமோர் நிலைமை (இதனால் வயிற்றுப் போக்கு, சுரம், மயக்கம், முகவீக்கம், பிதற்றல் அசதி முதலிய குணங்கள் உண்டாகும்); attacks resembling tetanus resulting from over indulgence in intoxi cating liquors, opium eating and other narcotic poisoning. The symptoms are :- diarrhoea, fever, giddiness, swelling of the face raving : fatigue etc. - Toxic tetanus. (சா.அக.)

**சன்னிவேசம்** *šaṉṉi-vēšam,* பெ.(n.) அமைப்பு; lie, situation. *"வீட்டின் சன்னி வேசம் நன்றாயிருக்கிறது".*

த.வ. கட்டமைப்பு

*[Skt. san-ni-vēša > த. சன்னிவேசம்]*

**சனக்கட்டு** *šaṉa-k-kaṭṭu,* பெ.(n.) 1. உறவினர்களின் கூட்டம்; family circle. 2. உறவினரது பற்று (இ.வ.); family tie. 3. மக்களின் கூட்டமைப்பு; unity among the people.

*[சனம் + கட்டு]* *[Skt. jana > த. சனம்]*

**சனக்குறைவு** *sana-k-kuraivu,* பெ.(n.) மக்கள் குடியோடிப் போகை (புதுவை); depopulation.

*[சனம்+குறைவு]*

*[Skt. jana > த. சனம்]*

**சனகபிதா** *šaṉaka-pitā,* பெ.(n.) பெற்றெடுத்த தந்தை; natural father dist. fr. *cuvikāra-pitā.*

*[Skt. janaka +pita> த. சனகபிதா]*

**சனகம்** *šaṉakam,* பெ.(n.) சாதிக்குக் காரணமான சூக்குமவினை வகை (சி.போ. பா.2,2,பக்.116); a subtle karma which determines the caste of an individual.

*[Skt. janaka > த. சனகம்]*

**சனகமாதா** *šaṉaka-mādā,* பெ.(n.) பெற்றதாய்; natural mother, dist. fr., *cuvikāra-mātā.*

*[Skt. janaka+mādā > த. சனகமாதா]*

**சனகன்**[1] *šaṉakaṉ,* பெ.(n.) 1. தந்தை; father. progenitor. *"சனகனுக்கென் றுதகமுடன் ...... ஈந்தான்" (குற்றா. தல. கவுற்சன. 84).* 2. இராமகாதையின் கதைத்தலைவியாகிய சீதையின் தந்தையாகிய மிதிலையரசன்; a king of Mithila, father of Sitā, considered a royal sage. *"கோமகன் முன் சனகன் குளிர்நன்னீர் ........ தடக்கையினீந்தான்" (கம்பரா. கடிமண. 87).*

*[Skt. janaka > த. சனகன்]*

**சனகன்**[2] *šaṉakaṉ,* பெ.(n.) சனகாதியருள் ஒருவராகிய முனிவர்; aa sage, one of four caṉakātiyar, q.v. *"துங்கமிகு பக்குவச் சனகன் முதன் முனிவோர்கள்" (தாயு. சின்மயாநந்த. 1).*

*[Skt. sanaka > த. சனகன்]*

**சனகாதியர்** *šaṉakātiyar,* பெ.(n.) சனகன், சனாதனன், சனற்குமாரன், சனந்தனன் என்ற நான்முகனது பிரமனது மானச மக்கள் (புத்திரர்)களான நான்கு இருடிகள்; the four celebrated sages, spiritual or mindborn sons of Brahmā, viz., *caṉakaṉ, caṉātaṉav, caṉar-kumāraṉ, caṉantaṉaṉ.*

*[Skt. janaka + ādi> த. சனகாதி]*

**சனகி** *šaṉagi,* பெ.(n.) **சானகி** பார்க்க; see *šāṉaki. "சனகன்மா மகள்பெயர் சனகி" (கம்பரா. கடாயுவு. 39).*

*[Skt. janaki > த. சனகி]*

**சனசதளம்** *šaṉašataḷam,* பெ.(n.) மக்கட் கூட்டம் (வின்.); crowd of people.

*[சன+சதளம்]*

*[Skt. jana > த. சதளம்]*

*அதித்தல் = மிகுதல். அதி + அனம் – அதனம் = அதிகம், மிகுதி. மிகை. அதனம் → சதனம் → சதளம்*

**சனஞ்சேர்–த்தல்** *šaṉañ-šēr-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஆட்கூட்டுதல்; to assemble partisans, constituents, voters. 2. படைதிரட்டுதல்; to enlist forces, levy an army.

*[சனம் + சேர்]* *[Skt. jana > த. சனம்]*

**சனந்தனன்** *šaṉantaṉaṉ,* பெ.(n.) சனகாதி யருள் ஒருவராகிய முனிவர் (பிங்.); a sage, one of four *caṉakātiyar*, q.v.

*[Skt. sanandana > த. சனந்தனன்]*

**சனப்பெருக்கம்** *šaṉa-p-perukkam,* பெ.(n.) மக்கட்செறிவு; dense population.

*[சனம் + பெருக்கம்]*

*[Skt. jana > த. சனம்]*

**சனபதம்** *šaṉa-padam,* பெ.(n.) நாடு (திவா.); country, rural district.

*[Skt. jana-pada > த. சனபதம்]*

**சனபதி** *šaṉa-pati,* பெ.(n.) அரசன்; king, emperor. *"சனபதியடியிற் புகவிழு பொழுதத்தே" (கலிங். 36).*

**சனம்** *šaṉam,* பெ.(n.) 1. மக்கள்; people, community. *"மாசன மிடம்பெறாது" (சீவக. 116).* 2. இனத்தார் (கொ.வ.); relation, one's own people. 3. கூட்டம்; crowd, herd. *"தானப்பகடு முதலாய சனங்கள்" (பாரத. சம்பவ. 47).*

*[Skt. jana > த. சனம்]*

**சனமடிவு** *šaṉa-madivu,* பெ.(n.) **சனக் குறைவு** பார்க்க (புதுவை.); see *šaṉa-k-kuṟaivu.*

*[சனம்+மடிவு]*

*[Skt. jana > த. சனம்]*

**சனமாலி** *šaṉamāli,* பெ.(n.) **சன்மலி 1** (மலை.) பார்க்க; see *saṉmali.*

**சனமேசயன்** *šaṉamēšayaṉ,* பெ.(n.) பரீட்சித்தின் மகனும் அர்ச்சுனன் பேரனுமாகிய அத்தினாபுரவரசன்; a celebrated king of Hastināpura son of Parīksit and grandson of Arjuna.

*[Skt. janamējaya > த. சனமேசயன்]*

**சனலோகம்** *šaṉa-lōkam,* பெ.(n.) மேலேழுலகத்துள் முன்னோர் முதலிய தேவதைகளின் வாழ்விடமாகிய உலகம்; an upper world inhabited by the sons of Brahmā, manes and celestials, fifth of *mēl-ēḷ-ulakam*, q.v. *"இகலோகம் பரவு சனலோகம்" (கந்தபு. அண்டகோ. 64).*

*[Skt. jana-lōka > த. சனலோகம்]*

**சனற்குமாரம்** *šaṉaṟkumāram,* பெ.(n.) துணைத் தொன்மங்கள் பதினெட்டனு ளொன்று (திவா.); a secondary purāṇa, one of 18 upapurāṇam, q.v.

*[Skt. sanat-kumāra > த. சனற்குமாரம்]*

**சனற்குமாரன்** *šaṉaṟkumāraṉ,* பெ.(n.) சனகாதியருள் ஒருவராகிய முனிவர் (பிங்.); a sage, one of four caṉakātiyar, q.v.

*[Skt. sanatkumāra > த. சனற்குமாரன்]*

**சனற்சுசாதன்** *šaṉaṟšušātaṉ,* பெ.(n.) பிரமாவின் மானபுத்திரரான ஒரு முனிவர் (அபி.சிந்.); a sage, one of the mind-born sons of Brahmā.

*[Skt. sanatsujāta > த. சனற்சுசாதன்]*

**சனன்மாலி** *šaṉaṉmali,* பெ.(n.) **சனனமாலி** பார்க்க; see *šaṉaṉamāli.*

**சனனகாண்டம்** *šaṉaṉakāṇḍam,* பெ.(n.) உலகப் பெருக்கத்தைக் கூறும் முதற் தோன்றியம் (ஆதியாகமம்); Book of Genesis.

*[சனன+காண்டம்]*

*[Skt. janana > த. சன்ன]*

**சனனகாலம்** *šaṉaṉa-kālam,* பெ.(n.) 1. பிறக்கும் காலம் அல்லது பொழுது (அ) நேரம்; period or time of birth. 2. பிறக்கிற பொழுது கோள்கள் அமையப்பெற்ற நேரம் அல்லது வேளை; the time of birth in consideration of the position of the planets or the zodiacal constellations. (சா.அக.)

*[சனை+காலம்]*

*[Skt. janana > த. சன்ன]*

**சனனசாலம்** *šaṉaṉa-šālam,* பெ.(n.) வெண்கடுகு; white mustard - Brassica alba. (சா.அக.)

**சனனத்தடை** *šaṉaṉa-t-taḍai,* பெ.(n.) பிறப்புத் தடுப்பு; preventing birth through contraception - Birth control. (சா.அக.)

*[சனனம்+தடை]*

*[Skt. janana > த. சனனம்]*

**சனனத்தடையம்** *šaṉaṉa-t-taḍaiyam,* பெ.(n.) கருத் தரித்தலை மறுக்கப் பயன் படுத்தும் பொருள்; anything used to prevent conception - contraceptive. (சா.அக.)

*[சனன(ம்)+தடையம்]*

*[Skt. janana > த. சனனம்]*

**சனனதத்துவம்** *šaṉaṉa-tattuvam,* பெ.(n.) 1. பிறவிச் சத்து; procreative power. 2. பிறப்பின் இயற்கை; the real or essential nature of coporeal existence. (சா.அக.)

*[சனனம்+தத்துவம்]*

*[Skt. janana > த. சனனம்]*

**சனைநீயம்** *šaṉai-nīyam,* பெ.(n.) நெய்; ghee.

**சனனபூமி** *šaṉaṉabūmi,* பெ.(n.) **சன்மபூமி** பார்க்க; see *šaṉma-būmi.*

*[Skt. janana+bumi> த. சனனபூமி]*

**சனனம்** *šaṉaṉam,* பெ.(n.) 1. பிறப்பு; birth. 2. மறுபிறப்பு; rebirth. (சா.அக.).

*[Skt. janana > த. சனனம்]*

**சனனமரணக்கணக்கு** *šaṉaṉamaraṇa-k-kaṇakku,* பெ.(n.) மக்களின் பிறப்பிறப்புப் பதிவு (இக்.வ.); vital statistics.

**த.வ. தோற்றமறைவுக்கணக்கு**

*[சனனம்+மரணம்+கணக்கு]*

*[Skt. jananamarana+ த. சனனமரணம்]*

**சனனமரணம்** *šaṉaṉa-maraṇam,* பெ.(n.) பிறப்பு, இறப்பு; birth and death. (சா.அக.)

*[Skt. janana+marana >த. சனனமரணம்]*

**சனனமறு-த்தல்** *šaṉaṉa-m-aṟu-,* பெ.(n.) பிறவி வேண்டாமை அதாவது கடவுளை நோக்கிப் பிறவா வரம் வேண்டுகை; praying God to prevent from taking birth in the world. (சா.அக.)

**த.வ. பிறவிநீத்தல் வேண்டுகை**

*[சனனம்+மறு-]*

*[Skt. janana > த. சனனம்]*

**சனனமாலி** *šaṉaṉamāli,* பெ.(n.) சதகுப்பி; bishop's weed. (சா.அக.)

**சா[1]** *šā* பெ.(n.) வளைகோட்டின் ஒரு பகுதியின் இரு முனைகளையும சேர்க்குங் கோடு; (Astron.) chord of an arc; sine of an are.

**த.வ. நாண்**

*[Skt. jyā> த. சா]*

**சா[2]** *šā* பெ.(n.) தேயிலைச்செடி (இவ); tea-plant.

*[U. chā> த. சா]*

**சாக்கணாக்கறி** *sākkaṉā-k-kaṟi,* பெ.(n.) மதுவுண்போர் தின்னும் புலால்; meat prepared and sold at taverns to be taken by drunkards along with the drink.

**த.வ. களியாஊன்**

*[சாக்கணா + கறி]*

*[U. cāknā > த. சாக்கணா]*

**சாக்கி** *sākki,* பெ.(n.) நேர் பார்வைச் சான்று; eye witness "தேவர் சாக்கியாக" (இராமநா.உயுத்.71)

**த.வ.சான்று, காட்சிச் சான்று**

*[Skt. šākṣin > த. சாக்கி]*

**சாக்கி[2]** *sākki,* பெ.(n.) நெருப்புண்டாக்க பயன்படுத்தி வந்த ஒரு வகைக் கல்; flint - stone used for kindling fire.

**த.வ. அழற்கல், வெங்களிச்சான்கல், வெண்கல், சக்கிமுக்கிகல், தீக்கடைகல்.**

*[Skt. சக்கி > சாக்கி]*

**சாக்கியநாயனார்** *sākkiya-nāyaṉar,* பெ.(n.) புத்தமதத்திலிருந்து சிவனிய மதத்தைத் தழுவியவரும் நாயன்மார் அறுபத்துமூவருள் ஒருவருமாகிய சிவனடியார் (பெரியபு.); a canonized Šaiva saint converted to Šaivaism from Buddhism, one of 63.

*[சாக்கிய(ம்) + நாயனார்]*

*[Skt. sākya > த. சாக்கிய(ம்)]*

**சாக்கியம்** *sākkiyam,* பெ. (n.) புத்தமதம்; Buddhism, as founded by šākya-muni. "சாக்கியங் கற்றோஞ் சமண்கற்றோம்" (பெருந்தொ.1812).

**த.வ. அறிவன்மதம்**

*[Skt. šākya > த. சாக்கியம்]*

**சாக்கியமுனி** *sākkiya-muṉi,* பெ. (n.) புத்தர்; Gautama Buddha.

*[சாக்கியம்+முனி]*

*[Skt. šākya + த. சாக்கியம்]*

**சாக்கியர்** *sākkiyar,* பெ. (n.) 1. புத்தர்; Buddhists. சாக்கியரும் (தி.வ். திருவாய், 4,10,5.) 2. அருகர் சைனர்; Jainas. *"பாக்கியமில் சாக்கியர்கள்"* (திருவாலவா. 38,50).

*[Skt. šākya > த. சாக்கியர்]*

**சாக்கியன்[1]** *sākkiyaṉ,* பெ. (n.) 1. புத்தர் (பிங்); Gautama Buddhar. 2. சாக்கிய நாயனார் பார்க்க; see šākkiya-nāyaṉār.

**சாக்கியன்[2]** *sākkiyaṉ,* பெ. (n.) சாக்கையன் பார்க்க; see sākkaiyan.

**சாக்கிரக்கருவி** *sākkira-k-karuvi,* பெ. (n.) பொறிகள் புலன்கள் தன்மாத்திரைகள் உயிர்வளி ஆதன் என்னும் விழிப்புணர்வுக்கு (சாக்கிராவத்தைக்கு) உரிய கருவிகள் (சி.சி.4,34.); (Saiva) agents or elements operating in the state of waking, as organs of action, of sense and of mind, vital airs and soul.

**த.வ. விழிப்பேந்துகள்**

*[சாக்கிரம் + கருவி]*

*[Skt. Jāg.rat > த. சாக்கிரம்]*

**சாக்கிரத்தானம்** *sākkira-t-tānam,* பெ. (n.) சாக்கிரத்தில் ஆதனின் இடமாகக் கருதும் புருவ நடுவம் (மத்தியம்); centre between the eyebrows where the soul dwells in the waking state. "ஆன்மா வானவன் சாக்கிரத் தானமாகிய புருவமத்தியத்தைப் பொருந்தும் போது (சி.சி.4, 33, மறைஞா)

**த.வ. புருவநடு**

*[Skt. Jagrat-sthāna > த. சாக்கிரத்தானம்]*

**சாக்கிரத்திலதீதம்** *sākkirattil-atitam,* பெ. (n.) ஆன்மா தொடர்பானவற்றைத் துய்க்கின்ற (விடயங்களை யனுபவிக்கிற) வேளையில் உயிர் வளியும் (பிராணவாயுவும்) இயங்காமல்

ஒன்றையும் அறியாமல் மூர்ச்சித்து மயங்கி நிற்கும் நிலை (ஞானா கட். 29); (Šaiva) condition of the soul while in waking state, in which preathing is suspended and consciousness is utterly lost, as when a person is stunned by a sudden shock.

*[சாக்கிரம் → சாக்கிரத்தில் + அதீதம்]*

**சாக்கிரத்திற்சாக்கிரம்** *sākkirattir-sākkiram,* பெ. (n.) ஆதன் (ஆன்மா) கொண்முடிபு நிலை (தத்துவதாத்துவிகங்) களோடு கூடித் (விடயங்களை) துய்க்கும் நிலை (அனுபவிக்கும் அவசரம்) (ஞான. கட்.30); (Šaiva) condition of the soul while in waking state, in which all its powers are in full play, as when a person is alert and wide awake.

*[சாக்கிரத்தில் + சாக்கிரம்]*

**சாக்கிரத்திற்சுழுத்தி** *sākkiratt‹‹-culutti,* பெ. (n.) ஆதன் உயிர்வளியுடனும் மெய்ப்பாட்டு டனுங் கூடி அறிவுணர்ச்சியடங்கி நிற்கும் நிலை (ஆன்மா சித்தத்துடனும் பிராண வாயுவுடனுங் கூடி அறிவுணர்ச்சி முதலியன அடங்கி நிற்கும் அவசரம்) (தத்துவ தாத்துவிகங்) (ஞானா. கட்.30); (Šaiva) condition of the soul while in waking state, in which breathing and consciousness are not lost but the mental powers are not roused to full activity, as when a person loses though and memory.

*[சாக்கிரம் →சாக்கிரத்தில் + சுழுத்தி]*

**சாக்கிரத்திற்சொப்பனம்** *sākkirattir-soppaṉam,* பெ. (n.) ஆதன் மனத்துடனும் உயிர்வளியுடனுங் கூடிய அறிவுணர்ச்சி முதலியன தெளிவின்றி நிகழும் நிலை (ஆன்மா சித்தத்துடனும் பிராணாதி வாயுவுடனுங் கூடிய அறிவுணர்ச்சி முதலியன தெளிவின்றி நிகழும் அவசரம்) (ஞானா.கட்.30); (Šaiva) condition of the soul while in waking state, in which breathing and consciousness east and the mental powers are dreamily active, as wwhen a person has vague thoughts and memories.

*[சாக்கிரம் →சாக்கிரத்தில் + சொப்பனம்]*

**சாக்கிரத்திற்றுரியம்** *sākkirattiṟṟuriyam,* பெ. (n.) ஆதன் மனமழிந்து உயிர்வளி சிறிதே இயங்கி நிற்கும் நிலை (ஆன்மா சித்தமழிந்து பிராணவாயு சிறிதே இயங்கி நிற்கும் அவசரம்) (ஞானா.கட்.30); (Šaiva) condition of the soul while in waking state, in which consciousness is lost and breathing is low, as when a person is half stunned by a sudden shock.

**சாக்கிரத்திற்றுரீயாதீதம்** *sākkirattiṟṟu-riyādam,* பெ. (n.) சாக்கிரத்திலதீதம் பார்க்க; see cākkirattil-atitam.

*[சாக்கிரம் →சாக்கிரத்தில் + துரியாதீதம்]*

**சாக்கிரதை** *sākkiradi,* பெ. (n.) விழிப்பு; wake fulness vigilance.

த.வ. கூர்ங்கவனம்

*[Skt. Jagrat-ta> த. சாக்கிரதை]*

**சாக்கிரபாலன்** *sākkirabālaṉ,* பெ. (n.) விழிப்பு நிலையில் இயங்கும் ஆதன் (ஆன்மா) (சி.சி. 4, 33, மறைஞா) (சாக்கிரதசையில் விளங்கு பவன்); soul, as active in the waking state.

*[Skt. Jāgra-pāla> த. சாக்கிரபாலன்]*

**சாக்கிரம்** *sākkiram,* பெ. (n.) ஆன்மா புருவ நடு நின்று கோட்பாட்டு (தத்துவங்)களுடன் கூடி (விடய) நுகர்ச்சியில் மெத்தென நிற்கும் நிலை (சி.போ.பா.4,3, பக். 275, புது.); (Phil.) waking state in which the soul is in the forehead with all its faculties active.

த.வ. விழிப்புநிலை

*[Skt. Jāgrat > த. சாக்கிரம்]*

**சாக்கிராதீதம்** *sākkirādidam,* பெ. (n.) சாக்கிரத்திற்றுரியாதீதம் பார்க்க; see cākkirattiṟṟu-riyātitam.

*[Skt.Jāgrātita > த. சாக்கிராதீதம்]*

**சாக்கிலி** *sākkili,* பெ. (n.) அடிமைவேலை; menial service.

**த.வ. ஏவற்பணி, சிறுபணி, தொழும்பு**

*[U.cākari > த. சாக்கிலி]*

**சாக்குக்கட்டி** *sākku-k-kaṭṭi,* பெ. (n.) கரும்பலகையில் எழுதப்பயன்படும் சீமைச் சுண்ணாம்புத் துண்டு; chalk piece; piece of chalk.

*[சாக்கு+கட்டி]*

*[E.chalk > த. சாக்கு]*

**சாக்தம்** *sākdam,* பெ. (n.) மலைமகளே மீமிசைத் தெய்வமென வழிபடுஞ் சமயம். சிவையம்; (சக்தியே பரதேவதையாக வழிபடுஞ் சமயம்); the religion which enjoins the exclusive worship of šakti as the supreme Being.

*[Skt. šakta > த. சாக்தம்]*

**சாக்தன்** *sākdan,* பெ. (n.) கொற்றவை அல்லது காளி (சிவை) வழிபாட்டாளன்; follower of šakta religion.

*[Skt. šakta > த. சாக்தன்]*

**சாக்தேயம்** *sākdēyam,* பெ. (n.) சாக்தம் பார்க்க; see cāktam.

*[Skt. šāktēya > த. சாக்தேயம்]*

**சாகசக்கியம்** *sākasakkiyam,* பெ. (n.) 1. திறமை, ஆற்றல் (சாமர்த்தியம்); cleverness, as in speech; trickery. 2. போலித்தனம் (பாசாங்கு); false pretence "சாகசக்கியம் பண்ணுகிறான்"

**த.வ. ஏமாற்றுவேலை**

*[Skt. cāka-cakya > த. சாகசக்கியம்]*

**சாகசபட்சி** *sāgasa-patci,* பெ. (n.) 1. சாகசத்தொழில் செய்யலாகாது என்று பிறவற்றுக்கு அறிவுரை செய்து அரிமா (சிங்கம்) வாயைத் திறக்கும் போது தான் உட்புகுந்து அதன் தொண்டைத் தசையைத் தின்னும் இயல்பினதாகக் கூறப்படும் குலிங்கமென்னும் பறவை, a fabulous bird which preaches against cruelty but itself enters the lion's mouth when it gapes, and eats its flesh. 2. முதலையின் பல்லழுக்கைக் கவரும் துணிவுள்ளதொரு பறவை(வின்); a kind of bird bold enough to pick the crocodile's teeth.

*[Skt. sāhasa-pakṣin > த. சாகசபட்சி]*



**சாகசம்**[1] *sāgasam,* பெ. (n.) 1. துணிவு; daring, daring act. "சாகசங்கள் பல செய்தும்" (பிரபோத. 30,53). 2. போலிநடிப்பு, பாசாங்கு; false, pretence."இத்தனை சாகசமும் வேணுமோ" (இராமநா. அயோத். 7)

*[Skt. sāhasa > த. சாகசம்]*

**சாகசம்**[2] *sāgasam,* பெ. (n.) மெய்ம்மை; truth. "சாகசமொன்றும் விரும்புவோள்" (ஞானவா. தா. சு. 80)

*[Skt. sahaja > த. சாகசம்]*

**சாகசம்**[3] *šāgašam,* பெ. (n.) யானை (அக.நி); elephant.

**சாகசரியம்** *sagasariyam,* பெ. (n.) தோழமை; companionship.

**த.வ. நட்பு**

*[Skt. sāhacarya > த. சாகசரியம்]*

**சாகசன்** *sāgašan,* பெ. (n.) துணிகரமுள்ளவன்; a clever, brave man.

*[Skt. sāhasa > த. சாகசன்]*

**சாகசிகன்** *sāgasigan,* பெ. (n.) 1. துணிவுள்ளவன்; daring man. 2. பாசாங்கு செய்வோன், போலியாக நடிப்போன்; pretender

*[Skt. sāhasika > த. சாகசிகன்]*

**சாகதன்** *sāgadaṉ*, பெ. (n.) சாகசன் பார்க்க; see sākašaṉ

*[Skt. sāhasa > சாகசன் → த. சாகதன்]*

**சாகதுண்டம்** *šāka-tuṇdam*, பெ. (n.) அகில் (அக.நி.); eaglewood.

**சாகபசுநியாயம்** *sāga-pasu-niyā-yam*, பெ. (n.) முன்னர் ஆ (பசு)வெனப் பொதுப் பெயராற் கூறிப் பின்னர் புல்லுண்ணி ஆ (சாகபசு) வெனச் சிறப்புப் பெயரடையோடு பொது நீக்கிக் கூறுதலான் முன்னர்க் கூறிய ஆ (பசு)வும் புல்லுண்ணியே (சாகமே) எனப் பொருள் கொள்ள நிற்பதோர் நெறி. (சி.போ.பா. 1,2, பக். 73) Illustration of sacrificial animal and goat by which a general term like sacrificial animal in a text is construed in ,limited sense like goat because of subsequent specification.

*[Skt.chāga-pasu-niyāya > த. சாகபசுநியாயம்]*

**சாகபட்சிணி** *sāga-paṭcini*, பெ. (n.) இலையுணவு கொள்ளும் விலங்கு; Herbivorous animal

த.வ. இலைக்கறியுண்ணி

*[Skt. šaka+patcini > த. சாகபட்சிணி]*

**சாகம்[1]** *sāgam*, பெ. (n.) வெள்ளாடு(பிங்); he - goat.

*[Skt. chāga > த. சாகம்]*



**சாகம்[2]** *sāgam*, பெ. (n.) தேனீ(சூடா); bee.

*[சரகம் >சாகம்]*

**சாகரணம்** *sāgaraṇam*, பெ. (n.) சாகரம்[1] பார்க்க; see sāgaram. "சாகரணா வஸ்தையில் இருக்கிறான்"

*[Skt. Jāgarana >த. சாகரணம்]*

**சாகரப்பிரபை** *sāgara-p-pirabai*, பெ. (n.) எப்பொழுதும் விழித்தே இருக்க வேண்டிய ஒரு நிரயம் (நரகம்) (யாழ். அக.); hell of perpetual sleeplessness.

**சாகரம்[1]** *sāgaram*, பெ. (n.) விழிப்புநிலை; விழித்திருக்கை (பிங்); sleeplessness, watchfulness.

*[Skt. Jāgara > த. சாகரம்]*

**சாகரம்[2]** *sāgaram*, பெ. (n.) 1. சகரர்கள் தோண்டியதாகக் கருதப்படும் கடல்; ocean, sea, as dug by cakarar. "சகரர் தொட்டலாற் சாகரம் (கம்பரா. அகலி 43) 2. பதினாயிரங்கோடி (வின்); ten quadrillions.

*[Skt. sāgara > த. சாகரம்]*

**சாகவாசம்** *šāgavāšam*, பெ. (n.) தோழமை, நட்பு; association, friendship.

*[Skt. sahavāsa > த. சாகவாசம்]*

**சாகாங்கம்** *sāgaṅgam*, பெ. (n.) மிளகு (மலை); Pepper.

*[Skt. šākānga > த. சாகாங்கம்]*

**சாகாசந்திரநியாயம்** *sāgā-sadira-niyāyam*, பெ. (n.) நிலவு கிளைக்கு மேலிருப்பதாகக் காட்டி உணர்த்துவதுபோலப் பார்வைக்குத் தொடர்புள்ளது போலிருக்கும் பொருளை அடையாளமாகக் காட்டி வேறொரு முகாமையானப் (முக்கியமான) பொருளைத் தெரிவிக்கும் நெறி; Illustration of the bough and the moon by which an object in question, like moon, has its position assigned in reference to another object, like bough, with which it is apparently connected.

[Skt. šāhā + santira - niyaya > த. சாகாசந்திரநியாயம்]

**சாகி** *sāgi,* பெ. (n.) 1. மரம் (சூடா); tree. 2. சிற்றீஞ்சு; shiny-leaved dwarf date 3. திராய் (மலை); Indian chickweed.

[Skt. šākhin> த. சாகி]

**சாகித்திய சக்தி** *sāgittiya-sakti,* பெ. (n.) பாத்திறன்; பாடுந்திறமை; poetic skill.

[சாகித்திய(ம்) + சக்தி]

[Skt. sāhitya> த. சாகித்திய(ம்)]

[த. சத்தி > Skt. skti]

**சாகித்தியம்** *sāgittiyam,* பெ. (n.) 1. பா; செய்யுள்; literary composition, 2. இசைப்பாட்டு; musical composition.

**சாகியம்** *sāgiyam,* பெ. (n.) நட்பு (இலக் அக.), friendship.

[Skt. sakhya > த. சாகியம்]

**சாகேதம்** *sākēdam,* பெ. (n.) அயோத்தி (திவா.); (Ayōdhyā)Ayotti.

[Skt. sākēta > த. சாகேதம்]

**சாகோபசாகையாய்** *sagopasagaiyai,* து.வி. (Adv.) (கிளைகளும் உட்கிளைகளுமாய்) தூரும் கிளையுமாய், செழிப்பாய்; Lit; with branches and branchlets, luxuriantly abundantly.

[சாகோப(ம்) + சாகையாய்]

[Skt. šākhōpa > த. சாகோப(ம்)]

**சாங்கம்** *sāṅgam,* பெ. (n.) 1. உறுப்புக்களனைத்தும்; all the limbs. "கரசரணாதி சாங்கம்" (சி.சி. 1,47, மறை. ஞா) 2. சாயல்; likeness, similarity of features."பார்த்தால் அவன் சாங்கமாயிருக்கிறது."

[Skt. sāṅga > த. சாங்கம்]

**சாங்கமாய்** *sāṅgam-āy,* து.வி. (adv.) 1. முழுதும், wholly, completely. "சாங்கமாயனுட்டிக்கும் சாமர்த்திய மில்லா தாராய் (சி.சி. 8,4, ஞானப்) 2. காப்பாய் (பத்திரமாய்); (வின்) with safety. 'அந்த வழியிலே சாங்கமாய் நடக்கலாம்."

[Skt. sāṅga > த. சாங்க + த. ஆய்]

**சாங்கமிலார்** *sāṅgam ilār,* பெ. (n.) சாதிவிலக்குப்பட்டவர்; outcastes. "சூளைக்காரச் சாங்கமிலார்" (திருப்பு. 589)

[சாங்கம் + இலார்]

[Skt. sāṅgha > த. சாங்கம்]

**சாங்கரம்** *sāṅgaram,* பெ. (n.) கலப்பின வகுப்பு (சாதி); mixed caste. "சாங்கரத்திணங்கு பலவேறு சாதியினும்" (திருவானைக். நகரப். 64)

[Skt. sāṅkara > த. சாங்கரம்]

**சாங்கரர்** *sāṅgarar,* பெ. (n.) கலப்பினத்தார்; persons of mixed caste. "வெய்ய காருகர்க்குஞ் சாங்கரரார்க்குமடாது வேந்தே" (திருவானைக். கோச்செங். 24)

[Skt. sāṅkara > த. சாங்கரர்]

**சாங்கரிசம்** *sāṅgarisam,* பெ. (n.) சாங்கரியம் பார்க்க; see sāṅgariyam

**சாங்கரியம்** *sāṅgariyam,* பெ. (n.) கலப்பு; mixture. "சாங்கரியம் வாராமல்" (சிவசம. 40)

[Skt. sāṅkarya > த. சாங்கரியம்]

**சாங்கரீயம்** *sāṅgarīyam,* பெ. (n.) கலப்பானது; that which is mixed as caste. "சாங்கரீய மரபிற் சனித்தவன்" (சேது 4. தனுக். 24)

[Skt. sāṅkarya > த. சாங்கரீயம்]

**சாங்கியம்[1]** *sāṅgiyam,* பெ. (n.) 1. கபிலரால் வெளிப்படுத்தப்பட்டதும் கொண்முடிபுகள் (தத்துவங்கள்) இருபத்தைந்து எனக் கணக்கிடுவதுமான ஒரு சமயம்; the sāṅkhya system of Philosophy expounded by Kapila, enumerating twenty-five tattvas."இது சாங்கிய மதமென்றெடுத்துரைப்போன்" (மணி. 27, 202.) 2. எண்ணிக்கை; that which can be

counted. "அருவாய்ப் பல சாங்கியமாய்" (சி.போ.பா. அவை)

*[Skt. sāṅkhya > த. சாங்கியம்]*

**சாங்கியம்²** *sāṅgiyam,* பெ. (n.) சடங்குகள்; ceremonies, rites.

**சாங்கியன்** *sāṅgiyan,* பெ. (n.) சாங்கியவாதி; follower of the sāṅkhya philosophy. "பௌத்தன் மாறாய் நின்ற சாங்கியனைக் குறித்து" (மணிமே. 29, 169.)

*[Skt. sāṅkhya > த. சாங்கியன்]*

**சாங்குசித்தன்** *sāṅgusittaṉ,* பெ. (n.) குருவிடம் நல்லுரை (உபதேசம்) பெற விரும்புவோன்; one who wishes to be initiated by a guru.

*[Skt. saṃ-siddha > த. சாங்குசித்தன்]*

**சாங்கேதிகம்** *sāṅgēdigam,* பெ. (n.) அடையாளம், கட்டுப்பாடு முதலியவற்றால் நிகழ்வது; that which is conventional; signs based on agreement. "அந்த அகாரங் களினுடையசாங்கேதிகத்துக்குஅபிவ்யஞ்சகம்" (சி.சி.2,62 சிவாக்)

*[Skt. saṅkētika > த. சாங்கேதிகம்]*

**சாங்கோபாங்கம்** *sāṅgōpāṅgam,* பெ. (n.) 1 முழுமை; completeness. 2. சிறந்த கிருத்துவர்களின் வாழ்க்கை (கிருத்); true christian perfection.

*[Skt. sāṅgōpāṅga > த. சாங்கோபாங்கம்]*

**சாங்கோபாங்கமாகப் பண்ணு-தல்** *sāṅgōpāṅgam-āga-p-paṇṇu-,* செ.கு.வி; (vt.) சுறுசுறுப்பாகச் செய்வது போல நடித்தல் (யாழ்ப்); to make pretence of being diligent or active.

**சாங்கோபாங்கமாய்** *sāṅgōpāṅgam-āy,* து. வி. (adv.) முழுவதும்; completely, in detail.

**சாசனக்காணி** *sāsaṉa-k-kāṇi,* பெ. (n.) அரசனால் விடப்பட்ட உரிமை நிலம். (யாழ்ப்); hereditary property held under a royal grant.

*[சாசனம்+ காணி]*

*[Skt. šāsana > த. சாசனம்]*

*காண் → காணி*

**சாசனம்** *sāsaṉam,* பெ. (n.) 1. கட்டளை, order, edict, command. 2. அரசாணை முதலியவற்றைக் குறிக்கும் கல்வெட்டு செப்புப்பட்டயம் முதலியவை; royal grant of land or of privileges, charter, patent usually inscribed on stone or copper. 3. (பத்திரம்) ஆவணம்; document. 4. இறையிலி நிலம்; (வின்.) tax - free land. 5. அதிகாரச்சின்னம் (வின்.) insignia of authority. 6. தண்டனை (வின்.) punishment, retribution. 7. வேட்டுவச்சேரி (வின்.) village of a hinter-tribe attached to a royal household.

*[Skt. šāsana > சாசனம்]*

**சாசனம்பண்ணு-தல்** *sāsaṉam-paṇṇu-,* 12 செ. குன்றாவி. (vt.) நிலம் முதலியவற்றை விற்பனை செய்தல்; to sell or convey by deed.

*[சாசனம் + பண்ணு]*

*[Skt. šāsana > த. சாசனம்]*

**சாசனவிருத்தி** *sāsaṉa-virutti,* பெ. (n.) (பத்திர) ஆவண ஆதரவில் பயன்படும் வாழ்வூதியம்; maintenance enjoyed under a written deed or grant. (R.T)

*[Skt.sasana+vṛuttiāsana→த.சாசனவிருத்தி]*

**சாசாரம்** *sāsāram,* பெ. (n.) தேவருலகத்துளொன்று; a celestial world. "நிலையிலா வுடம்பு நீங்கி........சாசாரம் புக்கான்" (மேருமந். 480)

*[Skt. sahasrāra> த. சாசாரம்]*

**சாசிபம்** *sāsibam,* பெ. (n.) தவளை (சது.); frog.

*[Skt. šālūka> த. சாசிபம்]*



**சாசுவதக்கவுல்** *sāsuvada-k-kavul,* பெ. (n.) குத்தகைதாரனும் அவன் வழித் தோன்றல்களும் உடன்படிக்கைத் திட்டப்படி வரி செலுத்தி (நிரந்தரமாக அனுபவித்து) தொடர்ந்து துய்த்து வரும் வழியுரிமை (கவுல்) நிலம்; perpetual lease of land to be enjoyed by the lessee and his heirs, subject to payment of the rent agreed upon, which generally is only nominal (R.F.)

*[Skt. šāšvata-kauvl> த. சாசுவதக்கவுல்]*

**சாசுவதக்குத்தகை** *sāsuvada-k-kuttagai,* பெ. (n.) சாசுவதக்கவுல் பார்க்க; see cācuvata-k-kavul.

**சாசுவதப்பகுதி** *sāsuvada-p-pagudi,* பெ. (n.) வழியுரிமை (கவுல்) நிலக்குத்தகையில் வாங்கப்படும் நிலைக் குத்தகைப்பணம்; fixed rent, as in a permanent lease.

*[சாசுவதம் + பகுதி]*

*[Skt. šāšvata > த. சாசுவதம்]*

**சாசுவதப்பனை** *sāsuvada-p-panai,* பெ. (n.) பட்டாநிலமுழுதிலும் பிறர்க்குரித்தன்றிப் பட்டாதார்க்கே உரிமையான பனை; (G.Tn.D.1,307); palmyras on a piece of land belonging exclusively to its owner.

*[சாசுவதம் + பனை]*

*[Skt. šāšvata > த. சாசுவதம்]*

**சாசுவதம்** *sāsuvadam,* பெ. (n.) 1.நிலை பேறுடைமை; ஈறில்காலம் (நிக்தியம்); perpetuity, eternity. "சாசுவதபுட்கல.......வ் யோம நிலையை (தாயு. திருவருள்வி.3) 2. அசையாநிலை; immobility, steeddd fastness. 3. வீடுபேறு (மோட்சம்) (சங்.அக); eternal bliss, salvation. 4. சாசுவதக்கவுல் பார்க்க; see sāsuvada-k-kavul.

*[Skt. šāšvata > த. சாசுவதம்]*

**சாஞ்சலியம்** *šāñsaliyam,* பெ. (n.) நிலையின்மை; instability, fickleness. "அவன் மனத்துச் சாஞ்சலியம் உடையவன்" (சங்.அக)

*[Skt. cāñcalya > த. சாஞ்சலியம்]*

**சாஞ்சித்தன்** *šāñsittan,* பெ. (n.) சாமுசித்தன் (பதிபசுபாச) பார்க்க; see šāmusittan.

*[Skt. saṃsiddha > த. சாஞ்சித்தன்]*

**சாட்சாத்கரி-த்தல்** *sātsat-kari,* 4. செ.குன்றாவி (v.t.) நேரே காணுதல்; to visualise, realize. "தியானித்துச் சமாதித்துச் சாட்சாத்கரிப்பன் (சி.சி.66. ஞானப்).

*[Skt. sā kṣāt-kṛ > த. சாட்சாத்கரி-,]*

**சாட்சாத்காரம்** *sāṭsātkāram,* பெ. (n.) நேரில் உணர்கை; direct or actual perception, realization. "சாட்சாத்காரக் கிரமத்தில் அறிந்து" (சி.சி.6,6. ஞானப்).

*[Skt.sākṣāt-kāra> த. சாட்சாத்காரம்]*

**சாட்சாத்து** *sāṭsāttu,* பெ. (n.) 1. வெளிப்படை; manifestly,evidently 2. கண்கூடு; actually, really, directly.

*[Skt. sā kṣāt > த. சாட்சாத்து]*

**சாட்சி** *sāṭci,* பெ. (n.) 1. நேரிற் பார்த்தறிந்தவ-ன்-ள்; eye-witness. 2. வழக்கில் சான்று கூறுவோ-ன்-ள்; witness in court. "சாட்சியழைத்ததும்" (திருவு சாத்தான நான்மணிமாலை, 53; திருவாலவா. பக். 27). 3. உடனுண்ணும் விருந்து; guest, as dining at the same table. "சாட்சியறப் பசியாறியை"

(திருப்பு. 266). 4. சைதன்யம் (வின்); (Phil.) pure spirit intelligence, intelligent being.

த.வ. சான்றாளர்

*[Skt. sā kṣin> த. சாட்சி]*

**சாட்சிக்கட்டளை** *sāṭci-k-kaṭṭaḷai,* பெ. (n.) சான்றுரைக்க அழைப்பு (சாட்சி, சம்மன்) summons for witnesses.

*[சாட்சி + கட்டளை]*

*[Skt. sā kṣin> த. சாட்சி]*

**சாட்சிக்காரன்** *sāṭci-k-kāraṉ,* பெ. (n.) சாட்சி பார்க்க; see sāṭci.

*[சாட்சி + காரன்]*

**சாட்சிகாட்டு–தல்** *sāṭci-kāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) தன்கூற்றுக்கு சான்றாக எடுத்துச் சொல்லுதல் (வின்); to cite authority for a statement.

*[சாட்சி + காட்டு–]*

*[Skt. sā kṣin> த. சாட்சி]*

**சாட்சிகோரு–தல்** *sāṭci-kōru-,* 5 செ.கு.வி. (v.i.) வழக்கில் சான்றாளரைக் குறிப்பிடுதல்; to name or cite witnesses.

*[சாட்சி + கோரு–]*

*[Skt. sā kṣin> த. சாட்சி]*

**சாட்சிசாப்தா** *sāṭci-sāptā-,* பெ. (n.) சாட்சிப்பட்டி பார்க்க; see cāṭci-p-paṭṭi.

*[சாட்சி சாப்தா →சாட்சிப்பட்டி]*

**சாட்சிப்பட்டி** *sāṭci-p-paṭṭi,* பெ. (n.) சான்றாளர் களின் பெயர் குறிக்கப்பட்ட பட்டியல்; list of witnesses.

*[சாட்சி + பட்டி]*

*[Skt. sā kṣin> த. சாட்சி]*

**சாட்சிப்படி** *sāṭci-p-paṭi,* பெ. (n.) வழிச் செலவிற்காகச் சான்றுரைப்போர்களுக்குக் கட்டும் பணம்; (legal); allowance or batta paid to witnessesfor travelling and other expenses.

*[சாட்சி + படி]*

*[Skt. sā kṣin> த. சாட்சி]*

**சாட்சிப்பெட்டி** *sāṭci-p-peṭṭi,* பெ. (n.) சான்றா ளர்கள் நின்று வாக்குமூலம் கொடுக்கும் இடம்; witness-box.

த.வ. சான்றாளர் கூண்டு

*[சாட்சி + பெட்டி]*

*[Skt. sā kṣin> த. சாட்சி]*



**சாட்சிபூதம்** *sāṭci-pūdam,* பெ. (n.) சான்றா (சாட்சியா)யிருப்பது (சங். அக.); that which is a witness.

*[Skt. sā kṣi-bhūta> த. சாட்சிபூதம்]*

**சாட்சிபூதமாயிரு–த்தல்** *cāṭci-pūtam-ayiru-,* 5 செ.கு.வி. (v.i.) நோக்கின்றி (உதாசீன னாய்) நோக்கியிருத்தல்; to be an indifferent or passive witness to an event.

*[சாட்சி + பூதமாய் + இரு]*

**சாட்சிபோசனம்** *sāṭci-pōsaṉam,* பெ. (n.) விருந்தினரோடு உண்ணும் உணவு; dining in company with guests.

த.வ. விருந்துணா

*[Skt. sā kṣi+bhōjana> த. சாட்சிபோசனம்]*

**சாட்சிபோடு–தல்[1]** *sāṭci-pōḍu-,* 17 செ.குன்றாவி. (v.t.) சாட்சி கோருதல்; to cite, as witness.

*[சாட்சி + போடு–,]*

*[Skt. sā kṣi > த. சாட்சி]*

**சாட்சிபோடு–தல்[2]** *sāṭci-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) (பத்திர) ஆவணம் முதலியவற்றின்

சான்றொப்பமிடுதல்; to sign one's name as attesting witness in bond etc.,

*[Skt. sā kṣi > த. சாட்சி]*

**சாட்சியம்** *sāṭciyam*, பெ. (n.) வழக்கிற் கூறுஞ் சான்று; (சங்.அக.); testimony, deposition.

*[Skt. sā kṣya > த. சாட்சியம்]*

**சாட்சியொப்பனை** *sāṭci-y-oppaṉai*, பெ. (n.) 1. சாட்சியம் பார்க்க; see; cāṭciyam 2. வாய் மூலமாகவும் எழுத்து மூலமாகவுமாயுள்ள சான்று; oral and documentary evidence. 3. சான்று ஒப்பம்; attestation by a witness.

*[Skt. sā kṣin > த. சாட்சி]*

**சாட்சிவாங்கு-தல்** *sāṭci-vāṅku-*, 9 செ.கு.வி (v.i.) 1. சான்றாளரை உசாவல்; (வின்); to examme witness, to take down evidence. 2. சான்றாளரின் கையொப்பம் வாங்குதல்; to get the attestation.

*[Skt. sā kṣin > த. சாட்சி]*

**சாட்சிவிசாரணை** *sāṭci-vicāraṇai*, பெ. (n.) சான்றாளரை அறமன்றத்தில் வினாவுதல்; examination of witness.

த.வ. சான்றுஉசாவல்

*[Skt. sākṣin-vicārana > த. சாட்சிவிசாரணை]*

**சாட்சிவிடு-தல்** *sāṭci-viṭu-*, 20 செ.கு.வி. (v.i.) வழக்கில் சான்றாளரை உசாவல் செய்தல்; to let in evidence.

*[Skt. sā ksin > த. சாட்சி]*

**சாட்சிவிளங்கு-தல்** *sāṭci -viḷaṅgu-*, 7 செ.கு.வி. (v.i.) சான்றாளரை (ஆய்வு) உசாவல் செய்தல்; to examine witness.

*[Skt. sā ksin > த. சாட்சி]*

**சாட்சிவை-த்தல்** *sāṭci-vai-*, 4 செ.கு.வி. (v.i.) சாட்சி போடுதல் பார்க்க; see cāṭci-pōḍu-,

*[சாட்சி + வை-,]*

**சாட்சுதீட்சை** *sāṭcuca-tiṭcai*, பெ. (n.) அருணோக்க நோன்புறுதி (நயனதீட்சை); (Šaiva) a mode of religious intitiation. "சாட்சுச தீட்சையினாலே ஆணவ மலத்தையும் நீக்கி (சி.சி. 12,7, சிவாக்.)

த.வ. நோக்கு அருளிப்பு

*[Skt. cākṣuṣa-dikṣā > த. சாட்சுதீட்சை]*

**சாட்டங்கமாக** *sāṭṭāṅkamāka*, வி.அ. (adv.) உடலின் எட்டு இடங்கள் தரையில் படும்படியாக prostrating 'பெரியவர்கள் முன் சாட்டாங்கமாக விழுந்து வணங்கினான்'.

த.வ. நெடுஞ்சான் கிடையாக

**சாட்டியாயனி** *sāṭṭiyāyaṉi*, பெ. (n.) நூற்றெட்டு மறைகளுள் ஒன்று(சங். அக.); an upanisad one of 108.

*[Skt. šāṭyāyani > த. சாட்டியாயனி]*

**சாட்ணி** *sāṭṇi*, பெ. (n.) அழிப்பு; burning, destruction, as of records. "பழைய பத்திரங்கள் சாட்ணிக்கு அனுப்பப்பட்டன." (C.G.)

த.வ. நசிவு, அழிப்பு.

*[U. chaṭnā > த. சாட்ணி]*

**சாடராக்கினி** *sāṭarākkiṉi*, பெ. (n.) உணவைச் செரிக்கச் செய்யும் வயிற்றுத்தீ; digesting agency, considered a fire or heat abiding in the stomach. "தேபமிலகுவாகுஞ் சாடராக்கினி சொலிக்கும்." (பிரபோத. 44, 16)

*[Skt. jāṭhara-agni > த. சாடராக்கினி]*

**சாடவம்** *sāḍavam*, பெ. (n.) ஆறுசுரமுள்ள பண் (இராகம்) (சிலப். 13, 106, வரை); (Mus.) secondary melody-type, hexatonic.

த.வ. நிறைப்பண்

*[Skt. ṣāḍava > த. சாடவம்]*

**சாடாவாக** *cāḍā-v-āga*, (து.வி) (adv.) முழுவதும்; completely, entirely.

**சாண்டில்லியம்** *sāṇḍilliyam*, பெ. (n.) நூற்றெட்டு மறை நூல்களொன்று (சங்.அக.); an upanisad, one of 108.

*[Skt. šāṇḍil-ya > த. சாண்டில்லியம்]*

**சாண்மாதுரன்** *sāṇmāduraṉ*, பெ. (n.) முருகக்கடவுள் (இலக் அக.); Lord Murugan.

*[Skt. ṣāṇmā-tura > த. சாண்மாதுரன்]*

**சாணக்கி** *šāṇakki,* பெ.(n.) **சானிகை** (இ.வ.) பார்க்க; see *šāṉigai.*

*[U. sānaka > த. சாணக்கி]*

**சாணக்கியம்** *šāṇakkiyam,* பெ.(n.) கரவடம் (தந்திரம்); art, stratagem. "அவன் சாணக்கியமெல்லாம் பலிக்கவில்லை (நாஞ்.).

**த.வ. வலக்காரம், நுண்சூழ்ச்சித்திறம்**

*[Skt. cāṇakya > த. சாணக்கியம்]*

**சாணக்கியன்** *šāṇakkiyaṉ,* பெ.(n.) 1. வடமொழியில் அர்த்தசாத்திரம் இயற்றிய வரும் சந்திரகுப்தரின் அமைச்சராகவும் விளங்கியவர்; author of the Artha - šātra in sanskrit and minister of Candra gupta 2. 2. தந்திரக்காரன்; cunning, artful person.

*[Skt. cāṇakya > த. சாணக்கியன்]*

**சாணாக்கு** *šāṇākku,* பெ.(n.) **சாக்கணாக்கறி** (வின்.) பார்க்க; see *šākkaṇā-k-kaṟi.*

*[U. caknā > த. சாணாக்கு]*

**சாணி** *šāṇi,* பெ.(n.) குதிரை பழக்குவோன் (வின்.); horse-breaker.

*[E. johnnie > த. சாணி]*

**சாத்தம்** *šāttam,* பெ.(n.) மலைமகளை (சத்தியை) முதற் கடவுளாக வழிபடும்சமயம்; the religion which enjoins the exclusive worship of Sakthi as the Supreme Being. *"சிலர்கள் சாத்தமுஞ் சிலர்கள் சாம்பவமுரசமாய்" (திருக்காளத். பு. 30, 26).*

*[Skt. šākta > த. சாத்தம்]*

**சாத்திகம்** *šāttigam,* பெ.(n.) **சாத்துவிகம்** பார்க்க; see *šāttuvigam. "தாமதத்துட னிராசதஞ் சாத்திக மென்னும்" (ஞானவா. திதி. 7).*

*[Skt. sātvika > த. சாத்திகம்]*

**சாத்திகன்** *šāttigaṉ,* பெ.(n.) **சாத்துவிகன்** பார்க்க; see *šāttuvigaṉ. "சாத்திகனாய்ப் பரதத்துவந் தானுன்னி" (திருமந். 1696).*

*[Skt. sātvika > த. சாத்திகன்]*

**சாத்தியதன்மவிகலம்** *šāttiyataṉma-vikalam,* பெ.(n.) சாதன்மியதிட்டாந்த வாபாசம் ஐந்தனுள் ஒன்றாய் *சத்தம் நித்தம் அமூர்த்தத்தால் புத்திபோல்* என்று காட்டப்பட்ட திருட்டாந்தத்திற் புத்தி அமூர்த்தமாய் நின்றும் அநித்தியமாதல் போலச் சாத்தியதன்மங் குறைவு பட்டிருப்பது (மணிமே. 29:349); a fallacious example defective in cāttiyam or the major term, one of *five-cātaṉmiya-tiṭṭānta-v-āpācam,* q.v.

*[Skt. sādhya-dharma-vi-kala> த. சாத்தியதன்மவிகலம்]*

**சாத்தியம்** *šāttiyam,* பெ.(n.) 1. இயல்வது (சாதிக்கத்தக்கது); that which is practicable, possible, attainable. *"விழைவெ லாஞ் சாத்திய மாக்கம்" (சேதுபு. சாத்தியா.).* 2. **சாத்தியரோகம்** பார்க்க; see *šāttiya-rōgam. "பிணியளவு சாத்தியம் அசாத்தியம் யாப்பிய மென்னுஞ் சாதிவேறுபாடும்" (குறள், 949, உரை).* 3. அனுமானவுறுப்புள் துணியப் படவேண்டும் பொருள் (log.); that which remains to be proved or concluded, the major term, dist. fr. *cātaṉam. "சாதன சாத்திய மிவையந்நு வயம்" (மணிமே. 27, 29).* 4. யோக மிருபத்தேழனுள் ஒன்று (விதான. பஞ்சாங்க. 24, உரை); (Astrol.) a division of time, one of 27 yōkam, q.v. 5. எண் வகையுரிமைகளுள் (அட்டபோகங்)களுள் விளைபொருளுரிமை(C.G.); right to fruits of the earth, one of *aṣṭa-pōkam.* q.v.

*[Skt. sādhya > த. சாத்தியம்]*

**சாத்தியர்** *šāttiyar,* பெ.(n.) தேவருள் ஒரு சாரார்; a class of celestial beings. *"விசுவதேவர் வசுக்கள் சாத்தியராதி விண்ணவர்" (சேதுபு. கலிதீர்த். 7).*

*[Skt. sādhya > த. சாத்தியர்]*

**சாத்தியரோகம்** *šāttiya-rōkam,* பெ.(n.) தீர்க்கக்கூடிய நோய்; curable disease, one of three rōkam, q.v.

*[Skt. sādhya+rogam> த. சாத்தியரோகம்]*

**சாத்தியாவியாவிருத்தி** *šāttiyāviyāvirutti,* பெ.(n.) வைதன்மிய திட்டாந்தவாபாசவகை ஐந்தனுள் ஒன்றாய் *சத்தம் நித்தம் அமூர்த்*

*தத்தால் பரமாணுப்போல்* என்று காட்டப்பட்ட வைதன்மிய திருட்டாந்தத்தில் பரமாவை நித்தமும் மர்த்தமுமாதலால் சாதனதன்மம் மீண்டு சாத்தியதன்மம் மீளாதொழிவது (மணிமே. 29:403); (Log.) a fallacious example of contrary proposition in which cāttiyam or the major term does not agree. one of five *vaitanmiya-tiṭṭānta-v-āpācam*. q.v.

*[Skt. sādhya + a-vyāvrtti > த. சாத்தியா வியாவிருத்தி]*

**சாத்தியேகவசனம்** *śāttiyēga-vaśaṉam*, பெ.(n.) சாதியையுணர்த்துதற்கு வரும் ஒருமை; (Gram.) singular number denoting the entire genus or class.

*[Skt. jātyēka-vacana > த. சாத்தியேகவசனம்]*

**சாத்திரதீட்சை** *śāttira-tīḍśai*, பெ.(n.) தீக்கை (தீட்சை)யேழனுள் சிவாகமதத்துவங்களை ஆசிரியன் மாணவனுக்கு ஓதுவிப்பது (உபதேசிப்பது) *(சாத்திரதீக்ஷையானது சைவாகமாதி சிவசாத்திரப் பொருளைப் போதித்தலாம்) (சி.சி.8,3, உரை)*; (saiva) a mode of religious initiation in which a guru teaches his disciple the truths of the śivāgamas, one of seven tīṭcai, q.v.

**சாத்திரபஞ்சகம்** *śāttira-pañśakam*, பெ.(n.) இலௌகிக சாத்திரம், வைதிகசாத்திரம், அத்தியாத்துமசாத்திரம், அதிமார்க்கிகசாத்திரம், மந்திரசாத்திரம் என்று ஐவகைப்பட்ட சாத்திரம்; the five sciences, *ilaukika-cāttiram, vaitika cāttiram, attiyāttuma-cāttiram, atimār-k-kika-cāttiram* and *mantira-cāttiram*.

**சாத்திரபேதி** *śāttirapēti*, பெ.(n.) மாழை கலந்த மணல் வகை (வை.மூ.); a kind of ore.

**சாத்திரம்[1]** *śāttiram*, பெ.(n.) 1. நூல்; science. 2. சோதிடநூல்; astrology or astromony. 3. தயிர்; curd. 4. மருத்துவம் (வைத்தியம்); medical science.

**சாத்திரம்[2]** *śāttiram*, பெ.(n.) 1. நூல்; treatise, especially religion or scientific. 2. வேதாந்தம், தருக்கம் முதலிய நூல், department of knowledge as vēdānda, ṭarka, ālankara ect. 3. அறிவியல் நூல்; science. *"சாத்திரம் பலபேசுஞ் சழக்கர்காள்" (தேவா. 1070, 3).*

த.வ. அறிவுநூல்

*[Skt. śāstra > த. சாஸ்திரம் > சாத்திரம்]*

**சாத்திரமாணி** *śāttira-māṇi*, பெ.(n.) மாணவன் (S.I.I.V. 500); student.

*[சாத்திரம்+மாணி]*

*[Skt. sāstra > த. சாத்திரம்]*

**சாத்திரமுயற்சி** *śāttira-muyaṟci*, பெ.(n.) சாத்திரமுறைப்படி சடங்கு செய்கை (வின்.); performing religious ceremonies according to the śāstras.

*[சாத்திரம்+முயற்சி]*

*[Skt. sāstra > த. சாத்திரம்]*

**சாத்திரர்** *śāttirar*, பெ.(n.) மாணவர்; students. *"மூவர்சாத்திரர் அமிர்துசெய்வது"* (T.A.S. III. 173).

*[Skt. chātra > த. சாத்திரர்]*

**சாத்திரவாராய்ச்சி** *śāttira-vārāyčci*, பெ.(n.) நூலாராய்ச்சி; scientific research.

*[சாத்திரம் + ஆராய்ச்சி]*

*[Skt. sāstra > த. சாத்திரம்]*

**சாத்திரவேரி** *śāttiravēri*, பெ.(n.) தண்ணீர் விட்டான் (மலை.); a common climber.

*[Skt. śatāvari > த. சாத்திரவேரி]*

**சாத்திராலவணம்** *śāttirālavaṇam*, பெ.(n.) பொட்டிலுப்பு; saltpetre.

**சாத்திரி** *śāttiri*, பெ.(n.) 1. வேதமறிந்தவன்; one versed in the sāstrās. 2. கற்றவன்; learned man. 3. பார்ப்பனர்களுக்கு வழங்கும் பட்டப் பெயர்களுள் ஒன்று; a title, especially of *smārta-Brahmin.*

*[Skt. śastrin > த. சாத்திரி]*

**சாத்திரிய** *śāsttiriya*, பெ. அ (adj.) 1. பழங்காலத்தில் தோற்றுவிக்கப்பட்ட அமைப்பு, தரம் முதலியவற்றை அடிப்படை

யாகக் கொண்ட உயர்வான, கலப்பற்ற; classical. *'சாஸ்திரிய சங்கீதம், சாஸ்திரிய கலைகள்'.* 2. (அ.வ.) (குறிப்பிட்ட ஒன்றின்) வரையறுக்கப்பட்ட, ஒழுங்கான; traditional. *'இங்கே சாஸ்திரிய முறைப்படி தையல் கற்றுத் தரப்படும்'.*

*[**Skt.** sāstriya > த. சாத்திரிய]*

**சாத்திரை** *šāttirai,* பெ.(n.) விழாவகை (யாழ்.அக.); a festival.

*[**H.** jātrā > த. சாத்திரை]*

**சாத்துக்குடி** *šāttu-k-kuḍi,* பெ.(n.) 1. கிச்சிலி வகை; (m.m.) batavian orange produced in Cātiukkuti, a village in North Arcot District, m.tr., citrus aurantium. 2. தித்திப்பெலுமிச்சை; sweet lime, m.tr., citrus medica-limetta.

**த.வ. சாற்றுக்கனி**

**சாத்துவகுணம்** *šāttuva-kuṇam,* பெ.(n.) **சாத்துவிகம்** பார்க்க; see *šāttuvigam.*

**சாத்துவதி** *šāttuvati,* பெ.(n.) அறம் பொருளாகவும் தெய்வமானிடர் தலைவராகவும் வரும் நாடக வகை (விருத்தி); a variety of dramatic composition which has a semi-divine being for hero and treats of virtue one of four nāṭaka-virutti, q.v. *"அவன் சாத்துவதி .......... பாரதியென வினவ" (சிலப். 3, 13, உரை).*

*[**Skt.** sātvati > த. சாத்துவதி]*

**சாத்துவம்** *šāttuvam,* பெ.(n.) **சாத்துவிகம்** பார்க்க; see *šāttuvigam. "ஏத்து சாத்துவத்தா லரியுருவென" (பாகவ. 1, மாயவன். 16).*

*[**Skt.** satva > த. சாத்துவம்]*

**சாத்துவி** *šāttuvi,* பெ.(n.) (சத்துவ உருவமாயுள்ள) சிவபெருமான் (தசகா. சிவரூ. 5); Siva in his satva form.

*[**Skt.** sātvika > த. சாத்துவி]*

**சாத்துவிகபுராணம்** *šāttuviga-purāṇam,* பெ.(n.) சத்துவகுணப் பிரதானமாய் திருமாலைத் துதிக்கும் வைணவம், பாகவதம், நாரதீயம், காருடம், பதுமம், வராகம் என்ற ஆறு புராணங்கள் (மச்சபு. முகவுரை. பக். 7); the group of chief purāṇasexalting viṣṇu, whose predominating guṇa is satva, viz., *vaiṇavam, pākavatam, ñāratiyam, kāruṭam, patumam, varākam.*

**சாத்துவிகம்**[1] *šāttuvigam,* பெ.(n.) **சத்துவகுணம்** பார்க்க see *šattuva-kuṇam. "குணமொரு மூன்றுந் திருந்து சாத்துவிக மேயாக" (பெரியபு. தடுதீதா. 106).*

*[**Skt.** sātvika > த. சாத்துவிகம்]*

**சாத்துவிகம்**[2] *šāttuvigam,* பெ.(n.) முக் குணத்திலொன்று; one of the three qualities i.e. mildness in thought, word and deed, purity.

**சாத்துவிகன்** *šāttuvigaṉ,* பெ.(n.) அமைதியன் (சாந்தன்); quite, gentle person.

*[**Skt.** sātvika > த. சாத்துவிகன்]*

**சாத்துவிகவேளை** *šāttuviga-vēḷai,* பெ.(n.) முக்குண வேளைகளுளொன்று (பஞ்.); one of *mu-k-kuṇa-vēḷai.*

**சாத்துவிதஅகங்காரம்** *šāttuvita-akaṅkāram,* பெ.(n.) மனமும் ஞானேந்திரியங்களும் பிறப்பதற்கான குணதத்துவம் (அட்டப்பிர. தத்துவசங். 83); the principle from which the mind and the *ñāṉēntiriyam emanate.*

**சாத்மியம்** *šātmiyam,* பெ. (n.) எப்பண்டங் களினால் உடம்பிற்கு கேடு உண்டாகிறதோ அப்பண்டத்தையே கொஞ்சம் கொஞ்சமாக உடம்பிற் செலுத்திப் பயிற்சி (சாதக) படுத்திக்கொள்வது; habituating or making familiar with by bringing into practice anything injurious or disagreeable to health by taking it frequently in minute quantities and by doing so such substances would then become agreeable to health.

**சாத்மீகம்** *šātmīkam,* பெ.(n.) அமைதிக் (சாந்த) குணம்; mild or amiable quality, meekness.

**சாத்மீகன்** *šātmīkaṉ,* பெ.(n.) அடக்க மானவன்; quietman.

**சாதகக்குறிப்பு** *šātaka-k-kurippu,* பெ.(n.) பிறந்த ஆண்டு, மாதம், ஓரை (ராசி) முதலியவற்றின் குறிப்பு; extract of a horoscope.

த.வ. பிறப்பியக்குறிப்பு

*[சாதகம்+குறிப்பு]*

*[Skt. jātaka + த. சாதகம்]*

**சாதகங்கணி-த்தல்** *šātakaṅkaṇi-,* **சாதகஞ்செய்-4** பார்க்க ; see *šātakañ-cey-*

*[சாதகம்+கணி-,]*

*[Skt. jātaka > த. சாதகம்]*

**சாதகசூதகம்** *šādakašūdagam,* பெ.(n.) வாலாமை (யாழ்.அக.); pollution on account of child-birth.

**சாதகஞ்செய்-தல்** *šātakañcey-,*1 செ.கு.வி (v.i.) கணக்கிட்டுக் கோள் (கிரக) நிலையறிந்து ஒருவனது பிறப்பிய (சாதக)த்தை எழுதுதல்; to cast a horoscope. *"கணி கடுகச் சாதகஞ் செய்துவருக" (சீவக. 539, உரை).*

த.வ. பிறப்பியம்கணித்தல்

*[சாதகம்+செய்-.]*

*[Skt. jātaka+த. சாதகம்]*

**சாதகப்பட்டிகை** *šādaga-p-paṭṭigai,* பெ.(n.) பிறப்பிய (சாதக) மெழுதிய ஆவணம் (பத்திரம்); horoscope. *"சாதகப்பட்டிகை சாலவை நாப்பண்" (பெருங். நரவாண. 6, 82).*

த.வ. பிறப்பியஓலை நறுக்கு

*[Skt. jātaka+patrikā > த. சாதகப்பட்டிகை]*

**சாதகப்பொருத்தம்** *šādaga-p-poruttam,* பெ.(n.) மணமக்களுடைய பிறப்பிய (சாதக)ங்கள் தம்முட் பொருந்துகை; horoscopic agreement observed in selecting suitable matches in marriages.

த.வ. பிறப்பியப்பொருத்தம்

*[சாதகம்+பொருத்தம்]*

*[Skt. jātaka + த. சாதகம்]*

**சாதகபட்சி** *šādaga-paṭci,* பெ. (n.) வானத்தினின்று விழும் மழைத்துளியைப் பருகி வாழும் ஒரு பறவை; shepherd koel, Coccystes jacobinus, believed to subsist on rain drops.

த.வ. வானம்பாடி

**சாதகபலன்** *šādaga-palan,* பெ.(n.) பிறப்பிய (சாதக)த்தின்படியுள்ள நிகழ்ச்சிகள்; events indicated by a horoscope.

த.வ. பிறப்பியநிகழ்வு

*[Skt. jātaka+phala > த. சாதகபலன்]*

**சாதகபாதகம்** *šādaga-pādagam,* பெ.(n.) நன்மை தீமைகள் (அனுகூலப் பிரதிகூலங்கள்); pros and cons, as of a case; convenience and inconvenience; good and bad consequences.

த.வ. நலந்தீங்குகள்

*[Skt. sādhaka+bādhaka > த. சாதகபாதகம்]*

**சாதகபுட்பம்** *šādaga-puḍpam,* பெ.(n.) கடல்நுரை (யாழ்.அக.) பார்க்க; see *kaḍalnurai.*

*[Skt. sāgara+puṣpa > த. சாதகபுட்பம்]*

**சாதகபுடம்** *šādaga-puḍam,* பெ.(n.) பிறப்பியம் (சாதகம்) கணிக்கை; casting of horoscope.

*[சாதகம்+புடம்]*

**சாதகம்¹** *šādagam,* பெ.(n.) 1. பிறப்பு (சனனம்) birth. *"சாதகமு மான பின்பு" (திருப்பு. 339).* 2. பிறவிக்குணம் nature, natural tendency. *"நல்ல மனத்தர்தமை.......... தாழ்வுரைத்த லென்னுடைய சாதகங்காண்" (அருட்பா. i, விண்ணப்பக். 339).* 3. பிறப்பியம் (சன்மபத்திரிகை) horoscope. *"மூவிய றிரிதலின்றிச் சாதகமுறையிற் செய்தார்" (சீவக. 1886).* 4. கலியுகம் சகாப்தம் ஆண்டு மாதம் தேதிகள் அடங்கிய தலைவன் பிறப்பியத்தைக் கூறும் சிற்றிலக்கியம் (பிரபந்தம்) (பன்னிருபா. 172); A poem which relates all the particulars indicated by one's horoscope as the year, month, date, etc.

த.வ. பிறப்பியம்

*[Skt. jātaka > த. சாதகம்]*

**சாதகம்²** *šādagam,* பெ.(n.) 1. பயிற்சி; constant practice. *"அமண் சமயச் சாதகத்தா லிது*

*செய்து" (பெரியபு. திருநாவுக். 102).* 2. துணைக்காரணம் subsidiary cause, means to an end. 3. உதவி assistance, help. *'படிக்கச் சாதகம் ஏற்பட்டது' (இ.வ.).* 4. ஏந்து (சௌகரியம்) facility. *'படிக்க இடம் சாதகமாயிருக்கிறது'.* 5. பயன், வாய்ப்பு (அனுகூலம்); success. *'அந்த வழக்கு அவனுக்குச் சாதகமாயிற்று' (கொ.வ.).* 6. முடிக்க வேண்டியது; that which is to be accomplished. *"சாதக நான்குந் தன்பாலுற்றோன்" (திருமந். 1699).* 7. சான்று (பிரமாணம்) (யாழ்.அக.) evidence. 8. பற்றுச்சீட்டு; voucher.

*[Skt. sādhaka > த. சாதகம்]*

**சாதகம்[3]** *šādagam,* பெ.(n.) பூதம்; goblin. *"சாதக மென்னவுந் தழைத்த மாலையே" (கம்பரா. மிதிலைக். 63).*

*[Skt. sādhaka > த. சாதகம்]*

**சாதகம்[4]** *šādagam,* பெ.(n.) **சாதகபட்சி** பார்க்க; see *šādaga-padši. "கொண்டல் பேரொலியினால் ....... மகிழ்வுறுஞ் சாதகத் தன்மை" (கந்தபு. திருவவ. 30).*

*[Skt. cātaka > த. சாதகம்]*

**சாதகம்[5]** *šādagam,* பெ.(n.) மறைப்பு; that which conceals. *"விவேகந் தன்னிற் றோன்றிச் சாதக மனைத்தையும்" (சங்கற்ப. மாயா. 40).*

*[Skt. chādaka > த. சாதகம்]*

**சாதகம்[6]** *šādagam,* பெ.(n.) எருக்கு (மலை.); madar.

**சாதகம்பண்ணு-தல்** *šādagam-paṇṇu-,* 12 செ.குன்றாவி. (v.) 1. பழகுதல்; to practise, train oneself in any art. 2. உதவிபுரிதல்; to render assistance.

*[சாதகம் + பண்ணு-,]*

*[Skt. sādhaka > த. சாதகம்]*

**சாதகருமம்** *šādagarumam,* பெ.(n.) **சாதகன்மம்** பார்க்க; see *šātakaṉmam.*

**சாதகலம்பம்** *šādagalambam,* பெ.(n.) ஒரு வகை நஞ்சு (தாலம்பபாடாணம்) (யாழ்.அக.); *jālampa-pāṣāṇam,* a mineral poison.

**சாதகவாதி** *šātakavāti,* பெ.(n.) நாகமணல் (யாழ்.அக.); sand containing lead-ore.

**சாதகவோலை** *šādaga-v-ōlai,* பெ.(n.) பிறப்பியம் (சன்மபத்திரிகை); horoscope. *"சாதக வோலை யெழுதிற்றால்" (சூளா. மந்திர. 75).*

த.வ. பிறப்போலை

*[சாதகம் + ஓலை]*

*[Skt. jātaka + த. சாதகம்]*

**சாதகன்[1]** *šādagaṉ,* பெ.(n.) 1. பயிற்சியுள்ளவன்; one who practises or gets trained. 2. யோகவழி நிற்போன்; one who practises yōga. *"சாதகா பாசங்கழுவி" (திருவிளை. நகரப். 90).* 3. வீடுபேற்று அருளிப்பு (நிர்வாண தீட்சை) பெற்றவன்; (saiva) one who has advanced to *nirvāṇa-tīṭcai,* as practising the means of attaining salvation. *"சமயியெனப் புத்திரகன் சாதகனுமென்ன" (சைவச. மாணாக். 4).* 4. மாணாக்கன்; student, disciple. *"சாதகன் றனைப்போ ராற்றி" (திருவிளை. அங்கம். 1).* 5. மரணம் வரை இல்லறவொழுக்கத்தில் நிற்பவன்; one who remains a householder till his death, dist fr. *utāciṉaṉ. "இல்லறத்தி னின்றோ ருயருதாசீனன் மிக்க......... சாதகனென விரண்டாந் தன்மையர்" (கூர்மபு. வருணாச்சிரம. 38).* 6. உதவியாளன்; one who renders assistance, helper. *"தகுந்தவரைச் சாதக ராக்கி" (தேவை. 268).* 7. பூதம்; goblin. *"சாதகரொடு சிறுகட்கூளியும்" (கம்பரா. கிளைகள். 35).*

*[Skt. sādhaka > த. சாதகன்]*

**சாதகன்[2]** *šādagaṉ,* பெ.(n.) பிறப்பிய (சாதக)த்துக்கு உரியவன்; one to whom an horoscope pertains. *"கனயோக சாதக னெனப் படுதலும்" (அறப். சத. 3).*

*[Skt. jātaka > த. சாதகன்]*

**சாதகன்மம்** *šādagaṉmam,* பெ.(n.) சோடச சம்த்காரங்களுள் பிறந்த குழந்தைக்குச் செய்யப்படுஞ் சடங்கு; ceremony performed on the birth of a child, one of *cōṭaca-*

*camskāram*, q.v. *"விழைவொடு சாதகன்மம் விதியினா லியற்றி" (விநாயகபு. 62, 21).*

*[Skt. jāta-karma > த. சாதகன்மம்]*

**சாதகாசாரியன்** *šādakāšāriyaṉ*, பெ.(n.) சமயமத (சம்பிரதாய) காரியங்களில் தலைமைப் பூசாரி (ஆசாரியனு)க்கு உதவியாகயிருப்பவன் (இ.வ.); assistant to a head priest.

*[Skt sādhaka+ā-cārya > த. சாதகாசாரியன்]*

**சாதகாலங்காரம்** *šātakālaṅkāram*, பெ.(n.) கி.பி.1665-ம் ஆண்டில் கீரனூர் நடராசன் இயற்றிய ஒரு கணிய (சோதிட)நூல்; a treatise on astrology by *Kiranūr-Naṭarājaṉ* in A.D. 1665.

*[Skt. jātaka+alaṅkāra > த. சாதகாலங்காரம்]*

**சாதகும்பம்** *šāta-kumbam*, பெ.(n.) பொன்; gold. *"விற்சாதகும்பன்" (காளத். உலா. 87).*

*[Skt. šātakumbha > த. சாதகும்பம்]*

**சாதம்**[1] *šātam*, பெ.(n.) சக்தியோசாதமந்திரம்; a mantra pertaining to *cattiyōcātam*, a form of Siva. *"ஏற்றிடுக சாதத்தால்" (சைவச. பொது. 169).*

*[Skt. jāta > த. சாதம்]*

**சாதம்**[2] *šādam*, பெ.(n.) 1. பிறப்பு; birth, nativity. *"போதத்தினகன்று சாதத்தின் வழி நின்று" (பெருங். உஞ்சைக். 43, 61).* 2. தோன்றுவது; that which arises or originates. *"தற்புருடத்தே ரௌரவாதி யைந்துஞ் சாதமாய்" (சைவச. பொது. 334).* 3. புள்ளினங்களில் இளமையுடையது; the young as of birds. *"செவிப் படுத்திய கிள்ளைச் சாதமே" (இரகு. குறைகூ. 31).* 4. உண்மை (பிங்.); truth. 5. கூட்டம்; multitude, crowd. *"அன்று சாதத் தலகைக ளாடவே" (பாரத. பதினான்காம். 153).*

*[Skt. jāta > த. சாதம்]*

**சாதம்**[3] *šātam*, பெ.(n.) **சாதவேதநீயம்** பார்க்க; see *šātavētaniyam*.

*[Skt. šāta > த. சாதம்]*

**சாதர்**[1] *šādar*, பெ.(n.) பிறந்தவர்; those that are born. *"குருகுலம் பொற்புறப் பொழுதுற்றுச் சாதராயினர்" (பாரத. சம்பவ. 17).*

*[Skt. jāta > த. சாதர்]*

**சாதர்**[2] *šādar*, பெ.(n.) **சாதரா** பார்க்க; see *šādarā*. *"வங்கச்சாதர்" (பெருங். உஞ்சைக். 42, 205).*

**சாதரா** *šādarā*, பெ.(n.) உயர்ந்த முடிப்போர்வை (சால்வை); fine shawl, embroidered silk cloth.

**த.வ. வெவ்வை**

*[U. cādara > த. சாதரா]*

**சாதரா-தல்** *šātarā*, -, 6 செ.கு.வி.(v.i.) சார்வாதல்; to be served as an order. *'உத்திரவு சாதராயிற்று' (கொ.வ.).*

*[சாதர் + ஆ]*

*[U. sadir > த. சாதர்]*

**சாதரூபம்** *šādarūpam*, பெ.(n.) நால்வகைப் பொன்களில் ஒன்று; a kind of gold, one of four poṉ, q.v. *"சாதரூபங் கிளிச்சிறை யாடகம் சாம்புநதம்" (சிலப். 14:201).*

*[Skt jāta-rūpa > த. சாதரூபம்]*

**சாதரூபி** *šādarūpi*, பெ.(n.) பொன்னிறமுடை யோனான அருகன் (சூடா.); Arhat (gold-coloured).

*[Skt. jātarūpin > த. சாதரூபி]*

**சாதல்வாத்** *šādalvāt*, பெ.(n.) **சாதல்வார்** (வின்.) பார்க்க; see *šādalvār*.

**சாதல்வார்** *šādalvār*, பெ.(n.) சில்லறைச் செலவு (இ.வ.); contingencies, incidental expenses.

*[U. sādarwār > த. சாதல்வார்]*

**சாதவேதநீயம்** *šāda-vēdaniyam*, பெ.(n.) இன்பத்தை விளைவிக்குங் கருமம் (மேருமந். 96, உரை); (jaina) tha karma that leads to happiness.

**சாதவேதா** *šādavēdā*, பெ.(n.) 1. நெருப்பு (பிங்.); fire. 2. கொடுவேலி (மலை.); ceylon leadwort.

*[Skt. jātavēdāh > த. சாதவேதா]*

**சாதன்மியதிட்டாந்தம்** *šātanmiya-tiṭṭāntam,* பெ.(n.) சாதனசாத்தியங்களைத் தவறாமற் கொண்டுள்ள திட்டாந்தம் (மணிமே. 29, 137); a homogeneous example one of two tiṭṭāntam, q.v.

*[Skt. sā-dharmya - dṛṣṭānta > த. சாதன்மியதிட்டாந்தம்]*

**சாதன்மியதிட்டாந்தவாபாசம்** *šātanmiyatiṭṭāntavāpāšam,* பெ. (n.) சாதனதன்மவிகலம், சாத்தியதன்மவிகலம், உபயதன்மவிகலம், அனன்னுவயம், விபரீதான்னுவயம் என்று ஐவகைப்பட்ட சாதன்மிய திட்டாந்தப் போலி (மணிமே. 29, 329); fallacious homogeneous example of five kinds viz., *cātana-tanma-vikalam, cāttiya-tanma-vikalam, upaya-tanma-vikalam, anannuvayam, viparitānnu-vayam.*

*[Skt. sā-dharmya-dṛṣṭāntābhāsa > த. சாதன்மியதிட்டாந்தவாபாசம்]*

**சாதன்மியம்** *šātanmiyam,* பெ.(n.) ஒப்புமை; similarity.

*[Skt. sādharmya > த. சாதன்மியம்]*

**சாதனக்காணி** *šādana-k-kāṇi,* பெ.(n.) ஆவண (சாசன)க்காணி; hereditary property.

*[சாதனம்+காணி]*

*[Skt. sāsana > த. சாதனம்]*

**சாதனசதுட்டயம்** *šātanašatuṭṭayam,* பெ.(n.) வேதாந்தம் பயிலுவதற்கு முன் மாணவனிடத்தில் இருக்கவேண்டிய நித்தியாநித்தியவத்துவிவேகம், இகாமுத்திரார்த்த பலபோக விராகம், சயாதிசட்க சம்பத்து, முமுட்சுத்துவம் என்னும் நான்கு குணங்கள் (கைவல். தத்துவ. 8, உரை); the four disciplinary requisites indispensable to a student before he is initiated into the vēdānta philosophy, viz., *nittiyānittiya-vastu-vivēkam, ikāmuttirārtta-palapōka-virākam, camāti-caṭka-campattu, mumuṭcuttuvam.*

*[Skt. sādhana+catuṣṭaya> த. சாதன சதுட்டயம்]*

**சாதனதன்மவிகலம்** *šātana-tanma-vikalam,* பெ. (n.) சாதன்மியதிட்டாந்தவாபாசம் ஐந்தனுள் ஒன்றாய் சத்தம் நித்தம் அமூர்த்தமாதலால் பரமாணு நித்தியமாய் நின்றும் அமூர்த்தமாயிராதது போலச் சாத்திய தன்மம் நிரம்பிச் சாதனதன்மங் குறைவுபடுவது (மணிமே. 29, 340); a fallacious example defective in catānamor the minor term, one of five *cātanmiyatiṭṭānta-v-āpācam,* q.v.

*[Skt. sādhana-dharma-vikala > த. சாதனதன்மவிகலம்]*

**சாதனப்படிசெலுத்து—தல்** *šādana-p-paḍi-šeluttu-,* 5 செ.கு.வி.(v.i.) விருப்பாவணம் (உயில்) எழுதுதல் (வின்.); to execute a testament or will.

*[சாதனப்படி+செலுத்து]*

**சாதனப்பத்திரிகை** *šādana-p-pattirgai,* பெ.(n.) ஆவணம் (பத்திரம்); (W.G.) a document. 2. விருப்பாவணம்; will.

**சாதனபத்திரம்** *šātana-pattiram,* பெ. (n.) 1. உரிமை (ஆவணப்பத்திரம்); (j) title deed, deed of grant inscribed on copper plate, etc. 2. விற்பனை ஆவணம் (கிரயபத்திரம்); sale-deed.

**சாதனம்[1]** *šādanam,* பெ.(n.) 1. கருவி; means, instrument, expedient. *"சாதனமின்றியொன்றைச் சாதிப்பார்" (கைவல். தத்துவ. 11).* 2. துணைக்காரணம் (சூடா.); subsidiary cause. 3. அனுமானவுறுப்புகளுள் ஒன்றாகிய ஏது; (log.) reason leading to inference, the minor term, dist. fr. cāttiyam. *"பொதுவெனப்படுவது சாதன சாத்தியம்" (மணிமே. 27, 29).* 4. பயிற்சி; practice. *"தன்னுறு படைகளுஞ் சாதனஞ் செய்வோன்" (கந்தபு. இரண்டா. யுத். 385).* 5. அக்கமணி (உருத்திராக்கம்) முதலிய சின்னம்; distinctive mark of šaivites, as rudrākṣa beads, etc.

"இலாடத்திட்ட திருநீறுஞ் சாதனமுங் கண்டால்" (தேவா. 811, 3). 6. முத்திரை (இலாஞ்சனை) (பிங்.); seal,signet.

[Skt. sādhana > த. சாதனம்]

**சாதனம்**[2] *šādanam,* பெ.(n.) 1. இடம்; place, residence. 2. நகரம்; town, city.

[Skt. sādana > த. சாதனம்]

**சாதனம்**[3] *šādanam,* பெ.(n.) அடிப்படை யாவணம் (ஆதாரபத்திரம்); document, any instrument in writing.

[Skt. šāsana > த. சாதனம்]

**சாதனமுறி** *šādanamuri,* பெ.(n.) 1. பற்று (ரசீது)ச் சீட்டு முதலியன; (W.G.) a promise or voucher in writing. 2. **சாதனபத்திரம்** பார்க்க; see *šādana-pattiram.*

[சாதனம் + முறி]

[Skt. šāsana > த. சாதனம்]

**சாதனாந்தரம்**[1] *šādanāndaram,* பெ.(n.) மாற்றுவழி (வேறு உபாயம்); other means.

[Skt. sādhanāntara > த. சாதனாந்தரம்]

**சாதனாந்தரம்**[2] *šātanāndaram,* பெ.(n.) துணை ஆவணம் (பத்திரம்); (W.G.) an additional document or voucher.

[Skt. sāsanāntara > த. சாதனாந்தரம்]

**சாதனாபாசம்** *šādanāpāšam,* பெ.(n.) ஏதுப்போலி (வின்.); (log.) fallacy in the premise.

[Skt sādhana+ā-bhāsa > த. சாதனாபாசம்]

**சாதனாவியாவிருத்தி** *šātanāviyāvirutti,* பெ.(n.) வைதன்மியதிட்டாந்தவாபாசம் ஐந்தனுள் சத்தம் அநித்தம் அமூர்த்தத்தால் சன்மம்போல என்ற வைதன்மிய திட்டாந் தத்துச் சாத்தியதன்மம் மீண்டு சாதனதன்மம் மீளாதொழிகை (மணிமே. 29, 413); a fallacious example of contrary proposition, in which cātanam or the minor term does not agree, one of five *vaitanmiya-tiṭṭānta-v-āpācam.* q.v.

[Skt. sādhana-avyāvṛtti > த. சாதனா வியாவிருத்தி]

**சாதனை** *šātanai,* பெ.(n.) 1. வினைவென்றி (காரியஞ் சாதிக்கை); accomplishment of an object. "தவமார் சாதனை" (பெருங். மகத. 4, 76). 2. விடாப்பயிற்சி; steady and persevering practice, unwearied application. "சாதனையா லெனை வெல்வா ரில்லை" (திருவாலவா. 35, 3). 3. ஒட்டாரம் (பிடிவாதம்) (கொ.வ.); obstinacy, persistence. 4. விடாப்பயிற்சி (சலஞ்சாதிக்கை) (வின்.); bearing malice. 5. நடித்துக் காட்டுகை (வின்.); perfect imitation or representation of life, as in drama. 6. பொய் (திவா.); falsehood.

[Skt. sādhanā > த. சாதனை]

**சாதா** *šādā,* பெ.எ. (adv.) இயல்பான, பகட்டில்லாத (ஆடம்பரமில்லாத); plain, unadorned. *சாதாவேட்டி, சாதாமுருகு.*

[U. sādā > த. சாதா]

**சாதாக்கியதத்துவம்** *šādākkiyatattuvam,* பெ.(n.) சுத்ததத்துவங்கள் ஐந்தனுள் ஒன்றாகவும் சாதாக்கியத்துக்கு இடமாகவும் ஞானமுங் கிரியையும் ஒத்து நிற்கும் நிலை (சிவப். கட்.); stage or region in which both knowledge and action are balanced and catā-civam presides, one of five cuttatattuvam, q.v.

**சாதாக்கியம்** *šātākkiyam,* பெ. (n.) சிவசாதாக்கியம், அமூர்த்திசாதாக்கியம், மூர்த்திசாதாக்கியம், கர்த்திரு சாதாக்கியம், கன்ம சாதாக்கியம் என்று ஐவகைப்பட்டதும் சீவன் முத்தன், சாதகன், ஞானி இவர்கள் தியானிப்பதற்காக ஈசானன், தத்புருஷன், அகோரன், வாமதேவன், சத்தியோசாரன் என்ற மூர்த்தத்தையடையுமாறு சத்தியுடன் சேர்ந்ததுமான பரசிவம்; para-civam in company with cakti, as suming the forms of *icāṉaṉ, tatpuru.saṉ, akōraṉ, vāmatēvaṉ* and *cattiyōcātaṉ* to facilitate the meditation of *civaṉ-muttaṉ, cātakaṉ* and ñāṉi of five

kinds viz., *civa-cātākkiyam, amūrtti-cātākkiyam, mūrtti-cātākkiyam, kart-tiru-cātākkiyam, kaṉma-cātākkiyam.*

*[Skt. sādākhya > த. சாதாக்கியம்]*

**சாதாக்கு—தல்** *šādākku-,* 6 செ.குன்றாவி. (v.t.) பழக்கிச் அமைதி (சாந்த)ப்படுத்துதல் (பு.வ.); to tame.

*[சாதா+ஆக்கு]*

**சாதாக்கொப்பு** *šātā-k-koppu,* பெ.(n.) மகளிர் காதணிவகை (வின்.); plain ear ornament of women.



**சாதாதபம்** *šādādapam,* பெ.(n.) அறநூல் பதினெட்டனுள் ஒன்று; a sanskrit text-book of Hindu law, ascribed to *šātātapa*, one of 18 *taruma-nūl*, q.v.

*[Skt. šātātapa > த. சாதாதபம்]*

**சாதாரண்ணியம்** *šādāraṇṇiyam,* பெ.(n.) எங்கும் (யாழ்.அக.); everywhere.

*[Skt. sādhāraṇya > த. சாதாரண்ணியம்]*

**சாதாரண** *šādāraṇa,* பெ.(n.) (வடமொழி யாளரின்) ஆண்டு அறுபதனுள் நாற்பத்து நான்காவது; the 44th year of the jupitar cycle.

*[Skt. sādhārana > த. சாதாரண]*

**சாதாரணகாந்தாரம்** *šādāraṇakāntāram,* பெ.(n.) சோடசசுரங்களுள் மூன்றாம் சுரத்தின் நடுத்தரமான பகுதி; middle variety of the third note of the gamut, one of *cōṭaca-curam*, q.v.

**சாதாரணடப்பு** *šādāraṇa-ḍappu,* பெ.(n.) கப்பலின் வேகத்தைக் கட்டுப்படுத்த உதவும் ஒருவகைக் கருவி; (m.navi. 607) an apparatus for gauging the speed of a ship, log.

**சாதாரணத்திருச்சபை** *šādāraṇa-t-tiruccabai,* பெ.(n.) கிறித்துவமதம் (chr); christianity.

*[சாதாரணம்+திருச்சபை]*

**சாதாரணதருமம்** *šādāraṇa-tarumam,* பெ.(n.) 1. எல்லாச் சாதியாருக்கும் பொதுவான ஒழுக்கம்; duties common to all castes. 2. உவமான உவமேயங்களின் பொதுத் தன்மை (அணியி. 1); point of comparison between the two objects of a simile.

**த.வ. பொதுநெறி**

*[சாதாரணம்+தருமம்]*

**சாதாரணநட்சத்திரம்** *šādāraṇa-naṭšattiram,* பெ. (n.) கார்த்திகை, விசாகம், பூராடம், பூரட்டாதி என்ற நாட்கள் (விதான. பஞ்சாங்க. 20, உரை); the four nakṣatras, *kārt-tikai, vicākam, pūrāṭamandpūraṭṭāti.*

*[சாதாரணம்+நட்சத்திரம்]*

**சாதாரணப்படு—தல்** *šādāraṇa-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) எல்லாராலும் அறியப்படுதல் (வின்.); to become common.

**சாதாரணம்** *šādāraṇam,* பெ. (n.) 1. பொதுவானது; that which is common, universal. 2. எளிது; that which is ordinary, easy. *"சாதாரணத்ததல வேள்பூசல்" (அழகர்கல. 75).* 3. தாழ்வானது (வின்.); that which is vulger, mean. 4. சபக்கத்தும் விபக்கத்தும் ஏது பொதுவாயிருக்கையாகிய ஏதுப்போலி (மணிமே. 29, 217); (log.) a fallacy in which cātaṉam or the middle term exists even in counter - instance.

**த.வ. எளிய நிலை**

*[Skt. sādhārana > த. சாதாரணம்]*

**சாதாரணை**[1] *šādāraṇai,* பெ.(n.) பொதுவானது; (Nāñ) commonness.

**சாதாரணை**[2] *šādāraṇai,* பெ.(n.) பொதுமகள்; prostitute.

**சாதாரதீக்கை** *šādāra-tikkai,* பெ.(n.) ஆசிரியனை அதிட்டித்து நின்று சிவபிரான் செய்யுந் தீக்கை (சி.சி.8,2, மறைஞா.); religious initiation of a disciple by Siva manifesting himself in the teacher.

**சாதாரம்** *šādāram,* பெ.(n.) சான்றோடு (ஆதாரத்தோடு) கூடியது (சி.போ.பா.8,2. பக்.368); that which has a base or foundation, that which has a bodily vehicle.

*[Skt. sādhāra > த. சாதாரம்]*

**சாதி[1]-த்தல்** *šādi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. நிறைவேற்றுதல்; to effect, accomplish, attain. *"அடியேன் பண்டென் சாதித்ததே" (சடகோபரந். 14).* 2. நிலைநாட்டுதல்; to establish, confirm. *"சாதிக்குமே பரதத் துவத்தை" (சடகோபரந். 18).* 3. விடாது பற்றுதல்; to adhere to, continue the observance of. *"தொழுதுருகிச் சாதித்த புத்தி" (கந்தரலங். 63).* 4. மந்திரசித்திபெறுதல்; to obtain mastery over a mantra. *"தாம் சாதித்த மந்திரத்தை நாவிடத்தே வழுத்து வராயின்" (சிலப். 16, 172, உரை)* 5. தேய்த்தல்; to rub on carefully, as a coating of oil, to paint, polish. *"சாதித்துப் பூச" (வின்.).*

**த.வ. நிறைவேற்றுதல்**

*[Skt. sādh > த. சாதி-,]*

**சாதி[2]-த்தல்** *šādi-,* 4 செ.குன்றாவி.(v.t.) கண்டித்தல்; to chastise, punish. *"தம்மிடையே பொய்யானாற் சாதிப்பா ராரினியே" (திவ். நாய்ச். 11. 10).*

*[Skt. šās > த. சாதி-,]*

**சாதி[3]-த்தல்** *šādi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. அழித்தல்; to destroy. *"கஞ்சனைச் சாதிப்பதற்கு" (திவ். திருவாய். 3.5.5).* 2. வெல்லுதல்; to conquer. (வின்.).

*[Skt. sad > த. சாதி-,]*

**சாதி** *sādi,* பெ.(n.) இந்திய மக்களிடை இல்லாதிருந்ததும் ஆரியர் வரவுக்குப்பின் நிற அடிப்படையிலும் தொழில் அடிப்படையிலும் பிறப்பு காரணமாகவும் ஆரியரால் புகுத்தப் பட்டதுமான மக்கட்பிரிவு; a subdivision of Indian population made by the Aryan race in India based on colour, occupation and birth which were unknown in India before the advent of the Aryans.

*[Skt. jāti > த. சாதி]*

**சாதிக்கட்டு** *šādi-k-kaṭṭu,* பெ.(n.) 1. குல வழக்கம் (வின்.); caste rules. 2. குல (சாதி) யொற்றுமை; unity in a caste.

*[சாதி + கட்டு]*

*[Skt. jāti > த. சாதி]*

**சாதிக்கலப்பு** *šādi-k-kalappu,* பெ.(n.) 1. பலசாதியினர் தொடர்பால் (சம்பந்தத்தால்) தோன்றும் நிறக்கலப்பு (வர்ணசங்கரம்); intermingling of different castes by intermarriage.

*[சாதி + கலப்பு]*

*[Skt. jāti > த. சாதி]*

**சாதிக்கலாபம்** *šādi-k-kalābam,* பெ.(n.) சாதிக்கலகம் (வின்.); caste disturbance, as between the *iṭaṅkai* and the *valaṅkai.*

*[சாதி + கலாபம்]*

**சாதிக்காரன்** *šāti-k-kāraṉ,* பெ.(n.) 1. தூய (சுத்தமான) சாதியான்; person of good caste, of pure or unmixed descent. 2. சாதிக்கலப்பற்ற ஐரோப்பியன்; genuine European or one of pure European descent.

*[சாதி + காரன்]*

**சாதிக்காரை** *šādi-k-kārai,* பெ.(n.) தகுதி (யாழ்.அக.); fitness.

*[Skt. sādhikāra > த. சாதிக்காரை]*

**சாதிகம்** *šādikam,* பெ.(n.) **சாதீயம்** (யாழ்.அக.) பார்க்க; see *šātiyam.*

*[Skt. jātiya > த. சாதிகம்]*

**சாதிகாரதீட்சை** *šādikāra-tiḍšai,* பெ.(n.) சபீசதீட்சை (சைவச. ஆசாரி. 62, உரை); a mode of religious initiation.

**சாதிகுலம்** *šāti-kulam,* பெ.(n.) உயர்குலம்; (j) high caste.

*[சாதி + குலம்]*

***[Skt.** jāti > த. சாதி]*

**சாதிகெட்டவன்** *šādi-keṭṭavaṉ,* பெ.(n.) 1. **சாதிப்பிரட்டன்** பார்க்க; see *šāti-p-piraṣdaṉ.* 2. தாழ்குலத்தோன் (வின்.); one of low caste.

*[சாதி + கெட்டவன்]*

***[Skt.** jāti> த. சாதி]*

**சாதிகோசம்** *šādi-kōšam,* பெ.(n.) **சாதிக்காய்** (மலை.) பார்க்க; see *šādi-k-kāy.*

***[Skt.** jāti+kōša > த. சாதிகோசம்]*

**சாதிங்குலிகம்** *šātiṅkulikam,* பெ.(n.) சாதிலிங்கம்; vermilion. *"சாதிங் குலிகமொடு சமர மொழுகிய" (பெருங். இலாவாண. 5, 22).*

***[Skt.** jāti+hiṅguli > த. சாதிங்குலிகம்]*

**சாதிச்சரக்கு** *šādi-c-carakku,* பெ.(n.) நல்ல சரக்கு (இ.வ.); article of good quality, genuine article.

*[சாதி + சரக்கு]*

**சாதிசண்டாளன்** *šāti-šaṇḍāḷaṉ,* பெ.(n.) 1.பார்ப்பனிக்கும் பிறஇனத்தானுக்கும் பிறந்தவன்; one born of a Brahmin mother and a sudra father. dist, fr. *karuma-caṇṭāḷaṉ. "முன்னாட் சாதி சண்டாளன் மற்றொருத்தன்" (திருக்காளத். 4, 27, 13).* 2. தாழ் (நீச)குலத்தான்; a man of low caste.

*[சாதி + சண்டாளன்]*

**சாதிசம்** *šādišam,* பெ.(n.) 1. **சாதிக்காய் 1** (தைலவ. தைல. 98) பார்க்க; see *šādi-k-kāy.* 2. நறும்பிசின் (யாழ்.அக.); socotrine aloe.

**சாதிசனம்** *šādišaṉam,* பெ.(n.) இனத்தாரும் உறவினர்களும் (கொ.வ.); fellow members of a caste, relatives.

**த.வ. உறவினர், உறவின்முறையார்**

*[சாதி + சனம்]*

**சாதிசாங்கரியம்** *šādi-šāṅkariyam,* பெ.(n.) **சாதிக்கலப்பு** பார்க்க; see *šādi-k-kalappu.*

**சாதித்துப்பூசு-தல்** *šādittu-p-pūšu-,* 5 செ.கு.வி.(v.t.) தேய்த்துப் பூசுதல் (வின்.); to rub, as oil, ointment.

*[சாதித்து + பூசு]*

**சாதித்துமினுக்கு-தல்** *šādittu-miṉukku-,* 5 செ.குன்றாவி.(v.t.) தேய்த்து பெருகிடுதல் (வின்.); to polish by rubbing well.

*[சாதித்து + மினுக்கு-]*

**சாதித்துவாங்கு-தல்** *šādittu-vāṅku-,* 5 செ.குன்றாவி.(v.t.)கோட்டை முதலிய வற்றைப் பிடித்தல் (வின்.); to capture as a fort.

*[சாதித்து + வாங்கு]*

**சாதிதருமம்** *šāditarumam,* பெ.(n.) (குலம்) இனத்துக்குரிய வழக்கவொழுக்கங்கள்; duty practice or occupation peculiar to a caste.

**த.வ. ஆரியரின் பிறப்புக் குல வழக்கம்**

*[சாதி + தருமம்]*

**சாதிநரந்தம்** *šādi-narandam,* பெ.(n.) **சாதிநாரத்தை** (பதார்த்த. 747) பார்க்க; see *šādi-nārattai.*

*[சாதி + நரந்தம்]*

**சாதிநாய்** *šādi-nāy,* பெ.(n.) உயர்ந்த இன நாய்வகை (கொ.வ.); dog of good breed.

*[சாதி + நாய்]*

**சாதிநாரத்தை** *šādi-nārattai,* பெ.(n.) நாரத்தைவகை (பதார்த்த 747, உரை); a kind of bitter orange.

*[சாதி + நாரத்தை]*

**சாதிப்பகை** *šāti-p-pagai,* பெ. (n.) 1. பிறவி (சன்ம)ப்பகை; instinctive hatred of one species of animal towards another. *"கருடனுக்குச் சருப்பத்தோடு சாதிப்பகை".* 2. குல (சாதி) வேற்றுமையால் மனிதர்கள்

கொள்ளும் பகை; enmity between nations or castes, racial animosity.

*[சாதி + பகை]*

**சாதிப்பதங்கம்** *šādi-p-pataṉkam,* பெ.(n.) **சாதிலிங்கம்** (வின்.) பார்க்க; see *šādiliṅkam.*

**சாதிப்பன்மை** *šādi-p-paṉmai,* பெ.(n.) குலத்தைக் (சாதியைக்) குறிக்கும் பன்மை (சீவக. 901, உரை); plural number denoting the entire genus or class.

*[சாதி + பன்மை]*

**சாதிப்பன்னம்** *šādi-p-paṉṉam,* பெ.(n.) சாதிபத்திரி (தைலவ. தைல. 109); mace.

***[Skt. jāti+parṇa > த. சாதிப்பன்னம்]***

**சாதிப்பாய்** *šādi-p-pāy,* பெ.(n.) பிரப்பம்பாய் (திவா.); rattan matting.

*[சாதி + பாய்]*

**சாதிப்பிரஞ்சம்** *šādi-p-pirañšam,* பெ.(n.) குலவழக்கத்தவறு (குலாசாரத்தவறு) (யாழ்.அக.); falling from caste traditions.

*[சாதி + பிரபஞ்சம்]*

**சாதிப்பிரட்டன்** *šādi-p-piraṭṭaṉ,* பெ.(n.) 1. சாதிவிலக்குண்டவன்; outcaste. 2. **சாதிகெட்டவன்** பார்க்க; see sādi-keṭṭavaṉ.

**சாதிப்பிள்ளை** *šādi-p-piḷḷai,* பெ.(n.) 1. பள்ளர் (G.Sm.D.I,i, 187); paḷḷars, as "servants of the caste". 2. சில இனத்தார்க்கு ஊழியஞ் செய்யும் கீழ்ச் சாதியார்; (E.T.) servile caste attached to a particular community.

*[சாதி + பிள்ளை]*

**சாதிப்பூ** *šādi-p-pū,* பெ.(n.) 1. சாதிபத்திரி (பதார்த்த. 651); mace, as the nutmeg flower. 2. முல்லைப்பூ வகை; flower of jasminum grandiflorum.

*[சாதி + பூ]*

**சாதிப்பெயர்** *šādi-p-peyar,* பெ.(n.) இனத்தைக் (சாதி) குறிக்கும் பெயர்; class name, caste name. *"புள்ளியிரலையென்றதனை அதன் சாதிப்பெயர் கூறியவாறாகக் கொள்க" (பதிற்றுப். 74, 8, உரை).*

*[சாதி + பெயர்]*

**சாதிப்பெரும்பண்** *šādi-p-perumpaṇ,* பெ. (n.) அகநிலை, புறநிலை, அருகியல், பெருகியல் என்ற நால்வகைத் தலைமைப் பண்கள் (சிலப். 8: 41, உரை); primary melody types, four in number, viz., *aka-nilai, puṟa-nilai, arukiyal, perukiyal.*

**த.வ. தலைமைப்பண்**

*[சாதி + பெரும்பண்]*

**சாதிபத்திரம்** *šādi-pattiram,* பெ. (n.) ஈட்டாவணம் (ஈட்டுப்பத்திரம்) (சுக்கிரநீதி. 94); mortgage bond.

*[சாதி + பத்திரம்]*

**சாதிபத்திரி** *šādi-pattiri,* பெ.(n.) சாதிக்காயை மூடியிருக்குந் தோல் (பதார்த்த. 1005); mace.

***[Skt. jāti-patri > த. சாதிபத்திரி]***

**சாதிபலம்** *šādi-palam,* பெ.(n.) **சாதிக்காய்** (மலை.) பார்க்க; see *šādikkai.*

***[Skt. jāti-phala > த. சாதிபலம்]***

**சாதிபேதம்** *šādi-pēdam,* பெ.(n.) ஆரியரின் பிறப்பு வழி குல (சாதி) வேறுபாடு; difference in castes. *"சாதிபேதங்கடனையறிய மாட்டாமல்" (பட்டினத். திருப்பா. பூரண. 35).*

*[சாதி + பேதம்]*

**சாதிமல்லிகை** *šādi-mallikai,* பெ.(n.) மல்லிகைவகை; large-flowered jasmine. l.sh., Jasminum grandiflorum.

*[சாதி + மல்லிகை]*

***[Skt. jāti+mallikā > த. சாதிமல்லிகை]***

**சாதிமாசம்** *šādi-māšam,* பெ.(n.) ஆங்கில மாதம் (கொ.வ.); calendar month.

*[சாதி + மாசம்]*

**சாதிமான்** *šādi-māṉ,* பெ.(n.) நற்குலத்தோன் (யாழ்.அக.); person of high birth.

***[Skt. jāti-mān > த. சாதிமான்]***

**சாதிமானம்** *šādi-māṉam,* பெ. (n.) 1. குலப்பற்று (வின்.); love of one's own caste. 2. குலம் ஒத்திருக்கை (யாழ்.அக.); identity of caste.

*[Skt. jāti+māna > த. சாதிமானம்]*

**சாதிமுல்லை** *šādi-mullai,* பெ.(n.) **சாதிப்பூ** பார்க்க; see *šādippū.*

*[சாதி + முல்லை]*

**சாதிமுறை** *šādi-muṟai,* பெ.(n.) குல வொழுக்கம்; manners and Ustoms of a caste.

*[சாதி + முறை]*

**சாதிமை** *šādimai,* பெ.(n.) 1. ஓரினத்திற்குரிய தனிப்பட்ட குணம்; trait, characteristic of a genus or class. 2. பெருமை (இலக். அக.); greatness.

*[Skt. jāti > த. சாதிமை]*

**சாதியடி** *šādi-y-aḍi,* பெ.(n.) பன்னிரண்டு விரல (அங்குல)ங்கொண்ட ஆங்கில அடி (யாழ்.அக.); foot of twelve inches.

*[சாதி + அடி]*

**சாதியாசாரம்** *šādi-y-āšāram,* பெ.(n.) ஒரு குலத்துக்குரிய வழக்கவொழுக்கம்; manners and customs of a caste.

*[சாதி + ஆசாரம்]*

**சாதியிளப்பம்** *šādi-y-iḷappam,* பெ.(n.) 1. குலத்தாழ்வு (கொ.வ.); low caste. 2. **சாதிப்பிரஞ்சம்** பார்க்க; see *šādi-p-pirañšam.*

*[சாதி + இளப்பம்]*

**சாதியீனன்** *šādi-y-īṉaṉ,* பெ.(n.) இழி குலத்தான்; one of low caste.

*[சாதி+ ஈனன்]*

*[Skt. jāti > த. சாதி]*

**சாதியேகவசனம்** *šādi-y-ēkavašaṉam,* பெ.(n.) **சாத்தியேகவசனம்** (மாறனலங். 92, உரை) பார்க்க; see *šātti-y-ēkavašaṉam.*

**சாதியொருமை** *šādi-y-orumai,* பெ.(n.) இனத்தைக் குறிக்கும் ஒருமை; singular number denioting the entire genus or class. சாதி யொருமையைச் சாத்தியேகவசன மென்பர் (பி.வி. உரை.)

*[சாதி+ ஒருமை]*

**சாதிரம்** *šādiram,* பெ.(n.) **விட்ணுக்கரந்தை** (மலை.) பார்க்க; see *viṣṇiuk-karantai.*

*[Skt. chardikā > த. சாதிரம்]*

**சாதிருசியம்** *šādirušiyam,* பெ.(n.) ஒப்பு (சங்.அக.); resemblance, similarity.

*[Skt. sādṛšya > த. சாதிருசியம்]*

**சாதிரேகம்** *šādirēgam,* பெ.(n.) **சாதிரேசம்** (யாழ்.அக.) பார்க்க; see *šātirēšam.*

**சாதிரேசம்** *šādirēšam,* பெ.(n.) குங்குமப்பூ (வின்.); saffron.

*[Skt. kašmira-ja > த. சாதிரேசம்]*

**சாதிரை** *šādirai,* பெ.(n.) ஊர்வலம்; procession. *"சாதிரைத் தீவட்டி வெளிச்ச மினுமினென" (விறலிவிடு.).*

*[U. jātra > த. சாதிரை]*

**சாதிவிருத்தி** *šādi-virutti,* பெ.(n.) குலத் தொழில்; hereditary occupation of a caste.

*[சாதி+ விருத்தி]*

**சாதீகம்** *šādīgam,* பெ.(n.) **சாதீயம்** (யாழ்.அக.) பார்க்க; see *šādīyam.*

**சாதீயம்** *šādīyam,* பெ.(n.) 1. **சாதியாசாரம்** (யாழ்.அக.) பார்க்க; see *šādiyāšāram.* 2. உயர்ந்தது; that which is superior.

*[Skt. jātīya > த. சாதீயம்]*

**சாது** *šādu,* பெ.(n.) 1. நல்லது; that which is good, excellent. *"சாதுவென்றுணர் கிற்றியேல்" (கம்பரா. பிணிவீ.91).* 2. நற்குணமுள்ளவ–ன்–ள்; good, virtuous person. *"பஞ்சதுட்டனைச் சாதுவேயென்று" (தேவா. 648, 5).* 3. அருகன் (பிங்.); arhat. 4. துறவி (சீவக. 1, உரை); ascetic. 5. வடபுலத் துறவி (பைராகி); religious mendicant, especially from north-india. 6. அப்பாவி; harmless person, simpleton. 7. காரமின்மை;

insipidity, as of mild pepper - water. *'சாறு சாதுவாயிருக்கிறது' (கொ.வ.).*

**சாதுசங்கம்** *šādu-šaṅgam,* பெ. (n.) பெரியாருடன் கூட்டுறவு (யாழ்.அக.); association with the good and the great.

*[Skt. sādhu+saṅga > த. சாதுசங்கம்]*

**சாதுசரணம்** *šādu-šaraṇam,* பெ.(n.) சாதுக்களை அடைக்கலம் (சரணம்) புகுகை (சீவக. கடவுள் வாழ்த்து. உரை); seeking refuge in the company of sādhus or monks.

*[சாது + சரணம்]*

**சாதுதி** *šātuti,* பெ.(n.) மாமி (யாழ்.அக.); aunt.

**சாதுர்சாதம்** *šādur-šādam,* பெ.(n.) ஏலம், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, சிறு நாகப்பூ என்ற நான்கு மருந்துச் சரக்குகள் (தைலவ. தைல. 29); the four medicinal substances viz., *ēlam, ilavaṅka-p-paṭṭai, ilavaṅka-p-pattiri, ciṟunāka-p-pū.*

*[Skt. catur+jāta > த. சாதுர்சாதம்]*

**சாதுர்த்திகம்** *šādurttigam,* பெ.(n.) நாலு நாளைக்கு ஒருமுறை வரும் முறைக் காய்ச்சல் (ஈடு.); quartan fever.

*[Skt. cāturthika > த. சாதுர்த்திகம்]*

**சாதுர்ப்பாகம்** *šādur-p-pāgam,* பெ.(n.) நாலில் ஒரு பங்கு (யாழ்.அக.); a quarter.

*[சாதுர் + பாகம்]*

*[Skt. catur > த. சாதுர்]*

**சாதுர்மாசியம்** *šātur-māšiyam,* பெ.(n.) 1. கடக (ஆடி) மாதம் தொடங்கி நாலு மாதத்திற் செய்யும் வேள்வி (யாகங்)களின் பொதுப்பெயர் (திவா.); name of the sacrifices performed for four months commencing from āṭi. 2. துறவி (சந்நியாசி)கள் மாரிக்காலத்தில் இரண்டு மாதம் ஒரே இடத்தில் இருந்து கொண்டு நோற்கும் ஒருவகை நோன்பு; vow observed by sannyāsins, which consists in their remaining in the same place for two months in winter.

*[Skt. cāturmāsya > த. சாதுர்மாசியம்]*

**சாதுரங்கம்** *šāturaṅkam,* பெ.(n.) 1. முழுப்படை (சதுரங்கசேனை); a complete army. *"சாதுரங்கத்தலைவனை" (கலிங். 488).* 2. பதுமராகம்; a kind of ruby. *"பதுமம் பதுமராகம் சாதுரங்கம் என்பதும் அது" (சிலப். 14: 186, உரை).*

**த.வ.** நாற்படை

*[Skt. catur-aṅga > த. சாதுரங்கம்]*

**சாதுரம்** *šāturam,* பெ.(n.) தேர் (யாழ்.அக.); chariot.

*[சாதுரன் > சாதுரம்]*

**சாதுரன்** *šāturaṉ,* பெ.(n.) 1. பகுத்தறிவன் (விவேகி); discerning, wise man. 2. தேர்ப்பாகன்; charioteer.

*[Skt. catura > த. சாதுரன்]*

**சாதுரிகன்** *šāturikaṉ,* பெ.(n.) **சாதுரன்** (யாழ்.அக.) பார்க்க; see *šāturaṉ.*

*[Skt. catura > த. சாதுரிகன்]*

**சாதுரியம்** *šāturiyam,* பெ.(n.) 1. வல்லமை (சாமர்த்தியம்); cleverness, ability. *"சாதுரிய மில்ல வரு மில்லை" (மேருமந். வைசயந்த. 19).* 2. நாகரிகம் (இலக்.அக.); civilised state.

**த.வ.** திறமை, வல்லமை

*[Skt. caturya > த. சாதுரியம்]*

**சாதுரியன்** *šāturiyaṉ,* பெ.(n.) அறிவுள்ளவன்; clever person.

**த.வ.** வல்லவன்

*[Skt. cāturya > த. சாதுரியன்]*

**சாதுரியாகமம்** *šāturiyākamam,* பெ.(n.) விவிலியநூலின் ஒரு பகுதி; book of proverbs.

*[Skt. cāturya+āgama > த. சாதுரியாகமம்]*

**சாதுவன்** *šātuvaṉ,* பெ.(n.) 1. நல்லவன்; good, gentle person. *"சாதுவராய்ப் போதுமின்க ளென்றான்" (திவ். இயற். நான்மு. 68).* 2. ஐம்புலன்களும் அடக்கியவன்; one who has subdued his senses. *"தத்துவன் சாதுவன்" (சிலப். 10:182).*

**த.வ.** ஐம்புலனடங்கி.

*[Skt. sādhu > த. சாதுவன்]*

**சாதுன்மாசியம்** *šātuṉ-māšiyam,* பெ.(n.) **சதுர்மாசியம்** பார்க்க; see *šaturmāšiyam.* *"சாதுன்மாசிய நல்விரதந் தொடங்கினேன்" (விநாயகபு. 80, 192).*

**சாதேட்டி** *šāṭēṭṭi,* பெ.(n.) **சாதகன்மம்** (யாழ்.அக.) பார்க்க; see *šātakaṉmam.*

*[Skt. jāta-iṣṭi > த. சாதேட்டி]*

**சாதேவம்** *šādēvam,* பெ.(n.) 1. **குழிநாவல்** (பிங்.) பார்க்க; see *kuḻināval.* 2. **சிறுநாவல்** (மலை.) பார்க்க; see *šiṟunāval.*

*[Skt. sahadēva > த. சாதேவம்]*

**சாதேவன்** *šādēvaṉ,* பெ.(n.) **சகதேவன்** பார்க்க; see *šakatēvaṉ.* *"இவ்வண்ணஞ் சாதேவ னியம்புதலும்" (பாரத. கிருட்டிணன்றூ. 33).*

*[Skt. sahadeva > த. சாதேவன்]*

**சாந்தாத்மா** *šāndātmā,* பெ.(n.) தூய முழு முதற்பொருள் (சுத்தப்பிரம்மம்) (விசாரசந். 305); (phil) pure Brahman.

*[Skt. šāntatman > த. சாந்தாத்மா]*

**சாந்திக்காரன்** *šāndi-k-kāraṉ,* பெ.(n.) **சாந்தியடிகள்** பார்க்க; see *šāndiyaḍikaḷ.* (T.A.S. 11, 154).

**சாந்திகம்** *šāndikam,* பெ. (n.) 1. அரிட்டநிவிருத்தியின் பொருட்டாகச் செய்யுங் கிரியை; propitiatory rite for avarting or removing evil. *"சாந்திக முன்னாய கருமத்தின் மனம்வைத்தோராய்" (திருக்காளத். 4, 11, 10).* 2. திருநீற்றுக்காகக் மூத்திரத்தை (கோமயத்தைப்) ஆ(பசு)வின் பின்னிருந்து ஏற்றுக்கொள்ளுஞ் செயல் (சைவச. பொது. 169, உரை); obtaining dung from the cow while being evacuated for the preparation of sacred ashes.

**த.வ. நலஞ்சேர்த்தி**

*[Skt. šāntika > த. சாந்திகம்]*

**சாந்திகலியாணம்** *šāndikaliyāṇam,* பெ.(n.) மிகு இளமையில் திருமணம் செய்து கொண்ட பெண் பூப்படைந்த பின்பு விதிப்படி கணவனுடன் சேர்தற்குச் செய்யும் ஆரியச் சடங்கு ; ceremony of post-puberty consummation in child-marriage.

*[சாந்தி + கலியாணம்]*

*[Skt. šānti > த. சாந்தி]*

**சாந்திகலை** *šāndi-kalai,* பெ.(n.) சிவசத்தியின் பஞ்சகலைகளுள் அனுபவஞானம் பெற்ற ஆன்மாக்கட்கு விருப்பு வெறுப்புச் சங்கற்பம் முதலிய எல்லாத் துன்பங்களுஞ் சாந்தமாகச் செய்யுங் கலை (சி.போ.பா. 2,2. பக்.143); sphere of action for the energy of Šiva which calms down all the turbulent elements in fully riped souls, one of *pañca-kalai,* q.v.

**சாந்திகழி-த்தல்** *šāndi-kaḻi-,* 4 செ.கு.வி. (v.i.) சாந்திக் கிரியைகளால் கிரகம் முதலியவற்றின் பீடையைப் போக்குதல்; to perform propitiatory rites for averting or removing the evil influences of planets, spirits, etc.

**சாந்திசெய்வான்** *šāndi-šeyvāṉ,* பெ.(n.) **சாந்தியடிகள்** பார்க்க; see *šāndiyaḍigaḷ.* *"சாந்திசெய்வானுக்கு விருத்திக்காக அடுத்த பூமீ" (T.A.S.I. 7).*

*[சாந்தி + செய்வான்]*

**சாந்திமுகூர்த்தம்** *šāndi-mugūrttam,* பெ.(n.) **சாந்திகலியாணம்** பார்க்க; see *šāndikaliyāṇam.*

**சாந்தியடிகள்** *šāndiyaḍikaḷ,* பெ.(n.) கோயிற்பூசகன் (T.A.S.11. 136); temple priest.

*[சாந்தி + அடிகள்]*

**சாந்தியடை** *šāndi-y-aḍai,* வி.(v.) (-அடைய, -அடைந்து) (ஒருவர் இறந்துபோனதற்காக வருத்தம் தெரிவிக்கும் முறையில் கூறும் போது) (ஆன்மா) அமைதியில் நிலைத்தல்; (when referring to the departed) rest in peace. *"தலைவருடைய ஆன்மா சாந்தியடையப் பிரார்த்திக்கிறோம்".*

*[சாந்தி + அடை]*

**சாந்தியதீதகலை** *šāndiyatītakalai,* பெ.(n.) சிவசத்தியின் பஞ்சகலைகளுள் அனுபவ ஞானம் பெற்று விருப்பு வெறுப்பு முதலிய எல்லாத் துன்பங்களுஞ் சாந்தமாய் நின்ற ஆன்மாக்கட்கு அத்துன்பங்களை முற்றும் ஒழியச் செய்யுங் கலை (சி.போ. பா. 2,2,பக்.143); (saiva) sphere of action for the energe of Šiva which destroys all the turbulent elements is fully riped souls one of *pañca-kalai,* q.v.

*[சாந்தியத்த+கலை]*

*[Skt. šānti+atīta > த. சாந்தியதீத]*

**சாந்தியதீதம்** *šāndi-y-atītam,* பெ.(n.) **சாந்தியதீதகலை** பார்க்க; see *šāndi-y-atītakali.*

**சாந்தியதீதை** *šāndi-y-atītai,* பெ.(n.) **சாந்தியதீதகலை** (சி.சி.2, 74, சிவாக்) பார்க்க; see *šāndi-y-atītakalai.*

**சாந்தியாதீதம்** *šāndiyātitam,* பெ.(n.) **சாந்தியதீதகலை** (சி.சி.2, 74, சிவாக்.) பார்க்க; see *šāndi-y-atītakalai.*

**சாந்திரம்** *šāndiram,* பெ. (n.) 1. நிலவுத் தொடர்பானது (சந்திரசம்பந்தமானது); that which pertains to the moon. 2. **சந்திரகாந்தம்** (வின்.) பார்க்க; see *šandirakāndam.*

*[Skt. cāndra > த. சாந்திரம்]*

**சாந்திரமாதம்** *šāntira-mātam,* பெ.(n.) சைத்திரம், வைசாகம், சியேட்டம், ஆஷாடம், சிராவணம், பாத்திரபதம், ஆசுசீம், கார்த்திகம், மார்க்கசிரம், புஷ்யம், மாகம், பால்குனம் என்ற சந்திரகதியைக் கொண்டளவிடப்படும் பன்னிரு மாதங்கள்; lunar month 12 in number viz., *caittiramī vaicākam, ciyēṭṭam, āṣāṭam, cirāvaṇam, pāttirapatam, ācuvīcam, kārttikam, mārkkaciram, puṣyam, mākam, pālkuṇam. "சாந்திர மாதங் குரு வந்தமாகும்" (விதான. குணாகுண. 80).*

**சாந்திரமானம்** *šāntira-māṇam,* பெ.(n.) நிலவின் வளர்ச்சியைக் (சந்திரகதியைக்) கொண்டு மாத, ஆண்டுகள் அளவிடும் முறை; system of calculating months and years by the movements of the moon. *"சாந்திரமான பட்சம்பற்றிக் கூறினான்" (சீவக. 493, உரை).*

**த.வ. நிலாக்கணிப்பு**

*[சந்திரம் > சாந்திரம் + மானம்]*

**சாந்திராண்டு** *šāndirāṇḍu,* பெ.(n.) நிலவைக் (சந்திரகதியைக்) கொண்டு அளவிடப்படும் ஆண்டு (யாழ்.அக.); lunar year.

**சாந்திராயணம்** *šāndirāyaṇam,* பெ.(n.) வெள்ளுவா தொடங்கி காருவா வரை ஒவ்வொருபிடி சோறு குறைத்தும் காரூவா தொடங்கிப் வெள்ளுவா வரை ஒவ்வொரு பிடி மிகுதிப்படுத்தியும் உண்ணும் நோன்பு; expiatory fast for one month commencing from the full moon, the food being diminished every day by one handful during the dark fortnight and increased in like manner during the bright fortnight.

*[Skt. cān-drāyaṇa > த. சாந்திராயணம்]*

**சாந்தோக்கியம்** *šāndōkkiyam,* பெ.(n.) நூற்றெட்டுச் சிற்றிலக்கியங்களுள் (உபநிடதம்) ஒன்று; an upaniṣad, one of 108.

*[Skt. chān-dōgya > த. சாந்தோக்கியம்]*

**சாப்பா** *šāppā,* பெ.(n.) 1. முத்திரை; stamp, seal. 2. மத்தள வாத்தியத்தில் ஒவ்வொரு கெத்தின் முடிவையும் காட்டி அதன் தொப்பையில் அடிக்கும் அடி; (mus.) the concluding stroke in an instalment of drum-play.

*[U. chāpā > த. சாப்பா]*

**சாப்பாய்** *šāppāy,* பெ.எ(adv.) முழுதும்; wholly, entirely. *'சொத்துக்கள் சாப்பாய்ப் போய்விட்டன' (உ.வ.).*

**சாப்பிரா** *šāppirā,* பெ.(n.) சிறுமரவகை; arnotto. s.tr. Bixa orellane.

*[T. jāphara > த. சாப்பிரா]*

**சாப்பு**[1] *šāppu,* பெ.அ.(adj.) 1. பகட்டுப்புனைவற்ற (ஆடம்பரமற்ற); unostentatious, plain.

'அவன் மிகவும் சாப்பாயிருப்பவன்'. 2. நேர்மையான; (c.g.) fair-minded.

**சாப்பு[2]** *šāppu,* பெ.(n.) படி (நகல்); (c.g.) copy transcript.

*[Skt. sāf > த. சாப்பு]*

**சாப்பு[3]** *šāppu,* பெ.(n.) துமுக்கி (துப்பாக்கி)ச் சாப்பு; gunlock, the cock of a gun.

த.வ. அமுக்கி

*[Port. chāpa > த. சாப்பு]*

**சாப்பு[4]** *šāppu,* பெ.(n.) கடை; shope.

*[ē. shop > த. ஷாப் > சாப்]*

**சாபல்லியம்[1]** *šāballiyam,* பெ.(n.) பயனுள்ள தாகை; fruitfulness. *"அவன் சன்ம சாபல்லிய னன்றோ" (சிவரக. மறலியுத்தர. 16).*

*[Skt. sāphalya > த. சாபல்லியம்]*

**சாபல்லியம்[2]** *šāballiyam,* பெ.(n.) **சாபலியம்** பார்க்க; see *šāpaliyam.*

*[Skt. sāphalya > த. சாபல்லியம்]*

**சாபலம்[1]** *šābalam,* பெ.(n.) வானகணித வாக்கியவெண்; anamolistic equation (Astron.).

*[Skt. jyā-phala > த. சாபலம்]*

**சாபலம்[2]** *šāpalam,* பெ.(n.) 1. விடாப்பற்று; persistence, firm attachment. *"தன் சாபலாதிசயத்தாலேயும்" (ஈடு. 4, 2, ப்ர.)* 2. எளிமை; discomfiture. *"தந்தைபோ ரழிந்துபோன சாபலங்கண்டு வெம்பி" (பாரத. நிரை. 95).*

*[Skt. cāpala > த. சாபலம்]*

**சாபலியம்** *šāpaliyam,* பெ.(n.) நிலையில்லா மனம் (கொ.வ.); fickleness.

*[Skt. cāpalya > த. சாபலியம்]*

**சாபனை** *šāpanai,* பெ.(n.) சாவம் (வின்.); curse.

*[Skt. šapana > த. சாபனை]*

**சாபா** *sāpā,* பெ.(n.) சாப்பா பார்க்க; see *sāppā.*

*[U. chāpā > சாப்பா > சபா]*

**சாபாகாகிதம்** *šāpā-kākitam,* பெ.(n.) முத்திரைக்கடிதம் (இ.வ.); stamp paper.

*[சாப்பா+காகிதம்]*

*[U. chāpā > த. சாபா]*

**சாபாகானா** *šāpākānā,* பெ.(n.) அச்சுக்கூடம் (இ.வ.); printing office.

*[U. chāpā > த. சாப்பா > சாபா + U. kanah > த. கானா]*

**சாபாலம்** *šāpālam,* பெ.(n.) நூற்றெட்டுச் சிற்றிலங்களுளொன்று; an *upanišad,* one of 108. *"நற்சாபால முரைத்த பலன்" (சேதுபு. மங்கல. 45).*

*[Skt. jābāla > த. சாபாலம்]*

**சாபாலன்** *šāpālan,* பெ.(n.) ஆட்டுவாணிகன் (பிங்.); one who deals in sheep.

*[Skt. jābāla > த. சாபாலன்]*

**சாபானுக்கிரகசக்தி** *šāpānu-k-kiraga-šakti,* பெ.(n.) சவிக்கவும், வாழ்த்தவும் வல்ல ஆற்றல்; power to curse or bless, as one wills.

*[Skt. šāpa+anu-graha + த. சாபானுக் கிரகசக்தி]*

**சாபாசு** *šāpāsu,* பெ.(n.) 'மிக நன்று' என்னும் குறிப்பு; expr. meaning excellent well done.

த.வ. வல்லே, வலே

*[U. shābāsh > சபாஷ் > த. சாபாசு]*

**சாபிதா** *šāpitā,* பெ.(n.) **சாப்தா** பார்க்க; see *šāptā.*

**சாபீத்து** *šāpittu,* பெ.(n.) எண்பித்தது; (C.G.) that which is proved, established, as an offence or charge.

*[U. sābit > த. சாபீத்து]*

**சாபேட்சம்** *šāpēṭšam,* பெ.(n.) ஒன்றை சார்ந்(அபேட்சித்)திருப்பது; that which is dependent. *"இந்திரிய சாபேட்சம்" (சி.சி. அளவை. 1. சிவாக்.).*

*[Skt. sāpēkṣa > த. சாபேட்சம்]*

**சாபேட்சை** *šāpēḍšai,* பெ.(n.) தீராத வாஞ்சை (யாழ்.அக.); insatiable desire.

*[Skt. sāpēkṣa > த. சாபேட்சை]*

**சாம்பிராச்சியம்** *šāmpirācciyam,* பெ.(n.) **சாம்ராச்சியம்** பார்க்க see *šāmrācciyam. "முத்தி யெனுமோர் சாம்பிராச்சிய முழுது முனது" (பிரபோத. 48, 13).*

**சாம்பிராணி** *šāmpirāṇi,* பெ.(n.) 1. குதிரைகள் அதிகமாக வாழும் தேசங்களுட் சிறந்ததான ஒரு நாடு; a district in Malacca famous for its horses. *"காம்போச மாரியஞ் சாம்பிராணி ........ முன்னான துரங்கம்" (திருவாலவா. 27, 73).* 2. **பரங்கிச்சாம்பிராணி** பார்க்க; see *parankiccampirāṇi.* 3. ஒரு வகை மரம்; nitta tree of Africa.1. tr., parkia biglandulosa. 4. ஒருவகை மரம்; benzoin tree, s.tr., styrax benzoin. 5. நறுமணப்பொருள் (பதார்த்த. 1072); frankincense, olibanum, gum benzoin. 6. மூடன்; fed, good for nothing fellow.

*[Malay. sāmrāni > த. சாம்பிராணி]*

**சாம்பிராணித்தூபம்** *šāmpirāṇi-t-tūpam,* பெ.(n.) கோயிலில் புகைக்கும் சாம்பிராணிப் புகை; fragrant smoke of frankincense, as an offering.

*[சாம்பிராணி + தூபம்]*

**சாம்பிராணித்தைலம்** *šāmpirāṇi-t-tailam,* பெ.(n.) சாம்பிராணியினின்று வடிக்கப்படும் தைலம்; a medicinal oil extracted from benzoin.

*[சாம்பிராணி + தைலம்]*

**சாம்பிராணிப்பட்டயம்** *šāmpirāṇi-p-paṭṭayam,* பெ.(n.) சாம்பிராணித் தூபமேற்றிப் போற்றப்படுவதும் கோயில் முதலியவற்றிற்கு உரியதுமான கொடை ஆவணம் (தான சாசனம்) (வின்.); deed of gift to temple, etc. preserved with smoke-perfume.

*[சாம்பிராணி + பட்டயம்]*

**சாம்பிராணிப்பதங்கம்** *šāmpirāṇi-p-padangam,* பெ.(n.) 1. சாம்பிராணியைப் புகைத்தெடுத்த மருந்துப்பொடி; a medicinal powder of solidified benzoin smoke. 2. நறுமணப்புகை வகை; a smoke-perfume of frankincense.

*[Malay.sāmrāni+patanga>த.சாம்பிராணிப்பதங்கம்]*

**சாம்பிராணிபோடு-தல்** *šāmpirāṇi-pōḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. நறும்புகையிடுதல்; to burn or offer incense. 2. வெறியேற்றம் (ஆவேசம்) வரச்செய்தல் (கொ.வ.); to invoke the descent of a spirit on a person by burning frankincense. 3. புகழ்தல் (கொ.வ.); to flatter, praise. 4. தூண்டுதலைச் செய்தல் (கொ.வ.); to instigate, incite.

*[சாம்பிராணி + போடு]*

*[Skt. sāmrāni > த. சாம்பிராணி]*

**சாம்பிராணிவத்தி** *šāmpirāṇi-vatti,* பெ.(n.) ஊதுவத்தி; joss stick, incense stick.

*[Malay.sāmrāni+vartti> த. சாம்பிராணிவத்தி]*

**சாம்பேசம்** *šāmpēšam,* பெ.(n.) பதினெட்டு துணைத் தொன்மங்களுள் ஒன்று; a secondary purāṇa, one of 18 *upa-purāṇam,* q.v.

*[Skt. sāmba+iša > த. சாம்பேசம்]*

**சாம்ராச்சியம்** *šāmrācciyam,* பெ.(n.) 1. முற்றாளுமை (ஏகாதி பத்தியம்); sole, universal sovereignty. 2. பெரும் பதவி; supreme state, exalted position. *"சேஷத்வ சாம்ராச்சியத்திற்கு முடிசூடி யிருக்கப் பெறுவர்கள்" (ஈடு. 4, 4, 11).*

த.வ. பேரரசு

*[Skt. sām-rājya > த. சாம்ராச்சியம்]*

**சாமக்கிரி** *šāmakkiri,* பெ.(n.) 1. கருவிகள் (அ) பொருட்கள்; things or materials needed for an occasion. 2. உணவுப் பண்டம் (கொ.வ.) food stuffs, provisions.

*[Skt. sāmagri > த. சாமக்கிரி]*

**சாமக்கிரியை** *šāmakkiriyai,* பெ.(n.) **சாமக்கிரி** பார்க்க see *šāma-k-kiri.*

**சாமகண்டர்** *šāma-kaṇṭar,* பெ.(n.) கருங் கழுத்துடையவராகக் கருதப்படும் சிவன் (நீலகண்டமுடையவர்) Šiva as black-

throated. *சாமகண்டர்த மாலயம் புகுவித்தரோ (திருவிளை. விடையி. 13).*

*[Skt. šyāma+kantha > த. சாமகண்டர்]*

**சாமகம்** *šāmagam,* பெ.(n.) சாணைக்கல் (யாழ்.அக.) whet stone.

*[Skt. šānaka > த. சாமகம்]*

**சாமகலியாணி** *šāmakaliyāṇi,* பெ.(n.) பண் வகை (பரத ராக. 103); a specific melody-type. (mus.).

**சாமகன்** *šāmakan,* பெ.(n.) **சாமவேதி 1** (கொ.வ.) பார்க்க; see *šāma-vēti.*

*[Skt. sāma-ga > த. சாமகன்]*

**சாமகாலம்** *šāma-kālam,* பெ.(n.) வற்கட (பஞ்ச)காலம்; times of famine.

*[சாம+காலம்]*

*[Skt. kṣāma > த. சாமம்]*

**சாமகானம்** *šāma-kāṇam,* பெ.(n.) சாமவேதம் பாடுகை chanting of *šāma-vēda. சாமகானஞ் செய்தவற் காலயம் (திருவிளை. வரகுலா. 46).*

*[Skt. sāman+gāna > த. சாமகானம்]*

**சாமகீதம்** *šāma-kītam,* பெ.(n.) 1. **சாமகானம்** பார்க்க see *šāma-kāṇam.* 2. இசை (சங்கீத)ப்பாட்டு a musical piece. *சாமகீத மற்றுமொன்று சாமிநன்கு பாடினான் (சீவக. 2038).*

**சாமத்தியம்** *šāmattiyam,* பெ.(n.) **சாமர்த்தியம்** (இ.வ.) பார்க்க; see *šāmarttiyam.*

*[Skt. sāmarthya > த. சாமர்த்தியம்]*

**சாமத்துரோகி** *šāma-t-turōki,* பெ.(n.) கொடிய வஞ்சகன் (இ.வ.) (பஞ்சகாலத்திற் துரோகஞ் செய்பவன்); cruel, treacherous person, as one who commits heinous crimes in times of famine.

**சாமர்த்தியக்கலியாணம்** *šāmarttiya-k-kaliyāṇam,* பெ.(n.) 1. பெண் பருவமடைந்த போது செய்யப்படும் சடங்கு (j) ceremony performed on attaining puberty. 2. **சாந்திகலியாணம்** பார்க்க; see *šānti-kaliyāṇam.*

*[சாமர்த்தியம்+கலியாணம்]*

*[Skt. sāmartya > த. சாமர்த்தியம்]*

**சாமர்த்தியம்** *šāmarttiyam,* பெ.(n.) 1. திறமை, திறன் skill, ability. 2. பூப்படைகை (j) pubescence of a girl.

*[Skt. sāmarthya > த. சாமர்த்தியம்]*

**சாமர்த்தியமா—தல்** *šāmarttiyamā-,* 6 செ.கு.வி. (v.i.) பூப்படைதல் (j) to attain puberty.

**த.வ. சமைதல், நிறைதல், பருவமடைதல்**

*[சாமர்த்தியம்+ஆ]*

*[Skt. sāmarthya > த. சாமர்த்தியம்]*

**சாமர்த்தியன்** *šāmarttiyan,* பெ.(n.) சமர்த்தன் (வின்.); skilful person.

*[Skt. sāmarthya > த. சாமர்த்தியன்]*

**சாமரபுட்பம்** *šāmara-puḍpam,* பெ.(n.) 1. கமுகு; areca palm. 2. மாமரம்; mango tree.

*[Skt. cāmara-puṣpa > த. சாமரபுட்பம்]*

**சாமலிகபத்திரம்** *šāmalika-pattiram,* பெ.(n.) வாணிகக்குழுவினர் கூடிப் பங்குப் பொருள்களைப் பற்றிச் செய்து கொள்ளும் உடன்படிக்கையாவணம் (சுக்கிரநீதி. 94); agreement relating to the shares of the members of a trade guild.

*[Skt. sāayika> த. சாமலிகம்]*

**சாமவேதம்** *šāma-vētam,* பெ.(n.) நான்கு வேதங்களுள் கீதநடையான மூன்றாம் வேதம் (திவா.); the third of the four vēdas consisting of chants based on Rks.

*[Skt. sāma-vēda > த. சாமவேதம்]*

**சாமவேதி** *šāma-vēti,* பெ.(n.) 1. சாமவேதத்தை முதலில் படிப்பதற்கு உரிமை கொண்டவன்; person entitled to study šāma-vēda first. 2. சாமவேதமுணர்ந்தோன்; one who has studied the šāma-vēda. *"சந்தோகன் பவுழிய னைந்தழலோம்பு தைத்திரியன் சாமவேதி" (திவ். பெரியதி. 5, 5, 9).*

*[Skt. sāma-vēdin > த. சாமவேதி]*

**சாமளாதேவி** *śāmaḷa-tēvi,* பெ.(n.) **சாமளை** பார்க்க; see *śāmaḷai.*

[**Skt.** *syāmalā+p* > *த. சா*]

**சாமளை** *śāmaḷai,* பெ.(n.) கருநிறமுடைய மலைமகள்; Pārvati, as being of dark-green complexion. *"சாம்பவி சங்கரி சாமளை" (அபிராமி. 50).*

**த.வ. கரும்பச்சையம்மை**

[**Pkt.** *sāmala* > *த. சாமளை*]

**சாமாசி** *śāmāci,* பெ.(n.) 1. நடுநிலையாளன் (மத்தியத்தன்); mediator, arbitrator.2. தூதன் (வின்.); messenger, envoy. 3. சுற்றாய்வு, கலந்தாய்வு (ஆலோசனை) (யாழ்.அக.); deliberation.

[**Skt.** *sāmājika* > *த. சாமாசி*]

**சாமாசிகம்** *śāmāśikam,* பெ.(n.) நடுநிலை (மத்தியஸ்தம்); arbitration, mediation.

**சாமாஞ்சி** *śāmāñji,* பெ.(n.) **சாமாசி 3** (யாழ்.அக.) பார்க்க; see *śāmāsi.*

**சாமாதி** *śāmāti,* பெ.(n.) **சாமாசி** (R) பார்க்க; see *śāmāśi.*

**சாமாநதி** *śāmānati,* பெ.(n.) பச்சையாறு (நாமதீப. 528); the river *paccaiyāṟu.*

*[சாமா+நதி]*

[**Skt.** *śyāmā+* > *த. சாமா*]

**சாமார்த்தியம்** *śāmārttiyam,* பெ.(n.) **சாமர்த்தியம்** (கொ.வ.) பார்க்க; see *śāmarttiyam.*

**சாமால்பண்ணு-தல்** *śāmāl-paṇṇu-,* 12 செ.குன்றாவி.(v.t.) பொதுக்கட்டுதல்; to deposit with a mediator.

*[சாமால்+பண்ணு]*

[**H.** *sambhālnā+* > *த. சாமால்*]

**சாமான்**[1] *śāmāṉ,* பெ.(n.) (ஓர் இடத்திற்கு எடுத்துச் செல்லக்கூடிய) அன்றாடப் புழக்கத்துக்குத் தேவையான பொருள்; ஒரு செயலைச் செய்வதற்குப் பயன்படும் பொருள் (manufactured) goods; articles; items. *'மரச் சாமான்கள் விற்கும் கடை; வெள்ளையடிப்பதற்குத் தேவையான சாமான்கள் வாங்கிவிட்டாயா'.*

**த.வ. பொருள்**

[**U.** *sāmān* > *த. சாமான்*]

**சாமான்**[2] *śāmāṉ,* பெ.(n.) பண்டம் (கொ.வ.); goods, furniture, articles.

[**U.** *sāmān* > *த. சாமான்*]

**சாமானட்டவணை** *śāmāṉ-aṭṭavaṇai,* பெ.(n.) சரக்கு அனுப்புவோன் அவற்றை ஏற்றுக் கொள்வோனுக்கு அனுப்புஞ் சரக்கு விவரச் சீட்டு; (m.navi. 123) invoice.

*[சாமான்+அட்டவணை]*

[**U.** *sāmāṉ* > *த. சாமான்*]

**சாமானம்** *śāmāṉam,* பெ.(n.) சாமான் (இ.வ.); article.

*[சாமான் > சாமானம்]*

**சாமானாதிகரணியம்** *śāmāṉāti-karaṇiyam,* பெ.(n.) சமானாதிகரண தொடர்பு (சம்பந்தம்) (வேதா. சூ. 117, உரை); *śamāṉātikaraṇa-śampantam.*

[**Skt.** *sāmānādhi+karaṇya* > *த. சாமானாதிகரணியம்*]

**சாமானிடாப்பு** *śāmāniḍāppu,* பெ.(n.) சாமான்களின் விவரப்பட்டிகை (புதுவை வழக்கு); inventory of goods.

**சாமானியசுரம்** *śāmāṉiya-śuram,* பெ.(n.) ஒரு வகைக் காய்ச்சல் (இ.வ.); pyrexia.

*[சாமான்யம்+சுரம்]*

[**Skt.** *sāmānya*> *த. சாமானியம்*]

**சாமானியம்** *śāmāṉiyam,* பெ.(n.) 1. பொது commonness, university, opp. to vicēṣam. 2. ஏழு பதார்த்தங்களுள் ஒன்றானதும் நித்தியமாய் ஒன்றாய்ப் பலவற்றில் ஒருங்கு சேர்தலையுடையதுமான சாதியென்னும் பதார்த்தம் (தருக்கசங்.2); generality, common characteristics, considered eternal, one and intimately connected with several objects, one of seven patārttam. q.v. 3. பெறுதற்கு எளியது; that which is easy

of attainment. 4. முழுமை; all, whole. *"சாமானியமுங் கொண்டு வந்தாற் செய்கிறேன்" (வின்.).*

த.வ. பொது

*[Skt. sāmānya > த. சாமானியம்]*

**சாமானியன்** *šāmāṉiyaṉ,* பெ.(n.) 1. இயல்பான ஆற்றலுடைய (சாதாரண சத்தியுள்ள) மனிதன்; man of ordinary capacity. 2. தன் சாதியில் மட்டமானவன்; person of low rank in a caste.

த.வ. பொதுவன்

*[Skt. sāmānya > த. சாமானியன்]*

**சாமானியை** *šāmāṉiyai,* பெ.(n.) குணம் செயல்களாற் பிரிக்கப்பட்ட மூவகைப் பெண்டிருள் ஒருவகையினர் (சுக்கிரநீதி. 212); one of the three kinds of women classed according to their character and conduct.

*[Skt. sāmānyā > த. சாமானியை]*

**சாமி¹** *šāmi,* பெ.(n.) 1. கடவுள்; Lord, the supreme being. 2. முருகன் (பிங்.); Murugan. *"சாமி தாதை" (தேவா. 64ύ, 9).* 3. அருகன் (பிங்.); Arhat. 4. தலைவன்; chief, chieftain. *"சாமி நன்கு பாடினான்" (சீவக. 2038).* 5. குரு (பிங்.); guru, spiritual preceptor. 6. மூத்தோன் (திவா.); elder, senior, elder brother. 7. மதிப்புறவு (மரியாதை) அன்பு முதலியன குறித்து அழைக்குஞ் சொல்; a term of respectful address, of endearment.

*[Pkt. sāmi > த. சாமி]*

**சாமி²** *šāmi,* பெ.(n.) தலைவி (பிங்.); lady, mistress.

*[Skt. svāmini > த. சாமி]*

**சாமி³** *šāmi,* பெ.(n.) 1. பொன் (பிங்.); gold. 2. செல்வம் (சூடா.); wealth.

*[Skt. cāmikara > த. சாமி]*

**சாமி⁴** *šāmi,* பெ.(n.) **சாமை** (j) பார்க்க; see *šāmai.*

**சாமிகாரியம்** *šāmi-kāriyam,* பெ.(n.) 1. முதலாளியி (எசமான)னுடைய வேலை; master's business. *"சேவகர் தமக்கெலாம் சாமிகாரியமே பெலம்" (குமரே. சத. 25).* 2. தெய்வத்தின் வேலை; God's business.

*[சாமி + காரியம்]*

*[Pkt. šāmi> த. சாமி]*

**சாமிகும்பிடு-தல்** *šāmi-kumbiḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. கடவுளை வழிபடுதல்; to worship a deity. 2. தெய்வ வழிபாடு நடத்துதல் (எங்களூர். 95); to conduct the worship of a deity.

*[சாமி + கும்பிடு-,]*

**சாமிசெய்-தல்** *šāmišey-,* 1 செ.கு.வி.(v.i.) 1. வற்கட (பஞ்ச)கால முதலியவற்றில் தேவதைகட்கு திருவிழா (உற்சவம்) நடத்துதல்; (J) to celebrate festival for village deities in times of sickness pastilence etc.

*[சாமி + செய்-,]*

**சாமித்துரோகம்** *šāmitturōkam,* பெ.(n.) முதலாளிக்கு இரண்டகம் (எசமானத் துரோகம்); treachery. *"சாமித்துரோகஞ் செய்த" (இராமநா. கிட்கி. 17).*

*[சாமி + துரோகம்]*

**சாமிநாதன்** *šāmi-nādaṉ,* பெ.(n.) முருகக் கடவுள் (சிவனது குரு) இறைக்குருவன்; Murugan, as the Guru of Šiva.

த.வ. இறைநம்பி

**சாமிபோகம்** *šāmipōgam,* பெ.(n.) **சுவாமிபோகம்** (C.G.) பார்க்க; see *šuvāmipōkam.*

**சாமியம்¹** *šāmiyam,* பெ.(n.) உணவு (போசனம்) (யாழ்.அக.); food.

*[Skt. cāmya > த. சாமியம்]*

**சாமியம்²** *šāmiyam,* பெ.(n.) ஒப்புமை; resemblance, equality.

*[Skt. sāmya > த. சாமியம்]*

**சாமியம்²** *šāmiyam,* பெ.(n.) **சுவாமியம்** (R.T.) பார்க்க; see *šuvāmiyam.*

*[Skt. svāmya > த. சாமியம்]*

**சாமியன்** *šāmiyan*, பெ.(n.) பிறர் கடனுக்கு ஈடு நிற்போன் (யாழ்.அக.); one who stands surety for another's debt.

**சாமியாடி** *šāmiyādi*, பெ.(n.) தெய்வம் ஆவேசிக்கப் பெற்றவ–ன்–ள் (இ.வ.); a devil - dancer.

**த.வ.** மருளாடி

*[சாமி + ஆடி]*

**சாமியாடு–தல்** *šāmi-y-ādu-*, 5 செ.கு.வி.(v.i.) தெய்வாவேசத்தால் குறி சொல்லுதல் (கொ.வ.); to dance under inspiration of a demon or deity and give oracular responses.

**த.வ. மருளாடுதல்**

*[சாமி + ஆடு–,]*

**சாமியார்** *šāmiyār*, பெ.(n.) 1. துறவி (சன்னியாசி); secetic. *'ஊருக்குப் புதிதாக வந்திருக்கும் சாமியாரின் மகிமையைப் பற்றி எங்கும் பேச்சு'.* 2. பாதிரியார்; clergyman, parish priest. *'சாமியாரிடம் பாவமன்னிப்புக் கேட்டான்'.*

*[சாமி > சாமியார்]*

**சாமியோடு** *šāmi-y-ōdu*, பெ.(n.) ஒரு வகை ஓடு; (Nāñ) a kind of tile.

*[சாமி + ஓடு]*

**சாமிலாத்து** *šāmilāttu*, பெ.(n.) தனித் தனியாகப் பிரிக்கப்படாமல் ஊர்ப் பொதுவாக துய்க்கப்பட்டு ஆவணவாயிலாகஇன்னாருக்கு இவ்வளவென்று வரையறுக்கப்பட்ட விளை நிலம்; (R.T) village land held in common, the produce being enjoyed in specified shares.

*[U. shāmilāt > த. சாமிலாத்து]*

**சாமிலாத்பஞ்சர்** *šāmilāt-pañšar*, பெ.(n.) **சாமிலாத்து** பார்க்க; see *šāmilāttu.*

*[U. shāmilāt+ū.banjar > த. சாமிலாத்பஞ்சர்]*

**சாமிகரம்** *šāmikaram*, பெ.(n.) பொன் (பிங்.); gold.

*[Skt. cāmikara > த. சாமீகரம்]*

**சாமீபம்** *šāmīpam*, பெ.(n.) 1. அண்மை, அருகு (சமீபம்); proximity, nearness. 2. நான்கு பதவிகளுள் கடவுளை அணுகியிருக்கும் நிலை; (šaiva) the state of being near to God, one of four patavi, q.v. *"சாமீப தொண்டர் பெருமாளே" (திருப்பு. 1140).*

**சாமீன்கத்து** *šāmīn-kattu*, பெ.(n.) **சாமீன்பத்திரம்** (வின்.) பார்க்க; see *šāmīn-pattiram.*

**சாமீன்தார்** *šāmīntār*, பெ.(n.) பிணையாளி; surety, bail.

**சாமீன்பத்திரம்** *šāmīn-pattiram*, பெ.(n.) பிணைச்சீட்டு; security-bond, bail-bond.

*[U. zamin > த. சாமீன்]*

**சாமுசித்தன்** *šāmušittan*, பெ.(n.) முற்பிறவி நல்வினையால் ஞானத்துடன் பிறந்து சிவனிடத்தில் பத்தி செய்வோன் (சி.சி. பாயி. 3, சிவஞா.); devotee of Šiva with inborn enlightenment owing to the influence of his meritorious deeds in previous births.

*[Skt. sam-siddha > த. சாமுசித்தன்]*

**சாமுத்திரிகம்** *šāmuttirikam*, பெ.(n.) மெய் இலக்கண நூல்; physiognomy, art of interpreting marks on the body.

**த.வ. உறுப்பமைவுநூல், மேனி இலக்கணநூல்**

*[Skt. sāmu-drikā > த. சாமுத்திரிகம்]*

**சாமுத்திரிகாலட்சணம்** *šāmuttrikā-latšanam*, பெ.(n.) பெண்ணுக்கோ ஆணுக்கோ இருக்க வேண்டிய அங்க அமைப்பு; physical features of a beautiful woman or handsome man., physiognomy.

**த.வ. மேனி இலக்கணம்.**

**சாமுத்திரிகை** *šāmuttirikai*, பெ.(n.) **சாமுத்திரிகம்** (வின்.) பார்க்க; see *šāmuttirigam.*

**சாமோபாயம்** *šāmōpāyam*, பெ.(n.) **சாமம்**[2] 3 பார்க்க; see *šāmam.*

*[Skt. sāmō-pāya > த. சாமோபாயம்]*

**சாமோற்பலம்** *šāmōṟ-palam*, பெ.(n.) யானை நுதலில் அணியும் சிந்தூரம் (பிங்.); decorative red mark on the elephant's forehead.

*[perh. sāmōdbhavā > த. சாமோற்பலம்]*

**சாமோற்பவை** *šāmōṟpavai*, பெ.(n.) பெண் யானை (உரி.நி.); female elephant.

*[Skt. sāmōdbhavā > த. சாமோற்பவை]*

**சாய்கை** *šāykai*, பெ.(n.) தங்குமிடம்; house, rest house.

*[U. jāgā > த. சாய்கை]*

**சாய்மணைக்கதிரை** *šāymaṇa-k-katirai*, பெ.(n.) சாய்வு நாற்காலி (இலங்.); easy chair.



**சாய** *šāya*, பெ.(n.) தேயிலை; tea.

*[U. chā > த. சாய]*

**சாயகம்** *šāyakam*, பெ.(n.) அம்பு; arrow. *"இரட்டிச் சாயகங்கள்" (கம்பரா. மகரக்கண்ணன். 18).*

*[Skt. sāyaka > த. சாயகம்]*

**சாயபு** *šāyapu*, பெ.(n.) முகமதியர்க்கும் மராட்டிரர்க்கும் உரிய பட்டப்பெயர்; title of Muhammadans and *Mahārāṣtras*.

*[U. šāhib > த. சாயபு]*

**சாயம்பு** *šāyampu*, பெ.(n.) **சுவாயம்புமனு** பார்க்க; see *šuvāyampumaṉu*. *"சாயம்பு மைந்தன்" (கந்தபு. அண்டகோ. 26).*

*[Skt. svāyambhuva > த. சாயம்பு]*

**சாயர்** *šāyar*, பெ.(n.) 1. நிலவரி நீங்கிய (மாமூல்) தீர்வை (C.G.) customs, duties; current or customary sources of revenue other than land tax. 2. தீர்வை வசூலிப்பவர்; custom-house officer.

*[U. šāir > த. சாயர்]*

**சாயரட்சை** *šāya-ratcai*, பெ.(n.) 1. மாலை வேளை; சாயுங்காலம்; evening 2. கோயிலில் நடக்கும் மாலைப்பூசை; evening services in temple.

**சாயனபோகம்** *šāyaṉa-pōkam*, பெ.(n.) நெடுவரை (தீர்க்கரேகை) (C.G.); longitude.

*[Skt. sāyana+bōgam > த. சாயனபோகம்]*

**சாயா** *šāyā*, பெ.(n.) தேநீர் (பே.வ.); tea.

**சாயாதனயன்** *šāyā-taṉayaṉ*, பெ.(n.) காரி (சனி) (வின்.) (சாயையின் மகன்); saturn, as son of *cāyātēvi*.

*[Skt. chāyā+danayan > த. சாயாதனயன்]*

**சாயாதேவி** *šāyā-tēvi*, பெ.(n.) கதிரவன் (சூரியன்) மனைவியருளொருத்தி; a consort of the sun. *"சாயாதேவியைத் தழீஇயினானே" (காசிக. செவ்வாய். 22).*

*[Skt. chāyā+dēvi > த. சாயாதேவி]*

**சாயாபுத்திரன்** *šāyā-puttiraṉ*, பெ.(n.) **சாயாதனயன்** (வின்.) பார்க்க; see *šāyā-taṉayaṉ*.

**சாயாபுருடன்** *šāyā-puruḍaṉ*, பெ.(n.) நிழல்வடிவமாகத் தோன்றுபவன்; person in the form of a shadow. *"சுழிகின்ற சாயா புருடனைப் போல" (திருமந். 2587).*

**சாயாலகராகம்** *šāyālakarākam*, பெ.(n.) **சாலகராகம்** பார்க்க (திருவாலவா. 54, 13, அரும்.); see *šālakarākam*.

**சாயான்னம்** *šāyāṉṉam*, பெ.(n.) 1. மாலைப்பொழுது; evening. 2. மாலையிற் செய்யும் வழிபாடு; evening worship. *"பின்னைத் திருந்தவே சாயானஞ்செய்" (சைவச. பொது. 222).*

*[Skt. sāyāhna > த. சாயான்னம்]*

**சாயி¹** *šāyi,* பெ.(n.) மை; ink (C.G.).

*[U. siyāhi > த. சாயி]*

**சாயி²** *šāyi,* பெ.(n.) படுத்துக்கிடப்பவன்; recling person used only in compounds, as in சேஷசாயி.

த.வ.படுக்கையன்

*[Skt. šāyin > த. சாயி]*

**சாயித்தியம்** *šāyittiyam,* பெ.(n.) **சாகித்தியம்** பார்க்க; see *šākittiyam.*

*[Skt. sāhitya > த. சாயித்தியம்]*

**சாயிதான்** *šāyitān,* பெ.(n.) மைக்கூடு; inkstand (C.G.).

*[U. siyāhi+dān > த. சாயிதான்]*




**சாயுச்சியக்காரர்** *šāyacciya-k-kārar,* பெ.(n.) இலிங்கதாரிகள் (வின்.) (சாயுச்சியத்தை விரும்புபவர்); *Lingāyats,* as seeking absorption into the deity.

*[சாயுச்சியம்+ காரர்]*

*[Skt. sāyujya > த. சாயுச்சியம்]*

**சாயுச்சியம்** *šāyucciyam,* பெ. (n.) 1. சீவேச்சுவரர்களின் ஒப்புமை; equality or intimate union with God. 2. பதவி நான்கனுள் சீவான்மா பரமான்மாவுடன் ஐக்கியமாகும் நிலை; (šaiva) condition in which the soul becomes absorbed in god head, the highest state of bliss, one of four qatavi, q.v. *"சாரூப்பிய சாயுச்சியமென்று" (சி.சி.8. 18).*

*[Skt. sāyujya > த. சாயுச்சியம்]*

**சார்ங்கபாணி** *šārnka-pāni,* பெ.(n.) சாரங்க பாணி பார்க்க; see *sāranga-pāni. "சங்க வண்ண மன்ன மேனி சார்ங்கபாணி யல்லையே" (திவ். திருச்சந். 15).*

*[Skt. šārnga+pāni > த. சார்ங்கபாணி]*

**சார்பார்** *šārpār,* பெ.(n.) நான்காய் வகுக்கை (இ.வ.); division into four parts.

*[U. cārpāra > த. சார்பார்]*

**சார்வபூமம்** *šārvapūmam,* பெ.(n.) **சார்வபௌமம்** (சங்.அக.) பார்க்க; see *šārvapaumam.*

**சார்வபூமன்** *šārvapūman,* பெ.(n.) **சார்வபௌமன்** பார்க்க; see *šārvapauman. "தண்ணளிசேர் தேவராசார்வபூமா" (சிவரக. கணபதிகுமார. 4).*

**சார்வபௌமம்** *šārvapaumam,* பெ.(n.) எண்டிசை யானைகளில் ஒன்றாகிய வட திசையானை (சூடா.); the male elephant of the northern region, one of *asta-tik-kajam.* q.v.

*[Skt. sārvabhauma > த. சார்வபௌமம்]*

**சார்வபௌமன்** *šārva-pauman,* பெ.(n.) மாமன்னன் (சக்கரவர்த்தி); emperor, universal monarch.

*[Skt. sārvabhauma > த. சார்வபௌமன்]*

**சார்வாகம்** *šārvākam,* பெ.(n.) காட்சியே அளவையாவதென்றும் நிலம், நீர், தீ, வெளியெனப் பூதம் நான்கே யென்றும் அவற்றது புணர்ச்சி விசேடத்தால் தோன்றிப் பிரிவால் மாய்வதாய் உடம்பின் கண்ணே அறிவு மதுவின் களிப்புப் போல வெளிப்பட் டழியுமென்றும், மறுமையில்லையென்றும், உடலே (சரீரமே) ஆதன் (ஆன்மா) வென்றும், கடவுள் இல்லையென்றும், இன்பமும் பொருளுமே குறிக்கோள் (புருஷார்த்தங்)க ளென்றும் சொல்லும் உலகாயதமதம் (பிரபோத.); the materialistic philosophy of *cārvāka* which says that perception is the only source of knowledge, that earth, water, fire and air are the only elements,

that life is produced or annihilated according as the elements combine or separate, that there is no life beyond, that there is no soul, that God does not exist and that accumulation of wealth and enjoyment of pleasures are the only goal of life.

*[Skt. cārvāka > த. சார்வாகம்]*

**சார்வாகன்** *šārvākaṉ*, பெ.(n.)1. உலகாயத மதத்தை நிறுவியவன்; founder of materialistic philosophy. 2. சார்வாக மதத்தவன்; follower of *cārvāka* philosophy. *"தேகமே ஆன்மாவென்பவன் சார்வாகன்" (த.நி.போ. பக். 259).*

*[Skt. cārvāka > த. சார்வாகன்]*

**சாரங்கபாணி** *šāraṅka-pāṇi*, பெ.(n.) சாரங்கத்தைக் கையிலுடைய திருமால்; Tirumal, as holding *saraṅgam* in his hand. *"சாரங்க பாணியே யிவனென் றோதுவார்" (பிரமோத். 13, 65).*

**த.வ.விற்கையன்**

*[Skt. šārṅga-pāṇi > த. சாரங்கபாணி]*

**சாரசன்** *šārašaṉ*, பெ.(n.) கள்ளக்கணவனின் மகன்; பொதுமகன் (சோரபுத்திரன்) (சங்.அக.); bastard, son begotten in adultery.

**த.வ.பரத்தை மகன்**

*[Skt. jāra+ja > த. சாரசன்]*

**சாரசாதன்** *šāra-šātaṉ*, பெ.(n.) **சாரசன்** (சங்.அக.) பார்க்க; see *šārašaṉ*.

*[Skt. jāra+jāta > த. சாரசாதன்]*

**சாரசியம்** *šārašiyam*, பெ.(n.) இனிமை (இ.வ.); pleasantness, as of speech.

*[Skt. sārasya > த. சாரசியம்]*

**சாரசுவதம்** *šārašuvadam*, பெ.(n.) ஐங் (பஞ்ச)கௌடங்களுள் ஒன்றாய் வட இந்தியாவிலுள்ள நாடு (யாழ்.அக.); an ancient district in northern India, one of *pañca-kauṭam*, q.v.

*[Skt. sārasvata > த. சாரசுவதம்]*

**சாரட்டு** *šāraṭṭu*, பெ.(n.) குதிரை பூட்டிய வண்டிவகை; horse-carriage.

**த.வ.பரிவண்டி**

*[U. chariot > த. சாரட்டு]*



**சாரணம்** *šāraṇam*, பெ.(n.) 1. கொடியார் கூந்தல்; seeta's thread - cuscata reflexa. 2. மாழை (உலோகங்)களை பற்பமாக்கல்; the calcination of metals into oxides. 3. ஒன்றின் சாரத்தை மற்றொன்று கவர்ந்து கொள்ளுகை; drawing of the essence by one from another. 4. இரசத்தைக் கட்டி சாரணை தீர்த்தல்; the act of animating a consolidated mercurial pill. 5. வாலையிடல்; the distilling process. (சா.அக.).

**சாரணரியக்கம்** *šāraṇar-iyakkam*, பெ.(n.) தங்களைத் தாங்களே காத்துக் கொள்ளுதல், பிறருக்கு உதவுதல் போன்ற பழக்கங்களையும் பண்புகளையும் பள்ளி மாணவர்களிடையே ஏற்படுத்தும் இயக்கம்; scout movement.

*[சாரணர் + இயக்கம்]*

**சாரணன்** *šāraṇaṉ*, பெ.(n.) செய்நஞ்சு வகை; a prepared arsenic. (சா.அக.)

**சாரணியர்** *šāraṇiyar*, பெ.(n.) சாரணரியக்கச் சிறுமியர்; girl guides.

*[சாரணர் ஆ.பா. > சாரணியர் பெ.பா]*

**சாரத்தின்சத்துரு** *šārattiṉ-šatturu*, பெ.(n.) முட்டை (வின்.); egg, as having neutralising property.

*[Skt. kṣāra + Satru > த. சாரத்தின் சத்துரு]*

**சாரத்துவம்** *šārattuvam,* பெ.(n.) பரத்தைமை (வின்.); adultery.

*[Skt. jāra-tva > த. சாரத்துவம்]*

**சாரதப்பாட்டு** *šārada-p-pāṭṭu,* பெ.(n.) ஒருவகை இசைப்பாட்டு (வின்.); a kind of ode in rhythamical verses sung to melodious tune.

*[சாரதம்² + பாட்டு]*

*[Skt. sārasa> த. சாரதம்]*

**சாரதம்**[1] *šāradam,* பெ.(n.) பூதம் (பிங்.); goblin, demon.

*[Perh. sādhaka > த. சாரதம்]*

**சாரதம்**[2] *šāradam,* பெ.(n.) 1. இன்னோசை; melodious sound, sweet note. 2. **சாரதப் பாட்டு** பார்க்க; see *šārata-p-pāṭṭu.*

*[Skt. sārasa > த. சாரதம்]*

**சாரதர்** *šāratar,* பெ.(n.) பூதக்கூட்டத்தார் (பூதகணத்தார்); goblin hosts. *"மிகுசாரத ரிப்பொழுதுஞ் சோர்வுற்றனர்" (சிவரக. நந்திகண. 12).*

[Perh. sādhaka > *த. சாரதர்]*

**சாரதா**[1] *šāradā,* பெ.(n.) 1. மாகாளி; false sarsaparilla. 2. ஓர் ஆயுள் வேதநூல்; an ayurvedic science. 3. நீர்த் திப்பிலி; water long-pepper. 4. ஏழிலைப் பாலை; seven leaved milk plant - Alstonia Scholaris. (சா.அக.).

**சாரதா**[2] *šāratā,* பெ.(n.) கலைமகள் (சரசுவதி); Sarasvati.

*[Skt. šāradā > த. சாரதா]*

**சாரதாகற்பம்** *šāradā-karpam,* பெ.(n.) மனோசிலையைக் கொண்டு செய்யும் ஒரு காய கற்பம்; a medicine prepared with the aid of red sulphur, for purpose of rejuvenation. (சா.அக.).

**சாரதி**[1] *šāradi,* பெ.(n.) 1. ஆடாதோடை; malabar winer cherry - Audhatoda vesica. 2. துருசு; blue vitriol. 3. சிறுகுமிழ்; small cashmere tree - Gmelina asiatica. 4. ஓரிதழ்த் தாமரை; one-petal lotus - Ionidium suffruticosum. (சா.அக.)

**சாரதி**[2] *šāradi,* பெ.(n.) புலவன் (பிங்.); poet, learned man.

*[Skt. višārada > த. சாரதி]*

**சாரதி**[3] *šāratd,* பெ.(n.) தேர்ப்பாகன்; charpoteer, coachman, driver. *"சாரதி தொழுது சொன்னான்" (கம்பரா. இராவணன் வதை. 10).*

*[Skt. sārathi > த. சாரதி]*

**சாரதை** *šāradai,* பெ.(n.) **சாரதா** பார்க்க; see *šāratā.*

**சாரந்தா** *šārantā,* பெ.(n.) கம்பிக் கருவி வகை; a stringed musical instrument played with a bow.

*[U. sārindā > த. சாரந்தா]*

**சாரப்பெண்** *šāra-p-peṉ,* பெ.(n.) பரத்தை (வேசி) (சிவரக. அபுத்தி. 9); harlot.

*[சாரம் + பெண்]*

*[Skt. jārā > த. சாரம்]*

**சாராத்தியம்** *šārāttiyam,* பெ.(n.) தேர் செலுத்துந் தொழில்; profession of charioteering or coach-driving.

*[Skt. sārathya > த. சாராத்தியம்]*

**சாரிசம்**[1] *šārišam,* பெ.(n.) **சாரசம்** பார்க்க; see *šārašam.*

*[Skt. sarasa > த. சாரிசம்]*

**சாரிசம்**[2] *šārišam,* பெ.(n.) கறியுப்பு (யாழ்.அக.); common salt.

*[Skt. kṣāraka > த. சாரிசம்]*

**சாரிசாதன்** *šārišādaṉ,* பெ.(n.) மான்மணத்தி (கஸ்தூரி) மான் (யாழ்.அக.); musk deer.

*[Perh. mārjārijāta > த. சாரிசாதன்]*

**சாரித்திரம்** *šārittiram,* பெ.(n.) 1. ஒழுக்கம்; conduct. *"சாரித்திரமாகிய நீரை வற்றாமற் பாய்த்தி" (சீவக. 962, உரை).* 2. வரலாறு (வின்.); history, life.

*[Skt. cāritra > த. சாரித்திரம்]*

**சாரிதம்** *šāridam,* பெ.(n.) **சாரீரம்** (J) பார்க்க; see *šārīram.*

**சாரீர** *šārira*, பெ.(n.) உடம்பைப் பற்றிய; relating to the body : physical.

**சாரீரகம்[1]** *šāriragam*, பெ.(n.) 1. உடல் (சாரீரம்); body. 2. உடற்கூறு (அங்காதிபாதம்); anatomy. 3. உடம்பின் தொடர்பானது (சம்பந்தமானது); that which relates to the body. (சா.அக.)

**சாரீரகம்[2]** *šārirakam*, பெ.(n.) 1. நூற்றெட்டுச் சிற்றிலக்கியங்களுள் ஒன்று (சங்.அக.); an upaniṣad one of 108. 2. **பிரமசூத்திரம்** (சங்.அக.) பார்க்க; see *piramašūttiram*. 3. உடல் தொடர்பானது; that which pertains to the body. *"சாரீரக மாவது குல்மம் காசம் முதலிய வியாதிகளால் வருவது" (சிவப்பிர.).*

*[Skt. šariraka > த. சாரீரகம்]*

**சாரீரசம்பத்து** *šārira-šampattu*, பெ.(n.) **சாரீரநயம்** பார்க்க; see *šāriranayam*. *'இவனுடைய சாரீரசம்பத்தை என்னென்று சொல்வேன்'.*

*[சாரீரம் + சம்பத்து]*

**சாரீரசுரம்** *šārirašuram*, பெ.(n.) உடம்பில் கதகதப்பை யுண்டாக்கிப் பிறகு வரும் காய்ச்சல்; fever preceded by a glowing sensation of the body. (சா.அக.).

*[சாரீரம் + சுரம்]*

**சாரீரசூத்திரம்** *šārira-šūttiram*, பெ.(n.) 1. ஒரு வடமொழி ஆயுள் வேதநூல்; an ayurvedic science written in Sanskrit. 2. மனித உடம்பின் அமைப்பையும் வேறுபாடுகளையும் பற்றி சொல்லும் நூல்; the science which deals with the structure and the phenomena of the human body - physiology. (சா.அக.)

*[சாரீரம் + சூத்திரம்]*

**சாரீரநயம்** *šārira-nayam*, பெ.(n.) குரலின் மேம்பாடு; excellence in the quality of voice. *'இவனுக்குச் சாரீரநயம் உண்டு'.*

*[சாரீரம் + நயம்]*

**சாரீரம்[1]** *šāriram*, பெ.(n.) 1. பாடுதற்குரிய குரல்; singing voice. 2. **சாரீரகம் 3** பார்க்க; see *šāriragam*. *"சாரீரமாவது குல்மம் ............ சித்தியாதிகள்" (சி.சி.2, 39, சிவாக்.)*

த.வ. குரல்வளம்

*[Skt. šārira > த. சாரீரம்]*

**சாரீரம்[2]** *šāriram*, பெ.(n.) 1. உடல்; body. 2. இடைக்காடர் செய்த தமிழ் மருத்துவ நூல்; a treatise on medicine compiled in Tamil by Idaikkadar, a siddha. 3. உடல் தொடர் பானது; that which relates to the body. 4. ஆதன்; the soul. 5. குரல்; voice. 6. இனிய குரல்; sweet voice (in music) (சா.அக.)

**சாரீரவீணை** *šārira-viṇai*, பெ.(n.) சரீரமாகிய வீணை; body considered as guitar. *"யாதான்........ சாரீரவீணைக்குரிய நாவாலும் பாடிற்றோ" (சீவக. 658, உரை).*

*[சாரீரம் + வீணை]*

**சாரிலம்** *šārilam*, பெ.(n.) மலம்; excrement, feces.

**சாருகருணாடசாரங்கம்** *šāru-karuṇāḍa-šārangam*, பெ.(n.) பண் வகை (இராகவகை) (பரத. ராக. 104); a specific melody type.

**சாருலோசனம்** *šārulōšaṉam*, பெ.(n.) மான்; deer.

**சாருவர்ணி** *šāruvarṇi*, பெ.(n.) முதியார் கூந்தல், கொடியார் கூந்தல்; seeta's thread.

**சாருவாகன்** *šāruvāgaṉ*, பெ.(n.) **சார்வாகன்** பார்க்க; see *šārvāgaṉ*. *"நல்லவன் சாருவாகனான் சொலு நெறிக்கு" (தாயு. தேன்முகம். 9).*

*[Skt. cārvāka > த. சாருவாகன்]*

**சாரூப்பியம்[1]** *šārūppiyam*, பெ.(n.) பதவி நான்கனுள் கடவுளைப் போல் வடிவம் பெறுகை; (šaiva) a blissful condition in which a devotee obtains a form similar to God's one of four patavi, q.v. *"சன்மார்க்க முத்திகள் ......... சாரூப்பிய சாயுச்சியமென்று" (சி.சி.8, 18).*

த.வ. இறையுருவெய்தல்

*[Skt. sārupya > த. சாரூப்பியம்]*

**சாரூப்பியம்[2]** *šārūppiyam,* பெ.(n.) சிவாகம நூலின்படி சத்வ குணமாக விருக்கும் ஒரு பதவி; (in saiva philosophy) one of the four states i.e. the third state of bliss or beatitude : identity with the deity in form : assimilation to the deity. c.f. சாயுச்சியம். (சா.அக.)

**சாரூபம்[1]** *šārūpam,* பெ.(n.) 1. **சாரூப்பியம்** பார்க்க; see *šārūppiyam. "சாரூப தொண்டர்" (திருப்பு. 1140).* 2. இணக்கம் (வின்.); conformity.

*[Skt. sārūpa > த. சாரூபம்]*

**சாரூபம்[2]** *šārūpam,* பெ.(n.) பொன் (மூ.அ.); gold.

*[Skt. jātarūpa > த. சாரூபம்]*

**சாரூபம்[3]** *šārūpam,* பெ.(n.) 1. பொன்; gold. 2. **சாரூசம்** பார்க்க; see *šārušam.* 3. **சாரூப்பியம்** பார்க்க; see *šārūppiyam.* (சா.அக.).

**சாரூபமண்டலம்** *šārūpa-mandalam,* பெ.(n.) 1. கதிர் மண்டலம்; orb of the sun. 2. ஆகமப் படி வயிறு, இருதயம் இவ் விரண்டையும் குறிக்கும் உடம்பிலோர் தானம்; (In Agama Fhilosophy) that region in the human body referring to the stomach and the heart. (சா.அக.)

**சாரூரகம்** *šārūrakam,* பெ.(n.) **சாருசம்** (வின்.) பார்க்க; see *šārušam.*

*[Skt. cāru-rasa > த. சாரூரகம்]*

**சாரூரசம்[1]** *šārūrašam,* பெ.(n.) **சாருசம்** (வின்.) பார்க்க; see *šārūšam.*

*[Skt. cāru-rasa > த. சாரூரசம்]*

**சாரூரசம்[2]** *šārūrašam,* பெ.(n.) 1. கல்லுப்பு; crystallised sea-salt, salt in limps or masses. 2. **சாருசம்** பார்க்க; see *šārušam.* (சா.அக.)

**சாரேக்கிசம்** *šārēkkisam,* பெ.(n.) செய்த கண்ணாடி; a manufactured glass. (சா.அக.).

**சாரேகதம்** *šārēkatam,* பெ.(n.) சாம்பலுப் பிலிருந்து சாரத்தைப் பிரித்துத் தயாரிக்கப் படும் நஞ்சை மாற்றும் மருந்து,; an antidote prepared by extracting the alkaline particles from the ashes of plants. (சா.அக.)

**சாரேச்சம்** *šārēccam,* பெ.(n.) கடலுப்பு; sea-salt. (சா.அக.)

**சாரேஞ்சனம்** *šārēñšanam,* பெ.(n.) சாரம் சேர்ந்த அஞ்சனம்; an alkaline unguent. (சா.அக.).

**சாரேம்பு** *šārēmpu,* பெ.(n.) சாரத் திரவம்; an alkaline fluid. (சா.அக.)

**சாரைதோடம்** *šārai-tōdam,* பெ.(n.) சதையில் ஏற்படும் ஒரு நோய்; a skin disease. (சா.அக.)

**சாரோசி** *šārōši,* பெ.(n.) நவச்சாரம்; sal ammoniac - Hydrochlorate of ammonia. (சா.அக.)

**சால்அய்ந்தா** *šāl-ayntā,* பெ.(n.) அடுத்த ஆண்டு (வின்.); next year.

*[U. sāl-i-ā-yanda > த. சால்அயந்தா]*

**சால்குசத்தா** *šālkucaštā,* பெ.(n.) சென்ற ஆண்டு (இ.வ.); last year.

*[U. sāl-ē-guzashta > த. சால்குசத்தா]*

**சால்தி** *šālti,* பெ.(adj.) நடப்பிலுள்ள; current. *'சால்தி ரிகார்டு' (இ.வ.).*

*[mhr. cālatā > த. சால்தி]*

*[K. cālti > த. சால்தி]*

**சால்பசால்** *šālpašāl,* பெ.(n.) ஆண்டுதோறும் (வின்.); year by year.

*[U. sāl-basāl > த. சால்பசால்]*

**சால்சமாகர்ச்** *šāl-camā-karc,* பெ.(n.) ஆண்டு வரவு செலவு (P.T.L); annual receipts and expenditure.

*[U. sāljamakarj > த. சால்சமாகர்ச்]*

**சால்சாப்பு[1]** *šālcāppu,* பெ.(n.) சாக்குப் போக்கு, பொருத்தமற்ற ஒப்புரவு (சமாதானம்); lame excuse. *'உடம்பு சரியில்லை என்ற சால்ஜாப்பு' (பே.வ.).*

**சால்சாப்பு**[2] *šālcāppu,* பெ.(n.) 1. வினாவிடை; question and answer. 2. வினாவுக்கு விடை; answer. 3. சாக்குப் போக்கு, ஏதோ சால்சாப்பு சொல்லி சமாளிக்கப்பார்க்கிறான் (உ.வ.); lame excuse.

*[U. savā+jawāb > த. சால்சாப்பு]*

**சாலக்கு** *šālakku,* பெ.(n.) 1. போலிநடிப்பு, சாலாக்கு காட்டாதே; pretence, show. 2. தந்திரம், உன் சாலாக்கு என்னிடம் செல்லாது; cunning. 3. திறன் (சாமர்த்தியம்) (இ.வ.), இவன் சாலாக்குக்க காரன்; skill, cleverness.

*[U. cālak > த. சாலக்கு]*

**சாலக** *šālaka,* பெ.(n.) தாள வகைகளுளொன்று (சங்.சந். 47); a primary rāga.

**சாலகடங்கடர்** *šālakaḍaṅkaḍar,* பெ.(n.) அரக்கர் (சாலகடங்கடை யென்பவளிடம் தோன்றியவர்); Rākṣasas, as born of *sālaghaṭaṅghaṭā. "சாலகடங்கடர் மரபின்றையல்" (கம்பரா. சூர்ப்பண. 50).*

*[Skt. sālaghaṭaṅghaṭā > த. சாலகடங்கடர்]*

**சாலப்பு** *šālappu,* பெ.(n.) கொடிவகை; Indian jalap.

*[U. jālab > த. சாலப்பு]*

**சாலம்பபாடாணம்**[1] *šālampa-pāḍāṇam,* பெ.(n.) ஒரு வகை நஞ்சு (யாழ்.அக.); a kind of arsenic.

*[Skt. sālamba> த. சாலம்பம்]*

**சாலம்பபாடாணம்**[2] *šālampa-pāṣāṇam,* பெ.(n.) **சாலம்பபாடாணம்** பார்க்க; see *šālampa-pāḍāṇam.*

**சாலம்பம்** *šālampam,* பெ. (n.) பற்றுக் கோடுள்ளது; that which has a support. *"சாலம்பரகிதமான ............... சாந்தபத வ்யோமநிலை" (தாயு. திருவருள்வி. 3).*

*[Skt. sālamba > த. சாலம்பம்]*

**சாலர்** *šālar,* பெ.(n.) அலங்காரத் தொங்கல் (வின்.); decorative fringes of cloth, as of a tester.

*[U. jhālar > த. சாலர்]*



**சாலன்** *šālaṉ,* பெ.(n.) சாலிவாகனன் (யாழ்.அக.); *Cālivāhaṉa,* from whom the current epoch started.

*[Skt. šālivāhana > த. சாலன்]*

**சாலத்திரி** *šālattiri,* பெ.(n.) குதிரை மருத்துவன் (வின்.); horse-doctor.

*[U. sālotri > த. சாலத்திரி]*

**சாலாக்கியசிகிச்சை** *šālākkiyašikiccai,* பெ.(n.) உடம்பின் மேற் பகுதியில் உள்ள தலை, கண், காது, மூக்கு, தொண்டை முதலிய உறுப்புகளின் நோய்களைக் குறிப்பிட்டு ஆயுள் வேத முறைப்படி செய்யும் மருத்துவம்; an ayurvedic treatment accorded for diseases of the organs over the clavicular region, such as head, eye, ear, nose, throat etc.

**சாலாக்கியதந்திரம்** *šālākkiya-tantiram,* பெ.(n.) மார்பின் மேற் பகுதியாகவுள்ள தலையின் உறுப்புகளாகிய முகம், காது, கண், மூக்கு, வாய், தொண்டை இவைகளின் நோய்களைப் பற்றிக் கூறும் ஆயுள் வேத நூல்; an Ayurvedic treatise on the diseases of that portion of the body above the chest such as the face, eyes, ear, nose, mouth and the throat - surgery minor.

*[சாலாக்கியம்+தந்திரம்]*

**சாலாகர்** *šālākar*, பெ.(n.) ஆண்டிறுதி (வின்.); end of the year.

*[U. sālākhir > த. சாலாகர்]*

**சாலாக்கு** *šālākku*, பெ.(n.) **சாலக்கு** பார்க்க; see *šālakku*.

**சாலாங்கபாடாணம்** *šālāṅka-pāḍāṇam*, பெ.(n.) ஒரு பிறவிச் செய் நஞ்சு; a mineral poison, a kind of native arsenic.

**சாலாங்கம்** *šālāṅkam*, பெ. (n.) **சாலாங்கபாடாணம்** பார்க்க; see *šālāṅka-pāḍāṇam*.

**சாலாங்கி** *šālāṅki*, பெ.(n.) மரப்பாவை (யாழ்.அக.); wooden image.

**சாலாபாத்து** *šālāpāttu*, பெ.(n.) ஆண்டு தோறும்; annually, year by year (C.G).

*[U. šāl-ā-bād > த. சாலாபத்து]*

**சாலாமிசிரி** *šālāmiširi*, பெ.(n.) எகிப்து தேசத்துக் கிழங்குவகை; salep tuber of Eulophia of Egyptian origin.

*[U. šālēbmisr > த. சாலாமிசிரி]*

**சாலிகாநாதம்** *šālikānātam*, பெ.(n.) பூர்வமீமாஞ்சகருள் சீவான்மாவினின்று பரமான்மா வேறில்லை என்னுங் கொள்கை யினரின் மதம்; school of pūrva-mimā,msakas who do not accept the postulate of a paramātmanas distinct from the jivātman. *"குருமதம் பாட்டம் சாலிகா நாதக் கொள்கை" (பிரபோத. 11, 6).*

*[Skt. šālika-nātha > த. சாலிகாநாதம்]*

**சாலிகோத்திரம்** *šāli-kōttiram*, பெ.(n.) குதிரை (யாழ்.அக.); horse.

*[Skt. šāli-hōtra > த. சாலிகோத்திரம்]*

**சாலியானா** *šāliyāṉā*, பெ.அ.(adj.) ஆண்டுதோறும்; (C.G.) annual, yearly.

*[U. sāliyāna > த. சாலியானா]*

**சாலேசரம்**[1] *šālēšaram*, பெ.(n.) 1. மாந்தர் களுக்கு 45–50 வயதில் கண்ணொளி மழுங்கி பார்வை குறைந்து தோன்றலாகிய வெள்ளெழுத்து; error of refraction in men of 45-50 year of age in which the eye-sight, from growing inelasticity of the lens is consequently diminished. In popular language it is called old sight-presbyopia. 2. கண் புகைச்சல்; short-sight-Amanrosis. 3. பார்வைக்குறைபாடு; imperfect vision. (சா.அக.)

**சாலேசரம்**[2] *šālēšaram*, பெ.(n.) வெள் ளெழுத்து (நாற்பதாம் வயதில் வருவது) (இ.வ.); cataract, Hypermetrophia, as usually appearing in the 40th year of a person.

*[U. cālisā > த. சாலேசரம்]*

**சாலோக்கியம்** *šālōkkiyam*, பெ.(n.) **சாலோகம்** பார்க்க; see *šālōkam*. *"சன்மார்க்க முத்திகள் சாலோக்கிய சாமீப்பியம்" (சி.சி. 8, 18).*

*[Skt. sālōkya > த. சாலோக்கியம்]*

**சாலோகம்** *šālōkam*, பெ.(n.) நான்கு பதவிகளுள் கடவுளுடன் ஓரிடத்தில் உறைகை; the blissful condition of being in God's world one of four patavi q.v. *"சாலோக தொண்டர்" (திருப்பு. 1140).*

*[Skt. sālōka > த. சாலோகம்]*

**சாவ்கார்** *šāvkār*, பெ.(n.) பணம் கொடுக்கல் வாங்கல் செய்பவன்; native banker, sowcar.

**த.வ. பணப்பேரத்தன்**

*[pkt.sāvakār > த. சாவ்கார்]*

**சாவகாசம்** *šāvakāšam*, பெ.(n.) ஒழிவு, ஓய்வுநேரம் (சௌகரியசமயம்); leisure, opportunity, convenience.

**த.வ. ஏந்து நேரம்**

*[Skt. sāvakāša > த. சாவகாசம்]*

**சாவகாசமாய்** *šāvakāšamāy*, வி.அ.(adj.) விரைவின்றி; leisurely, slowly. *'சாவகாசமாய் வந்தான்'.*

**சாவகாசவிதி** *šāvakāša-viti*, பெ.(n.) காட்டிய இடத்தில் மட்டுமன்றி வேறிடத்துஞ் செல்லக் கூடிய விதி; a rule which applies not only to the case in question but also to other cases, a rule of common application, opp. to *nir-avakāca-viti*. *"நீர் ஈண்டு எடுத்துக் காட்டிய வசனங்களெல்லாஞ் சாவகாச விதிவசனங்கள்" (சிவசம. 65).*

*[Skt. sāva-kāša-vidhi > த. சாவகாசவிதி]*

**சாவகாரி** *šāvakāri,* பெ.(n.) **சாவ்கார்** பார்க்க; see *šāvkār.*

**சாவதானம்** *šāvatāṉam,* பெ.(n.) 1. எச்சரிக்கை; care, deliberateness, circumspection. 2. விரைவி (அவசரமி)ன்மை; leisureliness, slowness.

*[Skt. sāvadhāna > த. சாவதானம்]*

**சாவயவம்** *šāvayavam,* பெ.(n.) உடல் உறுப்புகளோடு கூடியது; that which is composed of parts. *"சாவயவமெல்லாம் நாசத்தை யடையும்" (சி.சி. 4, 15, சிவாக்.).*

*[Skt. sāvayava > த. சாவயவம்]*

**சாவனம்** *šāvaṉam,* பெ.(n.) கதிரவன் தோன்றி மறையும் வரையுள்ள காலம் (சுக்கிரநீதி. 107); time from sunrise to sunset.

*[Skt. sāvana > த. சாவனம்]*

**சாவாது** *šāvātu,* பெ.(n.) படி மூலத்துக்குப் பிரதி (வின்.); copy, transcript, duplicate.

*[U. sawād > த. சாவாது]*

**சாவி** *šāvi,* பெ.(n.) தாழ்க்கோல்; key.

**த.வ. திறவுகோல்**

*[Port. chiavi > த. சாவி]*

**சாவிகொலுசு** *šāvi-kolušu,* பெ.(n.) சாவிகள் கோக்கப்பட்ட சங்கிலி (கொ.வ.); chain for holding keys.

*[சாவி + கொலுசு]*

**சாவித்திரி** *šāvittiri,* பெ.(n.) 1. நான்முகன் (பிரமன்) மனைவியருள் ஒருத்தி; a wife of Brahmā. *"சுநீதியுட் டுளங்கு சாவித்திரி" (காசிக. கற்பிலக். 7).* 2. கலைமகள் (சரசுவதி) (திவா.); Sarasvati. 3. காயத்திரி மந்திரம்; sacred mantra of Gāyatri. 4. சத்தியவான் மனைவியும் அசுவபதியரசன் மகளும் கற்பிற் பேர்பெற்றவளுமான தூய கற்பினள்; the wife of Satyavān and daughter of king Ašvapati, regarded as model of wifely devotion. *"சாவித்திரியென நாமஞ் சாத்தி" (நல். பாரத., சாவித்தி. 5).* 5. இரவு 15 முழுத்தத்துள் பதின்மூன்றாவது (விதான. குணாகுண. 73, உரை); (Astron) the 13th of 15 divisions of night. 6. நூற்றெட்டுச் சிற்றிலக்கியங்களுள் ஒன்று (சங்.அக.); name of an upaniṣad, one of 108.

*[Skt. sāvitri > த. சாவித்திரி]*

**சாவித்திரிசூத்திரம்** *šāvittiri-šūttiram,* பெ.(n.) பூணூல் (யாழ்.அக.); sacred thread worn by the twice-born.

*[சாவி த்திரி+ சூத்திரம்]*

**சாவித்திரிவிரதம்** *šāvittiti-viratam,* பெ.(n.) சாவித்திரி நோற்றவாறு தங்கணவருக்கு நீண்ட வாழ்நாள் வேண்டி மகளிர் ஆடவை மாதவெள்ளுவாவில்(ஆனிப்பௌர்ணிமையில்) நோற்கும் நோன்பு (அபி. சிந்.); a fast observed by married women on the full moon day of Aṉi to secure longevity for their husbands, after the manner of sāvitri.

**சாவிதா** *šāvitā,* பெ.(n.) பண்டம் முதலியவற்றின் பட்டி; list inventory.

*[U. zābita > த. சாவிதா]*

**சாளேசரம்** *šāḷēšaram,* பெ.(n.) **சாலேசரம்** பார்க்க; see *šālēsaram.*

**சான்னித்தியம்** *šāṉṉittiyam,* பெ.(n.) கடவுள் முதலியவற்றின் தெளிவு (வின்.); manifestation or presence, as of a deity.

*[Skt. sānnidhya > த. சான்னித்தியம்]*

**சானகி**[1] *šāṉaki,* பெ.(n.) 1. இராமனது மனைவி யாகிய சீதை (சனகன் மகள்); Sītā, wife of Rāma, as the daughter of Janaka. *"சானகியைக் கரந்த காதல்" (கம்பரா. இராவணன் வதை.239).* 2. பொன்னாங்காணி (மலை.); a plant growing in damp places. 3. கொற்றான்; a plant.

*[Skt. jānaki > த. சானகி]*

**சானுபோகத்தார்** *šāṉu-pōkattār,* பெ.(n.) 1. குத்தகைக்காரர் (இ.வ.); lessees of land. 2. தலைமைக் குடிகள்; (R.T) chief tenants.

*[Skt. sānubhōga > த. சானுபோகத்தார்]*

**சிக்கரி** *šikkari,* பெ.(n.) குளம்பி (காப்பி)த் தூளுடன் சேர்க்கப்படும் ஒரு வகைக் கிழங்கின் பொடி; chicory. *"சிக்கரி கலக்காத காப்பித்தூள் இருக்கிறதா?"*

**சிக்கை** *šikkai,* பெ.(n.) **சிட்சை** பார்க்க; see *šiṭšai. "நிருத்தஞ்செவி சிக்கைமூக்கு" (மணிமே. 27, 101).*

*[**Skt.** šikṣā > த. சிக்கை]*

**சிக்சா** *šiksā,* பெ.(n.) மகம்மதியர்கள் குளியலில் பயன்படுத்தும் நறுமணப் பொடி; a perfumed powder used by Muhammadans in bathing. (சா.அக.)

**சிகண்டம்** *šikaṇḍam,* பெ.(n.) 1. மயிற்றோகை (பிங்.); peacock's tail. 2. தலைமயிர்; tuft of hair on the head. *"சரிகண்ட சிகண்டா" (திருவிசை. திருமாளி .கோயில். 1, 3).*

*[**Skt.** šikhaṇḍa > த. சிகண்டம்]*

**சிகண்டிசன்** *šikaṇḍišaṉ,* பெ.(n.) சித்ரசிகண்டி யென்னும் ஆங்கிரசனது மகனெனக் கருதப்படும் வியாழன் (சூடா); jupiter, as son of šitra-šikaṇḍi or Aṅgiras.

*[**Skt.** citra-šikhaṇḍ-ja > த. சிகண்டிசன்]*

**சிகத்து** *šikattu,* பெ.(n.) பழுதுற்ற நிலை (P.T.L); disrepair.

*[Persn. šikast > த. சிகத்து]*

**சிகமதம்** *šigamadam,* பெ.(n.) அரத்தை; galangal - Alpiniagalanga. (சா.அக.)

**சிகமதாகிதம்** *šikamadākidam,* பெ.(n.) **சிகமதம்** பார்க்க; see *šikamadam.* (சா.அக.)

**சிகமதாதிகம்** *šikamadādigam,* பெ.(n.) கோங்கிலவு; golden silk cotton tree - Cochlospermum gossypium. (சா.அக.)

**சிகரகேவலம்** *šigarakēvalam,* பெ.(n.) கருவம்பூ (கிராம்பு); clove - deum caryophylla. (சா.அக.)

**சிகரத்தங்கம்** *šikara-t-taṅgam,* பெ.(n.) உயர்ந்த பொன்; gold of superior quality : refined gold. (சா.அக.)

**சிகரத்தலை** *šikara-t-talai,* பெ.(n.) நீண்ட தலை; tower head. (சா.அக.)

*[சிகரம் + தலை]*

*[**Skt.** šikara> த. சிகரம்]*

**சிகரத்தேன்** *šikara-t-tēṉ,* பெ.(n.) கொம்புத் தேன்; honey collected on branches on the top of trees. (சா.அக.)

*[**Skt.** šikara> த. சிகரம்]*

**சிகரப்பாகிதம்** *šikarappāgidam,* பெ.(n.) **சிகமதாதிகம்** பார்க்க; see *šikamadādigam.*

**சிகரப்பாடி** *šikara-p-pāḍi,* பெ.(n.) கோட்டம்; Arabian costus - Costus speciosus. (சா.அக.)

**சிகரப்பாடிகம்** *šikara-p-pādigam,* பெ.(n.) **சிகரப்பாடி** பார்க்க; see *šikara-p-pāḍi.* (சா.அக.)

**சிகரம்¹** *šikaram,* பெ.(n.) 1. மலையுச்சி; summit, top of a mountain. *சிகரமுயர்ந்த நெடிய மலை (புறநா. 135, உரை).* 2. மலை (சூடா.); mountain. 3. உயர்ச்சி (சூடா.); height. 4. தலை (பிங்.); head. 5. கோபுரம் (பிங்.); tower, turret. 6. விற்பிடி; (Nāṭya) gesture with one hand. 7. பொறி வளைவின் நடு (C.E.M.); (Engin.) crown.

*[**Skt.** šikara > த. சிகரம்]*

**சிகரம்²** *šikaram,* பெ.(n.) 1. நீர்த்துளி (பிங்.); drop of water, spray. 2. அலை (சூடா.); wave. 3. புளகம் (இலக். அக.); horripilation.

*[**Skt.** šikara > த. சிகரம்]*

**சிகரம்³** *šigaram,* பெ.(n.) இலவங்கம் (கிராம்பு) (தைலவ. தைல. 105); clove.

**த.வ. கருவம்பூ**

*[**Skt.** šēkhara > த. சிகரம்]*

**சிகரம்வை-த்தல்** *śigaramvai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. கோபுரம் முதலியவற்றின் உச்சியிற் கூம்பு அமைத்தல்; to put up knob on a steeple or tower. 2. அணிகலனில் கொண்டை வைத்தல் (வின்.); to furnish with knobs as in ear-ornaments worn by women. 3. மனத்திற் பதியும்படி திறம்படப் பேசுதல் (இ.வ.); to speak in an impressive clever manner.

*[சிகரம் + வை-]*

**சிகரி**[1] *śigari,* பெ.(n.) 1. சிகரத்தையுடையதான; மலை; mountain, as being peaked. *"கோல வருவியஞ் சிகரியும்" (பெருங். நரவாண. 1, 182).* 2. *கோபுரம்;* tower. *"மங்குறோய் சிகரி" (பரத. பாவ். 29).* 3. **புல்லுருவி** (மலை.); honey suckle mistletoe.

**[Skt.** *śikharin >* த. *சிகரி]*

**சிகரி**[2] *śigari,* பெ.(n.) எலிவகை (பிங்.); a kind of rat.

**[Skt.** *girikā >* த. *சிகரி]*

**சிகரிகை** *śigarigai,* பெ.(n.) **நேர்வாளம்** (சங்.அக.); true croton oil plant.

**[Skt.** *saikharikā >* த. *சிகரிகை]*

**சிகலோகம்** *śigalōgam,* பெ.(n.) அகில் (மலை); eagle-wood.

**[Skt.** *vaṃśika +lōha >* த. *சிகலோகம்]*

**சிகாமணி** *śigāmaṇi,* பெ.(n.) 1. முடியிலணியும் மணி; gem of a diadem; crest-jewel. *"இந்து சிகாமணி யெங்களை யாள" (திருவாச. 49, 7).* 2. சிறந்தோன்; excellent, distinguished person, generally used in compounds. *"பண்டிதசிகாமணி".*

*[சிகா + மணி]*

**[Skt.** *śikā>* த. *சிகா]*

**சிகாமோதிரம்** *śigāmōdiram,* பெ.(n.) முத்திரைக் கணையாழி (இ.வ.); a ring with initials.

**சிகாரியாள்** *śigāri-y-āḷ,* பெ.(n.) 1. வேட்டைக் காரன்; hunter. 2. வேட்டையில் உதவியாள்; hunter-boy.

*[சிகாரி + ஆள்]*

**சிகாவர்க்கம்** *śigā-varkkam,* பெ.(n.) சுவாலைக் கூட்டம்; shooting flames in thick rows. *"வன்னியின் சிகாவர்க்கம்" (பாரத. காண்டவ. 16).*

**சிகாவரம்** *śigāvaram,* பெ.(n.) பலாமரம் (மூ.அ.); jack tree.

**[Skt.** *śikhā-vara >* த. *சிகாவரம்]*

**சிகாவலம்**[1] *śigāvalam,* பெ.(n.) மயில்; peacock. *"சிகாவல கலாபமேல்" (பாரத. காண்டவ. 21).*

**[Skt.** *śikha-vala >* த. *சிகாவலம்]*



**சிகாவலம்**[2] *śigāvalam,* பெ.(n.) பாசி (மலை.); a kind of moss.

**[Skt.** *śaivala >* த. *சிகாவலம்]*

**சிகாவளம்** *śigāvaḷam,* பெ.(n.) **சிகாவலம்**[1] பார்க்க; see *śigāvalam.* *"பொருவேற் சிகாவள கொங்கில் வேளே" (திருப்பு. 1141).*

**சிகாவிம்பம்** *śigāvimbam,* பெ.(n.) வட்ட வடிவாகிய தலை; round-shaped head. *"இமையோர் மகுடச் சிகாவிம்பமே" (கந்தரந். 80).*

**[Skt.** *śikhā+bimba >* த. *சிகாவிம்பம்]*

**சிகி[1]** *śigi,* பெ.(n.) 1. மயில் (பிங்.); peacock. 2. நெருப்பு (பிங்.); fire. 3. செங்கோள் (கேது) (பிங்.); the descending node. 4. மலை (உரி.நி.); mountain. 5. ஆமணக்கு (இலக்.அக.); castor-plant. 6. மரம் (இலக்.அக.); tree.

*[Skt. śikhin > த. சிகி]*

**சிகி[2]** *śigi,* பெ.(n.) புத்தர்களுள் ஒருவர் (மணிமே.பக்.369); a Buddha.

*[Pāli. śikhī > த. சிகி]*

**சிகிக்கிரீவம்** *śigi-k-kirīvam,* பெ.(n.) **சிகிகண்டம்** (மூ.அ.) பார்க்க; see *śikikaṇḍam.*

**சிகிகண்டம்** *śigi-kaṇḍam,* பெ.(n.) மயிலின் கழுத்துப்போலும் நிறமுடையதான மயிற்றுத்தம் (மூ.அ.); blue vitriol, as having the colour of peacock's neck.

**சிகிச்சம்** *śigiccam,* பெ.(n.) 1. மருத்துவம் (வைத்தியம்); pharmacy. 2. தீர்வு (பரிகாரம்); cure. (சா.அக.).

**சிகிச்சன்** *śigiccaṉ,* பெ.(n.) 1. மருத்துவன் (வைத்தியன்); physician. 2. மருந்து கொடுப்போன் dispenser. (சா.அக.)

**சிகிச்சாக்கிரமம்** *śigiccā-k-kiramam,* பெ.(n.) நோயின் தீர்வை (பரிகாரத்தை)ப் பற்றிய நெறிமுறைகள்; rules or methods of treatment in diseases. (சா.அக.)

**சிகிச்சாசாரம்** *śigiccā-śāram,* பெ.(n.) நோயின் மருத்துவத்தைப் (சிகிச்சையை) பற்றியும், மருந்துக்குரிய பண்டங்களைத் தூய்மை செய்யும் முறையைப் பற்றியும் (பதார்த்தங் களை சுத்திக் கிரமப்படி சுத்தி செய்யும் விதத்தையும்) கூறும் வடமொழி மருத்துவ நூல் an ayurvedic medical treatise on the methods of treatment and purification of drugs. (சா.அக.)

**சிகிச்சாதரிசனம்** *śigiccā-dariśaṉam,* பெ.(n.) தட்சப் பிரசாபதி அசுவினி தேவர்களுக்குக் கற்பித்து எடுத்துச் சொல்லிய ஆயுள் வேதநூல்; an ayurvedic science comprising the lectures given out by Daksha prajapathy to their disciples Aswini Devas. (சா.அக.)

**சிகிச்சாதீபிகை** *śigiccā-dībigai,* பெ.(n.) பிற்காலத்தில் வடமொழியில் செய்த ஒரு மருத்துவ (வைத்திய) நூல்; an ayurvedic book on treatment of diseases written in Sanskrit by subsequent writers. (சா.அக.)

**சிகிச்சாபீடம்** *śigiccāpīḍam,* பெ.(n.) நோய்க்காக மருந்துகள் கலக்கும் ஓர் உயரமான இடம்; dispensing counter. (சா.அக.)

*[சிகிச்சை + பீடம்]*

*[Skt. cikitsā > த. சிகிச்சா]*

**சிகிச்சாரத்தினதந்திரம்** *śigiccā-rattiṉa-tandiram,* பெ.(n.) அசுவினி தேவர்கள் ஆகிய மருத்துவர்கள் செய்த ஆயுள் வேதநூல்; an ayurvedic science compiled by Aswin kumars. (சா.அக.)

**சிகிச்சாவாகடம்** *śigiccā-vāgaḍam,* பெ.(n.) நோய்களைக் குணப்படுத்தும் மருந்து முறைகளைச் சொல்லும் நூல்; a book describing the methods of preparation of the several kinds of medicines with their uses and manner of application - pharmacopoeia. (சா.அக.)

**சிகிச்சை[1]** *śigiccai,* பெ.(n.) தேவசிகிச்சை ராட்சசசிகிச்சை, மானுடசிகிச்சை என்று மூவகையாய் நோய்க்குச் செய்யும் நீக்கவினை (பதார்த்த. 1202); treatment of diseases, of three kinds viz., tēva-cikiccai, rākṣasa-cikiccai, māṉuṭa-cikiccai.

*[Skt. cikitsā > த. சிகிச்சை]*

**சிகிச்சை²** *šigiccai,* பெ.(n.) நோய்களைக் குணப்படுத்துவதற்காகச் செய்யப்படும் மருத்துவம் (வைத்தியம்).; treatment.

**சிகிச்சைக்காண்டம்** *šikiccai-k-kāṇḍam,* பெ.(n.) நோய்களைக் குணப்படுத்த வேண்டிய செய்திகளைப் பற்றிச் சொல்லும் மருத்துவ நூலின் ஒரு பகுதி; a chapter of the medical science dealing with the treatment of diseases. (சா.அக.)

*[சிகிச்சை + காண்டம்]*

[Skt. *cikitsā* > த. *சிகிச்சை*]

**சிகிச்சைக்கிரமம்** *šigiccai-k-kiramam,* பெ.(n.) 1. நோயின் நீக்கத்தை (பரிகாரத்தை)ப் பற்றி தேரையர் செய்த தமிழ் மருத்துவ நூல்; a Tamil treatise compiled by Teriyar on treatment of diseases and their cure. 2. பொதுவாக நோயின் நீக்கத்தை (பரிகாரத்தை)ப் பற்றிய நூல்; the science and art dealing in general with curing of diseases - Therapeutics 3. மருத்துவம் (பரிகாரம்) செய்யும் ஒழுங்கு; the order or regularity in the treatment of diseases. (சா.அக.)

**சிகிச்சைக்குறி** *šigiccai-k-kuṟi,* பெ.(n.) மருத்துவம் (வைத்தியம்) செய்யும்பொழுது நோய் குணப்பட்டு வருவதற்கும் அல்லது வாராததற்கும் நோயாளியிடம் காணப்படும் அடையாளங்கள்; the favourable or unfavourable signs or symptoms exhibited by a patient in the course of treatment by the physician. (சா.அக.)

*[சிகிச்சை + குறி]*

***[Skt.** cikitsā > த. சிகிச்சை]*

**சிகிச்சைக்குற்றம்** *šigiccai-k-kuṟṟam,* பெ.(n.) மருத்துவம் (வைத்தியம்) செய்யுங் காலத்தில் மருத்துவனாலுண்டாகும் தவறுதல்கள்; the defects or faults caused in the course of treatment for which the physician is responsible for his neglect. (சா.அக.)

**த.வ. மருத்துவக் குறைபாடு**

*[சிகிச்சை + குற்றம்]*

***[Skt.** cikitsā > த. சிகிச்சை]*

**சிகிச்சைக்கூறு** *šigiccai-k-kūṟu,* பெ.(n.) 1. நோய் நீக்க மருத்துவத்திற்காக ஏற்பட்ட பகுதிகள்; the several sub-divisions or departments in the treatment of diseases. 2. **சிகிச்சைவகை** பார்க்க; see *šigiccai-vagai.* (சா.அக.)

*[சிகிச்சை + கூறு]*

**சிகிச்சைபேதம்** *šigiccai-bēdam,* பெ.(n.) நோய்களுக்காகச் செய்யும் பல வகையான (விதமான) தீர்வுகள் (பரிகாரங்கள்); the several changes or differences in the treatment afforded for purposes of effecting a cure. (சா.அக.)

*[சிகிச்சை + பேதம்]*

**சிகிச்சைமுறை** *šigiccai-muṟai,* பெ.(n.) மருத்துவம் செய்யும் முறை; the method of treatment. (சா.அக.)

*[சிகிச்சை + முறை]*

**சிகிச்சையிலட்சணம்** *šigiccai-y-ilaṭcaṇam,* பெ.(n.) மருத்துவச் செய்கைக்கு ஏற்பட்ட ஒரு சிறப்பு; the characteristic beauty underlying the treatment of disease. (சா.அக.)

*[சிகிச்சை + இலட்சணம்]*

**சிகிச்சைவகை** *šigiccai-vagai,* பெ.(n.) பொதுவாக எல்லா மருத்துவ நூல்களிலும் நோய்க்காகச் சொல்லியுள்ள தீர்வு (பரிகாரங்)கள்; general remedial measure pointed in medical books. (சா.அக.)

*[சிகிச்சை + வகை]*

**சிகிடிமா** *šigiḍimā,* பெ.(n.) கொட்டை முந்திரிகை; cashew nut - Anacardium வகை occidentale. (சா.அக.)

**சிகிபாடவரசம்** *šigipāḍavarašam,* பெ.(n.) வாத குன்மத்தைப் போக்குமோர் ஆயுள் வேத மருந்து; an ayurvedic medicine prescribed for dyspepsia. (சா.அக.)

**சிகிமுகி** *šigimugi,* பெ.(n.) **சிக்கிமுக்கி** பார்க்க; see *šikkimukki.*

**சிகில்லி** *šigilli,* பெ.(n.) **சிகில்** (வின்.) பார்க்க; see *šigil.*

**சிகிலாடு-தல்** *šigilāḍu-,* 5 செ.கு.வி.(v.i.) ஆயுதந் துலக்குதல் (வின்.); to polish arms.

**சிகிலேகியம்** *šigilēgiyam,* பெ.(n.) விக்கல், மூச்சிரைப்புக்காக ஆயுள் வேதப்படி மயிலிறகுப் பற்பம், திப்பிலிப் பொடி (சூரணம்) இவற்றைத் தேனில் கலந்து தரும் மருந்து; an Ayurvedic medicinal powder prepared with peacock's feather baspam (calcined powder) and powder of long pepper. It is prescribed for hiccough and hard breathing. (சா.அக.)

**சிகுரம்** *šiguram,* பெ.(n.) மயிர் (வின்.); hair.

*[Skt. cikūra > த. சிகுரம்]*

**சிகுவா** *šiguvā,* பெ.(n.) நாக்கு; the tongue. (சா.அக.).

**சிகுவாக்கிரம்** *šiguvākkiram,* பெ.(n.) நுனிநா; tip of the tongue. (சா.அக.)

**சிகுவாகண்டரோகம்** *šiguvākaṇḍarōgam,* பெ.(n.) நாக்கு வெடித்துப் புண்ணாகும் ஒரு நோய்; a disease of the tongue attended with cracks, ulceration of the tongue and the throat furrowed tongue. (சா.அக.)

**சிகுவாசன்னி**[1] *šiguvā-šaṉṉi,* பெ.(n.) நாவை உள்ளிழுக்கச் செய்யும் ஒருவகை இசிவு நோய் (சன்னி) (வின்.); a kind of high fever in which the tongue is drawn in.

*[Skt. jihvā+sanni > த. சிகுவாசன்னி]*

**சிகுவாசன்னி**[2] *šiguvāšaṉṉi,* பெ.(n.) நரம்புக் கோளாறினால் நாக்கை உள்ளுக்கிழுத்துக் கொள்வதினால் பேச முடியாமற் செய்யும் ஒரு வகைச் சன்னி; apoplexy or a nervous affection in which the tongue is withdrawn and it cannot be put up straight and consequently the speech is impaired. 2. ஊமைத்தனம்; dumbness. 3. **சிஃகுவீகம்** பார்க்க; see *šikguvīgam.* (சா.அக.)

**சிகுவாத்தம்பவாதம்** *šiguvāttambavādam,* பெ.(n.) பக்கஊதத்தி (பாரிச வாயுவி)னால் நாக்குக் குளறல்; impaired speech as a result of paralytic stroke., palsy of the tongue. (சா.அக.)

**சிகுவாதாபிதம்** *šiguvātāpidam,* பெ.(n.) நாக்கு சிவந்து புண்ணாதல்; inflammation of the tongue. (சா.அக.)

**சிகுவாபம்** *šiguvābam,* பெ.(n.) நாய்; dog. (சா.அக.)

**சிகுவாமூலம்** *šiguvāmūlam,* பெ.(n.) அடி நாக்கு; the root of the tongue. (சா.அக.)

**சிகுவாரோகம்** *šiguvā-rōgam,* பெ.(n.) நாக்கைப் பற்றிய நோய்கள்; diseases of the tongue in general. (சா.அக.)

**சிகுவாலசலரோகம்** *šiguvālašalarōgam,* பெ.(n.) நாக்கில் கொப்புளங்களை எழுப்பிப் புண்ணை யுண்டாக்கும் நோய்; ulceration of the tongue. (சா.அக.)

**சிகுவை** *šiguvai,* பெ.(n.) 1. நாக்கு (பிங்.); tongue. 2. வாக்கு (இலக்.அக.); power of speech. 3. **சிங்ஙுவை 2** (சிவப். கட்.) பார்க்க; see *šiṅṅuvai.*

*[Skt. jihvā > த. சிகுவை]*

**சிகைதாடு** *šigaitāḍu,* பெ.(n.) 1. தலையணி வகை (இ.வ.); a head ornament, especially of a child. 2. தலைமயிர்கட்டுங் கயிறு (வின்.); string for fastening the hair.

*[sikatāḍu > த. சிகைதாடு]*

**சிகைமாலை** *šigai-mālai,* பெ.(n.) வாசிகை (பிங்.); wreath for the hair or head.

*[Skt. šikhā+mālā > த. சிகைமாலை]*

**சிங்கச்சுவணம்** *šinka-c-cuvaṇam,* பெ.(n.) ஒருவகை உயர்தரப் பொன்; a kind of superior gold. *"தீதுதீர் சிறப்பிற் சிங்கச் சுவணமென் றோசைபோகிய வொண் பொன்" (பெருங். வத்தவ. 11, 23).*

*[Skt. siṃhala+svarna > த. சிங்கச் சுவணம்]*

**சிங்கணந்தம்** *šiṅgaṇandam,* பெ.(n.) **சிங்கநந்தம்** (பரத. தாள. 3) பார்க்க; see *šinkanantam.*

**சிங்கத்திசை** *šiṅga-t-tišai,* பெ.(n.) தெற்கு (வின்.); south.

*[சிங்கம் + திசை]*

*[Skt. šikhā > த. சிங்க(ம்)]*

**சிங்கதீபம்** *šinka-tipam,* பெ.(n.) கோயில் விளக்கு வகை (பரத. ஒழிபி. 41–43); a kind of temple lamp.

**த.வ. அரிமா விளக்கு**

*[சிங்கம் + தீபம்.]*

[Skt. *šikhā* > த. *சிங்கம்*]



**சிங்கநகக்கை** *šiṅga-naga-k-kai,* பெ.(n.) ஒரு கையின் விரல்களை அரிமாவின் நகங்கள் போல் அகற்றி வளைத்தலாகிய அவிநயக்கை வகை (பரத. பாவ. 38); gesture with one hand in which the fingers are so held as to resemble a lion's claws.

**த.வ. அரிமா நகக்கை**

*[சிங்கம் + நகம்+கை]*

[Skt. *šikhā+naga* > த. *சிங்கநகம்*]

**சிங்கநகம்** *šiṅ¥a-nagam,* பெ.(n.) **சிங்க நகக்கை** (வின்.) பார்க்க; see *šiṅga-naga-k-kai.*

**சிங்கநந்தம்** *šiṅga-nandam,* பெ.(n.) முப்பத்திரண்டு மாத்திரை கொண்ட துணைத்தாளவகை (தாளசமுத்திரம்); (mus.) an intricate variety of time measure consisting of 32 mattirai, one of five *upa-tāḷam,* q.v.

*[Skt. siṃha-nandana > த. சிங்க நந்தம்]*

**சிங்கநாதம்¹** *šiṅga-nādam,.* பெ.(n.) 1. அரிமா முழக்கம்; lion's roar. 2. போரில் வீரர் செய்யும் உரப்பல் (கர்ச்சனை) முழக்கம்; war-whoop, battle - shout. *"தலைவர் சிங்கநாதமும்" (கம்பரா. பிரமாத். 104).* 3. தொல்லை (தொந்தரவு) (இ.வ.); trouble, vexation.

*[சிங்கம் +நாதம்.]*

**சிங்கநாதம்²** *šiṅga-nādam,* பெ.(n.) ஊதுகொம்பு; horn, a wind-instrument. *"உடன்சிங்கநாதங் கிடந்தசைய" (திருவிளை. உலவாக். 7).*

*[சிங்கம் + நாதம்.]*

[Skt. *šikhā* > த. *சிங்கம்*]



**சிங்கநோக்கு** *śiṅga-nōkku,* பெ.(n.) 1. அரிமாவைப் போலக் கழுத்தைத் திருப்பிப் பார்க்கை; looking over the shoulder with neck turned, as a lion. *"சிங்க நோக்கிற் பணையெருத் துறழ நோக்கி" (சீவக. 1569).* 2. அரிமாநோக்கம் (இறை. 4, 57); a mode of setting a sūtra in a treatise.

**த.வ. அரிமா நோக்கு**

*[சிங்கம் + நோக்கு]*

**சிங்கப்பல்** *śiṅga-p-pal,* பெ.(n.) முன்புறம் நீண்டுள்ள துணைப்பல்; projecting extra tooth.

**சிங்கப்பிரான்** *śiṅga-p-pirāṉ,* பெ.(n.) மாந்தவுடலும் அரிமா தலையுங் கொண்ட தோற்றம் (நரசிங்கமூர்த்தி); Tirumāl in his man-lion incarnation. *"சிங்கப்பிரான் பெருமை யாராயுஞ் சீர்மைத்தே" (திவ். திருவாய். 2,8,9).*



**சிங்கப்பெருமாள்** *śiṅga-p-perumāḷ,* பெ.(n.) 1. **சிங்கப்பிரான்** பார்க்க; see *śiṅga-p-pirāṉ.* 2. துளசி (மலை.); holy basil.

**சிங்கபாதம்** *śiṅga-pādam,* பெ.(n.) அரிமாவின் அடிபோன்று அமைக்கப்படும் கால்; legs of vessels or vessel-stands in the shape of lion's feet. *"தாரைத்தாள் வட்டில் ஒன்று கருக்கிரண்டுஞ் சிங்கபாத மிரண்டும் உட்பட"* (S.I.I.II. 5).

**த.வ. அரிமாக் கால்**

*[சிங்கம் + பாதம்.]*

[Skt. *śikhā* > த. *சிங்கம்*]

**சிங்கம்**[1] *śiṅgam,* பெ.(n.) 1. மிக்க வன்மையுள்ள ஒரு விலங்கு; lion. *"மாற்றுச் சிங்கத்து மறக்குரல்" (பெருங். உஞ்சைக். 47, 111).* 2. அரிமா ஓரை (சிங்கராசி) (பிங்.); Leo, the fifth sigh of the zodiac. 3. வேளாளரின் ஒரு பட்டப்பெயர் (J); a title, chiefly among vēḷāḷas as in பாலசிங்கம்.

*[**Skt.** siṃha > த. சிங்கம்]*



**சிங்கம்**[2] *śiṅgam,* பெ.(n.) ஆடாதோடை (மலை.); malabar - nut.

*[**Skt.** siṃhi > த. சிங்கம்]*

**சிங்கம்**[3] *śiṅgam,* பெ.(n.) 1. கொம்பு; horn. 2. வாழையின் இளங்கன்று; tender plantain. *'வாழைக்குச் சிங்கம் வெடித்திருக்கிறது' (இ.வ.).* 3. கிட்டிப்புள் விளையாட்டில் வழங்கும் ஏழு அல்லது பத்துக்கிட்டி நீளங்கொண்ட அளவு (j); distance of seven or sometimes ten sticks in the game of tip-cat, measured from where the cat falls to the goal.

*[**Skt.** sṛṅga > த. சிங்கம்]*

**சிங்கம்**[4] *śiṅgam,* பெ.(n.) ஒரு வகை நஞ்சு (மூ.அ.); a mineral poison.

**சிங்கம்**[5] *śiṅgam,* பெ.(n.) ஒருவகை நறுமண (வாசனை)ப்பண்டம் (அக.நி.); an aromatic.

**சிங்கம்பட்டு** *śiṅgam-paṭṭu,* பெ.(n.) நாணயத்தைத் தூக்கியெறிந்து அது விழும் பக்கங்களைக் கொண்டு வெற்றி தோல்விகளை உறுதி செய்யும் பந்தய விளையாட்டு (இ.வ.); a kind of betting game in which small coins are tossed up heads winning and tails losing.

*[சிங்கம் + பட்டு]*

**சிங்கம்புள்** *śiṅgam-puḷ,* பெ.(n.) கிட்டிப்புள் (நாஞ்சில்); the game of tip-cat.

*[சிங்கம் + புள்.]*

**சிங்கமடங்கல்** *śiṅga-maḍaṅgal,* பெ.(n.) சிங்கக்குட்டி; young of lion. *"மலைபக விடிக்குஞ் சிங்க மடங்கலை" (சீவக. 392).*

த.வ. அரிமா ஏறு

**சிங்கமடி-த்தல்** *śiṅgam-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) கிட்டியடித்தல் (J); to toss up and strike the cat in the game of tip-cat.

*[சிங்கம் + அடி-.]*

**சிங்கமதாணி** *śiṅga-madāṇi,* பெ.(n.) வெற்றிவேந்தன் மார்பிலணியும் அரிமா (சிங்க)முகப் பதக்கம் (சங்.அக.); lion-faced ornament for breast worn by a victorious king.

த.வ. அரிமா பதக்கம்

**சிங்கமுகக்காப்பு** *śiṅga-muga-k-kāppu,* பெ.(n.) அரிமா (சிங்க) முகத்தைக் கொண்ட தோடா (வின்.); bracelet with a lion's face on the clasp.

*[சிங்கம்+முகம் + காப்பு]*

[Skt. *śikhā* > த. *சிங்கம்*]

**சிங்கமுகப்பல்லக்கு** *śiṅga-muga-p-pallakku,* பெ.(n.) அரிமா (சிங்க) முகவடிவை முகப்பிற் கொண்ட பல்லக்கு வகை (வின்.); palanquin with the face of a lion carved in front.

த.வ. அரிமுகச்சிவிகை

*[சிங்கமுகம் + பல்லக்கு]*



**சிங்கமுகம்வை-த்தல்** *śiṅga-mugam-vai-,* 4 செ.கு.வி.(v.i.) சினங்கொண்டிருத்தல்; to put on an angry look (Nāñ).

த.வ. சீறுதல்

*[சிங்கமுகம் + வை]*

**சிங்கமுகவோடம்** *śiṅga-muga-vōḍam,* பெ.(n.) சிங்கத்தின் உருவை முகப்பிற் கொண்ட தோணி; boat with a lion-shaped prow. *"யானைமுக வோடமும் சிங்கமுக வோடமுமென்னும் இவற்றின் ஏறி" (சிலப். 13. 177. உரை).*

த.வ. அரிமுகஓடம்

*[சிங்கம்+முகம் +ஓடம்.]*

[Skt. *śikhā* > த. *சிங்கம்*]



**சிங்கமுகாசுரன்** *śiṅga-mugāśuraṉ,* பெ.(n.) முருகக் கடவுளால் வதஞ் செய்யப் பெற்றவனும் அரிமா (சிங்க) முகத்தையுடையவனுமாகிய ஓர் அசுரன் (கந்தபு.); lion-faced Asura slain by Skanda.

**த.வ. அரிமுகஅரக்கன்**

[**Skt.** *siṃhamukhāsura* > *த. சிங்கமுகாசுரன்]*

**சிங்கமுகி** *śiṅgamugi,* பெ.(n.) பொன்னூமத்தை (மலை.); thorn-apple.

[**Skt.** *siṃha-mukhi* > *த. சிங்கமுகி]*

**சிங்கலை** *śiṅgalai,* பெ.(n.) வில்லங்கம் முதலியன (இ.வ.); encumbrance, tangle of difficulties.

[**Skt.** *śṛṅkhalā* > *த. சிங்கலை]*

**சிங்கவாகனி** *śiṅga-vāgaṉi,* பெ.(n.) அரிமாவை ஊர்தியாகக் கொண்டவளாகக் கருதப் பெறும் கொற்றவை; Durgā, as lion-mounted. *"சிங்கவாகனி வந்து செந்திருமா கொடிருக்கவே" (கலிங். 306. புதுப்.)*

[**Skt.** *siṃha+vāhani* > *த. சிங்கவாகனி]*

**சிங்காசனம்** *śiṅgāśaṉam,* பெ.(n.) 1.அரிமா தாங்குவதுபோல் அமைக்கப்பெற்ற இருக்கை; throns supported by carved lions. *"சிங்காசனமும் பொங்குபூந் தவிசும்" (பெருங். உஞ்சைக். 57, 60).* 2. கேசரியாசனம் எனும் ஒக முறை; (yōga) yōgic posture.

**த.வ. அரியணை**

[**Skt.** *siṃhāsana* > *த. சிங்காசனம்]*

**சிங்காதனம்** *śiṅgātaṉam,* பெ.(n.) 1. **சிங்காசனம் 1** பார்க்க; see *śiṅgāśaṉam*[1]. *"தண்டுஞ் சிவிகையுஞ் சிங்காதனமுந் தமிழ்க் களித்த கண்டன்" (தனிப்பா. ii.* 127. 322). 2. **சிங்காசனம் 2** (திருமந். 562) பார்க்க; see *śiṅgāsaṉam*[2].

**த.வ. அரியணை**

**சிங்காரக்கண்டி** *śiṅgāra-k-kaṇḍi,* பெ.(n.) நெடுங்கோடு கொண்ட புடைவை வகை (கொ.வ.); a kind of saree with long stripes.

*[சிங்காரம் +கண்டி]*

**சிங்காரக்கழு** *śiṅgāra-k-kaḻu,* பெ.(n.) கொலைக் கழுவகை; a kind of impaling-stake (J).

*[சிங்காரம் +கழு]*

**சிங்காரக்காரன்** *śiṅgāra-k-kāraṉ,* பெ.(n.) புனைவான (அலங்கார) உடையுள்ளவன்; fop gaily - dressed person.

**த.வ. அணிசெய்ஆடையன்**

[சிங்காரம் +காரன்]

**சிங்காரத்தாட்டுப்பத்திரி** *śiṅgāra-t-tāṭṭu-p-pattiri,* பெ.(n.) சேலைவகை (கொ.வ.); a kind of saree.

*[சிங்காரம் +தாட்டுப்பத்திரி]*

**சிங்காரத்தோட்டம்** *śiṅgāra-t-tōṭṭam,* பெ.(n.) மனமகிழ்ப்பூங்கா (உத்தியானவனம்); pleasure-garden.

**த.வ. எழில்வனம்**

**சிங்காரத்தோப்பு** *śiṅgāra-t-tōppu,* பெ.(n.) **சிங்காரத்தோட்டம்** (I.M.P.S.a. 52) பார்க்க; see *śiṅgāra-t-tōṭṭam.*

*[சிங்காரம் +தோப்பு]*

**சிங்காரநடை** *śiṅgāra-naḍai,* பெ.(n.) 1. ஒய்யார நடை; graceful gait. *"நடன சிங்கார நடையழகின்" (தனிப்பா. i, 146, 45).* 2. பெருமித நடை (கொ.வ.); affected gait.

**த.வ. ஒயில் நடை**

[*சிங்காரம் + நடை*]

**சிங்காரப்பாய்ச்சல்** *śiṅgāra-p-pāyccal,* பெ.(n.) குழந்தைகளின் துள்ளுநடை (j); lively, frisky movement as of children.

**த.வ. துள்ளல் நடை**

[*சிங்காரம் +பாய்ச்சல்*]

**சிங்காரப்பேச்சு** *śiṅgāra-p-pēccu,* பெ.(n.) 1. ஒய்யார (அலங்கார)மான பேச்சு (கொ.வ.); flowery speech. 2. காதற் (சரசப்) பேச்சு; amorous talk. 3. வேடிக்கைப் பேச்சு; witty, humorous talk.

த.வ. அலப்புரை

[*சிங்காரம் + பேச்சு*]

**சிங்காரம்** *śiṅgāram,* பெ.(n.) 1. ஒன்பான் சுவையுள் (நவரசத்துள்) ஒன்றாகிய இன்பச் சுவை (சூடா.); (poet) sentiment of love, one of nava-rašam, q.v. 2. ஒப்பனை (அலங் காரம்); decoration, embellishment, beauty, especially artificial. *"கொத்தலர்தார் மார்பன் கொலுவிருக்குஞ் சிங்காரம்" (பணவிடு. 85).*

த.வ. ஒப்பனை

*[Skt. śṛṅgāra > த. சிங்காரம்]*

**சிங்காரி[1]-த்தல்** *śiṅgāri-,* 11 செ.கு.வி. (v.t.) 1. ஒப்பனை செய்தல் (அலங்கரித்தல்); to decorate, beautify. *"உன்னைச் சிங்காரித் துன்னழகைப் பாராமல்".* 2. ஒப்பனை (அலங்கரி)த் துரைத்தல்; to use flowery language.

த.வ. ஒப்பனைசெய்தல்

**சிங்காரி[2]** *śiṅgāri,* பெ.(n.) அலங்கார முடையவ-ன்-ள் (வின்.); gaily dressed man or woman.

த.வ. மினுக்கி

*[Skt. śṛṅgārin > த. சிங்காரி]*

**சிங்காவலோகனம்** *śiṅgāvalōkanam,* பெ.(n.) **சிங்கநோக்கு, 2** (சி.சி.5, 9, சிவாக்) பார்க்க; see *śiṅga-nōkku,*2.

*[Skt. siṃha+ava-lōkana > த. சிங்காவலோகனம்]*

**சிங்கிகைபுதல்வன்** *śiṅgigai-pudalvan,* பெ.(n.) சிங்கிகையின் புதல்வனான செங்கோள் (கேது) ; kētu, as the son of siṃhikā. *"சிங்கிகைபுதல்வ னென்றும்" (மச்சபு. புவனகோச. 27).*

**சிங்கிணிகோசு** *śiṅgiṇi-kōśu,* பெ.(n.) பம்பர விளையாட்டில் பம்பரத்தைச் சுற்றும் போதே கயிற்றால் தூக்கிப் பிடித்ததைக் குறிக்கும் சொல் (கொ.வ.); a term used in the game of tops to denote the lifting up of a spinning top with a cord and catching it.

த.வ. ஏந்துபம்பரம்



**சிங்கிநாதம்** *śiṅgi-nādam,* பெ.(n.) 1. இடம்பஞ் செய்கை (பிங்.); assuming airs, display of vanity. 2. தன் விருப்ப (சுவாதந்திரிய)த்தை மேற்கொள்கை (வின்.); wantonness, taking liberties. 3. வீண்காலங்கழிக்கை (இ.வ.); wasting or idling time.

*[Skt. siṃha-nāda > த. சிங்கிநாதம்]*

**சிங்கிவேரம்** *śiṅgivēram,* பெ.(n.) சுக்கு (மூ.அ.); dried ginger.

*[Skt. śṛṅga-bēra > த. சிங்கிவேரம்]*

**சிச்சன்** *śiccan,* பெ.(n.) மாணாக்கன்; disciple. *"ஆசாரியன் சிச்ச னாருயிரைப் பேணுமவன்" (உபதேசரத். 65).*

*[Skt. śiṣya > த. சிச்சன்]*

**சிசிரம்** *śiśiram,* பெ.(n.) 1. **சிசிரருது** பார்க்க; see *śisirarudu. "வெருவிப்போய்ச் சிசிரம் நீங்கி" (கம்பரா. மாரீசன். 99).* 2. சந்தனம் (மலை.); sandalwood.

*[Skt. śiśira > த. சிசிரம்]*

**சிசிரருது** *šiširarudu,* பெ.(n.) கும்பம் (மாசி), மீனம் (பங்குனி) மாதங்களாகிய பின்பனிக்காலம்; cool season, the months of *māsi* and *panguṉi*, one of six rudu. q.v.

**த.வ. பின்பனி**

*[Skt. šišra+rudu> த. சிசிரருது]*

**சிசினம்** *šišiṉam,* பெ.(n.) ஆண்குறி; male generative organ.

*[Skt. šišna > த. சிசினம்]*

**சிசு**[1] *šišu,* பெ.(n.) குழவி; baby, young of animals. *"சிசுக்களி னறிவிலாச் சிந்தை" (பாரத. குருகுல. 65).*

**த.வ. குழந்தை**

*[Skt. šišu > த. சிசு]*

**சிசு**[2] *šisu,* பெ.(n.) 1. கரு அல்லது கருப்பக் குழந்தை (சிசு); embryo. 2. கருப்பிண்டம்; foetus in the womb. 3. பிறந்த குழந்தை; new born baby. 4. எட்டு அகவைக்குட்பட்ட குழந்தை; child below eight years of age. 5. சிசு மரம்; sissoo - Dalbergia sissu. (சா.அக.)

**சிசுகத்தி** *šišukatti,* பெ.(n.) கரு(சிசு)க்களை அழிக்கை (இ.வ.); infaniticide, causing abortion or miscarriage.

**த.வ. கருவழிப்பு**

*[Skt. šišu-hatyā > த. சிசுகத்தி]*

**சிசுகத்தி** *šisukatti,* பெ.(n.) **சிசுவத்தி** பார்க்க; see *šisu-vatti.* (சா.அக.)

**சிசுகம்** *šisugam,* பெ.(n.) 1. ஒரு மரம்; an unknown tree. 2. கடற் பன்றி; sea-hog. 3. முதலை; crocodile, whale. (சா.அக.)

**சிசுகாகிதம்** *šisukāgidam,* பெ.(n.) வெள்ளை யெள்ளு; white gingelly seed. (சா.அக.)

**சிசுசிதை-தல்** *šisu-šidai,* -,4 செ. குன்றாவி (v.t.) கருவழிதல்; abortion, miscarriage. (சா.அக.)

*[சிசு + சிதை-]*

**சிசுதானேதிரும்பு-தல்** *šisutāṉē-tirumbu-,* 5 செ.கு.வி. (v.t.) கருப்பைக்குள் குழந்தை யானது தனக்குத் தானே திரும்புதல்; to the spontaneous evolution of the child in the womb. (சா.அக.)

*[சிசு + தானே+திரும்பு-.]*

**சிசுதோடம்** *šisu-tōdam.,* பெ.(n.) குழந்தை களுக்குக் கருப்பத்தில் அல்லது பிறக்கும் பொழுதே ஏற்பட்ட குற்ற (தோச)ங்கள்; congenital diseases or morbid diathesis acquired by children during their birth. (சா.அக.)

**சிசுத்துவம்** *šisuttuvam,* பெ.(n.) குழந்தைப் பருவம்; childhood, in fancy. (சா.அக.)

**சிசுநாயகம்** *šisu-nāyagam,* பெ.(n.) சிறுவர் ஆளும் ஆட்சி (வின்.); government by juveniles, used in contempt.

*[சிசு + நாயகம்.]*

**சிசுநோய்** *šisu-nōy,* பெ.(n.) 1. குழந்தை களுக்கு ஏற்படும் பொதுவான நோய்கள்; diseases of children in general. 2. குழந்தைகளின் உடம்பை அடுத்த நோய்கள்; constitutional diseases of children. (சா.அக.)

*[சிசு + நோய்.]*

[Skt. *šišu* > *த. சிசு*]

**சிசுபுடம்** *šisu-puḍam,* பெ.(n.) இருபது வறட்டியினால் போடும் புடம்; calcination effected with twenty cow-dung cakes. (சா.அக.)

*[சிசு +புடம்.]*

[Skt. *šišu* > *த. சிசு*]

**சிசுமரம்** *šisu-maram,* பெ.(n.) 1. நூக்கமரம்; cissum tree-Dalbergia sesso. 2. **சிசு** பார்க்க; see *šisu.* (சா.அக.)

*[சிசு + மரம்.]*

[Skt. *šišu* > *த. சிசு*]

***சிசுமரி–த்தல்*** šišu-mari-, 4 செ.கு.வி.(v.i.) குழந்தை கருப்பத்தில் இறத்தல்; to die as of a child in the womb still-born. (சா.அக.)

*[சிசு + மரி–,]*

[Skt. *šišu* > *த. சிசு*]

**சிசுமாந்தம்** *šisu-māndam,* பெ.(n.) 1. குழந்தைகளுக்குக் காணும் மாந்தநோய்; indigestion in children. 2. மாந்தக் கொடி; an unknown creeper. (சா.அக.)

**த.வ. பிள்ளைமாந்தம்**

*[சிசு + மாந்தம்.]*

**சிசுமாரம்** *šisu-māram,* பெ.(n.) 1. கடற்பன்றி; porpoise, sea-hog. 2. முதலை; crocodile, the Gangetic dolphin. 3. முதலையைப் போன்ற ஒரு பெருமீன்; a large fish of the species of whale. (சா.அக.)

**சிசுமூலிகம்** *šišu-mūligam,* பெ.(n.) 1. நூலாஞ்செடி; cotton tree. 2. நூலிலைச் செடி; doodooga - polyalthia cerasoides. (சா.அக.)

**சிசுமூலிகா** *šišu-mūligā,* பெ.(n.) **சிசுமூலிகம்** பார்க்க; see *šisumūligam.* (சா.அக.)

**சிசுரம்** *šišuram,* பெ.(n.) 1. கிலுகிலுப்பை; rattle-wort. 2. புளி; tamarind. (சா.அக.)

**சிசுரவாரி** *šisura-vāri,* பெ.(n.) **சிசுரம்** பார்க்க; see *šišuram.* (சா.அக.)

**சிசுராலிகம்** *šisurāligam,* பெ.(n.) ஆவிரை; tanner's senna - Cassia auriculata. (சா.அக.)

**சிசுருட்சை[1]** *šisu-rutcai,* பெ.(n.) (நோயாளி, முதியவர் முதலியோருக்குச் செய்யும்) பணிவிடை; caring : nursing (esp. the sick and the old). *'ஒரு மாதம் நான் நோய் வாய்ப்பட்டிருந்தபோது என் மனைவி செய்த சிசுருட்சைகளை மறக்க முடியாது'* (உ.வ.)

**த.வ. பணிவிடை**

**சிசுருட்சை[2]** *šišurutcai,* பெ.(n.) குற்றேவல்; service, nursing.

***[Skt. šušrūṣā** > த. சிசுருட்சை]*

**சிசுரோகம்** *šisu-rōgam,* பெ.(n.) குழந்தைக்கு வரும் நோய்; diseases attacking especially children, diseases peculiar to children. (சா.அக.)

**த.வ. குழந்தைநோய்**

*[சிசு + ரோகம்]*

**சிசுவத்தி** *šišu-vatti,* பெ.(n.) **சிசுவதை** பார்க்க; see *šisuvadai.*

**சிசுவதை** *šisu-vadai,* பெ.(n.) 1. கருவிலிருக்கும் குழந்தையைக் கரைக்கை; causing abortion, aborting. 2. குழந்தையைக் கொல்லுகை; child murder, infanticide.

**த.வ. குழந்தைக்கொலை**

*[சிசு + வதை.]*

**சிசுவாகடம்** *šišu-vāgadam,* பெ.(n.) குழந்தை நோய்களைப் பற்றிய மருத்துவநூல்; a treatise on children's diseases.

**த.வ. குழந்தை மருத்துவ நூல்**

*[சிசு + வாகடம்.]*

**சிசுவாரிணி** *šišu-vāriṇi,* பெ.(n.) அப்பொழுது பிறந்த குழந்தை; new-born baby. (சா.அக.)

**சிசுவாருணி** *šišu-vāruṇi,* பெ.(n.) **சிசுவாரிணி** பார்க்க; see *šišuvāriṇi.* (சா.அக.)

**சிசுவிசேதம்** *šišuvišēdam,* பெ.(n.) அறுவை செய்து குழந்தையை வெளிப்படுத்தல்; the dismembering of the foetus in the womb in order to admit or facilitate delivery - Embryotomy. (சா.அக.)

**சிசுவியற்கைத்திருப்பம்** *šišu-v-iyarkai-t-tiruppam,* பெ.(n.) 1. கருப்பைக்குள் குழந்தை தனக்குத் தானே திரும்புகை; the spontaneous evolution of the foetus in the womb. 2. **சிசுதானேதிரும்பு-தல்** பார்க்க; see *šišutānē-tirumbu-,.* (சா.அக.)

**சிசுணம்** *šisuṇam,* பெ.(n.) ஆதொண்டை; climbing caper, - Capparis horrida. (சா.அக.)



**சிஞ்சிதம்** *šiñjidam,* பெ.(n.) அணிகலன்களின் ஓசை; நகையொலி; tinkling of ornaments. *"நாணொலியோடணி சிஞ்சிதமும் மெழ" (பாரத. பதினேழாம். 64).*

*[Skt. šiñjita > த. சிஞ்சிதம்]*

**சிஞ்சினி** *šiñjiṉi,* பெ.(n.) வில்லின் நாண்; bow-string. *"சிஞ்சினீமுகந் நெறித்தனன்" (பாரத. காண்டவ. 9).*

*[Skt. šiñjini > த. சிஞ்சினீ]*



**சிஞ்சுபம்** *šiñšupam,* பெ.(n.) நூக்கு மரம்; shisham. *"சிஞ்சுபவ்னத்திடை" (கம்பரா. சடாயுவு. 146).*

*[Skt. šiṃšupā > த. சிஞ்சுபம்]*

**சிஞ்சை**[1] *šiñjai,* பெ.(n.) முழக்கம்; rumbling sound. *"சிஞ்சை யிடங்கரை" (கல்லா. 26, 24).*

*[Skt. šiñjā > த. சிஞ்சை]*

**சிஞ்சை**[2] *šiñjai,* பெ.(n.) 1. புளி (சங்.அக.); tamarind. 2. புளிப்பு; sourness. *"சிஞ்சையிலின் பலியுமாகும்" (தைலவ. தைல. 105).*

*[Skt. ciñcā > த. சிஞ்சை]*

**சிஞ்ஞாசு** *šiññāšu,* பெ.(n.) உண்மையான அறிவைப் பெற விரும்புவோன்; a seeker of true knowledge, enquirer. *"சிஞ்ஞாசு ஞானவா னென்றிரண்டு பேர்கள்" (கைவல். சந்தேக. 162).*

த.வ. மெய்ம்மைவிரும்பி

*[Skt. jijñāsu > த. சிஞ்ஞாசு]*

**சிட்சகன்** *šiḍšagaṉ,* பெ.(n.) 1. கற்பிப்போன்; teacher, instructor. 2. தண்டிப்பவன் (சங்.அக.); punishing authority.

*[Skt. šikṣaka > த. சிட்சகன்]*

**சிட்சி-த்தல்** *šiṭši-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. தண்டித்தல்; to reprove, punish. 2. கற்பித்தல் (சங்.அக.); to teach, train.

*[Skt. šikṣā > த. சிட்சி-த்தல்]*

**சிட்சை** *šiṭcai,* பெ.(n.) 1. தண்டனை; reproof, punishment. 2. பயிற்சி; teaching, training. 3. இசை (சங்கீத)ப்பயிற்சி முதலியன; lessons in music and dancing. *'அவளுக்குச் சிட்சை சொல்லி வைக்கிறான்'.* 4. எழுத்துக்களின் பலுக்கம் (உச்சரிப்பு) முதலியவற்றை உணர்த்துவதும் வேதாங்கம் ஆறனுள் ஒன்றுமான நூல்;

treatise dealing with vēdic phonology, one of six *vēdāṅgam*, q.v. *"சிட்சை சோதிடாதி மற்றங்க நூல்" (தாயு. ஆகார. 10).*

***[Skt.** šikṣā > த. சிட்சை]*

**சிட்சைரட்சை** *šiṭcai-raṭcai,* பெ.(n.) அடிப்பும் அணைப்பும் (வின்.); punishment and protection.

***[Skt.** šikṣā+rakṣā > த. சிட்சைரட்சை]*

**சிட்டபரிபாலனம்** *šiṭṭa-pari-pālaṉam,* பெ.(n.) நல்லோரைக் காப்பாற்றுகை (வின்.); protection of the good.

**சிட்டர்** *šiṭṭar,* பெ.(n.) 1. மறை (வேத வேதாங்கங்)களைக் கற்றுவல்ல பெரியோர்; learned persons well versed in vēdic lore. *"சிட்டர் வாழ் தில்லை" (தேவா. 2, 10).* 2. கல்வி நிரம்பிய சான்றோர்; wise, learned men. *"அரசன் சிட்டரை யெல்லாங் கூவி" (இறை. பக். 6).*

***[Skt.** šiṣṭa > த. சிட்டர்]*

**சிட்டன்** *šiṭṭaṉ,* பெ.(n.) மாணாக்கன்; pupil, disciple. *"சிட்ட னிவ்வாறு சொல்ல" (கைவல். தத்துவ. 87).*

***[Skt.** šiṣya > த. சிட்டன்]*

**சிட்டாசாரம்** *šiṭṭāšāram,* பெ.(n.) பெரியோர் கையாண்ட வழக்கம்; established line of conduct or usage of the virtuous as an authority in the absence of 'šruti' and 'smṛti'. *"சிட்டாசரத்தோடும் முரனுவன வன்றி" (சித். மராகண். 21).*

***[Skt.** šiṣṭa+ā-cāra > த. சிட்டாசாரம்]*

**சிட்டி-த்தல்** *šiṭṭi-,* 4. செ.குன்றாவி.(v.t.) 1. படைத்தல்; to create, make, produce 2. கற்பனை செய்தல்; to fabricate, as a document இது சிருட்டித்த ஆவணம். *"தரைவிசும்பைச் சிட்டித்த விருக்கன்" (திருப்பு. 419).*

**த.வ. படைத்தல்**

***[Skt.** sṛṣṭi > த. சிட்டி-,]*

**சித்தசமாதானம்** *šittašamādāṉam,* பெ.(n.) மனவமைதி (வின்.); peace of mind, tranquility.

**த.வ. மனவமைதி**

*[சித்தம் + சமானம்.]*

**சித்தசமுன்னதி** *šitta-samuṉṉadi,* பெ.(n.) செருக்கு; egotism.

***[Skt** citta+sam-un-nati > த. சித்தசமுன்னதி]*

**சித்தசரணம்** *šitta-šaraṇam,* பெ.(n.) சித்தரை அடைக்கலம் புகுகை (சீவக. 1, உரை); seeking refuge with the Siddhas or the perfected ones.

***[Skt** siddha+šaraṇa > த. சித்தசரணம்]*

**சித்தசன்** *šittašaṉ,* பெ.(n.) மன்மதன் (மனத்தில் தோன்றுபவன்); Kāma, as mind-born. *"சித்தசற் புரிதரு செங்கண்மால்" (கந்தபு. மார்க்கண்டேயப். 281).*

***[Skt.** citta-ja > த. சித்தசன்]*

**சித்தசாதனம்** *šitta-šādaṉām,* பெ.(n.) 1. முன்பே எண்ணிய (சிந்தித்த) தொன்றைப் பின்னுஞ் செய்து முடிக்கை (சாதிக்கை); fallacy of proving what has already been proved. *"அதுவுஞ் சித்தசாதனம்" (சித். மரபுகண்.).*2. வெண்கடுகு (மலை.); white mustard.

***[Skt** siddha+sādhana > த. சித்தசாதனம்]*

**சித்தசாந்தி** *šitta-šāndi,* பெ.(n.) மனவமைதி; stoical tranquility of mind. *"சித்த சாந்தியுடனே சரிப்போரும்" (அருட்பா. i, நெஞ்சறி. 689).*

***[Skt** siddha+sānti > த. சித்தசாந்தி]*

**சித்தசுத்தி** *šitta-šutti,* பெ.(n.) மனத்தூய்மை; purity of mind. *"சித்தசுத்தியும் பல்வகைச் சித்தியும் பயக்கும்" (திருவிளை. மாயப். 32).*

***[Skt** siddha+šutti > த. சித்தசுத்தி]*

**சித்தசுவாதீனம்** *šitta-šuvādīṉam*, பெ.(n.) மனம் வசப்பட்டிருக்கை (கொ.வ.); control over one's mind; sanity.

த.வ. மனத் தெளிவு

[*Skt. siddha+šuvātin > த. சித்தசுவாதீனம்*]

**சித்தடக்கம்** *šittaḍakkam*, பெ.(n.) **சிற்றடக்கம்** பார்க்க; see *šiṟṟaḍakkam*. *'கட்டடம் சித்தடக்கமாக இருக்கிறது' (இ.வ.)*

**சித்தத்தியாகம்** *šitta-t-tiyāgam*, பெ.(n.) **சித்தநிவர்த்தி** பார்க்க; see *šittanivartti*.

**சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்** *šittattai-c-civaṉpālēvaittār*, பெ.(n.) உள்ளத்தைச் சிவனிடத்தே வைத்தவர் தொகையடியாருள் ஒரு கூட்டத்தார் (பெரியபு); those who are absorbed in the contemplation of Šivan, one of *togai-y-aḍiyār*, q.v.

**சித்தநிவர்த்தி** *šitta-nivartti*, பெ.(n.) எல்லாப் பொருளிலும் பற்றுவிடுகை; subjugation of the will; renunciation of all worldly attachments and desires (j).

**சித்தப்படுத்து-தல்** *šitta-p-paḍuttu-*, 5 செ.குன்றாவி.(v.t.) அணிய (ஆயத்த)ஞ் செய்தல் (இ.வ.); to prepare, make ready.

**சித்தப்பிரமை** *šitta-p-piramai*, பெ.(n.) 1. மனமயக்கம் (வின்.); infatuation, stupefaction. 2. கோட்டி (பைத்தியம்) (சங்.அக.); insanity. 3. இசிவு (சன்னி)வகை (இ.வ.); delirium.

[*Skt. citta+bhrama > த. சித்தப்பிரமை*]

**சித்தபரமேட்டிகள்** *šitta-paramēṭṭikaḷ*, பெ.(n.) சித்தர் (சீவக. 962, உரை); supernals, perfected ones.

**சித்தபரிகர்மம்** *šitta-parikarmam*, பெ.(n.) மைத்திரி, கருணை, முதிதை, இகழ்ச்சி என்ற நான்கு குணங்கள் (பரிபா. 4, 1, உரை) (சித்தத்தை அலங்கரிப்பவை); virtues which cleanse the mind, as adorning the mind, four in number, viz., *maittiri, karuṇai, mudidai, igaḻcci*.

[*Skt. citta+parikarman > த. சித்தபரிகர்மம்*]

**சித்தபுத்தி** *šitta-putti*, பெ.(n.) மனம்; mind. *"துரியோதனன் சொன்ன பருஷவாக்கியம் நின் சித்தபுத்தியில் வைக்கத்தக்க தில்லை" (பாரதவெண். 116, உரை).*

**சித்தபுருசன்** *šitta-purušaṉ*, பெ.(n.) **சித்தன்**[1] பார்க்க; see *šittaṉ*.

**சித்தமுகம்** *šitta-mugam*, பெ.(n.) கிலுகிலுப்பை (மலை); laburnum-leaved rattlewort.

[*Skt. siddha+mukha > த. சித்தமுகம்*]

**சித்தயோகம்** *šitta-yōgam*, பெ.(n.) ஆகூழ் (யோகம்) ஆறனுள் ஒன்று (விதான. குணாகுண. 19, உரை); an auspicious conjunction of a week day with a nakṣatra, one of six yōgam, q.v.

[*Skt. siddha+yōga > த. சித்தயோகம்*]

**சித்தலயம்** *šitta-layam*, பெ.(n.) பரம்பொருளுடன் மனமொன்றுகை (வின்.); complete subjugation of the will and identification of the soul with the supreme ascetic.

**சித்தவிகாரம்** *šitta-vigāram*, பெ.(n.) மனமாறுபாடு (மனோவிகாரம்); changing mental mood. *"சித்தவிகாரக் கலக்கந் தெளிவித்த" (திருவாச. 10, 6).*

**சித்தவிப்பிரமம்** *šitta-vippiramam*, பெ.(n.) இசிவு (சன்னி) வகை (யாழ்.அக.); fainting fits, syncope.

[*Skt. citta-vibhrama > த. சித்தவிப்பிரமம்*]

**சித்தவிருத்தி** *šittavirutti*, பெ.(n.) மனப்பாங்கு (இ.வ.); temperament, disposition.

[*Skt. citta-vṛtti > த. சித்தவிருத்தி*]

**சித்தவிலாசம்** *śitta-vilāśam,* பெ.(n.) உலகப்பற்றில் ஈடுபடுகை (வின்.); yielding to the desires of earthly passion, without control, opp. to cittalayam.

**சித்தாசித்தம்** *śittāśittam,* பெ.(n.) ஐயத்துக் கிடமான பொருளை ஏதுவாகக் கொண்டு கணிப்பு (அனுமானம்) செய்வதாகிய ஏதுப்போலிவகை; a fallacious reasoning in which cātaṉam or the minor term given is doubtful. *"சித்தாசித்தமாவ தேதுச் சங்கயமாய்ச் சாதித்தல்" (மணிமே. 29, 203, 4).*

த.வ ஐயக்காரணஎதிராடல்

*[Skt. siddhāsiddha > த. சித்தாசித்தம்]*

**சித்தாதிகள்** *śittātikaḷ,* பெ.(n.) பொன்னாக்கம் (இரசவாதம்) முதலான அரிய வித்தைகள் கை வந்தவரெனக் கருதப்படும் ஓகி (யோகி)கள்; a sect of yōgis who are believed to possess supernatural or magical powers such as transmuting iron into gold. *"மேம்படுசித்தாதிகள் செய்வித்தை யிலும்" (பணவிடு. 101).*

**சித்தாந்தத்தொகை** *śittānta-t-tōgai,* பெ.(n.) தமிழ் மொழியில் செய்த ஒரு புத்த நூல்; (சி.சி.பா.சௌத்.2,உரை); a treatise in Tamil on Buddhism.

**சித்தாந்தசாத்திரம்** *śittānda-śāttiram,* பெ.(n.) சிவனியக் கொண்முடிபை (சைவ சித்தாந்தத்தை)க் கூறுவனவாகிய மெய் கண்ட சாத்திர முதலியன (சங்.அக.); treatises on the śaiva siddhānta philosophy especially the 14 text books known as the *meykaṇḍa-śāttiram.*

*[Skt.siddhānta+śāstra>த.சித்தாந்தசாத்திரம்]*

**சித்தாந்தசிகாமணி** *śittānda-śigāmaṇi,* பெ.(n.) 1. சிவப்பிரகாசரால் 17-ம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட ஒரு வீரசைவநூல்; a vīra-saiva treatise by sivappiragāśar, in the 17th C. 2. அம்பல வாணதேசிகரியற்றியதும் பண்டார சாத்திரத்தொன்றுமாகிய கொண்முடிபு (சித்தாந்த) நூல்; a śaiva siddhānda treatise by Ampala-vāṇa-dēśikar, one of paṇḍāra-śāttiram, q.v.

*[Skt. siddhānta + śikhā-maṇi > த. சித்தாந்தசிகாமணி]*

**சித்தாந்தசைவம்** *śittānda-śaivam,* பெ.(n.) பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளுண்மையை மேற்கொண்டு மும்மலங்களும் ஆற்றல் கெட ஆன்மா சத்திநிபாதமடைந்து திருவருளால் முத்திபெறுமென்று கொள்வதாகிய சைவ சமய பேதம் (சி.சி. 4, 13, உரை); a philosophical system of the Saivaites which recognises the three entities of Śiva, soul and māyā and holds that salvation is for those who have subdued the threefold mala and obtained God's grace.

த.வ. கொண்முடிபுச்சிவனியம்

**சித்தாந்தமோகம்** *śittāndamōgam,* பெ.(n.) பேரோசனை என்னும் மாழை (உலோக) வகை (வின்.); a kind of ore.

**சித்தாயதனம்** *śittāyadaṉam,* பெ.(n.) விசயார்த்த மலையின் கீழ்த் திசையில் மலைமுகட்டில் உள்ள முதன்மையான அருகன் கோயில்; the jaina shrine on the foremost peak east of the Vijayārtta mountain. *"சிவத்திறை யுறையுஞ் சித்ராயதன நற்கூடம்" (மேருமந். 620).*

*[Skt. siddāya-tana > த. சித்தாயதனம்]*

**சித்தார்** *śittār,* பெ.(n.) அறமன்ற அழைப்பு; summons.

*[Port. citar > த. சித்தார்]*

**சித்தார்த்தம்** *śittārttam,* பெ.(n.) வெண் கடுகு (பிங்.); white mustard.

*[Skt. siddhārtha > த. சித்தார்த்தம்]*

**சித்தார்த்தன்** *šittārttan*, பெ.(n.) வீடுபேற்றை (நிர்வாணத்தை)யடைந்த புத்தன்; Buddha, as one who realised the great objective of life.

*[Skt. siddhārtha > த. சித்தார்த்தன்]*

**சித்தார்த்தி** *šittārtti*, பெ.(n.) வடமொழி யாளரின் ஆண்டு அறுபதனுள் ஐம்பத்து மூன்றாவது; the 53rd year of the jupitar cycle.

*[Skt. siddhārthin > த. சித்தார்த்தி]*

**சித்தாரி-த்தல்** *šittāri-*, 4 செ.கு.வி.(v.i.) வழக்கு தொடுத்தல்; to file a suit or case in court (J).

*[Port. citar > த. சித்தாரி-,]*

**சித்திகணபதி** *šitti-ganapadi*, பெ.(n.) **சித்திவிநாயகன்** (வின்.) பார்க்க; see *šitti-vināyagan*.

**சித்தியடை-தல்** *šitti-yadai-*, 2 செ.கு.வி.(v.i.) 1. பயன (அனுகூலம)டைதல்; to succeed. 2. வீடுபேறு அடைதல்; to obtain salvation. to die, euphemistically said of ascetics.

**சித்தியாரோகணம்** *šitti-yā-rōganam*, பெ.(n.) உடன்கட்டை யேறுகை (யாழ்.அக.); suttee.

**சித்திரகாயம்** *šittirakāyam*, பெ.(n.) புலி; tiger, panther. *"கடும்புலிகளயர்ந்து சித்திரகாயமெனும் பெயர்விளக்க" (அழகர்கல. 1).*

*[Skt. citra-kāya > த. சித்திரகாயம்]*

**சித்திரகாரன்** *šittirakāran*, பெ.(n.) 1. ஓவியன்; சித்திரமெழுதுவோன்; painter. portrait-painter. *"சித்திரகாரருஞ் செல்கெனச் சொல்லி" (பெருங். வத்தவ. 3, 28).* 2. சிற்பி (சூடா.); sculptor, engraver.

**சித்திரகாரி** *šittira-kāri*, பெ.(n.) **சித்திரகாரன்** (மணிமே. 28, 38, அரும்.) பார்க்க; see *šittirakāran*.

*[Skt. citra+kārin > த. சித்திரகாரி]*

**சித்திரகுத்தன்** *šittirakuttan*, பெ.(n.) இயமதருமனிடம் ஆன்மாக்களின் நற்செயல் தீச்செயல்களைக் கணக்கிலெழுதிப் படிப்போன்; Yama's officer who records the good and evil deeds of human beings. *"சித்திரகுத்த னெழுத்தால்" (திவ். பெரியாழ். 5, 2, 2).*

*[Skt. citra-gupta > த. சித்திரகுத்தன்]*

**சித்திரகோசாவளி** *šittira-kōsāvaḷi*, பெ.(n.) வீணை வகை (பரத. ஒழிபி. 15); a kind of lute.

**சித்திரபானு** *šittirapānu*, பெ.(n.) 1. நெருப்பு (பிங்.); fire. 2. கதிவன் (சூரியன்) (சூடா.); sun. 3. வடமொழியாளரின் ஆண்டு அறுபதனுள் பதினாறாவது (சூடா.); the 16th year of the jupiter cycle.

*[Skt. citrabhānu > த. சித்திரபானு]*

**சித்திரபுண்டரம்** *šittira-punḍaram*, பெ.(n.) மாலியர்கள் நெற்றியில் அணிந்துக் (தரித்துக்) கொள்ளும் திருமண்காப்பு (கொ.வ.); the sacred mark worn on the forehead by vaiṣṇavites.

**த.வ. திருமண்**

**சித்திரபுத்திரன்** *šittira-puttiran*, பெ.(n.) **சித்திரகுத்தன்** (இ.வ.) பார்க்க; see *šittira-kuttan*.

**சித்திரரேகை** *šittira-rēgai*, பெ.(n.) 1. உள்ளங்கை வரிகைகளுள் ஒன்று (வின்.); a line in palm of hand significant in palmistry. 2. **அரசு** (மலை) பார்க்க; see *arasu*.

[Skt. *citra+rēgai* > த. *சித்திரரேகை*]

**சித்திரவதம்** *šittira-vadam*, பெ.(n.) அலைப்புக்கொலை (வேதனைப்படுத்திக் கொல்லுகை); butchery, horrible slaughter; torture to death. *"இராமன்*

*வெஞ்சரஞ் சித்திரவதஞ்செயக் கண்டு தீர்தியோ" (கம்பரா. விபீடண. 12).*

த.வ. அலைகொலை

**சித்திரவதை** *šittira-vadai,* பெ.(n.) **சித்திரவதம்** (சங்.அக.) பார்க்க; see *šittiravadam.*

**சித்திரவாராத்தி** *šittira-vārātti,* பெ.(n.) கண்டங்கத்தரி (மலை); a thorny plant with diffuse branches.

*[Skt. kṣudra+vārtāka > த. சித்திரவாராத்தி]*

**சித்திராபூரணை** *šittirā-pūraṇai,* பெ.(n.) **சித்திராபௌர்ணிமை** (சிலப். 5, 64, அரும்.) பார்க்க; see *šittirā-paurṇimai.*

த.வ. மேழவெள்ளுவா

**சித்திராபௌர்ணிமை** *šittirā-paurṇimai,* பெ.(n.) மேழ (சித்திரை) மாதத்து வெள்ளுவாவில் நிகழுந் திருவிழா; festival celebrated on the fullmoon-day in the month of cittirai.

த.வ. மேழத் திருவிழா

**சித்திராம்பரி** *šittirāmpari,* பெ.(n.) மேளகர்த்தாக்களுளொன்று (சங்.சந்.); a primary rāga.

**சித்திரிணி** *šittiriṇi,* பெ.(n.) **சித்தினி** (கொக்கோ. 1. 7. 10) பார்க்க; see *šittiṇi.*

*[Skt. citriṇi > த. சித்திரிணி]*

**சித்திவிநாயகன்** *šitti-vināyagaṉ,* பெ.(n.) பிள்ளையார் (கணபதி); a manifestation of *Gaṇēša.*

**சித்துவேலை** *šittuvēlai,* பெ.(n.) மாயவித்தை; தந்திரவித்தை; magic, sleight of hand. *'ஆளை மறையவைக்கும் சித்து வேலை'.*

*[சித்து + வேலை.]*

**சித்தேசன்** *šittēšaṉ,* பெ.(n.) பிறைநிலா உருவுள்ள தலைக்குட்டை அணிந்த ஒருவகைப் பிச்சைக்காரன் (Tinn); a class of mendicants, wearing crescent-like metal pieces on their head-dress.

**சித்தேசி** *šittēši,* பெ.(n.) **சித்தேசன்** (இ.வ.) பார்க்க; see *šittēšaṉ.*

**சித்தௌடதம்** *šittauḍadam,* பெ.(n.) சித்தமருத்துவ முறைப்படி அமைந்த மருந்து; medicine prepared according to citta-vaittiyam.

**சிதடன்** *šitaḍaṉ,* பெ.(n.) 1. குருடன்; a blind man. 2. அறிவில்லான்; an idiot. (சா.அக.)

**சிதளம்** *šitaḷam,* பெ.(n.) கோடகசாலை; a drug-rungia repens. (சா.அக.)

**சிதளி** *šitaḷi,* பெ.(n.) பொன்னாங்காணி; sessile plant - Illecebrum sessile. (சா.அக.)

**சிதாக்கியா** *šitākkiyā,* பெ.(n.) கிளுவை; commen teal - Querquedula crecca. (சா.அக.)

**சிதாகாசம்**[1] *šitākāšam,* பெ.(n.) 1. பேரறிவுற்ற நிலை; intelligence which knows no bounds. 2. அறிவுவெளி (ஞானாகாசம்) (in philosophy); the wide sphere of pure intelligence. 3. முழுமை (பூரணம்) (In adwaita philosophy); the all - pervading spirit or God or the intellectual ether. 4. பாழ் (சூனிய) நிலை. (சா.அக.) nothingness, vacuum, non-entity.

**சிதாகாசம்**[2] *šitākāšam,* பெ.(n.) அறிவுவெளி (ஞானவெளி) (யாழ்.அக.); region of pure intelligence.

*[Skt. cit+ā-kāša > த. சிதாகாசம்]*

**சிதாகாஞ்சி** *šitākañši,* பெ.(n.) காட்டு முல்லை; wild jasmine - Jasminum angustifolium. (சா.அக.)

**சிதாசமியம்** *šitāšamiyam,* பெ.(n.) கருங்கொள்; black horse-gram - Cassia absus. (சா.அக.)

**சிதாடம்** *šitāḍam,* பெ.(n.) பல்லீறு அழற்சியினால் குருதி (இரத்தம்) ஒழுகி, பல்லை விழச் செய்யுமோர் பல் நோய்; a disease of the gum from which bloody discharges take place from the gums which begin to root out and gradually fall off. (சா.அக.)

**சிதாத்தானம்** *šitā-t-tāṉam,* பெ.(n.) சிதைக்குத் தென்கிழக்கு மூலை; the south-east corner of funeral pyre. *"அங்கிமூலை சிதாத்தானம்" (தத்துவப். 102).*

*[சிதை + தானம்.]*

**சிதாபாங்கம்** *šitāpāṅgam,* பெ.(n.) மயில்; peacock. (சா.அக.)

**சிதாபாசம்** *šitāpāšam,* பெ.(n.) 1. ஆதன் (ஆத்துமா); the soul. 2. உயிர் (சீவன்); life. (சா.அக.)

**சிதாபு** *šitābu,* பெ.(n.) பொன்னாங்காணி; sessile - Illecebrum sessile. (சா.அக.)

**சிதாமலா** *šitāmalā,* பெ.(n.) சர்க்கரை; sugar. (சா.அக.)

**சிதாம்புசம்** *šitāmbušam,* பெ.(n.) வெண்டாமரை (மலை.); white lotus.

*[Skt. sita+ambu-ja > த. சிதாம்புசம்]*

**சிதாம்பூகம்** *šitāmbūgam,* பெ.(n.) ஆள்வாடைத் தட்டி; an unknown plant. (சா.அக.)

**சிதாம்போசம்** *šitāmbōšam,* பெ.(n.) **சிதாம்புசம்** (மலை.) பார்க்க; see *šidāmbušam.*

*[Skt. sita+ambhō-ja > த. சிதாம் போசம்]*

**சிதாயதம்** *šitāyadam,* பெ.(n.) ஐந்தெழுத்து மந்திரம் (பஞ்சாட்சரம்); the five mystic letters capable of destroying the mind and its faculties. (சா.அக.)

**சிதாயம்** *šitāyam,* பெ.(n.) கடலை; Bengal gram - cicer arietinum.(சா.அக.)

**சிதாரி** *šitāri,* பெ.(n.) பவள மறுகு; red couch grass. (சா.அக.)

**சிதாரிகம்** *šitārigam,* பெ.(n.) **சிதாரி** பார்க்க; see *šitāri.* (சா.அக.)

**சிதாலதம்** *šitālatam,* பெ.(n.) 1. கருப்பறுகு; black cynodon grass - cynodon dactylon. 2. வெள்ளறுகு; white cynodon grass. (சா.அக.)

**சிதாவிபரி** *šitāvipari,* பெ.(n.) இதிரக் கிழங்கு; wild yam root - Dracontium polyphyllum. (சா.அக.)

**சிதானகம்** *šitāṉagam,* பெ.(n.) கருடக் கொடி; Indian birth - wort, Aristolochia indica. (சா.அக.)

**சிதானந்தம்** *šitāṉandam,* பெ.(n.) அகமகிழ்வு (ஞானானந்தம்); spiritual happiness. (சா.அக.)

**சிதானனன்** *šitāṉaṉaṉ,* பெ.(n.) கழுலன் (கருடன்); brahmini kite, Haliastur indus. (சா.அக.)

**சிதி**[1] *šiti,* பெ.(n.) 1. வெண்மை; whiteness. 2. கருப்பு; blackness. (சா.அக.)

**சிதி**[2] *šiti,* பெ.(n.) கோடாரி (யாழ்.அக.); axe.

*[Skt. chidi > த. சிதி]*

**சிதிச்சதம்** *šiticcadam,* பெ.(n.) பாலைத் தண்ணீரினின்று பிரிக்கக் கூடிய ஆற்றல் வாய்ந்ததாகக் கருதப்படும் ஓதிம (அன்ன)ப் பறவை; swan of the olden days capable of seperating the milk from water. (சா.அக.)

**த.வ. ஓதிமம்**

**சிதிரம்** *šitiram,* பெ.(n.) நெருப்பு; fire.

**சிதிலம்** *šitilam,* பெ.(n.) 1. தளரல்; loosening. 2. கீல் தளரல்; loosening of joints.

3. பதனழிவு; rottenness. 4. நெகிழ்தல்; relaxing. (சா.அக.)

**சிதிலாவர்த்தவாதம்** *šitilāvartta-vādam,* பெ.(n.) சீதளம், செரிமானமாகக் கடின மானவற்றை உண்பதால் நரம்புகள் தொல்லை (வேதனை) கண்டு, அனைத்து மூட்டுகளையும் தளரச் செய்யும் ஓர் ஊதை (வாத) நோய்; a kind of rheumatism tending of affect the nerves and loosen the joints, due to eating cold and indigestible substances. (சா.அக.)

**சிதுமலர்** *šitumalar,* பெ.(n.) தண்ணீர் விட்டான்; water-root - Asparagus recemosus. (சா.அக.)

**சிதுமலி** *šitumali,* பெ.(n.) பச்சைக் கடுக்காய்; raw or fresh gall-nut. (சா.அக.)

**சிதேந்திரம்** *šitēndiram,* பெ.(n.) கோயில் (பிங்.); temple.

*[Skt. jinēndra > த. சிதேந்திரம்]*

**சிதேந்திரியன்** *šitēndiriyan,* பெ.(n.) புலன்களை வென்றோன்; one who has subdued his senses. *"கங்குறீபோ தகன்றபின் னிவர் சிதேந்திரியர்" (பிரபோத. 10, 11).*

*[Skt. jita+indriya > த. சிதேந்திரியன்]*

**சிந்தனாவாதி** *šindanāvādi,* பெ.(n.) ஆழமாக (தீவிரமாக) எண்ணி(சிந்தித்து)க் கருத்து களை வெளிப்படுத்துபவர்; thinker, intellectual.

*[சிந்தணை > சிந்தனா + வாதி.]*

**சிந்தாக்கிராந்தன்** *šindā-k-kirāndan,* பெ.(n.) கவலையுள் ஆழ்ந்தவன் (கொ.வ.); one stricken with grief.

*[Skt. cintā+ā-krānta > த. சிந்தாக்கிராந்தன்]*

**சிந்தாகுலம்** *šindākulam,* பெ.(n.) மனக் கவலை; care, deep sorrow. *"சிந்தாகுல முற்றென்னோ வென்னை வாட்டத திருத்துவதே" (திருக்கோ. 12).*

*[Skt. cintā+ā-kula > த. சிந்தாகுலம்]*

**சிந்தாசமத்தி** *šindā-šamatti,* பெ.(n.) பிறர் கருத்தினை நுட்பமதியால் உணர்ந்து பாடும் பா(கவி)த்திறமை (தமிழ்நா. பக். 5); trial of poetic skill by which the competitors are required to divine the thoughts of a person and give the same in verse form.

*[Skt. cinta-samasyai > த. சிந்தாசமத்தி]*

**சிந்தாத்திரி** *šindāttiri,* பெ.(n.) 1. காப்பான செலவு (நல்ல பயணம்); safe voyage or journey. *சிந்தாத்திரியாகப் போய்விட்டுவா".* 2. நல (சுக)வாழ்வு; welfare, prosperity.

**சிந்தாத்திரை** *šindāttirai,* பெ.(n.) **சிந்தாத்திரி** (j) பார்க்க; see *šintāttiri.*

**சிந்துராமக்கிரியை** *šindurāmakkiriyai,* பெ.(n.) பண்வகை (பரத. ராக. 104); a specific melody-type.

**சிந்துலவணம்** *šindu-lavaṇam,* பெ.(n.) கடலுப்பு (வின்.); sea salt.

**சிநேகபாவம்** *šinēgabāvam,* பெ.(n.) நட்புணர்வு; friendliness. *'அவர் எல்லோரிடமும் சிநேகபாவத்துடன் பழகுவார்'.*

*[சிநேகம் + பாவம்.]*

**சிநேகம்** *šinēgam,* பெ.(n.) நட்பு; friendship.

**சிநேகிதம்** *šinēgidam,* பெ.(n.) **சிநேகம்** பார்க்க; see *šinēgam.*

**சிநேகிதன்** *šinēgidan,* பெ.(n.) நண்பன்; friend.

**சிநேகிதி** *šinēgidi,* பெ.(n.) நண்பன் என்பதன் பெண்பால்; feminine of *šinēgidan.*

**சிப்பந்தி** *šippandi,* பெ.(n.) படைக்கலம் ஏந்திய காவற்படை (G.md. D.i. 197); armed police.

*[**Persn.** sibandi > த. சிப்பந்தி]*

**சிப்பில்** *šippil,* பெ.(n.) வடிதட்டு (வ.வ.); rice-strainer, colander.

**சிப்பிலாட்டி** *šippilātti,* பெ.(n.) தொந்தரை (யாழ்.அக.); trouble.

**சிப்ளாக்கட்டை** *šiplā-k-kattai,* பெ.(n.) **சப்பளாக்கட்டை** பார்க்க; see *sappalā-k-kattai.*



**சிபிடம்** *šipidam,* பெ.(n.) மணி (இரத்தின) வகை (சுக்கிரநீதி. 186); a kind of gem.

*[**Skt.** cipita > த. சிபிடம்]*

**சிபுகம்** *šipugam,* பெ.(n.) கன்னம்; cheek. *"பொலிவுறு நின்சிபுகம் போற்றின்" (சௌந்தரிய. 66).*

*[**Skt.** cibuka > த. சிபுகம்]*

**சிம்சுமாரப்ரசாபதி** *šimšumāra-p-rašāpadi,* பெ.(n.) விண்மீன் (நட்சத்திர) பதத்துக்கு மேலெல்லையான துருவ மண்டலம்; the region of the pole star beyond the nakṣatra-pada. *"நக்ஷத்ர பதத்து மேலெல்லை சிம்சுமார ப்ரஜாபதியிறே" (திவ். திருநெடுந். 5, வ்யா. பக். 45).*

**சிம்புளாதனம்** *šimbulātanam,* பெ.(n.) ஒகவிருக்கை (யோகாசன) வகை (தத்துவப். 109, உரை); a yogic posture (saiva).

**சிம்மசொப்பனம்** *šimma-šoppanam,* பெ.(n.) திகிலை ஏற்படுத்தும் பேரச்சம் (பயங்கரம்), நடுநடுங்க வைப்பது; nightmare, devil incarnate, terror. *'கணித ஆசிரியர் என்றால் மாணவர்களுக்கு சிம்ம சொப்பனம்'.*

**த.வ. நடுக்கக்கனவு**

*[சிம்மம் + சொப்பனம்.]*

**சிம்மகாரம்** *šimmagāram,* பெ.(n.) பண் வகை (பரத. ராக. 104); a specific melody-type. (mus.)

**சிம்மேந்திரமத்யமம்** *šimmēndira-matyamam,* பெ.(n.) பண்வகை, (மேள கர்த்தாக்)களுளொன்று (சங்.சந்.); a primary rāga.

**சிம்னி** *šimni,* பெ.(n.) **சிமினி** பார்க்க; see *simini.*

**சிமிட்டி** *šimitti,* பெ.(n.) சுதைமா, பொருளின் மேல் பற்றிக் கொள்ளும் தன்மை உடைய தாகச் சுண்ணாம்பு, களிமண் முதலிய வற்றைக் குறிப்பிட்ட அளவில் கலந்து செய்த கருஞ் சாம்பல் நிற மாவுப் பொருள்; cement. வீடு கட்ட முடியவில்லை, சிமிட்டி விலை ஏறிக்கொண்டே போகிறது (உ.வ.)

*[**E.** cement > த. சிமிட்டி]*

**சிமினி** *šimini,* பெ.(n.) (காற்றினால் சுடர் அணையாமல் இருக்க) மண்ணெண்ணெய் விளக்கில் பொருத்தும் கண்ணாடிக் கூடு; chiney (for kerosene lamps).

**த.வ. ஆடிக்கூடு, மூடாடி**

**சிமினிவிளக்கு** *šimiṉi-viḷakku,* பெ.(n.) கண்ணாடிக்கூடு (சிமினி) பொருத்திய மண்ணெண்ணெய் விளக்கு; kerosene lamp with a chimney.

**த.வ. மூடாடிவிளக்கு**

**சியாமகன்னம்** *šiyāma-kaṉṉam,* பெ.(n.) காது மட்டும் நீலநிறமும் மற்றைப் பாகமெல்லாம் ஒரே நிறமுமுண்டைய குதிரை (சுக்கிரநீதி. 317); horse of a single colour with the ears alone blue.

**த.வ. நீலக்கதுப்பி**

*[Skt. šyāmakarṇa > த. சியாமகன்னம்]*

**சியாமளாங்கி** *šiyāmaḷāṅgi,* பெ.(n.) பண்வகை (மேளகர்த்தாக்)களுளொன்று (சங். சந். 47); a primary rāga.

*[Skt. šyāmalāṅgi > த. சியாமளாங்கி]*

**சியேட்டை** *šiyēṭṭai,* பெ.(n.) ஒரு சிவசத்தி (சைவபூ. சந். 219); a šiva-šakti.

*[Skt. jyēṣṭhā > த. சியேட்டை]*

**சிரச்சேதம்** *širaccēdam,* பெ.(n.) தலையை வெட்டுகை; decapitation.

**த.வ. தலைவெட்டு**

*[Skt. širas+chēda > த. சிரச்சேதம்]*

**சிரசாக்கினை** *širaš-ākkiṉai,* பெ.(n.) கொலைத்தண்டனை (வின்.); capital sentence.

*[Skt. širas+ājñā > த. சிரசாக்கினை]*

**சிரசாவகி—த்தல்** *širašāvagi-,* 4 செ.கு.வி. (v.i.) மதிப்பு (மரியாதை)யுடன் ஏற்றுக் கொள்ளுதல் (யாழ்.அக.) (தலையால் தாங்குதல்); Lit., to bear on one's head, to accept, as a command, etc., with respect.

**சிரசீவி** *širašīvi,* பெ.(n.) **சிரஞ்சீவி** (யாழ்.அக.) பார்க்க; see *širañjīvi.*

**சிரசு** *širašu,* பெ.(n.) தலை; head.

*[Skt. širas > த. சிரசு]*

**சிரசுதயம்** *širaš-utayam,* பெ.(n.) **சிரோதயம்** (யாழ்.அக.) பார்க்க; see *širōtayam.*

*[Skt. širas+udaya > த. சிரசுதயம்]*

**சிரசுவெட்டி** *širašu-veṭṭi,* பெ.(n.) தலையைத் துண்டாக்கும் கருவி (வின்.); executioner's axe.

**சிரஞ்சீவி** *širañjīvi,* பெ.(n.) 1. நெடுநாள் வாழ்பவன்; long-lived person. 2. அகவையிற் குறைந்த ஆண்பாலாரைக் குறித்து மூத்தோர் வாழ்த்தும்போது வழங்குஞ் சொல்; a term of blessing, prefixed to names of male persons either in speech or writing. 3. காகம் (இலக்.அக.); crow. 4. இலவு (இலக்.அக.); silk-cotton tree. 5. மார்க்கண்டேய முனிவர் (இலக். அக.); sage *Mārkkaṇḍēyaṉ.*

**த.வ. நீடுவாழி**

*[Skt. ciram+jīvin > த. சிரஞ்சீவி]*

**சிரஞ்சீவியர்** *širañjīviyar,* பெ.(n.) நீண்ட காலம் வாழ்ந்திருக்க அருள் (வரம்) பெற்றவர் களான அச்சுவத்தாமன், மகாபலி, வியாசன், அநுமான், வீடணன், கிருபாசாரியன், பரசுராமன் என்ற எழுவர் (வின்.); persons blessed with immortality, seven in number viz., *Accuvattāmaṉ, Magāpali, Viyāšaṉ, Aṉumāṉ, Vipiṣaṇaṉ, Kirupāšāriyaṉ, Para-šurāmaṉ.*

**த.வ. நீடுவாழியர்**

**சிரத்தவன்** *širattavaṉ,* பெ.(n.) தலைவன்; leader, great person. *"இச்சிரத்தவ னுரைத்திறுக்கு மேல்வையில்" (கம்பரா. உயுத். மந்திரப். 28).*

*[Skt. širas-stha > த. சிரத்தவன்]*

**சிரத்தார்** *širattār,* பெ.(n.) முறைமன்றம், ஆட்சியர் மற்றும் வட்டாட்சியர் அலுவலகம் ஆகியவற்றில் உள்ள ஆளுவ (நிருவாக)ப் பணியாளர்க்குத் தலைவரான அதிகாரி; head officer of a court of justice or collector's office, head accountant of a taluk who has the general superintendence of the establishment.

த.வ.மேற்காணகர்

*[U. sarrishtadār > த. சிரத்தார்]*

**சிரத்தாமந்தர்** *širattāmandar,* பெ.(n.) கோயிலறங்களை மேற்பார்க்கும் மதிப்புறுவு அறங்காவலர் (M.E.R.163 of 1922); honorary superintendents who take interest in the management of a temple charities.

*[Skt. šradhā+mat > த. சிரத்தாமந்தர்]*

**சிரதரம்** *šira-taram,* பெ.(n.) தலையைத் தாங்குவதாகிய கழுத்து (உரி.நி.); neck, as supporting the head.

*[Skt. širas+dhara > த. சிரதரம்]*

**சிரநதி** *šira-nadi,* பெ.(n.) (பிங்.) சிவனது தலையினின்று பெருகுவதாகக் கருதப்படும் கங்கையாறு; the river Ganges, as flowing from the head of Šivaṉ.

*[Skt. širas+nadi > த. சிரநதி]*

**சிரபங்கம்** *širabaṅgam,* பெ.(n.) **சிரச்சேதம்(j)** பார்க்க; see *širaccēdam.*

*[Skt. siras+bhaṅga > த. சிரபங்கம்]*

**சிரபாத்திரி** *širapāttiri,* பெ.(n.) சிவன்; Šivaṉ, as having skull for his begging bowl. *"சிரபாத்திரி கையிலாயி" (கந்தரந். 34).*

*[Skt. širas+pātrin > த. சிரபாத்திரி]*

**சிரம்பம்** *širambam,* பெ.(n.) ஒருவகை நஞ்சு (சாலாங்கபாடாணம்) (வின்.); a mineral poison.

**சிரமசாத்தியம்** *širamašāttiyam,* பெ.(n.) வருந்திச் செய்யக்கூடியது; that which is accomplishable with difficulty. *'சிரமசாத்தியமான வேலை' (இ.வ.)*

**சிரமதசை** *širamadašai,* பெ.(n.) துன்பப் படுகிற காலம் அல்லது நிலை; period of bad luck or difficulty, straits. *'நிதி உதவியை அரசு நிறுத்திவிட்டதால் இந்த விடுதி சிரமதசையில் இருக்கிறது'.*

த.வ. துன்பநிலை

*[சிரமம்+தசை]*

**சிரமபரிகாரம்** *širamaparigāram,* பெ.(n.) ஓய்வு; rest.

*[சிரமம்+பரிகாரம்]*

**சிரமம்** *širamam,* பெ.(n.) 1. களைப்பு; exhaustion, weariness. *"சிரம மெல்லாஞ் செல்லிருட் டீர்ந்து" (பெருங். இலாவாண. 9, 31).* 2. உழைப்பு; exertion, toil. 3. படை (ஆயுத)ப்பயிற்சி; practice of arms, military, exercise. *"சிரமநீதி...... கண்டு சீறி" (திருவாலவா. 35, 4).*

*[Skt. šrama > த. சிரமம்]*

**சிரமாலை** *širamālai,* பெ.(n.) சிவனணியுந் தலைமாலை (திவா); garland of skulls worn by Šivaṉ.

[சிரம்+மாலை]

*[Skt. širas > த. சிரம்]*

**சிரமிலி** *širamili,* பெ.(n.) தலையில்லாததான நண்டு (சங்.அக.); crab; as having no head.

*[சிரம்+இலி]*

**சிரமேற்கொள்(ளு)-தல்** *širamērkoḷ(ḷu)-,* 10 செ.குன்றாவி.(v.t.) மதிப்புடன் ஏற்றுக் கொள்ளுதல் (தலையால் தாங்குதல்); lit., to bear on one's head to accept as a command etc.

த.வ. தலைமேற்கொள்ளுதல்

*[சிரம்மேல்+கொள்-]*

**சிரமை** *śiramai,* பெ.(n.) சிரமம் 1 பார்க்க; see siramam. *வழிச்சிரமை நீர்மின் (சூளா. தூது. 18).*

*[Skt. śrama > த. சிரமை]*

**சிரவணத்துவாதசி** *śiravaṇattuvādaśi,* பெ.(n.) கன்னிமாதத்தில் வளர்பிறை பன்னீராம் திருவோண நாண்மீன் நாளில் ஏற்கும் நோன்பு; fast observed when śravaṇanakṣatra falls on the twelfth titi of the bright fortnight in pāttirapatam.

*[சிரவணம்+துவாதசி]*

**சிரவணம்** *śiravaṇam,* பெ.(n.) 1. காது; ear. *"சீரார் வசனச் சுவைநோக் கிடுமென் சிரவணமே" (தனிப்பா. ii, 210, 500).* 2. கேள்வி; listening, hearing. *"நல்வேதாந்தத் தெளிவைச் சிரவணஞ் செயலே" (சூத. ஞான. 14, 10).* 3. திருவோண நாண்மீன் (பிங்.); the 22nd nakṣatra.

*[Skt. śravaṇa > த. சிரவணம்]*

**சிராங்கம்**[1] *śirāṅgam,* பெ.(n.) தலை; head.

*[Skt. śiras+aṅga > த. சிராங்கம்]*

**சிராங்கம்**[2] *śirāṅgam,* பெ.(n.) உடல்நலம்; health, soundness. *'அவனுக்கு உடம்பு சிராங்கமாயிருக்கிறது' (இ.வ.)*

**சிராங்கம்**[3] *śirāṅgam,* பெ.(n.) தடையின்மை (இ.வ.); absence of obstruction.

**சிராங்கு** *śirāṅgu,* பெ.(n.) கப்பற்கண்காணி; boatswain, skipper of a small vessel, chief of a lascar crew.

*[U. sar-hang > த. சிராங்கு]*

**சிராத்தம்** *śirāttam,* பெ.(n.) இறந்தோர் பொருட்டுச் செய்யுஞ் சடங்கு; the ceremony of offering oblations of food and water to the manes. *"சிராத்தஞ் செயற்கென" (யசோதர. 3, 33).*

**த.வ. நினைவேந்தல்**

*[Skt. śrāddha > த. சிராத்தம்]*

**சிராப்பு** *śirāppu,* பெ.(n.) காசு (நாணய) நோட்டக்காரன் (இ.வ.); shroff.

*[Ar. sarāfā > த. சிராப்பு]*

**சிராபரன்** *śirāparaṉ,* பெ.(n.) வாராச்சேட்புல (துவாதசாந்தத்தான)த்திலிருக்கும் இறைவன்; god, as the supreme being having His seat at *tuvātacāntam.* *"மனக்கோயிற் சிராபரன்" (திருமந். 1760).*

*[Skt. śiras+para > த. சிராபரன்]*

**சிராய்** *śirāy,* பெ.(n.) காற்சட்டை; trousers.

*[U. sharāi > த. சிராய்]*

**சிராய்ப்பீனசம்** *śirāy-p-pīṉaśam,* பெ.(n.) பீனச நோய்வகை (வின்.); an inflammatory disease with discharges from the nose in bean-like flakes.

**சிரார்த்தம்** *śirārttam,* பெ.(n.) நீத்தார் படையல் (திவசம், திதி) (சமூக வழக்கு); ritual offering to the dead on the occasion of the death anniversary.

**சிராவகன்** *śirāvagaṉ,* பெ.(n.) பௌத்த சமணரில் இல்லறத்தான்; a Buddhist or Jaina lay disciple.

*[Skt. śrāvaka > த. சிராவகன்]*

**சிராவணம்**[1] *śirāvaṇam,* பெ.(n.) 1. பெரும்பாலும் மடங்கல் மாத முழுமதியன்று (ஆவணிப் பூர்ணிமையன்று) புதுப்பூணூல் பூணுதல் முதலிய (பூர்வாங்க)ப் பழமைச் சடங்குகளுடன் மறை (வேத)பாடந் தொடங்கும் சடங்கு; ceremony performed generally on the full moon day in the month of Avaṇi, when the study of the vēdas is commenced with the investiture of a new sacred thread. 2. நிலா மாதத்துள் ஐந்தாவது (யாழ்.அக.); fifth lunar month roughly corresponding to Āvaṇi.

*[Skt. śrāvaṇa > த. சிராவணம்]*

**சிராவணம்**[2] *śirāvaṇam,* பெ.(n.) கல் (சூடா.); stone.

*[**Skt.** grāvan > த. சிராவணம்]*

**சிராவணம்**[3] *śirāvaṇam,* பெ.(n.) இடுக்கிப்பொறி சாவணம்; pincers.

த.வ. குறடு

**சிராவணி** *śirāvaṇi,* பெ.(n.) மடங்கல் முழுமதி நாளில் (ஆவணிப் பௌர்ணிமையில்) நடத்தற்குரிய ஒரு வேள்வி (திவா.); a sacrifice performed on the full-moon day in the month of Āvaṇi.

*[**Skt.** śrāvaṇī > த. சிராவணி]*

**சிராவியம்** *śirāviyam,* பெ.(n.) கேட்டற்கு இனியது; that which is sweet or pleasing to the ear. *'அந்தப்பாடல் சிராவியமாயிருந்தது' (சங்.அக.)*

*[**Skt.** śrāvya > த. சிராவியம்]*

**சிராவிருத்தம்** *śirāviruttam,* பெ.(n.) ஈயம் (யாழ்.அக.); lead.

*[**Skt.** śirāvṛtta > த. சிராவிருத்தம்]*

**சிரானந்தம்** *śirāṉandam,* பெ.(n.) அழியாத இன்பம்; everlasting bliss. *"சிரானந்தம் பூரித்து" (திருமந். 2750).*

*[**Skt.** cira+ā-nanda > த. சிரானந்தம்]*

**சிரி** *śiri,* பெ.(n.) தீர்வைக்குட்பட்ட நிலம் (வின்.); land liable to assessment, dist. fr. *iṉām.*

*[**U.** śēri > த. சிரி]*

**சிரிதம்** *śiridam,* பெ.(n.) கருக்கு (கஷாயம்); decoction or infusion.

*[**Skt.** śṛta > த. சிரிதம்]*

**சிரீதத்தம்** *śirī-tattam,* பெ.(n.) புகழ்ப்பயன் கருதிக் கொடுக்கப்படும் கொடைப் பொருள் (சுக்கிரநீதி. 145); gift made in expectation of fame.

த.வ. புகழ்க்கொடை

*[**Skt.** śrī-datta > த. சிரீதத்தம்]*

**சிரீதரன்** *śirīdaraṉ,* பெ.(n.) திருமால்; Tirumāl *"சிரீதரன்றன் வண்குலவு தண்குழாய்த் தார்" (திவ். இயற். நான்மு. 62).*

*[**Skt.** śrī-dhara > த. சிரீதரன்]*

**சிரீமத்து** *śirīmattu,* பெ.(n.) 1. நற்பேறு (பாக்கியம்); prosperity, wealth. 2. பெருமை தங்கியது (சி.சி.II,2, சிவாக். உரை); that which is great.

*[**Skt.** śrīmat > த. சிரீமத்து]*

**சிரீமுக** *śirīmuka,* பெ.(n.) வடமொழியாளரின் ஆண்டு அறுபதனுள் ஏழாவது (சங்.அக.); the seventh year in the jupiter cycle.

*[**Skt.** śrī-mukha > த. சிரீமுக]*

**சிரீமுகம்** *śirī-mukam,* பெ.(n.) திருமுகம் (வின்.); letter or epistle from a great personage.

*[**Skt.** śrī-mukha > த. சிரீமுகம்]*

**சிரீவற்சம்** *śirīvaṟšam,* பெ.(n.) 1. திருமாலின் மார்பு மச்சம்; திருமறு; திருவத்தம்; mark on Viṣṇu's breast. 2. மார்பில் ஐந்து நற்சுழியுள்ள குதிரை; horse with five curl-marks on its breast, believed to be lucky. *"பிரிவுறவுரத்தி லைஞ்சுழி யுளது பேர்சிரீவற்சமாம்" (திருவிளை. நரிபரி. 112).*

*[**Skt.** śrī-vatsa > த. சிரீவற்சம்]*

**சிரீவிருட்சம்** *śirī-viruṭcam,* பெ.(n.) குதிரைச் சுழிகளுளொன்று (இ.வ.); a curl-mark of horses.

**சிருங்கபசுமம்** *śiruṅga-pašumam,* பெ.(n.) மான்கொம்பாற் செய்யும் பொடி (சங்.அக.); medicinal powder, obtained by calcining deer's horn.

*[**Skt.**sringa + basma> த. சிருங்கபசுமம்]*

**சிருங்கம்** *śiruṅgam,* பெ.(n.) 1. விலங்கின் கொம்பு; horn of a quadruped. *"ஒருகலை முகச்சிருங்க முயர்தவன்" (கம்பரா. திருவவ. 33).* 2. கொடுமுடி; peak. *"சதசிருங்க*

*வெற்பெனத் திசை போயது" (காஞ்சிப்பு. சனற்குமார. 5).* 3. **சிருங்கவான்** பார்க்க; see *śiruṅgavāṉ.* *"வடகடல் முதலாச் சிருங்கங் காறுங் குருவருடம்" (கந்தபு. அண்டகோ. 36).*

*[Skt. sṛśṅga > த. சிருங்கம்]*

**சிருங்கலம்** *śiruṅgalam,* பெ.(n.) **சிருங்கலை** (வின்.) பார்க்க; see *śiruṅgalai.*

**சிருங்கலை** *śiruṅgalai,* பெ.(n.) 1. விலங்கு (சூடா.); chain or fetter. 2. இருப்புச் சங்கிலி; iron chain. *"சிருங்கலையைப் பூட்டிடுவர்" (சிவதரு. சுவர்க்க. 179).* 3. வில்லங்கம் (இ.வ.); encumbrance.

*[Skt. śṛṅkhalā > த. சிருங்கலை]*

**சிருங்கவான்** *śiruṅgavāṉ,* பெ.(n.) பூவுலகின் (பூமியின்) எல்லையில் அமைந்த மலை (பர்வதங்)களுள் ஒன்று; a mythical mountain believed to be one of the boundaries of the earth.

*[Skt. śṛṅga-vān > த. சிருங்கவான்]*

**சிருங்காடம்** *śiruṅgāḍam,* பெ.(n.) படைமுற்று (வியூக) வகையுள் ஒன்று (குறள், 767, உரைக்குறிப்பு); a battle-array.

*[Skt. śṛṅgāṭaka > த. சிருங்காடம்]*

**சிருங்காரநிலை** *śiruṅgāra-nilai,* பெ.(n.) இறந்துபட்ட வீரனது மார்பை அவன் மனைவி போர்க்களத்துத் தழுவுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 7, 24); (purap.) theme of a warrior's devoted wife embrancing his corpse on the battle field.

த.வ. அழுவத்தழுவல்

*[சிருங்காரம்+நிலை]*

**சிருங்காரம்** *śiruṅgāram,* பெ.(n.) காதற்சுவை (சிங்காரம்) (கொ.வ.); sentiment of love.

*[Skt. śṛṅgāra > த. சிருங்காரம்]*

**சிருச்சியம்** *śirucciyam,* பெ.(n.) உருவாக்கப் படுவது; that which is created.

*[Skt. sṛjya > த. சிருச்சியம்]*

**சிருட்டம்** *śiruṭṭam,* பெ.(n.) ஒரு சிற்பநூல் (இருசமய. சிற்ப சாத். 3); a treatise on architecture.

*[Skt. sṛṣṭa > த. சிருட்டம்]*

**சிருட்டி[1]-த்தல்** *śiruṭṭi-,* 11 செ.குன்றாவி.(v.t.) உருவாக்குதல்; to create.

**சிருட்டி[2]** *śiruṭṭi,* பெ.(n.) 1. படைப்பு; creation. *ஆதிசிருட்டியைச் சொல் (மச்சபு. ஆதிசிருட்டிப். 1).* 2. ஐவகைத் தொழில் (பஞ்ச கிருத்தியங்)களுள் உயிர்கள் முத்தி எய்துதற்பொருட்டு அவற்றுக்கு மெய்ப்புலன், உலக நுகர்வுகளை (தனுகரண புவன போகங்களை) அருளுவதாகிய படைப்புத் தொழில்; (śaiva) function of creation or providing the souls with physical and mental organs and the necessary environment designed to enable the souls to attain salvation on the *pañca-kiruttiyam,* q.v. 3. உருவாக்கப்பட்ட பொருள்; creature, created things.

*[Skt. sṛṣṭi > த. சிருட்டி]*

**சிருட்டியாளன்** *śiruṭṭiyāḷaṉ,* பெ.(n.) சவுக்காரம் (மூ.அ.); soap.

**சிருணி** *śiruṇi,* பெ.(n.) 1. யானைத்தோட்டி; elephant goad. 2. பகைவன் (யாழ்.அக.); foe, enemy.

*[Skt. sṛṇi > த. சிருணி]*

**சிருணிகை** *śiruṇigai,* பெ.(n.) எச்சில், சாளைவாய் (யாழ்.அக.); saliva, spittle.

*[Skt. sṛṇikā > த. சிருணிகை]*

**சிருதரம்** *śirutaram,* பெ.(n.) பாம்பு (யாழ்.அக.); snake.

*[Skt. sṛdara > த. சிருதரம்]*

**சிரும்பணம்** *širumbaṇam,* பெ.(n.) கொட்டாவி விடுகை (யாழ்.அக.); yawning.

*[Skt. jṛmbhaṇa > த. சிரும்பணம்]*

**சிரும்பிகை** *širumbigai,* பெ.(n.) கொட்டாவி (யாழ்.அக.); yawn.

*[Skt. jṛmbhikā > த. சிரும்பிகை]*

**சிரேட்டாதேவி** *širēṭṭādēvi,* பெ.(n.) (யாழ்.அக.) திருமகளுக்கு மூத்தவளாகக் கருதப்படும் மூதேவி; goddess of misfortune as the elder sister of Lakṣmī.

**சிரேட்டி** *širēṭṭi,* பெ.(n.) வணிகன் (சூடா); member of the vaišya caste.

**சிரேணம்** *širēṇam,* பெ.(n.) நெடுநாள் (யாழ்.அக.); long period of time.

*[Skt. cirēṇa > த. சிரேணம்]*

**சிரேணி** *širēṇi,* பெ.(n.) 1. தெரு (பிங்.); street, row of house. 2. இடையர் வீதி (சூடா.); herdsmen's street. 3. வரிசை (சங்.அக.); line, row, series.

*[Skt. šrēṇi > த. சிரேணி]*

**சிரேணியம்** *širēṇiyam,* பெ.(n.) **சிரேணி** (சங்.அக.) பார்க்க; see *širēṇi.*

*[Skt. šrēṇi > த. சிரேணியம்]*

**சிரேணியர்** *širēṇiyar,* பெ.(n.) பதினெண் குடிமக்கள் (சங்.அக.); the eighteen servile castes.

*[Skt. šrēṇi > த. சிரேணியர்]*

**சிரேயசு** *širēyašu,* பெ.(n.) 1. நன்மை (சங்.அக.); good, welfare. 2. புகழ்; renown. *"அந்தக் காரியத்தைச் செய்தால் உனக்குச் சிரேயசு உண்டாகும்" (கொ.வ.)*

*[Skt. šrēyas > த. சிரேயசு]*

**சிரேயாஞ்சர்** *širēyāñjar,* பெ.(n.) தீர்த்தங்கரர் இருபத்து நால்வருள் ஒருவர் (திருக்கலம். காப்பு, உரை); a Jaina Arhat, one of 24 *tirttāṅgarar,* q.v.

*[Skt. šrēyāṃsaḥ > த. சிரேயாஞ்சர்]*

**சிரேவணம்** *širēvaṇam,* பெ.(n.) காட்டா மணக்கு (மலை); common physic-nut.

**சிரேவரிசம்** *širēvarišam,* பெ.(n.) கண்நரம்பைக் (சிரோபாதத்தை) கவனியாது விட்டு விடுவதால் கண்ணில் பலவிதமான ஒழுக்குகள் ஏற்பட்டு, கண் பார்வை முழுமையையும் கெடுத்துக் குருடாகச் செய்யும் நோய்; neglected or advanced stages of shiropādam (சிரோபாதம்) mentioned above giving rise to abnormal discharges from the eyes with complete loss of vision. (சா.அக.)

**சிரேட்ட** *širēṭṭa,* பெ.எ (adv.) பெரும்பாலும் திருமண அழைப்பிதழ் முதலியவற்றில் குறிப்பிடும் சொல்லான (குழந்தைகளுள்) மூத்த, முதல்; (of children) eldest, first. *'சிரேட்ட புத்திரன்', 'சிரேட்ட புதல்வி'.*

*[Skt. srēsta > த. சிரேட்ட]*

**சிரேட்டபுத்திரன்** *širēṭṭa-puttiraṉ,* பெ.(n.) மூத்த மகன் (இ.வ.); eldest son.

**சிரைத்தல்** *širaittal,* பெ.(n.) மயிர் மழிக்கை; to shave, to remove the hairs of the head. (சா.அக.)

**சிரைப்புண்** *širaippuṇ,* பெ.(n.) முக மழிப்போன் சிரைப்பதினால் உண்டாகும் புண்; barber's itch, barber's rash. (சா.அக.)

**சிரைபாசி** *širaipāši,* பெ.(n.) கடுக்காய்; gallnut. (சா.அக.)

**சிரையதிகேசம்** *širaiyadikēšam,* பெ.(n.) ஆனைத் திப்பிலி; elephant pepper - Ciper longum. (சா.அக.)

**சிரோக்கிரகம்** *śirōkkiragam,* பெ.(n.) 1. தலையை அசைக்க முடியாமற் செய்யும் பிடிப்பு; p. 2. பிடரி ஊகை (வாதம்);spas modic retro-flexion of the head. (சா.அக.)

த.வ. கழுத்துப் பிடிப்பு

**சிரோகுட்டம்** *śirōkuṭṭam,* பெ.(n.) நோய் வகை; a disease. *கன்மமார் வழுக்கற் கொடித்தலையாக்கிக் காட்டும் புண் சிரோகுட்ட நோயர் (கடம்ப. பு. இலீலா. 108).*

**சிரோசக்காரம்** *śirōśakkāram,* பெ.(n.) வெடிகாரம்; nitre. (சா.அக.)

**சிரோசம்**[1] *śirōśam,* பெ.(n.) 1. மயிர்; hair. 2. தலைமயிர்; hair of the head. (சா.அக.)

**சிரோசம்**[2] *śirōśam,* பெ.(n.) **சிரோருகம்** (யாழ்.அக.) பார்க்க; see *śirōrugam.*

*[Skt. śirō-ja > த. சிரோசம்]*

**சிரோசூலை** *śirōśūlai,* பெ.(n.) 1. மண்டைக் குத்தல்; neuralgic pain in the head. 2. மண்டைக் குடைச்சல், severe gouty pain in the head - caphalagra. (சா.அக.)

**சிரோட்டம்** *śirōṭṭam,* பெ.(n.) 1. கடுக்காய்; gallnut. 2. திரிபலை; the three myrobalans. 3. திரிகடுகு; the three special stimulants. 4. நெல்லி மரம்; Indian gooseberry. 5. தான்றிமரம்; devils abode. (சா.அக.)

**சிரோணி** *śirōṇi,* பெ.(n.) காட்டாமணக்கு (மலை); common physic-nut.

*[Skt. śrāvaṇi > த. சிரோணி]*

**சிரோணியம்** *śirōṇiyam,* பெ.(n.) நேர்வாளம்; a species of croton seed -Croto tigilium. (சா.அக.)

**சிரோத்தாபம்** *śirōttāpam,* பெ.(n.) நரம்பழற்சி; nervous irritation.

**சிரோத்தி** *śirōtti,* பெ.(n.) 1. தலையோடு; the skull. 2. கழுத்து; the neck.

*[Skt. śiras+asthi > த. சிரோத்தி]*

**சிரோத்திரம்** *śirōttiram,* பெ.(n.) 1. காது; ear. 2. கேட்கும் திறன்; hearing. (சா.அக.)

**சிரோத்பாதரோகம்** *śirōtpāda-rōgam,* பெ.(n.) வெண்விழியில் சிவந்த புண்ணை யெழுப்பி, கண் வீங்கி எரிச்சலை யுண்டாக்குமோர் கண்ணோய்; a disease of the eye causing or developing red vasicles on the eye.

த.வ. விழிப்புண்

**சிரோததி** *śirōtadi,* பெ.(n.) கழுத்து; the neck. (சா.அக.)

**சிரோதபம்** *śirōtabam,* பெ.(n.) அதிக சூட்டினால் உண்டாகும் மண்டைக் கொதிப்பு; thermalgia of the head due to excess of heat in the system. (சா.அக.)

**சிரோதயம்** *śirōtayam,* பெ.(n.) பேறு காலத்தின் போது குழந்தையின் தலை வெளித் தோன்றுகை (இ.வ.); presentation of head in childbirth.

த.வ. தலைக்காண்பு

*[Skt. śiras+udaya > த. சிரோதயம்]*

**சிரோதரம்** *śirōtaram,* பெ.(n.) கழுத்து; the neck. (சா.அக.)

*[Skt. śiras+dhara > த. சிரோதரம்]*

**சிரோதாபம்** *śirōtābam,* பெ.(n.) 1. மண்டையழற்சி; inflammation of the scalp. 2. மூளையின் அழற்சி; inflammation of the brain Cerebritis.

**சிரோதி** *śirōti,* பெ.(n.) கழுத்து; the neck. (சா.அக.)

**சிரோதிகம்** *śirōtigam,* பெ.(n.) பனிதாங்கி அல்லது காட்டு மருக்கொழுந்து; southern wood. (சா.அக.)

**சிரோந்தகம்** *širōntagam,* பெ.(n.) மயிர்க் கொன்றை; pea-cock flower. (சா.அக.)

**சிரோந்தம்** *širōndam,* பெ.(n.) செறிமயிர்ப் பரப்பு (திவா.); hairiness.

**சிரோந்திதம்** *širōnditam,* பெ.(n.) பூவந்திக்கொட்டை; soap-nut-sapindas tripoliatus.

**சிரோநதம்** *širōnadam,* பெ.(n.) மயிர்; hair. 2. மயிர்ச் செறிவு; density of hair. (சா.அக.)

**சிரோபத்தியம்** *širōpattiyam,* பெ.(n.) கடுக்காய் (R); gallnut - chebulic myrobalan.

**சிரோபத்திரம்** *širōpattiram,* பெ.(n.) கடுக்காய்; gallnut. (சா.அக.)

**சிரோபத்திரவிசோதனி** *širōpattira-višōdaṇi,* பெ.(n.) தாளிசபத்திரி; East Indian plum. (சா.அக.)

**சிரோபாதம்** *širōpādam,* பெ.(n.) கண்ணில் ஓடும் சிறிய நரம்புகள் அடிக்கடி சிவந்து, வலியோடும் வலியில்லாமலும் துன் புறுத்துமோர் கண்ணோய்; a disease of the eyes in which the thin veins all over inferior ophthalmic become copper-coloured very frequently, but attended with or without pain. (சா.அக.)

**சிரோபாரம்** *širōpāram,* பெ.(n.) தலைப்பாரம்; heaviness of the head. (சா.அக.)

**சிரோபிரமாணம்** *širōpiramāṇam,* பெ.(n.) மூளைக்கு வலிவையும் ஊட்டத்தை (புஷ்டியை)யும் தரக்கூடிய மருத்துவம்; a treatment which can afford strength and nutrition to the brain. (சா.அக.)

**சிரோபிரமை** *širōpiramai,* பெ.(n.) தலைமயக்கம்; giddiness. (சா.அக.)

**சிரோமணி**[1] *širōmaṇi,* பெ.(n.) நாகத்தின் தலையிலுள்ளதாகக் கருதப்படும் மாணிக்கம்; a ruby of intense red supposed to be on the head of long-lived cobra. (சா.அக.)

**சிரோமணி**[2] *širōmaṇi,* பெ.(n.) 1. தலைமணி (யாழ்.அக.); crest-gem, jewel worn on the head. 2. உயர்ந்த மணி; superior gem. *ஊனமில் சிரோமணியும் பொன்னும் (பிரமோத். 11, 8).* 3. தலைசிறந்த–வன்–வள்–து (வின்.); a person or thing of superior excellence. 4. பண்டிதர்க்குக் கொடுக்கும் சிறப்புப் பெயர் (இக்.வ.); a title of honour conferred on pandits. (சா.அக.)

த.வ. முடிமணி

*[Skt. širas+maṇi > த. சிரோமணி]*

**சிரோமணிமாது** *širōmaṇi-mādu,* பெ.(n.) பேய்ப் புடலை; wild bitter snake gourd. (சா.அக.)

**சிரோமத்தியசேது** *širōmattiyašētu,* பெ.(n.) மனிதர் தலையிலுள்ள சிறு மூளையின் இரண்டு கோளங்களையும் இணைத்துக் கொண்டிருப்பது; the organ which connects the cerebrum, cerebullum and oblongata in the human body. (சா.அக.)

**சிரோமதுமேகம்** *širōmadumēgam,* பெ.(n.) **சிரோமேகம்** பார்க்க; see *širōmēgam.* (சா.அக.)

**சிரோமுட்டி** *širōmuṭṭi,* பெ.(n.) கீழ்நோக்கி அம்பெய்கை (சீவக. 1680, உரை); shooting an arrow downward.

*[Skt. širas+muṣṭi > த. சிரோமுட்டி]*

**சிரோமூலம்** *širōmūlam,* பெ.(n.) தலைச்சுருடு வள்ளி; hary's plant. (சா.அக.)

**சிரோமேகம்** *širōmēgam,* பெ.(n.) அதிக சிந்தனையினால் தலை மூளையினின்றும் சர்க்கரையுண்டாகி ஏற்படும் மதுமேக நோய்; cerebral diabetes due to the sugar principle derived from the brain

substance known as cerebros arising from brain work - cerebrosuria. (சா.அக.)

**சிரோரத்தினம்** *širōrattiṉam,* பெ.(n.) **சிரோமணி**[1] பார்க்க; see *širōmaṇi.*

*[Skt. širas+ratna > த. சிரோரத்தினம்]*

**சிரோருகம்** *širō-rugam,* பெ.(n.) தலைமயிர் (பிங்.); hair on the head.

*[Skt. širas+ruha > த. சிரோருகம்]*

**சிரோரோகம்** *širōrōgam,* பெ.(n.) 1. தலையில் ஏற்படும் நோய்கள்; diseases of the head in general. 2. தலைவலி; head ache. (சா.அக.)

**சிரோலிகம்** *širōligam,* பெ.(n.) மிளகு; black-pepper-Piper nigruns. (சா.அக.)

**சிரோவர்த்தனை** *širō-varttaṉai,* பெ.(n.) சிவலிங்கத்தின் தலை (S.I.I.ii, 135); top portion of *šiva-liṅgam.*

**சிரோவர்த்தி** *širōvartti,* பெ.(n.) எதிரி சொல்லும் உறுதிமொழி (சத்தியம்) முதலியவற்றை யொப்புக் கொள்பவன் (சுக்கிரநீதி. 286); person accepting the oath or trial by ordeal of his opponent.

*[Skt. širōvarti > த. சிரோவர்த்தி]*

**சிரோவல்லி** *širō-valli,* பெ.(n.) மயிலின் உச்சிக் கொண்டை (யாழ்.அக.); peacock's crest.



**சிரோவசுத்தி** *širōvasutti,* பெ.(n.) தலையிலுள்ள நீர் வெளிப்படும் படி முகரும் போது, தும்பலும், மூக்கு சிந்துவதுடன் கண்ணீரும் வடியச் செய்யும் பொடி; (literally, it means the cerebral purgative) medicines which, when applied to the nostrils, produce an increased discharge of nasal mucous, frequently attended by sneezing and an unusual secretion of tears sternutatories or errhines. 2. தலையில் மருந்தெண் ணெயைப்பூசுகை; an application of medicinal oil as over the scalp. (சா.அக.)

**சிரோவலி** *širōvali,* பெ.(n.) தலைவலி; pain in the head, head ache - Cephalalgia. (சா.அக.)

த.வ. தலைவலி

**சிரோவாதம்** *širōvādam,* பெ.(n.) தலை, முகம் இவ்விடங்களிற் காணும் சதையை அடுத்த பக்கவூதை; paralysis of the muscles about the head and the face - Caphaloplegia. 2. மூச்சுக் குழாயை (நாசியை) அடுத்த முகவூதை (வாதம்); that which is also due to the lesion of the facial nerve or of its nucleus - Facial paralysis, c.f. முகவாதம். (சா.அக.)

த.வ. ஓரடி, பக்கவூதை (பக்கவாதம்)

**சிரோவிகாரம்** *širōvigāram,* பெ.(n.) தலையில் உண்டாகும் கோளாறுகள்; disorders causing or occurring in the head -Cephalopathy. (சா.அக.)

**சிரோவித்திரதி** *širōvittiradi,* பெ.(n.) தலையில் ஏற்படும் வீக்கம் அல்லது கட்டி; a tumour or swelling on the head, cerebral abscess. (சா.அக.)

த.வ. தலைக்கட்டி

**சிரோவிரத்தக்கழலை** *širōviratta-k-kaḻalai,* பெ.(n.) தலையைச் சுற்றிலும் அரத்தம் சுரந்து

ஏற்படும் வீக்கம் அல்லது கழலை; a tumour or swelling filled with blood beneath the pericranium - Cep halhematoma. (சா.அக.)

த.வ. மண்டைக்கழலை

**சிரோவிருத்தம்** *širōviruttam,* பெ.(n.) மிளகு (மலை.); pepper.

**சிரோவேட்டம்** *širō-vēṭṭam,* பெ.(n.) தலைப்பாகை (சங்.அக.); turban.



**சிரௌதகற்பம்** *širauda-kaṟpam,* பெ.(n.) வேள்வி வினைக்கு உரியவற்றைக் கூறும் மறை (வேத)மந்திர பாகம் (சுக்கிரநீதி); the mantra portion of the vēdas pertaining to sacrifices.

*[Skt. šrouta-kalpa > த. சிரௌதகற்பம்]*

**சிரௌதம்** *širaudam,* பெ.(n.) மறையி (வேதத்தி)ல் விதிக்கப்பட்டது (சங்.அக.); that which is ordained by vēdas. (சா.அக.)

*[Skt. šrauta > த. சிரௌதம்]*

**சிரௌதி** *širauti,* பெ.(n.) மறையி (வேதத்தி)ற் கூறப்பட்ட வினை (கருமங்)களில் வல்லவன்; one who is proficient in vēdic rites.

*[Skt. šrautin > த. சிரௌதி]*

**சில்லத்து** *šillattu,* பெ.(n.) சிறுசட்டை; small jacket.

*[U. zillat > த. சில்லத்து]*

**சில்லா** *šillā,* பெ.(n.) மாவட்டம்; district.

*[U. zillā > த. சில்லா]*

**சிலக்கு** *šilakku,* பெ.(n.) இன்னும் கொஞ்சம் (இ.வ.); something more.

*[U. silak > த. சிலக்கு]*

**சிலமான்கல்** *šilamāṉkal,* பெ.(n.) ஒருவகை விலையுயர்ந்த கல் (m.m); agate, a variegated form of silica.

*[U. sulaimān > த. சிலமான்கல்]*

**சிலமீலிகை** *šilamīligai,* பெ.(n.) 1. மின்னல்; lightning. 2. மின்மினி; glow worm.

*[Skt. cilamīlikā > த. சிலமீலிகை]*

**சிலாக்கியம்** *šilākkiyam,* பெ.(n.) 1. மெச்சத்தக்கது; that which is commendable, praiseworthy. 2. சிறந்தது; that which is excellent; good. *அதைவிட இதுவே சிலாக்கியம்.* 3. புகழ்; fame, renown. *சிளாக்கியமுள வீரன் (இராமநா. பாலகா.1.).* 4. உரிமை (வின்.); privilege.

த.வ. சிறப்பு

*[Skt. šlāghya > த. சிலாக்கியம்]*

**சிலாக்கியன்** *šilākkiyaṉ,* பெ.(n.) புகழ்தற் குரியவன் (வின்.); praiseworthy, distinguished person.

த.வ. சான்றோன்

**சிலாகி-த்தல்** *šilāki-,* 4 செ.குன்றாவி.(v.t.) புகழ்தல்; to praise, commend. *சிலாகிக்குமாறு...... கொள்ளுந் திருவுரு வெல்லாம் (அஷ்டப். திருவரங். மா. 76).*

*[Skt. šlāgh > த. சிலாகி-,]*

**சிலாடகம்** *šilāḍagam,* பெ.(n.) மேல்வீடு (யாழ்.அக.); storey.

*[Skt. šilāṭaka > த. சிலாடகம்]*

**சிலாமணி** *šilāmaṇi,* பெ.(n.) செல்லக் கூடியது; that which is in currency.

*[U. calāōni > த. சிலாமணி]*

**சிலாமனா** *šilā-maṉā,* பெ.(n.) மனோசிலை (மு.அ.); a mineral poison.

*[Skt. manasšilā > த. சிலாமனா]*

**சிலார்** *šilār,* பெ.(n.) நன்கொடை (இனாம்); reward, recompense.

*[U. sila > த. சிலார்]*

**சிலாலிகிதம்** *šilālikidam,* பெ.(n.) **சிலாலேகை** பார்க்க; see *šilālēgai.*

த.வ. கல்வெட்டு

*[Skt. šilā+likhita > த. சிலாலிகிதம்]*

**சிலாலேகை** *šilā-lēgai,* பெ.(n.) கல்வெட்டு; stone inscription. *"முன்புள்ள சிலாலேகைப்படி" (S.I.I.iii. 99).*

*[Skt. šilā+lēkhā > த. சிலாலேகை]*

**சிலாவங்கம்** *šilā-vaṅgam,* பெ.(n.) ஈயக்கல் (வின்.); a kind of stone containing ores of lead.

**சிலாவட்டம்** *šilā-vaṭṭam,* பெ.(n.) 1. கற்பீடம்; a stone-slab used as a seat. *அச்சுனை மருங்கிலோர் மணிச்சிலா வட்ட முண்டு (சீவக. 1213).* 2. சந்தனக்கல் (பிங்.); stone for grinding sandal. 3. சாணைக்கல் (பிங்.); hone, grindstone.

*[சிலை > சிலா + வட்டம்.]*

**சிலாவருடம்** *šilāvaruḍam,* பெ.(n.) 1. கல்மழை; hail-storm. 2. காளமுகி (சூடா.); a cloud believed to rain hail stones.

த.வ. ஆலங்கட்டி மழை

*[Skt. silavarsha > த. சிலாவருடம்.]*

**சிலிங்காரம்** *šiliṅkāram,* பெ.(n.) ஒப்பனை; decoration. *"சிலிங்காரத்தாற் குழல் தாழவிட்டு" (திவ். பெரியாழ். 3,4,9).*

*[Skt. šṛṅgāra > த. சிலிங்காரம்]*

**சிலும்பி** *šilumpi,* பெ.(n.) கஞ்சாக் குடிக்கும் குழாய்; pipe for smoking bhang.

த.வ. சூம்பி

*[U. cilm > த. சிலும்பி]*



**சிலுவை** *šiluvai,* பெ.(n.) 1. கிறித்துவை வைத்தறைந்த மரம்; cross on which christ was crucified. 2. கிறித்துவ சமய சின்னத்துள் ஒன்று; cross, as the symbol of christianity.

த.வ. குறுக்கை

*[Skt. slibo > த. சிலுவை]*

**சிலுவையிலறை-தல்** *šiluvaiyilaṟai-,* 2 செ.குன்றாவி.(v.t.) சிலுவை மரத்தில் ஆணி பிணைத்து அடித்துக் கொல்லுதல்; to crucify (chr.)

**சிலுவைவரை-தல்** *šiluvaivarai-,* 12 செ.கு.வி.(v.i.) நெற்றியில் சிலுவை யடையாளஞ் செய்தல் (R.C); to make the sign of the cross upon the forehead.

[Skt. *slibo* > த. சிலுவை]

**சிலேட்டர்** *šilēṭṭar,* பெ.(n.) வணிகர் (யாழ்.அக.); merchants.

*[Skt. šrēṣṭhin > த. சிலேட்டர்]*

**சிலேட்டி** *šilēṭṭi,* பெ.(n.) செட்டி (திவா.); member of the cheṭṭi caste.

*[Skt. šrēṣṭhin > த. சிலேட்டி]*

**சிலேட்டு** *śilēṭṭu,* பெ.(n.) (சிறுவர் எழுதப் பயன்படுத்தும்) சட்டம் போட்ட சதுர, செவ்வக வடிவ மாக்கல் அல்லது தகரம்; slate (for children to write on).

**த.வ. கல்லேடு**



**சிலேட்டுக்குச்சி** *śilēṭṭu-k-kucci,* பெ.(n.) கல்லேட்டில் (சிலேட்டில்) எழுதப் பயன்படும் குச்சி வடிவக் கல், பலப்பம்; pencil like stone to write with on a slate.

**த.வ. மாக்குச்சி**

**சிலேட்டுமஅதிசாரம்** *śilēṭṭuma-adiśāram,* பெ.(n.) **சிலேட்டுமாதிசாரம்** பார்க்க; see *śilēṭṭumādicāram.* (சா.அக.)

**சிலேட்டுமஅபசுமாரம்** *śilēṭṭuma-apasumāram,* பெ.(n.) தொடர்ந்து எச்சில் வடிதல், உடல், கண், முகம் வெளுத்தல், மறதி, வெறிச்சேட்டை முதலிய குணங்களை யுண்டாக்கி அறிவின் தெளிவை நீக்கும் ஒரு வகை இசிவு நோய்; a kind of epileptic fits attended with symptoms such as - constant flow of saliva, paleness or serious impairment of intellect. (சா.அக.)

**சிலேட்டுமஅரோசகம்** *śilēṭṭuma-arōśagam,* பெ.(n.) உணவில் வெறுப்பு; deigust for food. (சா.அக.)

**சிலேட்டுமஆவிருதவாதம்** *śilēṭṭuma-āvirudavādam,* பெ.(n.) குருதியோட்டம் தடைபடுவதினால் சிலேட்டுமம் வளியுடன் கூடி உடம்பில் சீதளம், கனத்தல், காரத்தில் விருப்பம், உடம்பில் எறும்பூருவதைப் போல் காணல் முதலிய குணங்களைக் காட்டும் நோய்; a nervous affection in a phlegmatic patient due to obstruction in circulation arising from the concerted action of wind and phlegm. It is marked by chillness and cold, heaviness of body uncommon desire to eat pungent substances. a peculiar ant moving sensation on the surface of the body etc. (சா.அக.)

**த.வ. குருதிக்குறைநோய்**

**சிலேட்டுமஇரத்தபித்தம்** *śilēṣṭuma-iratta-pittam,* பெ.(n.) இதயத்திலிருந்து நிறம் மாறி வெளிப்பட்டு வந்த அரத்தம், சிலேட்டு மத்தோடு கலந்து வெண்மையாகவும், வழுவழுப்பாயும் இருக்கும் அரத்த பித்த நோய் வகை; hemorrhage originating from the heart due to the aggravated condition of bile combined with phlegm. The altered blood will be found whitish in colour and viscus. (சா.அக.)

**சிலேட்டுமஉபதம்சம்** *śilēṭṭuma-upatamśam,* பெ.(n.) ஆண்குறி தடித்து வீங்கி நமைச்சல் உண்டாதல்; swelling and itching sensation of the penis. (சா.அக.)

**த.வ. வீக்க நமைச்சல்**

**சிலேட்டுமஉன்மாதரோகம்** *śilēṭṭuma-unmāṭarōgam,* பெ.(n.) 1. கோழைக் கோளாறின் மேலீட்டினால் தூக்கமின்மை, பெண்மேல் விருபபம், யாரையும் அச்சுறுத்தல், கண்ட பண்டங்களில் விருப்பம் முதலிய குணங்களையுண்டாக்கும் ஒரு கோட்டி (பைத்திய) நோய்; a kind of insanity due to the derangement of the three humours in a patient of phlegmatic tendency., and

it is characterised by sleeplessness, desire for women. i.e. sexual desire longing to eat things seen by him and other mischievous tendencies as - frightening persons etc. 2. **உன்மாத ரோகம்** பார்க்க; see *unmātarōkam*. (சா.அக.)

**த.வ. கோழைவெறிநோய்**

**சிலேட்டுமக்கபம்** *śilēṭṭuma-k-kabam*, பெ.(n.) உடம்பின் தாதுக்களை ஒன்று படுத்தும் தன்மை வாய்ந்த கோழை (சிலேட்டும) வகை ஏழில் ஒன்று; one of the seven kinds of phlegm uniting the different elements of the body. (சா.அக.)

**சிலேட்டுமக்காய்ச்சல்** *śilēṭṭuma-k-kāyccal*, பெ.(n.) கோழை (சிலேட்டும)க் கோளாறினால் ஏற்படும் காய்ச்சல் (சுரம்); a phlegmatic fever more common in children than in adults. (சா.அக.)

**த.வ. கோழைக்காய்ச்சல்**

**சிலேட்டுமக்கிரகணி** *śilēṭṭuma-k-kirakaṇi*, பெ.(n.) **சிலேட்டுமக்கிராணி** பார்க்க; see *śilēṭṭuma-k-kirāṇi*. (சா.அக.)

**சிலேட்டுமக்கிரந்தி** *śilēṭṭuma-k-kiranti*, பெ.(n.) சிலேட்டுமாதிக்கத்தினால் தோலைப் பற்றிய கோளங்களுக்குக் கோளாறுண்டாகி அதனால் உடம்பின் சதை, கொழுப்பு முதலியவைகள் கெடுதியடைந்து திரண்டு வரும் ஒரு கடினமான கட்டி; a variety of encysted tumours which present a cyst filled with different matters as fibrous tissues, fat - like matter etc. It is supposed to occur from obstruction of the excretory ducts of the sebaceous glands. (சா.அக.)

**த.வ. கோழைக்கட்டி**

**சிலேட்டுமக்கிராணி** *śilēṭṭuma-k-kirāṇi*, பெ.(n.) சிலேட்டுமத்தால் உண்டாகும் கோழையுடன் கூடிய ஒரு வகைக் கழிச்சல் நோய்; a chronic diarrhoea due to the derangement of phlegm (humour) in the system. 2. அளவுக்கு மீறி சாப்பிட்டு பகலில் உறங்குவதினால் செரிமான (பக்குவாச யத்தின்) உறுப்புகள் வலுவிழந்து, அதனால் சிலேட்டுமக் கோளாறுகளுண்டாகி ஏற்படும் கழிச்சல் நோய்; dysenteric diarrhocaea used by vitiated phlegm arising from the weakening of the digestive power due to day sleep, especially after excessive eating. (சா.அக.)

**த.வ. கோழைக்கழிச்சல்**

**சிலேட்டுமக்கிரிச்சரம்** *śilēṭṭuma-k-kiriccaram*, பெ.(n.) அடி வயிற்றிலும் ஆண் குறியிலும் வீக்கமுண்டாகி, பிசினைப் போல் வழுவழுத்த கட்டுப்பட்ட மூத்திரம் மிகு துன்பத்தோடு இறங்கும் ஒரு வகை நோய்; strictu,e of urine attended with swelling in the abdomen and the penis followed by a discharge of viscous urine which remained suppressed. (சா.அக.)

**த.வ. உச்சைக்கடுப்பு**

**சிலேட்டுமக்கிருமி** *śilēṭṭuma-k-kirumi*, பெ.(n.) பார்வைக்குப் பொதுவாக தோன்றாமலும், தருப்பைப் பூ வாசனையைப் பெற்று, குடலில் சுற்றிக் கொண்டு மார்பு மட்டும் ஏறி அதிக தொல்லை (வேதனை)யை யுண்டாக்கும் வட்டமாக நூலைச் சுற்றியதுப் போன்ற ஒரு வகை நுண்ணுயிரி; thread - worms generally existing in the intestines. They form in clusters and have no legs. In shape, they resemble a coiled thread, sometimes invisible owing to their microscopic nature and have a peculiar smell of a flower. They stick to the intestines and invade up to

the thoracic region causing great inconvenience. 2. எலும்புருக்கிக நோயால் சயரோகத்தில் காணப்படும் புழுக்கள்; bacteria found in consumption. (சா.அக.)

**சிலேட்டுமக்குணம்** *śilēṭṭuma-k-kuṇam,* பெ.(n.) உடலையும் மனத்தையும் கட்டுப் படுத்துவதாகக் கருதப்படும் மூவகை நீர்மப் பொருள்களுள் ஒன்றானதும், உடம்பிற்கு மிக்க முகாமையானதும், உடம்பு வறட்சியடையாமல் ஈரம் ஏற்படுத்திக் கொண்டேயிருப்பதும், மூட்டெலும்புகளுக்கு நயநயப்பும், வழவழப்பும் புண்களுக்கு ஆற்றும் தன்மையும், உடம்பில் தசையுண்டாக்கி பருமனையும், வலிமையையும், நல்லுணர்ச்சி யையும் உறுப்புகளுக்கு உறுதியையும் கொடுக்கக்கூடியதுமான நீர்மம்.; one of the three humours in the system viz phlegan. It forms a very essential element in the constitution of the human body. It supplies the body with moisture and prevents it from becoming dry.. lubricates the inferior joints and adds to its gloss., contributes greatly to the formation of healthly granules in the sores., increases the size of the body.. brings about fresh tissues and a pleasant sensation to the system., furnishes strength and increases firmness to the limbs. It also imparts several characteristics as, forgiveness, mildness, patience, contentment etc.

*[சிலேட்டுமம் + குணம்]*

**சிலேட்டுமக்குரற்கம்மல்ரோகம்** *śilēṭṭuma-k-kuraṟ-kammal-rōgam,* பெ.(n.) ஒரு வகைத் தொண்டைநோய்; one of the throat infection. (சா.அக.)

த.வ. தொண்டைவலி

**சிலேட்டுமக்குன்மம்** *śilēṭṭuma-k-kuṉmam,* பெ.(n.) நாக்கு வழுவழுத்து, கக்கல் (வாந்தி), விக்கல், கொட்டாவி, இருமல், வயிறு இரைச்சல், மலம் இறுகல், உணவின் மீது வெறுப்பு, இளைப்பு முதலிய குணங்களைக் காட்டும் ஒரு வகைக் குன்ம நோய்.; a form of dyspepsia originated from the derangement of phlegmatic humour in the system, It is marked by the following symptoms viz-viscous or shining tongue vomiting hiccough, cough, rumbling of the stomach, constipation, aversion to food. fatigue and all-other specific indications of kapha (humour). 2. கபத்தினால் ஏற்படும் செரியாமை. இதனால் குளிர்சுரம், குமட்டல் (அரோசகம்), மார்பு துடித்தல், இருமல், உடம்பு வெளுப்பு முக்கினால் நீர் வடிதல் உண்டாகும்; dyspepsia due to excess of phlegmatic humour. It is attended with cold and fever, nausea, palpitation of the heart, cough, anemia, caturrh of the nose etc - catarrhal dyspepsia. (சா.அக.)

*[சிலேட்டுமம் + குன்மம்]*

**சிலேட்டுமக்கூறு** *śilēṭṭuma-k-kūṟu,* பெ.(n.) சிலேட்டுமத் தன்மை; phlegmatic humour or tendency. 2. கபத்திற்குண்டான இயற்கைத் தன்மை, வேறுபாடுத் தன்மை முதலிய பிரிவுகள். இது மீறினால் உடல் காய்ந்து உணவு செல்லாது, விக்கல், சக்தி குன்மம், இருமல், இரைப்பு, ஈளை முதலிய குணங்கள் ஏற்படும்; the inherent principles and the functionery changes of phlegm. Excess of this humour in the system mad lead to aversion to food, dyspeptic trouble, cough, hard breathing, expectoration etc. (சா.அக.)

*[சிலேட்டுமம் + கூறு]*

**சிலேட்டுமக்கேணா** *śilēṭṭuma-k-kēṇā,* பெ.(n.) காட்டுக் கரணை; wild elephant yam. (சா.அக.)

**சிலேட்டுமக்கொதி** *śilēṭṭuma-k-kodi,* பெ.(n.) ஒரு வகைக் காய்ச்சல்; fever believed to be due to heated phlegm. (சா.அக.)

**சிலேட்டுமக்கோபம்** *śilēṭṭuma-k-kōbam,* பெ.(n.) கோழை மிகுதல் (சிலேட்டுமாதிக்கம்); excess of phlegmatic humour in the system : excited condition of phlegm. (சா.அக.)

**சிலேட்டுமக்கோளம்** *śilēṭṭuma-k-kōḷam,* பெ.(n.) நாக்கு அடிப்புறத்தில் இரண்டு பக்கத்திலுமுள்ள உமிழ்நீர் கோளங்கள்; the smallest of the salivary glands, placed beneath the tongue on either side of sublingual gland. (சா.அக.)

**சிலேட்டுமகணம்** *śilēṭṭumakaṇam,* பெ.(n.) 1. கோழைக் குற்றத்தினால் குழந்தைகட்கு உடம்பில் நீர் சேர்ந்து உடம்பிளைக்கும் ஒரு வகைக் கண நோய்; atrophy humour of in children, resulting in the collection of morbid fluid in the system. 2. கோழையினால் குழந்தைகட்கு உண்டாகும் ஒரு வகைக் கண் நோய்; a congenital disease of a phlegmatic ovigin, affecting the eyes in children. (சா.அக.)

**சிலேட்டுமகண்டகம்** *śilēṭṭumakaṇḍakam,* பெ.(n.) நாவெல்லாம் இலவு முட்களைப் போல் தடித்து வெளுத்தும் நெருங்கியும், வலியை யுண்டாக்கிக் கொப்புளங்களையும் எழுப்பும் ஒருவகை நாக்கு நோய்; a disease in which the tongue is rendered thick, white and heavy and is over grown with vegetation of slender fleshy papillae like thorns of a cotton tree. (சா.அக.)

**சிலேட்டுமகம்** *śilēṭṭumakam,* பெ.(n.) உடம்பில் எலும்பின் பொருத்துகளிற் தங்கி அவற்றைப் பிரியாத படி செய்யும் கோழை; phlegm located in all the joints of the human body preventing them from seperation. (சா.அக.)

**சிலேட்டுமகர்ணசூலை** *śilēṭṭumakarṇa śūlai,* பெ.(n.) தாடை, கழுத்து பிடரி வீங்கி வலியுண்டாக்கி காதினின்று வெண்மையாய்ச் சீழ் வடியும் காது நோய் (இது சிலேட்டும பண்டங்களை உண்பதினால் ஏற்படும் நோயாதலினால் இப்பெயர்); a disease of the ear marked by swelling of the jaw, neck and nape followed by pain and discharge from the ear. It is so called because it is caused by irregular diet. i.e., taking unsuitable food giving rise to phlegmatic tendencies - Ofitis. (சா.அக.)

**சிலேட்டுமகழலை** *śilēṭṭumakaḻalai,* பெ.(n.) கோழைக் கூறினால் ஏற்பட்ட கழலை; a tumour arising from phlegmatic causes. (சா.அக.)

**சிலேட்டுமகளகண்டகம்** *śilēṭṭumakaḷakaṇ ḍakam,* பெ.(n.) கழுத்திற்கும் தாடைக்கும் நடுவில் புடைகளை எழுப்பி, நமைச்சலும் வாயினிப்பையுமுண்டாக்கும் ஒருவகைத் தொண்டையெழுச்சி; simple goitre marked by overgrowth (hypertrophy) of flesh between the jaw and the neck, attended with itching sensation and sweet taste. (சா.அக.)

**சிலேட்டுமகாசம்**[1] *śilēṭṭuma-kāsam,* பெ.(n.) ஒரு வகைக் ஈளை காசநோய்; a type of Asthma. 2. கண்ணோய்; an eye disease. 3. கோழையினால் கண்ணின் கரு மணியின் மேல் வெண் கொப்புளங்கள் கண்டு, நீர் வடிந்து பார்வை மங்கும் நோய்; opacity of the eyes due to a vesicular growth over the area of the pupil, attended with discharge of white watery fluid from the pupil arising from phlegmatic causes. (சா.அக.)

**சிலேட்டுமகாசம்**[2] *šilēṭṭumakāšam,* பெ.(n.) எலும்புருக்கி (காச)நோய் வகை (சீவரட்.); consumption due to diseased phlegm.

**சிலேட்டுமகாசரோகம்** *šilēṭṭumakā šarōgam,* பெ.(n.) 1. ஒரு வகை ஈளை நோய்; a kind of bronchial asthma. 2. **சிலேட்டுமகாசம்** பார்க்க; see *šilēṭṭuma-kāšam.* 3. கண் பார்வைக்குள் வெண்ணிறத்தையுண்டாக்கி, கதிரவனையும் விளக்குச்சுடரையும் பார்க்கில் பல உருவங்களாகப் புலப்படும் நோய்; a disease of vision marked by white coating, in which one object appears as two or more objects when seen before lamp light or the sunlight - polyopia. (சா.அக.)

**சிலேட்டுமகாமாலை** *šilēṭṭumakāmālai,* பெ.(n.) முகம் வியர்த்து, உடல் நடுங்கி, வெளுத்து, வீங்கி, இருமல், விக்கலுடன் மேல் மூச்சும், இளைப்பும் காணும் காமாலை நோய்; jaundice of phlegmatic origin. It is marked by perspiration on face, tremor, paleness and swelling of body, hiccough, fatigue etc - catarrhal jaundice. (சா.அக.)

**சிலேட்டுமகுன்மம்** *šilēṭṭumakuṉmam,* பெ.(n.) குன்மநோய்வகை (சீவரட்.); disease due to excess to phlegm. (சா.அக.)

**சிலேட்டுமங்கட்டல்** *šilēṭṭumaṅ-kaṭṭal,* பெ.(n.) 1. தொண்டை அல்லது நெஞ்சில் கோழை கட்டல்; formation or accu mulation of phlegm in the lungs. 2. மரணக்குறியுள் ஒன்று; a symptom of death, as obstruction of respiration due to the collection of phlegm in the throat. (சா.அக.)

**சிலேட்டுமங்கட்டியிழு - த்தல்** *šilēṭṭumaṅkaṭṭiyiḻu-,* 4 செ.கு.வி.(v.i.) கோழை மிகுதியினால் மூச்சு விட முடியாது திணறிக் காணும் இழுப்பு நோய்; an attack of asthma attended with difficulty of breathing of a spasmodic character occuring in paroxysms. 2. சாகுங் காலத்தில் தொண்டையில் கோழை கட்டி, அதனால் மூச்சு விட முடியாமல் துன்புறுத்தும் நிலைமை; agony of death due to obstruction of respiration caused by increase of phlegm in the chest. 3. **சிலேட்டுமங்கட்டல்** பார்க்க; see *šilēṭṭumaṅ-kaṭṭal.* (சா.அக.)

**சிலேட்டுமசமனி** *šilēṭṭuma-šamaṉi,* பெ.(n.) கோரைக் கிழங்கு; coray root - Cyperus pertenuis. (சா.அக.)

**சிலேட்டுமசமானஆவிருதவாதம்** *šilēṭṭumašamāṉaāvirudavādam,* பெ.(n.) கோழையை சமான வாயு ஆவரணமாகச் சூழும் போது சீதளம், மந்தாக்கினி முதலிய குணங்களை யுண்டாக்கம் இதே வகையில் பிராணன், உதானன், வியானன், அபானன் என்னும் வாயுக்கள் கோழையைச் சூழும் போது அவற்றிற்குத் தக்கபடி குணங்கள் வேறுபடும்; the functional changes brought about when the vital air samana, responsible for digestion. covers the phlegmatic humour of the system viz. cold and chillness, impaired digestion etc. In the same way, several are the changes that occur when the vital airs - prana, uthanal (which is promoting digestion), viyana and Apana cover the same humour, according to their principles. (சா.அக.)

**சிலேட்டுமசயம்** *šilēṭṭumasayam,* பெ.(n.) **சிலேட்டுமசயரோகம்** பார்க்க; *šilēṭṭuma-sayarōgam.* (சா.அக.)

**சிலேட்டுமசயரோகம்** *šilēṭṭuma-sayarōgam,* பெ.(n.) தலை கனத்து உடம்பு

பருத்து, குமட்டல், கக்கல், இருமல், வாயிற்சலம் ஊறல், பீனிசம் இரைப்பு, இளைப்பு, கோழை முதலிய குணங்களை யுண்டாக்கி சளி மேலீட்டினால் காணும் ஒரு வகை எலும்புருக்கி நோய்; a kind of phthisis or consumption due to excess of phlegmatic humour in the system. It is characterised by the following symptoms viz - heaviness of head and the body, nausea, cough, insalivation, cattarrh of the nose, breathing with wheezing, expectoration, general wasting of the body etc. (சா.அக.)

**சிலேட்டுமசரீரம்** *šilēţţuma-šarīram,* பெ.(n.) கோழை மிகுதிப்பட்டிருக்கும் உடற்கூறு; bodily constitution in which the phlegmatic humour predominates.

**சிலேட்டுமசருமகிலம்** *šilēţţuma-šaruma-kilam,* பெ.(n.) முகத்தில் முளைகள் எழும்பி வழுவழுத்து, வெளுத்து, ஊசியாற் குத்துவது போல் குத்தலையுண்டாக்கும், மருத்துவம் செய்யாவிடில் அபான வாயுவை அடைத்து மலச்சிக்கலையும் பந்தத்தையும், வயிறு பருத்தலையுமுண்டாக்கும்; pimples or pustules on the face with a whitish appearance and glossy surface and followed by pinprick pain. If these are not treated, they may lead to gas in the intestines and distension of the bowels thus resulting in constipation. (சா.அக.)

**சிலேட்டுமசலமிழிவு** *šilēţţuma-šalamilivu,* பெ.(n.) சளி மிகுதியினால் பிறக்கும் 4 வகை மூத்திரநோய். இதில் மூத்திரம் தாழைமலர், எலுமிச்சை, சாணம், உதிரம் இவைகளைப் போல் வாசனையும் சுவையுமுடையது; a urinary disease consisting of four kinds. each of which attended with abnormal discharge of urine. In this, the urine is sweet to the taste and smells like screw pine flower, lemon, cowdung and blood. The disease is attributed to the deranged phlegm. (சா.அக.)

**சிலேட்டுமசவ்வு** *šilēţţuma-šavvu,* பெ.(n.) உடம்பினுட் பகுதியில் உள்ள அறைகளைக் கவர்ந்து கொண்டிருக்கும் சளிசவ்வு; the mucus membrane lining all the cavities of the body. (சா.அக.)

**சிலேட்டுமசன்னி** *šilēţţuma-šanni,* பெ.(n.) நெஞ்சில் சளி கட்டி வியர்த்து, தோன்றாத தெல்லாம் மனதிற் தோன்றி, தண்ணீர் வெறுத்து, அறிவை மயக்கும் ஒரு வகை இசிவு; a type of delirium in which the accumulation of phlegm in the chest and perspiration form the predominent symptoms. It gives rise to disorder of the brain occasioned by extravagant thought, dislike for water, perplexity of mind etc. (சா.அக.)

**சிலேட்டுமசிக்வாகண்டரோகம்** *šilēţţumašikvākaņdarōgam,* பெ.(n.) நாக்கில் முள்ளைப் போல் தடித்து வெளுத்து கொப்புளங்களை எழுப்பும் ஒரு வகை நோய்; a disease of the tongue thickened with papillae and is so changed as to give the mucous membrane an appearance of whitish colour. (சா.அக.)

**சிலேட்டுமசிம்மககாசம்** *šilēţţuma-šimmaka-kāsam,* பெ.(n.) கோழை தங்கிய ஒரு வகை ஈளை நோய்; phlegmatic asthma. (சா.அக.)

**சிலேட்டுமசிராவம்** *šilēţţuma-širāvam,* பெ.(n.) 1. கண்ணில் வலி ஏற்படாமலே அதினின்று வெண்மையாயும், கடினமாயும், சீதம் போலும் சீழ்வடிந்து, பீளை தள்ளிக் கொண்டிருக்குமோர் கண்ணோய்; an eye disease in which the secretion of slimy,

white and thick muco-purulent discharge is marked by absence of pain. 2. **கபச்சிராவம்** பார்க்க; see *kaba-c-cirāvam.* (சா.அக.)

**சிலேட்டுமசிர்க்காரோகம்** *šilēṭṭuma-širkkā-rōgam,* பெ.(n.) பெண்களுக்கு அல்குல் வழியாக மஞ்சள் நிறமாய் நாற்றத்துடன் வெளிப்படும் அரத்தமும் சீழும் கலந்த ஒழுக்கு. இதனால் பசி இன்மை மலச்சிக்கல், முதுகுவலி சூதக சன்னிக் குறி முதலிய குணங்களைக் காட்டும்; the increased secretion from the female private parts called whites. The discharge is due to the phlegmatic humour of the system and is of a white and faint yellow colour. By this disease, the appetite is impaired, and the bowels constipated; there is often pain in the back followed by hysterical symptoms. (சா.அக.)

**சிலேட்டுமசிலேட்டுமம்** *šilēṭṭuma-šilēṭṭumam,* பெ.(n.) **சிலேட்டுமத்தில் சிலேட்டுமம்** பார்க்க; see *šilēṭṭumattil-silēṭṭumam.* (சா.அக.)

**சிலேட்டுமசுபாவம்** *šilēṭṭuma-šupāvam,* பெ.(n.) 1. உடம்பில் அரத்தங் குறைந்த காலங்களில், கோழையே அரத்தமாக மாறி உடம்பை பேணுந் தன்மையது, அன்றியும், கணு, முட்டி முதலியவற்றை நீட்டவும், முடக்கவும், வறட்சியடையாமல் பசையாகவே இருக்கும்படி பயன்படும் தன்மை வாய்ந்தது; the nature of phlegm which is capable of turning itself into blood, when the latter is found insufficient in supply. It lends nutrition to the body; and it not only facilitates the free movement of the limbs and joints. but also lubricates them. 2. **சிலேட்டுமக்கூறு** பார்க்க; see *šilēṭṭuma-k-kūṟu.* (சா.அக.)

**சிலேட்டுமசுரம்** *šilēṭṭumašuram,* பெ.(n.) காய்ச்சலா (கபாதிக்கத்தினா) லுண்டான கோழை; phlegm - born fever. (சா.அக.)

**சிலேட்டுமசூலை** *šilēṭṭumašūlai,* பெ.(n.) கோழையின் தாக்கத்தினால் (கபாதிக் கத்தினால்) அடிவயிற்றில் நோவு, வியர்வை, குமட்டல் (அரோசகம்), கைகால் கனத்தல் முதலிய குணங்களையுண்டாக்கும் ஒரு வகைச் சூலை நோய்; a kind of colic attended with agonising pain in the abdomen, perspiration, nausea, heaviness in the limbs etc. It is said to be due to the deranged phlegm in the system. 2. மேக சம்பந்தத்தினா லுண்டாகும் சூலைப் பிடிப்பு; a chronic gout. (சா.அக.)

*[சிலேட்டுமம் + சூலை]*

**சிலேட்டுமசோகை** *šilēṭṭuma-šōgai,* பெ.(n.) கோழை (கபத்தி)னால் ஏற்படும் சோகை; phlegmatic anemia. (சா.அக.)

*[சிலேட்டுமம் + சோகை]*

**சிலேட்டுமத்தடிப்பு** *šilēṭṭuma-t-taḍippu,* பெ.(n.) கோழை (கபம்) அதிகரித்தல்; excess of phlegm. 2. கோழை (கபம்) உறைதல்; solidity or thickness of phlegm. (சா.அக.)

*[சிலேட்டுமம் + தடிப்பு]*

**சிலேட்டுமத்தலைவலி** *šilēṭṭumat-talaivali,* பெ.(n.) கபத்தின் கோளாறுகளினால் ஏற்படும் ஒரு வகைத் தலைவலி; a kind of head ache; due to the derangement of phlegm in the system. (சா.அக.)

**சிலேட்டுமத்தானம்** *šilēṭṭuma-t-tāṉam,* பெ.(n.) உடம்பில் கழுத்து (கண்டம்) முதல் தலை வரையுள்ள பாகம்; the region of phlegm extending from the neck to the head. (சா.அக.)

*[சிலேட்டுமம் + தானம்]*

**சிலேட்டுமத்தில்சிலேட்டுமம்** *śilēṭṭumattil-śilēṭṭumam,* பெ.(n.) ஒரு மாத்திரையாய் நடக்கும் சிலேட்டுமத்தோடு, வேறொரு மாத்திரையாய் நடக்கும் சிலேட்டுமம் சேர்ந்தால் ஆத்துமா வெளிப்பட்டு தேகம் இறந்து போம்; when the force or degree in a particular pulse-wave is found to exhibit altogether a different degree or force by the radial artery the soul will leave the body and instantaneous death is the immediate result. *யாத்திரை விழி வட்டமிட்டு உயிர் பிரியும் நாடி.* (சா.அக.)

**சிலேட்டுமத்துக்காதி** *śilēṭṭumattu-k-kādi,* பெ.(n.) கோழையை (கபத்தை)யறுக்கும் மருந்து, **சிலேட்டுமத்திறமான்** பார்க்க; see *śilēṭṭuma-t-tiṟamāṉ.* 2. திப்பிலி; long - pepper-piper longum, for a list of drugs classified as expectorants. (சா.அக.)

*[சிலேட்டுமத்துக்கு + ஆதி]*

**சிலேட்டுமதந்தமூலரோகம்** *śilēṭṭumatantamūlarōgam,* பெ.(n.) பித்தம் பல்லில் நுழைந்து அதன் வேரிலுள்ள அரத்தத்தைச் சீழாக மாறச் செய்து, எரிச்சலையுண்டாக்கும் பல் நோய் வகை; a dental disease in which the bile prevails in the gums at the root of the teeth causing pus with burning sensation. (சா.அக.)

**சிலேட்டுமதாகம்** *śilēṭṭuma-tāgam,* பெ.(n.) கபக் கோளாறினால் நெஞ்சில் குத்தல், வாயினிப்பு, வயிற்றுப்பல், தலையும் உடம்பும் மரத்தல், கக்கல், குமட்டல், சோம்பல், செரியாமை முதலிய தீக்குறிகள் ஏற்படுத்தும் நாவறட்சி; intense thirst as a result of excited condition of phlegm in the system. It may lead to the following bad symptoms viz - pinerick pain in the chest, sweetness of taste, flatulency, numbnmess, vomiting, nausea, indolence and indigestion. (சா.அக.)

**சிலேட்டுமதாது** *śilēṭṭuma-tādu,* பெ.(n.) உடம்பில் பித்த தாது சம்பந்தமான பலவிதமான வேதியியல் மாறுபாடுகளினால் உண்டாகிற உடற்சூட்டைத் தடுப்பதற்கு ஆற்றல் வாய்ந்தது; kapha humour combined chemically with pitta (bilo) gives rise to heat in the body and so. pittam is the positive heat of the body and kapha is the negative heat or the cooling principle which presents the excessive effect of the bodily heat by means of its humidity. Thus protecting the cellular tissues from wasting away. (சா.அக.)

**சிலேட்டுமதிமிரம்** *śilēṭṭumatimiram,* பெ.(n.) கபாதிக்கத்தினால் கருவிழியை வெளுப்பாக மாற்றி, பார்வையையும் வெளுப்பாகத் தோற்றுவித்து, ஒரு பொருளைப் பல பொருளாய்க் காட்டும் நோய்; an affection in the black of the eye (iris) from phlegmatic causes by which the iris is rendered white giving a whitish appearance to the sight. (சா.அக.)

**சிலேட்டுமதிறமான்** *śilēṭṭuma-tiṟamāṉ,* பெ.(n.) கபத்தை கண்டிக்கக் கூடிய மூலி; medicine promoting the discharge of mucous or other matters from the trachea-Expectorant. 2. செவ்வியம்; black pepper root. (சா.அக.)

**சிலேட்டுமதுட்டவிரணம்** *śilēṭṭuma-tuṭṭa-viraṇam,* பெ.(n.) நரம்புகளில் சிலையோடி வெளுத்து, கெட்டிப் பட்டு குத்தலுடனும், வலியுடனும் பிசினைப் போல் சீழ் வடியும் புண்; an open sore or lesion affecting the nerves and causing sinuses, attended

with boring pain and purulent discharge. (சா.அக.)

**சிலேட்டுமதேகக்குறி** *šilēṭṭuma-tēgakkuṟi*, பெ.(n.) நாடி துர்ப்பலம், உடல் வியர்வை, சன்மார்க்கத்தில் விருப்பம், காமவிருப்பக் குறைவு முதலிய குணங்கள் ஏற்படும் கப உப்பு (இவர்களுக்கு கண்வழியாய் ஜீவன் பிரியும்); the temperament of a man of phlegmatic humour, will exhibit symptoms such as - weak blood vesels, perspiration, spiritual desire, a low ebb of sexual passion, etc., In men of such types, the soul on their death, will leave the body through the eyes. (சா.அக.)

**சிலேட்டுமதேகக்கூறு** *šilēṭṭuma-tēga-k-kūṟu*, பெ.(n.) **சிலேட்டுமக்கூறு** பார்க்க; see *šilēṭṭuma-k-kūṟu*. (சா.அக.)

**சிலேட்டுமதேகம்** *šilē ṭṭuma-tēgam*, பெ.(n.) **சிலேட்டுமசரீரம்** பார்க்க; see *šilēṭṭuma-sarīram*. (சா.அக.)

**சிலேட்டுமநடத்தல்** *šilēṭṭuma-naḍattal*, பெ.(n.) 1. தொண்டையிற் கபங்கடைகை; rattle in the throat due to phlegm (J.). 2. நாடிவிழுகை (வின்.); low pulse as of a dying person.

**சிலேட்டுமநடை** *šilēṭṭuma-naḍai*, பெ.(n.) தொண்டையில் கபங் கட்டியிழுத்தல்; ratlling in the throat due to the deposit of phlegm. (சா.அக.)

**சிலேட்டுமநாசம்** *šilēṭṭuma-nāšam*, பெ.(n.) இருள் மருது; black murdah. 2. **கருமருது** பார்க்க; see *karu-marudu*. (சா.அக.)

**சிலேட்டுமநாசனி**[1] *šilēṭṭuma-nāšṉi*, பெ.(n.) மராமரம்; common saul. 2. மருவகம்; southern wood. (சா.அக.)

**சிலேட்டுமநாசனி**[2] *šilēṭṭuma-nāšaṉi*, பெ.(n.) கார்போக வரிசி; hazel leaved psoralea - psoralea corylifolia. 2. கக்கரி; cucumber. 3. மராமரம்; flowering tree - Engenia racemosa. 4. நறுந்தாளி; fragrant laldanah - Thomaeagenus. (சா.அக.)

**சிலேட்டுமநாசி** *šilēṭṭumanāši*, பெ.(n.) திப்பிலி; long-pepper - piper longum. (சா.அக.)

**சிலேட்டுமநாடி**[1] *šilēṭṭuma-nāḍi*, பெ.(n.) சிலேட்டும நிலையைக் குறிக்கும் நாடி; pulse indicating the condition of the phlegmatic humour in the body. (சா.அக.)

[சிலேட்டும்+நாடி]

***[Skt. šlēṣman > த. சிலேட்டும்]***

**சிலேட்டுமநாடி**[2] *šilēṭṭuma-nāḍi*, பெ.(n.) மணிக் கட்டுமேலே ஒரு விரலத்தில் ஆரையெலும்பின் பேரில் ஓடுவதும் மூன்று விரலால் அழுத்த மோதிர விரலுக்கடியில் துடிக்கக் கூடியதுமான கோழையைக் குறிக்கும் தாழ்ந்த அல்லது மெல்லிய கால் மாத்திரை அளவுள்ள நாடி; a slow beat pulse indicating phlegmatic humour of the system. The movement of this pulse is shown by the radial artery situated an inch above the left wrist, It is felt at the ring-finger generally by pressing with the three fingers. The force or degrees of it is considered to be a quarter. (சா.அக.)

**சிலேட்டுமநாடிவிரணம்** *šilēṭṭumanāḍi-viraṇam*, பெ.(n.) நரம்பிலுண்டாகும் கட்டியானது, தடித்து கெட்டிப் பட்டு, மினுமினுத்துப் பழுத்துடைந்தால் இடையறாது சீழ் ஒழுகி, இரவுக் காலத்தில் அளவுக் கதிகமாய் ஒழுகும் விரண நோய்; an ulcer or an abscess found in the nervous region and marked by a shining surface and hardened swelling with a constant

discharge of pus and its profuse flow in the night. (சா.அக.)

**சிலேட்டுமநோய்** *šilēṭṭuma-nōy,* பெ.(n.) மூலத்தில் சூடு மிகுதியாகி மண்டையைப் பற்றி, அரத்தம் ஏற்றி, வெண்ணீர் (விந்து) கெட்டு, நெஞ்சில் கோழைகட்டி இருமலையும் இளைப்பையும் உண்டாக்கும் நோய்; phlegmatic diseases in common due to excess of heat in the region of the sacral plexus and its distribution over or communication with the cerebral system. which is marked by diminution of blood, vitiation of seman, collection of phlegm in the chest, cough fatigue etc.

**சிலேட்டுமபலம்** *šilēṭṭuma-palam,* பெ.(n.) புளி வஞ்சி; an unknown drug. (சா.அக.)

**சிலேட்டுமபாசம்** *šilēṭṭuma-pāšam,* பெ.(n.) கருமருது, பார்க்க; black murdah.

**சிலேட்டுமபாண்டு** *šilēṭṭuma-pāṇḍu,* பெ.(n.) கோழையின் தாக்கத்தினால் கண், உடம்பு, முகம், நகம், மலமூத்திரம் முதலியவை வெளுப்பாகவும், நரம்பெழுச்சியும் காணும் ஒரு வகைப் பாண்டு நோய்; a form of dropsy due to the aggravated condition of phlegm in the system. Which is marked by paleness of the eyes, the body, face, nail, faces, urine etc. along with prominent and raised appearance of the veins. (சா.அக.)

**சிலேட்டுமபாதவன்மீகரோகம்** *šilēṭṭuma-pāta-vaṉmīka-rōkam,* பெ.(n.) யானைக் காலின் மீதுண்டாகும் புற்று; tumours or tubercles of various sizes found grown like ant - hill in the elephantiasis of the leg. (சா.அக.)

**சிலேட்டுமபித்தசமனி** *šilēṭṭuma-pitta-šamaṉi,* பெ.(n.) கருவேல்; black babool - Acacia arabica. (சா.அக.)

**சிலேட்டுமபித்தசூலை** *šilēṭṭuma-pitta-šūlai,* பெ.(n.) **சிலேட்டுமசூலை** (வின்.) பார்க்க; see *šilēṭṭumašūlai.* (சா.அக.)

**சிலேட்டுமம்** *šilēṭṭumam,* பெ.(n.) உடம்பிலுள்ள கோழை; phlegm, phlegmatic humour, one of the three humours of the body. (சா.அக.)

*[Skt. šlēṣman > த. சிலேட்டுமம்]*

**சிலேட்டுமவாதக்கிராணி** *šilēṭṭumavāda-k-kirāṇi,* பெ.(n.) கிராணிவகை (வின்.); diarrhoea from phlegm, etc. (சா.அக.)

**சிலேட்டுமாதிசாரம்** *šilēṭṭumādišāram,* பெ.(n.) அதிசாரவகை (வின்.); diarrhoea of a virulent type caused by phlegm.

*[Skt. šlēṣman+atisāra > த. சிலேட்டு மாதிசாரம்]*

**சிலேடகம்** *šilēḍakam,* பெ.(n.) மருந்துவேர் (மலை.); pellitory root.

*[Skt. sleṣmāntaka > த. சிலேடகம்]*

**சிலேடி-த்தல்** *šilēḍi-,* 4 செ.கு.வி.(v.i.) இருபொருள்படப் பேசுதல் (வின்.); to speak ambiguously.

*[Skt. šlēṣa > த. சிலேடி]*

**சிலேடை** *šilēḍai,* பெ.(n.) 1. செம்மொழிச் சிலேடை, பிரிமொழிச் சிலேடை என்ற இரு பிரிவுடையதாய் ஒருவடிவாக நின்ற சொற்றொடர் பல பொருளுடையதாக வரும் அணி (தண்டி. 75); (Rhet.) paranomasia, figure of speech in which a word or phrase admits of two or more interpretations, of two kinds viz., cem-moli-c-ciledai, piri-moli-c-ciledai.

2. இனிய சொற்றொடர்; pleasing combination of words. *"அயன் சிருஷ்டி சிலேடையா யுனக்குரைத்தேன்" (ஞானவா. தாசூர. 53).*

*[Skt. ślēṣa > த. சிலேடை]*

**சிலேதம்** *śilēdam,* பெ.(n.) செம்முருங்கை (மலை) பார்க்க; red Indian laburnum.

**சிலேபி** *śilēbi,* பெ.(n.) இன்பண்டம்; a sweet meat.

*[U. jilēbi > த. சிலேபி]*

**சிலேயம்** *śilēyam,* பெ.(n.) கற்போலக் கடினமாயிருப்பது (சங்.அக.); anything hard like a stone.

*[Skt. śilēya > த. சிலேயம்]*

**சிலேற்பனம்** *śilērpanam,* பெ.(n.) 1. சிலேட்டுமம் பார்க்க; see silettumam. 2. இறக்குந் தறுவாயில் தோன்றும் மென் மூச்சு (இ.வ.); short breaths of a dying person; death rattle.

*[Skt. ślēṣman > த. சிலேற்பனம்]*

**சிலேற்பனை** *śilērpanai,* பெ.(n.) **சிலேற்பனம்** பார்க்க; see *śilērpanam.*

*[Skt. śleṣman > த. சிலேற்பனை]*

**சிலோத்துவாசனம்** *śilōttuvāśanam,* பெ.(n.) ஈமச்சடங்கில் இறந்தோனை எழுச்சிப் பண்ணின கல்லை அப்புறப் படுத்துகை; the rite of removing the stone set up to represent the deceased person in his obsequies.

த.வ. கல்சாய்ப்பு

*[Skt. śilā+ud-vāsana > த. சிலோத்துவாசனம்]*

**சிவசாதாக்கியம்** *śivaśātākkiyam,* பெ.(n.) அருட்சத்தியால் மெய்யுணர்வுத் திரு மேனியாய் (தியானமூர்த்தியாய்) நின்ற சிவம்; Śivan, as an object of contemplation, so disposed by his Energy of Grace.

த.வ. மெய்யுணர்திருமேனி

**சிவதருமிணி** *śivatarumiṇi,* பெ.(n.) முத்திகாமிகட்குத் திரோதான சக்தி உருவமாகிய சிகாச்சேதத்தோடு செய்யுஞ் சபீசதீட்சைவகை (சைவச. ஆசாரி. 62, உரை); (śaiva) a way religious initiation accompanied with the removal of hair - tuft which is believed to represent the obscuring principle, a kind of *capica-tīṭcai,* q.v.

த.வ. குடுமிகளை அருளிப்பு

*[Skt. śiva-dharmiṇi > த. சிவதருமிணி]*

**சிவாய்** *śivāy,* பெ.எ.(adj.) அதிகப்படியான (C.G.); extra.

*[U. siwāi > த. சிவாய்]*

**சிவாய்சமா** *śivāysamā,* பெ.(n.) 1. நிலவரி, இறக்குமதி வரி முதலியன வொழிந்த அதிகப்படியான வரிகள்; (W.G) extra revenue, revenue derived from miscellaneous sources other than land customs or excise. 2. பட்டாச் செய்யாத நிலத்தினின்று கிடைக்கும் வரிப்பணம்; revenue derived from lands unassigned or cultivated with out patta. 3. ஒரு முறையின்றி அவ்வப்பொழுது தண்டும் வரிப்பணம்; temporary or irregular items of revenue.

த.வ. மிகுவரி

*[U.siwai+jama> த. சிவாய்சமா]*

**சிவார்ச்சனாசந்திரிகை** *śivārccanā-cantirikai,* பெ.(n.) சிவ வழிபாட்டைப் பற்றிக் கூறும் ஒரு நூல்; a treatise on Śiva worship.

**சிவிகாரம்** *śivikāram,* பெ.(n.) சுவீகாரம் பார்க்க; see śuvīkāram.

**சிறாப்பு** *śirāppu,* பெ.(n.) 1. காசு ஆய்வாளன் (நாணய நோட்டக்காரன்); shroff, teller employed by banks and commercial firms. 2. கருவூல வேலைக்காரன்; treasury assistant. 3. காசுக்கடைக்காரன்; banker, dealer in precious metals.

த.வ. நாணயநோட்டகன், நோட்டக்காரன்

*[U. sarrāf > த. சிறாப்பு]*

**சின்மயவாத்துமா** *śiṉmaya-v-āttumā,* பெ.(n.) மெய்யறிவாளன்; spiritual soul. (சா.அக.)

[சின்மயம்+ஆத்துமா]

**சின்மாத்திரம்** *ciṉ-māttiram,* பெ.(n.) ஆதனின் இயல்பு; natural of the soul. (சா.அக.)

**சினகர்** *śiṉagar,* பெ.(n.) சமணர்; Jains. *"சினகருக் கெளியேனலேன்" (தேவா. 859, 6).*

*[Skt. jinaka > த. சினகர்]*

**சினகரம்** *śiṉagaram,* பெ.(n.) 1. சமணக்கோயில்; jains temple. *"அம்மலைச் சினகரம் வணங்கி" (சீவக. 1248).* 2. கோயில்; temple. *"சினகரம் புகுது மெல்லை" (கந்தபு. திருவவ. 11).* 3. சிறு கோயில் (அக.நி.); small temple. 4. அரண்மனை; palace, royal residence. *"இணையறு சினகரமெய்தி" (கந்தபு. – 386).*

த.வ. அருகன்கோயில்

*[Skt. jina+grha > த. சினகரம்]*

**சின்சாசங்கமாத்திரை** *śiṉśā-śaṅgu-māttirai,* பெ.(n.) உடம்பு வலி வயிற்றுப் புண்களுக்குக் கொடுக்கப்படும் ஆயுள் மறை (ஆயுர்வேத) மருந்து. சகல சூலை, சகலகுன்மம் இவைகளைப் போக்கும் ஆயுள் மறை மருந்து. an ayurvedic medicine in the form of pill given for all sorts of pain in the body and stomach disorders gunmam. (சா.அக.)

**சினீவாலி** *śiṉīvāli,* பெ.(n.) திங்கட்கலை தொடங்கும் காருவா (அமாவாசை) நாள் (சூடா.); the first day of the new moon when it rises with a scarcely visible crecent.

*[Skt. śinīvāli > த. சினீவாலி]*

**சினேகநசியம்** *śiṉēga-naśiyam,* பெ.(n.) 1. எண்ணெய்ப் பசை சேர்ந்த மூக்குத்தூள்; snuff or pulverised tobacco prepared with oil or other obigenous substance as an ingredient. 2. எண்ணெய் அல்லது நெய் சேர்ந்த மருந்துப் பொடி; a medicinal powder prepared with oil or ghee as an ingredient. (சா.அக.)

*[Skt. snēha+naś-ya> த.சினேகநசியம்]*

**சினேகவர்மம்** *śiṉēga-varmam,* பெ.(n.) வெள்விழியில் சொர சொரப்புள்ள, சிறிது மஞ்சள் நிறமான, சதை வளர்ந்து நாளா வட்டத்தில் பருக்கும் ஒரு வகை நோய்; a rough yellowish growth of flesh on the white coat of the eye slowly grows in size. (சா.அக.)

**சினேகபந்து** *śiṉēga-bandu,* பெ.(n.) நட்பினால் உறவானவன் (உ.வ.); friend, considered a relative.

*[Skt. śnēha+bandhu > த. சினேகபந்து]*

**சினேகபலம்** *śiṉēga-balam,* பெ. (n.) எண்ணெய் எடுக்கப் பயன்படும் எள் (தைலவ.); sesame, as containing oil.

*[சினேகம் + பலம்]*

*[Skt. śnēha > த. சினேகம்]*

**சினேகபொட்டணம்** *śiṉēga-poṭṭaṇam,* பெ.(n.) மருந்துகளை அடக்கி எண்ணெயிற் றேய்த்து உடல்வலிக்கு ஒத்தடங் கொடுக்குந் துணிமுடிப்பு (வின்.); cloth soaked in oil or ointment and applied to a diseased limb.

*[சினேகம் + பொட்டணம்]*

*[Skt. snēha > த. சினேகம்]*

**சினேகம்** *śiṉēgam,* பெ.(n.) 1. நட்பு; friendship, intimacy, love. 2. எண்ணெய் (யாழ்.அக.); oil, grease, unguent.

*[Skt. snēha > த. சினேகம்]*

**சினேகவங்கணம்** *šinēga-vanganam,* பெ.(n.) அளவளாவுகை (வின்.); friendliness, sociability.

**சினேகன்** *šinēgan,* பெ.(n.) நண்பன்; friend.

*[Skt. šnēha > த. சினேகன்]*

**சினேகனம்** *šinēganam,* பெ.(n.) கண்ணிற்குள் விடும் சொட்டு மருந்து ; eye drops. (சா.அக.)

**சினேகனி** *šinēgani,* பெ.(n.) **சினேகனம்** பார்க்க; see *šinēganam.*

**சினேகி¹** *šinēgi,* பெ.(n.) நட்புடையவள்; a female friend or associate.

*[Skt. šnēha > த. சினேகி]*

**சினேகி²-த்தல்** *šinēgi-,* 4 செ.குன்றாவி.(v.t) நட்புக் கொள்ளுதல்; to make friends with, form friendship. *"பன்னகத்தைச் சினேகித்து" (பஞ்ச. அர்த்தநா. 25).*

*[Skt. šnēha > த. சினேகி-,]*

**சினேகிதம்** *šinēgidam,* பெ.(n.) நட்பு; friendship.

*[Skt. šnēhita > த. சினேகிதம்]*

**சினேகிதன்** *šinēgidan,* பெ.(n.) **சினேகன்** (உ.வ.) பார்க்க; see *šinēgan.*

*[Skt. snēhita > த. சினேகிதன்]*

**சினேகிதி** *šinēgidi,* பெ.(n.) **சினேகி** (இ.வ.) பார்க்க; see *šinēgi.*

*[Skt. snēha > த. சினேகிதி]*

**சீ¹** *šī,* பெ.(n.) 1. திருமகள்; Lakṣmi. *"சீதனங்கோடு புயங்கை கொண்டார்" (கந்தரந். 8).* 2. ஒளி; light, brilliancy. *"சீவனசத்துருச் செய்யாள்" (கந்தரந். 69).*

*[Skt. šrī > த. சீ]*

**சீ²** *šī,* இடை (part.) சிறப்புக் குறிக்கும் ஓர் அடைமொழி; an honorific prefix added to the names of deities, eminent persons and sacred objects. சீராமன், சீபாதம்.

*[Skt. šrī > த. சி]*

**சீக்காளி** *šīkkāḷi,* பெ.(n.) நோயாளி; sick person, invalid.

*[சீக்கு + ஆளி]*

*[E. sick> த. சீக்கு]*

**சீக்கிரகாரன்** *šīkkira-kāran,* பெ.(n.) விரைந்து செயலை முடிப்பவன் (வின்.); man of prompt action, hasty man.

*[Skt. šīghra > த. சீக்கிரம்]*

*[காரன் = உடைமைப் பொருள் ஈறு]*

**சீக்கிரகேந்திரம்** *šīkkira-kēndiram,* பெ.(n.) ஞாயிற்றுக்கும் கோளுக்குமுள்ள கோணவளவுத்தொலைவு (வின்.); commutation, the angular distance of the sun from a planet.

*[Skt. šīghra-kēndra > த. சீக்கிரகேந்திரம்]*

**சீக்கிரதை** *šīkkiradai,* பெ.(n.) **சீக்கிரம், 1** (யாழ்.அக.) பார்க்க; see *šīkkiram 1.*

*[Skt. šīghratā > த. சீக்கிரதை]*

**சீக்கிரப்படு-தல்** *šīkkira-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. விரைவுபடுதல்; to be in haste; to expedite, hasten. 2. எளிதிற் சினங் கொள்ளுதல் (வின்.); to be peevish, to take offence easily.

*[சீக்கிரம்+படு-,]*

*[Skt. šīghra > த. சீக்கிரம் ]*

**சீக்கிரபரிதி** *šīkkira-paridi,* பெ.(n.) கோளின் தொலைக்கோண வளவு (வின்.); annual parallx of a superior planet or elongation of a inferior planet.

*[Skt. šīghra+paridhi > த. சீக்கிரபரிதி]*

**சீக்கிரபுத்தி** *šīkkira-putti,* பெ.(n.) முடுக்கவறிவு (அவசரபுத்தி); hastiness, rashness.

*[Skt. šīghra+buddhi > த. சீக்கிரபுத்தி]*

**சீக்கிரம்¹** *šīkkiram,* பெ.(n.) 1. விரைவு (திவா.); haste, speed. 2. நோய் முதலியவற்றின் வீறு, வீரியம் (வின்.); intensity, severity, rapidity; 3. உறைப்பு; acerbity, pungency, as of tobacco, spirituous liquors. 4. **சீக்கிரபரிதி** பார்க்க; see *šīkkira-paridi.* 5. குதிரை பூட்டிய பெட்டி; a small hack palankeen - carriage (M.M.822).

த.வ. முடுக்கம் *[Skt. šīghra > த. சீக்கிரம்]*

**சீக்கிரம்²** *šīkkiram,* பெ.(n.) சினம்; anger; irritability.

*[Skt. šīghra > த. சீக்கிரம்]*

**சிக்கிரம்போ** *śikkiram-pō*, பெ.(n.) குதிரைவண்டி (இ.வ.); jutka.

*[சிக்கிரம் + போ]*

*[Skt. śighra > த. சீக்கிரம்]*



**சீக்கிரவரை** *śikkira-v-arai*, பெ.(n.) கோளின் சரியான நிலை (கந்தஸ்புடம்)யில் முதலாவதாக இருக்கும் (தீர்க்கும்) பிழைக் கோடு (வாக்கியப் பிழை) first eqvated geocentric longitude.

*[சீக்கிரம் + அரை]*

*[Skt. śighra > த. சீக்கிரம்]*

**சீக்கிரன்** *śikkiran*, பெ.(n.) மூவகைப் பணியாளருள் ஒருவகையான் (சுக்கிரநீதி, 108); one of the three classes of servants.

*[Skt. śighra > த. சீக்கிரன்]*

**சீக்கிராத்தம்** *śikkirāttam*, பெ.(n.) சீக்கிரவரை (வின்.) பார்க்க; see *śikkirā-v-arai.*

*[Skt. śighra+ardha > த. சீக்கிராத்தம்]*

**சீக்கிரார்த்தம்** *śikkirārttam*, பெ.(n.) **சீக்கிரவரை** (வின்.) பார்க்க; see *śikkira-v-arai.*

*[Skt. śighra+ardha > த. சீக்கிரார்த்தம்]*

**சீக்கிரோச்சம்** *śikkiroccam*, பெ.(n.) கோள் வீதியில் நிலவுலகத்திலிருந்து மிக தொலை விலுள்ள இடம் (வின்.); the farthest point from the centre of the earth in the orbit of the planets.

*[Skt. śighra+ucca > த. சீக்கிரோச்சம்]*

**சிக்கு** *śikku*, பெ.(n.) நோய்; sickness, disease.

*[E. sick > த. சிக்கு]*

**சிக்குப்புள்ளி** *śikku-p-pulli*, பெ.(n.) **சிக்காளி** (இ.வ.) பார்க்க; see *śikkāli.*

*[சிக்கு + புள்ளி]*

*[E. sick > த. சிக்கு]*

**சீகத்தம்** *śigattam*, பெ.(n.) அழகிய கை; comely, graceful hand, as of God. *"சீகத்த மாத்திரை திண்பிரம் பாகுமே" (திருமந்.* 1663).

*[Skt. śri+hasta > த. சீகத்தம்]*

**சீகரம்**[1] *śigaram*, பெ.(n.) 1. நீர்த்துளி; drop of water. *"சீகர மகரவேலைக் காவலன் சிந்த" (கம்பரா. மாரீசன். 14).* 2. ஆலங்கட்டி (பிங்.); hail-stone. 3. மழை; rain. 4. அலை (திவா.); wave, ripple.

*[Skt. śikara > த. சீகரம்]*

**சீகரம்**[2] *śigaram*, பெ.(n.) 1. செல்வச் செழிப்பு; prosperity, fortune. *"சீகர மிக்கசூர்" (கந்தபு. சயந்தன்பு.20).* 2. கவரி (திவா.); yak-tail fan, as a symbol of prosperity. *"நிமிர் சீகரம் வீசினர்" (கந்தபு. அவைபுகு. 18).*

*[Skt. śrikara > த. சீகரம்]*

**சீகரி** *śigari*, பெ.(n.) நீர்த்திவலை (வின்.); water-drop.

*[Skt. śikara > த. சீகரி]*

**சீகாரியம்** *śigāriyam*, பெ.(n.) கோயில் மடம் முதலியவற்றின் மேலாண்மை (விசாரணை); management of sacred buildings and institution. *"ராஜராஜீசுவரம் உடையார்கோயில் சீகாரியஞ் செய்வானுக்கும்"* (S.I.I.ii, 311).

**த.வ. திருப்பணி**

*[சீ+காரியம்]*

*[Skt. śri > த. சீ]*

**சீசகம்** *śiśagam*, பெ.(n.) **சீசம்** (வின்.) பார்க்க; see *śiśam.*

*[Skt. sisaka > த. சீசகம்]*

**சீசபத்திரம்** *sīśa-pattiram,* பெ.(n.) **சீசம், 1** (வின்.) பார்க்க; see *sīśam,1.*

*[Skt. sisapatra > த. சீசபத்திரம்]*

**சீசம்** *sīśam,* பெ.(n.) 1. ஈயம் (சூடா.); lead. 2. கோட்டி (பைத்தியம்) (உ.வ.); madness.

*[Skt. sisa > த. சீசம்]*

**சீசயந்தி** *sī-śayandi,* பெ.(n.) கண்ணன் பிறந்த நாளைக் கொண்டாடும் திருவிழா; the festival of Sri Kṛṣṇā's birth day.

*[Skt. śrī-jayanti > த. சீசயந்தி]*

மடங்கல் (ஆவணி) மாத தேய்பிறை எட்டாம் நாள் உருள் (உரோகினி) விண்மீன் கூடிய நன்னாளில் கண்ணன் பிறந்தான் (அபி.சிந்.).

**சீசா** *sīśā,* பெ.(n.) கண்ணாடிக்குப்பி; glass-bottle.

*[ū. shīsha > த. சீசா]*



**சீசாகுணம்** *sīsā-guṇam,* பெ.(n.) ஒரு வகை ஈயமருந்து; iodide of lead (சா.அக)

**சீட்டா** *sīṭṭā,* பெ.(n.) புகை குடிக்கவுதவுஞ் சரக்கு வகை (மதி. க. ii, 521); a drug for smoking.

*[Hind. śīṭhā > த. சீட்டா]*

**சீட்டி** *sīṭṭi,* பெ.(n.) அச்சடித்துணி; chintz, fast-printed cotton cloth.

*[Mhr. chīṭa > த. சீட்டி]*

**சீடப்பரம்பரை** *sīḍa-p-paramparai,* பெ.(n.) வழிவழியாக வரும் மாணவர்களின் தொடர்ச்சி; succession of disciple.

*[சீடன்+பரம்பரை]*

*[Skt. śiṣya> த. சீடன்]*

**சீடப்பிள்ளை** *sīḍappiḷḷai,* பெ.(n.) மாணவன்; disciple.

*[சீடன் + பிள்ளை]*

*[Skt. śisya > த. சீடன்]*

**சீடன்** *sīḍaṉ,* பெ.(n.) மாணாக்கன்; pupil, disciple. *"ஏவல் பெற்றிடு சீடரொடு" (சிவரக. சுகமுனி. 21).*

*[Skt. śṣay > த. சீடன்]*

**சீடார்ச்சிதம்** *sīḍārccidam,* பெ.(n.) மாணவர்களால் குருவின் பொருட்டு ஈட்டப்பட்ட பொருள்; offering procured by disciples for their guru.

*[Skt. śisya+ārjita > த. சீடார்ச்சிதம்]*

**சீடிமண்** *sīḍimaṇ,* பெ.(n.) காக்காய் பொன்நிலம்; talc earth. (சா.அக.)

**சீணதை** *sīṇadai,* பெ.(n.) கணச் சூட்டினால் உடல் இளைக்கை; wasting of flesh without any apparent cause. It is a term employed by ancient medical writers to denote cases of atrophy for which no particular cause could be assigned marasmus. (சா.அக.).

**சீணம்** *sīṇam,* பெ.(n.) 1. சோர்வு; exhaustion. 2. அழிவுறுகை; waste, damage. 3. பெண்குறிநோய்; a disease of female genitals. 4. மெலிதல்; emaciation.

*[Skt. kṣīṇa > த. சீணம்]*

**சீணி-த்தல்** *sīṇi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. வலிவு குறைதல்; to be exhausted, weakened, worm out. 2. அழிவுறுதல்; to be wasted,

lost, destroyed. 3. மெலிதல்; getting wasted or emaciated.

*[Skt. kṣīṇa > த. சீணி-த்தல்]*

**சித்தா** *śittā,* பெ.(n.) ஒருவகைப் பழமரம் (யாழ்.அக.); custard apple - Anona squamosa.

*[Skt. sītā > த. சித்தா]*



**சித்தை** *śittai,* பெ.(n.) **சீட்டி** (வின்.) பார்க்க; see *śiṭṭi.*

*[Mhr. śiṭi > த. சித்தை]*

**சீதக்கட்டு** *śīda-k-kaṭṭu,* பெ.(n.) சீத வழும்பு; slimy, mucous matter voided in dysentery.

*[சீதம் + கட்டு]*

*[Skt. śīta > த. சீதம்]*

**சீதக்கட்டுசுரம்** *śīda-k-kaṭṭu-śuram,* பெ.(n.) வயிற்றளைச்சலில் (சீத பேதியில்) காணும் காய்ச்சல்; fever in dysentry. (சா.அக.).

த.வ. வழும்புக்காய்ச்சல்

*[ சீதம் + கட்டு + சுரம்]*

*[Skt. śīta > த. சீதம்]*

*[த. சுரம் >Skt. jvara]*

**சீதக்கடுப்பு** *śīda-k-kaḍuppu,* பெ.(n.) வயிற்றளைச்சலால் (சீத பேதியினால்) எருவாயில் ஏற்படும் வலி; pain in the anus and lower abdomen due to dysentery. (சா.அக.).

த.வ. வழும்புவலி

*[சீதம் + கடுப்பு]*

*[Skt. śīta > த. சீதம்]*

**சீதக்கழிச்சல்** *śīda-k-kaḻiccal,* பெ.(n.) **சீதபேதி** பார்க்க; see *śīda-bēdi.*

*[சீதம் + கழிச்சல்]*

*[Skt. śīta > த. சீதம்]*

**சீதக்கழிவு** *śīda-k-kaḻivu,* பெ.(n.) **சீதபேதி** (வின்.) பார்க்க; see *śīda-bēdi.*

*[சீதம் + கழிவு]*

*[Skt. śīta > த. சீதம்]*

**சீதக்கிராணி** *śīda-k-kirāṇi,* பெ.(n.) மலத்தில் அரத்தமும் சளியும் சேர்ந்து போகும் கழிச்சல்; a chronic diarrhoea attended with mucous discharge. (சா.அக.).

*[Skt. śīta+ghraṇa > த. சீதக்கிராணி]*

**சீதகசாயம்** *śīda-kaśāyam,* பெ.(n.) காய்ச்சாமலே ஓர் இரவு முழுவதும் குளிர்ந்த நீரிலூறப் போட்டு, காலையில் இறுத்து எடுக்கும் குளிர்ச்சியான மருந்து (குடிநீர்) கருக்கம்; a cold infussion prepared by soaking one part of drugs or drugs in six parts of cold water for one night in the morning it is filtered and administered cold water infusion. (சா.அக.).

த.வ. தண்குடிம்பு

*[சீதம் + கசாயம்]*

**சீதகண்டுவாதம்** *śīda-kaṇḍu-vādam,* பெ.(n.) பாதநரம்பில் குளிர்ச்சி மிகுதியால் உண்டாகும் நமைச்சல் நோய் (சீவரட். 156); itching sensation in the foot, due to extreme chillness.

*[சீதம் + கண்டு + வாதம்.]*

*s[Skt. śīta > த. சீதம்; Skt. vāta- த. வாதம்]*

**சீதகம்** *śīdagam,* பெ.(n.) 1. ஈயம்; lead. 2. தரா; tarā, an alloy.

*[Skt. śīsaka > த. சீதகம்]*

**சீதகன்**[1] *šīdagaṉ,* பெ.(n.) திங்கள் (யாழ்.அக.); moon.

*[Skt. šīta-kara > த. சீதகன்]*

**சீதகன்**[2] *šīdagaṉ,* பெ.(n.) வெள்ளி (அக.நி.); venus.

*[Skt. sītaka > த. சீதகன்]*

**சீதகன்**[3] *šīdagaṉ,* பெ.(n.) சோம்பேறி (யாழ்.அக.); lazy fellow.

*[Skt. šītaka > த. சீதகன்]*

**சீதகாத்திரகம்** *šīda-kāttiragam,* பெ.(n.) **சீதாங்கசன்னி** (வின்.) பார்க்க; see *šītāṅga-šaṉṉi.*

**சீதகாத்திரம்** *šīda-kāttiram,* பெ.(n.) குளிர்ச்சியால் ஏற்படும் இசிவு நோய் (சன்னி); apoplexy due to extreme cold in the body. (சா.அக.)

த.வ. தணுப்புஇசிவு

**சீதகிருச்சரம்** *šīda-kiruccaram,* பெ.(n.) மூன்று நாள் நீர்மட்டும் பருகிப் பட்டினி யிருக்கும் ஒரு நோன்பு (யாழ்.அக.); a fast for three days, drinking only water.

த.வ. நீர்நோன்பு

*[Skt. šīta+kṛcchra > த. சீதகிருச்சரம்]*

**சீதகேசரிமாத்திரை** *šīda-kēšari-māttirai,* பெ.(n.) நேர்வாளத்தோடு கடைச் சரக்கு களைச் சேர்த்துச் செய்யும் மாத்திரை; இது கழிச்சலுக்கு மருந்தாகப் பயன்படுகிறது; a purgative pill prepared with crotion seeds and other bazar drugs.

த.வ. நேர்வாளமாத்திரை

*[சீதகேசரி+ மாத்திரை]*

*[Skt. šīta +kēsāri > த. சீதகேசரி]*

**சீதசன்னி** *šīda-šaṉṉi,* பெ.(n.) சளி (கப) காய்ச்சலில் தோன்றிய இசிவுநோய் (சன்னிபாதம்); pneumonia.

த.வ. தணுப்புஇசிவு

*[Skt. šīta+sanni > சீதசன்னி]*

**சீதசுரம்** *šīda-šuram,* பெ.(n.) குளிரோடு தோன்றும் காய்ச்சல் நோய் (பதார்த்த. 842); ague, fever attended with chill.

த.வ. குளிர்க்காய்ச்சல்

*[சீதம்+சுரம்]*

*[Skt. šīta > த. சீதம்]*

**சீததயிலம்** *šīda-dayilam,* பெ. (n.) 1. சுண்ணாம்பு; lime. 2. குளிர்ச்சியைத் தரும் எண்ணெய்; medicated oil which cools the body when one bathes with it. (சா.அக.).

*[Skt. šīta+taila > சீததயிலம்]*

**சீதநீர்** *šīda-nīr,* பெ.(n.) குளிர்ச்சியுடைய நீர், பனிநீர் (திவா.); rose-water, as being cool.

*[சீதம் + நீர்]*

*[Skt. šīta > த. சீதம்]*

**சீதப்பஞ்சனம்** *šīda-p-pañjaṉam,* பெ.(n.) அரத்தமும் மலமும் கலந்து வெளியேறும் காய்ச்சல் (சீதசுரத்திற்காக) நோய்க்குச் சிவன் சொன்ன ஓர் ஆயுள் வேதமருந்து; an Ayurvedic medicine supposed to be given by Šivaṉ. (சா.அக.)

த.வ. சிவமருந்து

**சீதப்பற்று** *šīda-p-paṟṟu,* பெ.(n.) சீதவழும்பு; slimy, mucous matter voided in dysentery.

*[சீதம் + பற்று]*

*[Skt. šīta > த. சீதம்]*

**சீதப்பிரபம்** *šīda-p-pirabam,* பெ.(n.) கருப்பூரம் (யாழ்.அக.); camphor.

*[Skt. šīta-prabha > த. சீதப்பிரபம்]*

**சீதபானு** *šīda-bāṉu,* பெ.(n.) திங்கள் (யாழ்.அக.); moon, as having cool rays.

*[Skt. šīta-bhānu >த. சீதபானு]*

**சீதபித்தசுவரம்** *šīda-pitta-šuvaram,* பெ.(n.) மழைக்காய்ச்சல்; (M.L.) malaria.

**சீதபேதி** *śida-bēdi,* பெ.(n.) வயிற்றளைச்சல் (வின்.); dysentery. (சா.அக.)

*[Skt. śita+bhēdin> த. சீதபேதி]*

சீதபேதி = மலம் தங்கி நிற்கும் பெருங்குடலின் உட்புறத்திலிருக்கும் சளியால் ஆன (சிலேட்டும்) மெல்லிய தோலுக்கு அழற்சி ஏற்படுவதால் சீதம் அரத்தத்தோடு கலந்து வெளியேறும் கழிச்சல் நோய்.

**சீதம்** *śidam,* பெ.(n.) 1. குளிர்ச்சி (பிங்.); coldness, chillness. 2. நீர் (பிங்.); water. 3. முகில் (பிங்.); cloud. 4. சந்தனம் (மலை.); sandal. 5. ஒரு வகைக் கள்; a kind of toddy. *"மதுவுஞ் சீதமும்" (பெருங். இலாவாண. 2: 179).* 6. **சீதநாடு** பார்க்க; see *śida-nāḍu. 'சீத மலாடு புனனாடு' (நன். 273, உரை).* 7. ஒரு அளறு (நரகம்) (சி.போ.பா.2:3, பக்.203); a hell. 8. சீதமலம்; slime or mucus voided in dysentery. 9. அகில் (மலை.); eagle-wood. 10. பெருநறுவிலி (மலை.) எனும் மரவகை; large sebesten. 11. பற்பாடகம் எனும் சிறுபூடுவகை (தைலவ. தைல. 61); fever plant. 12. **சீதாங்கபாடாணம்** (யாழ்.அக.); *śidāṅga-bāḍāṇam.* (சா.அக.)

*[Skt. śita > த. சீதம்]*

மலம் தங்கி நிற்கும் பெருங்குடலின் உட்புறத்திலிருக்கும் சளியாலான மெல்லிய தோலுக்கு அழற்சி ஏற்படுவதால் சீதம் உண்டாகிறது. (சா.அக.)

**சீதமண்டலம்** *śida-maṇḍalam,* பெ.(n.) திங்கள்; moon. *"சீதமண்டலக் குலத்துதித்த தீதின் மன்னவன்" (திருவாலவா. 44, 30).* (சா.அக.)

*[சீத(ம்) + மண்டலம்]*

*[Skt. śita > த. சீதம்]*

**சீதமண்டலி** *śida-maṇḍali,* பெ.(n.) பாம்புவகை; a species of snake. *'இது சீதமண்டலி யென்பார்' (சீவக. 1276, உரை).*

*[சீதம் + மண்டலி]*

*[Skt. śita > த. சீதம்]*

**சீதமயூகம்** *śida-mayūgam,* பெ.(n.) கருப்பூரம் (மூ.அ.); camphor. (சா.அக.)

*[Skt. śitamayūkha > த. சீதமயூகம்]*

**சீதமலடு** *śida-malaḍu,* பெ.(n.) பெண்களுக்கு உண்டாகும் அறுவகை மலட்டு நோய்களுள் ஒன்று; one of the six varieties of sterlity in woman caused by extreme chillness of the body. (சா.அக.).

**த.வ. தணுப்புமலடு**

*[சீதம்+மலடு]*

*[Skt. śita > த. சீதம்]*

**சீதமேகரோகம்** *śida-mēga-rōgam,* பெ.(n.) நீரிழிவு நோய் வகை (சீவரட். 100); a kind of diabetes.

**த.வ. தண்மேகம்**

*[Skt. śita+mēha+rōga > த. சீதமேகரோகம்]*

**சீதமைக்குடல்** *śidamai-k-kuḍal,* பெ.(n.) மந்தக்கட்டு சீதம் தங்கிய குடல், ஆடு மாடுகளுக்கு குடலிற் காணும் ஒரு வகை நோய். (இதனால் மெல்லவும், அசை போடவும் முடியாமற்போகும்); a disease in cattle & sheep by which they are unable to chew the cud. It is attended with torpidity of the mucous and constriction of the bowels - Fardel bounnd. (சா.அக.).

**த.வ. குடல்வழும்பு**

*[சீதமை+குடல்]*

**சீதமோனகம்** *śitamōṇagam,* பெ.(n.) கொம்புத்தேன்; honey collected from honey combs built on the branches of trees. (சா.அக.).

**சீதரத்தபேதி** *śida-ratta-bēdi,* பெ.(n.) மலமும் சீதமும் அரத்தமும் கலந்த கழிச்சல்; dysentery with blood and mucous in stools. (சா.அக.)

**த.வ. குருதிக்கழிச்சல்**

*[Skt. śita+trakta+bhēdin > த. சீதரத்தபேதி]*

**சீதரப்பிரியம்** *śidara-p-piriyam,* பெ.(n.) விட்டுணுக் கரந்தை (மலை.); Indian globe-Thistle.

*[Skt. śridhara+priya > த. சீதரப்பிரியம்]*

**சீதரன்** *śidaran,* பெ.(n.) திருமகளைக் கொண்டவன், திருமால்; Tirumāl, as the bearer of Tirumagl. *"சீதரமூர்த்தி" (கம்பரா. அகலிகை. 26).* (சா.அக.).

*[Skt. śri-dhara > த. சீதரன்]*

**சீதரூட்சை** *śidarūṭcai,* பெ.(n.) பிள்ளைபெற்ற பெண்களுக்குக் காணும் மலமும் அரத்தமும் கலந்த கழிச்சல்; dysentry generally attacking women after delivery. (சா.அக.)

**சீதவஞ்சிரகம்** *śidavañjiragam,* பெ.(n.) கடுமையான காய்ச்சலுக்குக் கொடுக்கும் ஆயுள்வேதமருந்து; an ayurvedic medicine given for acute fever. (சா.அக.)

**சீதவலயம்** *śida-valayam,* பெ.(n.) நிலத்தின் குளிர்ந்த (சீதமண்டலப்) பகுதி; frigid zone.

த.வ. பனியிறுகுவலயம்

*[Skt. śita+valaya > த. சீதவலயம்]*

**சீதவழுப்பு** *śida-valuppu,* பெ.(n.) ஆமம் வெளியேறுகை; alvine discharge.

**சீதவழும்பு** *śida-valumbu,* பெ.(n.) வயிற்றுப் போக்கிற் காணும் ஆமம்; mucous collected in the bowels - voided in dysentstry.

*[சீதம்+வழும்பு]*

*[Skt. śita > த. சீதம்]*

வழும்பு = ஊன் முதலியவற்றின் மேலுள்ள வழுவழுப்பான நீர்ப்பண்டம்.

**சீதவற்கம்** *śidavarkam,* பெ.(n.) அத்தி (மூ.அ.); country fig.

*[Skt. śita-valka > த. சீதவற்கம்]*

**சீதவாதக்கடுப்பு** *śida-vāda-k-kaduppu,* பெ.(n.) **சீதவாதம் (வின்.)** பார்க்க; see *śida-vādam.*

*[சீதம் + வாதம் + கடுப்பு]*

*[Skt. śita+vāta > த. சீதவாதம்]*

**சீதவாதம்** *śida-vādam,* பெ.(n.) குளிர்முடக்கு (வின்.); rheumatism.

*[Skt. śita+vāta > த. சீதவாதம்]*

**சீதவாரம்** *śidavāram,* பெ.(n.) 1. மல்லிகை (மூ.அ.); jasmine. 2. வேலிப்பருத்தி (மலை.); hedge-twiner.

*[Skt. śitabhiru > த. சீதவாரம்]*



**சீதளக்கசாயம்** *śidala-k-kaśāyam,* பெ. (n.) தண்ணீரில் ஊறப்போட்டு வடித்த மருந்துக் கருக்கம் (கசாயம்); a decoction prepared without boiling but by soaking the drugs in cold water for 12 or 24 hours - Cold Infusion.

*[Skt. śitala+Pkt. kacāyam> த. சீதளக்கசாயம்]*

**சீதளக்கட்டி** *śidala-k-katti,* பெ.(n.) உடம்பின் குளிர்ச்சியினால் அழற்சி காணாமலே மெதுவாக எழும்பும் கட்டி; cold abscess an abscess that develops slowly without any symptoms of inflammation especially heat and redness-Cold abscess. (சா.அக.).

த.வ. அழற்சிக்கட்டி

*[சீதளம் + கட்டி]*

*[Skt. śitala > த. சீதளம்]*

**சீதளகாரி** *šidaḷa-kāri*, பெ.(n.) குளிர்ச்சி தரும் மருந்து; refrigerant.

*[Skt. šitala+kārin > த. சீதளகாரி]*

**சீதளகாலம்** *šidaḷa-kālam*, பெ. (n.) குளிர்காலம் (உ.வ.); cold season.

*[சீதளம் + காலம்]*

*[Skt. šitala > த. சீதளம்]*

**சீதளங்காய்** *šidaḷaṅgāy*, பெ.(n.) கொடிமாதுளை (வின்.). emon citron.

*[சீதளம் + காய் ]*

*[Skt. šitala > த. சீதளம்]*

**சீதளங்கொள்(ளு)-தல்** *šidaḷaṅ-koḷ-*, 16 செ.கு.வி.(v.i.) நீர்க்கொள்ளுதல் (வின்.); to catch cold. (சா.அக.).

*[சீதளம் + கொள்ளு–]*

*[Skt. šitala > த. சீதளம்]*

**சீதளசக்கரபூமி** *šidaḷa-cakkara-būmi*, பெ.(n.) **சீதவலயம்** (வின்.) பார்க்க; see *šida-valayam*.

*[சீதளம் + சக்கரம் +பூமி]*

*[Skt. sitala >த.சீதளம்; Skt. bhumi> த. பூமி]*

**சீதளம்**[1] *šidaḷam*, பெ.(n.) 1. குளிர்ச்சி; cold, coolness. *"சீதளத்துடன் நடுக்குற்றனன்" (உபதேசகா. கைலை. 46).* 2. ஈரம் (வின்.); dampness, moisture. 3. சந்தனம் (யாழ்.அக.); sandal wood. 4. எலுமிச்சை வகை(L.); bergamotte orange, m.fr., Citrus aurantium - bergamia. 5. சிற்றகத்தி (மலை.); common sesban. 6. கோடகசாலை (மலை.); coromandel gendarussa. 7. கொடி மாதுளை (மலை.); lemon citron. 8. பச்சைக் கருப்பூரம் (மூ.அ.); purified camphor. 9. துரிசு (யாழ்.அக.); verdigris.

*[Skt. šitala > த. சீதளம்]*

**சீதளம்**[2] *šitaḷam*, பெ.(n.) தாமரை (யாழ்.அக.); lotus.

*[Skt. šri-dala > த. சீதளம்]*



**சீதளர்** *šidaḷar*, பெ.(n.) தூய நீரவரர் (தீர்த்தங்கரர்)இருபத்து நால்வருள் ஒருவர் (திருக்கலம். காப்பு. உரை.); a Jaina Arhat, one of 24 *tirttaṅgarar*.

*[Skt. šri-dala > த. சீதளர்]*

**சீதளவாயு** *šidaḷa-vāyu*, பெ.(n.) உடம்பில் நீரேற்றங்கண்டு பிறகு காற்று (வாயு) சேர்ந்த கோளாறு; excess of wind due to extreme chillness in the body. (சா.அக.)

*[Skt. šitala + vāyu > த. சீதளவாயு]*

**சீதளாசப்தமி** *šidaḷā-šaptami*, பெ.(n.) மடங்கல் (ஆவணி) மாதத்து இருட்பக்கத்து ஏழாம் நாள் (திதி); seventh titi in the dark fortnight of *šrāvaṇa* month.

*[Skt. šitalā+šaptami > த. சீதளாசப்தமி]*

**சீதளாதேவி** *šidḷādēvi*, பெ.(n.) மாரியம்மன் (உ.வ.); goddess of small-pox.

*[சீதளா+தேவி]*

*[Skt. šitalā > த. சீதளா]*

**சீதளோட்ணபூமி** *šidaḷōṭṇa-būmi*, பெ. (n.) நிலப்பரப்பில் குளிரும் வெப்பமும் சமஅளவிலுள்ள பகுதி (வின்.); temperate zone.

**த.வ. சமவெப்பநிலம்**

*[Skt. šitala+usṇa+bhumi>த. சீதளோட்ணபூமி]*

**சீதன்** *śīdaṉ*, பெ. (n.) குளிர்ந்த இயல்பையுடைய திங்கள்; moon, as being cool. *"சீதனங்கோடு முடியாளர்" (கந்தரந். 8).*

*[Skt. śīta > த. சீதன்]*

**சீதனக்காணி** *śīdaṉa-k-kāṇi*, பெ.(n.) கொடையாகப் பெற்ற நிலம்; land obtained as dowry. *"சீதனக் காணி பெற்றத் தண்ணென் குறிஞ்சித் தலந்தலை யளிப்பவன்" (குமர. பிர. முத்துக். பிள்ளைத். 35).*

*[சீதனம் + காணி]*

*[Skt. strī-dhana> த. சீதனம்]*

**சீதனக்காரி** *śīdaṉa-k-kāri*, பெ.(n.) சீர்வரிசைப் பொருளுடன் வந்த பெண் (உ.வ.); married woman with a dowry.

த.வ. சீர்க்காரி

*[சீ + தனம் + காரி]*

*[Skt. stri > த. சீ]*

**சீதனச்சீட்டு** *śīdaṉa-c-ciṭṭu*, பெ.(n.) சீர்வரிசை எழுதப்பட்ட ஓலை முதலிய ஆவணம்; dowry instrument. (சா.அக.)

த.வ. சீர்சீட்டு

*[சீ + தனம் + சீட்டு]*

*[Skt. strī > த. சீ]*

**சீதனம்** *śīdaṉam*, பெ.(n.) மணமகள் கொண்டுவரும் சீர்வரிசை; dowry. *"தேவிபெறுஞ் சீதனம்" (கந்தரந். 8).*

த.வ. சீர்வரிசை

*[சீ + தனம்]*

*[Skt. strī > த. சீ]*

**சீதனவாட்சி** *śīdaṉa-v-āṭci*, பெ.(n.) சீர்வரிசையைப் பெறுவதற்கான உரிமை; right of possession by dowry.

த.வ. சீர்உரிமை

*[சீ + தனம்+ஆட்சி]*

*[Skt. strī > த. சீ]*

**சீதனவுறுதி** *śīdaṉa-vuṟudi*, பெ.(n.) **சீதனச்சீட்டு** பார்க்க; see *śīdaṉa-c-ciṭṭu.*

*[சீ + தனம்+உறுதி]*

*[Skt. strī > த. சீ]*

**சீதனவோலை** *śīdaṉa-v-ōlai*, பெ.(n.) **சீதனச்சீட்டு** பார்க்க; see *śīdaṉa-c-ciṭṭu.*

த.வ. சீர்ஓலை

*[சீ + தனம்+ஓலை]*

*[Skt. strī > த. சீ]*

**சீதா** *śītā*, பெ.(n.) **சீதை** பார்க்க; see *śīdai. "சீதா பவளக் கொடியன்னவட் டேடி" (கம்பரா. உருக்கா. 85).*

*[Skt. Śītā > த. சீதா]*

**சீதாங்கசன்னி** *śītāṅga-śaṉṉi*, பெ. (n.) தீர்க்கமுடியாத பக்கவூதை (வாத) நோய்வகை (வின்.); an incurable paralysis with very low temperature.

த.வ. பக்கவூதை

*[Skt. śītāṅga+sanni > த. சீதாங்கசன்னி]*

**சீதாங்கபாடாணம்** *śīdāṅga-pāḍāṇam*, பெ. (n.) பிறவி நஞ்சு வகை (வின்.); a mineral poison.

*[Skt. śītāṅga+pāṣāṇa > த. சீதாங்க பாடாணம்.]*

**சீதாங்கம்** *śīdāṅgam*, பெ.(n.) **சீதாங்கசன்னி** (வின்.) பார்க்க; see *śīdāṅga-śaṉṉi.* 2. **சீதாங்கபாடாணம்** (மூ.அ.) பார்க்க; see *śīdāṅga-pāḍāṇam.*

*[Skt. śītāṅga > த. சீதாங்கம்]*

**சீதாபதி** *śīdā-padi*, பெ. (n.) **சீதையின்** கணவனான இராமன்; Rāmaṉ, as the spouse of *śītā.*

*[Skt. śītā+pati > த. சீதாபதி]*

**சீதாபிராட்டி** *śītā-pirāṭṭi*, பெ.(n.) **சீதை** பார்க்க; see *śīdai.*

*[சீதா + பிராட்டி]*

*[Skt. śītā > த. சீதா]*

**சீதாமனோகரம்** *śītā-maṉōgaram*, பெ.(n.) கொடிச் சம்பங்கி; cowslip creeper.

*[Skt. śītā+manō-hara > த. சீதா மனோகரம்]*

**சீதாரி**[1] *śīdāri*, பெ.(n.) நறும்புகைத்தி, (சாம்பிராணி); frankincense. *"சீதாரி*

*கொண்டுதன் மெய்புகைத்தாள்" (ஆதியுலா, 186).*

**த.வ. நறும்புகை**

*[**Skt.** śrīdāru > த. சீதாரி]*

**சீதாரி²** *śīdāri,* பெ.(n.) நகரம் (வின்.); town, city.

*[**Skt.** śrī-dhārin > த. சீதாரி]*

**சீதாரிரசம்** *śīdāri-rasam,* பெ.(n.) தூய்மை செய்த இதளியம் (இரசம்), கெந்தி, வெள்ளைச் சாரணை முதலியவற்றைச் சித்திர மூலச் சாற்றிலும், எருக்கன் இலைச் சாற்றிலும் அரைத்துத் தகுதியாக்கிப் பித்த நோய்க்குக் கொடுக்குமோர் ஆயுள்வேத மருந்து; an ayurvedic medicine containing mercury & sulphur given for the diseases caused by phelgm and heat humours.

**சீதி** *śīdi,* பெ.(n.) பெண்குறி (இ.வ.); pudendum muliebre.

**சீது¹** *śīdu,* பெ.(n.) மது; a spirituous iiquor. *"சீதுபருகிக் கடிசிறைக்கொடு" (இரகு. தேனுவந். 7).*

*[**Skt.** śīdhu > த. சீது]*

**சீது²** *śīdu,* பெ.(n.) ஈயம் (யாழ்.அக.); tin.

*[**Skt.** sīsa > த. சீது]*

**சீதேவி** *śīdēvi,* பெ.(n.) 1. திருமகள்; Lakṣmi. *"சீதேவியார் பிறந்த செய்ய திருப்பாற் கடலில்" (தனிப்பா.).* 2. மகளிர் தலைக்கோலவுறுப்பு (திருமுருகு. 23, உரை); a woman's head ornament. 3. செங்கழுநீர் (மலை.); red Indian water lily.

*[**Skt.** śrī-dēvi > த. சீதேவி]*

**சீதை** *śīdai,* பெ.(n.) 1. உழுபடைச் சால்; furrow. *"கொழுவுழு சீதைதொறும்" (திருப்போ. சந். பிள்ளைத். செங்கீ. 8).* 2. உழுசாலில் தோன்றியதாகக் கருதப்படும் இராமனின் மனைவி; Śītā, wife of Rāmaṉ, as having sprung from a furrow, one of *pañja kaṉṉiyar.* *"கடுந்தே ரிராமனுடன் புணர் சீதையை" (புறநா. 378).* 3. நூற்றெட்டு அறிவின் மறைப்பகுதிகளுள் ஒன்று; an Upaniṣad, one of 108.

*[**Skt.** sītā > த. சீதை]*

**சீதோட்ணக்கருவி** *śīdōṭṇa-k-karuvi,* பெ.(n.) குளிர்ச்சியையும், வெப்பத்தையும் அளக்கும் கருவி; thermometre. (சா.அக.)

*[சீதோட்ணம் + கருவி]*

*[**Skt.** śīta+uṣna> த. சீதோட்ணம்]*

**சீதோதககசாயம்** *śīdōdaga-kaśāyam,* பெ.(n.) **சீதகசாயம்** பார்க்க; see śīda-kaṣāyam (சா.அக.)

**சீதோதகம்** *śīdōdagam,* பெ.(n.) குளிர்ந்த தண்ணீர்; cold water.

*[**Skt.** śita+udaka > த. சீதோதகம்]*

**சீதோதம்** *śīdōdam,* பெ.(n.) **சீதோதகம்** பார்க்க; see *śīdōdagam*

**சீதோட்ணதிதி** *śīdōṭṇa-tidi,* பெ.(n.) நாட்டிலுள்ள தட்ப வெட்ப நிலை; climatic condition.

*[**Skt.** śita+uṣna + tithi > த. சீதோட்ணதிதி]*

**சிப்போம்பு** *śippōmbu,* பெ.(n.) கப்பல் முகப்புக் கட்டை; jib-boom.

*[**E.** jib-boom > த. சிப்போம்பு]*

**சிபட்டர்** *śi-baṭṭar,* பெ.(n.) பகவத் கீதையை தமிழில் தந்த ஆசிரியர்; the author of the *Bagavat-gītā* in Tamil verse.

*[**Skt.** śrī+bhaṭṭa > த. சிபட்டர்]*

**சிபண்டாரம்** *śi-paṇḍāram,* பெ.(n.) 1. கோயிற் கருவூலம்; temple treasure. 2. கோயிற் சொத்து; temple property.

**த.வ. கருவூலம்**

*[சீ + பண்டாரம்]*

*[**Skt.** śrī > த. சீ]*

**சீபதி** *śī-padi,* பெ.(n.) 1. திருமகள் கணவான திருமால்; Viṣṇu, as lord of Lakṣmi. 2. அருகன் (சூடா.); Arhat.

*[Skt. śrī + pati > த. சீபதி]*

**சீபலி** *śībali,* பெ.(n.) 1. கோயிலில் படைக்கும் உணவு; rice offering in a temple. 2. கோயிலில் நாள்தோறும் படைக்கும் கடவுள் உணவு வழிபாட்டிற்காக எழுந்தருளப் பண்ணும் சிறிய திருமேனி; a small idol carried round the temple every day. 3. கோயிலில் நடக்கும் தெய்வ வழிபாடு (சிலப். உரைபெறுகட். 4, உரை); daily procession of the cīpali idol around the temple, making offerings to the minor deities.

**த.வ. திருப்படையல்**

*[Skt. śrī+bali > த. சீபலி]*

**சீபாதக்கூலி** *śīpāda-k-kūli,* பெ.(n.) திருவடி தாங்குவோர்க்குக் கொடுக்குங் கூலி; wages of vehicle-bearers in a temple. (சா.அக.)

**த.வ. திருவடிக்கூலி**

*[சீ + பாதம்+கூலி]*

*[Skt. śrī > த. சீ]*

**சீபாதந்தாங்கிகள்** *śīpādan-tāṅgigaḷ,* பெ.(n.) கோயிலில் இறைவனுக்குரிய ஊர்தியைத் தாங்கிச் செல்வோர்; vehicle - bearers attached to a temple, as supporting the feet of god.

**த.வ. திருவடிதாங்கிகள்**

*[சீ + பாதம் + தாங்கிகள் ]*

*[Skt. śrī > த. சீ]*

**சீபாதம்** *śīpādam,* பெ.(n.) 1. திருவடி; holy feet, as of god, guru. 2. **சீபாதந்தாங்கிகள்** பார்க்க; see *śī-pādan-tāṅgigaḷ.*

**த.வ. திருவடி**

*[சீ + பாதம்]* *[Skt. śrī > த. சீ]*

**சீபாதாங்காதனம்** *śīpātāṅgā-taṉam,* பெ.(n.) தவநிலைவகை (தத்துவப். 107, உரை); a yogic posture.

*[சீ + பாதம் + ஆங்க + ஆதனம்]*

*[Skt. śrī > த. சீ Skt. āsna > த. ஆதனம்]*



**சீமங்கலி** *śīmaṅgali,* பெ.(n.) முடி திருத்தாளன் (நாவிதன்) (சூடா.); barber.

*[Skt. śrīmaṅgalin > த. சீமங்கலி]*

**சீமத்து** *śīmattu,* பெ.(n.) பேறு; prosperity, wealth. *'அங்ஙணம் பெற்ற சீமத்தான பெரும்பயனெல்லாம்' (சிலப். 15, 184, உரை).*

*[Skt. śrī-mat > த. சீமத்து]*

**சீமதி** *śīmadi,* பெ.எ. (adj.) அழகுள்ளவன்; fair, beautiful woman. *'சீமதியான வேட்டுவிச்சி' (பு.வெ.1,15,உரை).*

*[Skt. śrī-mati > த. சீமதி]*

**சீமந்தகலியாணம்** *śīmanda-kaliyāṇam,* பெ.(n.) **சீமந்தம்** பார்க்க; see *śīmandam.*

*[சீமந்தம் + கலியாணம்]*

*[Skt. śīmanta > த. சீமந்தம்]*

**சீமந்தஞ்சாற்று-தல்** *śīmandañ-jāṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) சாந்தி கலியாணஞ் செய்தல்; to celebrate the consummation of marriage.

*[சீமந்தம் + சாற்று-]*

*[Skt. śīmanta > த. சீமந்தம்]*

**சீமந்தபுத்திரன்** *śīmanda-puttiraṉ,* பெ.(n.) வளைகாப்பு விழாவிற்குப் பின் பிறந்த பிள்ளை; son born after the bangle wearing ceremony of a pregnant woman.

*[Skt. śīmanta> த. சீமந்தம்]*

**சீமந்தபுத்திரி** *śimanda-puttiri,* பெ.(n.) வளைகாப்பு விழாவிற்குப் பின் பிறந்த பெண்; daughter born after the bangle wearing ceremony of a pregnant woman.

*[Skt. śimanta+puttri > த. சீமந்தபுத்திரி]*

**சீமந்தம்** *śimandam,* பெ (n.) 1. முதற்கருப்பத்தில் ஆறு அல்லது எட்டாம் மாதத்தில் கருக்கொண்ட பெண்களுக்குச் செய்யப்படுஞ் சடங்கு; purifications ceremony of parting the hair, performed in the sixth or eighth month of the first pregnancy of a woman. *"ஆறாமதியி லுயர்சீ மந்தம்" (காசிக. பிரமச. 3).* 2. சூலுற்ற பெண்ணுக்கு ஒற்றைப் படை மாதங்களான ஏழு அல்லது ஒன்பதாம் மாதங்களில் செய்யப்படும் வளைகாப்புச் சடங்கு; purifications ceremony of parting the hair performed in the seventh or nineth month of the first pregnancy of a woman.

த.வ. வளைகாப்பு

*[Skt. śimanta > த. சீமந்தம்]*

**சீமந்தரேகை** *śimanda-rēgai,* பெ.(n.) பெண்களின் தலைமயிரை வகிர்தலால் உச்சியில் உண்டாகும் வரிகை (இரேகை); line forward by the parted hair on woman's head.

த.வ. தலைவகிடு

*[Skt. śimanta+rēkhā > த. சீமந்தரேகை]*

**சீமந்தசேட்டன்** *śimanda-śēṭṭaṉ,* பெ.(n.) **சீமந்தபுத்திரன்** பார்க்க; see simanda puttiran.

*[Skt. śimanta+jyēstha > த. சீமந்த சேட்டன்]*

**சீமந்தினி** *śimandiṉi,* பெ.(n.) பெண்; woman. *"மங்களங் கொள் சீமந்தினிக்குன் மணாளன் வந்திடுமென்று" (சிவக். பிரபந். பக். 337).*

*[Skt. śimantini> த. சீமந்தினி]*

**சீமம்** *śimam,* பெ.(n.) எல்லை (பிங்.); boundary, limit.

*[Skt. śiman > த. சீமம்]*

**சீமாவிவாதம்** *śimā-vivādam,* பெ.(n.) எல்லையைப் பற்றிய வழக்கு(I.M.P.Tp.756); boundary dispute.

*[Skt. simā+vivāda > த. சீமாவிவாதம்]*

**சீமாள்** *śimāḷ,* பெ.(n.) செல்வமுள்ளவள்; wealthy woman.

*[Skt. śrimat > த. சீமாள்]*

**சீமான்** *śimāṉ,* பெ. (n.) 1. செல்வமுடையவன்; lord, wealthy man. 2. அருகன் (சூடா.); Arhat.

த.வ. செல்வன் *[Skt. śrimān > த. சீமான்]*

**சீமுக** *śimuga,* பெ. (n.) வடமொழியாளரின் அறுபது ஆண்டுகளுள் ஏழாவது (பெரியவரு.); the seventh year of the jupiter cycle.

*[Skt. śri-mukha > த. சீமுக]*

**சீமுகம்** *śimugam,* பெ.(n.) குரு அரசன் போன்ற பெரியோரின் திருமுக ஓலை; letter from an eminent person, guru or king.

*[Skt. śri-mukha > த. சீமுகம்]*

**சீமூதம்** *śimūdam,* பெ.(n.) 1. நீருண்ட முகில் (பிங்.); rain cloud. *"சீமூதமூர் வலாரி மடமகள்" (திருப்பு. 326).* 2. ஊக்கம்; earnestness, zeal. *வேலை சீமூதமாய் நடக்கிறது (இ.வ.).* 3. மலை (வின்.); mountain. 4. பெண் யானை (வின்.); female elephant.

*[Skt. jimūta > த. சீமூதம்]*

**சீயங்கல்** *śiyaṅ-gal,* பெ.(n.) மட்டக் கெம்பு; a kind of inferior ruby, as from Siam.

*[சீயம் + கல்]* *[Malay. siyam > த. சீயம்]*

**சீயஞ்சிவப்பு** *śiyañ-jivappu,* பெ.(n.) **சீயங்கல்** (இ.வ.) பார்க்க; see *siyaṅ-gal.*

*[சீயம் + சிவப்பு]* *[Malay. siyam > த. சீயம்]*

**சீயம்¹** *śiyam,* பெ.(n.) 1. அரிமா; lion. *"சீயமு மேறும் பாய்பரிப் புரவியும்" (பெருங். உஞ்சைக். 42 : 85).* 2. அரிமா ஓரை (சிம்மராசி) (திவா.); leo, a sign of the zodiac.

த.வ. மடங்கல்

*[Skt. simha > Pkt. siha > த. சீயம்]*

**சீயம்²** *šīyam*, பெ.(n.) ஒரு நாடு; Siam.

*[Malay. siyam > த. சீயம்]*

**சீயன்** *šīyan*, பெ.(n.) 1. **சீயம்²** பார்க்க; see *šīyam²*. 2. **சீயங்கல்** (உ.வ.) பார்க்க; see *šīyaṅ-gal*.

*[Malay. siyam > த. சீயன்]*

**சீயாசனம்** *šīyāšanam*, பெ.(n.) அரியணை (சிங்காதனம்); throne. *வெற்றிச் சீயாசனத்து" (மேருமந். 921).*

*[Skt. šimha>Pkt. siha + Skt. āsana> த. சீயாசனம்]*

**சீர்கத்து** *šīrkattu*, பெ. (n.) மருந்துப் பொருளாகும் ஒருவகை மரப்பால் (பைஷஜ. 74); saccharine exudation obtained from plants either naturally or by cutting the bark, edible and medicinal.

*[U. shīr-khist > த. சீர்கத்து]*

**சீர்ணம்** *šīrṇam*, பெ.(n.) **சீரணம்** பார்க்க; see *šīraṇam*.

*[Skt. jīrṇa > த. சீர்ணம்]*

**சீரங்கம்** *šīraṅgam*, பெ.(n.) திருச்சிராப்பள்ளிக் கருகிலிருக்கும் புகழ்பெற்ற திருமால் கோயில் உள்ள இடம்; *Šri-raṅgam*, the famous Viṣṇu shrine near Trichirapalli. *"சீரங்கத்தார்க்குந் திருவானைக் காவார்க்கும்" (தமிழ்நா. 203).*

த.வ. திருவரங்கம்

*[Skt. Šrī-raṅga > த. சீரங்கம்]*

**சீரணக்குறைவு** *šīraṇa-k-kuṟaivu*, பெ.(n.) விரைவில் செரியாமை; feeble digestion - Caligopepsia. (சா.அக.)

*[சீரணம் + குறைவு]*

*[Skt. jīrṇa > த. சீரணம்]*

**சீரணசக்தி** *šīraṇa-šakti*, பெ.(n.) செரிக்கும் திறன்; digestive power of faculty. (சா.அக.).

*[Skt. jīrṇa + sakti > த. சீரணசக்தி]*

**சீரணசுரம்** *šīraṇa-šuram*, பெ. (n.) செரியாமையாலேற்படும் காய்ச்சல்; fever caused by indigestion.

*[சீரணம்+சுரம்]*

*[Skt. jīrṇa > த. சீரணம்]*

**சீரணபாதை** *šīraṇa-pādai*, பெ. (n.) வாயினின்று துவங்கி எரு வாயில் வரை மெல்லியதோலினாலாகிய குழல்; alimentry canal lined with mucous membrane extending from the mouth to the anus, through which food passes. (சா.அக.)

த.வ. செரிமப்பாதை

*[சீரணம் + பாதை]*

*[Skt. jīraṇa > த. சீரணம்]*

**சீரணத்துவம்** *šīraṇattuvam*, பெ.(n.) வீழ்ச்சி; decay. *"அவற்றின் சங்கோசமே சீரணத் துவம்" (வாசுதேவமனனம், பக். 67).*

*[Skt. jīraṇa + tva > த. சீரணத்துவம்]*

**சீரணப்பருவம்** *šīraṇa-p-paruvam*, பெ.(n.) 60 அகவைக்கு மேற்பட்டு 80 வரைக்குமுள்ள பருவம்; the stage between 60 years and 80 years. (சா.அக.)

த.வ. முதுமைப்பருவம்

*[Skt. jīrṇa > த. சீரணம்]*

**சீரணம்** *šīraṇam*, பெ.(n.) 1. உண்டது செரிக்கை; digestion. 2. பழுது (பிங்.); decay, ruin, spoiled condition.

த.வ. செரிப்பு, செரிமானம்

*[Skt. jīrṇa > த. சீரணம்]*

**சீரணரசவக்கினி** *šīraṇa-raša-v-akkiṉi*, பெ.(n.) உணவு செரித்தலுக்குக் காரணமான வயிற்றுத் தீ (சடராக்கினி); gastric fire. (சா.அக.)

**சீரணவிருத்தினி** *šīraṇa-viruttiṉi*, பெ.(n.) செரித்தலை (சீரணத்தை) அதிகரிக்கும் பொருள்கள்; stomachic. (சா.அக.)

த.வ. செரிமாப்பெருக்கி

*[சீரணம்+விருத்தினி]*

**சீரணி¹-த்தல்** *šīraṇi-*, 4 செ.கு.வி.(v.i.) 1. உண்டது செரித்தல்; to digest. 2. பழுதடைதல்; to decay, rot; to go to ruins,

as a building. *"மேன்மை சீரணித் தில்லந்தோறுங் கிழ்மையே செறிந்து" (பிரபோத. 6:45).*

த.வ. **செரித்தல்**

*[Skt. jirṇa > த. சீரணி]*

**சீரணோத்தாரணம்** *śira-nōttāraṇam,* பெ.(n.) பழுதுபட்ட கோயில் முதலியவற்றைச் செப்பமிடுகை; restoration, repair, as of a temple in ruins.

த.வ. **கோயில்திருப்பணி**

*[Skt.jirṇōddhāraṇa > த. சீரணோத்தாரணம்]*

**சீரதைலம்** *śiratailam,* பெ.(n.) எண்ணெய், பால் முதலியவற்றைக் கொண்டு செய்த எண்ணெய்; an ungunt prepared with milk, oil etc. (சா.அக.).

**சீரரோகம்** *śirarōgam,* பெ. (n.) குழந்தை பெற்ற பெண்களுக்குப் பால் கட்டிக்கொள்கை; disease due to accumilation of milk in the breast of delivered woman. (சா.அக.).

த.வ. **பால்கட்டு**

**சீரரோத்தமம்** *śira-rōttamam,* பெ.(n.) சீரற்றீஞ்சு; date tree or palm as opposed to wild date palm. (சா.அக.)

**சீராமநவமி** *śi-rāma-navami,* பெ.(n.) இராமர் பிறந்த நாளாகிய மேழ (சித்திரை) மாதத்து வளர்பிறை ஒன்பதாம் நாள் (I.M.P. Tp. 491); the ninth titi in the bright fort-night of caittiram, the birth day of Sri Rāmaṉ.

த.வ. **இராமர்தொண்மி**

*[Skt. srirāma + navami > த. சீராமநவமி]*

**சீராலசகரோகம்** *śirāla-śagarōgam,* பெ.(n.) குற்றம் அல்லது தீட்டுப்பட்ட (தோசப்) பாலைக் குடிக்கும் குழந்தைகட்குக் காணும் நோய், இதனால் செரியாமை உண்டாகி, கழிச்சல், காய்ச்சல் (சுரம்), உணவில் வெறுப்பு (அரோசகம்), வயிற்றிரைச்சல், ஏப்பம், கொட்டாவி முதலிய குணங்கள் ஏற்படும்; a disease of children caused by taking vitiated breast milk symptoms are indigestion. diarrhoea, fever, anerexia, erectations, yawning and gas in the abdomen. (சா.அக.)

த.வ. **திட்டுநோய்**

**சீரி-த்தல்** *śiri-,* 4 செ.கு.வி.(v.i.) பழகுதல் (யாழ்ப்.); to practice, accustom oneself to. *"உலக்கல் சீலிக்கப்பட்ட தோளினை யுடையான்" (பு.வெ.11, ஆண்பாற். 2, உரை).*

*[Skt. śila→śili > த. சீரி-த்தல்]*

**சீரிணபன்னம்** *śiriṇa-paṉṉam,* பெ.(n.) வேம்பு (மலை.); margosa.

*[Skt. viśirṇa-parṇa > த. சீரிணபன்னம்]*

**சீரிவிருட்சம்** *śiri-viruṭcam,* பெ.(n.) புளியமரம் (மலை.); tamarind.

**சீருடக்காரம்** *śiruḍa-k-kāram,* பெ.(n.) கருப்பூரம்; camphor. (சா.அக.)

**சீருத்திரம்** *śi-ruttiram,* பெ.(n.) மறையின் ஒரு மந்திரப்பகுதி (யாழ்.அக.); a section of the Vēdas.

*[Skt. śri-rudra > த. சீருத்திரம்]*

**சீல்** *śil,* பெ.(n.) முத்திரை; seal.

*[E. seal > த. சீல்]*

**சில்மோதிரம்** *śil-mōdiram,* பெ.(n.) முத்திரைக் கணையாழி; signet-ring, finger-ring with seal set in it.

*[சீல்+மோதிரம்]*

*[E. seal > த. சீல்]*



**சீலபாரமிதை** *šīla-pāramidai,* பெ.(n.) புத்தப்பதவிக்குரிய பத்துக் குணங்களுள் சீலம் முற்றுகை (மணிமே. 26: 45, அரும்.); complete attainment of šīlam or perfection of moral conduct, one of *tašapāramidi.*

*[Skt. šīla+pāramitai > த. சீலபாரமிதை]*

**பத்துக் குணங்கள் :** 1. தானம், 2. சீலம், 3. பொறுமை, 4. வீரியம், 5. ஊழ்கம் (தியானம்), 6. அறிவு நிறைவு (பிரஞ்ஞை), 7. சூழ்ச்சி, வழிவகை (உபாயம்), 8. அருள், பேரன்பு (தயை), 9. பலம், 10. அறிவு (ஞானம்).

**சீவ** *šīva,* இடை.(int.) 'நீடுவாழ்க' என்று வாழ்த்துதற் குறிப்பு; expression meaning 'may you live long'. *"சினைமறைந் தொருகுரல் சீவ வென்றதே" (சீவக. 323).*

*[Skt. jīva > த. சீவ]*

**சீவகணங்கள்** *šīva-kaṇaṅgaḷ,* பெ. (n.) தாதுக்களின் உயிர்த்துணைக் கருவிகள்; the vital or essential organs supporting the seven consitutent parts (seven *dhathus*) of the body.

*[சீவன் + கணங்கள்.]*

*[Skt. jīva > த. சீவன்.]*

**சீவகர்** *šīvagar,* பெ.(n.) புத்தத் துறவிகள் (திவா.); Buddhist monks.

*[Skt. jīvaka > த. சீவகர்]*

**சீவகளை** *šīva- kaḷai,* பெ.(n.) உயிர்ப்பு, உயிரின் செழிப்பு; vital power, illumined life. (சா.அக.)

*[சீவன்+களை]*

*[Skt. jīva > த. சீவன்]*

**சீவகாருண்ணியம்** *šīva-kāruṇṇiyam,* பெ.(n.) உயிர்களிடம் காட்டும் அன்பு, இரக்கம்; mercy towards living creatures.

*[Skt. jīva+kāruṇya > த. சீவகாருணியம் > சீவகாருண்ணியம்]*

**சீவகாலம்** *šīva-kālam,* பெ.(n.) வாழ்நாள் (உ.வ.); life time.

*[சீவ + காலம்]*

*[Skt. jīva > த. சீவ]*

**சீவகோடி** *šīva-kōḍi,* பெ.(n.) **சீவராசி** பார்க்க; see *šīva-rāši.*

*[சீவ + கோடி]*

*[Skt. jīva > த. சீவ]*

**சீவச்சவம்** *šīva-c-cavam,* பெ.(n.) **சீவப்பிரேதம்** பார்க்க; *šīva-p-pirēdam.*

*[Skt. jīva+šava > த. சீவச்சவம்]*

**சீவசக்தி** *šīva-šakti,* பெ.(n.) 1. உயிர்ச் (பிராண) சத்து; vitality - vital power life essence. 2. உயிருக்கு (பிராணிகளுக்கு) உதவியான உடம்பைப் வலுப்படுத்தும் பொருள்; vitamins essential for life. (சா.அக.)

*[Skt. jīva+šakti > த. சீவசக்தி]*

**சீவசம்போதனை** *šīva-šambōdaṉai,* பெ.(n.) தமிழ் மொழியிலுள்ள சமண நூல்; a Jaina work in Tamil.

*[Skt. jīva+sambōdhanā > த. சீவசம்போதனை]*

**சீவசாட்சி** *šīva-šāṭci,* பெ. (n.) உயிர்களனைத் திற்கும் சான்றான (சாட்சி) முழுமுதற் கடவுள்; the Supreme Being, as the witness of all being.

*[Skt. jīva+sākṣin > த. சீவசாட்சி]*

**சீவசாதனம்** *šīva-šādaṉam,* பெ.(n.) தவசம் (யாழ்.அக.); grain.

*[Skt. jīva+sādhana > த. சீவசாதனம்]*

**சீவசீவி** *šīvašīvi,* பெ.(n.) உயிருள்ளப் பொருளைப் பற்றி வாழும் உயிரி; parasite.

*[Skt. jīva+jīvin > த. சீவசீவி]*

**சீவசுத்தி** *šīva-šutti,* பெ.(n.) உண்மையறி வின்பமயமாகிய கடவுளை உயிர், அவ்வொளியே கண்ணாகக் கண்டறிந்து அதில் உயிர் தற்போதமடங்கித் தனக்கு நல்வினைப் பயனாகியக் கடவுள் தானாய் நிற்கை (கட்டளைக். 188); the state of realising the Brahman, in which the individual soul loses the sense of self and becomes identical with the Brahman. (செ. அக.)

*[Skt. jīva+šuddhi > த. சீவசுத்தி]*

**சீவசெந்து** *šīva-šendu,* பெ.(n.) உயிரி; living being.

*[Skt. jīva+jandu > த. சீவசெந்து]*

**சீவத்தறுவாய்** *šīva-t-taṟuvāy,* பெ.(n.) இறக்குங் காலம் (யாழ்.அக.); moment of death.

*[சீவம் + தறுவாய்]*

*[Skt. jīva > த. சீவ]*

**சீவத்துவம்** *šīvattuvam,* பெ.(n.) ஆதனின் ஆற்றல் (ஆன்மசக்தி) (உ.வ.); vitality.

*[Skt. jīva-tva > த. சீவத்துவம்]*

**சீவத்விபாகம்** *šīvat-vibāgam,* பெ.(n.) உயிரோடு இருக்கும் போதே தந்தை தன் மக்களுக்குப் பங்குப் பிரித்துக் கொடுக்கை; (W.G) partition of an ancestral estate among sons by the father during his life-time.

*[Skt. jīvad-vibhāga > த. சீவத்விபாகம்]*

**சீவதசை** *šīva-dašai,* பெ.(n.) வாழ்நாள் (சங்.அக.); life time.

*[Skt. jīva+dašā > த. சீவதசை]*

**சீவதம்** *šīvadam,* பெ.(n.) மழை முகில் (பிங்.); rain-cloud.

*[Skt. jīva-da > த. சீவதம்]*

**சீவதரிசனை** *šīva-darišaṉai,* பெ.(n.) பெயருருவமாகிய எளிய இவ்வுடலை விட்டு நீங்கிய உயிர் உண்மையறிவின்பமாகிய கடவுளைப் பற்றி நிற்கை (கட்டளைக். 188); the state of understanding the formless Brahman.

த.வ. உயிர்க்காட்சி

*[Skt. jīva+daršana > த. சீவதரிசனை]*

**சீவதருமம்** *šīva-darumam,* பெ.(n.) உயிர்களின் பொருட்டுச் செய்யும் அறச்செயல் (பசுபுண்ணியம்) (வின்.); meritorious deeds performed in reference to living beings.

த.வ. அருளறம்

*[Skt. jīva+dharma > த. சீவதருமம்]*

**சீவதாது** *šīva-tādu,* பெ.(n.) உயிரின் நாடித்துடிப்பு (சீவநாடி) (உ.வ.); life-pulse, pulse usually felt at the wrist.

*[Skt. jīva+dhātu > த. சீவதாது]*

**சீவதிசை** *šīva-dišai,* பெ. (n.) 1. உயிரோடிருக்குங்காலம்; duration of life. 2. வாணாள்; life time. (சா.அக.)

*[சீவ + திசை]*

*[Skt. jīva > த. சீவ]*

**சீவந்தம்** *šīvandam,* பெ.(n.) 1. மருந்து; medicine. 2. உயிர் (பிராணன்); life. (சா.அக.)

*[Skt. jīvantah > த. சீவந்தம்]*

**சீவந்தன்** *šīvandaṉ,* பெ.(n.) உயிரோடிருப்பவன் (சங்.அக.); living person.

*[Skt. jīvantah > த. சீவந்தன்]*

**சீவநாசவிடம்** *šīva-nāša-viḍam,* பெ.(n.) உயிர் அழிவை (சேதத்தை) விளைவிக்கும் நஞ்சு; deadly poison.

*[Skt. Jīva+nāša+viṣa> த. சீவநாசவிடம்]*

**சீவநாடி** *šīva-nāḍi,* பெ.(n.) **சீவதாது** பார்க்க; see *šīva-tādu.*

*[Skt. jīva+nāḍi > த. சீவநாடி]*

**சீவநாள்** *šīva-nāḷ,* பெ.(n.) **சீவதசை** (யாழ்.அக.) பார்க்க; see *šīva-tašai.*

*[சீவ + நாள்]* *[Skt. jīva > த. சீவ]*

**சீவப்பிராணி** *šīva-p-piräṇi,* பெ.(n.) உயிருள்ளவை; living beings.

*[Skt. jīva+prāṇin > த. சீவப்பிராணி]*

**சீவப்பிரியை** *šīva-p-piriyai,* பெ.(n.) கடுக்காய் (சங்.அக.); chebulic myrobalan.

*[Skt. jīva-priyā > த. சீவப்பிரியை]*

**சீவப்பிரேதம்** *šīva-p-pirēdam,* பெ.(n.) உயிர்ப் பிணம்; weak person, as a living corpse.

*[Skt. jīva+prēta > த. சீவப்பிரேதம்]*

**சீவபலி** *śiva-pali,* பெ.(n.) 1. தன்னுயிரைக் காவு (பலி)கொடுக்கை; sacrificing one's life. 2. உயிர்ப்பலி; animal sacrifice.

த.வ. உயிர்ஈகை

*[Skt. jiva+bali > த. சீவபலி]*

**சீவபாவம்** *śiva-pāvam,* பெ.(n.) உயிர்த்தன்மை; state of being a *jiva.* *"சீவபாவ முண்டென்குதல் விபரீதம்" (வேதா. சூ.129).*

*[Skt. jiva+bhāva > த. சீவபாவம்]*

**சீவபுண்ணியம்** *śiva-punniyam,* பெ.(n.) **சீவதருமம்** (யாழ்.அக.) பார்க்க; see *śiva-darumam.*

*[Skt. jiva+punya > த. சீவபுண்ணியம்]*

**சீவம்** *śivam,* பெ.(n.) 1. **சீவன்**[1] பார்க்க; see *śivan*[1]. 2. ஒன்பது பொருள்களுள் ஒன்றாகிய உயிர் (சீவக. 2814, உரை); life-principle in a body, one of *nava-patārttam.*

*[Skt. jiva > த. சீவம்]*

**சீவமந்திரம்** *śiva-mandiram,* பெ. (n.) உடல் (யாழ்.அக.); body, as the place where the soul resides.

*[சீவ + மந்திரம்]*

*[Skt. jiva > த. சீவ]*

**சீவர்** *śivar,* பெ. (n.) உயிருள்ளோார் (யாழ்.அக.); living beings.

*[Skt. jiva > த. சீவர்]*

**சீவரத்தினம்** *śiva-rattinam,* பெ.(n.) நல்லப் பாம்புக்கு உயிர்க் காப்பாய் அதன் தலையில் உள்ளதும் வேண்டியதைக் கொடுக்க வல்லது என்று கருதுவதுமான மாமணி; life gem, believed to be on the head of the cobra, essential to its life and capable of granting its possessor whatever is desired. *"ராமீசம் வாழ் சீவரத்தினமே" (அருட்பா, i, விண்ணப்பக் கலி. 200).*

*[Skt. jiva+ratna > த. சீவரத்தினம்]*

**சீவராசி** *śiva-rāśi,* பெ.(n.) உயிரினம்; living beings viewed as a whole.

*[Skt. jiva+rāśi > த. சீவராசி]*

**சீவரூபம்** *śiva-rūbam,* பெ.(n.) மாயை வடிவத்தைக் காணுதற்கு ஓரறிவு உண்டென அறிகை (கட்டளைக். 188); the state of discerning that there must be an intelligent power to understand the real nature of *Māyā.*

*[Skt. jiva+rūpa > த. சீவரூபம்]*

**சீவரேக்கு** *śiva-rēkku,* பெ.(n.) 1. சிற்பத் தீர்மான வேலை (வின்.); finishing stroke in statuary or jewelry, the last touches that give the appearance of life. 2. தங்கம் முதலியவற்றின் மெல்லிய தகடு; strip of gold foil used in setting gems.

*[Skt. jiva+U. rēk > த. சீவரேக்கு]*

**சீவரேகை** *śiva-rēgai,* பெ.(n.) உள்ளங்கையிலுள்ள வாணாள் (ஆயுள்) வரிகை; line of life, one of the lines on the palm showing the duration of life.

*[Skt. jiva+rekhā > த. சீவரேகை]*

**சீவலயம்** *śiva-layam,* பெ.(n.) இறப்பு (யாழ்.அக.); death.

*[Skt. jiva+laya > த. சீவலயம்]*

**சீவலி** *śivali,* பெ.(n.) **சீபலி** பார்க்க; see *śibali.*

*[Skt. śri-bali > த. சீவலி]*

**சீவவதை** *śiva-vadai,* பெ.(n.) 1. உயிர்களைக் கொல்லுகை; killing of animals. 2. கடுந்துன்பஞ் செய்கை; torture.

*[Skt. jiva+vadha > த. சீவதை]*

**சீவவனல்** *śiva-v-anal,* பெ.(n.) உயிருக்கு மூலமான வயிற்றுத்தீ, காமத்தீ, சினத்தீ; the three vital fires which sustain life.

*[Skt. jiva+anala > த. சீவவனல்]*

**சீவவிருட்சம்** *śiva-virutcam,* பெ.(n.) ஈடன் தோட்டத்திலுள்ள ஒரு மரம் (வின்.); the tree of life in the garden of Ēden.

*[Skt. jiva+vrksa > த. சீவவிருட்சம்]*

**சீவற்சம்** *śivarśam,* பெ.(n.) 1. திருமாலின் திருமார்பிலுள்ள மரு அல்லது மயிர்ச்சுழி; mark or curl of hair on the chest of Tirumāl. 2. விழாக்களில் மங்கலக்குறியாக எடுத்துச் செல்லும் திருமகள் உருவம்; image of Lakṣmi carried on special occasions, as a symbol of auspiciousness. *"கிளர்சுடர் சீவற்சம்" (திருவிளை. திருமணப். 67).*

*[Skt. śri-vatsa > த. சீவற்சம்]*

**சீவன்**[1] *śivan,* பெ.(n.) 1. உயிராதன் (பிங்.); individual soul. 2. உயிர்விலங்கு; living being, animal. 3. உயிர்; life, vitality. 4. ஆற்றல்; energy, spirit, strength. *அவனுக்கு அதைச் செய்ய சீவன் இல்லை.* 5. வியாழன் (பிங்.); jupiter. 6. காந்தம் (வின்.); magnet.

*[Skt. jiva > த. சீவன்]*

**சீவன்**[2] *śivan,* பெ.(n.) ஒளிமணி (வைடூரியம்) (யாழ்.அக.); lapiz lazuli.

*[Skt. jiva > த. சீவன்]*

**சீவன்முத்தர்** *śivan-muttar,* பெ. (n.) இம்மையிலேயே வீடுபேறடைந்த நால் வகையினர் 'பிரமவித்துக்கள், பிரமவரர், பிரமவரியர், பிரமவரிட்டர்' (கோயிற்பு, இரணியவன்ம. 68); perfected souls who have obtained final deliverance whilst yet in this life, of four classes, viz., *pirama-vittukkal, pirama-varar, pirama-variyar, pirama-variṣtar.*

*[Skt. jivanmukta > த. சீவன்முத்தர்]*

**சீவன்முத்தி** *śivan-mutti,* பெ.(n.) உயிர் இம்மையிலேயே வீடுபேறடைகை; final deliverance while still in this life. "திருவாலவாய் சீவன் முத்திதரும்" (திருவிளை. தலவி.7).

த.வ. இம்மைவீடுபேறு

*[Skt. jivan-mukti > த. சீவன்முத்தி]*

**சீவனகம்** *śivanagam,* பெ.(n.) சோறு (சங்.அக.); cooked rice.

*[Skt. jivanaka > த. சீவனகம்]*

**சீவனசேடம்** *śivana-śēdam,* பெ.(n.) பிழைப்புக்குரியது; maintenance. *பல பணிநிமந்தக்காரருக்குஞ் சீவனசேஷமாக .......... கொடுத்து (தெ.இ.க.தொகு.3 : 47).*

*[Skt. jivana+śēṣa > த. சீவனசேடம்]*

**சீவனந்தேடு-தல்** *śivanan-tēdu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. பிழைக்கும் வழிதேடுதல்; to seek means of living. 2. இரை தேடுதல் (யாழ்ப்.); to seek food, prey, as animals.

*[சீவனம் + தேடு-தல்]*

*[Skt. jivana > த. சீவனம்]*

**சீவனம்** *śivanam,* பெ.(n.) 1. பிழைப்பு நடத்துகை; living, sustaining life. 2. பிழைக்கும் வழி; livelihood, means of sustenance. *"சிவஞானந்தான் சீவனமாக வாழ்வோய்" (சீவரக. சிவரகசியவரலா.3).* 3. நீர் (பிங்.); water. 4. கஞ்சி; rice-water. *காலையிற் சீவனங் குடியாமல் வந்துவிட்டேன்.* (நாஞ்)

*[Skt. jivana > த. சீவனம்]*

**சீவனமுனை** *śivana-munai,* பெ.(n.) பிழைக்கும் வழி (வின்.); means of livelihood.

*[சீவனம் + முனை]*

*[Skt. jivana > த. சீவனம்]*

**சீவனாதாரம்** *śivanādāram,* பெ. (n.) 1. **சீவனாம்சம்** பார்க்க; see *śivanāmśam.* 2. **சீவனோபாயம்** பார்க்க see *śivanōbāyam.* 3. **சீவாதாரம்** பார்க்க see *śivādāram.*

*[Skt. jivana+ā-dhāra > த. சீவனாதாரம்]*

**சீவனாம்சம்** *śivanāmśam,* பெ. (n.) கைம்பெண், மணவிலக்கு பெற்றவள் முதலியோருடைய பிழைப்புக்கென்று கொடுக்கும் பொருள்; maintenance, subsistence allowance, as given to a widow.

த.வ. பிழைப்புத்தொகை

*[Skt. jivana+amśa > த. சீவனாம்சம்]*

**சீவனார்த்தம்** *śīvaṉārttam,* பெ.(n.) உயிர் வாழ்க்கைக்கு ஆதரவு; support of life.

*[Skt. jīvana+ārta> த. சீவனார்த்தம்]*

**சீவனாவுபதம்** *śīvaṉā-v-upadam,* பெ.(n.) பிணி தீர்த்து உயிர்தரு மருந்து; restorative. (சா.அக.)

**சீவனாளி** *śīvaṉāḷi,* பெ.(n.) உயிரினம் (யாழ்.அக.); living being.

*[சீவன் + ஆளி] [Skt. jīva > த. சீவன்]*

*ஆள் > ஆளி*

**சீவனி[1]–த்தல்** *śīvaṉi-,* 4 செ.கு.வி.(v.i.) பிழைப்பு நடத்துதல் (யாழ்.அக.); to maintain oneself, to make a living.

த.வ. பிழைத்தல்

*[Skt. jīvana > த. சீவனம் → சீவனி-]*

**சீவனி[2]** *śīvaṉi* பெ.(n.) 1. உயிர் தரு மருந்து (பிங்.); life-giving elixir, medicament that restores life. 2. செவ்வழியாழ்த் திறத்தொன்று (பிங்.); a secondary melody type of the sevvaḷi class. 3. மந்தாரச் சிலை (வின்.); a black stone. 4. பாலை மரவகை (பிங்.); wedge-leaved ape-flower. 5. வெட்பாலை மரம் (தைலவ. தைல. 13); ivory-tree. 6. ஆடு தின்னாபாலை (மலை.); worm killer. 7. செவ்வள்ளிக் கிழங்கு (மலை.); purple yam.

*[Skt. jīvaṉi > த. சீவனி]*

**சீவனீயம்** *śīvaṉīyam,* பெ.(n.) 1. நீர் (பிங்.); water. 2. மூத்திர தாரை வழியாக செலுத்தப்படும் ஒரு நெய்மம் (கிருதம்); a preparation of ghee which is used to be injected through urethra.

*[Skt. jīvanīya > த. சீவனீயம்]*

**சீவனோபாயம்** *śīvaṉōbāyam,* பெ.(n.) பிழைப்புக்குரிய தொழில்; profession, occupation as a means of living.

த.வ. பிழைப்புத்தொழில்

*[Skt. jīvana+upāya > த. சீவனோபாயம்]*

**சீவனௌடதம்** *śīvaṉauḍadam,* பெ.(n.) இறுதி காலத்திலும் உயிரை நிறுத்தும் மருந்து; medicine tending to prevant life leaving the body. (சா.அக.)

*[Skt. jīva+auṣadha> த. சீவனௌடதம்]*

**சீவா** *śīvā,* பெ.(n.) **சீவனி[2]. 4** (மலை.) பார்க்க; see *śīvaṉi[2], 4.*

**சீவாக்கினி** *śīvākkiṉi,* பெ. (n.) உயிர் பிழைத்தற்கேதுவான வெப்பம்; heat required for sustenance of life, animal heat.

உயிர்த்தீ – மூன்று வகைகளிலொன்று.

**உயிர்த்தீ** : 1. வயிற்றுத்தீ, 2. விந்துதீ, 3. சினத்தீ.

**சீவாத்திகாயம்** *śīvāttikāyam,* பெ.(n.) அருக (சமண) மதத் தத்துவங்கள் ஐந்தனுள் ஒன்றான ஆதன் (திருநூற். 23, உரை); jīva or ātman, the conscious sentient principle one of *pañjāsti-kāyam.*

*[Skt. jīva+astikāya > த. சீவாத்திகாயம்]*

**சீவாத்துமா** *śīvāttumā,* பெ.(n.) ஆதன் சிற்றுயிர்; individual soul, opp. to *paramāttumā.*

*[Skt. jīva+ātman > த. சீவாத்துமா]*

**சீவாதாரம்** *śīvādāram,* பெ.(n.) 1. வாழ்வுக்கு அடிப்படையானது (உ.வ.); life's chief support the staff of life. 2. உடல் (சது.); body. 3. உலகம் (யாழ்.அக.); the world.

*[Skt. jīva+ādhāra > த. சீவாதாரம்]*

**சீவாந்தம்** *śīvāndam,* பெ. (n.) இறப்பு (வின்.); death.

*[Skt. jīvānta > த. சீவாந்தம்]*

**சீவான்மா** *śīvāṉmā,* பெ. (n.) **சீவாத்துமா** பார்க்க; see *śīvāttumā. "ஒங்கு சீவான்மாவினை" (கூர்மபு. இந்திர. 342).*

*[Skt. jīvātman > த. சீவான்மா]*

**சீவி[1]–த்தல்** *śīvi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. உயிர் வாழ்தல்; to live. 2. பிழைப்பு நடத்துதல்; to

make a living. 3. தொழிற்படுதல் (வின்.); to be active, as the powers of the body or mind in wakeful hours.

[Skt. jīv > த. சீவி > சீவி²–த்தல்]

**சீவி²–த்தல்** *śīvi,* 4 செ.கு.வி.(v.i.) இறத்தல் (யாழ்.அக.); to die, used euphemistically.

[Skt. jīva > த. சீவி > சீவி–த்தல்]

**சீவி³** *śīvi,* பெ.(n.) உயிருடைப் பொருள் (யாழ்.அக.); living being.

[Skt. jīvin > த. சீவி]

**சீவிதக்காரன்** *śīvida-k-kāraṉ,* பெ.(n.) பணி செய்வதற்காக நல்கை (மானியம்) பெற்றவன்; grantee of a service inam. *"சேவகஞ் செய் சீவிதக் காரருக்கும்" (சரவண. பணவிடு. 86).*

[Skt. jīvita > த. சீவிதக்காரன்]

**சீவிதஞ்ஞை** *śīvidaññai,* பெ.(n.) நெஞ்சாங் குலை (யாழ்.அக.); heart.

[Skt. jīvita+jña > த. சீவிதஞ்ஞை]

**சீவிதம்** *śīvidam,* பெ.(n.) 1. உயிர்வாழ்க்கை; life. existence. 2. உயிருக்குப் பற்றுக் கோடு (சீவனாதாரம்); subsistence, allowance, maintenance. *'கோடி பொன்னைச் சீவிதமாக வுடையாரா யிருப்பார்' (சீவக. 2156. உரை).* 3. உயிர் வாழ்தற்குப் பற்றுக்கோடாக விடப்பட்ட இறையிலி நிலம் (w.G.); land granted tax-free for maintenance.

[Skt. jīvita > த. சீவிதம்]

**சீவியம்** *śīviyam,* பெ.(n.) **சீவிதம்** பார்க்க; see *śīvidam.*

**சீவினி** *śīviṉi,* பெ.(n.) 1. உயிர்ப்பிக்கும் மருந்து (சஞ்சீவி); an elixir to restore life. 2. யாழினோசை வகை; one of the notes of the lute.

[Skt. jīvanī > த. சீவினி]

**சீவோபாதி** *śīvōpādi,* பெ.(n.) மனித வாழ்வில் அடங்கிய பிள்ளைப்பருவம் முதலிய நான்கு பருவம் (நாநார்த்த. 904); the four stages of human life. viz. *pāliyam, kaumāram, yauvaṉam, vārttakam.*

[Skt. jīva+upādhi > த. சீவோபாதி]

**சீவோற்பத்தி** *śīvōṟpatti,* பெ.(n.) 1. கருத்தரிக்கை; conception. 2. கருக்கொள்ளுங் காலம்; period of conception. (சா.அக.)

த.வ. கருவாக்கம்

[Skt. jīva+ut-pātti > த. சீவோற்பத்தி]

**சீனக்கண்ணாடி** *śīṉa-k-kaṇṇāḍi,* பெ.(n.) 1. சீன நாட்டுக் கண்ணாடி; a kind of looking-glass, as from China. 2. மூக்குக் கண்ணாடி (யாழ்.அக.); spectacle.

[சீனம் + கண்ணாடி]

[Skt. cīna > த. சீனம்]

**சீனக்கர்ப்பூரம்** *śīṉa-k-karppūram,* பெ.(n.) **சீனச்சூடன்** (இ.வ.) பார்க்க; see *śīṉa-c-cūḍaṉ.*

[சீனம் + கர்ப்பூரம்]

[Skt. cīna > த. சீனம்]

**சீனக்காக்கை** *śīṉa-k-kākkai,* பெ.(n.) காக்கை வகை (யாழ்.அக.); a kind of crow.

[சீனம் + காக்கை]

[Skt. cīna > த. சீனம்]

கா + கா – காகா > காக்கை. காகாவென கத்துவதால் காக்கை எனப் பெயர் பெற்றது. காகாவெனும் அஃறிணை உயிர் ஒலிக் குறிப்பினின்று தோன்றிய சொல் (மு.தா.2).

**சீனக்காரம்** *śīṉa-k-kāram,* பெ.(n.) படிக்காரம் (பதார்த்த. 1105); alum.

[சீனம் + காரம்]

[Skt. cīna > த. சீனம்]

கரி > கார் > காரம். கரி என்னும் வினையடியால் பிறந்த தொழிற்பெயர். கரி + அம் – காரம்¹ பார்க்க.

**சீனக்கிழங்கு** *śīṉa-k-kaḻaṅgu,* பெ.(n.) செடி வகை (பைஷஜ. 110); Himalayan rhubrab, *Rheum emodi.*

[சீனம் + கிழங்கு]

[Skt. cina > த. சீனம்]

கீழ் > கிழக்கு > கிழங்கு

**சீனக்கிளி** *śiṉa-k-kiḷi,* பெ.(n.) பெருங்கிளி (வின்.); cockaoo, *Cacatuinae.*

[சீனம் + கிளி]

[Skt. cina > த. சீனம்]

கிள் > கிள > கிளி = பேசும் ஆற்றலுள்ளது



**சீனக்குடை** *śiṉa-k-kuḍai,* பெ.(n.) தாள் (காகிதக்) குடை (யாழ்.அக.); paper-umbrella.

[சீனம் + குடை] [Skt. cina > த. சீனம்]

குள் > குட > குடை

**சீனக்கொழுஞ்சி** *śiṉa-k-koḻuñji,* பெ.(n.) கத்தூரியெலுமிச்சை (L); lime-berry.

[சீனம் + கொழுஞ்சி] [Skt. cina > த. சீனம்]

கொழு > கொழுஞ்சி = ஒருவகை எலுமிச்சை

**சீனகர்** *śiṉagar,* பெ.(n.) சீனநாட்டார்; the Chinese.

[Skt. cina > த. சீனம் > சீனகர்]

**சீனச்சரப்பளி** *śiṉa-c-cara-p-paḷi,* பெ.(n.) அணிவகை (தெய்வச். விறலிவிடு. 599); an ornament.

[சீனம் + சரப்பள்ளி] [Skt. cina > த. சீனம்]

**சீனச்சட்டி** *śiṉa-c-caṭṭi,* பெ.(n.) ஒருவகை உருக்கு இரும்பு (வின்.); a kind of metal.

[சீனம் + சட்டி] [Skt. cina > த. சீனம்]

**சீனச்சூடன்** *śiṉa-c-cūḍaṉ,* பெ.(n.) கருப்பூர வகை; a kind of camphor. 'சீனச்சூட னென்று பெயர்........... கூறப்பட்ட' (சிலப். 14. 109. உரை).

[சீனம் + சூடன்] [Skt. cina > த. சீனம்]

சூடு > சூடம் > சூடன்

**சீனத்துப்பட்டு** *śiṉattu-p-paṭṭu,* பெ.(n.) சீன நாட்டுப்பட்டு; China silk.

[சீனம் + அத்து + பட்டு.] அத்து = சாரியை.

**சீனத்துமுத்து** *śiṉattu-muttu,* பெ.(n.) போலியான முத்துவகை (வின்.); artificial pearls from China.

[சீனம் + அத்து + முத்து.] அத்து – சாரியை

**சீனத்துவித்தை** *śiṉattu-vittai,* பெ. (n.) அருமைப்பாடான வேலை (இ.வ.); rare piece of work.

[சீனம் + அத்து + வித்தை. அத்து = சாரியை]

**சீனநெல்** *śiṉa-nel,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy.

[சீனம் + நெல்]

**சீனப்பட்டை** *śiṉa-p-paṭṭai,* பெ.(n.) பறங்கிப் பட்டை (பாலவா. 689); China-root.

[சீனம் + பட்டை]

**சீனப்பரணி** *śiṉa-p-paraṇi,* பெ.(n.) பெரிய பாண்ட வகை (உ.வ.); a kind of big jar.

[சீனம் + பரணி]

**சீனப்பலா** *śiṉa-p-palā,* பெ.(n.) **சீனப்பட்டை** (வின்.) பார்க்க; see *śiṉa-p-paṭṭai.*

[சீனம் + பலா]

**சீனப்பா** *śiṉappā,* பெ.(n.) 1. பறங்கிப்பட்டை; China - rooti. 2. பெருங்கிழங்கு (பாலவா. 692); Indian birthwort.

[சீனம் + பா]

**சீனப்பாகு** *śiṉa-p-pāgu,* பெ.(n.) மருந்து வகை (யாழ்.அக.); a medicine.

[சீனம் + பாகு]

**சீனம்** *śiṉam,* பெ.(n.) 1. ஒரு நாடு (நன். 273, உரை); a country. 2. சீனமொழி (திவா.); Chinese language. 3. சீனத்துப் பொருள்;

Chinese manufacture, as China silk. *"இப்பட்டுச் சீனம்" (நன். 290, விருத்.).* 4. படிக்காரம் (தைலவ. தைல. 91); alumen.

*[Skt. cina > த. சீனம்]*

**சீனமல்லிகை** *šīṉamalligai,* பெ.(n.) மல்லிகை வகை (வின்.); a kind of jasmine.

*[சீனம் + மல்லிகை]*

**சீனமிளகு** *šīṉa-miḷagu,* பெ.(n.) வால்மிளகு (மலை.); cubeb pepper.

**ம. சீனமுளகு**

*[சீனம் + மிளகு]*

**சீனமுத்து** *šīṉa-muttu,* பெ.(n.) **சீனத்துமுத்து** (யாழ்.அக.) பார்க்க; see *šīṉattu-muttu.*

*[சீனம் + முத்து]*

**சீனர்** *šīṉar,* பெ.(n.) **சீனகர்** பார்க்க; see *šīṉagar. "யவனர் சீனர் சோனகர்" (கம்பரா. மிதிலை. 99).*

*[சீனம் > சீனர்]*

**சீனவங்கம்** *šīṉa-vaṅgam,* பெ.(n.) ஈயம் (மலை.); lead.

*[சீனம் + வங்கம்]*

**சீனவெடி** *šīṉa-veḍi,* பெ.(n.) பட்டாசு (உ.வ.); crackers.

**த.வ. சீனிவெடி.** [சீனம் + வெடி]

**சீனவெரிவண்டு** *šīṉa-v-eri-vaṇḍu,* பெ.(n.) வண்டுவகை; a kind of beetle, considered poisonous.

**சீனன்** *šīṉaṉ,* பெ.(n.) சீனநாட்டான் (யாழ்.அக.); Chinaman.

*[சீனம் > சீனன்]*

**சீனா** *šīṉā,* பெ.(n.) **சீனம் 1** பார்க்க; see *šīṉam*-1.

*[சீனம் > சீனா]*

**சீனாக்கற்கண்டு** *šīṉā-k-kaṟkaṇḍu,* பெ.(n.) கற்கண்டு வகை; a kind of sugar - candy.

*[சீனா + கற்கண்டு]*

**சீனாக்காகிதம்** *šīṉā-k-kāgidam,* பெ.(n.) சீனாவிலிருந்து இறக்குமதியான மெல்லிய தாள் (காகித) வகை (வின்.); a kind of thin paper, as imported from China.

*[சீனா + காகிதம்]*

**சீனாக்கோழி** *šīṉā-k-kōḻi,* பெ.(n.) கோழிவகை (உ.வ.); a species of fowl.

*[சீனா + கோழி]*

**சீனாச்சுருள்** *šīṉā-c-curuḷ,* பெ.(n.) சீனத்துப்பட்டு; silk cloth manufactured in China.

*[சீனா + சுருள்]*

**சீனாப்பிரேதம்** *šīṉā-p-pirēdam,* பெ.(n.) மிக மெலிந்தவன் (இ.வ.); pale, emaciated person.

**சீனாப்பெட்டி** *šīṉā-p-peṭṭi,* பெ.(n.) பெட்டி வடிவில் செய்யப்பட்ட பட்டாசு (வாணம்) (உ.வ.); fireworks shaped like a box.

*[சீனம் > சீனா + பெட்டி]*

**சீனி** *šīṉi,* பெ.(n.) 1. சீனிச் சருக்கரை; white sugar. 2. சீனத்துப் பொருள்; Chinese productions, used in compounds, as *šīṉi-k-kāram.*

*[Skt. cina > U. chini > த. சீனி]*

**சீனிக்கண்ணாடி** *šīṉi-k-kaṇṇāḍi,* பெ.(n.) தொலை நோக்காடி; telescope.

*[சீனி + கண்ணாடி]*

**சீனிக்கல்** *šīṉi-k-kal,* பெ.(n.) வெள்ளைக்கல்; white stone.

*[சீனி + கல்]*

**சீனிக்கற்கண்டு** *šīṉi-k-kaṟkaṇḍu,* பெ.(n.) **சீனாக்கற்கண்டு** (உ.வ.) பார்க்க; see *šīṉā-k-kaṟkaṇḍu.*

*[சீனி + கற்கண்டு]*

**சீனிக்காரம்** *šīṉi-k-kāram,* பெ.(n.) **சீனக்காரம்** (வின்.) பார்க்க; see *šīṉa-k-kāram.*

*[சீனி + காரம்]*

**சீனிக்கிழங்கு** *šīṉi-k-kiḻaṅgu,* பெ.(n.) சருக்கரை வள்ளிக்கிழங்கு (உ.வ.); sweet-

potato, Ipomaea batatas.

த.வ. சருக்கரை வள்ளிக்கிழங்கு

*[சீனி + கிழங்கு]*

**சீனிச்சர்க்கரை** *šīṉi-c-carkkarai,* பெ.(n.) வெண்மையான சருக்கரை வகை (பதார்த்த. 187); China sugar, white sugar.

*[சீனி + சர்க்கரை]*

**சீனிப்பலா** *šīṉi-p-palā,* பெ.(n.) மரவகை; bread-fruit tree, Arfocarpus incisa.

*[சீனி + பலா]*

**சீனிமிட்டாய்** *šīṉi-miṭṭāy,* பெ.(n.) மிட்டாய் வகை (வின்.); a kind of sweetmeat.

*[சீனி + மிட்டாய்]*

*[**Skt.** cīna >**U.** chīni> த. சீனி > **Ar.** mīṭāyi > த. மிட்டாய்]*

**சீனியதிரசம்** *šīṉi-y-adirašam,* பெ.(n.) ஒருவகை இனிப்புப் பணியாரம் (யாழ்.அக.); a kind of sweetmeat.

*[**Skt.** cin> **U.** chīni+ **Skt.** ati+rasa > த. சீனியதிரசம்]*

**சு** *šu,* இடை.(part.) நன்மை, மங்கலம் முதலிய பொருள் பெற்று வடமொழிப் பெயர்கட்கு முன்வரும் சொல்; prefix to Sanskrit words signifying goodness, auspiciousness as šuguṇam, opp. to *tur.*

*[**Skt.** su > த. சு]*

**சுக்கம்** *šukkam,* பெ.(n.) **சுங்கம்**[1] பார்க்க; see *šuṅgam.*

*[**Skt.** šulka > த. சுக்கம்]*

**சுக்காரொட்டி** *šukkā-roṭṭi,* பெ.(n.) எண்ணெய் தடவாமல் நெருப்பில் வாட்டி எடுக்கப்படும் அடை போன்ற உணவு (சப்பாத்தி போன்ற ரொட்டி); a kind of aḍai, (šappāti) roasted with out using oil.

த.வ. வறட்டுஅடை

*[**U.** šukkā+rōṭi > த. சுக்கா ரொட்டி]*

**சுக்காவறுவல்** *šukkā-vaṟuval,* பெ.(n.) உசிலை (மசாலா) சேர்த்து, வறள வறுத்த இறைச்சித் துண்டு; pieces of fried meat slightly spiced.

த.வ. வறுத்தகறி

*[சுக்கா + வறுவல்]*

*[**U** šukka > த. சுக்கா]*

**சுக்கான்** *šukkāṉ,* பெ.(n.) கப்பலைத் திருப்புங் கருவி; rudder, helm.

*[**U.** sukkān > த. சுக்கான்]*

**சுக்கான்கிரி** *šukkāṉ-kiri,* பெ.(n.) கப்பலோட்டி (வின்.); helmsman, one who steers a vessel.

*[**U.** sukkān+gīr > த. சுக்கான்கிரி]*

**சுக்கான்கூடு** *šukkāṉ-kūḍu,* பெ. (n.) சுக்கானிருக்கும் கட்டை (கப்); rudder truck.

*[சுக்கான் + கூடு]* *[**U.** sukkān > த. சுக்கான்]*

**சுக்கான்சறுக்கி** *šukkāṉ-šaṟukki,* பெ.(n.) சுக்கானைத் திருப்புஞ் சக்கரம்; rudder wheel.

*[சுக்கான் + சறுக்கி]*

*[**U.** sukkān > த. சுக்கான்]*

**சுக்கான்திருப்பு-தல்** *šukkāṉ-tiruppu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. **சுக்கான்பிடி-த்தல்** பார்க்க; see *šukkāṉ-piḍi-.* 2. பிறரைத் தன்வயப்படுத்துதல்; to bring round another to one's own opinion.

*[சுக்கான் + திருப்பு-தல்.]*

*[**U.** sukkān > த. சுக்கான்.]*

**சுக்கான்பிடி-த்தல்** *šukkāṉ-piḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) கப்பலை நடத்துதல் (வின்.); to steer a vessel.

*[சுக்கான் + பிடி-த்தல்]*

*[**U.** sukkān > த. சுக்கான்]*

**சுக்கானி** *šukkāṉi,* பெ.(n.) கப்பலோட்டி (வின்.); helmsman.

*[**U.** sukkāni > த. சுக்கானி]*

**சுக்கியானம்** *šu-k-kiyāṉam,* பெ.(n.) **சுஞ்ஞானம்** (வின்.) பார்க்க; see *šuññāṉam.*

*[**Skt.** su+jñāna > த. சுஞ்ஞானம் > சுக்கியானம்]*

**சுக்கிரக்கண்ணன்** *šukkira-k-kaṇṇaṉ,* பெ. (n.) ஒரு கண் குருடானவன் (இ.வ.); a man blind in one eye.

*[சுக்கிரன் + கண்ணன்]*

*[Skt. šukra > த. சுக்கிரன்]*

**சுக்கிரசீடர்** *šukkira-šīḍar,* பெ. (n.) சுக்கிராசாரியர் மாணாக்கர்களான அசுரர்கள் (வின்.); Asuras, as disciples of Sukra.

*[Skt. šukra+šṣya > த. சுக்கிரசீடர்]*

**சுக்கிரகதசுரம்** *šukkirakada-šuram,* பெ.(n.) விந்து மிகுதியாக சுரப்பதால் வரும் காய்ச்சல்; fever due to excess secretion of semen. (சா.அக.)

**சுக்கிரகதவாதம்** *šukkirakada-vādam,* பெ.(n.) விந்து (சுக்கிலம்) அதிகமாக சுரப்பதால் உண்டாகும் ஊதைநோய் (வாதம்); rheumatic disease caused by excess secretion of semen. (சா.அக.)

**சுக்கிரத்துரிஞ்சில்** *šukkiratturiñjil,* பெ.(n.) ஆவின் பால்; cow's milk. (சா.அக.)

**சுக்கிரதசை** *šukkira-dašai,* பெ.(n.) சுக்கிரனுக்குரிய இருபதாண்டு ஆட்சிக்காலம்; the period of 20 years in which Venus exercises its influence. 2. நல்ல காலம்; period of great prosperity. *அவனுக்கு இப்போது சுக்கிரதசை (உ.வ.)*

**த.வ. வெள்ளிநோட்டம்**

*[Skt. šukra+dašā > த. சுக்கிரதசை]*

**சுக்கிரதோடம்** *šukkira-tōḍam,* பெ. (n.) விந்துவின் கெடுதி (சுக்கில குற்றம்); vitiation of semen. (சா.அக.)

**த.வ. வீரியக்கேடு**

*[Skt. šukra+dōṣā > த. சுக்கிரதோடம்]*

**சுக்கிரநிலம்** *šukkira-nilam,* பெ.(n.) சுண்ணாம்புக்கல் நிறைந்த நிலம்; soil mixed with limestones or nodules of kunkur.

**சுக்கிரப்படுவன்** *šukkira-p-paḍuvaṉ,* பெ. (n.) கண்ணோய் வகை; inflammation of the membranes of the eye, Phlectinular opthalmia.

*[சுக்கிரம் + படுவன்]*

*[Skt. šukra > த. சுக்கிரன்]*

**சுக்கிரம்** *šukkiram,* பெ. (n.) 1. ஆடவை (ஆனி) மாதம் (வின்.); the month Āṉi, corresponding to June-July. 2. கண்ணோய் வகை; a disease of the eye.

*[Skt. šukra > த. சுக்கிரம்]*

**சுக்கிரமூடம்** *šukkira-mūḍam,* பெ. (n.) வெள்ளி பயன்தராது மறைந்திருக்குங் காலம்; the time of the year when Venus is invisible and hence considered to have lost his influence.

*[Skt. šukra > த. சுக்கிரன் + மூடம்]*

**சுக்கிரவாரம்** *šukkira-vāram,* பெ. (n.) வெள்ளிக்கிழமை; friday.

*[Skt. šukra +vara> த. சுக்கிரவாரம்]*

**சுக்கிரன்** *šukkiraṉ,* பெ.(n.) 1. வெள்ளி; Venus. 2. **சுக்கிராசாரி** பார்க்க; see *šukkirāšāri.* *"சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய" (திவ். பெரியாழ். 1. 8 : 7).* 3. நெருப்பு (சங்.அக.); fire. 4. கண்ணோய் வகை (வின்.); a disease of the eye, white speck in the eye.

*[Skt. šukra > த. சுக்கிரன்]*

**சுக்கிரன்பாடு** *šukkiraṉ-pāḍu,* பெ.(n.) இரவில் வெள்ளிமீன் கண்ணுக்குப் புலப்படாத காலம்; the time of the year when Šukra is invisible at nights.

**த.வ. வெள்ளிமறை**

*[Skt. šukra > த. சுக்கிரன் + பாடு]*

**சுக்கிரன்போடு-தல்** *šukkiraṉ-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) **சூரியன்போடு-தல்** பார்க்க; see *šūriyaṉ-pōḍu-.*

*[Skt. šukra > த. சுக்கிரன் + போடு-தல்]*

**சுக்கிரனாளி** *šukkiranāli,* பெ. (n.) முத்து (யாழ்.அக.); pearl.

*[சுக்கிரன் + ஆளி]* **[Skt.** *šukra > த. சுக்கிரன்]*

*ஆள் > ஆளி*

**சுக்கிராக்கினை** *šukkirā-k-kinai,* பெ. (n.) **சுக்கிரீவாக்கினை** (வின்.) பார்க்க; see *šukkirivākkinai.*

**[Skt.** *Su-griva+ājñā > த. சுக்கிராக்கினை]*

**சுக்கிராசாரி** *šukkirāšāri,* பெ.(n.) அசுரகுரு; Sukra, as priest of Asuras 2. ஒற்றைக்கண்ணன்; one-eyed person.

*[சுக்கிரன் + ஆசாரி]*

**[Skt.** *šukra > த. சுக்கிரன்] ஆசிரியன் > ஆசாரி*

**சுக்கிரீவன்** *šukkirivan,* பெ.(n.) வானரர் தலைவன்; the monkey-king who assisted Rāmaṉ against Rāvaṇaṉ. *"நாயகன் சுக்கிரீ வனென்றுளன்" (கம்பரா. உருக்காட் 29).*

**[Skt.** *Sugriva > த. சுக்கிரீவன்]*

**சுக்கிரீவாக்கினை** *šukkirivākkinai,* பெ.(n.) சுக்கிரீவனது ஆணை, (மிகக் கடுமையான கட்டளை); lit., Sugriva's orders, (very strict order with extreme penalties.)

**[Skt.** *sugriva+ājña > த. சுக்கிரீவாக்கினை]*

**சுக்கிரோதயம்** *šukkirōdayam,* பெ.(n.) வெள்ளி முளைக்குங் காலமாகிய விடியற் காலை; the rising of Venus in early morning.

**த.வ. எழுவெள்ளி**

*[சுக்கிரன் + உதயம்]*

**[Skt.** *šukra > த. சுக்கிரன் + உதயம்]*

**சுக்கில** *šukkila,* பெ.(n.) ஆண்டு அறுபதனுள் மூன்றாவது; the third year of the jupiter cycle.

**[Skt.** *šukla > த. சுக்கில]*

**சுக்கிலஆவிருதவாதம்** *šukkila-āviruda-vādam,* பெ.(n.) விந்து மிகுதியாக ஒழுகி, ஆண் தன்மை நீங்கும் ஒரு வகை நோய்; a seminal disease. An account of its loss vitality erection of the penis is lost. (சா.அக.)

**சுக்கிலகாசம்** *šukkila-kāšam,* பெ.(n.) கண்ணின் கருவிழியைப் பற்றிய நோய்; a disease of the lens in the eye-opacity of crystaline lens, Cataract. (சா.அக.)

**[Skt.** *sukla+hāca > த. சுக்கிலகாசம்]*

**சுக்கிலசுரோணிதம்** *šukkila-šurōṇidam,* பெ. (n.) 1. விந்து நீரோடு (சுக்கிலத்தோடு) கலந்து உயிர்தோன்றுவதற்குக் கரணியமான மகளிர் அரத்தம்; blood believed to be in the womb causing pregnancy when mixed with semen. 2. விந்து நாதம்; spermatozoa and ovum.

**த.வ. விந்துநோனம், வீரியநோனம்**

**[Skt.** *sukla-šōṇita > த. சுக்கிலசுரோணிதம்]*

**சுக்கிலத்தம்பம்** *šukkila-t-tambam,* பெ. (n.) அறுபத்து நாலு கலைகளுள் வீரியத்தைக் கட்டும் கலை (வின்.); art of restraining the semen, one of *aṟu-pattunālu-kalai.*

**த.வ. வீரியக்கட்டு**

**[Skt.** *šukla+* **Pkt.***tamba > த. சுக்கிலத்தம்பம்]*

**சுக்கிலத்தாது** *šukkila-t-tādu,* பெ.(n.) விந்து; semen - seventh constitutent of the body. (சா.அக.)

*[சுக்கிலம் + தாது]*

**சுக்கிலத்தியானம்** *šukkila-t-tiyāṉam,* பெ.(n.) முழு முதற் பேரறிவின் நினைவு; meditation on the Supreme Spirit, identifying oneself with it. *"சுக்கிலத் தியானமென்னுங் கணை யெறிந்துகைப்ப" (சீவக. 3081).*

**[Skt.** *šukla+dhyāna > த. சுக்கிலத்தியானம்]*

**சுக்கிலநட்டம்** *šukkila-naṭṭam,* பெ.(n.) விந்து இழப்பு; loss of semen, spermatorrhoea.

**த.வ. வீரிய இழப்பு**

*[சுக்கிலம் + நட்டம்]*

**சுக்கிலப்பிரமியம்** *šukkila-p-piramiyam,* பெ.(n.) ஒழுக்கக் கேட்டினால் ஏற்படுகிற நோய் (சங்.அக.); a species of venereal disease.

*[Skt. šukla + pramēha > த. சுக்கிலப்பிரமேகம் > சுக்கிலப்பிரமியம்]*

**சுக்கிலப்பெருக்கம்** *šukkila-p-perukkam,* பெ.(n.) விந்து (சுக்கிலம்) மிகுதியாக சுரக்கை; excessive secretion of semen. (சா.அக.)

*[Skt. šukla > த. சுக்கிலம்+பெருக்கம்]*

**சுக்கிலப்பெருக்கு** *šukkila-p-perukku,* பெ.(n.) **சுக்கிலப்பெருக்கம்** பார்க்க; see sukkila-p-perukkam. (சா.அக.)

*[சுக்கிலம் + பெருக்கு]*

*[Skt. šukla > சுக்கிலம்]*

**சுக்கிலபட்சம்** *šukkila-paṭcam,* பெ. (n.) காருவாவின் (அமாவாசையின்) மறுநாளி லிருந்து முழுநிலவு வரையிலுள்ள காலம்; crescent moon.

த.வ. வளர்பிறை

*[Skt. šukla+pakṣa > த. சுக்கிலபட்சம்]*

**சுக்கிலபுட்டா** *šukkila-buṭṭā,* பெ. (n.) ஒருவகைச் சிறுமரம் (L.); kamela, Mallotus philippinensis.

**சுக்கிலம்** *šukkilam,* பெ.(n.) 1. வெண்மை (திவா.); whiteness, paleness. 2. விந்து (பிங்.); semen virile. 3. **சுக்கிலபட்சம்** பார்க்க; see *šukkila-paṭcam.* 4. பாலை (மூ.அ.); wedge-leaved ape-flower. 5. பழமுண்ணிப்பாலை (மலை.); silvery-leaved ape-flower.

*[Skt. šukla > த. சுக்கிலம்]*

**சுக்கிலமண்டலம்** *šukkila-manḍalam,* பெ.(n.) விழியின் மேற்றோல் (யாழ்.அக.); cornea of the eye.

*[சுக்கிலம் + மண்டலம்]*

*[Skt. šukla > த. சுக்கிலம்]*

**சுக்கிலமூத்திரம்** *šukkila-mūttiram,* பெ. (n.) சிறுநீரோடு விந்து (இந்திரியம்) கலந்து விழும் நோய் (வின்.); gonorrhoea.

த.வ. உச்சைவிந்து நோய்

*[சுக்கிலம் + மூத்திரம்]*

*[Skt. šukla > த. சுக்கிலம்]*

**சுக்கிலயசுர்வேதம்** *šukkila-yašur-vēdam,* பெ.(n.) எசுர் மறையின் (வேதத்தின்) இரு பகுதிகளுள் மந்திரங்களும் (பிராமணங்களும்) தனித்தனியாக ஆணைகளும் பிரிக்கப்பட்டுள்ளதும் யாஞ்ஞிய வல்கியரால் கண்டறியப்பட்டதுமான பகுதி; the white yajurvēda which gives the mantras and Brāhmaṇas separately and which was revealed to yājñavalkya, dist. fr. *kiruṣṇa-yacur-vēdam.*

*[Skt. šukla+yajur-vēda > த. சுக்கிலயசுர்வேதம்]*

**சுக்கிலவர்த்தினி** *šukkila-varttini,* பெ. (n.) ஆயுர்வேதக்குடிப்பு மருந்து; an ayurvedic drug.

**சுக்கிலவருமம்** *šukkilavarumam,* பெ.(n.) வெள்விழி முழுமையும் பரவியுள்ள மெல்லிய வெண் சதை வளர்ச்சி; an eye disease of the white sclerotic coat in which soft whitish growth gradually extends over the entire length.

**சுக்கிலாசயம்** *šukkilāšayam,* பெ.(n.) விந்து தங்குமிடம் (வின்.); spermary.

*[Skt. šukla+ā-šaya > த. சுக்கிலாசயம்]*

**சுக்கிலை** *šukkilai,* பெ.(n.) சிவசத்தியின் நான்கு உருக்களில் ஒன்று (சைவச. பொது. 74, உரை); a form of Parā-šakti, one of four.

சிவசத்தியின் நான்கு பிரிவுகள் : இரத்தை, சுக்கிலை, அசிதை, கிருட்டிணை.

*[Skt. šuklā > த. சுக்கிலை]*

**சுக்கூர்செய்-தல்** *šukkūr-šey-,* 1 செ.குன்றாவி. (v.t.) வணக்கஞ் செலுத்துதல் (சீதக். நொ.); to render thanks.

*[சுக்கூர் + செய்-தல்]* *[Ar. shukr > த. சுக்கூர்]*

**சுககாரன்** *šuga-k-kāraṉ,* பெ. (n.) 1. மகிழ்ச்சியை நுகர்வோன்; pleasure -

seeker. 2. செல்வந்தனாக வளர்ந்தவன் (இ.வ.); person bred in the lap of luxury. 3. பரத்தைக் கள்ளன் (வின்.); whoremonger.

*[சுகம் + காரன்]*

*[**Skt.** sukha > த. சுகம்]*

*காரன் – உடைமைப்பொருள் கூறு*

**சுகக்கினி** *šuka-k-kini,* பெ.(n.) நாக்கு; tongue. (சா.அக.)

**சுகக்கேடு** *šuga-k-kēḍu,* பெ.(n.) **சுகத்தாழ்வு** பார்க்க; see *šuga-t-tāḻvu.*

*[சுகம் + கேடு]* *[**Skt.** sukha > த. சுகம்]*

**சுககரம்** *šuga-garam,* பெ.(n.) உடல் நலத்தையும் மகிழ்வையும் கொடுப்பது (சங்.அக.); that which is conducive to health and happiness.

*[**Skt.** sukha-kara > த. சுககரம்]*

**சுகங்காட்டு-தல்** *šugaṅ-gāṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) உடல் நலத்திற்கான குறி தோற்றுவித்தல்; to show signs or symptoms of convalescence. 2. இணங்கி மகிழ்வித்தல்; to indulge or humour one, allure, give one a taste of enjoyment.

*[சுகம் + காட்டு-]* *[**Skt.** sukha > த.சுகம்]*

**சுகசங்கடம்** *šuga-šaṅgaḍam,* பெ. (n.) **சுக்கிலமூத்திரம்** பார்க்க; see *šukkila-mūttiram.*

*[**Skt.** sukha+saṅgaḍa > த. சுகசங்கடம்]*

**சுகசத்தி** *šuga-šatti,* பெ.(n.) சுருங்கி விரியும் ஆற்றல் (சக்தி); power of contraction and expansion. (சா.அக.)

*[**Skt.** sukha+šakti > த. சுகசத்தி]*

**சுகசபதம்** *šugaša-padam,* பெ.(n.) இளம் பருவமுள்ள நோயற்ற பெண்; a healthy young girl. (சா.அக.)

*[**Skt.** sukha+šapatha > த. சுகசபதம்]*

**சுகசரீரம்** *šuga-šarīram,* பெ.(n.) 1. நோயற்ற உடல்; healthy or robust constitution. 2. மென்மையான உடல் (இ.வ.); delicate constitution.

**த.வ. உடல்நலம்**

*[**Skt.** sukha+šarīra > த. சுகசரீரம்]*

**சுகசரீரி** *šuga-šarīri,* பெ.(n.) நல்ல நிலைமையோடு கூடிய உடம்பையுடையவன்; healthy person. (சா.அக.).

**த.வ. நலவன்**

*[**Skt.** sukha+šarīrin > த. சுகசரீரி]*

**சுகசன்னி** *šuga-šanni,* பெ.(n.) பொருந்தாப் புணர்ச்சி, அகாலப் புணர்ச்சி இவற்றால் உண்டாகும் இசிவு (சன்னி) நோய் (உ.வ.); delirious fever from improper or untimely sexual intercourse.

**த.வ. பொருந்தாப்புணர்ச்சிநோய்**

*[**Skt.** sukha+sannipāta > த. சுகசன்னி]*

**சுகசாத்தியம்** *šuga-šāttiyam,* பெ.(n.) எளிதில் தீரக் கூடியது; easily curable. (சா.அக.)

*[**Skt.** sukha+šādhya > த. சுகசாத்தியம்]*

**சுகசிம்பி** *šugašimbi,* பெ.(n.) பூனைக்காலி (மலை.); cowhage.

*[**Skt.** sūkašimbi > த. சுகசிம்பி]*

**சுகசீவனம்** *šuga-šīvanam,* பெ.(n.) 1. நல வாழ்வு; happy, comfortable life. 2. சோம்பல் வாழ்வு (உ.வ.); an idler's life.

*[**Skt.** sukha+jīvana > த. சுகசீவனம்]*

**சுகசீவி** *šuga-šīvi,* பெ.(n.) நலமுடன் வாழ்பவன் (வின்.); happy or helathy person.

**த.வ. நலவாழ்வன்**

*[**Skt.** sukha+jīvin > த. சுகசீவி]*

**சுகசெல்வம்** *šuga-šelvam,* பெ.(n.) நல்ல நுகர்பொருள்கள்; health and prosperity; pleasures and luxuries.

*[சுகம் + செல்வம்]* *[**Skt.** sukha > த. சுகம்]*

**சுகஞ்சுகம்** *šugañ-jugam,* பெ.(n.) குழந்தையைக் குளிப்பாட்டியப்பின் தாய்

முதலியோர் வாழ்த்துஞ்சொல் (வின்.); a benediction meaning 'health! health!' uttered by a woman towards the close of bathing her child.

**த.வ. நலம்நலம்**

*[சுகம் + சுகம்]*

**சுகண்டகெந்தி** *šukanda-kendi,* பெ.(n.) கோழித்தலைக் கெந்தகம்; red sulphur of brick dust colour used formerly by Tamil alchemists. (சா.அக.)

**சுகத்தலிகிதம்** *šugattaligidam,* பெ. (n.) தன் கையால் எழுதியது; one's own handwriting - used generally in documents to indicate that the body was written by executant himself that the body was written by the executant himself.

*[Skt. sva+hasta-likhita > த. சுகத்தலிகிதம்]*

**சுகத்தானம்** *šuga-t-tānam,* பெ. (n.) பிறப்போரையிலிருந்து நான்காவதாய் அமையும் இடம்; fourth house from the ascendent, as the house of happiness.

*[Skt. sukha+sthāna > த. சுகத்தானம்]*

**சுகத்திகாசனம்** *šugattikāšanam,* பெ.(n.) தொடைக்கும் முழங்காலுக்கும் நடுவே இரண்டுள்ளங்கால்களையும் செலுத்தி அமரும் ஒருவகை ஒக நிலை; a posture in yoga practice. (சா.அக.).

**த.வ. கட்டிக்கால் இருக்கை**

**சுகத்தாழ்வு** *šuga-t-tālvu,* பெ.(n.) உடல்நலக் குறைவு (இ.வ.); failure or want of health, illness.

**த.வ. நலக்குறைவு**

*[சுகம் + தாழ்வு]* *[Skt. šukha > சுகம்]*

**சுகத்திரம்** *šuga-t-tiram,* பெ.(n.) வாகை (மலை.); siris.

*[Skt. šuka+druma > த. சுகத்திரம்]*

**சுகத்துவம்** *šugattuvam,* பெ.(n.) உடம்பிலுள்ள நோயைத் தானாகவே நீங்கச் செய்யும் இயல்பு; nature cure affected through health guarding force - viz Medicatrix nature. (சா.அக.)

**த.வ. இயல்நலம்**

**சுகதநூல்** *šugada-nūl,* பெ. (n.) புத்த நூல்; Buddhist scripture. *தொட்ட நாற் பத்துமூன்றுஞ் சுகத நூற் றுணிவுதானே (மணிமே. பக். 382, அரும்.).*

*[சுகதம் + நூல்]* *[Skt. sugata > த. சுகதம்]*

**சுகதபேதம்** *šugada-bēdam,* பெ. (n.) உறுப்பிக்கும் உறுப்புக்குமுள்ள வேறுபாடு; difference between an object as a whole and its parts, one of three *pēdam.*

*[Skt. sva-gata+bhēda > த. சுகதபேதம்]*

**சுகதம்**[1] *šugadam,* பெ.(n.) **சுகதபேதம்** பார்க்க; see *šugada-bēdam. "ஒரு பிரமந்தனக்குத் தெரிந்த சுகதமுதலாயின மூன்றுமிலையே" (வேதா. சூ. 27).*

*[Skt. sva-gata > த. சுகதம்]*

**சுகதம்**[2] *šugadam,* பெ. (n.) சொந்தம் (யாழ்.அக.); one's own.

*[Skt. sva-gata > த. சுகதம்]*

**சுகதன்** *šugadan,* பெ. (n.) 1. புத்தன்; Buddhan. *"சுகதற் கியற்றிய ........ சயித்தம்" (மணிமே. 28: 130).* 2. அருகன்; Arhat. *"சுகதா வுரையாயே" (சீவக. 3096).*

*[Skt. sugata > த. சுகதன்]*

**சுகதாதை** *šuga-tādai,* பெ. (n.) சுகமுனிவர்க்குத் தந்தையான வியாசர்; *Vyāsar,* the father of Šukan.

*[Skt. šuka+tāta > த. சுகதாதை]*

**சுகதுக்கி** *šugadukki,* பெ.(n.) பிறப்பில் அழுந்தியிருக்கும் ஆதன்; the soul subjected to births and deaths. (சா.அக.)

**சுகதுண்டம்** *šuga-tundam,* பெ.(n.) சுட்டு விரலும் பெருவிரலும் உகிர்நுனி கௌவும்படி ஒட்டி முன்வளைந்தும் ஆழிவிரல் முடங்கியும்

நடுவிரலுஞ் சிறு விரலும் நிமிர்ந்தும் உள்ள இணையாவினைக்கை வகை (சிலப். 3, 18, உரை); a gesture with one hand in which the fore finger and the thumb are joined at the tips and bent forward while the ring finger is turned inward and the other two fingers are held upright, as resembling a parrot's beak, one of 33 *iṇaiyā-viṉai-k-kai.*

*[சுகம்+துண்டம்]*

*[**Skt.** śuka-tuṇḍa > த. சுகம்]*



**சுகந்தபரிமளம்** *śuganda-parimaḷam,* பெ.(n.) **சுகந்தம்**² **1,2** பார்க்க (இ.வ.); see *sugandam², 1,2.*

*[Skt.su-gandha+pari-mala> த. சுகந்த பரிமளம்]*

**சுகந்தம்**¹ *śugandam,* பெ.(n.) ஈரவெங்காயம்; onion. 2. பூவாழை; guindy plantain.

*[**Skt.** su-kanda > த. சுகந்தம்]*

**சுகந்தம்**² *śugandam,* பெ.(n.) 1. நறுமணம்; fragrance. 2. நறுமணப் பொருள்; perfumes, aromatics. 3. கொடிச்சம்பங்கி; cowslip creeper, l. cl., pergularia minor (M.M.)

*[**Skt.** su-gandha > த. சுகந்தம்]*

**சுகந்தமா** *śuganda-mā,* பெ.(n.) கருப்பூர மரம் (மலை.); japan camphor tree.

*[**Skt.** su-kanda > த. சுகந்தமா]*

**சுகந்தமூலி** *śuganda-mūli,* பெ.(n.) வெட்டி வேர் (மலை.); cuscus grass, anatherum muricatum.

*[**Skt.** su-gandha+ > த. சுகந்தமூலி]*

**சுகந்தவர்க்கம்** *śuganda-varkkam,* பெ. (n.) நறுமணப் பண்டம்; perfumes, spices. *"சுகந்த வர்க்கங்களாகிய சுத்தமான வெள்ளைப் போளத்தில்" (பைபிள், யாத்திரா. 30 : 23).*

*[**Skt.** su-gandha-varga > த. சுகந்தவர்க்கம்]*

**சுகந்தவர்க்கமிடல்** *śuganda-varkkam-iḍal,* பெ.(n.) இறந்த உடலை மணப்பொருள்களால் சேமஞ்செய்கை (பைபிள். அக.); embalming.

**த.வ நறுமணஏமம்**

*[**Skt.** su-gandha+varga > த. சுகந்தவர்க்கம் + இடல்]*

**சுகந்தவாழை** *śuganda-vāḻai,* பெ. (n.) பூவாழை; a variety of plantain.

*[சுகந்தம் + வாழை]*

*[**Skt.** su-gandha > த. சுகந்தம்]*

**சுகந்தி** *śugandi,* பெ. (n.) செவ்வந்திக்கல்; amethyst. *"பன்னிரண்டாவது சுகந்தி" (பைபிள். வெளி. 21 : 21).*

*[**Skt.** su-kānti > த. சுகந்தி]*

**சுகந்திக்கல்** *śugandi-k-kal,* பெ.(n.) **சுகந்தி** பார்க்க; see *sugandi*(சா.அக.).

*[சுகந்தி + கல்]* *[**Skt.** śu-kānti > த. சுகந்தி]*

**சுகந்திகம்** *śugandigam,* பெ.(n.) 1. நெல் வகை (சங்.அக.); a kind of paddy. 2. வெண்டாமரை (யாழ்.அக.); white lotus.

*[**Skt.** su-gandhaka > த. சுகந்திகம்]*

**சுகந்திரம்** *śugandiram,* பெ. (n.) **சுதந்தரம்** பார்க்க; see *śudandaram.*

*[**Skt.** svatantra > த. சுகந்திரம்]*

**சுகநீர்த்தம்பனம்** *šuganirttambaṉam,* பெ. (n.) விந்து நீர் வெளிவராதபடி தங்குதல்; suppression of the discharge of semen- Spermatochesis. (சா.அக.)

**த.வ. விந்துக்கட்டு**

**சுகப்படு-தல்** *šuga-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. நோயின்றியிருத்தல்; to be free from disease. *அவன் உடம்பு சுகப்பட்டிருக்கிறது* 2. நலமுடன் இருத்தல்; to be comfortable. 3. மனமிணங்குதல்; to be cordial. *அவனுக்கும் எனக்கும் சுகப்படவில்லை (உ.வ.)*

**த.வ. நலமாதல்** *[சுகம் + படு-தல்]*

**சுகப்பிரசவம்** *šuga-p-pirašavam,* பெ.(n.) வருத்தமில்லா பிள்ளைப்பேறு; easy and safe accouchement, safe child birth after the full period of gestation.

**த.வ. நலப்பேறு**

*[**Skt.** sukha+pra-sava > த. சுகப்பிரசவம்]*

**சுகப்பிழை** *šuga-p-piḻai,* பெ.(n.) உடல்நலக் குறைவு; failure of health.

*[சுகம் +பிழை]* *[**Skt.** sukha+ > த. சுகம்]*

**சுகப்பேறு** *šuga-p-pēṟu,* பெ.(n.) **சுகப்பிரசவம்** பார்க்க; see *šuga-p-pirašavam.*

*[**Skt.** sukha > த. சுகம் + பேறு]*

**சுகபலம்** *šuga-balam,* பெ. (n.) எருக்கு (மூ.அ.); madar plant.

*[**Skt.** suka-phala > த. சுகபலம்]*

**சுகபலை** *šuga-palai,* பெ.(n.) *சுகபலம்* (தைலவ. தைல. 12) பார்க்க; see *suga-balam.*

**சுகபேதி** *šuga-bēdi,* பெ.(n.) வயிற்றுவலி முதலியனவின்றி மருந்தால் மலம் கழிகை (உ.வ.); easy loose motion caused by purgative.

*[**Skt.** sukhabhēdin > த. சுகபேதி]*

**சுகபேதிக்குளிகை** *šugapēdi-k-kuḷigai,* பெ. (n.) தூய்மை செய்த வாளத்துடன் ரோசாப்பூ, உலர்ந்த நெல்லிக்காய் சம எடை சேர்த்துப் பழச்சாறு விட்டு 3 நாள் அரைத்துக் கடலையளவில் செய்த மாத்திரை; a purgative pill containing purified croton seed petals and emblic myroblan when given with cumin decoction acts as a good purgative.

**த.வ. நன்கழிச்சல் குளிகை**

*[சுகபேதி + குளிகை]*

*[**Skt.** sukha+bhēdin> த. சுகபேதி]*

**சுகபோகம்** *šuga-bōgam,* பெ.(n.) இன்ப நுகர்வு (அனுபவம்) (உ.வ.); sexsual or luxurious enjoyment.

*[**Skt.** sukha+bhōga > த. சுகபோகம்]*

**சுகபோகி** *šuga-pōgi,* பெ.(n.) சிற்றின்பத்தை நாடுவோன்; a man devoted to sexual enjoyment - *An epicure.*

*[**Skt.** sukha + bhōgin> த. சுகபோகி]*

**சுகபோசனம்** *šuga-bōšaṉam,* பெ.(n.) சத்தான உணவு; rich, wholesome, food.

**த.வ. நல்லுணவு**

*[**Skt.** sukha+bhōjana > த. சுகபோசனம்]*

**சுகபோசினி** *šuga-pōšiṉi,* பெ.(n.) நல்ல சுவையுள்ள உணவை நாடுபவன்; one who indulges in the luxuries of the table. (சா.அக.)

**த.வ. ஊண்விரும்பி**

*சுகபோசனம் > சுகபோசினி*

**சுகம்[1]** *šugam,* பெ.(n.) 1. மகிழ்ச்சி (பிங்.); happiness, pleasure, enjoyment. *"அமூர்த்த சுகம்போ லனித்தமோ வெனல்" (மணிமே. 29:266).* 2. நன்மை தருவது (அக.நி.); that which is good, wholesome, beneficial. *"தூதென் றெண்ணாமற் சுகமென்று நாடும்" (பட்டினத். திருப்பா. திருவேகம்பமா. 12).*

3. உடல்நலம்; health, welfare. *நீ சுகமா.* 4. நலவாழ்வு; ease, comfort. *அவனுடைய சுகம் யார்க்கு உண்டு?.* 5. இணக்கம்; cordiality. *அவனுக்கும் எனக்கும் அவ்வளவு சுகமில்லை.* 6. **சுகாசனம்** பார்க்க; see *šugāšaṉam. "சுகமாவது.......... எவ்வாறிருக் கிலுண்டதடவ்வாறிருத்தல்" (பிரபோத. 44:10).*

*[**Skt.** sukha > த. சுகம்]*

**சுகம்²** *šugam,* பெ.(n.) கிளி; parrot. *"வேடனோர் சுகத்தை யெய்து" (திருவாலவா. 33:18).*

*[**Skt.** šuka > த. சுகம்]*

**சுகம்³** *šugam,* பெ.(n.) முலைக்கண் (அக.நி.); nipple.

*[**Skt.** cūcuka > த. சுகம்]*

**சுகமரணம்** *šuga-maraṇam,* பெ.(n.) துன்பமில்லா சாவு; an easy or painless death - *Euthanasia.* (சா.அக.)

*[சுகம்+ மரணம்]* *[**Skt.** sukha > த. சுகம்]*

**சுகர்மம்** *šugarmam,* பெ.(n.) 1. நற்செயல்; good deed. 2. நல்வினை (ஓகம்) இருபத்தேழனுள் ஒன்று (சோதிட. சிந்.); a division of time one of 27 *yōgam.*

*[**Skt.** su-karman > த. சுகர்மம்]*

**சுகரகசியம்** *šugaragašiyam,* பெ. (n.) நூற்றெட்டு மறையின் அறிவுப் பகுதிகளுள் (உபநிடதங்களுள்) ஒன்று; an Upaniṣad, one of 108.

*[**Skt.** Suka-rahasya > த. சுகரகசியம்]*

**சுகரம்** *šugaram,* பெ. (n.) எளிதிற் செய்யத்தக்கது (இலக்.அக.); that which is easy to do.

*[**Skt.** su-kara > த. சுகரம்]*

**சுகரோகம்** *šuga-rōgam,* பெ.(n.) **சுகசங்கடம்** (இ.வ.) பார்க்க; see *šuga-šaṅgaḍam.*

*[**Skt.** sukha+rōga > த. சுகரோகம்]*

**சுகவல்லபம்** *šuga-vallabam,* பெ. (n.) மாதுளைமரம் (யாழ்.அக.); pomegranate tree.

*[**Skt.** šuka-vallabha > த. சுகவல்லபம்]*

**சுகவழி** *šuga-vaḻi,* பெ.(n.) துப்புரவு, நலவாழ்வு பற்றிய நூல்; hygiene.

*[சுகம் + வழி]*

**சுகவாகன்** *šuga-vāgaṉ,* பெ.(n.) கிளியை ஊர்தியா(வாகனமா)கவுடையமன்மதன் (யாழ்.அக.); cupid, as having parrot as his vehicle.

*[**Skt.** šuka-vāha > த. சுகவாகன்]*

**சுகவாசசீவனம்** *šuga-vāša-šivaṉam,* பெ.(n.) மூதாதையர் சொத்தால் வாழும் நல்வாழ்க்கை (இ.வ.); comfortable livelihood, life of ease and comfort - used in documents in reference to a person having no profession.

**த.வ. முதுசொத்துஏமவாழ்வு**

*[**Skt.** sukha+vāsa+jīvaṉa > த. சுகவாசசீவனம்]*

**சுகவாசத்தலம்** *šuga-vāsa-t-talam,* பெ.(n.) நல்வாழ்வின் பொருட்டுச் சென்று வாழும் இடம்; sanatorium.

**த.வ. நலவாழிடம்**

*[**Skt.** šukha+vāsa > த. சுகவாசம் + தலம்]*

**சுகவாசி** *šuga-vāši,* பெ.(n.) 1. எந்த வேலையுமின்றி நலமாக வாழ்பவன்; one who lives in comfort without any particular employment. 2. நிலைத்த குடியானவன் (இ.வ.); permanent tenant or cultivator.

**த.வ. நலவாழி**

*[**Skt.** sukha+vāsin > த. சுகவாசி]*

**சுகவாசிக்குடி** *šuga-vāši-k-kuḍi,* பெ.(n.) **சுகவாசி, 2** (இ.வ.) பார்க்க; see *šuga-vāši,* 2.

*[சுகவாசி + குடி.]*

**சுகவாசித்தீர்வை** *šuga-vāši-t-tīrvai,* பெ. (n.) குடிகள் நிலவுடைமையாளருக்குக் கொடுக்கும் குத்தகை;(W.G.492) rent payable to landlord.

*[சுகவாசி + தீர்வை]*

**சுகவாசிவாரம்** *šuga-vāši-vāram,* பெ.(n.) குடிவாரம்; குடியானவன் பங்குக்குரிய விளைபொருள்; (W.G.492) share of produce accruing to the cultivator of the soil (W.G.492).

*[சுகவாசி + வாரம்] வாரம் = விளைச்சல் பங்கு*

*[Skt. sukha+vāsin > த. சுகவாசி]*

**சுகவாரி** *šuga-vāri,* பெ.(n.) இன்பக்கடல்; ocean of bliss. *"சோதியே சுகவாரியே" (தாயு. சுகவாரி.).*

*[Skt. sukha+vāri > த. சுகவாரி]*

**சுகவாழ்வு** *šuga-vālvu,* பெ.(n.) மகிழ்ச்சியான வாழ்க்கை (கொ.வ.); happy life.

**த.வ. நல்வாழ்வு**

*[சுகம் + வாழ்வு]* *[Skt. sukha > த. சுகம்]*

**சுகவிருத்தி** *šuga-virutti,* பெ.(n.) 1. நலம்; welfare. 2. நற்செய்தி (வின்.); information regarding one's welfare. 3. துப்புரவு (கால். வி. 219); sanitation.

*[Skt. sukha+vrtti > த. சுகவிருத்தி]*

**சுகவீனம்** *šuga-v-īnam,* பெ.(n.) 1. உடல்நலக் குறைவு; illness, ill-health. 2. நலமின்மை, தொல்லை (வின்.); trouble, inconvenience.

**த.வ. நலக்குறைவு**

*[Skt. sukha+hīna > த. சுகவீனம்]*

**சுகன்** *šugaṉ,* பெ. (n.) வியாசமுனிவரின் மகன் (பாகவத.); *Vyāsa's* son.

*[Skt. Šuka > த. சுகன்]*

**சுகாசனம்** *šugāšaṉam,* பெ.(n.) ஒக இருக்கை வகை ஒன்பதனுள் ஒகி தன் விருப்பம் போல் அமைத்துக் கொள்ளும் இருக்கை; a yōgic posture characterised by ease and comfort, one of nine *āšaṉam,* q.v.

*[Skt. sukha+āsana > த. சுகாசனம்]*

**சுகாசீனர்** *šugāšīṉar,* பெ.(n.) தவநிலையிலுள்ள சிவவடிவ; Šivaṉ in the yōgic posture of šugāšaṉam.

*[Skt. sukha+āsīna > த. சுகாசீனர்]*

**சுகாசுகம்** *šugāšugam,* பெ.(n.) இன்ப துன்பம்; joy and sorrow.

*[Skt. sukha+a-sukha > த. சுகாசுகம்]*

**சுகாட்டம்** *šugāṭṭam,* பெ.(n.) 1. நாணல்; kaus, a large and coarse grass. 2. முடக்கொற்றான்; balloon vine.

**சுகாதனம்** *šugādaṉam,* பெ.(n.) **சுகாசனம்** (பிங்.) பார்க்க; see *šugāšaṉam.*

*[சுகாசனம் > சுகாதனம்]*

**சுகாதாரம்** *šugādāram,* பெ.(n.) **சுகவழி** பார்க்க; see *suga-vaḻi.*

*[Skt. sukha+ādhāra > த. சுகாதாரம்]*

**சுகாதிசயம்** *šugādišayam,* பெ.(n.) 1. நலம்; welfare. 2.பேரின்பம்; Supreme bliss.

*[Skt. sukha+atišaya > த. சுகாதிசயம்]*

**சுகாந்தம்** *šugāndam,* பெ. (n.) ஈரவெங்காயம் (யாழ்.அக.); onion.

*[Skt. su-kanda > த. சுகாந்தம்]*

**சுகாந்திக்கல்** *šugāndi-k-kal,* பெ. (n.) **சுகந்தி** பார்க்க; see *šugandi.*

*[Skt. su-kānti > த. சுகாந்தி]*

**சுகானுபவம்** *šugāṉubavam,* பெ.(n.) **சுகபோகம்** (யாழ்.அக.) பார்க்க; see *suga-bōgam.*

*[Skt. sukha+anu-bhava > த. சுகானுபவம்]*

**சுகி[1]-த்தல்** *šugi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. மகிழ்ச்சியாக இருத்தல்; to live happily. *"துணைக்கவரி பரிமாறச் சுகிப்பம்" (ஞானவா. லீலை. 22).* 2. சிற்றின்பந் துய்த்தல்; to indulge in sexual pleasure. *"பூமுடித்துத் தினஞ் சுகித்தால்" (செந். xxv, 390).*

த.வ. நலம் நுகர்தல்

*[Skt. sukha > த. சுகம் > சுகி-த்தல்]*

**சுகி[2]** *šugi,* பெ.(n.) 1. உடல்நலமுள்ளவன்; healthy person. 2. செல்வன் (வின்.); prosperous, wealthy person.

த.வ. நல்லி

*[Skt. sukhin > த. சுகி]*

**சுகிதம்[1]** *šugidam,* பெ.(n.) நல்வினை; result of past good deeds. *"தேவாதி தேவர்கள் சகிதமாகிய சுகிதமா மலையே" (சர்வ சமய. பக். 36).*

*[Skt. sukṛta > த. சுகிதம்]*

**சுகிதம்[2]** *šugidam,* பெ.(n.) பால் (மூ.அ.); milk.

*[Skt. sugdha > த. சுகிதம்]*

**சுகிப்பு** *šugippu,* பெ.(n.) 1. இன்பநிகழ்வு; enjoyment of pleasures. *"பிலுக்குஞ் சுகிப்பும்" (பணிவிடு. 165).* 2. மனநிறைவு (சம்பிரமம்) (இ.வ.); sumptuousness, luxury.

*[சுகி > சுகிப்பு]*

**சுகிர்-தல்** *šugir-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. பஞ்செஃகுதல்; to card, as cotton. *'சுகிர்ந்த பஞ்சு போன்ற' (புறநா. 125, உரை).* 2. மயிர் முதலியன வகிர்தல்; to part, separate, as hair, fibres. 3. கிழித்தல்; to tear, split. *"பல்லினாற் சுகிர்ந்த நாரின்" (சீவக. 438).* 4. வடித்தல்; to rub clean and smooth, as a lutestring. *"சுகிர்புரி நரம்பின்" (மலைபடு. 23).*

*[Skt. sukṛ > த. சுகிர்]*

**சுகிர்த்து** *šugirttu,* பெ.(n.) **சுகிர்தன்[1]** பார்க்க; see *šugirdaṉ[1].*

*[Skt. su-hṛt > த. சுகிர்த்து]*

**சுகிர்தசாலி** *šugirta-šāli,* பெ. (n.) செல்வத்திருமகன்; fortunate man.

*[Skt. sukṛta-šālin > த. சுகிர்தசாலி]*

**சுகிர்தபலன்** *šugirda-palaṉ,* பெ.(n.) நல்வினைப் பயன்; merit accruing from good deeds in previous births.

*[Skt. sukṛta+phala > த. சுகிர்தபலன்]*

**சுகிர்தபுண்ணியம்** *šugirta-puṇṇiyam,* பெ. (n.) **சுகிர்தபலன்** பார்க்க; see *šugirda-palaṉ.*

**சுகிர்தம்[1]** *šugirdam,* பெ.(n.) 1. நற்செயல் (பிங்.); virtuous, meritorious deeds, as religious austerities. 2. நன்மை; goodness. 3. மகிழ்ச்சி; deliciousness, delightfulness. *'சுகிர்த போசனம்' (வின்.).*

*[Skt. su-kṛta > த. சுகிர்தம்]*

**சுகிர்தம்[2]** *šugirdam,* பெ.(n.) நெய் (வின்.); ghee.

*[Skt. su-ghṛta > த. சுகிர்தம்]*

**சுகிர்தவசனம்** *šugirda-vašaṉam,* பெ.(n.) நற்சொல்; good, auspicious words.

*[Skt. suhṛt+vacaṉam > த. சுகிர்தவசனம்]*

**சுகிர்தன்¹** *šugirdaṉ,* பெ.(n.) நண்பன்; friend, well-wisher.

*[Skt. su-hṛt > த. சுகிர்தன்]*

**சுகிர்தன்²** *šugirdaṉ,* பெ.(n.) நல்வினைப் பயனுடையவன்; virtuous person, one enjoying the fruits of his virtuous deeds in former births.

*[Skt. su-kṛta > த. சுகிர்தன்]*

**சுகிர்ல்லாபம்** *šugir-l-lābam,* பெ.(n.) நண்பரைப் பெறுதலைப் பற்றிக் கூறும் (பஞ்ச) தந்திரப்பகுதி; a chapter in *pañja-tantiram* dealing with the acquisition of friends.

*[Skt. suhṛt+lābha > த. சுகிர்ல்லாபம்]*

**சுகுச்சை** *šuguccai,* பெ.(n.) அறுவகைத் துவர்ப்புகளுள் ஒன்று (சீவக. 3076, உரை); aversion, disgust, one of six tuvarppu.

*[Skt. jugupsā > த. சுகுச்சை]*

**சுகுணம்** *šu-guṇam,* பெ.(n.) நற்குணம்; good nature, noble character.

*[Skt. su-guṇa > த. சுகுணம்]*

**சுகுமாரதை** *šugumāratai,* பெ.(n.) வல்லொற்று நீங்கிய சொற்களால் ஆக்கப்பட்டு மென்மை நிரம்பிய செய்யுட்குணம்; smoothness of expression attained by the use of soft consonants. *"மென்மை யொன்றின்.... சுகுமாரதையென்று நேர்ந்துரையே" (வீரசோ. அலங். 8).*

*[Skt. sukumāratā > த. சுகுமாரதை]*

**சுகுமாரம்¹** *šugumāram,* பெ.(n.) 1. மென்மை (திவா.); softness, smoothness, tenderness. 2. **சுகுமாரநெய்** பார்க்க; see *šugumāra-ney.*

*[Skt. su-kumāra > த. சுகுமாரம்]*

**சுகுமாரம்²** *šugumāram,* பெ.(n.) 1. தவசவகை; a kind of grain. 2. கரும்பு வகை; a kind of sugar-cane.

*[Skt. sukumāra > த. சுகுமாரம்]*

**சுகுமாரன்** *šugumāraṉ,* பெ.(n.) மெல்லிய உடலமைப்புள்ளவன்; person of delicate constitution. *"சுகுமாரரான நீர் இங்ஙனே செய்யலாமோ" (குருபரம். 512).*

**த.வ. எழிலன்**

*[Skt. su-kumāra > த. சுகுமாரன்]*

**சுகோடம்** *šugōḍam,* பெ.(n.) பாண்டவர்களில் ஒருவனான நகுலனின் கைச்சங்கு; the conch of Nakulaṉ. *"நகுலன் ............ மருவுறு சுகோடம்" (பகவற். 1: 11).*

*[Skt. su-ghōṣa > த. சுகோடம்]*

**சுகோதயள்** *šugōdayaḷ,* பெ. (n.) மகிழ்ச்சிக்கு இருப்பிடமானவள்; fountain of happiness. *"வம்பாரத்தனத்தி சுகோதயள்"* (திருமந். 1052).

*[Skt. sukhōdaya > த. சுகோதயள்]*

**சுகோதரம்** *šugōdaram,* பெ.(n.) தாளிசபத்திரி (சங்.அக.); East Indian plum.

*[Skt. šukōdara > த. சுகோதரம்]*

**சுகோற்சவன்** *šugōṟšavaṉ,* பெ.(n.) கணவன் (யாழ்.அக.); husband.

*[Skt. sukhōtsava > த. சுகோற்சவன்]*

**சுகோட்ணம்** *šugōtṇam,* பெ.(n.) இதமான சூடு; moderate, agreeable warmth, as of water.

*[Skt. sukhōṣṇa > த. சுகோட்ணம்]*

**சுங்கக்காரன்** *šuṅga-k-kāraṉ,* பெ.(n.) வரி வாங்குவோன் (இ.வ.); custom-house officer.

*[சுங்கம் + காரன்]*

**சுங்கச்சாவடி** *śuṅga-c-cāvaḍi,* பெ. (n.) ஆயத் துறை; custom-house, toll-gate.

*[சுங்கம் + சாவடி]*

**சுங்கம்** *śuṅgam,* பெ. (n.) ஆயம்; duty on goods, customs, tolls. *'சுங்கம் கலத்தினுங் காலினும் வரும் பண்டங்கட்கு இறையாயது' குறள், 756, உரை).*

*[Skt. śulka > **Pkt.** śuṅka > த. சுங்கம்]*

**சுங்கவரி** *śuṅgavari,* பெ.(n.) ஏற்றுமதி, இறக்குமதி செய்யப்படும் பொருள்கள் மீது அரசு வாங்கும் வரி; customs duty.

*[சுங்கம் + வரி]*

**சுங்கவிறை** *śuṅga-v-iṟai,* பெ. (n.) **சுங்கம்** (திவா.) பார்க்க; see *śuṅgam*[1], *1.*

*[சுங்கம் + இறை]*

**சுங்கன்** *śuṅgaṉ,* பெ.(n.) வெள்ளி மீன் (சுக்கிரன்) (திவா.); Venus.

*[Skt. śukra > த. சுங்கன்]*

**சுங்கான்** *śuṅgāṉ,* பெ.(n.) **சுக்கான்** (இ.வ.) பார்க்க; see *śukkāṉ.*

*[U. sukkān > த. சுக்கான்]*

**சுசனம்**[1] *śuśaṉam,* பெ.(n.) நன் மக்கள்; good, respectable people.

*[Skt. su-jana > த. சுசனம்]*

**சுசனம்**[2] *śuśaṉam,* பெ.(n.)சொந்த மக்கள்; one's own people.

*[Skt. sva-jana > த. சுசனம்]*

**சுசனம்**[3] *śuśaṉam,* பெ.(n.) காற்று (சது.); wind, air.

*[Skt. śvasana > த. சுசனம்]*

**சுசாதி** *śuśādi,* பெ.(n.) சொந்த குலத்தார்; one's own caste.

*[Skt. sva-jāti > த. சுசாதி]*

**சுசாதிபலம்** *śuśādi-balam,* பெ.(n.) சாதிக்காய்; nutmeg. *"சாதி திரிபலை சுசாதி பலம்" (தைலவ. தைல. 34).*

*[Skt. sujāti+phala > த. சுசாதிபலம்]*

**சுசாதிபேதம்** *śuśādi-bēdam,* பெ.(n.) ஒரே குலத்திற் பல இனங்களுக்குள் ஒன்றோ டொன்றற்குள்ள வேறுபாடு (வேதா. சூ. 25, உரை); difference among species of the same genus, one of three pēdam.

*[Skt. sva+jāti+bhēda > த. சுசாதிபேதம்]*

**சுசி**[1] *śuśi,* பெ.(n.) 1. தூய்மை; cleanliness, purity, ceremonial, purification. *"சுசியா ரமுதி னறுசுவை கூட்டி" (திருவிளை. பயகரமாலை. 6).* 2. வெண்மை (உரி.நி.); whiteness. 3. பாதரசம் (தைலவ. தைல. 69); quicksilver. 4. திங்கள் (இலக். அக.); moon. 5. நெருப்பு; fire. *"சுடர்ச் சுசியன்ன தூயோன்" (சேதுபு. சீதைகு. 31).* 6. முதுவேனிற் காலமாகிய ஆடவை (ஆனி), கடக (ஆடி) மாதங்கள் (பிங்.); hot season, the months of Āṉi and Āḍi. 7. கொடிவேலி (தைலவ. தைல. 73); Ceylon leadwort.

*[Skt. śuci > த. சுசி]*

**சுசி**[2] *śuśi,* பெ.(n.) முலை (யாழ்.அக.); breast, udder.

*[Skt. cuci > த. சுசி]*

**சுசிகம்** *śuśigam,* பெ.(n.) புளியாரை (பூடுவகை) (மலை.); yellow wood-sorrel.

*[Skt. cukraka > த. சுசிகம்]*

**சுசிகரம்** *šuši-karam,* பெ.(n.) 1. தூய்மை; cleanliness, tidiness in habits, purity. 2. மேன்மை (யாழ்.அக.); excellence.

*[Skt. šuci-kara > த. சுசிகரம்]*

**சுசித்துருமம்** *šušitturumam,* பெ.(n.) அரச மரம் (மூ.அ.); pipal.

*[Skt. šuci-druma > த. சுசித்துருமம்]*

**சுசிதம்** *šusidam,* பெ. (n.) மிக்க வெண்மையான பால் (மூ.அ.); milk, as pure white.

*[Skt. su-sita > த. சுசிதம்]*

**சுசிமாசை** *šušimāšai,* பெ.(n.) தூய்மையான பொன்; refined gold. (சா.அக.)

**சுசிமிதம்** *šušimidam,* பெ.(n.) புன்னகை (யாழ்.அக.); smile.

*[Skt. su-smita > த. சுசிமிதம்]*

**சுசிரம்** *šuširam,* பெ.(n.) உட்டுளை (பிங்.); tubularity, hollowness.

*[Skt. suṣira > த. சுசிரம்]*

**சுசீலம்** *šu-šīlam,* பெ.(n.) இனிய பண்பு; noble character, good nature.

*[Skt. su-šīla > த. சுசீலம்]*

**சுசீலன்** *šu-šīlan,* பெ.(n.) நல்லொழுக்கமுள்ளவன்; man of noble character, virtuous man.

*[சுசீலம் > சுசீலன்]*

**சுசீலை** *šu-šīlai,* பெ.(n.) 1. நல்லொழுக்கமுடையவள்; virtuous woman. 2. புகைநிறத்து மாடு; grey or smoke-coloured cow. *"தூம நந்து நிறச் சுசீலை" (தணிகைப்பு. அகத்திய. 486).*

*[சுசீலை > சுசீலன்]*

**சுசுகம்** *šušugam,* பெ. (n.) முலைக்கண் (யாழ்.அக.); nipple of the breast.

*[Skt. cūcuka > த. சுசுகம்]*

**சுசுந்தரி** *šušundari,* பெ.(n.) மூஞ்சூறு (திவா.); muskshrew, *Sorex indicus.*

*[Skt. cucundari > த. சுசுந்தரி]*

**சுசுருதசம்மிதை** *šušuruda-šammidai,* பெ. (n.) சரகர் செய்த ஆயுள் வேத நூலுக்கு அடுத்தபடியானதாகச் சொல்லப்படும் சுசுருதன் இயற்றிய சிறந்த ஆயுள்வேத நூல்; a great work in ayurveda compiled by susruta, It is considered as next in importance to the celebrated work of Charaka. (சா.அக.)

**சுசுரூட்சை** *šušurūtcai,* பெ. (n.) பணிவிடை; serving tending, nursing.

*[Skt. šušrūṣā > த. சுருரூட்சை]*

**சுசுலம்** *šušulam,* பெ.(n.) சிறுபண்டம்; a trifle.

*[Skt. culuka > த. சுசுலம்]*

**சுசுரூசை** *šušurūṣai,* பெ.(n.) சுசுரூட்சை பார்க்க; see *šusurū.*

*[Skt. šusurū > த. சுருரூசை]*

**சுஞ்ஞானம்** *šuññāṉam,* பெ. (n.) தூய இறையறிவு (வின்.); knowledge of holy law, of theology.

*[Skt. su-jñāna > த. சுஞ்ஞானம்]*

**சுட்ககருப்பம்** *šuṭkakaruppam,* பெ. (n.) கருப்பம் சுழித்துக் கொண்டு வயிறு பூரிக்காமற் செய்வது; non-development of pregnancy. (சா.அக.)

*[சுட்கம் + கருப்பம்]*

**சுட்கசிலேட்டுமம்** *šuṭka-šilēṭṭumam,* பெ.(n.) உடல் (சர்வாங்கச்) சும்பல், நீர்க்கோவை தொல்லை (கபாதிக்கம்); இருமல், மூச்சு விட முடியாமை, வயிறு உப்பல், மலக்கட்டு ஆகிய குணங்களோடு கூடிய கோழை (சிலேட்டுமம) நோய் வகை.; a disease caused by exessive phlegm humour. (சா.அக.).

*[சுட்கம் + சிலேட்டுமம்]*

**சுட்கதர்க்கம்** *sutka-darkkam,* பெ.(n.) வீண் பேச்சு; dry, barren discussion.

*[சுட்கம்+தர்க்கம்]*

*[Skt. šuṣka > த. சுட்கம்]*

*[த. தருக்கம் >Skt. tarkka]*

**சுட்கநோய்** *šuṭka-nōy,* பெ.(n.) உடம்பை உலர்த்தும் நோய்; any wasting disease. 2. உடம்பை இளைக்கச் செய்யும் காச நோய்; consumption tending to a gradual loss or diminution of bulk in the system. (சா.அக.)

*[சுட்கம்+நோய்]*

*[Skt. šuṣka+ > த. சுட்கம்]*

**சுட்கரோகம்** *šuṭka-rōkam,* பெ.(n.) **சுட்கநோய்** பார்க்க; see *šuṭka-nōy.* (சா.அக.)

**சுத்தக்கட்டி** *šutta-k-kaṭṭi,* பெ.(n.) தூய்மையான வெள்ளி தங்கங்களின் கட்டி; lump of pure gold or silver.

*[சுத்த(ம்)+கட்டி]*

*[Skt. šuddha > த. சுத்தம்]*

**சுத்தக்கிரயம்** *šutta-k-kirayam,* பெ.(n.) எல்லா வுரிமையையும் விலைக்குக் கொடுத்துவிடுகை; absolute sale. *"அந்த வீட்டைச் சுத்தக்கிரயம் பண்ணிவிட்டான்" (உ.வ.).*

**த.வ. தனைத்துரிமை விற்பனை**

*[Skt. šuddha+kraya > த. சுத்தக்கிரயம்]*

**சுத்தகாந்தாரம்** *šutta-kāndāram,* பெ.(n.) 1. பதினாறு (வகை) இசைப் பண்களுள் ஒன்று; lowest variety of the third note of gamut, one of cōḍašaṭšuram, 2.ஆசான் என்ற வகையைச் சார்ந்த ஒரு வகைப்பண் (சிலப். 13: 112, உரை); an ancient secondary melody - type of the āšāṉ class.

*[Skt. šuddha+Gāndhāra> த. சுத்த காந்தாரம்]*

**சுத்தகாலம்** *šutta-kālam,* பெ.(n.) தூயமாயை காரிய விளைவுகளுக்குப் பயன்படும் காலம் (சி.சி.2, 54, சிவாக்.); the time or period for the creative activity of the pure *Māyai.*

*[சுத்தம்+காலம்]*

*[Skt. šuddha > த. சுத்தம்]*

**சுத்தகௌடம்** *šutta-kauḍam,* பெ.(n.) ஐந்து தேயங்களில் ஒன்றான இப்போதைய வங்கா ளத்தின் பெரும்பகுதி; an ancient district which included a large portion of modern Beṅgāḷ, one of pañcakauḍam.

*[Skt. šuddha+Gauḍa > த. சுத்தகௌடம்]*

**சுத்தசத்துவம்** *šudda-šattuvam,* பெ.(n.) 1. கலப்பற்ற இயல்பு குணம்; absolute purity of character. 2. துறக்க உலகத்திலுள்ள அசையாப் பொருள் (அஷ்டாதச. தத்வத்ரயம், அசித்பிர. 2, பக். 17); non-sentient objects, as towers, etc. in *Vaikuṇḍam.*

*[சுத்தம்+சத்துவம்]*

*[Skt. šuddha > த. சுத்தம்]*

**சுத்தசந்தயம்** *šutta-šandayam,* பெ.(n.) செய்யுளணி வகை (பாப்பா. 100); a kind of figure of speech.

*[Skt. šuddha+ san-dēba> த. சுத்தசந்தயம்]*

**சுத்தசலம்** *šutta-šalam,* பெ.(n.) குளிர்ந்த நல்ல தண்ணீர்; pure cold water, as used for drinking purposes.

**த.வ. தண்ணன்னீர்**

*[Skt. šuddha+jala > த. சுத்தசலம்]*

**சுத்தசாரி** *šutta-šāri,* பெ.(n.) நாட்டிய வகை; a kind of dancing. *"தானகமே சுத்தசாரி" (திருவிளை. கான்மா. 8).*

*[சுத்தம்+சாரி]*

*[Skt. šuddha+ > த. சுத்த(ம்)]*

**சுத்தசிவபதம்** *šutta-šiva-padam,* பெ.(n.) மேல்நிலை வீடுபேறு (வரமுத்தி); abode of absolute Bliss. *"சத்திக்கு மேலே பராசத்தி தன்னுள்ளே சுத்தசிவபதம்" (திருமந். 1768).*

*[சுத்தம்+சிவபதம்]*

*[Skt. šuddha+ > த. சுத்தம்]*

**சுத்தசிவம்** *šutta-šivam,* பெ.(n.) உருவமற்ற பரசிவம் (சதாசிவ.); pure šivam, as formless.

[சுத்தம்+சிவம்]

*[Skt. šuddha+ > த. சுத்தம்+சிவம்]*

**சுத்தசுக்கிலரோகம்** *šutta-šukkila-rōgam,* பெ.(n.) கருவிழி மேல் நோவில்லாமல் சங்கைப் போல் வெண்ணிறத்தையுண்டாக்கும் நோய்; an eye disease of the black portion characterised by painless white spot on the black portion. (சா.அக.)

*[Skt. šuddha+sukla+rōga>த. சுத்த சுக்கிலரோகம்]*

**சுத்தசுரம்** *šutta-šuram,* பெ.(n.) அடிப்படை யான பண்கள் (பூர். சங். உண். எ); (Mus.) primary notes of the gamut.

*[Skt. šuddha+svara > த. சுத்தசுரம்]*

**சுத்தசூனியம்** *šutta-šūṉiyam,* பெ.(n.) முழுப்பாழ்; absolute nothingness, inanity, non-entity, complete ruin.

*[Skt. šuddha+šūnya > த. சுத்தசூனியம்]*

**சுத்தசூனியவாதம்** *šutta-šūṉiya-vādam,* பெ.(n.) எல்லாம் இன்மை, இல்பொருளென்று உரையாடுகை (வாதிக்கும் வாதம்); nihilism.

*[Skt. šuddha+šunya+vāda > த. சுத்த சூனியவாதம்]*

**சுத்தசைதன்னியம்** *šutta-šaitaṉṉiyam,* பெ.(n.) அறிவு மாத்திரையாயுள்ளது; pure intelligence, as distinct from inert matter.

*[Skt. šuddha+caitanya > த. சுத்த சைதன்னியம்]*

**சுத்தசைவம்** *šutta-šaivam,* பெ.(n.) சிவனியம் (சைவம்) பதினாறனுள் ஒன்று; a kindof *šaivam,* one of sixteen šaivam.

*[Skt. šuddha+šaiva > த. சுத்தசைவம்]*

**சுத்தஞானம்** *šutta-ñāṉam,* பெ.(n.) கருமக் கலப்பில்லாத மெய்யறிவு; pure spiritual knowledge unalloyed by action.

*[Skt. šuddha+nyñāna > த. சுத்தஞானம்]*

**சுத்ததன்னியாசி** *šutta-taṉṉiyāši,* பெ.(n.) பண்வகை (பரத. ராக. 103); a specific melody-type.

*[Skt. šuddha+dhanāšri > த. சுத்த தன்னியாசி]*

**சுத்ததத்துவம்** *šutta-tattuvam,* பெ.(n.) மூவகை மெய்ப்பொருள்களுள் (தத்துவம்) ஒன்று (சிவப். கட்.); pure categories, one of three tattuvam, comprising *šiva-tattuvam, šattitattuvam, šādākkiya-tattuvam, īle-tattuvamcutta-vittiyā-tattuvam.*

த.வ. தூய மெய்மம்

*[Skt. šuddha+tattva > த. சுத்ததத்துவம்]*

**சுத்ததாளம்** *šutta-tāḷam,* பெ.(n.) தாளவகை; a mode of beating time.

*[சுத்த(ம்)+தாளம்]*

*[Skt. šuddha > த. சுத்தம்]*

**சுத்ததினம்** *šutta-diṉam,* பெ.(n.) 1. புத்தாண்டின் தொடக்கம் (வின்.); new years day. 2. கோள்நிலை அறிதற்குக் கருவியாய் ஒரு குறித்த காலவெல்லைக்குள் அகப்பட்ட நாட்களைப் பிழையறக் கூட்டி வந்த தொகை; the exact number of days elapsed in an epoch or in any fixed era, as an element for finding the position of a heavenly body.

*[Skt. šuddha+dina > த. சுத்ததினம்]*

**சுத்ததேகி** *šutta-dēgi,* பெ.(n.) ஊதை (வாதம்) பித்தம் அல்லது கோழை (சிலேட்டும)க் கூறுள்ள உடம்பு; a person with one or the

other of the three humours predominating in the body. (சா.அக.)

[Skt. šuddha+dēhin>த. சுத்ததேகி]

**சுத்ததைவதம்** *šutta-taivadam,* பெ.(n.) பதினாறு இசைப்பண்களுள் ஆறாவது; lowest variety of the sixth note of the gamut, one of *šōḍaša-šuram.*

[Skt. šuddha+daivata > த. சுத்ததைவதம்]

**சுத்தநிசாதம்** *šutta-nišādam,* பெ.(n.) பதினாறு இசைப்பண்களுள் ஒன்று; lowest variety of the seventh note of the gamut, one of šōdaša-šuram.

[Skt. šuddha+ni-sātta > சுத்தநிஷாதம் > த. சுத்தநிசாதம்]

**சுத்தநிருத்தம்** *šutta-niruttam,* பெ.(n.) சொக்கமென்னுங்கூத்து (சிலப். 3, 12, உரை, பக். 80); a kind of dance.

[Skt. šuddha+nir-urta > த. சுத்தநிருத்தம்]

**சுத்தநிலை** *šutta-nilai,* பெ.(n.) **சுத்தாவத்தை** (வின்.) பார்க்க; see *šuttāvattai.*

[Skt. šuddha+ > த. சுத்தம்+நிலை]

**சுத்தநீர்க்கடல்** *šutta-nīr-k-kaḍal,* பெ.(n.) **நன்னீர்க்கடல்** பார்க்க; see *nannīr-k-kaḍal.* *"புட்கரத்தீவைச் சூழ்ந்து அத்துணைப் பரப் புடையது சுத்தநீர்க் கடல்" (சி.போ.பா.2:3,பக். 210).*

[சுத்தம்+நீர்+கடல்]

[Skt. šuddha > த. சுத்தம்]

**சுத்தநீலம்** *šutta-nīlam,* பெ.(n.) ஒருவகை நீலவண்ணக் கட்டி (C.G.); ultramarine, formerly produced by calcination from Japis lazuli.

[சுத்த(ம்)+நீலம்]

[Skt. šuddha > த. சுத்தம்]

**சுத்தப்பிரதி** *šutta-p-piradi,* பெ.(n.) 1. ஒன்றைப் பார்த்துப் பிழையற எழுதப்பட்ட படி; fair copy. 2. ஆய்வு செய்யப்பட்ட நூல்; revised and corrected copy of a book.

த.வ. தூயபடி

[Skt. šuddha+prati > த. சுத்தப்பிரதி]

**சுத்தப்பிரபஞ்சம்** *šutta-p-pirabañjam,* பெ.(n.) தூய மாயையினின்று தோன்றிய உலகம்; pure universe evolved out of *šutta-māyai.*

[Skt. šuddha+pra-pañca > த. சுத்தப் பிரபஞ்சம்]

**சுத்தப்பொய்** *šutta-p-poy,* பெ.(n.) முழுப்பொய்; downright lie.

[சுத்தம்+பொய்]

[Skt. šuddha > த. சுத்தம்]

**சுத்தபரிசம்** *šutta-parišam,* பெ.(n.) மறைப்புக் காலம் தொடங்கும் நிலை; true or correct time of the beginning of an eclipse.

[சுத்த(ம்)+பரிசம்]

[Skt. šuddha > த. சுத்த(ம்)]

**சுத்தபாடம்** *šutta-pāḍam,* பெ.(n.) பிழையற்ற மூலபாடம்; correct or genuine reading of texts.

[சுத்த(ம்)+பாடம்]

[Skt. šuddha > த. சுத்தம்]

**சுத்தபுடம்** *šutta-puḍam,* பெ.(n.) கோளின் சரியான நிலை; geocentric longitude, the true position of a planet, as distinguished from its mean position.

[Skt. šuddha+sphuṭa > த. சுத்தபுடம்]

**சுத்தபோக்கியம்** *šutta-pōkkiyam,* பெ.(n.) உடைமையை நுகரும் உரிமையுடன் கூடிய அடைமானம்; usufructuary mortgage.

[Skt. šuddha + bhōgya > த. சுத்த போக்கியம்]

**சுத்தபோசனம்** *šutta-bōšaṉam,* பெ.(n.) 1. தூய புல் உணவு (இ.வ.); vegetarian food. 2. கோயிலில் படைக்கும் உணவு (வின்.); sacred food, as offered in temples.

*[Skt. šuddha+bhōjana > த. சுத்தபோசனம்]*

**சுத்தபைரவம்** *šutta-pairavam,* பெ.(n.) காய்ச்சலுக்குக் கொடுக்கும் ஓர் ஆயுர் வேத மருந்து; an Ayur vedic medicine for fevers.

*[Skt. šuddha+bhairava>த. சுத்தபைரவம்]*

**சுத்தம்**[1] *šuttam,* பெ.(n.) 1. தூய்மை (சூடா.); purity, cleanness, moral purity. *"சுத்தவிதயப் பிரமநிட்டரும்" (உத்தரரா. வரையெடு. 69).* 2. உண்மையானது; genuineness, authenticity. *"சுத்தவைரம்".* 3. முழுமை; entireness. *சுத்தப்பட்டினி.* 4. பிழையின்மை; correctness, faultlessness. *"சுத்தப்பிரதி".* 5. கலப்பின்மை; being unmixed, untainted, unadulterated. *"சுத்தத்தத்துவம்".* 6. குற்றமின்மை; innocence; innocence established by trail or ordeal. 7. சூழ்ச்சியின்மை; trankness, sincerity. 8. வளர்பிறைக் காலம்; period offf waxing moon. *சுத்த பஞ்சமி.* 9. இன்மை, இல்பொருள்; vacancy, emptiness. *"இந்தச் சாதகத்தில் நாலாமிடம் சுத்தம்".* 10. கோள் நிலையில் பிழைக்கோடு (வின்.); correction or equation.

*[Skt. šuddha > த. சுத்தம்]*

**சுத்தம்**[2] *šuttam,* பெ.(n.) நோயற்ற நிலை (வின்.); health, convalescence.

*[Skt. sva-stha > த. சுத்தம்]*

**சுத்தம்பேசு-தல்** *šuttam-pēšu- 5* செ.கு.வி. (v.i.) பெருமை பாராட்டிப் பேசுதல்; to speak boastingly, as of one's purtiy character, parentage, connection, etc.

*[சுத்த(ம்)+பேசு-,]*

*[Skt. šuddha > த. சுத்தம்]*

**சுத்தமண்டலம்** *šutta-maṇḍalam,* பெ.(n.) கோள் ஒளிமறைப்பு (கிரகணம்) விடப்பெற்ற கதிரவன் மற்றும் நிலவின் உருவம்; disc of the moon or the sun visible after an eclipse.

*[சுத்த(ம்)+மண்டலம்]*

*[Skt. šuddha > த. சுத்தம்]*

**சுத்தமண்டூரம்** *šutta-maṇḍūram,* பெ.(n.) மண்டூர வகை (பதார்த்த. 1210); a medicine prepared from iron-oxide.

*[சுத்த(ம்)+மண்டூரம்]*

*[Skt. šuddha > த. சுத்தம்]*

**சுத்தமத்தளம்** *šutta-mattaḷam,* பெ.(n.) மத்தள வகை; a superior hand-drum.

*[சுத்த(ம்)+மத்தளம்]*

*[Skt. šuddha > த. சுத்தம்]*

**சுத்தமத்தியமம்** *šutta-mattiyamam,* பெ.(n.) பதினாறு வகை இசைப்பண்களுள் ஒன்று; lowest variety of the fourth note of the gamut, one of šōḍaša-šuram.

*[Skt. šuddha+madhyama த. சுத்தமத்தியமம்]*

**சுத்தமாய்** *šuttamāy,* வி.எ.(adv.) அடியோடு; wholly, utterly, absolutely. *"சுத்தமாய் மற்றொருவர் கிட்ட வரப்படாதாம்" (பணவிடு. 302).*

*[Skt. சுத்தம் >சுத்தமாய்]*

**சுத்தமாயை** *šutta-māyai,* பெ.(n.) துன்பமின்றி நலமே அளிப்பதும் தூய உலகத்திற்கு முதற் காரணமானதுமான மாயை (ஞானா. கட். 11); pure Māyai, the material cause of cutta-p-pirapañjam, yielding unmixed happiness, dist. fr. ašutta-māyai.

*[Skt. šuddha+māyā > த. சுத்தமாயை]*

**சுத்தமார்க்கம்** *šutta-mārkkam,* பெ.(n.) 1. நல்லொழுக்கம்; pure conduct, spotless

morality. 2. உண்மையான பற்று; sincere piety. 3. மெய்யான மதம்; true religion.

*[Skt. šuddha+marhkam > த. சுத்தமார்க்கம்]*

**சுத்தமானியம்** *šutta-māniyam,* பெ.(n.) இறையிலியாக விடப்பட்ட நிலம் (இ.வ.); free gift of land.

*[Skt. šuddha+manya > த. சுத்தமானியம்]*

**சுத்தமுட்டாள்** *šutta-muttāl,* பெ.(n.) **சுத்தமூடன்** (உ.வ.) பார்க்க; see *šutta-mūdan.*

*[சுத்த(ம்)+முட்ட ாள்]*

*[Skt. šuddha > த. சுத்தம்]*

**சுத்தமுத்தி** *šutta-mutti,* பெ.(n.) சுபாவமுத்தி (யாழ்.அக.) பார்க்க; see šubāvamutti.

*[சுத்த(ம்)+முத்தி]*

*[Skt. šuddha > த. சுத்தம்]*

**சுத்தமூடன்** *šutta-mūdan,* பெ.(n.) முழு முட்டாள்; veritable fool or dunce. *"நம் போலவுண்டோ சுத்தமூடர்" (தாயு. பாயப். 37).*

*[சுத்த(ம்)+மூடன்]*

*[Skt. šuddha > த. சுத்தம்]*

**சுத்தமோட்சம்** *šutta-mōtcam,* பெ.(n.) கோள்களின் மறைப்பு (கிரகணம்) முற்றும் விடுகை (வின்.); real close or end, as of an eclipse.

*[Skt. šuddha+mōksa > த. சுத்தமோட்சம்]*

**சுத்தரத்தம்** *šutta-rattam,* பெ.(n.) தூய அரத்தம்; pure, arterial blood.

*[சுத்த(ம்)+அரத்தம்]*

*[Skt. suddha > த. சுத்தம்]*

**சுத்தராகம்** *šutta-rāgam,* பெ.(n.) நிரம்பிய இலக்கணமுடைய மூலப்பண்; (mus.) musical mode that accords perfectly with ancient rules.

*[Skt. šuddha+rāga > த. சுத்தராகம்]*

**சுத்தலாபம்** *šutta-lābam,* பெ.(n.) செலவுபோக எஞ்சிய மேல்வரும்படி (இ.வ.); net profit.

*[Skt. šuddha+lābha > த. சுத்தலாபம்]*

**சுத்தவசந்தம்** *šutta-vašandam,* பெ.(n.) பண்வகை (பரத. ராக. 102); a specific melody-type.

*[Skt. šuddha+vāsanta > த. சுத்தவசந்தம்]*

**சுத்தவாசமனம்** *šutta-v-āšamanam,* பெ.(n.) தூய்மையின் பொருட்டு நீர்த்துளிகளை மந்திரத்துடன் உட்கொள்ளுகை; taking in drops of water with mantras by way of purification. *"அடிக்கடி விளக்கிச் சுத்தவாச மனஞ்செய" (பிரபோத. 11: 39).*

*[Skt. šuddha+ā-camana > த. சுத்தவாச மனம்]*

**சுத்தவாட்டி** *šutta-v-ātti,* பெ.(n.) தூயவள் (யாழ்.அக.); pure, spotless woman.

*[சுத்த(ம்)+ஆட்டி]*

*[Skt. šuddha > த. சுத்தம்]*

**சுத்தவாரம்** *šutta-vāram,* பெ.(n.) நில விளைவில் நிலக்கிழாருக்கும் பயிரிடு வோனுக்கும் உரிய சமபங்கு (இ.வ.); equal division of produce between land lord and tenant.

*[சுத்த(ம்)+வாரம்]*

*[Skt. šuddha > த. சுத்தம்]*

**சுத்தவாளர்** *šutta-v-ālar,* பெ.(n.) தீக்கைபெற்ற துறவிகள்; saints.

*[சுத்த(ம்)+ஆளர்]*

*[Skt. šuddha > த. சுத்தம்]*

**சுத்தவாளி** *šutta-v-āli,* பெ.(n.) 1. வழக்கு (நீதி) மன்றத்தில் குற்றமற்றவனாகத் தீர்மானிக்கப் பட்டவன்; one who is proved innocent in court of justice, opp. to *kurra-v-āli.* 2. தூய்மையானவன்; holy person.

[சுத்த(ம்)+ஆள்]

[Skt. šuddha > த. சுத்தம்]

**சுத்தவிக்கேபம்** *šutta-vikkēbam*, பெ.(n.) **சுத்தவிட்சேபம்** (வின்.) பார்க்க; see *šutta-vițcēbam.*

[Skt. šuddha+vi+kṣēpa > த. சுத்தவிக்கேபம்]

**சுத்தவிட்சேபம்** *šutta-vițcēbam*, பெ.(n.) ஒரு கோளின் சரியான கிடைக்கோடு (அட்சாம்சம்); true celestial latitude.

[Skt. šuddha+vi-kšepa > த. சுத்த்விட்சேபம்]

**சுத்தவித்தியாதத்துவம்** *šutta-vittiyā-tattuvam*, பெ.(n.) சிவ மெய்ம்மைகள் (சிவ தத்துவம்) ஐந்தினுள் ஒன்றாகிய (சுத்த வித்தியாதத்துவம் அதாவது) எப்போதும் மகிழ்ச்சியையே அளிக்கும் ஒரு மாயை; a form of Mayāi with prepondarance of spiritual knowledge above tendency to worth. (சா.அக.)

[Skt. šuddha+vidyā > த. சுத்தவித்தை]

**சுத்தவித்தை** *šutta-vittai*, பெ.(n.) சுத்த வித்தியாதத்துவம் பார்க்க; see šutta-vittiyā-tattuvam.

**சுத்தவீரன்** *šutta-viran*, பெ.(n.) போரில் பின்வாங்காத மறவன்; ideal hero or warrior. *"ரண சுத்த வீரர்பாலும்...... திருமாது மாறா திருப்பளன்றோ" (குமரே.சத.35).*

[சுத்த(ம்)+வீரன்]

[Skt. šuddha > த. சுத்தம்]

**சுத்தன்** *šuttan*, பெ.(n.) 1. தூய்மையானவன்; one who is pure. 2. சிவன் (பிங்.); Šivan. 3. வீடுபேறடையும் நிலையிலுள்ள உயிர் (வின்.); soul ripe for liberation from births. 4. கபடமற்றவன்; sincere, guileless person. 5. மூடன் (இ.வ.); fool, idiot.

[Skt. šuddha > த. சுத்தன்]

**சுத்தா** *šuttā*, வி.எ.(adv.) ஒருமிக்க (வின்.); together.

[Mhr. sāta > த. சுத்தா]

**சுத்தாங்கமாய்** *šuttāngamāy*, வி.எ.(adv.) 1. தூய்மையாய்; cleanly. 2. முழுதும்; entirely. 3. இசையுடன் கூடாமல்; plainly, without music. *தமிழ் வேதத்தைப் பண்ணுட னோதவும் சுத்தாங்கமாக ஓதவும் வேண்டும்.*

[Skt. šuddha+anga > த. சுத்தாங்கமாய்]

**சுத்தாட்டகம்** *šuttāṭṭagam*, பெ.(n.) நிலம், நீர், நெருப்பு, காற்று என்னும் நான்கு பூதங்களும் அவற்றிற்குரிய கந்தம், சுவை, உருவம், தொடுவுணர்வு என்னும் நான்கு கணங் களுடன் கூடிய எட்டன் கூட்டம் (பிரபோத 32:47) a generic term for the eight categories comprising the four elements and their characteristics, viz., *nilam, nir, neruppu, kārru, kandam, šuvai, parišam.*

[Skt. šuddha+aṣtaka > த. சுத்தாட்டகம்]

**சுத்தாத்துமா** *šuttāttumā*, பெ.(n.) மெய்யறி வாளர் (வின்.); person of true spiritual knowledge, sage. 2. நல்லொழுக்கமுள்ளவ-ன்–ள்; person of pure character. 3. மூடன் (இ.வ.); fool.

[சுத்த(ம்)+ஆத்துமா]

[Skt. šuddha > த. சுத்தம்]

**சுத்தாத்துவிதம்** *šuttāttuvidam*, பெ.(n.) **சுத்தாத்துவைதம்** பார்க்க; see *šuttāttuvaidam.*

**சுத்தாத்துவைதம்** *šuttāttuvaidam*, பெ.(n.) உயிர் பேராதனுடன் இரண்டறக் கலந்து இன்பம் துய்க்கும் நிலை; inseparable union of the individual soul with šivam, obtaining supreme bliss.

[Skt. šuddha+dvaita > த. சுத்தாத்துவைதம்]

**சுத்தாத்வா** *šuttātvā*, பெ.(n.) விந்து விலுண்டான உலகம் (சி.சி.1:57, சிவாக்.); the macrocosm resulting from the *vindu*, as a channel of pure grace.

*[**Skt.** suddha+adhvan > த. சுத்தாத்வா]*

**சுத்தாதாயம்** *šuttādāyam*, பெ.(n.) **சுத்தலாபம்** பார்க்க; see *šutta-lābam*.

*[**Skt.** šuddha > த. சுத்தம்+ஆயம்]*

**சுத்தாந்தம்** *šuttāndam*, பெ.(n.) அரசியின் அரண்மனை (யாழ்.அக.); royal zenana, queen's apartments.

*[**Skt.** šuddhānta > த. சுத்தாந்தம்]*

**சுத்தாவத்தை** *šuttāvattai*, பெ.(n.) 1. ஐவகை நிலை (அவத்தை)யினதாய், மலம் நீக்கிப் பிறவியற்று உயிர் தூய்மையாகும் நிலை (சி.சி.4:27); a condition of the soul in which it is purified and freed from births, of five kinds.

*[**Skt.** šuddha+ava+sthā > த. சுத்தாவத்தை]*

**சுத்தான்னம்** *šuttāṉṉām*, பெ.(n.) வெறுஞ் சோறு; cooked rice, pure and simple. *"சுத்தான்னஞ் சிறப்ப வூட்டி" (குற்றா. தல. திருமால். 121).*

**த.வ. வெறுஞ்சோறு**

*[**Skt.** šuddha+anna > த. சுத்தான்னம்]*

**சுத்தான்னம்** *šuttāṉaṉdam*, பெ.(n.) தூய அறிவு; perfect knowledge.

*[**Skt.** šuddha-ā-naṉda > த. சுத்தானந்தம்]*

**சுத்தானந்தப்பிரகாசம்** *šuttāṉanda-p-pirakāšam*, பெ.(n.) தமிழிலுள்ள ஒரு நாட்டிய நூல் (சிலப். பக். 78, ft.); a Tamiḷ treatise on dancing.

**சுத்தி**[1] *šutti*, பெ.(n.) 1. மன மொழி மெய்களில் மாசின்மை; cleanliness, purity, as in thought, word or deed. *"சுத்தியைத் தானுடை ...... சித்தியை" (திருநூற். 29).* 2. புறமதத்தாரை இந்துமதத்திற் சேர்க்குங் காற் செய்யும் சடங்கு; purificatory ceremony of converting non-Hindus to Hinduism. 3. மருந்து முதலியவற்றின் குற்றநீக்குகை; purification as of crude matter. 4. வயிரக் குணங்களுள் ஒன்று (சிலப். 14:181, உரை); a quality of diamond.

*[**Skt.** šuddhi > த. சுத்தி[2]]*

**சுத்தி**[2]**-த்தல்** *šutti-*, 4 செ.குன்றாவி.(v.t.) புடம் வைத்தல் (தைலவ. தைல. 109); to calcine medicine, refine metal.

*[**Skt.** šuddhi > த. சுத்தி >சுத்தி[3]-.]*

**சுத்திகரம்** *šutti-garam*, பெ.(n.) தூய்மை செய்கை (வின்.); purifying, purification.

*[**Skt.** šuddhikara > த. சுத்திகரம்]*

**சுத்திகரி-த்தல்** *šuttikari-*, 4 செ.குன்றாவி.(v.t.) தூய்மையாக்குதல்; to purify, cleanse, correct.

*[**Skt.** šuddhikara > த. சுத்திகரம்>சுத்திகரி-.]*

**சுத்திகரிப்பு** *šuttikarippu*, பெ.(n.) தூய்மை செய்கை; purification.

*[ சுத்திகரி >சுத்திகரிப்பு]*

**சுத்திகாதனம்** *šuttigādaṉam*, பெ.(n.) சுவத்திகாசனம் பார்க்க; see šuvattikā šanam. *"சுத்திகாதனத் தமர்ந்து" (திருக் காளத். பு, 18:22).*

*[**Skt.** svastikāsanas > த. சுத்திகாதனம்]*

**சுத்திகாரசதம்** *šuttikā-rašadam*, பெ.(n.) இல்பொருள் (வாசுதேவ மனனம், பக். 10); non-existent thing, as silver in conch-shell.

*[**Skt.** šuktikā-rajata > த. சுத்திகாரசதம்]*

**சுத்திசெய்-தல்** *šutti-šey-*, 1. செ.கு.வி.(v.t.) 1. தூய்மைப்படுத்துதல்; to purify, cleanse, sanctify. 2. பொன் முதலிய மாழைகளைப் புடமிடுதல்; to refine, sublimate.

3. மருந்துக்காக நஞ்சு முதலியவற்றைத் தூய்மை செய்தல்; to purify drugs for medicinal purposes. 4. மந்திர முதலிய வற்றால் தூய்மை செய்தல் (வின்.); to lustrate.

*[சுத்தி+செய்-,]*

**[Skt.** *šuddhi > த. சுத்தி]*

**சுத்திபத்திரம்[1]** *šutti-pattiram,* பெ.(n.) பிழைத்திருத்தக் குறிப்பு; corrigenda.

**[Skt.** *šuddhi+patra > த. சுத்திபத்திரம்]*

**சுத்திபத்திரம்[2]** *šutti-pattiram,* பெ.(n.) குற்றவாளியல்லன் என்றாவது அறம் செய்ததால் பழி நீங்கிவிட்ட தென்றாவது காட்டும் ஆவணம் (சுக்கிரநீதி, 94); document showing either that the accused in innocent or has been expiated by the performance of *prāya-c-cittam.*

**[Skt.** *suddhipatra > த. சுத்திபத்திரம்]*

**சுத்தீகரணம்** *šuttī-karaṇam,* பெ.(n.) தூய்மையாக்குகை; purification.

**[Skt.** *šuddhikaraṇa > த. சுத்தீகரணம்]*

**சுத்தை** *šuttai,* பெ.(n.) 1. பத்தாம் நாள் (தசமி) பிற்கூறும், பதினோராம் நாளும், (ஏகாதசி), பன்னிரண்டாம் நாளின் (துவாதசி) முற்கூறும் அமைந்த நாளில் வரும் பதினோரமை (ஏகாதசி); the eleventh titi occurring on a day which commences with the tenth titi and ends with the twelth titi. *"ஏய்ந்த பத்தாந் திதியொடும் பன்னிரண்டாந் திதியொடுந் தொட்டிரண்டு பாலுந் தோய்ந்திடு மேகாதசிக்குச் சுத்தையென்பர்" (ஏகாதரிபு. கால. 19.)* 2. தூய்மையானவள் (சி.சி.1:19, சிவாக்.); pure spotless woman.

**[Skt.** *šuddhā > த. சுத்தை]*

**சுத்தோதகசமுத்திரம்** *šuttōtaga-šamuttiram,* பெ.(n.) நன்னீர்க்கடல்; ocean of fresh water.

**[Skt.** *šuddhōdakasamudra > த. சுத்தோதக சமுத்திரம்]*

**சுத்தோதகம்** *šuttōtagam,* பெ.(n.) நன்னீர் (யாழ். அக)) ; fresh, pure water.

**[Skt.** *šuddha+udaka > த. சுத்தோதகம்]*

**சுத்தோதனன்** *šuttōdaṉaṉ,* பெ.(n.) புத்தரின் தந்தை; Buddha's father.

**[Skt.** *suddhōdana > த. சுத்தோதனன்]*

**சுத்தோபவாசம்** *šuttōbavāšam,* பெ.(n.) முழுப்பட்டினி; absolute fasting, total abstinence from food, as a religious observance.

**[Skt.** *šuddha+upa-vāsa > த. சுத்தோப வாசம்]*

**சுதகம்** *šudagam,* பெ.(n.) குறைவு; loss, fall, omission. *"அக்கரச்சுதகம்" (மாறனலங். 277).*

**[Skt.** *cyutaka > த. சுதகம்]*

**சுதகேவலி** *šuda-kēvali,* பெ.(n.) முழு மெய்யறிறவு பெற்ற சமண மேலோர்; a class of Jaina monks who have attained perfect knowledge. *"சொல்லா னிறைந்த சுதகேவலி சென்ற மார்க்கம்" (மேருமந். 1:4).*

**[Skt.** *šruta-kēvali > த. சுதகேவலி]*

**சுதந்தரக்காணி** *šudandara-k-kāṇi,* பெ.(n.) உரிமை நிலம் (வின்.); hereditary tenement, property held in absolute ownership.

*[சுதந்தரம்+காணி]*

**[Skt.** *sva-tantra > த. சுதந்தரம்]*

**சுதந்தரக்காரன்** *šudandara-k-kāraṉ,* பெ.(n.) சொத்து முதலியவற்றுக்கு உரிமையுடையவன் (இ.வ.); owner; heir; claimant; one who enjoys any property, as of right; one who has a right to emoluments, as in temple.

*[சுதந்தரம்+காரன்]*

**[Skt.** *sva-tantra > த. சுதந்தரம்]*

**சுதந்தரத்திட்டம்** *śudandara-t-tiṭṭam*, பெ.(n.) 1. களமடிப்பதற்குமுன் நிலவுடைமை யாளருக்குச் சேரவேண்டிய உரிமை (R.T.); certain fees in kind received by mirasdars before threshing. 2. சிற்றூர் ஊழியக்காரர் பெறுதற்குரிய உரிமை; fee or perquisite of the village servants, musicians and the like. 3. கோயில்வேலை சிற்றூர்வேலை செய்வோர்க்குரிய உரிமைப் பேறுகளைக் குறிக்கும் பட்டிகை (C.G.); a list which gives the perquisites of the servants of a village or temple.

*[சுதந்தரம்+திட்டம்]*

*[Skt. sva-tantra > த. சுதந்தரம்]*

**சுதந்தரம்** *śudandaram*, பெ.(n.) 1. தலைமுறையுரிமை; in heritance, hereditary right. 2. உரிமைப்பேறு; perquisite, benefit, share, allotment, customary fee, emoluments. *கோயிலில் அவனுக்குச் சுதந்தர முண்டு.* 3. தன்னார்வம், விடுதலை; liberty, independence. *"பந்தமுறுமுயிர் சுதந்தரமிலி" (திருபோ. சந். பிள்ளைத். செங். 4).*

*[Skt. sva-tantra > த. சுதந்தரம்]*

**சுதந்தரவறிவு** *śudandara-vaṟivu*, பெ.(n.) இயற்கைப் பேரறிவு (வின்.); perfect innate wisdom, as of God.

*[சுதந்தரம்+அறிவு]*

*[Skt. sva-tantra > த. சுதந்தரம்]*

**சுதந்தரவாளி** *śudandara-v-āḷi*, பெ.(n.) சுதந்தரன், 2 பார்க்க; see śudandaran 2. *"பிறந்தபிள்ளை எனக்குச் சுதந்தரவாளியா யிருக்கிறான்" (பைபிள். ஆதி. 15:3).*

*[சுதந்தரம்+ஆளி]*

*[Skt. sva-tantara > த. சுதந்தரம்]*

**சுதந்தரன்** *śudandaraṉ*, பெ.(n.) 1. தன்னுரிமை யுடையவன் (சுவாதீனன்); free, independent agent. 2. சொத்தின் உரிமையாளன்; heir, lawful inheritor.

*[Skt. sva-tantara > த. சுதந்தரன்]*

**சுதந்தரி-த்தல்** *śudandari-*, 4 செ.கு.வி.(v.i.) 1. சொத்து முதலியவற்றின் உரிமை பெறுதல் (வின்.); to inheriti, to be heir to. 2. தன்வயத்தனாயிருத்தல்; to be independent, absolute. *"சுதந்தரித் தொளிசெய் யொளியே" (அருட்பா.* vi, நடராஜபதி. 5).

*[Skt. sva-tantra > த. சுதந்தரன் > சுதந்தரி > சுதந்தரி-.]*

**சுதந்தன்** *śudantaṉ*, பெ.(n.) கூத்தாடி (சங்.அக.); dancer, player, actor.

*[Skt. su-tantra > த. சுதந்தன்]*

**சுதந்தி** *śudandi*, பெ.(n.) 1. வடமேற்றிசைப் பெண்யானை (வின்.); female elephant of the north-west quarter, mate of puṣpadanta. 2. பெண்யானை (சது.); female elephant.

*[Skt. su-dantī > த. சுதந்தி]*

**சுதந்திரகருத்தா** *śudandira-karuttā*, பெ.(n.) 1. இயற்றுதற்கருத்தா (பி.வி.10); direct agent of an action. 2. **சுதந்தரன் 1** பார்க்க; see *śudandiraṉ*, 1.

*[Skt. sva-tantra > த. சுதந்திரம்+கருத்தா]*

**சுதந்திரம்** *śudandiram*, பெ.(n.) **சுதந்தரம்** பார்க்க; see *śudandaram*.

**சுதந்திரன்** *śudandiraṉ*, பெ.(n.) **சுதந்தரன்** பார்க்க; see *śudandaraṉ*.

**சுதந்தை** *śudandai*, பெ.(n.) உரிமைப்பேறு (வின்.); right, privilege.

*[Skt. svatantra-tā > த. சுதந்தை]*

**சுதநெறி** *śuda-neṟi*, பெ.(n.) சமணர்களின் மறைநூல்களில் கூறப்பட்ட நெறி; path laid down in Jaina sacred books. *"சுதநெறி முறைமையு மறிவான்" (நீலகேசி. 64).*

*[சுதம்+நெறி]*

*[Skt. cyuta > த. சுதம்]*

**சுதம்¹** *šudam*, பெ.(n.) 1. அழிவு; destruction, loss. *"சுதமுறு முலக மெல்லாம்" (ஞானவா. வீம. 1).* 2. இறங்குகை (சூடா.); descent, decline.

த.வ. நசிவு

*[Skt. cyuta > த. சுதம்]*

**சுதம்²** *šudam*, பெ.(n.) 1. சமயச் சார்புடைய நூல் (பரமாகமம்); sacred books. *"சுதமொழி கேண்மின்" (திருநூற். 52).* 2. **சுருதஞானம்** பார்க்க; see *šuruda-ñānam. "கடல் போற்ற சுதங்க ணிறைந் தனவே" (சீவக. 3038).* 3. முறைமை (வின்.); method, order.

த.வ. திருப்பொத்தகம்

*[Skt. šruta > த. சுதம்]*

**சுதர்சனாழ்வான்** *šudarsanālvān*, பெ.(n.) சக்கரத்தாழ்வார்; *Visnu's* discus.

*[சுதர்சனம்+ஆழ்வான்]*

*[Skt. su-daršana> த. சுதர்சனம்]*



**சுதர்மான்** *šudarmān*, பெ.(n.) சோழ நாட்டில் வாழும் உடையார்மரபினருள் ஓர் உட்பிரிவினர் (G.Tp.D.I. 109).; a sub-division of the *Udaiyar* caste living in Trichinopoly and Tanjore district.

*[Skt. sudharma > த. சுதர்மான்]*

**சுதர்மை** *šudarmai*, பெ.(n.) சுதன்மை பார்க்க; sudhanmai.

*[Skt. sudharmā > த. சுதர்மை]*

**சுதராய்¹-த்தல்** *šudarāy-*, 1 செ.கு.வி.(v.t.) திடப்படுதல்; to gain strength.

*[Mhr. sutarā>த. சுதராய் >சுதராய்த்தல்]*

**சுதராய்²-த்தல்** *šudarāy-*, 4 செ.கு.வி.(v.t.) திறமையாக நடத்துதல்; to manage creditably, accomplish.

த.வ. திறவினையாடல்

*[Mhr. சுதராய்¹-த்தல் >சுதராய்²-த்தல்]*

**சுதரிசனம்¹** *šudsarišanam*, பெ.(n.) 1. திருமாலின் சக்கரம் (பிங்.); discus weapon of Visnu. 2. அழகு (வின்.); beauty, charming appearance. 3. கண்ணாடி (வின்.); looking-glass.

*[Skt. su-daršana > த. சுதரிசனம்]*

**சுதரிசனம்²** *šudarišanam*, பெ.(n.) தேவர் தலைவன் இந்திரனின் தலைநகர், அமராவதி (சங்.அக.); Indra's capital.

*[Skt. sudaršana > த. சுதரிசனம்]*

**சுதருமம்¹** *šudarumam*, பெ.(n.) நல்லறம்; virtuous deeds of superior excellence.

*[Skt. su-dharma > த. சுதருமம்]*

**சுதருமம்²** *šudarmam*, பெ.(n.) அறநூல் கூறியபடி நடத்தற்குரிய அவரவர் செயல்; one's own duties, as enjoined by scriptures. 2. இயல்பு; nature, natural state.

*[Skt. sva-dharma > த. சுதருமம்]*

**சுதலம்** *šudalam*, பெ.(n.) கீழேழுலகங்களுள் மூன்றாவது (சூடா.); one of the nether-worlds, third of *kīl-ēl-ulagam.*

*[Skt. su-tala > த. சுதலம்]*

**சுதலன்** *šudalan*, பெ.(n.) இலவங்க வகுப்பைச் சேர்ந்த மரவகை (L.); penninerved-alternate

long-papery-rusty-downy elliptic-acuminate-leaved cinnamon, lance-Phoebe *paniculata*.

*[Skt. su-dala > த. சுதலன்]*

**சுதன்** *šudaṉ*, பெ.(n.) மகன் (பிங்.); son. *"புரூரவாவினைத்தஞ் சுதனெனும்படி தோற்றுவித்தனர்" (பாரத. குருகுல. 9).*

*[Skt. suta > த. சுதன்]*

**சுதன்மம்**[1] *šudaṉmam*, பெ.(n.) **சுதருமம்**[1] பார்க்க; see *šudarumam*[1].

**சுதன்மம்**[2] *šudaṉmam*, பெ.(n.) **சுதனம்**[2] (பிங்.) பார்க்க; see *šudaṉam*[2].

**சுதன்மம்**[3] *šudaṉmam*, பெ.(n.) **சுதன்மை** (சூடா.) பார்க்க; see *šudaṉmai*.

**சுதன்மை** *šudaṉmai*, பெ.(n.) இந்திரனது ஓலக்க மண்டபம்; Indra's presence chamber. *"சுதன்மையினு முதன்மைபெறத் தொடங்கினானே" (பாரத. இராசசூய. 6).*

**த.வ. ஓலக்கமண்டபம்**

*[சுதர்மை > சுதன்மை]*

**சுதனம்**[1] *šudaṉam*, பெ.(n.) பெரும்பேறு; invaluable treasure. *"சுதனமாஞ் சிவபத்தி" (சிவரக. சுகமுனி. 39).*

*[Skt. su-dhana > த. சுதனம்]*

**சுதனம்**[2] *šudaṉam*, பெ.(n.) கருவி (திவா.); weapon.

*[Skt. sūdana > த. சுதனம்]*

**சுதா**[1] *šudā*, பெ.எ.(adj.) தன்னடைவான; one's own, voluntary, spontaneous. *"சுதாசாட்சி" (வின்.).*

*[Skt. svataḥ+ > த. சுதா]*

**சுதா**[2] *šudā*, பெ.(n.) தேவாமிழ்தம்; ambrasia.

*[Skt. sudhā > த. சுதா]*

**சுதாகரன்** *šudākaraṉ*, பெ.(n.) திங்கள் (அமிர்தகிரணன்) (பிங்.); moon, as nectar-rayed. *"சிந்தூர பார்வதி சுதாகர" (திருப்புகழ்த். 31).*

**த.வ. நிலவன், நிலவு**

*[Skt. sudhā-kara > த. சுதாகரன்]*

**சுதாசாட்சி** *šudā-šāṭci*, பெ.(n.) அழைப்பாணையில்லாத சான்று (இ.வ.); witness appearing in court without legal summons.

*[Skt. svatas+sākṣin > த. சுதாசாட்சி]*

**சுதாரி-த்தல்** *šudāri-*, 4 செ.கு.வி.(v.t.) **சுதராய்**[1]**-த்தல்** (வின்.) பார்க்க; see *šudarāy*[1]-.

*[Mhr. சுதராய் >சுதாரி-.]*

**சுதாவாய்** *šudā-v-āy*, வி.எ.(adv.) 1. தானாகவே; of one's own accord, spontaneously, independently. *'அவன் அந்தக் காரியத்தைச் சுதாவாய்ச் செய்து முடித்தான்'.* 2. **சுதாவில் – 2** பார்க்க; see *šudāvil-2*.

*[Skt. svataḥ > த. சுதாவாய்]*

**சுதாவில்** *šudāvil*, வி.எ.(adv.) 1. **சுதாவாய்**[1] பார்க்க; see *šudā-v-āy*[1]. 2. நேரில்; in person. *சுதாவில் அவரைப் பார்த்தேன் (இ.வ.)*

**சுதி** *šudi*, பெ.(n.) இசையைச் சிறப்பிக்க அதனுடன் ஒத்தெழுப்பப்படும் துணையொலி; pitch of tune, key note.

*[Skt. šruti > த. சுதி]*

**சுதிக்கியானம்** *šudi-k-kiyāṉam*, பெ.(n.) இசைக்கருவியில் பல பண்திறங்களின் ஒருங்கிசைவை அமைக்கும் அறிவு (வின்.); knowledge of harmony in music.

*[Skt. šruti+jñāna > த. சுதிக்கியானம்]*

**சுதிகாரன்** *šudi-kāraṉ*, பெ.(n.) பண்கூட்டுபவன்; one who sounds the bass or the key note in a concert.

*[Skt. šruti > த. சுதி+காரன்]*

**சுதிகூட்டு-தல்** *šudi-kūṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) **சுருதி கூட்டு-தல்** (வின்.) பார்க்க; see *šurudi-kūṭṭu-*.

*[Skt. šruti > த. சுதி+கூட்டு-.]*

**சுதிகூடிவா-தல்** *šudi-kūḍi-vā-*, 18 செ.கு.வி.(v.i.) அணியமாதல்; to become ready.

*[Skt. šruti > த. சுதி+கூடிவா = கூடிவருதல் கூடிவா-தல்.]*

**சுதிப்பெட்டி** *šudi-p-peṭṭi*, பெ.(n.) சுருதிப்பெட்டி பின்புறம் உள்ள மடிப்புடைய துருத்தியினால் காற்றை உட்செலுத்திச் சீராக வெளி விடுவதன் வாயிலாக குரல் அளவைக் கணிக்கும் இசைப்பெட்டி, a musical instrument which is used for setting the sruti.

**த.வ. இசைப்பெட்டி**

**சுதிபிடி-த்தல்** *šudi-piḍi-*, 4 செ.கு.வி.(v.i.) குரல் ஓசை இடமறிந்து இசைக்கருவியில் விரல் பிடித்தல்; to touch the proper keynote. 2. பண்ணோடு (சுதியோடிழைத்து) வருதல்; to accord with the keynote.

*[Skt. šruti > த. சுருதி >சுதி +பிடித்தல்]*

**சுதிமதிகெட்டவன்** *šudi-madi-keṭṭavaṉ*, பெ.(n.) கேள்வியும் அறிவும் இல்லாதவன் (வின்.); fool, as having neither knowledge nor commonsense.

*[சுதி+மதிகெட்டவன்]*

*[Skt. šruti > சுருதி > த. சுதி]*

**சுதிமுறுக்கு-தல்** *šudi-muṟukku-*, 5 செ.கு.வி. (v.i.) **சுதியேற்று-தல்** (இ.வ.) பார்க்க; see *šudi-y-ēṟṟu-*.

*[சுதி+முறுக்கு-,]*

*[Skt. šruti > த. சுருதி > சுதி]*

**சுதியேற்று[1]-தல்** *šūḍi-y-ērrū-*, 5 செ.கு.வி.(v.i.) இசைப் பண்ணை (சுருதி) மிகுதிப்படுத்துதல்; to raise the pitch, play on a higher pitch.

*[சுதி+ஏற்று-தல்]*

*[Skt. šruti > த. சுருதி]*

**சுதியேற்று[2]-தல்** *šudi-y-ēṟṟu-*, 5 செ.கு.வி. (v.t.) தூண்டி விடுதல்; to induce, incite, egg on. *அவனைச் சுதியேற்றிவிட்டான் (இ.வ.)*

*[சுதி+ஏற்று-,]*

*[Skt. šruti > த. சுருதி > ஏற்று-.]*

**சுதிலயை** *šudi-layai*, பெ.(n.) பண்ணோடு (சுருதியோடு) இசையொன்றுகை; harmonious blending of tunes. *சுதிலயையிலாத பண் (அறப். சத. 10).*

*[Skt. šruti+laya > த. சுருதிலயை > சுதிலயை]*

**சுதினம்** *šu-diṉam*, பெ.(n.) நல்ல நாள்; happy day; auspicious day.

**த.வ. நன்னாள்**

*[Skt. su-dina > த. சுதினம்]*

**சுதேசபோதகர்** *šudēša-bōdagar*, பெ.(n.) தேவாலயத் தலைமை மதத் தலைவர்; Indian minister of a church.

*[Skt. svadēša+bōdhaka > த. சுதேசபோதகர்]*

**சுதேசம்** *šudēšam*, பெ.(n.) சொந்த நாடு; one's own country, native land.

*[Skt. sva-dēša > த. சுதேசம்]*

**சுதேசவைத்தியம்** *šudēsa-vai-t-tiyam*, பெ.(n.) நாட்டு மருத்துவமுறை; native treatment (i.e.) treatment according to the medical science of this country. (சா.அக.)

*[Skt. sva-dēša+vaidya> த. சுதேச வைத்தியம்]*

**சுதேசி[1]** *šudēši*, பெ.(n.) தனது நாட்டிற் பிறந்து வளர்ந்தவன்; native, son of the soil.

**த.வ. தன்னாட்டான்**

*[Skt. svadēšin > த. சுதேசி]*

**சுதேசி²** *šudēši*, பெ.(n.) **சுதேசியம்** பார்க்க; see *šudēšiyam*. *இத்துணி சுதேசி.*

**சுதேசியம்** *šudēšiyam*, பெ.(n.) தன் நாட்டிற் செய்த பொருள்; native goods, indigenous manufactures.

த.வ. தன்னாட்டுப் பண்டம்

[**Skt.** *sva-dēšīya* > *த. சுதேசியம்*]

**சுதை** *šudai*, பெ.(n.) மகள் (பிங்.); daughter.

[**Skt.** *sutā* > *த. சுதை*]

**சுதோற்பத்தி** *šudōṟ-batti*, பெ.(n.) 1. பிள்ளை பெறுகை; giving birth to a child. 2. பிள்ளைப்பேறு; child birth. (சா.அக.)

**சுந்தம்** *šundam*, பெ.(n.) தூய்மை; purity. *"சுந்தமாகச் சுவடறுவீரென" (நீலகேசி. 322).*

*[சுத்தம் > சுந்தம்]*

**சுந்தரத்தாது** *šundara-t-tādu*, பெ.(n.) ஒரு வகைச் செய்நஞ்சு – துத்தபாடாணம்; a kind of arsenic compound with white vitriol as an ingredient, a sparagus racemosus. (சா.அக.)

**சுந்தரத்தோளுடையான்** *šundara-t-tōḷuḍaiyāṉ*, பெ.(n.) அழகர்கோயில் திருமால்; *Viṣṇu* at *Aḻagarkōyil*, as having beautiful shoulders. *"சுந்தரத்தோளுடையான் சுழலையினின் றுய்துங்கொலோ" (திவ். நாய்ச். 9:1).*

*[சுந்தரம்+தோளுடையான்]*

[**Skt.** *sundara* > *த. சுந்தரம்*]

**சுந்தரபாண்டியம்** *šundara-pāṇḍiyam*, பெ.(n.) மதுரை மீனாட்சி அம்மையின் தோற்றரவு (அவதாரம்)களைக் கூறுவதும், அனதாரி என்ற புலவரால் இயற்றப்பட்டதுமான தமிழ்க்காவியம்; a poem on the goddess of Madurai, by the poet A*ṉatāri*.

*[சுந்தரம்+பாண்டியம்]*

[**Skt.** *sundara* > *த. சுந்தரம்*]

**சுந்தரபாண்டியன்** *šundara-pāṇḍiyaṉ*, பெ.(n.) பாண்டிய மன்னர் பலர் கொண்டிருந்த சிறப்புப்பெயர்; title of several kings of the Pāṇḍyaṉ dynasty.

*[சுந்தரம்+பாண்டியன்]*

[**Skt.** *sundara* > *த. சுந்தரம்*]

**சுந்தரபாண்டியன்கோல்** *šundara-pāṇḍiyaṉ-kōl*, பெ.(n.) 24 அடி நீளமுள்ள ஓர் அளவுகோல்; a measuring-rod of 24 ft. *"இருபத்து நாலடியான சுந்தரபாண்டியன் கோலால் நிலமளந்து" (S.I.I.V, 168).*

*[சுந்தரம்+பாண்டியன்கோல்]*

[**Skt.** *sundara* > *த. சுந்தரம்*]

**சுந்தரபாண்டியன்தொகுதி** *šundara-pāṇḍiyaṉ-togudi*, பெ.(n.) சுந்தரப் பாண்டியனால் தொகுக்கப்பெற்ற வெற்றிவேற்கை என்னும் நூல்; the poem V*eṟṟivērkai*, compiled by š*undara-pāṇḍyaṉ*.

*[சுந்தரம்+பாண்டியன்தொகுதி]*

[**Skt.** *sundara* > *த. சுந்தரம்*]

**சுந்தரம்** *šundaram*, பெ.(n.) 1. அழகு (பிங்.); beauty, handsomeness. *"சுந்தரக் குமுதச் செவ்வாய்" (கம்பரா. மாயாசனக. 16).* 2. வண்ணம்; colour. *"சுந்தரச் சுண்ணத்து களொடு" (சிலப். 4, 42).* 3. நன்மை; goodness, excellence. *"சுந்தர நிலமிசைச் சொரிதலின்" (சீவக. 121).*

[**Skt.** *sundara* > *த. சுந்தரம்*]

**சுந்தரமூர்த்திநாயனார்** *šundara-mūrtti-nāyaṉār*, பெ.(n.) எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப்படுபவரும், தேவார ஆசிரியர் மூவருள் ஒருவரும், நாயன்மார் அறுபத்துமூவருள் சிவப்பிராமணருமான சிவனடியார்; a canonized *Ādišaiva* šaint, probably of the 8th C., one of three *Tēvāram* hymnists, one of 63.

த.வ. எழில்வடிவன்

*[சுந்தரமூர்த்தி+நாயனார்]*

*[Skt. sundara+mūrtti > த. சுந்தரம்]*

**சுந்தரர்** *šundarar*, பெ.(n.) **சுந்தரமூர்த்தி நாயனார்** பார்க்க; see *šundara-mūrtti-nāyaṉār.*

*[Skt. sundara > த. சுந்தரர்]*

**சுந்தரரேகை** *šundara-rēgai*, பெ.(n.) கையிற் காணப்படும் வரி (திருவாரூ. குற. MSS); a distinctive line in the palm.

*[Skt. sundara+rēga > த. சுந்தரரேகை]*

**சுந்தரவாழைப்பூ,** *šundara-vāḻai-p-pū*, பெ.(n.) நெடுங்கோடுகளையுடைய புடைவை வகை (உ.வ.); a kind of saree with long stripes.

*[சுதந்தரம்+வாழைப்பூ]*

*[Skt. sundara > த. சுந்தரம்]*

**சுந்தரன்** *šundaraṉ*, பெ.(n.) 1. அழகுள்ளவன்; beautiful person. *"சந்தனச் சாந்திற் சுந்தர போற்றி" (திருவாச. 4: 203).* 2. **சுந்தரேசன்** பார்க்க; see *šundarēšaṉ. "சுந்தரன் கோயில் புக்குச் சொல்லுவான்" (திருவாலவா. 16: 8).* 3. **சுந்தரமூர்த்திநாயனார்** பார்க்க; see *šundara-mūrtti-nāyaṉār. "தோணிபுரத் தோன்றலுமென் சுந்தரனும்" (பெருந்தொ. 1873).*

த.வ. எழிலன், அழகன்

*[Skt. sundara > த. சுந்தரன்]*

**சுந்தரி**[1] *šundari*, பெ.(n.) 1. அழகுள்ள பெண்; beautiful woman. *"சுந்தரி மரபிற்கொத்த தொன்மையின் றுணிவிற் றன்றால்" (கம்பரா. சூர்ப்ப. 49).* 2. வானவர்கோன் மனைவி (அக.நி.); *Indrāṇi*, queen of *Indran*. 3. கொற்றவை (துர்க்கை) (பிங்.); Durgāi. 4.மலைமகள் (பார்வதி); Pārvadi.

*[Skt. sundari > த. சுந்தரி]*

**சுந்தரி**[2] *šundari*, பெ.(n.) மூஞ்சூறு (பிங்.); grey musk-shrew.

*[Skt. cucundari > த. சுந்தரி]*



**சுந்தரேசன்** *šundarēšaṉ*, பெ.(n.) மதுரையில் கோயில்கொண்டுள்ள சிவன்; *šivaṉ* as worshipped at *Madurai*. *"சுந்தரேசன் மாயையோ தெரிந்திடாது" (திருவாலவா. 23: 8).*

த.வ. எழிலிறைவன்

*[Skt. sundarēša > த. சுந்தரேசன்]*

**சுந்தி** *šundi*, பெ.(n.) பழிதூற்றுபவர் (அக.நி.); tale-bearer, slanderer.

*[Skt. šuṇtha > த. சுந்தி]*

**சுந்தோபசுந்தநியாயம்** *šundōbašunda-niyāyam*, பெ.(n.) சுந்தன் உபசுந்தனென்ற அண்ணன் தம்பி இருவரும் திலோத்தமையை விரும்பி, அவள்பொருட்டுப் போரிட்டு மாய்ந் தாற்போல, ஒன்றனையொன்று கெடுக்கும் நெறி; *nyāya* of the two brothers *Sundaṉ* and *Upasundaṉ* who killed each other owing to their jealous love of the celestial maid *Tilōttamai*, used to denote mutual destruction. *"அவை தம்முள் ஒன்றா னொன்று அடிக்கப்பட்டுச் சுந்தோப சுந்த நியாயமாய்க் கெட்டொழியும்" (சி.போ.பா. பக். 17, சுவாமி).*

*[Skt. Sunda+Upasundanyāyā > த. சுந்தோபசுந்த நியாயம்]*

**சுந்தோபசுந்தர்** *šundōbašundar*, பெ.(n.) திலோத்தமையைக் காதலித்துத் தம்முட் போர்புரிந்து இறந்த சுந்தன், உபசுந்தன் என்ற அண்ணன் தம்பிகள் இருவர்; two demon brothers who killed each other in rivalry, both being enamoured of the beauty of the celestial maid *Tilōttamai*. *"சுந்தோப சுந்தப்பெயர்த் தொல்லையினோரு மொத்தார்" (கம்பரா. வாலிவதை. 39).*

**சுநீரம்** *šunīram*, பெ.(n.) ஒருவகை நீலக்கல்; a blue coloured precious gem jacinth. *"பதினோராவது சுநீரம்" (பைபிள், வெளி. 20: 21).*

*[Skt. su-nīra > த. சுநீரம்]*

**சுப்திபிண்டம்** *šupti-pindam*, பெ.(n.) தங்கு பிண்டம் (சீவரட். 206); embryo shrunk in size owing to menstrual discharge during the period of gestation.

*[சுப்தி+பிண்டம்]*

*[Skt. supti > த. சுப்தி]*

**சுப்பிரசன்னம்** *šuppirašannām*, பெ.(n.) 1. தெளிவு; clearness, transparency, brightness. 2. அருள்; graciousness.

*[Skt. su-prasanna > த. சுப்பிரசன்னம்]*

**சுப்பிரசுதை** *šuppira-šudai*, பெ.(n.) காட்டெருமைப்பால், திருகுகள்ளிப்பால்; milky juice of *Euphorbia tirucalli*. (சா.அக.)

**சுப்பிரதட்டம்** *šuppiradattam*, பெ.(n.) அத்தி (தைலவ. தைல. 6); fig, ficus.

**சுப்பிரதந்தி** *šuppira-tandi*, பெ.(n.) **சுதந்தி, 1** (சங்.அக.) பார்க்க; see šudandi, 1.

*[Skt. šubhradanti > த. சுப்பிரதந்தி]*

சாம்பசிவம் மருத்துவ அகரமுதலி இச்சொல்லை சுப்பிரத் திட்டம் என்று கூறுகிறது.

*[Skt. supratistha > த. சுப்பிரதட்டம்]*

**சுப்பிரதீகம்[1]** *šuppiradīgam*, பெ.(n.) எண்புற யானைகளுள் வடகீழ்த்திசை யானை; the male elephant of the north-east, one of *asta-tik-kajam*.

*[Skt. supratīka > த. சுப்பிரதீகம்]*

**சுப்பிரதீகம்[2]** *šuppiradīgam*, பெ.(n.) 1. நல்ல உறுப்புகளை (அவயவங்கள்) உடையது; being endowed with good organs. 2. கூர்மையான அறிவு; keen intellect. 3. மிக்கவொளி; great lustre. (சா.அக.)

**சுப்பிரதீபக்கவிராயர்** *šuppira-dīpa-k-kavirāyar*, பெ.(n.) 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரும், கூளப்ப நாயக்கன் காதல், விறலிவிடுதூது என்ற நூல்களின் ஆசிரியரும், வீரமாமுனிவர்க்கு உதவி புரிந்து வந்தவரும், கிறித்துவ மதத்தைத் தழுவிய வரும், தச்ச இனத்தவருமான புலவர்; a Christian convert of the carpenter's caste, assistant of Beschi, author of *Kūlappanāyakkan-kātal* and *Virali-vidu-tūdu*, 18th c.

**சுப்பிரதீபம்[1]** *šuppira-dībam*, பெ.(n.) 1. மிக்கவொளி; great lustre, dazzling brightness. 2. கூர்மையான அறிவு; keen perception, actue intellect.

*[Skt. su-pradīpa > த. சுப்பிரதீபம்[1]]*

**சுப்பிரதீபம்[2]** *šuppira-dīpam*, பெ.(n.) சுப்பிரதீகம் (திவா.) என்பதன் மறுவடிவு; corr. of *šuppira-dībam*.

*[Skt. supratīka > த. சுப்பிரதீபம்[2]]*

**சுப்பிரபேதம்** *šuppirapēdam*, பெ.(n.) சிவத்தோன்றிய நூல் இருபத்தெட்டனுள் ஒன்று (சைவச. பொது. 232); an ancient *šaivam* scripture in šanskrit, one of 28 *šivāgamam*.

*[Skt. Suprabhēda > த. சுப்பிரபேதம்]*

**சுப்பிரம்** *šuppiram*, பெ.(n.) 1. வெண்மை (பிங்.); whiteness. 2. தூய்மை; purity, spotless ness. 3. மிக்கவொளி; great lustre, brilliancy. *"குரு சுப்பிரமணியாக் கொள்" (தனிப்பா. ii, 217, 516).* 4. ஒகநிலை இருபத்தேழனுள் ஒன்று; a division of time, one of 27 yōgam, q.v. 5. முத்துக் குற்றத்தொன்று; white speck, as a flaw in pearls. *"சுப்பிரமும் திரங்கலும் உடையன உட்பட முத்து ஒன்பதினால்" (S.I.I.II, 78).*

*[**Skt.** šubhra > த. சுப்பிரம்]*

**சுப்பிரமணி** *šuppira-mani*, பெ.(n.) வயிரம் (யாழ்.அக.); diamond.

*[**Skt.** šubhra > த. சுப்பிரமணி]*

**சுப்பிரமணியதீட்சிதர்** *šubbiramaniya-ditšidar*, பெ.(n.) ஆழ்வார் திருநகரியில் வாழ்ந்தவரும், 17–ஆம் நூற்றாண்டினரும், பிரயோகவிவேகமென்னும் இலக்கண நூலின் ஆசிரியருமான பிராமணப் புலவர்; a Brahmin scholar of *Alvār-tirunagari*, 17th C., author of *pirayōga-vivēgam*, a grammatical treatise Tamil.

**சுப்பிரமணியன்** *šuppiramaniyan*, பெ.(n.) முருகக்கடவுள்; God *Murugan*.

*[**Skt.** šu-brahmanya > த. சுப்பிரமணியன்]*

*[பிராமணர்க்குக நல்லவன் என்பது பொருள்]*

**சுப்பிரமதுவா** *šuppira-maduvā*, பெ.(n.) கூவைக் கிழங்கு மாவு (மூ.அ.); flour of the *Malabar* arrow-root.

**சுப்பிரயோகம்** *šuppira-y-ōgam*, பெ.(n.) காமநோயால் உண்டாகும் ஐவகை நோய்களுள் காதலரைக் குறித்தே நினைவும் பேச்சுமா யிருக்கும் நிலை (சூடா.); a condition of love - stricken person in which he or she is wholly engrossed in thinking and talking about the object of love, one of *pañca-pānāvattai*.

*[**Skt.** suprayōga > த. சுப்பிரயோகம்]*

**சுப்பிராசி** *šuppirāši*, பெ.(n.) வேலையாள் (C.G.82); peon, servant.

*[**U.** chaprāsi > த. சுப்பிராசி]*

**சுப்பு** *šuppu*, பெ.(n.) வேற்றுமையுருபு; case ending. *"வேற்றுமையுருபுகளைச் சுப்பெனவும்" (தொல். விருத். பக். 55).*

*[**Skt.** sup > த. சுப்பு]*

**சுப்புத்தாது** *šuppu-t-tādu*, பெ.(n.) பெயரடியாகப் பிறந்த வினை (பி.வி.35, உரை); verb derived from noun.

*[**Skt.** sup+dhātu > த. சுப்புத்தாது]*

**சுபக்கம்** *šubakkam*, பெ.(n.) **சுபட்சம்** பார்க்க; see *šubatcam*.

*[**Skt.** sva-paksa > த. சுபக்கம்]*

**சுபக்கிரகம்** *šuba-k-kiragam*, பெ.(n.) வளர்பிறைத் திங்கள் குரு அறிவன், வெள்ளி (சுக்கிரன்) ஆகிய நாற்கோள்; auspicious planet, as waxing Moon, Mercury, Jupiter, Venus. *"பூருவபக்க சந்திரனுஞ் சுக்கிரனுஞ் சுபக்கிரகம்" (விதான. மரபி. 2, உரை).*

**த.வ. நற்கோள்**

*[**Skt.** šubha+graha > த. சுபக்கிரகம்]*

**சுபக்கோள்** *šuba-k-kōl*, பெ.(n.) **சுபக்கிரகம்** பார்க்க; see *šuba-k-kiragam*. *"மழைக் கோள்.... நான்குஞ் சுபக்கோ ளென்றும்" (மாறனலங். 822, உதா.).*

*[சுபம்+கோள்]*

*[**Skt.** šubha > த. சுபம்]*

**சுபகதி** *šuba-gadi*, பெ.(n.) 1. வீடுபேறு; salvation. 2. மகிழ்ச்சி; delight.

*[**Skt.** šubha+gate > த. சுபகதி]*

**சுபகரம்** *šuba-karam*, பெ.(n.) நல்லதைச் செய்வது; that which is auspicious, beneficent.

*[சுபம்+கரம்]*

*[Skt. šubha > த. சுபம்]*

**சுபகாரி** *šuba-kāri*, பெ.(n.) நல்லதைச் செய்பவன்; one who does good. *"சுபகாரி துட்டருக்கு நிட்டூரன்" (மான்விடு. 168).*

*[சுபம்+காரி]*

*[Skt. šubha> த. சுபம்]*

**சுபகாரியம்** *šuba-kāriyam*, பெ.(n.) மங்கள நிகழ்வு; (சடங்கு) good deed, auspicious event, as marriage.

*[சுபம்+காரியம்]*

*[Skt. šubha > த. சுபம்]*

**சுபகாலம்** *šuba-kālam*, பெ.(n.) நல்வேளை; auspicious or prosperous time.

*[சுபம்+காலம்]*

*[Skt. šubha > த. சுபம்]*

**சுபகிருது** *šuba-kirudu*, பெ.(n.) வியாழன் சுற்று ஆண்டு அறுபதனுள் 36–வது; the 36th year of Jupiter cycle.

*[Skt. šubha-kri > த. சுபகிருது]*

**சுபச்சம்** *šubaccam*, பெ.(n.) தூய்மையானவன்; man of purity. 2. உடல்நலமுள்ள; man of health. (சா.அக.)

**சுபசகுனம்** *šuba-šagunam*, பெ.(n.) நல்லகுறி; good omen, opp. to *aba-šagunam.*

**த.வ. நற்புட்குறி**

*[Skt. šubha +šakuna> த. சுபசகுனம்]*

**சுபசரிதம்** *šuba-šaridam*, பெ.(n.) நன்னடத்தை; good life or conduct. *"உனது சுபசரிதமுமிங்கொத்தவேணும்" (பிரபோத. 46: 20).*

**த.வ. நன்னடக்கை**

*[Skt. šubha +carita> த. சுபசரிதம்]*

**சுபசரிதை** *šuba-šaridai*, பெ.(n.) மங்கலவரவு; auspicious arrival. *"சுபசரிதை சோழனெதிர்கண்டனன்" (சேக்கிழார். பு, 60).*

*[Skt. šubha+carita > த. சுபசரிதம்> சுபசரிதை]*

**சுபசுவீகரணம்** *šuba-šuvīkaranam*, பெ.(n.) **சுபசுவீகாரம்** பார்க்க; see *šuba-šuvīkāram.*

**சுபசுவீகாரம்** *šuba-šuvīkāram*, பெ.(n.) இறப்புச் சடங்கின் இறுதியில் நல்ல நிகழ்ச்சிகளை மேற்கொள்வதற் கறிகுறியாக செய்யுஞ் சடங்கு; ceremony of resuming auspicious practices at the close of funeral ceremonies.

**த.வ. நன்மேற்செயல்**

*[Skt. šubha+svīkāra > த. சுபசுவீகாரம்]*

**சுபசூசகம்** *šuba-šūšagam*, பெ.(n.) மங்கலத்தைக் காட்டுங்குறி; auspicious sign, favourable omen. *"சுபசூசகமான கருமங்களையெல்லாம் தாமே அருகிலிருந்து நடத்திவைத்து" (குருபரம். 167).*

**த.வ. மங்கலக்குறி**

*[Skt. šubha+ sūcaka> த. சுபசூசகம்]*

**சுபசூசனம்** *šuba-šūšanam*, பெ.(n.) **சுபசூசகம்** (இ.வ.) பார்க்க; see *šuba-šūšagam.*

**சுபசோபனக்கை** *šuba-šōbana-k-kai*, பெ.(n.) வலக்கையின் பெருவிரலொழிந்த மற்ற விரல் நான்கினாலும் இடக்கைப் பெருவிரலைப் பிடித்து, அவ்விடக்கையின் மற்ற விரல்களை வலக்கை விரல்களின் நுனியொடு பொருந்தவைக்கும் இணைக்கை வகை. (பரத.பாவ.60.); gesture with two hands in which the tips of the fingers of the right touch the left thumb, and the tips of fingers of the left touch those of the right.

*[சுபசோபனம்+கை]*

*[Skt. šubha+ šōbhana> த. சுபசோபனம்]*

**சுபசோபனம்** *šuba-šōbaṉam*, பெ.(n.) மங்கலச் செய்தி; glad news, happy event, as the birth of a child. *"தொல்புவி செழிக்கு நலமுஞ் சுபசோபனங்களும்" (குமரே. சத. 5).*

*[**Skt.** šubha+šōbhana > த. சுபசோபனம்]*

**சுபட்சம்** *šubaṭcam*, பெ.(n.) 1. சொற்போரில் தன்கொள்கை; one's own side in a debate or discussion, views or doctrines of one's own sect or party, opp. to *para-paṭcam.* 2. சிவஞானசித்தியாரில் சிவசமயத்திற்குரிய கொள்கையை உணர்த்தும் பகுதி; the portion of *šiva-ñāṉa-šttiyār* that enunciates the principles of the šaivam sect.

**த.வ. தற்பக்கக்கொள்கை**

*[**Skt.** sva-pakṣa > த. சுபட்சம்]*

**சுபடன்** *šubaḍaṉ*, பெ.(n.) குறிக்கோளில் மாறா வீரன்; ideal hero or warrior. *"போர்க்களத்தி லெவனே சுபடனா மென்ன" (ஞானவா. நிருவாண. 48).*

**த.வ. திறமறவன்**

*[**Skt.** su-bhaṭa > த. சுபடன்]*

**சுபத்தலம்** *šuba-t-talam*, பெ.(n.) தேவாலயம் (யாழ்.அக.); temple.

*[சுப+தலம்]*

*[**Skt.** šubha > த. சுபம்]*

*[ த. தலம் >**Skt.** štala-]*

**சுபத்தன்** *šubattaṉ*, பெ.(n.) மகிழ்ச்சி யடைந்தவன்; happy person. *"துன்பமெலா மற நீங்கிச் சுபத்தராய்" (தேவா. 710, 4).*

*[**Skt.** subha-stha > த. சுபத்தன்]*

**சுபத்தானம்** *šuba-t-tāṉam*, பெ.(n.) கணியச் சக்கரத்தில் நல்லதைக் குறிக்கும் ஓரை; auspicious or favourable sign of the zodiac relative to the ascendant in horoscope.

*[**Skt.** šubha+sthāna > த. சுபத்தானம்]*

**சுபத்திரை** *šuba-t-tirai*, பெ.(n.) 1. அருச்சுனன் மனைவி; a wife of Arjuṉaṉ. *"சுபத்திரையுந் தோழியர்கள் சூழ வந்தாள்" (பாரத. அருச்சுனன்றீர். 54).* 2. கறுப்பு மாடு; black cow. *"கரிய சுபத்திரை" (தணிகைப்பு. அகத்திய. 486).*

*[**Skt.** subhadrā > த. சுபத்திரை]*

**சுபதம்** *šubadam*, பெ.(n.) 1. நன்மையைக் கொடுப்பது; that which gives happiness. *"சுபதக்ரம முறுநெறியே" (திருவாலவா. 28, 49).* 2. அரசமரம் (சங்.அக.); pipal tree.

*[**Skt.** šubha-da > த. சுபதம்]*

**சுபதினம்** *šuba-diṉam*, பெ.(n.) நன்னாள்; auspicious day.

*[**Skt.** subha+dina > த. சுபதினம்]*

**சுபந்தம்** *šubandam*, பெ.(n.) உருபேற்ற பெயர்ச்சொல்; inflected noun. *"தத்தி துங்காரக மாஞ் சுபந்தம்" (பி.வி. 42).*

*[**Skt.** sub-anta > த. சுபந்தம்]*

**சுபபந்துவராளி** *šuba-pandu-varāḷi*, பெ.(n.) பண் இராக வகை, (பரத. ராக. 103); a specific melody-type.

*[**Skt.** šubha + To. pantu+Skt. varāli> த. சுபம்+பந்துவராளி]*

**சுபம்[1]** *šubam*, பெ.(n.) 1. மங்கலம்; prosperity, auspiciousness. *"சுபமாக்கு மசுபந் தன்னை" (ஞானவா. முமுட்சு. 20).* 2. பேறு; happiness, felicity, spiritual bliss. *"துன்பெலா மறநீங்கிச் சுபத்தராய்" (தேவா. 710, 4).* 3. வீடுபேறு, முத்தி (பிங்.); final deliverance. 4. நன்மை; goodness, excellence. *"சுபசரிதன்" (பதினொ. ஆளு. திருக்கலம். 34).* 5. மங்கலவினை (பிங்.); good deed, auspicious event. 6. அழகு (சூடா.); beauty. 7. ஓகநிலை இருபத்தேழனுள் ஒன்று; (Astron.) a division of time, one of 27 yōgam.

*[**Skt.** šubha > த. சுபம்]*

**சுபம்²** *šubam*, பெ.(n.) வெண்மை (சூடா.); whiteness.

*[Skt. šubhra > த. சுபம்]*

**சுபம்பாடு-தல்** *šubam-pāḍu-*, 5 செ.கு.வி.(v.i.) நல்ல நிகழ்ச்சியின் முடிவில் மங்கலம் பாடுதல் (இ.வ.); to sing a song of benediction, at the close of an auspicious occasion.

*[சுபம்+பாடு-,]*

*[Skt. šubha > த. சுபம்]*

**சுபமங்களம்** *šuba-maṅgaḷam*, பெ.(n.) வாழ்த்துப் பாட்டு; benedictory utterance in a song. *சுபமங்களம் பாடுக (உ.வ.).*

*[சுபம்+மங்களம்]*

*[Skt. šubha> த. சுபம்]*

**சுபமத்து** *šubam-attu*, பெ.(n.) கடிதம் முதலியவற்றின் முதலிறுதிகளில் 'மங்கல முண்டாகுக' என வாழ்த்துதலைக் குறிக்கும் ஒரு தொடர்மொழி; an expression meaning Let there be auspiciousness, used at the beginning or end of a writting.

**த.வ.மங்கலமாகுக!**

*[Skt. šubha+astu > த. சுபமஸ்து> த.சுபமத்து]*

**சுபமிருத்து** *šuba-miruttu*, பெ.(n.) முதிர்ந்த அகவையில் நேரும் நல்ல சாவு; natural death of a person at ripe old age.

*[Skt. šubha +mrtym> த. சுபமிருத்து]*

**சுபமுகூர்த்தம்** *šuba-mugūrttam*, பெ.(n.) திருமணத்திற்குரிய நல்வேளை; auspicious time, as for marriage.

**த.வ. நன்முழுத்தம்**

*[Skt. šubha +muhūtā> த. சுபமுகூர்த்தம்]*

**சுபயோகம்** *šuba-yōgam*, பெ.(n.) 1. சிற்சில கிழமைகளோடு (வாரங்களோடு) சிற்சில விண்மீன்களேனும், நிலவுநாள் (திதி)களேனும் இணைவதனால் நன்மை விளைவிப்பதாகக் கருதப்படும் ஒகம் (விதான. குணாகுண. 9-14); (சோதிட. சிந். 45); conjuction of a week-day with a particular nakṣatra or titi, considered auspicious. 2. அரியபேறு; rare luck. *"சக்ரதரபாக்ய மான சுபயோகமும்" (தாயு. அகிலாண். 1).*

**த.வ. நற்பேறு, நல்வேளை**

*[Skt. šubha+yōga> த. சுபயோகம்]*

**சுபவசனம்** *šuba-vašaṉam*, பெ.(n.) **சுபவாக்கு** பார்க்க; see *šuba-vākku.*

*[Skt. šubha+vacana > த. சுபவசனம்]*

**சுபவாக்கியம்** *šuba-vākkiyam*, பெ.(n.) **சுபவாக்கு** பார்க்க; see *šuba-vākku.*

*[Skt. šubha+vākya > த. சுபவாக்கியம்]*

**சுபவாக்கு** *šuba-vākku*, பெ.(n.) நல்லகுறியான வாக்கு; auspicious words; oracular indication of good.

**த.வ. நற்சொல்**

*[Skt. šubha+vāc > த. சுபவாக்கு]*

**சுபவாசகம்** *šuba-vāšagam*, பெ.(n.) **சுபவாக்கு** பார்க்க; see *šuba-vākku.*

*[Skt. šubha +vācaka> த. சுபவாசகம்]*

**சுபவாதனை** *šuba-vādaṉai*, பெ.(n.) உயிர் பேரின்பத்துள் அழுந்துகை (வின்.); blissful experience of the soul, spiritual enjoyment.

*[Skt. šubha+vāsanā > த. சுபவாதனை]*

**சுபன்** *šubaṉ*, பெ.(n.) நன்மையை விளைவிக்குங் கோள்; planet that brings good fortune.

*[Skt. šubha > த. சுபன்]*

**சுபன்னன்** *šubaṉṉaṉ*, பெ.(n.). அழகிய சிறகுகளையுடைய கலுழன்; kite *(garuḍaṉ)*, as having beautiful wings.

*[Skt. su-parṇa > த. சுபன்னன்]*

**சுபா** *šubā*, பெ.(n.) நாட்டின் ஒரு பகுதி (W.G.491). district or province, especially of the Moghul empire.

**த.வ. தேயப்பகுதி**

*[Ar. subā > த. சுபா]*

**சுபாங்கி** *šubāṅgi*, பெ.(n.) கருத்தைக் கவரும் உடற்கூறு உடையவள் (சங்.அக.); woman of fine features or beautiful limbs.

**த.வ. எழிலுறுப்பன்**

*[Skt. šubhāṅgī > த. சுபாங்கி]*

**சுபாங்கை** *šubāṅgai*, பெ.(n.) **சுபாங்கி** பார்க்க; see *šubāṅgi*.

*[Skt. subhāṅgā > த. சுபாங்கை]*

**சுபாசுபம்** *šubāšubam*, பெ.(n.) நன்மை தீமைகள் நிகழுங் காலம் (யாழ்.அக.); occasions of weal and woe.

*[Skt. subha+a-šubha > த. சுபாசுபம்]*

**சுபாடிதம்** *šubāḍidam*, பெ.(n.) பெரியோர்களின் சிறந்த கட்டுரை; sayings of great men, generally inverse. *"வெண்டாமரையில் தேச சுபாடிதபயனை மறந்தனள்" (சேக்கிழார். பு. 93).*

*[Skt. subhāṣita > த. சுபாடிதம்]*

**சுபாதார்** *šubādār*, பெ.(n.) நாட்டதிகாரி (R.T.); governor of a province.

*[Ar. subā > த. சுபாதார்]*

**சுபாதிசயம்** *šubādišayam*, பெ.(n.) நற்செய்தி (யாழ்.அக.); good news.

*[Skt. šubha+ati-šaya > த. சுபாதிசயம்]*

**சுபாபாங்கை** *šubābāṅgai*, பெ.(n.) அழகிய கடைக்கண்ணுள்ளவள் (யாழ்.அக.); woman who has a squint looking eye .

**த.வ. எழிற்கடைக்கண்ணி**

*[Skt. šubhāpāṅgā > த. சுபாபாங்கை]*

**சுபார்சுவர்** *šubāršuvar*, பெ.(n.) தூயநீரவர் (தீர்த்தங்கரர்) இருபத்து நால்வருள் ஒருவர் (திருக்கலம். காப்பு, உரை); a Jaina Arahat, one of 24 *tirttaṅkarar.*

*[Skt. supāršva > த. சுபார்சுவர்]*

**சுபாலம்** *šubālam*, பெ.(n.) நூற்றெட்டு மறையின் அறிவுப்பகுதிகளுள் (உபநிடதம்) ஒன்று (சங்.அக.); an *upaniṣad*, one of 108.

*[Skt. subāla > த. சுபாலம்]*

**சுபாலிகை** *šubāligai*, பெ.(n.) அடுப்பு (சது.); oven, fire-place.

**சுபாவக்காரன்** *šubāva-k-kāraṉ*, பெ.(n.) 1. நேர்மையானவன், தகுதியுடையவன்; honest, sincere person. 2. மூடன் (இ.வ.); simpleton.

*[Skt. svabhāva > த. சுபாவம்+காரன்]*

**சுபாவங்காட்டு-தல்** *šubāvaṅ-gāṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. இயல்பைக் காட்டுதல்; to appear in one's true colours to show oneself. 2. இழிகுணங்காட்டுதல்; to betray ill-breeding or low birth by mean actions, used in reproach. 3. நடித்தல் (வின்.); to affect sobriety, assume or act a character.

*[Skt. svabhāva > த. சுபாவம்+காட்டு-.]*

**சுபாவசித்தம்** *šubāva-šittam*, பெ.(n.) இயற்கையாகவே அமைந்திருப்பது; that which is inborn or natural. *"சுபாவசித்தமாகுவதேயன்றி" (வேதா. சூ. 125).*

*[Skt. svabhāva+šiddha > த. சுபாவசித்தம்]*

**சுபாவப்பேச்சு** *šubāva-p-pēccu*, பெ.(n.) கபடமற்ற பேச்சு (இ.வ.); innocent, guileless talk.

*[Skt. svabhāva > த. சுபாவம்+பேச்சு]*

**சுபாவம்** *šubāvam*, பெ.(n.) 1. இயல்பு; nature, natural state, inherent quality or disposition, instinct. *"சுபாவமாக வளர்*

*வனத்தை" (விநாயகபு. 77: 109).* 2. கலப் பற்றது; genuineness, reality, unaffectedness. 3. கபடமின்மை (உ.வ.); sincerity, honesty. 4. மூடத்தன்மை (இ.வ.); simple-mindedness.

**த.வ. இயல்பு, தன்மை**

*[**Skt.** sva-bhāva > த. சுபாவம்]*

**சுபாவமுத்தி** *šubāva-mutti*, பெ.(n.) துறவிகள் அடைதற்குரிய மேலுலக வீடுபேறு (வின்.); perfect bliss, absolute deliverance from birth attainable by *ñāṉi.*

*[**Skt.** sva-bhāva+mukti > த. சுபாவமுத்தி]*

**சுபாவமேரை** *šubāva-mērai*, பெ.(n.) வழக்கமான முறை (வின்.); ordinary, usual manner or order.

**சுபாவவாதி** *šubāva-vādi*, பெ.(n.) கடவுளின்றி இயற்கையாகவே எல்லாந் தோன்றியது என்று வழக்காடுபவன் (சங்.அக.); one who holds that all things are evolved from nature without the help of God.

*[**Skt.** sva-bhāva+vādin > த. சுபாவவாதி]*

**சுபாவத்தன்** *šubāvattaṉ*, பெ.(n.) **சுபாவக் காரன்** (உ.வ.) பார்க்க; see *šubāva-k-kāraṉ.*

*[**Skt.** sva-bhāva+stha > த. சுபாவத்தன்]*

**சுபாவி** *šubāvi*, பெ.(n.) **சுபாவக்காரன் பார்க்க;** see *šubāva-k-kāraṉ.*

*[**Skt.** sva-bhāvin > த. சுபாவி]*

**சுபாவிகம்** *šubāvigam*, பெ.(n.) இயற்கைத் தன்மை (வின்.); natural state or condition.

*[**Skt.** svābhāvika > த. சுபாவிகம்]*

**சுபானு** *šubāṉu*, பெ.(n.) ஆண்டு அறுபதனுள் 17-ஆவது (யாழ்.அக.); the 17th year of the jupiter cycle.

*[**Skt.** su-bhānu > த. சுபானு]*

**சுபிட்சம்** *šubiṭcam*, பெ.(n.) காலமழை முதலியவற்றால் உண்டாகும் செழிப்பு (யாழ்.அக.); prosperity due to timely rain, richness of crops.

**த.வ. செழிப்பு**

*[**Skt.** subhikṣa > த. சுபிட்சம்]*

**சுபுகம்** *šubugam*, பெ.(n.) மோவாய்; chin. *"மஞ்சுளமாகி யிருப்பது சுபுகநன் றென்பர்" (திருவிளை. உக். வேல்வளை. 35).*

*[**Skt.** cubuka > த. சுபுகம்]*

**சுபுகாணி** *šubukāṇi*, பெ.(n.) முகமதியர்மந்திரம் (மதி. க. ii, 93); a formula of Muslim mantra.

*[**Ar.** subhā-nallāh > த. சுபுகாணி]*

**சுபுட்பம்** *šubuṭpam*, பெ.(n.) 1. இலவங்கம் clove-tree. 2. பவழமல்லிகை; night jasmine.

*[**Skt.** supuṣpa > த. சுபுட்பம்]*

**சுபுத்தி** *šubutti*, பெ.(n.) நல்லறிவு (சங்.அக.); good sense.

*[**Skt.** su-buddhi > த. சுபுத்தி]*

**சுபுத்திரன்** *šubuttiraṉ*, பெ.(n.) நன்மகன்; good, worthy son. *"நின்போற் சுபுத்திரரொரு வருண்டோ" (பிரபோத. 2: 30).*

*[**Skt.** su-putra > த. சுபுத்திரன்]*

**சுபேதார்** *šubēdār*, பெ.(n.) படைத்துறையில் ஓர் அதிகாரி; (R.T.) indian military officer whose rank corresponds to that of captain.

**த.வ. படையதிமான்**

*[**U.** subādār > த. சுபேதார்]*

**சுபை** *šubai*, பெ.(n.) நாட்டுப்பகுதி (வின்.); district, province.

**த.வ. மாவட்டம்**

*[**U.** subā > த. சுபை]*

**சுபையதார்** *šubaiyadār*, பெ.(n.) **சுபேதார்** (வின்.) பார்க்க; see *šubēdār.*

**சுபோதம்**[1] *šubōdam*, பெ.(n.) 1. ஆழ்ந்த குறையிலா அறிவு profound, unerring wisdom. *"அற்புத சுபோதசுக" (திருப்பு. 132).* 2. சுயபோதம் (இ.வ.) பார்க்க; see *šuya-bōdam.*

*[**Skt.** su-bōdha > த. சுபோதம்]*

**சும்பகம்** *šumbagam*, பெ.(n.) ஊசிக்காந்தம் (பிங்.); magnet, loadstone.

*[**Skt.** cumbaka > த. சும்பகம்]*

**சும்பத்தனம்** *šumba-t-tanam*, பெ.(n.) மூடத்தனம் (உ.வ.); foolishness, stupidity.

*[**Skt.** šumbha > த. சும்பம்+தனம்]*

**சும்பப்பிரபஞ்சம்** *šumba-p-pirapañjam*, பெ.(n.) அறிவீனர் தொகுதி (உ.வ.); the world of fools.

*[**Skt.** šumbha +pra-pañja> த. சும்பப் பிரபஞ்சம்]*

**சும்பன்** *šumban*, பெ.(n.) மூடன் (வின்.); fool, dunce.

*[**Skt.** šumbha > த. சும்பன்]*

**சும்பனம்** *šumbanam*, பெ.(n.) 1. முத்தமிடுகை; kissing, fondling with the lips. 2. சப்புகை; sucking.

*[**Skt.** cumbana > த. சும்பனம்]*

**சும்பி-த்தல்** *šumbi-*, 4. செ.கு.வி.(v.i.) 1. முத்தமிடு-தல் (உ.வ.); to kiss, fondle with the lips. 2. சப்புதல்; to suck.

*[**Skt.** cumb > த. சும்பி-த்தல்]*

**சும்பிதகரணம்** *šumbida-karaṇam*, பெ.(n.) புணர்ச்சி வகை; a mode of copulation.

*[**Skt.** cumbita > த. சும்பிதம்+கரணம்]*

**சும்பிதம்** *šumbidam*, பெ.(n.) சும்பனம் (யாழ்.அக.) பார்க்க; see *šumbanam.*

*[**Skt.** cumbitu > த. சும்பிதம்]*

**சுமங்கலம்**[1] *šumaṅgalam*, பெ.(n.) பெரிதும் மங்கலமாயுள்ளது (வின்.); that which is lucky or auspicious.

**த.வ. நன்மங்கலம்**

*[சு+மங்கலம்]*

*[**Skt.** su- > த. சும]*

**சுமங்கலம்**[2] *šumaṅgalam*, பெ.(n.) ஒருவகை நற்சுழியுள்ள குதிரை (அசுவசா. 16); horse with a certain auspicious mark.

*[**Skt.** šu-maṅgala > த. சுமங்கலம்]*

**சுமங்கலி** *šumaṅgali*, பெ.(n.) கணவன் உயிருடனிருக்க மங்கலநாண் அணிந்திருப் பவள்; married woman, woman under coverture, as wearing the wed. lock, opp. to *amaṅgali.* *"குணமுள்ள சுமங்கலிக ளங்கே வந்து கூடினார்" (இராமநா. பாலகா. 23). மறுவ. வாழ்வரசி*

**த.வ. நன்மங்கலத்தள்**

*[**Skt.** su-maṅgalī > த. சுமங்கலி]*

**சுமங்கலிப்பிரார்த்தனை** *šumaṅgali-p-pirārttaṉai*, பெ.(n.) குடும்பத்தில் கணவன் உயிருடன் இருக்கும் போதே மங்களமாக இறந்த பெண்ணை வழிபட்டுச் செய்யும் சடங்கு; ceremony in memory of a woman who died while her husband was alive.

*[**Skt.** su-maṅgali+**Skt.** prārthanā > த. சுமங்கலிப்பிரார்த்தனை]*

**சுமங்கலை** *šumaṅgalai*, பெ.(n.) **சுமங்கலி** பார்க்க; see *šumaṅgali.*

*[**Skt.** sumaṅgalā > த. சுமங்கலை]*

**சுமதி** *šumadi*, பெ.(n.) 1. நல்லறிவு; intelligence, good sense. 2. அறிஞன்; intelligent, sensible person; wise person. 3. தீர்த்தங்கரர் இருபத்து நால்வருள் ஒருவர் (திருக்கலம். காப்பு. உரை); a Jaina Arhat, one of 24 *tīrttaṅgarar.*

த.வ. நன்மதி, நல்லறிவு

*[சு+மதி]*

*[**Skt.** su- > த. சும]*

**சுமந்திரன்**[1] *šumandiraṉ*, பெ.(n.) தசரதருக்குத் தேரோட்டுந் தொழில் புரிந்து வந்த மந்திரி; the charioteer and counsellor of Dašaratha. *"மானவனு மந்திரி சுமந்திரனை" (கம்பரா. தைல. 18).*

*[**Skt.** su-mantra > த. சுமந்திரன்]*

**சுமந்திரன்**[2] *šumandiraṉ*, பெ.(n.) அரசிறை அமைச்சன் (சுக்கிரநீதி. 66); minister in charge of revenue.

*[**Skt.** sumantra > த. சுமந்திரன்]*

**சுமம்** *šumam*, பெ.(n.) பூ (பிங்.); flower.

*[**Skt.** suma > த. சுமம்]*

**சுமரணம்** *šumaraṇam*, பெ.(n.) **சுமரணை** பார்க்க; see *šumaraṇai*.

*[**Skt.** smaraṇa > த. சுமரணம்]*

**சுமரணை** *šumaraṇai*, பெ.(n.) 1. சுரணை; sensitiveness, feeling. 2. தன்னறிவு; consciousness. *"சுமரணை தப்பிப் பேசுகிறான்".* 3. நினைவு; memory, remem brance.

*[**Skt.** smaraṇa > த. சுமரணை]*

**சுமனசம்** *šumaṉašam*,. பெ.(n.) பூ (பிங்.); flower.

*[**Skt.** sumanas > த. சுமனசம்]*

**சுமனை** *šumaṉai*, பெ.(n.) செம்பெற்றம்; red cow. *"செய்யநிறச் சுமனை" (தணிகைப்பு. அகத். 486).*

த.வ. செவ்வா

*[**Skt.** sumanā > த. சுமனை]*

**சுமார்**[1] *šumār*, வி.எ.(adv.) ஏறத்தாழ, சற்றொப்ப; about, approximately, on an average.

*[**Pers.** ṣumār > த. சுமார்]*

**சுமார்**[2] *šumār*, பெ.எ.(adj.) மட்டம்; moderate-fair. *விலை சுமார்தான் (உ.வ.)*

த.வ. நடுத்தரம்

*[**Pers.** ṣumār > த. சுமார்]*

**சுமார்த்தகற்பம்** *šumārtta-kaṟpam*, பெ.(n.) வேள்வியல்லாத மற்றை வினைப்பயன்களுக் குரியவற்றைக் கூறும் மறைப்பாகம் (வேதபாகம்) (சுக்கிரநீதி, 209). Portions of the *Vedas,* not applicable to sacrifices.

*[சுமார்த்தம்+கற்பம்]*

*[**Skt.** smārta > த. சுமார்த்தம்]*

**சுமார்த்தம்** *šumārttam*, பெ.(n.) அற (நீதி)நூல்களிற் கூறிய நெறிகள்; precepts or rules laid down in *Smṛtis*. *"சுமார்த்தத்திற் குயிற்று பல கருமத்தும்" (ஸவிநாயகபு. 73: 24).*

த.வ. தொன்மறை நெறிகள்

*[**Skt.** smārta > த. சுமார்த்தம்]*

**சுமார்த்தர்** *šumārttar*, பெ.(n.) பெரும்பாலும் ஒருமை–இரண்டன்மை (அத்துவைதம்) கொள்கையைத் தழுவியுள்ள பார்ப்பன வகுப்பினர் (உ.வ.); a sect of Brahmins who follow generally the tenets of Advaidism.

*[**Skt.** smārta > த. சுமார்த்தர்]*

**சுமாருக்கு** *šumārukku*, வி.எ.(adv.) குறிப்பிடப்படும் நேரத்திற்குப் பின்; when added after the stated hour around; about. *மாலை நான்கு மணி சுமாருக்கு வருவதாகச் சொன்னான்.*

*[சுமார் → சுமாருக்கு.]*

*[**Pers.** ṣumār > த. சுமார்]*

**சுமித்திரை** *šumittirai*, பெ.(n.) தசரதர் பட்டத் தரசிகள் மூவருள், இலக்குமணச் சத்துருக் கனரைப் பெற்றவள்; one of the three queens of Dašaratha, mother of Lakṣmaṇa and Satrughna. *"அன்னை சுமித்திரை கோயில் புக்கான்" (கம்பரா. நகர்நீங். 142).*

*[**Skt.** sumitrā > த. சுமித்திரை]*

**சுமிருதி** *šumirudi*, பெ.(n.) மத நம்பிக்கைத் தொடர்பான உலகியல் நடைமுறை; see *šmirudi*, religious tradition.

*[Skt. smṛti > த. சுமிருதி]*

**சுமுகம்** *šumugam*, பெ.(n.) இன்முகம் (உ.வ.); genial countenance.

**த.வ. இன்முகம்**

*[சு+முகம்]*

*[Skt. su- > த. சு]*

**சுமுகன்** *šumugaṉ*, பெ.(n.) இன்முகன் (உ.வ.); person of genial countenance.

*[Skt. su-mukha > த. சுமுகன்]*

**சுமுத்திரை** *šumuttirai*, பெ.(n.) 1. சரியளவு; standard weights and measures. *"சுமுத்திரையாக அளந்தான்"*. 2. சரியானது; genuineness, that which is bona fide. 3. நேர்மை; uprightness, justness. *அவன் சுமுத்திரையாய் நடந்து கொள்கிறான்.*

*[Skt. su-mudrā > த. சுமுத்திரை]*

**சுமுத்திரைக்கோல்** *šumuttirai-k-kōl*, பெ.(n.) ஓர் அளவு கோல் (வின்.); a measuring rod.

*[சுமுத்திரை+கோல்]*

*[Skt. su-mudrā > த. சுமுத்திரை]*

**சுமேரு** *šumēru*, பெ.(n.) வானவர்க்கு இருப்பிடமான மேருமலை (அபி.சிந்.); a peak in Mount *Mēru*, believed to be the abode of gods.

*[Skt. sumēru > த. சுமேரு]*

**சுய** *šuya*, பெ.அ.(adj.) 1. ஒருவர் தனக்குத் தானே ஏற்படுத்திக் கொள்ளும்; தன் மீது கொள்ளும்; தானே தனியாகச் செய்து கொள்ளும்; self. *"சுய இரக்கம். இயலாமையினால் ஏற்பட்ட சுய வெறுப்பில் விரக்தியுடன் பேசினான்"*. 2. தனக்குரிய; self; one's own. *"சுய பலம். சுய முகவரி எழுதிய அஞ்சல் அட்டை ஒன்றை இணைக்கவும்"*.

**சுயஉணர்வு** *šuya-uṇarvu*, பெ.(n.) தன்னுடைய நிலை, செயல், சூழல் முதலியவற்றை அறியும் கட்டுப்பாட்டு உணர்வு; நினைவு; conscious ness; self-awareness; self-control.

*[சுய + உணர்வு]*

*[Skt. sva > த. சுய]*

**சுயகர்த்தன்** *šuya-karttaṉ*, பெ.(n.) தன் முனைப்பு ஆட்சியர் (வின்.); independent lord, autocrat.

*[Skt. svayam+kartṛ > த. சுயகர்த்தன்]*

**சுயகாரியதுரந்தரன்** *šuya-kāriya-turan daraṉ*, பெ.(n.) **சுயகாரியப்புலி** (வின்.) பார்க்க; see *šuya-kāriya-p-puli.*

த.வ. தன்நலவிரும்பி

*[Skt. sva+kārya+dhurandhara > த. சுயகாரியதுரந்தரன்]*

**சுயகாரியப்புலி** *šuya-kāriya-p-puli*, பெ.(n.) தன் நலத்திலேயே ஈடுபட்டிருப்பவன் (உ.வ.); extremely selfish person.

*[சுயம்+காரியம்+புலி]*

*[Skt. sva > த. சுயம்]*

**சுயகாரியம்** *šuya-kāriyam*, பெ.(n.) 1. தன்னுடைய வேலை (வின்.); one's own affair, private business. 2. **சுயநலம்** (உ.வ.) பார்க்க; see *šuya-nalam.*

*[சுயம்+காரியம்]*

*[Skt. sva > த. சுயம்]*

**சுயங்கட்டு-தல்** *šuyaṅ-kaṭṭu-*, செ.கு.வி.(v.i.) **சுயம்பாடு-1** (இ.வ.) பார்க்க; *see šuyam-pāḍu-,s*

*[சுயம்+கட்டு-.,]*

*[Skt. sva > த. சுயம்]*

**சுயங்கிருதானர்த்தம்** *šuyaṅ-kirudāṉarttam*, பெ.(n.) தாமே விளைத்துக் கொள்ளுந் தீங்கு (இ.வ.); self-created evil.

*[Skt. svayam+kṛta+an-artha > த. சுயங் கிருதானர்த்தம்]*

**சுயசம்பாத்தியம்** *šuyašambāttiyam*, பெ.(n.) தலைமுறை வழியாகப் பெறாமல், தானாக உழைத்துச் சேர்த்த பணம் அல்லது உடைமை; money or wealth earned by oneself-acquired property. *இந்த வீடு மரபுச் சொத்தா சுய சம்பாத்தியமா என்று கேட்டார்.*

த.வ. தன்தேட்டம்

*[Skt. sva+sampādya > த. சுயசம்பாத்தியம்]*

**சுயசரிதம்** *šuya-šaridam*, பெ.(n.) தன் வரலாறு; autobiography.

*[Skt. sva+carita > த. சுயசரிதம்]*

**சுயசாதிமானம்** *šuya-šādi-mānam*, பெ.(n.) தன் இனத்தின் மீது கொண்ட பற்று; communal bias.

*[சுயசாதி+மானம்]*

*[Skt. sva+jati > த. சுயசாதி]*

**சுயசேவை** *šuya-šēvai*, பெ.(n.) வாடிக்கையாளர் தங்களுக்கு தேவையான வற்றைத் தாங்களே தேடி எடுத்துக் கொள்ளும் படியான வணிகமுறை; self-service.

*[Skt. sva+sēvā > த. சுயசேவை]*

**சுயஞ்சோதி** *šuyañ-Jōdi*, பெ.(n.) தானே விளங்கும் ஒளி, இறைவன் (வின்.); God, as self-luminous.

*[Skt. svayam+jyōtis > த. சுயஞ்சோதி]*

**சுயநலம்** *šuya-nalam*, பெ.(n.) பிறரைப் பற்றி எண்ணிப் பார்க்காமல் தனக்கு உண்டாகும் பயன், ஏந்து (வசதி) முதலியவற்றை மட்டுமே கருதிச் செயல்படும் போக்கு; கொள்கை யளவில் அல்லாமல் தனிப்பட்ட முறையில் பெறுகிற பயன் அல்லது ஏந்து (வசதி); selfishness, selfish end. *சுயநலத்திற்காக நாட்டையே காட்டிக் கொடுக்கும் குண முள்ளவன்.*

*[சுயம் + நலம்]*

*[Skt. šva > த. சுயம்]*

**சுயநலமி** *šuya-nalami*, பெ.(n.) சுயநலக்காரர்; selfish person. *"சில சுயநலமிகளால்தான் இந்தத் திட்டம் நிறைவேறாமல் போய்விட்டது".*

*[சுயம்+நலமி]*

*[Skt. šva > த.சுயம்]*

**சுயபழக்கம்** *šuya-paḻakkam*, பெ.(n.) இயல்பு (யாழ்.அக.); nature.

*[சுயம்+பழக்கம்]*

*[Skt. šva > த.சுயம்]*

**சுயபாசை** *šuya-bāšai*, பெ.(n.) தாய்மொழி (யாழ்.அக.); one's own language, mother-tongue.

*[Skt. sva-bhāṣā > சுயபாசை]*

**சுயபுணர்ச்சி** *šuya-puṇarcci*, பெ.(n.) முட்டிமை (வின்.); self-pollution.

*[சுயம்+புணர்ச்சி]*

*[Skt. sva > த. சுயம்]*

**சுயபுத்தி** *šuya-butti*, பெ.(n.) 1. தன்னுடைய அறிவு; one's own unaided sense. 2. மயக்கமற்ற அறிவு; sobriety, clearness of mind.

த.வ. தன்னறிவு

*[Skt. sva-buddhi > த. சுயபுத்தி]*

**சுயபுத்திரன்** *šuya-puttiraṉ*, பெ.(n.) பிள்ளை; one's own son.

*[Skt. sva+puttra > த. சுயபுத்திரன்]*

**சுயபுராணம்** *šuya-purāṇam*, பெ.(n.) தன்னைப் பற்றிய பேச்சு; talking all the time about oneself. *"உன் சுயபுராணத்தை நிறுத்தப் போகிறாயா இல்லையா?*

*[Skt. sva+purāṇa > த. சுயபுராணம்]*

**சுயபோக்கு** *šuya-pōkku*, பெ.(n.) தன்மனப் போக்கு (வின்.); one's peculiar nature, bent of mind.

*[சுயம்+போக்கு]*

*[Skt. sva > த. சுயம்]*

**சுயபோதம்** *śuya-pōdam*, பெ.(n.) தன்னறிவு (இ.வ.); consciousness.

*[Skt. sva +bodha> த. சுயபோதம்]*

**சுயம்**[1] *śuyam*, பெ.(n.) சொந்தமானது; one's own. *இந்த வேலை அவன் சுயம்.*

*[Skt. sva > த. சுயம்]*

**சுயம்**[2] *śuyam*, பெ.(n.) தானாகக் கட்டிய பாட்டு; own literary composition.

*[Skt. svayam > த. சுயம்]*

**சுயம்**[4] *śuyam*, பெ.(n.) கலப்பற்ற; genuine, pure. *சுயம் பால் (இ.வ.)*

*[Skt. svayam > த. சுயம்]*

**சுயம்பாகம்** *śuyam-bāgam*, பெ.(n.) 1. தானாக உணவு செய்துள கொள்கை (யாழ்.அக.); cooking for oneself. 2. உணவுச்சாலை முதலியவற்றிற் கொடுக்கும் உணவுப் பொருள் (வின்.); provisions given gratis in choultry, temple, etc.

*[சுயம்+பாகம்]*

*[Skt. svayam > த. சுயம்]*

**சுயம்பாகி** *śuyam-pāgi*, பெ.(n.) 1. உணவு சமைப்போன்; cook, especially in temple service. 2. துணிவழலை (வின்.); soap.

*[சுயம்+பாகி]*

*[Skt. svayam > த. சுயம்]*

**சுயம்பாடு-தல்** *śuyam-pāḍu-*, 5. செ.கு.வி.(v.i.) 1. தானாகவே செய்யுள் இயற்றுதல்; to compose original verses. 2. புதுமையாக இசைபாடுதல்; to invent new and original style in singing.

*[சுயம்+பாடு-,]*

*[Skt. svayam > த. சுயம்]*

**சுயம்பாவி-த்தல்** *śuyam-pāvi-*, செ.கு.வி.(v.i.) இறுமாப்புக் கொள்ளல்; to be proud, self-conceited. *"தன்னிக ரில்லா வித்தைத் தருக்கினாற் சுயம்பாவித்த" (விநாயகபு. 9: 23).*

*[Skt. svayam+bhāva > த. சுயம்பாவி-,]*

**சுயம்பிரகாசம்** *śuyam-pirakāśam*, பெ.(n.) **சுயஞ்சோதி** பார்க்க; see *śuyañ-jōdi*. *"தூரியஞ் சுயம் பிரகாசம்" (பிரபோத. 1:3).*

*[Skt. svayam +> த. சுயம்பிரகாசம்]*

**சுயம்பு** *śuyambu*, பெ.(n.) 1. தானாக உண்டானது (வின்.); self-existent being, anything considered to be uncreated. 2. இறைவன் (யாழ்.அக.); God. 3. நான்முகன் (சூடா.); *Brahmōṉ;* 4. அருகன் (பிங்.); Arhat. 5. இயற்கை (வின்.); peculiarity, nature. 6. மெய்நிலை; genuineness, reality. *சுயம்பான நீலம்.* 7. மடையன்; idiot. *பையன் சுயம்பு (இ.வ.).*

**த.வ. தான்தோன்றி**

*[Skt. svayam-bhū > த. சுயம்பு]*

**சுயம்புதலம்** *śuyambu-talam*, பெ.(n.) தானாகத் தோன்றிக் கோயில்கொண்ட காசி, காஞ்சி போன்ற திருத்தலம்; a shrine having a *śuyambu-mūrttias kāśī, kāñji, etc.*

*[சுயம்பு+தலம்> த.தலம்>*Skt.*-ஸ்தலம். தடம்> தலம்]*

**சுயம்புமூர்த்தி** *śuyambu-mūrtti*, பெ.(n.) தானாகத் தோன்றிய இறைவனின் திருவுருவம் (இ.வ.); un created image of God.

*[Skt. svayam-bhū+mūrti> த. சுயம்புமூர்த்தி]*

**சுயம்புலிங்கம்** *śuyambu-liṅgam*, பெ.(n.) தானாகத் தோன்றிய சிவலிங்கம் (சைவச. பொது. 81, உரை); uncreated *liṅgam*.

*[Skt. svayam-bhū+linga> த. சுயம்புலிங்கம்]*

**சுயம்வரம்** *śuyam-varam*, பெ.(n.) தன்னை விரும்பிவந்த அரசர் கூட்டத்தில், கணவனைத்

தலைவி தானே தெரிந்து மணந்துக் கொள்ளுகை; selection of husband by a princess herself at a public assembly of suitors. *"சுயம்வரத்தை வீமன் றிருமடந்தை பூண்டாள்" (நள. கலிநீ. 36).*

**த.வ. தன்விழைவு வரவு**

*[Skt. svayam-vara > த. சுயம்வரம்]*

**சுயமக்கினி** *šuyam-akkini*, பெ.(n.) மாத்திரைவகை (தஞ். சர. iii, 31); a kind of medicinal pill.

*[Skt. sva+agni > த. சுயமக்கினி]*

**சுயமக்கினிகுமாரன்** *šuyama-k-kinikumāran*, பெ.(n.) அகத்தியர் செந்தூரம் 300-ல் சொல்லியுள்ள மருந்து; a preparation of medicine contemplated in Agattya's Chendooram 300.

*[சுயமக்கினி + குமாரன்]*

*[Skt. sva+agni > த. சுயமக்கினி]*

**சுயமரம்** *šuyamaram*, பெ.(n.) **சுயம்வரம்** பார்க்க; see *šuyam-varam. "சுயமரத் தெதிர்ந்தோர் தம்மைத் துருபதன் றனயைக்காக ...... வென்ற விசயனே" (பிரமோத். 4:49).*

*[Skt. svayam-vara > த. சுயமரம்]*

**சுயமரியாதை** *šuya-mariyādai*, பெ.(n.) தன்னுடைய கண்ணியத்தையும் உயர்வு தாழ்வு கற்பிக்காத சமன்னமயை (சமத்துவத்தை)யும் அடிப்படையாகக் கொண்ட அமைப்பு; self-respect; self esteem. *சுயமரியாதையைப் போதிக்கும் நான், பிறரை எப்படி என் காலில் விழ அனுமதிப்பேன்?*

*[Skt. sva+maryāda > த. சுயமரியாதை]*

**சுயமரியாதைஇயக்கம்** *šuya mariyādai-iyakkam*, பெ.(n.) தன்மானத்துடனும் பகுத்தறிவுடனும் நடந்து கொள்ளவேண்டும் என்ற கொள்கை உடைய ருமுகாய இயக்கம்; a social movement based on one's faith in the dignity and reasoning power of the individual; self-respect movement.

**த.வ. தன்மான இயக்கம்**

*[Skt. sva+maryādā > த. சுயமரியாதை+ இயக்கம்]*

**சுயமரியாதைத்திருமணம்** *šuya-mariyādai-t-tirumaṇam*, பெ.(n.) சீர்திருத்தத்திருமணம், மரபான சடங்குகளை முற்றும் நீக்கிவிட்டு செய்யும் திருமணம்; marriage conducted according to one's self-respect rejecting all the tradional rites.

*[சுயமரியாதை + திருமணம்]*

**சுயமாய்** *šuyam-āy*, வி.எ.(adv.) 1. தானாக; of one's own accord, voluntarily; without help. *"சுயமாயுலகந் தருமென்று" (பிரபோத. 41:13).* 2. அடிக்கடி(யாழ்ப்.); constantly.

*[Skt. svayam > த. சுயம்+ஆய்]*

**சுயரூபம்** *šuya-rūbam*, பெ.(n.) உண்மையான இயல்பு அல்லது தன்மை; true colours. *பழகப் பழகத்தான் ஒருவருடைய சுயரூபம் நமக்குப் புலப்படுகிறது.*

*[Skt. sva+rūpa > த. சுயரூபம்]*

**சுயவலது** *šuya-valadu*, பெ.(n.) சொந்தத் திறமை (வின்.); one's own unaided capacity or strength.

**சுயவேலைவாய்ப்பு** *šuya-vēlaivāippu*, பெ.(n.) தானே ஒரு தொழில் தொடங்குவதன்மூலம் தனக்கு ஒரு வேலையை ஏற்படுத்திக் கொள்ளும் முறை; self-employment.

*[சுயம்+ வேலைவாய்ப்பு]*

*[Skt. sva > த. சுயம்]*

**சுயாட்சி** *šuyāṭci*, பெ.(n.) ஒரு நாடு பிறிதொரு நாட்டினுடைய கட்டுப்பாட்டில் இல்லாமல், தானே ஆண்டுக்கொள்ளும் ஆட்சி; self-rule; independence. 2. நிருவாகத்தின் குறிப்பிட்ட

விளத்தங்களை மட்டும், ஓர் உயர்மட்டத் தரப்பின் வயம் விட்டுத் தங்கள் உள் நிருவாகத்தைத் தாங்களே முழுமையாகப் பார்க்கும் நிருவாக முறை; self-governing; autonomy of federating units. *சில தனியார் கல்லூரிகளுக்குச் சுயாட்சி வழங்கப் பட்டுள்ளது.*

*[**Skt.** sva- > த. சுயம்]*

**சுயாதிகாரம்** *šuyādikāram*, பெ.(n.) தானே தன்னுலியொடு செயற்படுவதற்கு உரிய அதிகாரம்; தானே அமைத்துக் கொள்ளும் உரிமை; autonomy. *"தொலைக்காட்சி நிலையங்களுக்குச் சுயாதிகாரம் வழங்குவது பற்றி முடிவு செய்யப்படும்".*

**த.வ. தன்னுரிமை அதிகாரம்**

*[**Skt.** sva- > த. சுயா]*

**சுயாதிபத்தியம்** *šuyādipattiyam*, பெ.(n.) தன் முனைப்புடன் நடத்தும் ஆட்சி; independent sovereignty or government, autocracy. 2. கோளின் திசையில் தனது ஆட்சி; influence of a planet in its turn during its daša period.

*[**Skt.** sva+ādhipatya > த. சுயாதிபத்தியம்]*

**சுயாதிபதி** *šuyādi-padi*, பெ.(n.) தனியாட்சி நடத்துபவன் (யாழ்.அக.); independent sovereign, autocrat.

*[**Skt.** sva+adhipati > த. சுயாதிபதி]*

**சுயாதீனம்** *šuyādīnam*, பெ.(n.) **சுவாதீனம்** (யாழ்.அக.) பார்க்க; see *šuvādīnam*, independence.

*[**Skt.** svādhīna > த. சுவாதீனம்]*

**சுயாதீனன்** *šuyādīnan*, பெ.(n.) உரிமையோடு நடப்பவன் (யாழ்.அக.); free, independent agent, one who is his own master.

*[**Skt.** svādhina > த. சுயாதீனன்]*

**சுயார்ச்சிதம்** *šuyārccidam*, தாமே ஈட்டிய பொருள் (உ.வ.) பெ.(n.); self-acquired property, dist. fr. *piur-ārcciam.*

**த.வ. சொந்தத்தேட்டை**

*[**Skt.** svārjita > த. சுயார்ச்சிதம்]*

**சுயிரகம்** *šuyiragam*, பெ.(n.) தருப்பை (மலை.); darbha grass.

*[**Skt.** ušīraka > த. சுயிரகம்]*

**சுயேச்சை** *šuyēccai*, பெ.(n.) சுவேச்சை (யாழ்.அக.) பார்க்க; see *šuvēccai*

**த.வ. தன்விருப்பு**

*[**Skt.** svēcchā > த. சுயேச்சை]*

**சுயேட்சை** *šuyēṭcai*, பெ.(n.) **சுயேச்சை** பார்க்க; see *šuyēccai.*

**சுயோதனன்** *šuyōdanan*, பெ.(n.) துரியோதனன்; Duryōdhanan. *"சொன்ன நாள் வழுவுறாமற் சுயோதனன் றோன்றி னானே" (பாரத. சம்பவ. 78).*

*[**Skt.** Su-yōdhana > த. சுயோதனன்]*

**சுரசம்**[1] *šurašam*, பெ.(n.) சூடுதோய்த்த மருந்துச்சாறு (தைலவ. தைல. 74); medicinal juice or decoction warmed by introducing a hot iron-rod.

*[**Skt.** sva-rasa > த. சுரசம்]*

**சுரசம்**[2] *šurašam*, பெ.(n.) 1. இனிப்புச்சாறு (மதுரச்சாறு) (யாழ்.அக.); any sweet juice, as of sugar-cane. 2. **சிறு கிழங்கு** (திவா.); Goa potato. 3. **துளசி** (மலை.); sacred basil. 4. **நொச்சி** (தைலவ. தைல. 119) Indian privet. 5. இதளியம் (பாதரசம்) (மூ.அ.); quick silver.

*[**Skt.** su-rasa > த. சுரசம்]*

**சுரசனி** *šurašani*, பெ.(n.) இரவு; night.

*[**Skt.** šu-rajanī > த. சுரசனி]*

**சுரசாதம்** *šura-šādam*, பெ.(n.) தொண்டைக் கம்மல் (சங்.அக.); hoarseness.

*[Skt. svara+sāda > த. சுரசாதம்]*

**சுரட்சிதம்** *šuraṭcidam*, பெ.(n.) நன்கு காப்பாற்றப்பட்ட பொருள் (சங்.அக.); that which is well protected.

த.வ. நற்காப்புப்பொருள்

*[Skt. su-rakṣita > த. சுரட்சிதம்]*

**சுரதநீர்** *šurada-nīr*, பெ.(n.) காமநீர் (சங்.அக.); prostatic secretion.

*[சுரதம்+நீர்]*

*[Skt. surata > த. சுரதம்]*

**சுரததாது** *šurada-tādu*, பெ.(n.) விந்து (இந்திரியம்); semen. *"மேனகையாலான சுரததாது வீழ்ந்த துரோணகும்பந் தன்னில்" (பாரத. வாரணா. 32).*

*[சுரதம்+தாது]*

*[Skt. su-rata > த. சுரதம்]*

**சுரதநூல்** *šurada-nūl*, பெ.(n.) காமநூல்; treatise on erotics. *"சுரதநூரறெரி விடரென" (கம்பரா. கார்கா. 38).*

*[சுரதம்+நூல்]*

*[Skt. surata > த. சுரதம்]*

**சுரதம்**[1] *šuradam*, பெ.(n.) புணர்ச்சி; sexual union. *பரத்தையர் மனைகடோறுஞ் சுரதஞ் செய்பவர்" (பிரபுலிங். அக்கமா. உற்பத். 49).*

*[Skt. su-rata > த. சுரதம்]*

**சுரதம்**[2] *šuradam*, பெ.(n.) 1. இனிமை; sweetness. *"மலருந் தேனுஞ் சுரதமே மாந்தி" (கம்பரா. மீட்சி. 309).* 2. சாறு (தைலவ. தைல. 111); *Juicey* 3. இதளியம் (பாதரசம்) (வின்.); quick silver.

*[Skt. su-rasa > த. சுரதம்]*

**சுரதமங்கை** *šurada-mangai*, பெ.(n.) பரத்தை (வேசி) (யாழ்.அக.); harlot.

*[சுரதம்+மங்கை]*

*[Skt. su-rata > த. சுரதம்]*

**சுரதலீலை** *šurada-līlai*, பெ.(n.) புணர்ச்சி (யாழ்.அக.); sexual union.

*[Skt. surata+līlā > த. சுரதலீலை]*

**சுரதனு** *šuratanu*, பெ.(n.) அசுரர்(வின்.); ašurar.

*[ சுரர் > சுரத்தனு]*

**சுரநட்சத்திரம்** *šura-naṭcattiram*, பெ.(n.) வியாழன் நின்ற நாளுக்கு ஏழு அல்லது ஒன்பதாம் நாண் மீன் (விதான. குணாகுண. 41, உரை); the 7th or 9th *nakṣatras* from the *nakṣatra* with which jupiter is in conjunction.

*[Skt. jvara +nakṣatra> த. சுரநட்சத்திரம்]*

**சுரம்** *šuram*, பெ.(n.) எடுத்தலோசை (உதாத்தம்), படுத்தலோசை (அனுதாத்தம்) நலிதலோசை (சுவரிதம்) என்ற மூவகை இசைகள்; Vēdic accent of which there are three kinds, viz., ut*āttam, anutāttam, šuvaritam.* 2. ச,ரி,க,ம,ப,த,நி என்ற எழுத்துகளை முதலாகக்கொண்ட ஏழிசை; notes of the gamut of which there are seven, viz., sa*ṭcam, riṣabam, kāntāram, mattimam, pañjamam, taivadam, niṣādam, indicated by the initials.* 3. உயிரெழுத்து; vowel. ஆவி... சுரமாகும் (பி.வி.4.) 4. குரல்; voice, tone.

*[Skt. svara > த. சுரம்]*

**சுரம்பாடு–தல்** *šuram-pāḍu-*, 5. செ.கு.வி.(v.i.) எடுத்துக்கொண்ட பண்ணிற்கேற்ற இசை வலசைகளால் போற்றிப் பாடல்கள் முதலியவை பாடுதல் (சங்;அக.);to sing a song with its appropriate musical notes.

*[சுரம்+பாடு–,]*

*[Skt. svara > த. சுரம்]*

**சுரம்போடு—தல்** *śuram-pōḍu-*, 20 செ.கு.வி.(v.i.) பாடலுக்கு இசையப் பண் அமைத்தல் (உ.வ.); to set notes to a musical composition.

*[சுரம்+போடு—,]*

*[**Skt.** svara > த. சுரம்]*

**சுரம்விழு—தல்** *śuram-viḻu-*, செ.கு.வி.(v.i.) 1. செருக்குக் குறைதல் 2.குரல் தாழ்தல்; lit., to have one's tone lowered. To have one's pride reduced, to be humbled. *இப்போது அவன் சுரம் விழுந்து விட்டான் (இ.வ.).*

*[சுரம்+விழு—,]*

*[**Skt.** svara > த. சுரம்]*

**சுராட்டு** *śurāṭṭu*, பெ.(n.) 50 நூறாயிரத்திற்கு மேல், ஒரு கோடிக்குக் கீழ் இறைவருவாயுடைய மன்னன் (சுக்கிரநீதி, 26); king whose income is above 50 lakhs and below one crore.

*[**Skt.** svārāt > த. சுராட்டு]*

**சுராந்தியம்** *śurāndiyam*, பெ.(n.) ஏழிசைகளுள் நான்கு இசை மட்டுங் கொண்ட பண்வகை (பூர். சங். உண். 42); a melody-type, consisting of four of the seven notes of the gamut.

*[**Skt.** svara+antya > த. சுராந்தியம்]*

**சுருதஞானம்** *śuruda-ñāṉam*, பெ.(n.) கல்வி கேள்விகளால் உண்டாம் அறிவு (சீவக. 3081, உரை); acquired knowledge.

*[**Skt.** śruta+ñana > த. சுருதஞானம்]*

**சுருதி** *śurudi*, பெ.(n.) 1. காது (பிங்.); ear. 2. ஒலி (பிங்.); sound, tone. 3. எழுதாக் கிளவியாகிய மறை (திவா.); vēda, as learnt orally and not from written text. 4. எடுத்தலோசை முதலிய மறை இசை; vēdic accent. *"சுருதியொடருமறை முறைசொலு மடியவர்" (திவ். பெரியதி. 8.7: 7).* 5. இசையைச் சிறப்பிக்க அதனுடன் ஒத்தெழுப்பப்படும் துணையொலி; pitch of a tune, keynote. *"விரும்புஞ்சுருதியிசைகேட்டு" (பாரத. சிறப்பு. 12).* 6. இருபத்திரண்டு வகைப்பட்ட இசையொலி; division of the octave, quarter tone or interval, of which there are 22, four constituting major tone, three minor and two semi-tone. *"ஏழிசையின் சுருதி பெற வாசித்து" (பெரியபு. ஆனாய. 14).* 7. புகழ் (இ.வ.); fame. 8. வான்மொழி; casual utterance of good or bad omen. *இருவரும் கலியாணப் பேச்சுப் பேசுகையிற் சுருதி கேட்டது.* *வாய்ப்பறை, பொய்யலர் (வதந்தி) (இ.வ.)*; rumour. *ஊரில் இப்படி ஒரு சுருதியிருக்கிறது.*

**த.வ. இசையொலி**

*[**Skt.** śruti > த. சுருதி]*

**சுருதிகாந்தாரம்** *śurudi-kāndāram*, பெ.(n.) பாலை யாழ்த்திறவகை (பிங்.); a secondary melody-type of the *pālai* class.

*[**Skt.** śruti+gāndhāra > த. சுருதிகாந்தாரம்]*

**சுருதிகூட்டு—தல்** *śurudi-kūṭṭu-*, 5. செ.கு.வி. (v.i.) 1. இசைக் கருவிகளில் இசைகள் தம்முள் ஒத்தொலிக்க அமைத்தல்; to attune musical instruments. *"வீக்கி முன் சுருதி கூட்டி" (திருவிளை. விறகு. 27).* 2. **சுருதிகொடு—**, பார்க்க; see *śurudi-koḍu-*.

*[**Skt.** śruti > த. சுருதி]*

**சுருதிகூடிவா—தல்** *śurudi-kūḍi-vā-*, 18 செ.கு.வி.(v.i.) அணியமாதல்; to becine ready.

*[சுருதி+கூடிவா—,]*

*[**Skt.** śruti > த. சுருதி]*

**சுருதிகொடு—த்தல்** *śurudi-koḍu-*, 4. செ.கு.வி.(v.i.) இசைக்கு ஒத்த துணையொலி எழுப்புதல்; to sound the keynote.

*[சுருதி+கொடு—,]*

*[**Skt.** śruti > த. சுருதி]*

**சுருதிசேர்–த்தல்** *šurudi-šēr-*, 4. செ.கு.வி. (v.i.) **சுருதிகூட்டு–** பார்க்க; see *šurudi-kūṭṭu-.*

*[சுருதி+சேர்–,]*

*[**Skt.** šruti > த. சுருதி]*

**சுருதிப்பிரமாணம்** *šurudi-p-piramāṇam*, பெ.(n.) மறையாகிய அளவை; scriptural authority.

*[**Skt.** šruti +pra-māṇa> த. சுருதிப் பிரமாணம்]*

**சுருதிப்பெட்டி** *šurudi-p-peṭṭi*, பெ.(n.) பின்புறம் உள்ள மடிப்புடைய துருத்தியால், காற்றை உட்செலுத்திச் சீராக வெளிவிடுவதன் மூலம் இசையை உண்டாக்கும் பெட்டி; a musical instrument which is used for setting the surudi.

*[சுருதி + பெட்டி]*

*[**Skt.** šruti > த. சுருதி]*



**சுருதிபேதம்** *šurudi-pēdam*, பெ.(n.) பிறழ்ந்து ஒலிக்கும் ஒலி; discordance in note.

*[**Skt.** šruti+bhēda > த. சுருதிபேதம்]*

**சுருதிபோடு–தல்** *šurudi-pōḍu-*, 20 செ.கு.வி.(v.i.) **சுருதிகொடு–** பார்க்க; see *šurudi-koḍu-.*

*[சுருதி+போடு–,]*

*[**Skt.** šruti > த. சுருதி]*

**சுருதியான்** *šurudiyāṉ*, பெ.(n.) மறைக்குரியவனான நான்முகன்; *Nāṉmugāṉ* as the source of the Vēdas. *"சுருதியா னுறங்குமிராத்தொறும்" (கந்தபு. திருநகரப். 65).* 2. திருமறையால் அறியப்படும் இறைவன்; God, as revealed by the *Vēdas*. *"சுருதியானைக் கண்டீர் தொழற்பாலதே" (தேவா. 1208, 5).*

*[**Skt.** šruti > த. சுருதி>சுருதியான்]*

**சுருதிவீணை** *šurudi-vīṇai*, பெ.(n.) இருபத்திரண்டு பண்களையும் இசைக்கவல்ல வீணைவகை; a stringed musical instrument constructed to sound the 22 notes in the division of an octave.

*[சுருதி+வீணை]*

*[**Skt.** šruti > த. சுருதி]*

*விண் >விண் >வீணை*

**சுருபம்** *šurubam*, பெ.(n.) **சுரூபம்²** பார்க்க; see *šurūbam²*. *"சுருபமதொளித்து" (பிரபோத.21: 2).*

*[**Skt.** sva-rūpa > த. சுருபம்]*

**சுரூபங்கெட்டவன்** *šurūbaṅ-geṭṭavaṉ*, பெ.(n.) 1. உடற்குறையுள்ளவன்; deformed person. 2. இன (சாதி) ஒழுக்கம் இல்லாதவன்; unorthodox person.

*[ சுரூபம் > த. சுருபம்+கெட்டவன்]*

**சுரூபப்பிழையன்** *šurūba-p-piḻaiyaṉ*, பெ.(n.) **சுரூபங்கெட்டவன், 1** (வின்.) பார்க்க; see *šurūbaṅ-geṭṭavaṉ.*

*[**Skt.** sva-rūpa > த. சுரூபம்+பிழையன்]*

**சுரூபம்¹** *šurūbam*, பெ.(n.) நல்லுருவம்; beautiful form.

*[**Skt.** su-rūpa > த. சுரூபம்]*

**சுரூபம்²** *šurūbam*, பெ.(n.) 1. வடிவம்; image, form. 2. தன்மை; nature. *"செருக்குத் தானே போகாத சுரூபமாகும்" (பிரபோத. 26: 111).*

*[**Skt.** sva-rūpa > த. சுரூபம்]*

**சுரூபி** *šurūbi*, பெ.(n.) அழகுள்ளவ—ன்—ள்; fair, beautiful person, opp. to *kurūpi.*

*[Skt. surūpin > த. சுரூபி]*

**சுரேசன்** *šurēšan*, பெ.(n.) 1. **சுரேந்திரன்** பார்க்க; see *šurēndiran. "சொற்க நாடுள சுரேச னுரைப்பான்" (கந்தபு. திருவிளை. 110).* 2. முருகன் (அக.நி.); Murugan.

*[Skt. surēša > த. சுரேசன்]*

**சுரேசுவரி** *šurēšuvari*, பெ.(n.) முசுமுசுக்கை (தைலவ.) bristly bryony.

*[Skt. surēšvari> த. சுரேசுவரி]*

**சுரேந்திரன்** *šurēndiran*, பெ.(n.) இந்திரன் (வின்.); indran.

**த.வ. துறக்கக்கோன்**

*[Skt. surēndra > த. சுரேந்திரன்]*

**சுரேந்திரன்மைந்தன்** *šurēndiran-maindan*, பெ.(n.) இந்திரன் மகனான அருச்சுனன் (பிங்.); *Arjunan*, as son of *Indran.*

*[சுரேந்திரன்+மைந்தன்]*

*[Skt. surēndra > த. சுரேந்திரன்]*

**சுரோணம்** *šurōṇam*, பெ.(n.) சிவப்பு (சங்.அக.); red colour.

*[Skt. šōṇa > த. சுரோணம்]*

**சுரோணராசாவர்த்தம்** *šurōṇa-rāšāvarttam*, பெ.(n.) சிவப்பு மணிக்கல் வகை (சங்.அக.); a red species of lapis lazuli.

*[Skt. šōṇa+rājāvarta > த. சுரோணராசா வர்த்தம்]*

**சுரோணி** *šurōṇi*, பெ.(n.) 1.அல்குல் (யாழ்.அக.); mons veneris. 2. பிட்டம்; buttocks 3. இடுப்பு; hip.

*[Skt. šrōṇi > த. சுரோணி]*

**சுரோணிதம்** *šurōṇidam*, பெ.(n.) கருமுட்டை; ovum. 2. அரத்தம்; blood. 3. சிவப்பு; red. 4. மாதவிலக்கு; manstrual discharge. 5. விந்துவோடு கலந்து உயிரணு தோன்று வதற்குக் காரணியமான மகளிர் அரத்தம்; blood believed to be in the womb causing pregnancy when mixed with semen. "சுக்கில சுரோணிதங்களாலே உடம்பு கொண்டு... உயிர் பிறக்கும்" (சிலப்.3:26, உரை, பக்.104).

*[Skt. šōṇita> த. சுரோணிதம்]*

**சுரோணிதக்கேடு** *šurōṇida-k-kēḍu*, பெ.(n.) மாதவிலக்குக் கோளாறு; disorder of menstrual blood, deranged menstruation. (சா.அக.)

*[சுரோணிதம் + கேடு]*

*[Skt. šōṇita> த. சுரோணிதம்]*

**சுரோத்திரம்** *šurōttiram*, பெ.(n.) காது; ear. *"வாக்காதி சுரோத்திராதியும்" (தாயு கருணாகர. 2).*

*[Skt. šrōtra > த. சுரோத்திரம்]*

**சுரோத்திரியதார்** *šurōttiriyadār*, பெ.(n.) இறையிலி நிலத்திற்கு உரியவன்; owner of šurōttiriyam lands.

*[Skt. šrōtriya > த. சுரோத்திரி> சுரோத்திரியதார்]*

**சுரோத்திரியந்தார்** *šurōttiriyandār*, பெ.(n.) **சுரோத்திரியதார்** பார்க்க; see *šurōttiriyadār.*

**சுரோத்திரியம்** *šurōttiriyam*, பெ.(n.) 1. திருமறையில் திறமையுள்ள பார்ப்பனர் முதலியோர்க்குப் பழங்காலத்தில் விடப்பட்ட இறையிலி நிலம்; land or village formerly assigned to a Brahmin learned in Vēdas or other learned men at a favourable rate to assessment. 2. அரசுப்பணி செய்தவர்க்கு விடப்பட்ட இலவய நிலம்; service inam, lands assigned to servants of government as reward for their services.

*[Skt. šrōtriya > த. சுரோத்திரியம்]*

**சுரோத்திரியன்** *šurōttiriyan*, பெ.(n.) மறையறிவு நிரம்பிய பார்ப்பனன்; Brahmin learned in *Vēdas*.

*[Skt. šrōtriya > த. சுரோத்திரியன்]*

**சுரோதசாதி** *šurōda-šādi*, பெ.(n.) நான்கு வகை ஆண்களில் ஒரு வகை. one of the four classes of men divided according to their lust. (சா.அக.)

**சுரோதவிகாரம்** *šurōda-vikāram*, பெ.(n.) அரத்த மாறுபாடுகள்; vascular phenomena. (சா.அக.)

**சுரோதோவகம்** *šurōdōvagam*, பெ.(n.) தாளவகைகளுளொன்று (பரத. தாள. 58); a time-measure.

*[Skt. srōtōvaha > த. சுரோதோவகம்]*

**சுல்கம்** *šulgam*, பெ.(n.) 1. மகட்கொள்ள அளிக்கும் பொருள்; bride price. 2. பந்தயப் பொருள்; prize of a contest.

*[Skt. šulka > த. சுல்கம்]*

**சுல்தான்** *šultān*, பெ.(n.) முகமதிய அரசனின் பட்டப்பெயர்; sultan.

*[Ar. sultān > த. சுல்தான்]*

**சுல்தான்காசு** *šultān-kāšu*, பெ.(n.) திருவாங்கூரில் வழங்கிய ஒரு பழைய நாணயம்; an ancient coin in Travancore.

*[சுல்தான்+காசு.]*

*[Ar. sultān > த. சுல்தான்]*

*[காய்ச்சு>காசு (காய்ச்சிச் செய்யப்பட்டது]*

**சுல்பசுந்தரரசம்** *šulpašundara-rašam*, பெ.(n.) சூலைநோய்க்குக் கொடுக்கும் ஓர் ஆயுள்வேத மருந்து; an Āyurvedic medicine to rehumatism. (சா.அக.)

**சுல்மானா** *šulmānā*, பெ.(n.) தண்டம் (இ.வ.); fine, forfeit, penalty.

*[Ar. jurmāna > த. சுல்மானா]*

**சுல்லம்** *šullam* பெ.(n.) செப்பு; coper

*[Skt. sulla> த. சுல்லம்]*

**சுலபசாத்தியம்** *šulaba-šāttiyam*, பெ.(n.) எளிதில் முடிக்கக் கூடியது (உ.வ.); that which can be easily accomplished.

*[Skt. sulabha +sadhya> த. சுலபசாத்தியம்]*

**சுலபம்** *šulabam*, பெ.(n.) 1. எளிமை; ease, facility, easiness of acquisition or attainment. 2. சிறுமை (வின்.); trifle. 3. மலிவு; cheapness. *விலை சுலபம்.*

*[Skt. su-labha > த. சுலபம்]*

**சுலனன்** *šulanan*, பெ.(n.) நெருப்பு; fire. *"சுலனனைக் கொள" (திருச்செந்.பு. திருவவ.8).*

*[Skt. jvalana > த. சுலனன்]*

**சுலு** *šulu*, பெ.(n.) **சுல்லம்** பார்க்க; see *šullam*.

**சுலுகம்** *šulugam*, பெ.(n.) 1. சேறு; mire. 2. சிறங்கை; handful.

*[Skt. culuka > த. சுலுகம்]*

**சுலுப்பு** *šuluppu*, பெ.(n.) மரக்கலம் (யாழ்.அக.); a vessel, dhoney.

*[E. sloop > த. சுலுப்பு]*

**சுலுபம்** *šulupam*, பெ.(n.) சிறுமை, அற்பம் (யாழ்.அக.); trifle.

*[Skt. svalpa > த. சுலுபம்]*

**சுலோகம்** *šulōgam*, பெ.(n.) 1. வடமொழிச் செய்யுள்; verse or stanza in Sanskrit. *"சுலோக மொருநியுத மாராய" (சைவச. பொது. 3).* 2. சொன்மாலை (பிங்.); panegyric. 3. புகழ் (யாழ்.அக.); fame, renown. 4. பழமொழி (யாழ்ப்.); proverb, saying.

*[Skt. šlōka > த. சுலோகம்]*

**சுலோகி** *šulōgi*, பெ.(n.) கள் (திவா.); toddy.

**த.வ. சொலவகம்**

*[Skt. šlōkin > த. சுலோகி]*

**சுலோசனம்** *šulōšanam*, பெ.(n.) 1. அழகிய கண் (வின்.); beautiful, lovely eyes. 2. மூக்குக்கண்ணாடி (யாழ்.அக.); spectacles.

*[Skt. su-lōcana > த. சுலோசனம்]*

**சுலோபம்**[1] *šulōbam*, பெ.(n.) 1. சிறுமை (வின்.); smallness, littleness, trifle. 2. எறும்பு (பிங்.); ant, emmet.

*[Skt. svalpa > த. சுலோபம்]*

**சுலோபம்**[2] *šulōbam*, பெ.(n.) எளிது (வின்.); easiness of attainment.

*[Skt. su-labha > த. சுலோபம்]*

**சுலோபம்**[3] *šulōbam*, பெ.(n.) **சுலோகம்,4** (யாழ்ப்.) பார்க்க; see *šulōgam 4.*

*[Skt. šlōka > த. சுலோபம்]*

**சுவ்வதன்** *šuvvadan*, பெ.(n.) **சுவ்விரதர்** பார்க்க; see *šuvviradar.*

*[Skt. Sūvrata > த. சுவ்வதன்]*

**சுவ்வாலே** *šuvvālē*, பெ.(n.) இசைப்பாடல் சிலவற்றினிறுதிகளில் வரும் சொல் (இ.வ.); refrain at the end of certain kind of songs.

*[Te. cuvvālu> த. சுவ்வாலே]*

**சுவ்விரதர்** *šuvviradar*, பெ.(n.) தூயநீரவர் (தீர்த்தங்கரர்) இருபத்துநால்வருள் ஒருவர் (திருக்கலம். காப்பு, உரை); a Jaina Arhat, one of 24 *tirttangarar.*

*[Skt. sūvrata > த. சுவ்விரதர்]*

**சுவ** *šuva*, பெ.அ.(adj.) தன்னுடைய; one's own, used only as the first member of compounds. *"சுவபட்சம்".*

*[Skt. sva > த. சுவ]*

**சுவகதபேதம்** *šuvakada-bēdam*, பெ.(n.) முழுப்பொருளுக்கும் அதன் உறுப்புக்குமுள்ள வேற்றுமை (வேதா. சூ. 25, உரை); the difference between an object as a whole and its part.

*[Skt. sva-gata+bhēda > த. சுவகதபேதம்]*

**சுவகதம்** *šuvakadam*, பெ.(n.) 1. தனக்குட் பேசுகை; aside; soliloquy. 2. **சுவகதபேதம்** பார்க்க; see *šuvakada-bēdam. "சுவகத முதலாயின மூன்றுமிலையே" (வேதா. சூ. 27).*

*[Skt. sva-gata > த. சுவகதம்]*

**சுவகர்மம்** *šuva-karmam*, பெ.(n.) 1. தனக்குரித்தாக நூல்களால் வகுக்கப்பட்ட தொழில்; one's duties ordained by *šāstras.* 2. சொந்தத் தொழில்; one's own business.

*[Skt. sva > த. சுவ]*

*[குல் >குரு> கரு >கருமம்>* ***Skt.*** *கர்மம்]*

**சுவகாரியம்** *šuva-kāriyam*, பெ.(n.) **சுவகர்மம் 2** பார்க்க; see *šuva-karmam, 2. பட்டணத்துக்குச் சுவகாரியமாகப் போயிருந்தேன் (இ.வ.)*

*(சுவ+காரியம்)*

*(Skt+.sva > த. சுவ)*

*[கரு >கார் >காரியம். கரு–செய்தற்பொருள்]*

**சுவகீயை** *šuvakīyai*, பெ.(n.) மூவகைப் பெண்டிருள் ஒரு வகையினள் (சுக்கிரநீதி. 212, கீழ்க்குறிப்பு); one of the three classes of women.

*[Skt. švakīyā > த. சுவகீயை]*

**சுவச்சதை** *šuva-c-cadai*, பெ.(n.) **சுவச்சம்**[1] – **1,2** பார்க்க; see *suvaccam[1]-1,2.*

*[சுவ+சதை]*

*[Skt. sva > த. சுவ+சதை]*

**சுவச்சம்**[1] *šuvaccam*, பெ.(n.) 1. தெளிவு; clearness, as of the atmosphere, water. *"ஆகாசம் சுவச்சமாகியும்" (சி.சி.2:67, சிவாக்.).* 2. தூய்மை; purity, stainlessness, freedom from mixture, as of race. 3. நல்லெண்ணெய் (தைலவ. தைலவ. 35); gingelly oil, as clear.

*[Skt. svaccha > த. சுவச்சம்]*

**சுவச்சம்**[2] *šuvaccam*, பெ.(n.) **சுவத்தம்** பார்க்க; see *šuvattam. "எல்லாரும் சுவச்ச மாயிருக்கிறார்கள்" (வீரன்)*

*[Skt. sva-stha >* ***சுவஸ்தம்*** *>த. சுவச்சம்]*

**சுவசம்** *šuvašam*, பெ.(n.) தன் வயத்தில் உள்ளது; one's own custody or control. *"நான்மறைகளுஞ் சுவசமாகிய வங்கண" (விநாயகபு. 73:35).*

த.வ. தன்பொறுப்பு

*[**Skt.** sva+vaša > சுவஸ்தம்> சுவத்தம் த. சுவசம்]*

**சுவசனம்[1]** *šuvašanam*, பெ.(n.) சொந்தச் சொல் one's own word.

*[**Skt.** sva+vacana > த. சுவசனம்]*

**சுவசனம்[2]** *šuvašanam*, பெ.(n.) நற்சொல்; good word, auspicious word.

த.வ. நற்சொல்

*[**Skt.** su+vacana > த. சுவசனம்]*

**சுவசனவிருத்தம்** *šuvašana-viruttam*, பெ.(n.) தன் சொற்கு மாறுபாடாக, இயம்பலாகிய பக்கப்போலி வகை; self-contradiction. *"சுவசனவிருத்தந் தன்சொன்மாறி யியம்பல்" (மணிமே. 29, 160).*

*[**Skt.** sva-vacana+viruddha > த. சுவசனவிருத்தம்]*

**சுவசாதி** *šuva-šādi*, பெ.(n.) தன்னினம்; one's own caste or class.

*[**Skt.** sva-jāti > த. சுவசாதி]*

**சுவசாதீயம்** *šuva-šādiyam*, பெ.(n.) ஓரினத்தைச் சார்ந்த பொருள்; that which belongs to one's genus or class. *"தேஜோற் பந்நமான சப்தம் சுவசாதீயமா யிருக்கிற உத்தரோத்தர சத்தங்களை உற்பாதித்து" (சி.சி.2:61, சிவாக்.).*

த.வ. ஓரினப்பொருள்

*[**Skt.** sva-jātiya > த. சுவசாதீயம்]*

**சுவணகாரகன்** *šuvaṇa-kāragan*, பெ.(n.) பொற்கொல்லன்; goldsmith.

*[**Skt.** svarṇa-kārɛ > த. சுவணகாரகன்]*

**சுவணபுட்பம்** *šuvaṇa-puṭpam*, பெ.(n.) 1. **சுவர்ணபுட்பம்** see *šuvarṇa-puṭpam*. 2. கோயிலிற் வழிபாட்டுக் காலங்களில் மறை முதலியன ஓதுகை (இ.வ.); recitation of portions of the *Vēdas* and other sacred works at the time of worship in temples.

*[**Skt.** svarṇa+Puṣpa > சுவர்ணபுஷ்பம் த. சுவணபுட்பம்]*

**சுவணபூமி** *šuvaṇa-būmi*, பெ.(n.) **சுவர்ணபூமி** 2, 3 பார்க்க; see *šuvarṇa-būmi*.

*[**Skt.** svarṇa+bhūmi > த. சுவர்ணபூமி > சுவணபூமி]*

**சுவணம்** *šuvaṇam*, பெ.(n.) 1. பொன்; gold. *"எரிபுரை சுவணம்" (பெருங். வத்தவ. 11:52).* 2. மாழைக் கட்டி (பிங்.); ore.

*[**Skt.** suvarṇa > த. சுவர்ணம் >சுவணம்]*

**சுவத்தம்** *šuvattam*, பெ.(n.) 1. நலம், உடல்நலம்; sound health. 2. கவலையின்மை; leisure; freedom crom cares.

*[**Skt.** sva-stha > சுவஸ்தம் >த. சுவத்தம்]*

**சுவத்தன்** *šuvattan*, பெ.(n.) 1. உடல் நலமுள்ளவன்; healthy person. 2. மனக் கவலையின்றி இருப்போன்; person resting in absolute peace. *"சுவத்தனாய் நின்ற நின்னிலை" (உத்தரரா. தோத்திர. 23).*

*[**Skt.** sva-stha > சுவஸ்தம் >த. சுவத்தன்]*

**சுவத்தி** *šuvatti*, பெ.(n.) *சுவத்திவாசனம் பார்க்க; see šuvattivāsanam. "வேதச் செல்வர் சுவத்திகளோத" (திருவிளை. திருமணப். 145).*

*[**Skt.** svasti > சுவஸ்தி > த. சுவத்தி]*

**சுவத்திகம்[1]** *šuvattigam*, பெ.(n.) 1. சுவத்தி-வாசனம் 2,3,4 பார்க்க; *see šuvatti-vāsanam. 2. 3,4. "வசுக்கள் சுவத்திக முரைப்ப" (குற்றா. தல. திருமண. 82). 2. சுவத்திவாசனம் – 2. பார்க்க; see šuvatti-vāsanam. 2. – 2. "சுவத்திகம்போற் பாவிய விரேகை" (விநாயகபு. 15, 48).* 3. **சுவத்திகாசனம்** (பிங்.)

பார்க்க; see *šuvattigāšaṉam.* 4. இருக்கை வகை (சிலப். 8, 25, உரை); a kind of sitting posture, one of nine *irukkai.* 5. நான்கு விரலுந் தம்முள் ஒட்டிநிமிரப் பெருவிரல் குஞ்சித்து நிற்கும் பதாகைக்கை இரண்டனையும் மணிக்கட்டில் ஏற்றி வைக்கும் இணைக்கை வகை (சிலப். 3, 18, உரை); a gesture with both hands in which they are joined at the wrists in their *padāgai* pose and turned up.

*[Skt. svastika > சுவஸ்திகம் > த. சுவத்திகம்]*

**சுவத்திகம்²** *šuvattigam,* பெ.(n.) 201 உச்சிகளையும் (சிகரங்களையும்) 25 மேனிலைக் கட்டுகளையுமுடைய கோயில் (சுக்கிரநீதி, 230); temple with 201 towers and 25 storeys.

*[Skt. svastika > சுவஸ்திகம் > த. சுவத்திகம்]*

**சுவத்திகாசனம்** *šuvattigāšaṉam,* பெ.(n.) ஒன்பது வகை இருக்கைகளுள், கால்களைக் குறுக்கிட்டு வைத்துக் கொண்டு, உடல் நிமிர அமரும் இருக்கை; a yōgic posture symbolic of success, which consists in sitting with legs crosswise while the body is held erect and at ease, one of nine irukkai.

*[Skt. svastika+āsana > சுவஸ்திகாசனம் > த. சுவத்திகாசனம்]*



**சுவத்திவாசனம்** *šuvatti-v-āšanam,* பெ.(n.) 1. ஆவணம் முதலியவற்றின் முதலில், மங்கலங் குறிக்க வழங்கும் வடமொழிச்சொல்; a sanskrit indeclinable denoting auspiciousness, used at the beginning of inscriptions, calendars, etc. 2. மங்கலத்தைக் குறிக்கும் 卐 என்ற குறியீடு; a mystical mark in the form , denoting auspiciousness. 3. மங்கலம் பயத்தலைக் கருதி ஓதப்படும் மறைப்பகுதி; a portion of the vēdas recited with a view to auspiciousness. 4. இறைவன் புறப்பாட்டில் ஓதப்படும் மறை; vēda recited in the presence of idols taken in procession.

*[Skt. svasti-vāšana > சுவஸ்திவாசனம்> த. சுவத்திவாசனம்]*

**சுவதந்தரன்** *šuvatandaraṉ,* பெ.(n.) **சுதந்தரன்** பார்க்க; see *šudandaraṉ.*

*[Skt. sva-tantra > த. சுவதந்தரன்]*

**சுவதந்திரம்** *šuvatandiram,* பெ.(n.) **சுதந்தரம்** பார்க்க; see *šudandaram.*

*[Skt. sva-tantra > த. சுவதந்திரம்]*

**சுவந்திரம்** *šuvandiram,* பெ.(n.) **சுதந்தரம்** பார்க்க; see *sudandaram. குடிமக்களுக் குள்ள சுவந்திரம் கொடுத்தாயிற்றா? (உ.வ.).*

*[Skt. sva-tantra > த. சுவந்திரம்]*

**சுவப்பனம்** *šuvappaṉam,* பெ.(n.) **கனவு;** dreams.

*[Skt. svapna > த. சுவப்பனம்]*

**சுவப்பிரம்** *šuvappiram,* பெ.(n.) 1. நிரயம் (சூடா.); hell. 2. வளை (யாழ்.அக.); burrow.

*[Skt. švabhra > த. சுவப்பிரம்]*

**சுவபட்சம்** *šuva-paṭcam,* பெ.(n.) **சுபட்சம்** பார்க்க; see *šubaṭcam.*

*[Skt. sva+pakṣa > த. சுவபட்சம்]*

**சுவபாவம்** *šuva-pāvam*, பெ.(n.) **சுபாவம்** பார்க்க; see *šubāvam*.

*[Skt. sva+bhāva > த. சுவபாவம்]*

**சுவபாவிகம்** *šuva-pāvigam*, பெ.(n.) இயல்பானது; that which is natural.

*[Skt. svā-bhāvika > த. சுவபாவிகம்]*

**சுவபாவோக்தி** *šuvabāvōkti*, பெ.(n.) தன்மை நவிற்சியணி; a figure of speech in which the actuality alone is described.

*[Skt. svabhā-vōkti > த. சுவபாவோக்தி]*

**சுவம்**[1] *šuvam*, பெ.(n.) 1. சொந்தமானது; one's own. 2. உடைமை; wealth, belongings.

*[Skt. sva > த. சுவம்]*

**சுவம்**[2] *šuvam*, பெ.(n.) மங்கலம்; prosperity, good fortune. *"சைவமோங்கிச் சுவம்பெருக" (குற்றா. தல. திருமால். 143).*

*[Skt. šubha > த. சுவம்]*

**சுவம்**[3] *šuvam*, பெ.(n.) **சுவவு**[1] (அக.நி.) பார்க்க; see *šuvavu*.

**சுவம்**[4] *šuvam*, பெ.(n.) **சுவர்க்கம்**[1], **1.** பார்க்க (அக.நி.); see *šuvarkkam*[1], *1*.

*[Skt. ṣvaḥ> த. சுவம்]*

**சுவமேதைக்கிருசி** *šuva-mēdai-k-kiruši*, பெ.(n.) அதிகாரியின் அனுமதியின்றிச் செய்யும் பயிர்; unauthorised cultivation.

*[Skt. sva-mēdhā +kṛṣi> த. சுவமேதை கிருஷி >கிருசி]*

**சுவமேதையாக** *šuva-mēdai-y-āga*, வி.எ. (adv.) தானாகவே; of one's own accord.

*[Skt. sva-mēdhā > த. சுவமேதையாக]*

**சுவயங்கிருதம்** *šuvayaṅ-girudam*, பெ.(n.) தானே செய்துகொள்ளுவது; one's own doing, as evil.

*[Skt. svayaṃ-kṛta > த. சுவயங்கிருதம்]*

**சுவயந்தத்தன்** *šuvayan-tattaṉ*, பெ.(n.) பிள்ளைகள் பன்னிருவருள் தானாகவே ஒருவற்கு மகனாகப் புகுந்தவன்; self-given son, son adopted with his own consent, one of twelve puttiraṉ.

**சுவயம்** *šuvayam*, பெ.(n.) **சுயம்** பார்க்க; see *šuyam*.

*[Skt. svayam > த. சுவயம்]*

**சுவயம்பாகம்** *šuvayam-pāgam*, பெ.(n.) **சுயம்பாகம்** பார்க்க; see *šuyam-bāgam*.

*[சுவயம்+பாகம்]*

*[Skt. svayam > சுவயம் ]*

*பகு >பாகு> பாகம்*

**சுவயம்பு** *šuvayambu*, பெ.(n.) **சுயம்பு** பார்க்க; see *šuyambu*.

*[Skt. svayam+bhū > த. சுவயம்பு]*

**சுவயம்வரம்** *šuvayam-varam*, பெ.(n.) **சுயம்வரம்** பார்க்க; see *šuyam-varam*.

*[Skt. svayam+vara > த. சுவயம்வரம்]*

**சுவயார்ச்சிதம்** *šuvayārccidam*, பெ.(n.) **சுயார்ச்சிதம்** பார்க்க; see *šuyārccidam*.

*[Skt. svayam+ārjita > த. சுவயார்ச்சிதம்]*

**சுவர்** *šuvar*, பெ.(n.) **சுவர்க்கம்**[1], **1** (சங்.அக.) பார்க்க; see *šuvarkka*[1]*m, 1*.

*[Skt. svas > த. சுவர்]*

**சுவர்க்ககணம்** *šuvarkka-kaṇam*, பெ.(n.) செய்யுட்கணத்தொன்று metrical foot of three *nēr*.

*[Skt. svarga > த. சுவர்க்கம்+எகணம்]*

**சுவர்க்கம்**[1] *šuvarkkam*, பெ.(n.) 1. வானோர் உலகம்; Indra's heaven, the world of gods. *"தென்னாட்டவருஞ் சுவர்க்கம் புகுதலால்" (நாலடி, 243).* 2. மகிழ்ச்சி; happiness. *"நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற வம்மனாய்" (திவ். திருப்பா. 10).*

*[Skt. svarga > த. சுவர்க்கம்]*

**சுவர்க்கம்**[2] *śuvarkkam*, பெ.(n.) பெண்களின் மார்பகம் (பிங்.); woman's breast.

*[Skt. su-varga > த. சுவர்க்கம்]*

**சுவர்க்கர்** *śuvarkkar*, பெ.(n.) வானோர் (பிங்.); celestials, inhabitants of svarga.

*[Skt. svarga > த. சுவர்க்கர்]*

**சுவர்க்கவாசல்** *śuvarkka-vāśal*, பெ.(n.) திருமால் கோயில்களில் சிலை (மார்கழி) மாதத்து பதினோராம் நாள் முதல் வளர்பிறை பத்து நாள்வரை இறைவன் எழுந்தருளுதற்கு உரியதும், மால் உலக வாயில் போலக் கருதிப் பலரும் செல்வதற்கு உரியதும் மற்றக் காலங்களில் திறக்கப்படாததுமான தனி வாயில்; a gate in Viṣṇu temples believed to represent the entrance to heaven and opened annually for ten days from the 11th day of the bright of half of mārkaḷi to let the idol and devotees pass through.

*[சுவர்க்கம்+வாசல்]*

*[Skt. svarga > த. சுவர்க்கம்]*

**சுவர்க்கவாசலேகாதசி** *śuvarkka-vāśal-ēgādaśi*, பெ.(n.) சிலைத் திங்கள் வளர்பிறை பதினோராம் நாள்; the 11th tidi of the bright half of *mārkaḷi*.

*[சுவர்க்கம்+வாசல்+லேகாதசி]*

*[Skt. svarga+ egādaśi >த. சுவர்க்க வாசலேகாதசி]*

**சுவர்க்கவேதி** *śuvarkkavēdi*, பெ.(n.) முலை (தக்கயாகப். 593, உரை); breast.

**சுவர்க்கன்** *śuvarkkaṉ*, பெ.(n.) (வானோர் உலகத் தலைவனான) இந்திரன் (பிங்.); Indraṉ, as the lord of the celestial world.

த.வ. துறக்கக்கோ

*[Skt. svarga > த. சுவர்க்க>சுவர்க்கன்]*

**சுவர்க்காரோகணம்** *śuvarkkārōgaṇam*, பெ.(n.) துறக்கஞ் செல்லுகை; ascent to heaven, euphemism for death. *"மாறங்காரி..... சுவர்க்கா ரோகணஞ்செய்த பின்னை" (செந். iv, 336).*

*[Skt. svarga + ā-rōhaṇa > த. சுவர்க்காரோகணம்]*

**சுவர்க்காவதரணம்** *śuvarkkāvadaraṇam*, பெ.(n.) ஐந்துவகைத் திருமணங்களு ளொன்று (திருநூற். 4, உரை); one of *pañja-kalyāṇam*.

*[Skt. svarga + avataraṇa > த. சுவர்க்காவதரணம்]*

**சுவர்ச்சிலவணம்** *śuvarcci-lavaṇam*, பெ.(n.) வெடியுப்பு (சுக்கிரநீதி, 329); saltpetre.

*[சுவர்ச்சி+இலவணம். Skt. svarci > த. சுவர்ச்சி அளம்= உப்பு.அளம்+ அணம் >அளவணம்> இலவணம்]*

**சுவர்ணகதலி** *śuvarṇa-kadali*, பெ.(n.) வாழை வகை; a species of plantain.

*[Skt. svarṇa > த. சுவர்ணம்+கதலி]*

**சுவர்ணகாரன்** *śuvarṇa-kāraṉ*, பெ.(n.) பொற்கொல்லன்; goldsmith.

*[Skt. svarṇa > த. சுவர்ணம்+காரன்]*

**சுவர்ணத்திராவகம்** *śuvarṇa-t-tirāvagam*, பெ.(n.) **சுவர்ணபேதி** பார்க்க; see *śuvarṇa-bēdi*.

*[Skt. svarṇa + drāvaka> த. சுவர்ணத்திராவகம்]*

**சுவர்ணபசுமம்** *śuvarṇa-baśumam*, பெ.(n.) தங்கபற்பம்; medicinal powder calcined from gold.

*[Skt. svarṇa+bhasman > சுவர்ணபஸ்மம் >த. சுவர்ணபசுமம்]*

**சுவர்ணபுட்பம்** *śuvarṇa-puṭpam*, பெ.(n.) 1. பொற்பூ; gold flower. 2. பொற்பூக்களுக்குப் பதிலாகத், தேவதைகளுக்குக் கொடையாகக் கொடுக்கும் காசுகள்; coins offered to gods,

as substitute for gold flowers. 3. வேலையின் பொருட்டு அளிக்கும் வெகுமானம்; remuneration, money offered as inducement. 4. கையூட்டு (உ.வ.); bribe.

*[Skt. svarna +puṣpa> த. சுவர்ணபுஷ்பம் > சுவர்ணபுட்பம்]*

**சுவர்ணபூமி** *šuvarṇa-būmi*, பெ.(n.) 1. the boundary line of the universe. 2. வானுலகம்; Indra's heaven. 3. மியான்மர் என்று, இன்று வழங்கும் பர்மா தேசம் (ஈடு.); Miyanmar (Burmā).

*[Skt. svarṇa+bhūmi > த. சுவர்ணபூமி]*

**சுவர்ணபேதி** *šuvarṇa-bēdi*, பெ.(n.) தங்கத்தை இளக்கும் எரிநீர்மம்; aqua regia, a mixture of nitric and hydrochloric acids, as dissolving gold.

*[Skt. svarna+bhēdin > த. சுவர்ணபேதி]*

**சுவர்ணம்** *šuvarṇam*, பெ.(n.) 1. பொன்; gold. 2. நாணயம்; coin. *சுவர்ணாதாயம்.*

*[Skt. suvarṇa > த. சுவர்ணம்]*

**சுவர்ணமாட்சிகம்** *šuvarṇa-māṭcigam*, பெ.(n.) துணை மூலப்பொருள்களுள் ஒன்று (சங். அக.); an interior mineral, one of *upa-tādu.*

*[Skt. suvarṇa-mākṣika > த. சுவர்ண மாட்சிகம்]*

**சுவர்ணயூதி** *šuvarṇa-yūdi*, பெ.(n.) பொன்னிறமுள்ள மல்லிகை (மலை.) golden jasmine.

*[Skt. svarṇa-yūthikā > த. சுவர்ணயூதி]*

**சுவர்ணவேதை** *šuvarṇa-vēdai*, பெ.(n.) சுவர்ணபேதி பார்க்க; see *šuvarṇa-bēdi.*

**சுவர்ணாங்கி** *šuvarṇāṅgi*, பெ.(n.) முதன்மைப் பண்களுளொன்று (சங். சந். 47); (mus.) a primary rāgam.

*[Skt. svarṇāṅgi > த. சுவர்ணாங்கி]*

**சுவர்ணாதாயம்** *šuvarṇādāyam*, பெ.(n.) நிலமுதலியவற்றிலிருந்து வரும் கைப்பண வரும்படி; revenue in gold, rent or tax receivable in money.

*[சுவர்ணம்+ஆயம்.]*

*[Skt. svarṇa > த. சுவர்ணம்]*

*[ஒருகா: ஆகு+ஆயம் >(ஆது +ஆயம்) ஆதாயம். ஆயம்:= கூடுதல், தொகை]*

**சுவர்த்திகாதனம்** *šuvarttigādaṉam*, பெ.(n.) ஒக இருக்கை வகை (தத்துவப். 107, உரை); a yogic posture.

**சுவர்யோனி** *šuvar-yōṉi*, பெ.(n.) தெய்வப் பிறப்பு; birth as celestials. *"அஞ்ஞான கன்மத்தினாற் சுவர்யோனி புக்கு" (திருமந். 499).*

*[Skt. svar > த. சுவர்+யோனி]*

**சுவரக்கிராமம்** *šuvara-k-kirāmam*, பெ.(n.) ஏழிசை வரிசை; (mus.) gamut.

*[Skt. svara+grāma > த. சுவரக்கிராமம்]*

**சுவரணை** *šuvaraṇai*, பெ.(n.) உணர்ச்சி; consciousness.

*[Skt. smaraṇā > த. சுமரணை > சுவரணை]*

**சுவரம்** *šuvaram*, பெ.(n.) இசை; musical note.

*[Skt. svara > த. சுவரம்]*

**சுவரிதம்** *šuvaridam*, பெ.(n.) நலிதலோசை (பி.வி.40); circumflex accent.

*[Skt. svarita > த. சுவரிதம்]*

**சுவரூபம்** *šuvarūbam*, பெ.(n.) 1. தன்னியல்பு; natural state or quality, nature. 2. அரச குலம்; family or dynasty of kings.

*[Skt. sva-rūpa > த. சுவரூபம்]*

**சுவரூபாசித்தம்** *šuvarūbāšittam*, பெ.(n.) ஏதுப்போலி (சைவப். பக். 25); a fallacy in reasoning in which the middle term does not exist in the minor term.

*[Skt. svarūpāsiddha > த. சுவரூபாசித்தம்]*

**சுவல்பம்** *šuvalbam*, பெ.(n.) **சுவற்பம்** (இ.வ.) பார்க்க; see *šuvarpam*.

**சுவல்லி** *šuvalli*, பெ.(n.) கார்போகியின் வித்து; seed off scurfy pea.

*[Skt. su-valli > த. சுவல்லி]*

**சுவலன்** *šuvalan*, பெ.(n.) நெருப்பு (பிங்.); fire.

*[Skt. jvalana > த. சுவலன்]*

**சுவலி-த்தல்** *šuvali-*, 4. செ.கு.வி.(v.i.) சுடர் விட்டெரிதல்; to shine, burn brightly, blaze forth.

*[Skt. jval > த. சுவலி-,]*

**சுவலோகம்** *šuvalōgam*, பெ.(n.) மேலேழுல கத்துள் மூன்றாவதான, தேவருலகம் (சி.போ. பா.2:3,பக். 210); Indra's heaven, third of *mēl-ēl-ulagam*.

**த.வ. மூன்றாம் மேலுலகு**

*[Skt. suvar-lōka > த. சுவலோகம்]*

*[த. உலகம் >Skt. lōka]*

**சுவற்பம்** *šuvarpam*, பெ.(n.) சிறியது; trifle.

*[Skt. svalpa > த. சுவற்பம்]*

**சுவன்னகாரன்** *šuvanna-kāran*, பெ.(n.) **சுவர்ணகாரன்** (யாழ்.அக.); see *šuvarna-kāran*.

*[Skt. svarna > த. சுவன்ன+காரன்]*

**சுவன்னம்** *šuvannam*, பெ.(n.) **சுவர்ணம்** பார்க்க; see *šuvarnam*.

*[pkt. suvanna > த. சுவன்...]*

**சுவனம்** *šuvanam*, பெ.(n.) க...வு; dream. *"சாக்கிரஞ் சுவனஞ் சுழுத்தி" (ஞானா. 9:9).*

*[Skt. svapna > த. சுவனம்]*

**சுவசேத்திரம்** *šuva-šettiram*, பெ.(n.) கோளுக்குரிய ஆட்சி வீடு; a planet's own house in the horoscope.

*[Skt. sva+kṣētra > சுவக்ஷேத்திரம் >த. சுவசேத்திரம்]*

**சுவா** *šuvā*, பெ.(n.) நாய் (திவா.); dog

*[Skt. śvā > த. சுவா]*



**சுவாகதம்** *šuvākadam*, பெ.(n.) 1. வரவேற்கும் நன்மொழி; expr. denoting welcome, cordial reception. *"தோழியர் சுவாகதம் போதுகீங்கென" (சீவக. 1021).* 2. கிளி (திவா.); parrot.

*[Skt. svāgata > த. சுவாகதம்]*

**சுவாகா** *šuvāgā*, பெ.(n.) 1. வேள்வி செய்யும் பொழுது, தெய்வத்தின் பெயர்க்குப் பின் கூறும் மொழி; a term used along with the name of a god while offering oblation to him. *வேட்கோக் குயக்கோடன் ஆனந்தஞ் சேர்க சுவாகா (தொல். பொருள். 490, உரை).* 2. **சுவாகாதேவி** பார்க்க; see *suvāgā-dēvi*.

*[Skt. svāhā > த. சுவாகா]*

**சுவாகாதேவி** *šuvāgā-dēvi*, பெ.(n.) வேள்விக்கு உரிய தெய்வமான தீக்கடவுளின் மனைவி (பிங்.); wife of Agni, presiding over sacrificial offerings.

*[சுவாகா+தேவி]*

*[Skt. svāhā > த. சுவாகா]*

**சுவாகு** *šuvāgu*, பெ.(n.) இராமனாற் கொல்லப்பட்ட ஓர் அரக்கன்; a Tākṣasa Glain by Rāman. *"மற்பொரு சுவாகுவும் வந்து தோன்றினாற்" (கம்பரா. தாடகை. 32).*

*[Skt. Subāhu > த. சுபாகு > சுவாகு]*

**சுவாகை** *šuvāgai*, பெ.(n.) சுவாகாதேவி பார்க்க; see *šuvāgā-dēvi.* *"சுவாகை முதல்வனை முடியுற வணங்கி" (பாரத. இராசசூ. 108).*

*[Skt. svāhā > த. சுவாகை]*

**சுவாங்கி** *šuvāṅgi*, பெ.(n.) **கத்தூரிமஞ்சள்** (பிங்.) long and round zedoary.

*[Skt. šubhāṅgi > த. சுபாங்கி >சுவாங்கி]*

**சுவாசக்கண்ணறை** *šuvāša-k-kaṇṇaṟai*, பெ.(n.) மூச்சுப் பையிலுள்ள கண்ணறை (இங்.வை.); air-cell of the lungs.

*[சுவாசம்+கண்ணறை]*

*[Skt. švāsa > த. சுவாசம்]*

**சுவாசக்குத்து** *šuvāša-k-kuttu*, பெ.(n.) 1. உயிர்ப்பு (சுவாசம்) நோய்வகை; shooting pain in pulmonic complaint. 2. மூச்சுப்பையின் மூடுதோலில் உண்டாகும் நோய்வகை (M.L.); pleurisy.

*[சுவாசம்+குத்து]*

*[Skt. švāsa > த. சுவாசம்]*

**சுவாசக்குழல்** *šuvāša-k-kuḻal*, பெ.(n.) மூச்சுக்குழாய்; trachea, windpipe.

*[சுவாசம்+குழல்]*

*[Skt. švāsa > த. சுவாசம்]*

**சுவாசகம்**[1] *šuvāšagam*, பெ.(n.) 1. பேராமுட்டி (மலை.); fragrant sticky mallow. 2. எட்டி மரம்; (மலை.) strychnine tree. 3. உவர்மண் (வின்.); fuller's earth.

*[Skt. su-vāsaka > த. சுவாசகம்]*

**சுவாசகம்**[2] *šuvāšagam*, பெ.(n.) இன்மொழி பேசும் கிளி; parrot, as uttering sweet sounds. *சுவாசக மென்மொழித்திரு" (ஏகாதசிபு. உருக்கமா. 51).*

*[Skt. su-vācaka > த. சுவாசகம்]*

**சுவாசகரவருக்கம்** *šuvāšakara-varukkam*, பெ.(n.) ஈளையை (காசத்தை)ப் போக்கும் மருந்துகள்; the group of drugs which cures asthma or difficulty of breathing. (சா.அக.)

*[Skt. švāsā+khara+varga > த. சுவாச கரவர்க்கம் >சுவாசகரவருக்கம்]*

**சுவாசகாசம்** *šuvāša-kāšam*, பெ.(n.) ஈளைநோய் (தைலவ. தைல. 60); asthma.

*[Skt. švāsa+kāša > த. சுவாசகாசம்]*

**சுவாசகாசவிழுப்பு** *šuvāša-kāša-viḻuppu*, பெ.(n.) இரைப்பினால் காணும் வலிப்பு; asthma marked by bronchial spasm and a swelling of the bronchial mucous membrance - Bronchial asthma. (சா.அக.)

*[சுவாசகாசம் +இழுப்பு]*

*[Skt. švāsa+kāša > த. சுவாசகாசம்]*

**சுவாசகோசம்** *šuvāša-kōšam*, பெ.(n.) **சுவாசப்பை** பார்க்க; see *šuvāša-p-pai.*

*[Skt. švāsa+kōsa > த. சுவாசகோசம்]*

**சுவாசங்கட்டியேற்று-தல்** *šuvāšaṅ-gaṭṭi-y-ēṟṟu-*, 5. செ.கு.வி.(v.i.) உயிர்வளியைச் சுழிமுனைநாடி வழியே செலுத்துதல் (யாழ்.அக.); to force the breath through *šuḻimuṉai.*

*[சுவாசம்+கட்டியேற்று-,]*

*[Skt. švāsa > த. சுவாசம்]*

**சுவாசநிருணயம்** *šuvāša-niruṇayam*, பெ.(n.) 1. உயிர்வளியை அடக்கியாளுந் திறன்; control of breath, passing it through either nostril at pleasure or restraining it for any length of time. 2. உயிர்வளியை (பிராண வாயுவை) அடக்கியாலும் கும்பக ஆற்றல்; establishing or maintaining the control of breath in kumbaga. (சா.அக.)

*[Skt. švāsa+nirṇaya > த. சுவாசநிருணயம்]*

**சுவாசப்பை** *šuvāša-p-pai*, பெ.(n.) நுரையீரல்; lung.

*[சுவாசம்+பை]*

*[Skt. švāsa > த. சுவாசம்]*



**சுவாசபந்தம்** *šuvāša-bandam*, பெ.(n.) 1. உயிர்வளியை நிறுத்துகை; suspension of breath. 2. மூச்சு முட்டிப்போகை; asphyxia.

*[Skt. švāsa+bandha > த. சுவாசபந்தம்]*

**சுவாசம்** *šuvāšam*, பெ.(n.) மூச்சு, உயிர்ப்பு (திவா.); breath, respiration. *அவருக்கு நினைவு தப்பியிருந்தாலும் சுவாசம் மட்டும் சீராக இருந்தது.*

*[Skt. švāsa > த. சுவாசம்]*

**சுவாசம்வாங்கல்** *šuvāšam-vāṅgal*, பெ.(n.) 1. இறப்பு மூச்சு வாங்குகை; hard breathing at the moment of death. 2. மூச்சுப் பழக்கம் (பிராணாயாமம்) (வின்.); drawing in and restraining the breath.

*[சுவாசம்+வாங்கல்]*

*[Skt. švāsa > த. சுவாசம்]*

**சுவாசரோகம்** *šuvāša-rōgam*, பெ.(n.) **சுவாசகாசம்** பார்க்க; see *šuvāša-kāšam*.

*[Skt. švāsa+rōga > த. சுவாசரோகம்]*

**சுவாசாசயம்** *šuvāšāšayam*, பெ.(n.) **சுவாசப்பை** பார்க்க; see *šuvāša-p-pai*.

*[Skt. švāsāšaya > த. சுவாசாசயம்]*

**சுவாசி-த்தல்** *šuvāši-*, 4. செ.கு.வி.(v.i.) உயிர் வாழ, காற்றை உள்ளிழுத்து வெளிவிடுதல், மூச்சு விடுதல்; to breathe. *'கூட்டத்திற்குள் மாட்டிக்கொண்டு சரியாக சுவாசிக்க முடியாமல் திணறினான்'.*

*[Skt. švāsa > த. சுவாசி-,]*

**சுவாத்தியம்** *šuvāttiyam*, பெ.(n.) 1. மனநிறைவு; happiness, contentment, satisfaction. 2. நலம்; health, whole someness, ease. *"இது உடம்புக்கு நல்ல சுவாத்திய மாயிருக்கிறது".*

*[Skt. svāsthya > த. சுவாத்தியம்]*

**சுவாத்தியாயம்** *šuvāttiyāyam*, பெ.(n.) தானாகக் கற்ற கல்வி; stydying without the help of a teacher, voluntary study.

*[Skt. svaadhyāya > த. சுவாத்தியாயம்]*

**சுவாதகந்தி** *šuvādakandi*, பெ.(n.) **இத்தி** பார்க்க; see *itti*, stone fig.

*[Skt. svādu-gandhin > த. சுவாதகந்தி]*

**சுவாதந்திரியம்** *šuvātandiriyam*, பெ.(n.) தனியுரிமை; freedom, independence. *"பெத்தான்மாக்களுக்குச் சுவாதீனமே சுவாதந்திரிய மில்லை" (சி.சி. 11, 7, ஞானப்.).*

*[Skt. svātantrya > த. சுவாதந்திரியம்]*

**சுவாதம்**[1] *šuvādam*, பெ.(n.) **சுவாசம்** பார்க்க; see *šuvāšam*. *"சுவாத வாதம் மண்டுற" (கம்பரா. கும்பக. 50).*

*[Skt. švāsa > த. சுவாதம்]*

**சுவாதம்**[2] *šuvādam*, பெ.(n.) கருவுற்ற பெண்களுக்கும், பிள்ளை பெற்ற பெண் களுக்கும் உண்டாகும், சில நோய்களைக் குறிப்பிடும் பொதுவான பெயர்; a general term to refer to ailments of women in pregnancy or after delivery.

**சுவாதி** *śuvādi*, பெ.(n.) 15வது விண்மீனான விளக்கு விண்மீன்; the 15th nakṣatra.

*[Skt. svāti > த. சுவாதி]*

**சுவாதிக்கொக்கு** *śuvādi-k-kokku*, பெ.(n.) ஐப்பசி நிலவு நாளில், கூட்டமாக வெளிக் கிளம்பும், ஒருவகை வெண்கொக்கு; a species of white crone flying in large numbers on the day when the moon is in conjunction with cuvādi in the month of *aippasi*.

*[சுவாதி+கொக்கு]*

*[Skt. svāti > த. சுவாதி]*

**சுவாதிட்டானம்** *śuvādiṭṭāṉam*, பெ.(n.) ஆறு தாரங்களுள் மூலாதாரத்திற்கும் தொப்பு ளுக்கும் இடையே, ஆறிதழ்த்தாமரை வடிவாயுள்ள இடம்; (yōga) a cakra or mystic centre in the body, described as a six-petalled lotus, situate above *mūlādāram* and below the navel, one of *āṟātāram*, q.v.

*[Skt. svādhiṣṭhāna > த. சுவாதிட்டானம்]*

**சுவாதீன அடைமானம்** *śuvādīṉa-aḍaimāṉam*, பெ.(n.) பழக்க சத்தி (இ.வ.); usufructuary mortgage, mortgage with possession.

*[Skt. svādhīna > த. சுவாதீனஅடைமானம்]*

**சுவாதீனம்**[1] *śuvādīṉam*, பெ.(n.) 1. தனியுரிமை; independence. 2. உரிமை; right of possession. 3. தன்வயமானது (சி.சி.11,7, ஞானப்.); that which is under one's own control, opp. to *parātīṉam*.

*[Skt. svādhīna > த. சுவாதீனம்]*

**சுவாதீனம்**[2] *śuvādīṉam*, பெ.(n.) 1. ஒருவரின் தன் உணர்வு; consciousness, state of being conscious, concious control of one's faculties. *ஒருவர் சுவாதீனத்துடன் எழுதிக் கொடுத்த ஆவணமே செல்லும்.* 2. உடல் உறுப்புகளின் வாக்கமான இயக்கம்; normal functioning of limbs. *புத்தி சுவாதீனம் இல்லாதவன்.* 3. சொத்துகள் ஒருவரிடமே இருத்தல்; possession. *இடத்தைச் சுவாதீனம் செய்து கொள்வதற்கான உறுதி; முதன்மையான.* 4. ஒருவருக்கே உரித்தான விடுதலை (சுதந்திரம்); making oneself at home being at ease. *அவள் சுவாதீனமாக வந்து நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள்.*

**சுவாது** *śuvādu*, பெ.(n.) 1. சுவை; taste, flavour. 2. இனிமை; sweetness. 3. ஆடாதோடை (தைலவ. தைல. 131); *malabar-hut*.

*[Skt. svādu > த. சுவாது]*

**சுவாதுகண்டகம்** *śuvādu-kaṇḍagam*, பெ.(n.) நெருஞ்சி (சங்.அக.) cow-thorn.

*[Skt. svādu > த. சுவாது]*

*[கள் > கண்டு > கண்டகம் = முள், நீர்முள்ளி]*



**சுவாதுகண்டம்** *śuvādu-kaṇḍam*, பெ.(n.) **சுவாதுகண்டகம்** (மலை.) பார்க்க; see *suvādu-kaṇḍagam*.

**சுவாதுகந்தி** *śuvādu-kandi*, பெ.(n.) துளசி (மலை.) ; sacred basil.

*[Skt. svadu-gandhi > த. சுவாதுகந்தி]*

**சுவாதுமூலம்** *śuvādu-mūlam*, பெ.(n.) கிழங்கு வகை; carrot.

*[Skt. svādu > த. சுவாதுமூலம்]*

**சுவாந்தம்** *śuvāndam*, பெ.(n.) மனம் (வின்.); mind.

*[Skt. svānta > த. சுவாந்தம்]*

**சுவாபதேசம்** *śuvābadēšam*, பெ.(n.) உள்ளுறைப் பொருள்; esoteric sense, inner meaning, dist. fr. *சுவாபதேச வியாக்கியானம்.*

*[Skt. svāpadēša > த. சுவாபதேசம்]*

**சுவாபாவிகம்** *śuvābāvigam*, பெ.(n.) இயல்பாய் உள்ளது; that which is natural, peculiar or inhercent.

த.வ. இயல்புண்மை

*[Skt. svābhāviga > த. சுவாபாவிகம்]*

**சுவாமி** *śuvāmi*, பெ.(n.) 1. தலைவன்; master, lord. 2. இறைவன்; Supreme being. 3. கந்தன் (திவா.); Skandaṉ. 4. குரு; spiritual preceptor. *"எங்கள் சுவாமியுரை" (ஒழிவி. சத்திநிபா. 2).* 5. மூத்தோன் (சூடா.); elder. 6. ஒரு மதிப்புறவுச் சொல்; term of respectful address or reference, used also in pl. குமரகுருபரசுவாமிகள், நாராயணைங்கார் சுவாமி. 7. பொன் (அக.நி.); gold. 8. துறவறம் மேற்கொண்டவர்களைக் குறிப்பிடும் சொல்; a form of address or title for ascetics, monks and holy men சுவாமி விவேகானந்தர்.

*[Skt. svāmin > த. சுவாமி]*

**சுவாமிக்கடா** *śuvāmi-k-kaḍā*, பெ.(n.) கோயிற்கு வேண்டுதலுக்காக விடப்படும் ஆட்டுக்கடா (இ.வ.); ram dedicated to a temple.

*[சுவாமி+கடா]*

*[Skt. svāmin > த. சுவாமி]*

*[குள் >கள் >கடு >கடா= வலிமைமிக்க ஆண் விலங்கு]*

**சுவாமிகாரியம்** *śuvāmi-kāriyam*, பெ.(n.) 1. தலைவனுடைய வேலை; master's business. 2. வழிபாட்டுச் செயல் (நேர்த்திக் கடன்); religious duties, as fulfilment of vows.

*[சுவாமி+காரியம்]*

*[Skt. svāmin+ > த. சுவாமி]*

**சுவாமித்துரோகம்** *śuvāmi-t-turōgam*, பெ.(n.) முதலாளி அல்லது தலைவனுக்கு இழைக்கப்படும் தீங்கு; treachery. disloyalty.

*[Skt. svāmin+droha > த. சுவாமித்துரோகம்]*

**சுவாமிநாததேசிகர்** *śuvāmi-nāda-dēšigar*, பெ.(n.) 18–ஆம் நூற்றாண்டினரும் இலக் கணக்கொத்து, தசகாரியம் முதலியன இயற் றியவரும் திருவாவடுதுறை (ஆதீன)த்தைச் சார்ந்தவருமாகிய சிவத்துறவி; a šaivam ascetic of the *ṭiru-āvaḍuduṟai mutt*, the author of L*Lakkaṇa-k-kottu,*T*aša-kāriyam*, etc., 18th C.

**சுவாமிநாதன்** *suvāmi-nādaṉ*, பெ.(n.) சிவபெருமானுக்குக் குரு, முருகக் கடவுள் (இ.வ.); Skandar, as preceptor to lord šivaṉ.

த.வ. இறைக்குருவன்

*[Skt. svāmi-nātha > த. சுவாமிநாதன்]*

**சுவாமிபிருத்தியநியாயம்** *śuvāmi-piruttiya-niyāyam*, பெ.(n.) ஆண்டானடிமைத் திறம்போல உரிமை கூறும் நெறி; the Niyaya of master and slave, used in illustration of absolute ownership.

*[Skt. svāmi-bhṛtya+niyaya > த. சுவாமிபிருத்திய நியாயம்]*

**சுவாமிபேறு** *śuvāmi-pēṟu*, பெ.(n.) **சுவாமிபோகம்** பார்க்க; see *śuvāmi-bōgam.*

*[சுவாமி+பேறு]*

*[Skt. svāmin > த. சுவாமி]*

**சுவாமிபோகம்** *śuvāmi-bōgam*, பெ.(n.) நிலவுரிமையாளருக்குக் கொடுக்கும் துண்டு வாரம்; (G.Tn. D. I, 292). the proprietor's or landlord's right, share of produce or rent

due to the mirasdar or the hereditary proprietor by a ryot holding land in farm for a fixed period.

*[சுவாமி+போகம்]*

*[Skt. svāmin> த. சுவாமி]*

**சுவாமிமலை** *šuvāmi-malai*, பெ.(n.) குடந்தைக்கு மேற்பாலுள்ள, ஒரு கந்தன் ஆலயம் (சிலப். 24, பாட்டுமடை, அரும். பக். 516); a Skandaṉ shrine, west of Kumbakōṇam. *"தபோதனர்கள் சேருஞ் சுவாமிமலை வாழும் பெருமாளே" (திருப்பு. 186).*

*[சுவாமி+மலை]*

*[Skt. svāmin > த. சுவாமி]*

**சுவாமியம்** *šuvāmiyam*, பெ.(n.) சொத்துரிமை; ownership, right of property.

*[Skt. svāmya > த. சுவாமியம்]*

**சுவாமியார்** *šuvāmiyār*, பெ.(n.) துறவி (உ.வ.); ascetic.

*[Skt. svāmin+ > த. சுவாமி+ஆர்-மதிப்புறவு குறித்த பன்மையீறு]*

**சுவாயம்புமனு** *šuvāyambu-maṉu*, பெ.(n.) **சுவாயம்புவமனு** பார்க்க; see *šuvāyam buva-maṉu. "வருசுவாயம்பு மனுவொரு கூறு" (கூர்மபு. தமோகுண. 3).*

**சுவாயம்புவம்** *šuvāyambuvam*, பெ.(n.) 1. தானாகத் தோன்றியது; self-existent Being. *"சுவாயம் புவஞ் சொற்றாம்" (காஞ்சிப்பு. அமரி. 1).* 2. இருபத்தெட்டு சிவநூல்களுள் (சிவாக மங்கள்) ஒன்று (சைவச. பொது. 332, உரை); an ancient šaiva scripture in šanskrit, one of 28 *Sivāgamam.*

**த.வ. தான்தோன்றி**

*[Skt. svāyambhuva > த. சுவாயம்புவம்]*

**சுவாயம்புவமனு** *šuvāyambuva-maṉu*, பெ.(n.) தானாகத் (சுவயம்புவாகிய) நான்முகனிடம் தோன்றிய மனு; a Maṉu born of Svayambhu, a Nāṉmugaṉ.

*[Skt. svāyambhuva+maṉu > த. சுவாயம்புவமனு]*

**சுவார்ச்சிதம்** *šuvārccidam*, பெ.(n.) தானே தேடிய பொருள்; self-acquisition.

**த.வ. தன்னிட்டம்**

*[Skt. svārjita > த. சுவார்ச்சிதம்]*

**சுவார்த்தம்** *šuvārttam*, பெ.(n.) சொந்த வேலை; one's own interest.

**த.வ. தற்கருமம்**

*[Skt. svārtha > த. சுவார்த்தம்]*

**சுவார்த்தானுமானம்** *šuvārttāṉumāṉam*, பெ.(n.) தன்காட்சியினின்று தான் ஒன்றை உணருமாறு கொள்ளும் கருதலளவை (அனுமானம்) (சி.சி.அளவை, 8, மறைஞா.); inference from one's own perception.

*[Skt. svārtha+anumāna> த. சுவார்த்தானுமானம்]*

**சுவாரசம்** *šuvārašam*, பெ.(n.) **சுவாரசியம்** (சங்.அக.) பார்க்க; see *šuvārašiyam.*

**சுவாரசியம்** *šuvārašiyam*, பெ.(n.) 1. சுவை; relish, taste. 2. மனத்தை ஈர்த்து விறு விறுப்பை ஏற்படுத்தும் தன்மை, ஈடுபாடு; absorbing interest, relish, fascination. கதையை சுவாரசியத்துடன் படித்துக் கொண்டிருந்தார். (இ.வ.)

**த.வ. நனிசுவை**

*[Skt. svārasya > த. சுவாரசியம்]*

**சுவாரி** *šuvāri*, பெ.(n.) குதிரை, யானை போன்ற விலங்குகளின் மீது அல்லது வண்டி முதலிய ஊர்திகளில் அமர்ந்து செல்லும் பயணம்; ride on a horse, elephant, etc., or in a vehicle drive. கடற்கரையில் குதிரை சவாரி செய்தான்.

*[U. suvāri > த. சுவாரி]*

**சுவாலயம்** *šuvālayam*, பெ.(n.) மூச்சு விடும் போது மார்பு விரிவதற்கும் சுருங்குவதற்கும் உள்ள கால அளவு; the duration of dilatation and contraction of the chest while breathing.

**சுவாலி—த்தல்** *šuvāli-*, 4. செ.கு.வி.(v.i.) **சுவலி—** (சங்.அக.) பார்க்க; see *šuvali-*.

**சுவாலினி** *šuvālini*, பெ.(n.) ஊழித் தீயுலகங் களுள் ஒன்று (சைவபூ. சந். 57); (šaivam.) a supernal world under the regency of *Kālākkini*.

*[Skt. jvālinī > த. சுவாலினி]*

**சுவாலை** *šuvālai*, பெ.(n.) எரியும் தீயில் எழும் நாக்கு வடிவிலான நீண்ட சுடர், கனலொழுங்கு (சூடா.); flame. *நெருப்பு சுவாலை விட்டு எரிந்தது.*

*[Skt. jvālā > த. சுவாலை]*

**சுவாவி** *šuvāvi*, பெ.(n.) 1. உண்மையானவன்; sincere, truthful person. *"சுவாவியா மறையாது சொல்லினன்" (உத்தரரா. அசுவமே. 127).* 2. மூடன் (இ.வ.); fool, as simple-minded.

*[Skt. svabhāvin > த. சுவாவி]*

**சுவான்** *šuvān*, பெ.(n.) **சுவான்தார்** பார்க்க; see *šuvān-dār*.

**சுவான்காரன்** *šuvān-kāran*, பெ.(n.) **சுவான்தார்** (இ.வ.) பார்க்க; see *šuvān-dār*.

*[Persn. swāndār > த. சுவான்காரன்]*

**சுவான்தார்** *šuvān-dār*, பெ.(n.) உரிமை யுடையவர் (உ.வ.); owner, proprietor.

**த.வ. உடைமையன்**

*[Persn. swāndār > த. சுவான்தார்]*

**சுவானசக்கரம்** *šuvāna-šakkaram*, பெ.(n.) நாய் கடியாது விலக்குவதாகக் கருதப்படும் சக்கரம்; a mystic diagram, believed to be a protection against dog-bite. *சுவான சக்கரங் குக்கனைத் தடுக்கும் வகையே (மனோரன். 1: 5: 66).*

*[சுவானம்+சக்கரம்]*

*[Skt. švāna > த. சுவானம்]*

**சுவானம்** *šuvānam*, பெ.(n.) 1. நாய்; dog. *"இடத்தைக் காத்திட்ட சுவானம்போல்" (தாயு. ஆசையெனும். 27).* 2. நாயுருவி (மலை.); Indian burr.

*[Skt. švāna > த. சுவானம்]*

**சுவானுகாரன்** *šuvānu-kāran*, பெ.(n.) **சுவான்தார்** பார்க்க; see *šuvān-dār*.

**சுவானுபவம்** *šuvānubavam*, பெ.(n.) தன் நுகர்ச்சி (தன்னனுபவம்); one's own experience, self-experience. *"சுருதி குருவாக்குச் சுவானுபவம்" (ஒழிவி. பொதுவி. 13).*

*[Skt. sva+anu-bhava > த. சுவானுபவம்]*

**சுவானுபூதி** *šuvānu-pūdi*, பெ.(n.) **சுவானுபவம்** பார்க்க; see *šuvānubavam*.

**சுவானுபூதிகம்** *šuvānupūdigam*, பெ.(n.) தன் நுகர்ச்சி (அனுபவம்)யால் உண்டாகும் அறிவு (ஞானம்); knowledge acquired through one's own experience. *"சிவானுபவஞ் சுவானுபூதிகமாம்" (சி.சி.8: 34).*

**த.வ. தற்பட்டறிவு**

*[Skt. svānubhūti > த. சுவானுபூதி> சுவானுபூதிகம்]*

**சுவானுபோகம்** *šuvānupōgam*, பெ.(n.) நிலத்திற்கு உரிமையாளர் தாமே பயனடைகை (W.G. 496); direct enjoyment of the estate by the proprietor himself.

*[சுவானு+போகம்]*

*[Skt. svānu > த. சுவானு]*

**சுவாத்தியந்தார்** *šuvāttiyandār*, பெ.(n.) தலைமுறைத் தலைமுறையாக, நிலவுரிமை பெற்றவன் (R.T.); holder of free and hereditary lands and rights, especially applied to Brahmins.

**த.வ. நிலக்கிழார்**

*[**Skt.** svāsthya > த. சுவாத்தியந்தார்]*

**சுவி** *šuvi*, பெ.(n.) 1. கல்லால்; white fig. 2. இத்தி (மலை.) stone fig. 3. துளசி (மலை.); sacred basil.

*[**Skt.** šubha > த. சுவி]*

**சுவிகரி-த்தல்** *šuvikari-*, 4 செ.கு.வி.(v.t.) **சுவீகரி-த்தல்** (சங்.அக.) பார்க்க; see *šuvīkari-*.

*[**Skt.** svīkṛ > த. சுவிகரி >சுவீகரி-,]*

**சுவிகாரம்** *šuvigāram*, பெ.(n.) **சுவீகாரம்** பார்க்க; see *šuvīgāram*.

**சுவிகை** *šuvikai*, பெ.(n.) 1. கள் (சூடா.); toddy. 2. கச்சோலம் (மலை.); cardamom husk.

*[svādukā > த. சுவிகை]*

**சுவிசாலம்** *šuvišālam*, பெ.(n.) அதிகஅகலம் (வின்.); spaciousness.

*[**Skt.** su-višāla > த. சுவிசாலம்]*

**சுவிசேடகன்** *šuvišēḍagaṉ*, பெ.(n.) நற்செய்தி கூறும் கிறித்துவமத ஆசிரியன்; evangelist, one who preaches good tidings.

*[**Skt.** su-višēṣa > சுவிசேஷகன் > த. சுவிசேடகன்]*

**சுவிசேடம்** *šuvišēḍam*, பெ.(n.) நற்செய்தி; the gospel, good tidings.

*[**Skt.** su-višēṣa > சுவிசேஷம் > த. சுவிசேடம்]*

**சுவிசேடன்** *šuvišēḍaṉ*, பெ.(n.) **சுவிசேடகன்** பார்க்க; see *šuvišēḍagaṉ*.

*[**Skt.** su-višēṣa > சுவிசேஷன் > த. சுவிசேடன்]*

**சுவிதி** *šuvidi*, பெ.(n.) தூயநீரவர் (தீர்த்தங்கரர்) இருபத்து நால்வருள் ஒருவர் (திருக்கலம். காப்பு, உரை); a Jaina Arhat, one of 24 *tirttaṅgarar*.

*[**Skt.** šuvidhi > த. சுவிதி]*

**சுவீகரணம்** *šuvīkaraṇam*, பெ.(n.) **சுவீகாரம்** பார்க்க; see *suvīgāram*.

*[**Skt.** svīkaraṇa > த. சுவீகரணம்]*

**சுவீகரி-த்தல்** *šuvīkari-*, 4. செ.குன்றாவி.(v.t.) 1. ஒப்புதல் வழங்குதல் (அங்கீகரித்தல்); to agree, accept. 2. உட்கொள்ளுதல்; to take in, imbibe. *"வாசனையும் உஷ்ணமும் நீருக்கின்றி அந்நீரைச் சுவீகரிக்கிறபோர்க்கு ஆனதுபோல்" (சி.சி.2:6, சிவாக்.).* 3. ஈவு(தத்து)ப்பிள்ளையாக ஏற்றுக் கொள்ளுதல்; to adopt, as a son. 4. தனக்குரிய தாக்குதல்; தானாக ஏற்றல்; makie one's own adopt an idea scheme, etc.

**த.வ. விழைந்தேற்றல்**

*[**Skt.** svīkṛ > த. சுவீகரி >சுவீகரி]*

**சுவீகாரபுத்திரன்** *šuvīkāra-puttiraṉ*, பெ.(n.) ஈவுப்பிள்ளை; adopted son.

**த.வ. ஏற்பு மகன்**

*[**Skt.** svīkāra +put-tra> த. சுவீகாரபுத்திரன்]*

**சுவீகாரம்** *šuvīkāram*, பெ.(n.) 1. ஒப்புதல் வழங்குதல்; taking or accepting as one's own, assent. 2. ஒருவர் மற்றொருவருடைய குழந்தையைச் சட்டப்படி தன்னுடைய குழந்தையாக ஏற்றுக் கொள்ளுதல்; adoption of a child. *இவன் என் சுவீகாரப்புத்திரன். (இ.வ.)*

**த.வ. மகவேற்பு**

*[**Skt.** svīkāra > த. சுவீகாரம்]*

**சுவீகிருதம்** *šuvīkirudam*, பெ.(n.) ஏற்பிசைவு வழங்கப்பட்டது (அங்கீகரிக்கப்பட்டது); that which is accepted, adopted.

*[**Skt.** svīkṛta > த. சுவீகிருதம்]*

**சுவீயை** *šuvīyai*, பெ.(n.) **சுவகீயை** (சுக்கிரநீதி, 212) பார்க்க; see *šuvakīyai.*

*[Skt. svīyā > த. சுவீயை]*

**சுவுகம்** *šuvugam*, பெ.(n.) மோவாய்க் கட்டை (பிங்.); chin.

*[Skt. cubuka > த. சுவுகம்]*

**சுவேகம்** *šuvēgam*, பெ.(n.) உறை; cover. *"பட்டுச் சுவேகமொடு..... கட்டமை சுவடி" (பெருங். மகத. 1, 121).*

*[su-vēṣṭaka > த. சுவேகம்]*

**சுவேச்சை** *šuvēccai*, பெ.(n.) 1. தன்னிச்சை; one's own inclination, free will. *"ஈசன் சுவேச்சையாங் குணங்கண் மூன்றுள்" (பிரமோத். 21: 10).* 2. எந்தக் கட்சியையும் சாராத நிலை; independent candidate.

த.வ. தன்விருப்பு

*[Skt. svēcchā > த. சுவேச்சை]*

செயல்பாட்டைத் தானே முடிவு செய்து கொள்வது; தன்னளவில் கட்டுப்பாடில்லாதது.

**சுவேச்சைப்புத்திரன்** *šuvēccai-p-puttiran*, பெ.(n.) கணவனனுமதியின்றி மனைவியால் ஈவு(தத்து)ப்பிள்ளையாக ஏற்றுக்கொள்ளப் பட்டவன்; son adopted by a woman of her own accord without her husband's permission.

*[Skt. svēcchā +put-tra> த. சுவேச்சைப்புத்திரன்]*

**சுவேதகம்** *šuvēdagam*, பெ.(n.) விளாம்பழம் (மூ.அ.); wood-apple fruit.

*[Skt. švētaka > த. சுவேதகம்]*

**சுவேதகாண்டம்** *šuvēda-kāṇḍam*, பெ.(n.) 1. சீந்தில் (மலை.) gulancha. 2. வஞ்சி (மூ.அ.); rattan-palm.

*[Skt. švēta-kāṇḍa > த. சுவேதகாண்டம்]*

**சுவேதகாரி** *šuvēda-kāri*, பெ.(n.) வியர்வை பிறப்பிக்கும் மருந்து (இங். வை. 30); diaphoretics.

த.வ. வியர்வையுண்டாக்கி

*[Skt. svēda-kārin > த. சுவேதகாரி]*

**சுவேதகுசுமம்** *šuvēda-kušumam*, பெ.(n.) வெள்ளெருக்கு (மலை.); white madar.

*[Skt. švēta-kusuma > த. சுவேதகுசுமம்]*

**சுவேதகோளம்** *šuvēda-kōḷam*, பெ.(n.) வியர்வை தோன்றும் உடலுறுப்புகள்; sweat glands.

த.வ. வியர்வை நாளம்

*[Skt. svēda> த. சுவேதம்]*

**சுவேதசம்** *šuvēdašam*, பெ.(n.) நான்கு வகை உயிர்த்தோற்றங்களுள் வியர்வையினின்று தோன்றுவன; sweat-born lives, as lice, one of four *uyir-t-tōṟṟam.*

*[Skt. svēda-ja > த. சுவேதசம்]*

**சுவேதசாரம்** *šuvēda-šāram*, பெ.(n.) நாணல் (மலை.); Kaus, a large and coarse grass.

*[Skt. švēta+sāra > த. சுவேதசாரம்]*

**சுவேதத்துவீபம்** *šuvēda-t-tuvībam*, பெ.(n.) வெண்ணிறவுலகெனக் கருதப்படும் மகிழ்ச்சி யளிக்கக் கூடிய நிலம்; white island believed to be the world enjoyment.

*[Skt. švēta +dvība> த. சுவேதத்துவீபம்]*

**சுவேதநீர்** *šuvēda-nīr*, பெ.(n.) (வீரியம்) விந்து (நன். 268, உரை); semen.

*[சுவேதம்+நீர்]*

*[Skt. švēta > த. சுவேதம்]*

**சுவேதபித்தம்** *šuvēda-pittam*, பெ.(n.) உடல் முழுதும் வியர்வை உண்டாக்கும் ஒருவகை நோய் (சீவரட். 184); a disease causing excessive perspiration.

*[Skt. svēda+pitta > த. சுவேதம்]*

**சுவேதம்**[1] *šuvēdam*, பெ.(n.) வியர்வை (சூடா.); perspiration.

*[Skt. svēda > த. சுவேதம்]*

**சுவேதம்**[2] *šuvēdam*, பெ.(n.) 1. நீர்வஞ்சி (மூ.அ.); four-seeded willow. 2. வஞ்சிக் கொடி rattan-palm. 3. மாவிலிங்கை (மலை.) holy garlic pear. 4. சுவேதசாரம் பார்க்க; see *šuvēda-šāram*.

*[Skt. švēta+kāṇḍa > த. சுவேதம்]*

**சுவேதமூலம்** *šuvēda-mūlam*, பெ.(n.) சாரணை (மலை.); purslane-leaved trianthema.

*[Skt. švēta > த. சுவேதம்]*

**சுவேதமூலி** *šuvēda-mūli*, பெ.(n.) தொட்டாற் சிணுங்கி (மலை.) humble plant.

**த.வ. தொட்டாற்சுருங்கி**

*[Skt. švēta > த. சுவேதம்]*

**சுவேதமூலை** *šuvēda-mūlai*, பெ.(n.) **சுவேதமூலம்** (தைலவ. தைல. 93)பார்க்க; see *šuvēda-mūlam*.

*[Skt. švēta > த. சுவேதம்]*

**சுவேதரசம்** *šuvēda-rašam*, பெ.(n.) செரி மானத்திற்கு ஏற்றதும் வயிற்றில் உண்டாவது மான, ஒருவகை நீர் (C.G.); pancreatic juice.

**த.வ. செரிப்பு நீர்மம்**

*[Skt. švēta +rasa> த. சுவேதரசம்]*

**சுவேதராசாவர்த்தம்** *šuvēda-rāšāvarttam*, பெ.(n.) வெண்ணிறமுள்ள மணிவகை (வின்.); a white species of lapislazuli.

**த.வ. வெண்மணி**

*[Skt. švēta +ras āvarta> த- சுவேதராசா வர்த்தம்]*

**சுவேதவராககற்பம்** *šuvēda-varāga-karpam*, பெ.(n.) நான்முகனது 51–ஆம் ஆண்டின் 7–ஆம் நாளிறுதியில், உலகை அழிவிலிருந்து காத்த திருமாலின் வெள்ளைப் பன்றி உருவேற்பால் பெயர் பெற்றதும், அந்நான்முகனது, 51–ஆம் ஆண்டின் 8–ஆம் நாளுமாகிய நடப்புக் காலம்; the current age, being the 8th day of the 51st year of *Nāṉmugāṉ*, called after the white-boar incarnation of Viṣṇu who assuming that form rescued the world from the deluge that ended the 7th day.

*[Skt. švēta+varāha+kaṟpa > த. சுவேதவ ராககற்பம்]*

**சுவேதவராகம்** *šuvēda-varāgam*, பெ.(n.) திருமாலின் வெள்ளைப்பன்றிப் பிறப்பு; Viṣṇu in his white-boar incarnation.

*[Skt. švēta+varōha > த. சுவேதவராகம்]*

**சுவேதவனப்பெருமாள்** *šuvēda-vaṉa-p-perumāḷ*, பெ.(n.) மெய்கண்டதேவர் *Meykaṇḍa-dēvar.*

*[சுவேதவனம்+ பெருமாள்]*

*[Skt. švēta-vana > த. சுவேதவனம்]*

**சுவேதவனம்** *šuvēda-vaṉam*, பெ.(n.) தஞ்சை மாவட்டத்தில், சீர்காழிக்கு அருகிலுள்ள திருவெண்காடு என்னுஞ் சிவத்தலம்; a šivaṉ shrine near Shiyali in Tanjore district.

*[Skt. švēta-vana > த. சுவேதவனம்]*

**சுவேதவாகன்** *šuvēda-vāgaṉ*, பெ.(n.) **சுவேதவாகனன்** பார்க்க; see *šuvēda-vāgaṉaṉ*. *"சுவேதவாகனெனுநாமம் படைத்த பிரான்" (பாரத. அருச்சுனன்றீர். 44).*

*[Skt. Svēta-vāha > த. சுவேதவாகன்]*

**சுவேதவாகனன்** *šuvēda-vāgaṉaṉ*, பெ.(n.) வெள்ளைக் குதிரையை, ஊர்தியாக உடைய அருச்சுனன் (பிங்.); Arjunaṉ, as riding on a white horse.

**த.வ. வெண்குதிரையூர்தியன்**

*[Skt. Svēta-vāhana > த. சுவேதவாகனன்]*

**சுவேதன்** *śuvēdaṉ*, பெ.(n.) 1. உருத்திரருள் ஒருவர் (சி.போ.பா.2:3,பக். 212); a Rudraṉ. 2. ஐரோப்பியன்; Whiteman, European.

*[Skt. Svēta > த. சுவேதன்]*

**சுவேதனை** *śuvēdaṉai*, பெ.(n.) தன்னறிவு (வின்.); self-perception, self-knowledge.

*[Skt. sva+vēdanā > த. சுவேதனை]*

**சுவேதனைக்காட்சி** *śuvēdaṉai-k-kāṭci*, பெ.(n.) காட்சியளவையான் அறியவரும் அறிவு (அபரோட்ச ஞானம்) (வின்.); knowledge gained from one's own experience.

*[சுவேதனை+காட்சி]*

*[Skt. sva+vēdanā > த. சுவேதனை]*

**சுவேதாச்சுவதரம்** *śuvēdāccuvadaram*, பெ.(n.) நூற்றெட்டு உபநிடதத் தொகுதிகளுள் ஒன்று; an Ubaniṣad, one of 108.

*[Skt. Svētāśvatara > த. சுவேதாச்சுவதரம்]*

**சுவேதாம்பரர்** *śuvēdāmbarar*, பெ.(n.) வெள்ளாடை அணிந்த சமணமுனிவர்; Jaina mendicants clad in white, opp. to tigambaran.

**த.வ. வெள்ளாடைச் சமணர்**

*[Skt. švēta+ambara > த. சுவேதாம்பரர்]*



**சுவேதம்பரர்** என்னும் பிரிவு 2000 ஆண்டுகளுக்கு முன்பே தோன்றியதாகத் தெரிகிறது. கி.பி. முதல் நூற்றாண்டில் தோன்றிய மூலாராதனை என்னும் பிராகிருத மொழிச் சமண நூலில் திகம்பரப் பிரிவிலிருந்து சுவேதம்பரர் தனிப்பிரிவினராகக் காணப்பட்ட செய்தி குறிப்பிடப்படுகிறது. கி.பி. பத்தாம் நூற்றாண்டில் பழங்கன்னட மொழியில் இதன் மொழி பெயர்ப்பாக வெளி வந்த வட்டாராதனை எனும் நூலும் இச்செய்தியைக் குறிப்பிடுகிறது.

ஆடையெதுவும் அணியாமல் அம்மணமாகத் திரிந்தவர் திகம்பரச் சமணர் எனப்பட்டனர். மேற்கண்ட நூல்களில் தமிழ்நாட்டுக்குத் திகம்பரச் சமணர் வந்தபோது ஊருக்குள் வர எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டது. குறிப்பாகச் சோழநாட்டு எல்லையில் மக்கள் எதிர்த்தனர். மன்னனுக்கு இச்செய்தி எட்டியது. வெள்ளாடையை அணிந்த சமணத்துறவிகள் ஊருக்குள் வர மன்னன் இசைவளித்தான். பகல் நேரத்தில் ஊருக்குள் வர விரும்பியோர் வெள்ளாடை தோளில் நெடுக அணிந்தனர். வெள்ளாடை அணிய விரும்பாத திகம்பரச் சமண முனிவர் காட்டுக் குகைகளில் தங்கினர். இரவில் மட்டும் உணவுக்காக ஊருக்குள் வந்தனர். அவர்களுக்கு **ஐயம்** என்னும் மண் ஏனத்தில் சோறிட்டு வீட்டுத் திண்ணையில் வைத்த பின் கதவைச் சாத்திக் கொண்டனர். இந்நிகழ்ச்சியை "கண்டோடிக் கதவடைக்கும் மட நல்லார்" எனத் திருநாவுக்கரசரும் குறிப்பிட்டுள்ளார்.

இருட்டு நேரத்தில் குகையிலிருந்து வெளியில் வரும் திகம்பர முனிவர்கள் அந்த உணவை நின்றவாறே உண்டு செல்வது வழக்கம். நெடிய வரலாற்றில் சமண முனிவர்களில் ஒரு பிரிவினரை வெள்ளாடை அணியச் செய்த பெருமை தமிழ்நாட்டைச் சாரும். சுவேதம் என்பது வெண்மை. அம்பரம் என்பது ஆடை. திக் என்பது திசை. திக்+அம்பரர்–திகம்பரர்–திசைகளையே ஆடையாக உடுத்த அம்மணத் துறவிகள்.

**சுவேலம்** *śuvēlam*, பெ.(n.) இலங்கையிலுள்ள ஒரு மலை; a mountain in Ceylon. *"இடையுவாவினிற் சுவேலம் வந்திறுத்து" (கம்பரா. மீட்சிப். 139).*

*[Skt. su-vēla > த. சுவேலம்]*

**சுவேலை** *śuvēlai*, பெ.(n.) **சுவேலம்** பார்க்க; see *śuvēlam*. *"சுவேலை நெடுஞ் சிலம்பின்" (சேதுபு. இராமனருச். 9).*

*[Skt. su-vēla > த. சுவேலை]*

**சுன்னடி** *śuṉṉaḍi*, பெ.(n.) **சுங்கடி** (இ.வ.) பார்க்க; see *śuṅgaḍi*.

*[Te. tcuṅguḍi > த. சுன்னடி]*

**சுன்னத்துக்கலியாணம்** *šunnattu-k-kaliyāṇam*, பெ.(n.) ஆண்குறியின் முன் தோலை எடுத்துவிடுஞ் சடங்கு; ceremony of circumcision.

*[சுன்னத்து+கலியாணம்]*

*[**Ar.** sunnat > **த.** சுன்னத்து]*

**சுன்னி** *šunni*, பெ.(n.) முகம்மதியரில் ஒரு பிரிவினர் (இ.வ.); a religious sect among Muhammadans.

*[**Ar.** sunni > **த.** சுன்னி]*

**சுனகன்** *šuṉagaṉ*, பெ.(n.) 1. நாய்; dog. 2. தென்மேற்றிசை (தைலவ.); the south west quarter.

*[**Skt.** šunaka > **த.** சுனகன்]*

**சுனம்** *šuṉam*, பெ.(n.) வெள்ளுள்ளி (மலை.); garlic.

*[**Skt.** lašuna > **த.** சுனம்]*



**சுனாசமாய்** *šuṉāšam-āy*, வி.எ.(adv.) **சுனாயாசமாய்** பார்க்க; see *šuṉāyāšam-āy*.

**சுனாசி** *šuṉāsi*, பெ.(n.) **சுனாசீரன்** (பிங்.); பார்க்க see *šuṉāsiraṉ*.

**சுனாசீரன்** *šuṉāšīraṉ*, பெ.(n.) இந்திரன் (சூடா.); Indra.

**த.வ. துறக்கக்கோ**

*[**Skt.** šunāsīra > **த.** சுனாசீரன்]*

**சுனாசு** *šuṉāšu*, பெ.(n.) **சுனாசீரன்** (வின்.) பார்க்க; see *šuṉāšīraṉ*.

**சுனாயாசமாய்** *šuṉāyāšam-āy*, வி.எ.(adv.) வருத்தமின்றி (வின்.); with ease, without trouble or exertion.

*[an-āyāsa > **த.** சுனாயாசமாய்]*

**சுனாவணி** *šuṉāvaṇi*, பெ.(n.) விண்ணப்பம் வாசிக்கை (வின்.); reading of petitions, commonly official.

**த.வ. வேண்டுகோள் படிக்கை**

*[**U.** sunāōṇi > **த.** சுனாவணி]*

**சுனி** *šuṉi*, பெ.(n.) பெண்ணாய் (வின்.); bitch.

*[**Skt.** sunī > **த.** சுனி]*

**சுனிசனம்** *šuṉišaṉam*, பெ.(n.) புளியாரை என்னும் பூடு வகை; yelloww wood-sorrel.

*[su-niṣaṇṇa > **த.** சுனிசனம்]*

**சுனுக்கு** *šuṉukku*, பெ.(n.) **சுனுகி** (வின்.) பார்க்க; see *šuṉugi*.

**சுனுகி** *šuṉugi*, பெ.(n.) சதுரக்கள்ளி (மலை.) வகை; a kind of square spurge.

*[**Skt.** snuhi > **த.** சுனுகி]*

**சூக்கம்** *šūkkam*, பெ.(n.) 1. நுண்மை (வின்.); minuteness, subtleness. 2. நுண்ணிய பொருள்; minute object. 3. **சூட்சுமம் 2** பார்க்க; see *šūṭcumam*. *"சூக்கமொடு தூலத்து" (திருவாச. 3:10).* 4. கூர்மை; skill, ingenuity; acuteness, as of intellect.

*[**Skt.** sūkṣma > சூஷ்மம் > **த.** சூக்கம்]*

**சூக்குமசரீரம்** *šūkkuma-šarīram*, பெ.(n.) **சூட்சுமசரீரம்** (ஞானா. 8,4,உரை) பார்க்க; see *šūṭcuma-šarīram*, subtle body.

*[**Skt.** šūkṣma+šarira > சூஷ்மச்சரீரம் > **த.** சூக்குமசரீரம்]*

**சூக்குமதண்டுலம்** *šūkkuma-taṇḍulam*, பெ.(n.) திப்பிலி (மலை.) long pepper.

*[**Skt.** sūkṣma+taṇḍulā]*

**சூக்குமதண்டுலை** *šūkkuma-tandulai*, பெ.(n.) **சூக்குமதண்டுலம்** (சங்.அக.) பார்க்க; see *šūkkuma-tandulam*.

**சூக்குமதாரி** *šūkkuma-dāri*, பெ.(n.) வஞ்சகன் (யாழ்.அக.); deceitful person.

த.வ. கவடன்

*[Skt. sūkṣma > த. சூக்குமம்+தாரி-ஓர் ஈறு]*

**சூக்குமபஞ்சாக்கரம்** *šūkkuma-pañjāk karam*, பெ.(n.) அகார, உகார, மகார, நாத விந்துகளாகிய ஓங்கார மந்திரம் (சி.போ.பா. 4,1,பக். 258); (šaivam.) the mystic syllable ōm, considered as the subtle five-lettered mantra, consisting of a, u, m, nādam and vindu.

த.வ. ஓம்

*[Skt. sūkṣma+pañcākṣara > த. சூக்கும பஞ்சாக்கரம்]*

**சூக்குமபத்திரம்** *šūkkuma-pattiram*, பெ.(n.) 1. கடுகு; mustard. 2. கொத்தமல்லி; coriander. 3. சீரகம்; cumin. 4. செங்கரும்பு; a variety of sugar cane.

*[Skt. šukṣma+patra > த. சூக்குமபத்திரம்]*

**சூக்குமபராசத்தி** *šūkkuma-parāšatti*, பெ.(n.) படைத்தல் (சிருட்டி), காத்தல் (திதி), அழித்தல் (சங்காரம்), மறைத்தல் (திரோபவம்), அருள்செய்தல் (அனுக்கிரகம்) என ஐந்தொழிலைச் செய்யும் பரையாற்றல் (பராசக்தி) (சி.சி.1, 68, ஞானப்.); energy or Sakti wich functions in the subfler form of pañja-kiruttiyam.

*[Skt. sūkṣma+parā-šakti > த. சூக்குமபராசத்தி]*

**சூக்குமபுத்தி** *šūkkuma-butti*, பெ.(n.) கூர்மையான அறிவு; sharp wit, keen intellect.

*[Skt. sūkṣma +buddhi> த. சூக்குமபுத்தி]*

**சூக்குமபூதம்** *šūkkuma-būdam*, பெ.(n.) ஐம்பூதங்களுக்குங் காரணமாயுள்ள தன்மாத்திரை வடிவான பூதங்கள் (யாழ்.அக.); subtle elements, being types or radicals of the five grosser elements.

*[சூக்குமம்+பூதம்]*

*[Skt. sūkṣma> த. சூக்குமம்]*

**சூக்குமம்** *šūkkumam*, பெ.(n.) 1. நுண்மை; minuteness, subtleness. 2. சூட்சுமம், 2. பார்க்க; see *šūṭcumam*,2. *"சூக்குமங் கெட்டுத் தூலந் தோன்றிடா" (சி.சி.2: 48).* 3. சிவநூல்கள் இருபத்தெட்டனுள் ஒன்று (சைவச. 335, உரை); an ancient šaivam scripture in Sanskrit, one of 28 *šivākamam*.

*[Skt. sūkṣma > த. சூக்குமம்]*

**சூக்குமவாக்கு** *šūkkuma-vākku*, பெ.(n.) **சூக்குமை** (சி.சி.1: 23) பார்க்க; see *šūkkumai*.

*[சூக்குமம்+வாக்கு]*

*[Skt. sūkṣma > த. சூக்குமம்]*

**சூக்குமாலங்காரம்** *šūkkumālaṅgāram*, பெ.(n.) **நுட்பம்** (தண்டி. 63, உரை); figure of speech in which an idea is expressed by subtle hints.

*[Skt. sūkṣma+alam-kāra > த. சூக்குமாலங் காரம்]*

**சூக்குமி-த்தல்** *šūkkumi-*, 4 செ.கு.வி.(v.i.) நுட்பமாதல் (யாழ்.அக.); to be minute, subtle.

*[Skt. sūkṣma > த. சூட்சுமம் – சூக்குமம் > சூக்குமி]*

**சூக்குமை** *šūkkumai*, பெ.(n.) நால்வகை வாக்குக்களில் எழுத்தினை பலுக்க (உச்ச ரிக்க)த் தொடங்கும் போது, உந்தியிலிருந்து எழுவதாகக் கருதப்படும் பரையென்னும் ஒலி (சி.போ.பா.2:2,பக். 135); subtle sound preceeding full utterance, supposed to emanate from navel, one of four vākku.

*[சூக்குமம் > சுக்குமை]*

**சூக்தம்** *šūkdam*, பெ.(n.) மறையில் (வேதத்தில்) பல இருக்குக்கள் கொண்ட பகுதி; vēdic hymn.

*[Skt. sūkta > த. சூக்தம்]*

**சூக்தி** *šūkti*, பெ.(n.) ஆன்றோர்ச் சொல்; wise utterance.

*[Skt. sūkti > த. சூக்தி]*

**சூகதோடம்** *šūgadōḍam*, பெ.(n.) பெண் குறியில் உண்டாகும் வெள்ளைநோய்; an ulcer or venereal sore in the genetal of a female. (சா.அக.)

**சூகம்** *šūgam*, பெ.(n.) 1. நெல் முதலியவற்றின் தோகை; beard or awn of a spike of rice, barley, etc. 2. ஊர்வன; reptiles.

*[Skt. sūka > த. சூகம்[1]]*

**சூகரம்** *šūgaram*, பெ.(n.) 1. பன்றி; hog. *"மன்னன் மாமயில் சூகர மாய" (யசோதர. 4: 27).* 2. ஒருவகை மான் (இலக். அக.); a kind of deer.

*[Skt. sūkara > த. சூகரம்]*

**சூகரவேதண்டம்** *šūgara-vēdaṇḍam*, பெ.(n.) பழனி மலையுள்ள பன்றிமலைத் தொடர்; the mountain range which includes the Palani hills. *"சூகரவேதண்டனே" (விறலிவிடு. 1069).*

**சூச்சம்** *šūccam*, பெ.(n.) **சூட்சம்** (இ.வ.) பார்க்க; see *šūṭcam.*

*[Skt. sūkṣma > த. சூச்சம்]*

**சூசககுரு** *šūšaga-guru*, பெ.(n.) சமம், தமம் முதலியவற்றைக் கற்றுக் கொடுக்கும் குரு (விவேகசிந். பக். 28); preceptor who instructs his pupil in the virtues of šamam, tamam etc.

*[சூசகம்+குரு]*

*[Skt. sūcaka > த. சூசகம்]*

**சூசகம்** *šūšagam*, பெ.(n.) 1. ஒன்று இருப்பதன் அறிகுறி (யாழ்.அக.); sign, indication, omen. *'தொழிலாளர்கள் போராட்டத்தை நிறுத்தி விடுவார்கள் என்பதற்கான சூசகங்கள் தென்பட்டன'.* 2. தருப்பை (மலை.); sacrificial grass. 3. ஒன்றை உய்த்தறியும் வகையில் வெளிபடுத்தும் முறை; suggestion, hint. *அலுவலகத்தில் மாற்றம் ஏற்படலாம் என்பதை முதல்வர் சூசகமாகத் தெரிவித்தார். (இ.வ.)*

**த.வ. உன்னிப்பு**

*[Skt. sūcaka > த. சூசகம்]*

**சூசகவாயு** *šūšaga-vāyu*, பெ.(n.) **சூதகவாயு** (சங்.அக.); பார்க்க *šūdaga-vāyu.*

*[Skt. sūtikā-vāyu > த. சூசகவாயு]*

**சூசகன்** *šūšagaṉ*, பெ.(n.) 1. ஒற்றன் (யாழ்.அக.); spy, informer. 2. ஆசிரியன் (யாழ்.அக.); teacher. 3. சமம், தமம் முதலிய குணங் களுள்ளவன்; person of exemplary virtues. *"சூசகனாம் விவேகத்தால்" (வேதா. சூ. 17).*

*[Skt. sūcaka > த. சூசகன்]*

**சூசனம்** *šūšaṉam*, பெ.(n.) 1. குறிப்பிக்கை; intimation by sign, gesture etc; indication, suggestion. 2. குறிப்பு; note, excursus. *பெரியபுராண சூசனம்.* 3. திட்டம்; accuracy, exactness. 4. கூர்மை; quickness of apprehension.

*[Skt. sūcana > த. சூசனம்]*

**சூசனை** *šūšaṉai*, பெ.(n.) **சூசனம்** (வின்.) பார்க்க; see *šūšaṉam.*

*[Skt. sūcanā > த. சூசனை]*

**சூசி**[1] *šūši*, பெ.(n.) 1. ஊசி (சூடா.); needle. *"சேறுஞ் சூசியிற் சென்றது" (கம்பரா. வாலிவதை. 57).* 2. **சூசிகாவியூகம்** பார்க்க; see *šūšikā-viyūgam.* 3. **சூசிக்கை** (சிலப். 3, 18, உரை) பார்க்க; see *šūši-k-kai.* a kind of gesticulation. 4. துளை (யாழ்.அக.); hole. 5. மெல்லிய கறையுள்ள துணிவகை; cloth with

fine stripes. 6. அட்டவணை (வின்.); index, catalogue.

*[Skt. sūci > த. சூசி]*

*[த. ஊசி > Skt. sūci]*

**சூசி²–த்தல்** *šūši-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1. சுருக்குதல்; to summarise, state briefly. *"முன்னோர் விரிவாகவுரைத்ததை நான் சூசித்துக் கூறினேன்" (சி.சி.2:61, சிவாக்.).* 2. **சூசிப்பி–த்தல்,** பார்க்க; see *šūšippi-*.

*[Skt. sūc > த. சூசி > சூசி]*

**சூசிக்கல்** *šūši-k-kal*, பெ.(n.) காந்த ஊசி (வின்.); mariner's needle, compass.

*[Skt. sūci> த. சூசிகல்]*

**சூசிக்கை** *šūši-k-kai*, பெ.(n.) நடுவிரலும் பெருவிரலுஞ் சேரச் சுட்டுவிரல் நிமிர, மற்றை இரு விரல்களும் முடங்கி நிற்கும் இணையா வினைக்கை வகை (சிலப். 3:18, உரை); a gesture with one hand in which the thumb and the middle finger are joined, the fore finger is stretched and the other two are folded.

*[Skt. sūci > த. சூசிகை]*

**சூசிகடாகநயம்** *šūši-kaḍāga-nayam*, பெ.(n.) **சூசிகடாகநியாயம்** (சி.சி.அளவை, 5, சிவ; see *šūši-kaḍāga-niyāyam*.

**சூசிகடாகநியாயம்** *šūši-kaḍāga-niyāyam*, பெ.(n.) ஊசி கொப்பரை இரண்டையும், செய்ய நேர்ந்தவிடத்துச் சிறிதான ஊசியை முன் செய்து, பெரிதான கொப்பரையைப் பின் செய்வதுபோலச் சிறியதை முற்படவும், பெரியதைப் பிற்படவும், இயற்றுவது தகுதி எனக் கூறும் நெறி; nyāyam of the needle and kettle, illustrating the principle that, when two things, like needle and kettle, are to be made, the easier should first be taken up.

*[Skt. sūci+taṭāha+skt.nyāya > த. சூசிகடாக நியாயம்]*

**சூசிகம்** *šūšigam*, பெ.(n.) ஒருவகைப் பறை (இ.வ.); a proclamatory drum, bom-bom.

*[Skt. sūcaka > த. சூசிகம்]*

**சூசிகன்** *šūšigaṉ*, பெ.(n.) தையற்காரன் (யாழ்.அக.); tailor.

*[Skt. sūcika > த. சூசிகன்]*

**சூசிகாசருமப்பிரயோகம்** *šūšikāšaruma-p-pirayōgam*, பெ.(n.) உடம்பின் தோலுக் கடியில் ஊசி குத்தி, மருந்தைச் செலுத்துகை; an act of throwing a medicinal liquid into the subcutaneous tissue - Hypo dermic injection. (சா.அக.)

த.வ. ஊசி குத்தல்

**சூசிகாகிராணி** *šūšigā-kirāṉu*, பெ.(n.) நாட்பட்ட கழிச்சல் வகை; a kind of diarrhoea. (சா.அக.).

**சூசிகாசூலை** *šūšigā-šūlai*, பெ.(n.) **சூதகவாயு** பார்க்க; see *šūdaga-vāyu.*

*[Skt. sūtikā > த. சூசிகா]*

**சூசிகாபத்திரம்** *šūšigā-pattiram*, பெ.(n.) **சூசீபத்திரம்** பார்க்க; see *šūsī-pattiram.*

*[Skt. sūcikā+patra > த. சூசிகாபத்திரம்]*

**சூசிகாபரணம்** *šūšigāparaṇam*, பெ.(n.) மருந்து வகைகளுள் ஒன்று (தஞ்.சர.iii,68); a kind of medicine.

**சூசிகாபாணம்¹** *šūšigā-bāṇam*, பெ.(n.) ஒருவகைக் கூரிய அம்பு (யாழ்.அக.); a kind of sharp arrow.

*[Skt. sūci kā> த. சூசிகா]*

**சூசிகாபாணம்²** *šūšigā-pāṇam*, பெ.(n.) 1. ஒரு வகை ஊதை (வாதம்) நோய்; a vātha disease. 2. அத்திமரம்; fig tree - Ficus glamerata (சா.அக.)

**சூசிகாபைசாசி** *šūšigā-paišāši*, பெ.(n.) பாகத மொழிவகை (சி.சி.பாயி. மறைஞா. பக். 6); a variety of the Prākṛt language.

**சூசிகாவாயு** *šūšigā-vāyu*, பெ.(n.) **சூதகவாயு** பார்க்க; see *šūdaga-vāyu.*

*[Skt. sūtikā +vayu> த. சூசிகாவாயு]*

மாதவிலக்கில் (சூதகம்) அரத்தம் செல்லாது, கருக்குழியில் அரத்தங்கட்டிக் கொண்டு கை, கால், கழுத்து, உள்ளங்கால் நகக்கண்களில் குத்த லெடுக்கும் நோய். (சா.அக.)

**சூசிகாவாயுசன்னி** *šūšigā-vāyu-šaṉṉi*, பெ.(n.) 1. குழந்தை பிறந்தபின் பெண்களுக்கு அழுக்குத் தங்குவதால் உண்டாகும் காய்ச்சல்; septic poisoning (fever) occuring in child bed-Puerperal fever. 2. கருப்ப வளி (கருப்ப வாயு)யினால் ஏற்படும் இசிவு (சன்னி); delrrium is a hysterical patient.

**சூசிகாவியூகம்** *šūšigā-viyūgam*, பெ.(n.) ஊசிமுனை போல் முனை சிறுத்து வர அமைக்கும் படைவகுப்பு வகை; a kind of military array in the shape of a sharp-pointed column. *"சூசிகாவியூகத்தால் முன்னே பயமுண்டாகும்போதும்" (மணிமே. 7, 187).*

**சூசிகை** *šūšigai*, பெ.(n.) 1. ஊசி; needle. 2. யானைத் துதிக்கை (யாழ்.அக.); elephant's trunk.

*[Skt. sūcikā > த. சூசிகை]*

**சூசிபத்திரம்** *šūšipattiram*, பெ.(n.) **சூசீபத்திரம்** பார்க்க; see *šūšī-pattiram.*

**சூசிமுகம்** *šūši-mugam*, பெ.(n.) நிரய வகை (சேதுபு. தனுக்கோ. 4); a hell.

*[சூசி+முகம்]*

*[Skt. sūcī > த. சூசி]*

**சூசியம்** *šūšiyam*, பெ.(n.) சூட்டிறைச்சி (பிங்.); hot meat roasted on a spit.

*[Skt. sūcya. cf. šūlya > த. சூசியம்]*

**சூசிவியூகம்** *šūši-viyūgam*, பெ.(n.) ஊசி முனை போல் முனைசிறுத்து வர அமைக்கும், படைவகுப்பு வகை (சுக்கிரநீதி, 338); a kind of battle-array.

*[Skt. sūci+vyūha > த. சூசிவியூகம்]*

**சூசீபத்திரம்** *šūšī-pattiram*, பெ.(n.) பொருளட்டவணை; index, table of contents.

*[Skt. sūci-patra > த. சூசீபத்திரம்]*

**சூசு** *šūšu*, பெ.(n.) செருப்பு (பாதரட்சை); shoes. *"காலிலே சூசுகள் போடலாமா" (கட்டபொம்மு. பக். 51).*

த.வ. காலணி

*[E. shoes > த. சூசு]*

**சூசுகம்** *šūšugam*, பெ.(n.) 1. முலைக்கண் (சூடா.); nipple; orifice of a teat. 2. முலைக் காம்பு; nipple.

*[Skt. cūcuka > த. சூசுகம்]*

**சூசுகன்** *šūšugaṉ*, பெ.(n.) வணிகக் குலத்தோனுக்கு, இழிகுலப் பெண்ணிடம் பிறந்தவன் (அருணகிரி. பு, வலம்புரி. 108); person born of Vaišya father and šūdra mother.

*[Skt. sūcaka > த. சூசுகன்]*

**சூட்சக்கயிறு** *šūṭca-k-kayiṟu*, பெ.(n.) 1. **சூத்திரக்கயிறு, 1** (வின்.) பார்க்க; see *šūttira-k-kayiṟu*,1. 2. திரையை மேலேற்றுங் கயிறு; rope for drawing up curtains. 3. காற்றாடியின் குறுக்குக் கயிறு (உ.வ.); string tied crosswise for balancing a kite.

*[சூட்சம்+கயிறு]*

*[Skt. sūkṣma > த. சூட்சம்]*

**சூட்சக்காரன்** *šūṭca-k-kāraṉ*, பெ.(n.) 1. கூர்மையுள்ளவன்; skilful, ingenious person. 2. சூழ்ச்சியுள்ளவன்; cunning, artful person.

*[Skt. sūkṣma > த. சூட்சம்+காரன்]*

**சூட்சம்**[1] *šūṭcam*, பெ.(n.) **சூட்சுமம்** (யாழ்.அக.) பார்க்க; see *šūṭcumam.*

*[Skt. sūkṣma > த. சூட்சம்]*

**சூட்சம்²** *šūțcam*, பெ.(n.) வஞ்சம்; deceit.

த.வ. கவடம்

*[Skt. sūkṣma > த. சூட்சம்]*

**சூட்சம்போடு-தல்** *šūțcam-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) காற்றாடி பறக்கும்படி குறுக்குக் கயிறு கட்டுதல் (உ.வ.); to tie up cross-string for balancing kite in the air.

*[சூட்சம்+போடு-,]*

*[Skt. sūkṣma > த. சூட்சம்]*

**சூட்சமகந்தம்** *šūțcama-kandam*, பெ.(n.) மின்சாரம்; electricity.

*[சூட்சமம்+கந்தம்]*

*[Skt. sūkṣma > த. சூட்சமம்]*

**சூட்சவண்டி** *šūțca-vanḍi*, பெ.(n.) மிதிவண்டி (இ.வ.); bicycle.

*[சூட்சம்+வண்டி]*

*[Skt. sūkṣa > த. சூட்சம்]*



**சூட்சவிலை** *šūțca-vilai*, பெ.(n.) குறைந்த விலை (வின்.); cheap price.

*[Skt. sūkṣa > த. சூட்சம்]*

**சூட்சுமசரீரம்** *šūțcuma-šarīram*, பெ.(n.) உயிர் ஐந்து, மனம் ஒன்று, பொறிகள் (ஞானேந்திரியம்) ஐந்து செயல் உறுப்புகள் ஐந்து ஆகிய இவற்றால் ஆனதும், உயிர் வீடுபேற்று நிலை வரை அதனோடிருப்பது மாகிய உடல்; subtle body made up of five piränan, manas, five ñanēndiriyam and five karumēndiriyam, accompanying jīvan till his final emancipation.

த.வ. நுண்ணுடல்

*[Skt. sūkṣma+šarīra > த. சூட்சுமசரீரம்]*

**சூட்சுமதசை** *šūțcuma-dašai*, பெ.(n.) அந்தரத் தசை முதலிய ஐவகைத் தசைகளிலொன்று (சங்.அக.); one of the five main sections into which the career of a person is divided in reference to the position of the planet.

*[சூட்சுமம்+தசை]*

*[Skt. sūkṣma > த. சூட்சுமம்]*

**சூட்சுமதரிசனம்** *šūțcuma-darišanam*, பெ.(n.) 1. நுட்பமான அறிவு (யாழ்.அக.); quick perception, acuteness, keen intellect. 2. அகக்கண்; occult vision.

*[Skt. sūkṣma+daršana > த. சூட்சுமதரிசனம்]*

**சூட்சுமதரிசனை** *šūțcuma-darišanai*, பெ.(n.) **சூட்சுமதரிசனம்** (வின்.) பார்க்க; see *šūțcuma-darišanam.*

*[Skt. sūkṣma > த. சூட்சுமதரிசனை]*

**சூட்சுமதிருட்டி** *šūțcuma-tirutti*, பெ.(n.) **சூட்சுமதரிசனம்** (யாழ்.அக.) பார்க்க; see *šūțcuma-darišanam.*

*[Skt. sūkṣma+tirutti > த. சூட்சுமதிருட்டி]*

**சூட்சுமபுத்தி** *šūțcuma-butti*, பெ.(n.) **சூட்சுமதரிசனம்**, 1 (உ.வ.) பார்க்க; see *šūțcuma-darišanam*, 1.

*[Skt. sūkṣma +buddhi> த. சூட்சுமபுத்தி]*

**சூட்சுமம்** *šūțcumam*, பெ.(n.) 1. கண்ணுக்குப் புலப்படக் கூடியதாக இல்லாமல், நுண்மையாக இருப்பது, நுண்மை; minuteness, fineness, delicateness. 2. பருமைப்பொருளின் நுண்ணிய வடிவம்; the subtle form of a

grosser object. 3. அறிவுக் கூர்மை; subtlety, acuteness, keenness, as of intellect. 4. நுட்பமான கூறுபாடு; crux,, main-spring or principle, principal point. *கணக்கின் சூட்சுமமெல்லாம் நன்கறிந்திருக்கிறான்.* 5. திறமை; skill, dexterity, ingenuity. 6. விழிப்பு; carefulness, circumspection. *நான் இல்லாத சமயத்தில் நீ சூட்சுமமாயிருக்க வேண்டும்.* 7. சூழ்ச்சி; cunning, artfulness. *அவனைச் சூட்சுமமாய்க் கெடுத்துவிட்டான்.* 8. வழிவகை, சூழ்ச்சி device, means, expedient. *சூட்சுமத்தால் எதையும் முடிக்கலாம், 'தங்களைப் பிரிப்பதற்கான சூட்சுமம் இது என்பதை உணர்ந்து கொண்டான்'.* 9. சிறுமையானது; anything slight or insignificant. 10. சுருக்கம்; conciseness. *உபநியாசத்தைச் சூட்சும மாகச் செய்தான்.* 11. சிக்கனம்; thrift. *சூட்சும மாகச் செலவுசெய்.* 12. சுருக்க வழி; short-cut. *சூட்சுமத்திலே மோட்சமா?.*

**த.வ. உள்ளாப்பு, அகமம், நுண்மம்**

*[**Skt.** sūkṣma > த. சூட்சுமம்]*

**சூட்சுமாவத்தை** *šūṭcumāvattai*, பெ.(n.) நுண்துகள்களாலான உடலில், உயிர் நிற்கும் நிலை; state of jivaṉ or individual soul in subtle body.

**த.வ. நுண்மநிலை**

*[**Skt.** sūkṣma +avasthā > த.சூட்சுமாவத்தை]*

**சூடாலம்** *šūḍālam*, பெ.(n.) தலை (யாழ்.அக.); head.

*[**Skt.** cūḍā > த. சூடாலம்]*

**சூணாவயிறு** *šūṇā-vayiṟu*, பெ.(n.) பெருவயிறு (உ.வ.); pot-belly.

**த.வ. பானை வயிறு**

*[**Skt.** sūnā > த. சூணா]*

**சூத்தி** *šūtti*, பெ.(n.) செருப்பு (இ.வ.); shoes, slippers.

*[**U.** zūti > த. சூத்தி]*

**சூத்திரக்கயிறு** *šūttira-k-kayiṟu*, பெ.(n.) 1. பாவையை இயக்குங் கயிறு; puppet-string. 2. பையின் சுருக்குக் கயிறு; purse-string. 3. காற்றாடிப்பட்டத்திற் குறுக்கே, தொய்வாகக் கட்டப் பட்டிருக்கும் கயிறு; cord tied to secure the equilibrium of a kite. 4. மந்திரஞ் சொல்லும்போது அதன் தொகையை விரலிற் சுற்றி அறிதற்கு உதவுந் தவக்கயிறு (உ.வ.); string twisted round a finger for keeping count in prayer.

*[**Skt.** sūtra > த. சூத்திரம்]*

**சூத்திரக்காரன்** *šūttira-k-kāraṉ*, பெ.(n.) 1. நூலை நூற்பாவடிவமாக(சூத்திரமாக) இயற்றிய ஆசிரியன்; author of a treatise in sūtra form. 2. அறிவுக்கூர்மையும், பொறியியல் நுட்பமும் கொண்ட வேலைக் காரன் (வின்.); ingenious or curious artist; engineer.

*[**Skt.** sūtra > த. சூத்திரம்+காரன்]*

**சூத்திரச்சி** *šūttiracci*, பெ.(n.) இழிகுலத்தில் பிறந்தவள்; a woman of sūdraṉ caste.

*[**Skt.** śūdra > த. சூத்திரச்சி]*

**சூத்திரதார்** *šūttiradār*, பெ.(n.) **சூத்திரதாரன்** பார்க்க; see *šūttira-dāraṉ.*

**சூத்திரதாரன்** *šūttira-dāraṉ*, பெ.(n.) நாடகத்தை நடத்துவோன்; stage-manager.

*[**Skt.** sūtradhāra > த. சூத்திரதாரன்]*

**சூத்திரதாரி** *šūttira-dāri*, பெ.(n.) 1. பாவையை நூல்கொண்டு ஆட்டுவோன் (சி.சி. 4, 4, சிவாக்.); one who controls the puppet-string, puppet-man. 2. **சூத்திரதாரன்** பார்க்க; see *šūttira-dāraṉ. கபட நாடக சூத்திரதாரி.*

**த.வ. கிள்ளாடி**

*[**Skt.** sūtra > த. சூத்திரம்+தாரி+தாரன் >தாரி]*

**சூத்திரநாகம்** *šūttira-nāgam*, பெ.(n.) நல்லபாம்பு வகை; a species of cobra.

*[சூத்திரம்+ நாகம்]*

*[**Skt.** šūdra > த. சூத்திரம்]*

**சூத்திரநாபி** *šūttira-nābi*, பெ.(n.) வச்சநாபிவகை (மூ.அ.); red-flowered snake-wood, m.sh., Rauwolfia serpentina.

*[**Skt.** šūdra+nābha > த. சூத்திரநாபி]*

**சூத்திரநாவி** *šūttira-nāvi*, பெ.(n.) **சூத்திரநாபி** (பதார்த்த. 1058) பார்க்க; see *šūttira-nābi.*

**சூத்திரநிலை** *šūttira-nilai*, பெ.(n.) ஆற்றொழுக்கு, அரிமாநோக்கு, தவளைப் பாய்த்து, பருந்தின்வீழ்வு என நால்வகைப் பட்டதாய் நூற்பாக்கள் ஒன்றோடொன்று பொருளால் தொடர்ந்து நிற்கும் நிலை (நன். 19); position of sūtras in a treatise as the guiding principle of interpretation, four in number, viz., *ārrolukku, arimānōkku, tavaļai-p-pāyttu, paruntin-vilvu.*

த.வ. நூற்பா நிலை

*[**Skt.** sūtra > த. சூத்திரம்]*

**சூத்திரப்பதுமை** *šūttira-p-padumai*, பெ.(n.) **சூத்திரப்பாவை** பார்க்க; see *šūttira-p-pāvai.*

த.வ. நூற்பாவை

*[**Skt.** sūtra > த. சூத்திரம்]*

**சூத்திரப்பா** *šūttira-p-pā*, பெ.(n.) இலக்கணம் முதலியவற்றை இயற்றுதற்குரிய நூற்பா வகவல்; a kind of akaval metre, especially employed in classical grammars.

த.வ. நூற்பா

*[**Skt.** sūtra > த. சூத்திரம்+பா]*

**சூத்திரப்பாவை** *šūttira-p-pāvai*, பெ.(n.) கயிறு முதலியவற்றால், ஆட்டப்படும் பாவை; puppet moved by strings or other contrivances. "நன்னாரிற் பூட்டிய சூத்திரப்பாவை" (பட்டிணத். திருப்பா. திருவே. 4).

*[**Skt.** sūtra > த. சூத்திரம்]*

**சூத்திரப்பிரதிமை** *šūttira-p-piradimai*, பெ.(n.) **சூத்திரப்பாவை** பார்க்க; see *šūttira-p-pāvai.*

*[**Skt.** sūtra+pratimā > த. சூத்திரப்பிரதிமை]*

**சூத்திரபிடகம்** *šūttira-piḍagam*, பெ.(n.) திரிபிடகம் மூன்றனுள், நூற்பாவடிவமான பகுதி (மணிமே. 26, 66, உரை); a group of Buddhist Scriptures, as a basket of aphorisms, one of *tiri-piḍagam.*

*[**Skt.** sūtra+piṭaka > த. சூத்திரபிடகம்]*

**சூத்திரபுட்பம்** *šūttira-puṭbam*, பெ.(n.) பருத்தி (மலை.); Indian cotton-plant.

*[**Skt.** sūtra-puṣpa > த. சூத்திரபுட்பம்]*



**சூத்திரம்** *šūttiram*, பெ.(n.) 1. பஞ்சுநூல் (சூடா.); thread, cord. 2. இயந்திரம் (சூடா.); machine, engine, machanism, spring in a machine. *"முன்பயில் சூத்திர மிதுவென" (கம்பரா. கார்முக. 61).* 3. சூழ்ச்சிவேலை (வின்.); ingenious contrivance, puzzle. 4. சூழ்ச்சி (வின்.); stratagem, artful trick, artifice. 5. கமுக்கம் (இரகசியம்) மறை பொருள் (சங்.அக.); secret, mystery. 6. சில்வகையெழுத்திற் பல்வகைப் பொருளும்

செறிந்து விளங்க அமைத்து முடிக்கப்படும் யாப்பு (தொல். பொருள். 481); sūtra, aphorism. 7. நூற்பா வடிவில் இயன்ற நூல்; treatise in sūtra style. *வேதாந்த சூத்திரம்.* 8. பெயர்ச்சூத்திரம் முதலிய அறுவகைப்படும் நூற்பாக்கள் (யாப். வி. பாயி. பக். 11); sūtra, of six kinds viz., *peyar-c-cūttiram, viti-c-cūttiram, vilakkiyar-cūttiram, niyama-c-cūttiram, atikāra-c-cūttiram, ñāpaga-c-cūttiram.*

*[Skt. sūtra > த. சூத்திரம்]*

**சூத்திரயாப்பு** *śūttira-yāppu*, பெ.(n.) **சூத்திரப்பா** (திவா.) பார்க்க; see *śūttira-p-pā.*

*[சூத்திரம்+யாப்பு]*

*[Skt. sūtra > த. சூத்திரம்]*

**சூத்திரரறுதொழில்** *śūttirar-aṟu-toḻil*, பெ.(n.) ஆரியர் மேலாண்மையால் பிரிக்கப்பட்ட தொழில் வகை. ஆ (பசு)காத்தல், பொருளீட்டல், பயிரிடல், நூல் ஓதல், ஈதல், பயன்தரக் கூடிய பல தொழில் செய்தல் என்ற கடமைகளுக்குரிய (சூத்திரர்) அறுவகைத் தொழில் (சூடா.); six occupations of the śūdra caste.

*[Skt. śūdra > த. சூத்திரர்]*

**சூத்திரவிருத்தி** *śūttira-virutti*, பெ.(n.) தொல்காப்பியம் முதற் நூற்பாவிற்குச் சிவஞான முனிவர் எழுதிய விரிவுரை; a commentary on the 1st sūtra of Tolkāppiyam by śi*vañāṉa-muṉivar.*

*[Skt. sūtra+vṛddhi > த. சூத்திரவிருத்தி]*

**சூத்திரவீணை** *śūttira-viṇai*, பெ.(n.) வீணை வகை (சங்.அக.); a kind of stringed instrument, lute.

*[Skt. sūtra > த. சூத்திரம்]*

**சூத்திரவுருவம்** *śūttira-v-uruvam*, பெ.(n.) பொம்மலாட்டத்தில் ஆடும் பாவை (யாழ்.அக.); puppet in *pommal-āṭṭam.*

*[Skt. sūtra > த. சூத்திரம்]*

**சூத்திரன்¹** *śūttiraṉ*, பெ.(n.) 1. ஆரியர் வரவுக்குப் பின் வகுக்கப்பட்ட நான்காம் குலத்தோன் (பிங்.); person of the fourth or lowest of the original castes of the Hindus after the advent of the Aryans. 2. புட்பராகம் (வின்.); topaz. 3. ஒளிமணி (வைடூரியம்) (வின்.); cat's eye.

*[Skt. śūdra > த. சூத்திரன்¹]*

**சூத்திரன்²** *śūttiraṉ*, பெ.(n.) தச்சன் (அக.நி.); carpenter.

*[Skt. sūtra > த. சூத்திரன்]*



**சூத்திரன்³** *śūttiraṉ*, பெ.(n.) முப்புரிநூலணிந்தோன் (யாழ்.அக.); one who wears the triple cord or the sacred thread.

*[Skt. sūtra > த. சூத்திரன்]*

**சூத்திரி¹–த்தல்** *śūttiri-*, 4 செ.குன்றாவி.(v.t.) & 4 செ.கு.வி. (v.i) 1. இலக்கண முதலிய பொருள் பற்றி நூற்பா செய்தல்; to construct sūtras or short terse rules, as of grammar. 2. பொருளடங்கக் கூறுதல்; to be aphoristic in expression, express in epigrams. *"சூத்திரித்து நடத்தலிற் சூத்திர மெனப்படும்" (யாப். வி. பாயி. பக். 12).*

*[Skt. sūtra > த. சூத்திரி–,]*

**சூத்திரி²** *śūttiri*, பெ.(n.) எந்திரப் பாவை முதலியன இயக்குவதில் வல்லவன்; puppet -

man, mechanic. "சூத்திரிநீ யதுவல்லை" (மணிமே. 27: 103, அரும்.).

[Skt. sūtrin > த. சூத்திரி]

**சூத்திரிகன்** *šūttirigan*, பெ.(n.) பாவை முதலியவற்றை ஆட்டுபவன் (சி.சி.4: 24, சிவாக்.); puppet-man.

[Skt. sūtrika > த. சூத்திரிகன்]

**சூதகக்கட்டு** *šūdaga-k-kaṭṭu*, பெ.(n.) மாதவிடாய் உரிய காலத்தில் வெளிப் படாததால், ஏற்படும் நோய்; amenorrhoea, failure or suspended flow of the menses.

த.வ. தீட்டுக்கட்டு

[Skt. sūtaka > த. சூதகம்]

**சூதகக்கிராணி** *šūdaga-k-kirāṇi*, பெ.(n.) மகப்பேறு காலத்தில், வயிற்றில் காற்றுக் கட்டிக் கொள்வதனால் உண்டாகும் ஒருவகை நோய் (வின்.); a disease attending child birth due to wind or flatulency.

த.வ. தீட்டுவளிநோய்

[Skt. sūtaka+grahaṇi > த. சூதகக்கிராணி]

**சூதகங்கா—த்தல்** *šūdagaṅgā-*, 4 செ.கு.வி. (v.i.) குடும்பத்தில் பிறப்பிறப்புகளால் நேரும் தீட்டினால் (ஆசௌகத்தை) மேற்கொண்டு பிறரோடு கலவாமலிருத்தல்; to observe pollution by keeping aloof from society, by abstaining from shaving, etc., after a birth or death in one's family.

த.வ. தீட்டு காத்தல்

[Skt. sūtaka > த. சூதகம்]

**சூதகசத்துரு** *šūdaga-šatturu*, பெ.(n.) மருந்தாகப் பயன்படுத்தப்படும் காந்தமேற்றிய இரும்பு (சங்.அக.); magnetised iron, used medicinally.

[Skt. sūtaka-šatru > த. சூதகசத்துரு]

**சூதகசன்னி** *šūdaga-šaṉṉi*, பெ.(n.) மாதவிடாய்க் காலங்களில், உண்டாகும் ஒரு வகை (சன்னி) நோய் (சீவரட்.); a kind of hysteria, a disease of women during the period of menstruation.

த.வ. தீட்டு இசிவு

[Skt. sūtaka +šaṉṉi> த. சூதகசன்னி]

**சூதகசூலை** *šūdaga-šūlai*, பெ.(n.) **சூதகவாயு** பார்க்க; see *šūdaga-vāyu.*

[Skt. sūtaka > த. சூதகம்]

**சூதகண்டகி** *šūda-kaṇḍagi*, பெ.(n.) உறைப் பானவுப்பு (சங்.அக.); an acrid salt.

**சூதகப்பாண்டு** *šūdaga-p-pāṇḍu*, பெ.(n.) மாதவிடாய் அதிகரித்தல் முதலியவற்றால், அரத்தங்குறைந்த பெண்களுக்கு உண்டாகும் நோய் வகை; green sickness, chlorosis.

[சூதகம்+பாண்டு]

[Skt. sūtaka > த. சூதகம்]

**சூதகப்பெண்** *šūdaga-p-peṇ*, பெ.(n.) மாத விலக்கான பெண்; a woman in menses or periods.

த.வ. தீட்டாளி

[சூதகம் + பெண்]

[Skt. sūtaka > த. சூதகம்]

**சூதகப்பெருக்கு** *šūdaga-p-perukku*, பெ.(n.) அரத்தப்போக்கு அதிகம் உள்ள மாதவிலக்கு நோய்; menorrhagia, excessive menstruation.

த.வ. பெரும்பாடு

[Skt. sūtaka > த. சூதகம்]

**சூதகபந்தம்** *šūdaga-pandam*, பெ.(n.) **சூதகக்கட்டு** பார்க்க; see *šūdaga-k-kaṭṭu.*

[Skt. sūtaka > த. சூதகம்]

**சூதகபாத்தியம்** *šūdaga-pāttiyam*, பெ.(n.) பிறப்பு இறப்பு நிகழ்ச்சிகளைக் கொண்டாடும்

படியான நெருங்கிய உறவுமுறை (மதி. க. ii, 79); nearness of relationship entailing observance of pollution on occasions of birth and death.

[Skt. sūtaka +bāndhavha> த. சூதகபாத்தியம்]

**சூதகம்**[1] *šūdagam*, பெ.(n.) 1. பிறப்பு (பிங்.); birth. 2. மாதவிடாய் விலக்கம் (பிங்.); ceremonial impurity of a woman from menstruation. 3. உறவினர்களின் பிறப் பிறப்புகளிற் காக்கும் தீட்டு (சூடா.); ceremonial uncleanness from birth or death among relations. 4. இறப்பு நிகழ்ந்த வீட்டிற்குட் செல்லுதல், இறந்தவரின் உடலைத் தொடுதல், தீண்டத் தகாதோரை, நெருங்குதல் முதலிய தீச்செயல்களால் நிகழும் தீட்டு (வின்.); ceremonial pollution, due to miscarriage, touching a corpse or carcass, touching one of low caste or entering a mourning house, etc.

த.வ. தீட்டு

[Skt. sūtaka > த. சூதகம்]

**சூதகம்**[2] *šūdagam*, பெ.(n.) 1. மாமரம்; mango tree. *"சூதகம் வாழைகள் சூழ்" (திவ். பெரியதி. 4:2:1).* 2. சிறுகிணறு (சங்.அக.); small well.

[Skt. cūtaka > த. சூதகம்]

**சூதகம்**[3] *šūdagam*, பெ.(n.) முலைக்கண் (பிங்.); nipple.

[Skt. cūcuka > த. சூதகம்]

**சூதகமலடு** *šūdaga-maladu*, பெ.(n.) அறுவகை மலட்டில் ஒன்று (சங்.அக.); barrenness due to menstrual disorder, one of six maladu.

த.வ. தீட்டு மலடு

[Skt. sūtaka > த. சூதகம்]

**சூதகமுட்டு** *šūdaga-muttu*, பெ.(n.) **சூதகக்கட்டு** (வின்.) பார்க்க; see *šūdaga-k-kattu.*

[சூதகம்+முட்டு]

[Skt. sūtaka > த. சூதகம்]

**சூதகவலி** *šūdaga-vali*, பெ.(n.) **சூதகசன்னி** (உ.வ.) பார்க்க; see *šūdaga-šanni.*

[சூதகம்+வலி]

[Skt. sūtaka > த. சூதகம்]

**சூதகவாயு** *šūdaga-vāyu*, பெ.(n.) மாதவிடாய்க் காலத்து காற்றுப்பிடிப்பு மிகுதியால் உண்டாகும் நோய்வகை; painful menstruation, dysmenorrhoea. 2. **சூதகசன்னி** பார்க்க; see *šūdaga-šanni.*

[Skt. sūtaka +vāyu> த. சூதகவாயு]

**சூதகவெட்டை** *šūdaga-vettai*, பெ.(n.) மாதவிடாயில், வெள்ளை காணும் நோய்; white menstrual discharge, a disease.

த.வ. தீட்டுவெட்டை

[Skt. sūtaka > த. சூதகம்]

**சூதசங்கிதை** *šūda-šangidai*, பெ.(n.) வல்லூர்த்தேவராசப்பிள்ளையால் தமிழில் மொழிபெயர்க்கப்பெற்றுச் சிவநெறி முதலிய வற்றைப் பற்றிக் கூறும் நூல்; a treatise on šaivam religious practice, translated in Tamil verse from Sanskrit by Tēvarāša pillai of *Vallūr.*

[Skt. Sūta-saṃhitā > த. சூதசங்கிதை]

**சூதசத்துரு** *šūda-šatturu*, பெ.(n.) இதளியத்தைக் (இரசத்தைக்) கொல்லும் பொருள்கள்; medicines or herbs. Capable of killing or otherwise neutralising, the effects of mercury. (சா.அக.)

[சூதகம் + சத்துரு]

**சூதசாரணை** *šūdašāranai*, பெ.(n.) இதளியத்தைக் (இரசத்தைக்) கட்டிச் சாரணையேற்றுகை; animating the consolidated mercurial pill.

**சூதசாலை** *šūda-šālai*, பெ.(n.) மடைப்பள்ளி (யாழ்.அக.); kitchen, place for cooking.

*[சூதம்+சாலை]*

*[**Skt.** sūda > த. சூதம்]*

**சூதசிந்தூரம்** *šūda-šindūram*, பெ.(n.) இதளியச் (இரச) செந்தூரம் (மலை.); a kind of medicinal powder prepared from mercury.

*[**Skt.** sūta+sindūra > த. சூதசிந்தூரம்]*

**சூதசெம்பு** *šūda-šembu*, பெ.(n.) இதளிய மாற்றத்தால் (இரசவாதத்தால்) ஏற்பட்ட செம்பு; alchemic copper derived from transmulation. (சா.அக.)

*[சூதம் + செம்பு]*

*[**Skt.** sūda > த. சூதம்]*

**சூதசோரசெந்தூரி** *šūda-šōra-šendūri*, பெ.(n.) இதளியத்தையும், சோர நஞ்சையும் (இரசத்தையும், சோரபானத்தையும்) செந்தூர மாகச் செய்யும் நாகதாளி; a plant that is capable of converting mercury sora arsenic and into red. (சா.அக.)

*[சூதம்+சோரம் + செந்தூரி]*

**சூதத்தைத்தூளியாக்கி** *šūdattai-t-tūliyākki*, பெ.(n.) இதளியத்தைத் (இரசத்தைத்) தூளாக செய்யும் மருந்து; any drug capable of turning mercury into a powder. (சா.அக.)

**சூதத்தைப்பொன்னாக்கி** *šūdattai-p-ponnākki*, பெ.(n.) நாகநஞ்சு (சங்.அக); a prepared arsenic.

**சூதநதி** *šūda-nadi*, பெ.(n.) ஆன்பொருநையாறு (பிங்.); the river *āmrāvadi*.

*[**Skt.** cūta+nadi > த. சூதநதி]*

**சூதநோக்கல்** *šūdanōkkal*, பெ.(n.) **சூதவஞ்சனம்** (சங்.அக.); see *šūda-v-añjanam*.

**சூதபாடாணம்** *šūda-pāḍāṇam*, பெ.(n.) வைப்புநஞ்சு வகை (மலை.); a prepared arsenic.

*[**Skt.** sūta+pāṣāṇa > சூதபாஷாணம் > த. சூதபாடாணம்]*

**சூதம்**[1] *šūdam*, பெ.(n.) 1. பிறப்பு; birth. *"சூதநல் வினை மங்கலத் தொழில்" (பெரியபு. திருஞான. 1043).* 2. இதளியம் (சூடா.); quick silver, mercury.

*[**Skt.** sūta > த. சூதம்]*

**சூதம்**[2] *šūdam*, பெ.(n.) 1. மாமரம் (பிங்.); mango tree. 2. தேமா; sweet mango. 3. புளிமா (மலை.); hog plum. 4. பவளமல்லிகை (மலை.); coral jasmine.

*[**Skt.** cūta > த. சூதம்]*

**சூதம்**[3] *šūdam*, பெ.(n.) சூது (சூடா.); gambling.

*[**Skt.** dyūta > த. சூதம்]*

**சூதம்போர்** *šūdam-pōr*, பெ.(n.) சூதுப்போர் (தொல். எழுத்து. 417, உரை); gambling, considered as a contest.

*[சூதம்+போர்]*

*[**Skt.** dyūta > த. சூதம்]*

**சூதமணி** *šūda-maṇi*, பெ.(n.) ஒருவகைக் கட்டு மருந்து (தஞ். சர. iii, 76); a medicinal preparation.

**சூதமுனிவர்** *šūda-muṉivar*, பெ.(n.) வியாசருடைய புகழ்பெற்ற சீடரும் இருடி களுக்குத் தொன்மங்களைக் (புராணங்கள்) கூறியவருமான முனிவர்; the reputed disciple of Vyāsar and narrator of Purāṇas to Ṛsis.

*[சூதம்+முனிவர்]*

*[**Skt.** sūta > த. சூதம்]*

**சூதராட்சசன்** *šūda-rāṭcašaṉ*, பெ.(n.) பொன்னம்பர் (யாழ்.அக.); a kind of amber.

**சூதவஞ்சனம்** *šūda-v-añjaṉam*, பெ.(n.) நீலாஞ்சனக்கல் (வின்.); sulphide of antimony.

**சூதவெண்ணெயிறுகி** *šūdaveṇṇeyiṟugi*, பெ.(n.) சூத வெண்ணெயைக் கெட்டிப் படுத்துமோர் மூலிகை, அதாவது ஆரைக்கீரை; a drug capable of hardening the colloid mercury - Marsilea quadrifolia. (சா.அக.)

*[சூதவெண்ணெய் +இறுகி]*

**சூதவெள்ளி** *šūda-veḷḷi*, பெ.(n.) இதளிய மாற்றக் கலையினால் (இரசவாத வித்தை யினால்) செய்த வெள்ளி; silver obtained by means of alchemical process. (சா.அக.)

*[சூதம் +வெள்ளி]*

**சூதவைரி** *šūda-vairi*, பெ.(n.) வில்வத்தளிர் (யாழ்.அக.); tender leaf of bael tree.

**சூதன்**[1] *šūdaṉ*, பெ.(n.) 1. தேரோட்டி (பிங்.); charioteer. *"சூதனு முடுகித் தூண்ட" (கம்பரா. இராவணன்வதை. 19).* 2. கதிரவன் (யாழ்.அக.); sun. 3. தச்சன் (யாழ்.அக.); carpenter. 4. **சூதமுனிவர்** (அக.நி.) பார்க்க; see *šūda-muṉivar.*

*[**Skt.** sūta > த. சூதன்]*

**சூதன்**[2] *šūdaṉ*, பெ.(n.) சமையல்காரன் (இலக். அக.); cook.

*[**Skt.** sūda > த. சூதன்]*

**சூதனம்** *šūdaṉam*, பெ.(n.) அழிக்கை (இலக்.அக.); destruction, killing.

*[**Skt.** sūdana > த. சூதனம்]*

**சூதனொலிமாலை** *šūdaṉoli-mālai*, பெ.(n.) சூதமுனிவரால் முறையாகச் சொல்லப்பட்ட தொன்மம் (புராணம்); purāṇam, as being a string or series of utterances by šūda-muṉivar. *"சூதனொலி மாலையென்றே கலிக்கோவை சொல்லே" (தேவா. 1178, 8) (சித். மரபுகண். பக். 17).*

**சூதானகாரன்** *šūdāṉa-kāraṉ*, பெ.(n.) விழிப்புடன் இருப்பவன் (யாழ்.அக.); careful, cautious person.

*[**Skt.** su-avadhāna> த. சூதானம்+காரன்]*

**சூதானப்படுத்து-தல்** *šūdāṉa-p-paḍuttu-*, 5 செ.குன்றாவி.(v.t.) பாதுகாப்பாய் வைத்தல் (வின்.); to deposit in a safe place, to take care of.

*[**Skt.** su-avadhāna> த. சூதானம்+ படுத்து-தல்]*

**சூதானம்** *šūdāṉam*, பெ.(n.) 1. எச்சரிக்கை; care, circumspection. *சூதானத்துக்கு அழிவில்லை (வின்.).* 2. காவல்; safety. *"ஆராரு மறியாத சூதான வெளியிலே" (தாயு. ஆனந்தமா. 6).*

**த.வ. கவனம்**

*[**Skt.** su-avadhāna> த. சூதானம்]*

**சூதானம்பண்ணு-தல்** *šūdāṉam-paṇṇu-*, 5 செ.குன்றாவி.(v.t.) **சூதானப்படுத்து-தல்** (வின்.) பார்க்க; see *šūdāṉa-p-paḍuttu-.*

*[**Skt.** sū-avadhāna> த. சூதானம்+பண்ணு]*

**சூதானவறை** *šūdāṉa-v-aṟai*, பெ.(n.) பொருட்களைப் பாதுகாப்பாக வைக்கும் அறை; a room for safe custody of things.

*[சூதானம்+அறை]*

*[**Skt.** su-avadhāna > த. சூதானம்]*

**சூதானு** *šūdāṉu*, பெ.(n.) 1. பழுதுபார்க்கை (கோயிலொ. 36); repair. 2. முன்னெச்சரிக்கை (இ.வ.); care, circumspection. 3. பாதுகாப்பு; safety.

*[**Skt.** sāvadhāna > த. சூதானு]*

**சூதி** *šūdi*, பெ.(n.) பிள்ளைப்பேறு; childbirth.

*[**Skt.** sūti > த. சூதி]*

**சூதிக்கிருகம்** *šūdi-k-kirugam*, பெ.(n.) **சூதிகாக்கிருகம்** பார்க்க (யாழ்.அக.); see *šūdigā-k-kirugam.*

*[Skt. sūti+gṛha > த. சூதிக்கிருகம்]*

**சூதிகாக்கிருகம்** *šūdigā-k-kirugam*, பெ.(n.) மகப்பேறு அறை (யாழ்.அக.); lying - in chamber.

*[Skt. sūtikā+gṛha > த. சூதிகாக்கிருகம்]*

**சூதிகாமலடி** *šūdigā-maladi*, பெ.(n.) கருச்சிதை வாலேனும், மகப்பேற்றுக்குப் பின் பிள்ளை இறப்பதாலேனும், மலடாயிருப்பவள்; a childless woman whose childlessness is caused either by abortion or by death of the child soon after its birth.

*[சூதிகா+மலடி]*

*[Skt. sūtikā > த. சூதிகா]*

**சூதிகாவாயு** *šūdigā-vāyu*, பெ.(n.) கருப் பத்தில் உள்ள காற்று (கர்ப்பவாயு) (இ.வ.); flatulency in the womb causing hysteria, a wasting disease that follows child birth.

*[Skt. sūti ka+vāyu> த. சூதிகாவாயு]*

**சூதிகை** *šūdigai*, பெ.(n.) 1. **சூதிகாக்கிருகம்** பார்க்க; see *šūdigā-k-kirugam. "சூதிகைத் தோன்றிய பொழுதே" (பாரத. இராசசூ. 118).* 2. பிள்ளைப் பெற்றவள்; lying - in woman.

*[Skt. sūtikā > த. சூதிகை]*

**சூப்பி** *šūppi*, பெ.(n.) ஆண்குறியின் நுனித்தோல் (வின்.); prepuce, foreskin.

*[U. supārī > த. சூப்பி]*

**சூப்பிக்கலியாணம்** *šūppi-k-kaliyāṇam*, பெ.(n.) சுன்னத்துக்கலியாணம் பார்க்க; see šuṉṉathuk-kaliyāṉam.

**சூப்பியறுத்தல்** *šūppi-y-aṟuttal*, பெ.(n.) **சுன்னத்துக்கலியாணம்** பார்க்க; see *šuṉṉattu-kaliyāṇam.*

**சூபி** *šūpi*, பெ.(n.) இறைவன் மேல் மிகுந்த பற்றுடையவன்; pious man; devotee.

*[Ar. sūfi > த. சூபி]*

**சூயை** *šūyai*, பெ.(n.) அத்திரி முனிவரின் மனைவி (பத்தினி)யாகிய அனசூயை; wife of Atriṛṣi. *"சூயை கைவிடப் பதஞ்சலி யாகிய" (கல்லா. 41: 6).*

*[Skt. ānasūyā > த. சூயை]*

**சூர்ணம்** *šūrṇam*, பெ.(n.) அரைத்தோ பொடித்தோ பெறப்படும் தூள் வடிவ மருந்து; powder, especially medicinal.

*[Skt. cūrṇa > த. சூர்ணம்]*

**சூர்ணி** *šūrṇi*, பெ.(n.) **சூர்ணிகை** பார்க்க; see *šūrṇigai. "சூர்ணிக் கொத்து" (சி.சி.காப்பு. மறை).*

*[Skt. cūrṇikā > த. சூர்ணி]*

**சூர்ணிகை** *šūrṇigai*, பெ.(n.) செய்யுட்கருத்தை விளக்கிநிற்கும் இனிய சொற்றொடர்; a kind of easy prose, especially setting forth the purport of a foregoing verse. *"இங்ஙனஞ் சூர்ணிகையை அனுசரித்து வார்த்திகமும் வார்த்திகத்தை அனுசரித்து அதிகரணங் களும் பகுத்திருக்கின்றன" (சி.போ.பா.).*

*[Skt. cūrṇikā > த. சூர்ணிகை]*

**சூர்ப்பகர்ணன்** *šūrppa-karṇaṉ*, பெ.(n.) பிள்ளையார் (சரபேந்திர. குற. 8:3); God Ganēšaṉ.

*[Skt. šūrpa-karṇa > த. சூர்ப்பகர்ணன்]*

**சூர்ப்பகன்னம்** *šūrppa-kaṉṉam*, பெ.(n.) யானை (யாழ்.அக.); elephant.

*[சூர்ப்பகர்ணன் > த. சூர்ப்பகன்னம்]*



**சூர்ப்பணகா** *šūrppaṇagā*, பெ.(n.) **சூர்ப்பணகை பார்க்க**; see šūrppaṇagai. *"சூர்ப்பணகாவைச் செவியொடு மூக்கவள் ஆர்க்கவரிந்தான்" (திவ். பெரியாழ். 3: 9: 8).*

*[Skt. Sūrpa+ நகை > த. சூர்ப்பணகா]*

முறம் போல் பல்லை உடையவள்

**சூர்ப்பணகி** *šūrppaṇagi*, பெ.(n.) **சூர்ப்பணகை** (உ.வ.) பார்க்க; see *šūrppaṇagai.*

**சூர்ப்பணகை** *šūrppaṇagai*, பெ.(n.) இராவணன் தங்கை; the younger sister of *Rāvaṇaṉ.*

*[Skt. šūrpaṇakhā > த. சூர்ப்பணகை]*

**சூர்ப்பம்** *šūrppam*, பெ.(n.) 1. முறம் (பிங்.); winnowing fan. 2. தூணி (தைலவ. தைல. 23); measure of capacity, equal to four marakkāl.

*[Skt. šūrpa > த. சூர்ப்பம்]*

**சூர்மா** *šūrmā*, பெ.(n.) கண்ணுக்கிடும் மை; collyrium, pigment for the eyes.

*[U. surmā > த. சூர்மா]*

**சூரசேனன்** *šūrašēṉaṉ*, பெ.(n.) சூரசேன நாட்டரசனும் திருமாலுக்குப் பாட்டனுமான ஓர் அரசன் (சங்.அக.); the grandfather of Kṛṣṇaṉ, as the king of *Sūrašēṉam.*

*[Skt. šūrasēna > த. சூரசேனன்]*

**சூரணம்**[1] *šūraṇam*, பெ.(n.) **சூர்ணம்** பார்க்க; see *šūrṇam.*

**சூரணம்**[2] *šūraṇam*, பெ.(n.) கருணைக் கிழங்கு (சூடா.); a tuberous - rooted herb.

*[Skt. šūraṇa > த. சூரணம்]*

**சூரணவர்ணம்** *šūraṇa-varṇam*, பெ.(n.) புடைவை வகை; a kind of saree. *"சூரணவர்ணத்தில்" (விறலிவிடு. 717).*

*[Skt. cūrṇa+varṇa > த. சூரணவர்ணம் த.வரணம் > வ வர்ண]*

**சூரணி**[1]**-த்தல்** *šūraṇi-*, 4 செ.குன்றாவி.(v.t.) பொடி செய்தல் (சங்.அக.); to reduce to powder, pulverise, especially medicine.

*[Skt. cūrṇa > த. சூரணம் > சூரணி-,]*

**சூரணிகை** *šūraṇigai*, பெ.(n.) **சூர்ணிகை** பார்க்க; see *šūrṇigai. "இதற்குச் சூரணிகை மூன்றேயன்றி நான்கு கூறப்படாமையின்" (சி.போ. பாண்டிப்.).*

**சூரணை** *šūraṇai*, பெ.(n.) **சூர்ணிகை** பார்க்க; see *šūrṇigai. "சூத்திரமீ ராறினுக்குஞ் சூரணைமுப் பானொன்பான்" (சி.போ. பாண்டிப்.)*

**சூரத்து** *šūrattu*, பெ.(n.) மும்பை (பம்பாய்) மாநிலத்தின் வடபகுதியிலுள்ள ஒரு தேயம்; the country of Sūrat, north of Bombay.

*[Skt. Surāṣṭra > த. சூரத்து]*

**சூரத்துக்கடுக்காய்** *šūrattu-k-kaḍukkāy*, பெ.(n.) சூரத்தினின்றும் கிடைக்கும் கடுக்காய்; a kind of myrobalan from Surat.

*[சூரத்து+கடுக்காய்]*

*[கடு+காய்= கசப்புக்காய்]*

**சூரத்துக்காவி** *šūrattu-k-kāvi*, பெ.(n.) சூரத்தினின்றும் வரும் காவிக்கல்; red ochre from Sūrat.

*[சூரத்து+காவி]*

**சூரத்துக்கெண்டை** *śūrattu-k-keṇḍai*, பெ.(n.) சூரத்திலிருந்து கிடைக்கும் ஆடைக்கரை முதலியவற்றிற் சேர்க்கப்படும் பொன் வெள்ளி இழைகள் (சரிகை); gold or silver lace from surat.

*[சூரத்து+கெண்டை]*

**சூரத்துத்தாட்டுப்பத்திரி** *śūrattu-t-tāṭṭu-p-pattiri*, பெ.(n.) சேலைவகை (உ.வ.); a kind of saree.

*[சூரத்து+தாட்டுப்பத்திரி]*

**சூரியகடிகாரம்** *śūriya-kaḍigāram*, பெ.(n.) பகலில் நாழிகை தெரிவிக்கும் ஒரு கருவி; sun dial.

*[சூரியன் + கடிகாரம்]*

*[**Skt.** sūrya> த. சூரியன்]*

*[கடிகை+ஆரம்–கடிகையாரம் >கடிகாரம்]*

**சூரியகடியாரம்** *śūriya-kaḍiyāram*, பெ.(n.) **சூரியகடிகாரம்** பார்க்க; see *śuriya-kaḍikāram.*

**சூரியகணம்** *śūriya-kaṇam*, பெ.(n.) நூலின் முதற் செய்யுளின் முதலில் அமைதல் கூடாதென்று, நீக்கப்பட்ட கூவிளங்காய் (நேர்–நிரை–நேர்) என்னும் வாய்ப்பாடு பற்றி வரும் தீக்கணச் சீர்வகை (இலக். வி. 800, உரை); metrical foot of nēr-nirai-nēr considered inauspicious at the commencement of a poem.

*[சூரியன் + கணம்]*

**சூரியகபாலம்** *śūriya-kabālam*, பெ.(n.) எழுஞாயிறு நோய் (பரராச. i: 24); headache which lasts from sunrise to sunset.

*[**Skt.** sūrya+kapāla> த. சூரியகபாலம்]*

**சூரியகலை** *śūriya-kalai*, பெ.(n.) 1. வலது மூக்கு வழியாய் வரும் மூச்சு (பிங்கலை); breath coming through the right nostril. 2. மூக்கின் வலது பக்கத்துத் துளை (வின்.); right nostril.

*[சூரியன்+கலை]*

*[**Skt.** sūrya > த. சூரியன்]*

**சூரியகாந்தக்கண்ணாடி** *śūriya-kānda-k-kaṇṇāḍi*, பெ.(n.) **சூரியகாந்தக்கல்** பார்க்க; see *śūriya-gānda-k-kal.*

*[சூரியன் + காந்தம் + கண்ணாடி]*

*[**Skt.** sūrya > த. சூரியன்]*

*[காந்து >காந்தம்.காண்+ஆடி–காணாடி > கண்ணாடி]*

**சூரியகாந்தக்கல்** *śūriya-gānda-k-kal*, பெ.(n.) வெயில்படும்போது நெருப்பு வெளிப்படுந் தன்மையுள்ள, ஒரு வகைப் பளிங்குக் கல்; see *Sun-stone, Jasper, Impur, Opaque, coloured quartz.*

*[சூரியன் + காந்தம்+கல்]*

**சூரியகாந்தச்சிலை** *śūriya-kānda-c-cilai*, பெ.(n.) **சூரியகாந்தக்கல்** பார்க்க; see *śūriya-gānda-k-kal.*

*[சூரியன் + காந்தம்+சிலை]*

**சூரியகாந்தம்[1]** *śūriya-kāndam*, பெ.(n.) 1. சூரியகாந்தக்கல் பார்க்க; see śūriya-ganda-k-kal. *"சூரியகாந்தமஃ தாரழலெங்ஙனங் கான்றிடும்" (சீவக. 2208).* 2. **சூரியகாந்தி** (மலை.) பார்க்க; see *śūriya-kāndi.*

*[சூரியன் + காந்தம்.]*

*[**Skt.** sūrya > த. சூரியன்.]*

*[காந்து > காந்தம்]*

**சூரியகாந்தம்[2]** *śūriya-kāndam*, பெ.(n.) 1. முதன்மை இசைப்பண் (மேளகர்த்தா)களுள் ஒன்று; a primary rāgam.

*[சூரியன் +காந்தம்]*

**சூரியகாந்தவாமணக்கு** *śūriya-kānda-V-āmaṇakku*, பெ.(n.) ஒருவகைச் **செவ்வா மணக்கு**; a variety of castor plant.

[சூரியன் + காந்தம் + ஆமணக்கு. Skt. sūrya > த. சூரியன்]

[அவிழ் > அவிழம் > அவிணம்> ஆவிணம்]

**சூரியகாந்தாரி** *šūriya-kāndāri*, பெ.(n.) பண்வகை (பரத. ராக. 103); a specific melody - Type.

**சூரியகாந்தி** *šūriya-kāndi*, பெ.(n.) 1. கதிரவன் இருக்கும் திசையை நோக்கி மலரக் கூடிய பெரிய மஞ்சள் நிறப் பூ; sun flower. 2. ஓரிலைத் தாமரை (M.M.588); one-leaf lotus, Ionidium suffruticosum. 3. **சூரியகாந்திப்பட்டு** பார்க்க; see *šūriya-kāndi-p-paṭṭu*.

**த.வ. பொழுது வணங்கி**

[சூரியன்+ காந்தி]

[Skt. sūrya > த. சூரியன்]

**சூரியகாந்திப்பட்டு** *šūriya-kāndi-p-paṭṭu*, பெ.(n.) ஒருவகைக் கெட்டியான பட்டு (வின்.); velvet.

**த.வ. கதிரொளிப்பட்டு**

[Skt. sūrya > த. சூரியன்+காந்தி+பட்டு]

**சூரியகாந்திரசம்** *šūriya-kāndi-rašam*, பெ.(n.) குட்ட நோய்க்குக் கொடுக்கும் ஓர் ஆயுள்வேத மருந்து; an Āyurvedic medicine given for skin diseases. (சா.அக.)

**சூரியகிரகணம்** *šūriya-kiragaṇam*, பெ.(n.) கருங்கோள் (ராகு), செங்கோள் (கேது) என்னும் சாயாக் கோள்களால் கதிரவன் பற்றப்படுகை; solar eclipse.

**த.வ. கதிர்மறை**

[Skt. sūrya + grahaṇa > த. சூரியகிரகணம்>கிரகணம்=பற்றுகை, பற்றுதல்.]

கதிரவனுக்கும் நிலவுலகத்திற்கும் இடையில், நிலவு வரும்போது சூரிய கிரகணமும், கதிரவனுக்கும் நிலவுக்கும் இடையில் நிலவுலகம் வரும்போது, சந்திரகிரகணமும் தோன்றும்.

**சூரியகிராணம்** *šūriya-kirāṇam*, பெ.(n.) **சூரியகிரகணம்** பார்க்க; see *šūriya-kiragaṇam*.

**சூரியகும்பம்** *šūriya-kumbam*, பெ.(n.) கதிரவனை நினைத்து மந்திரம் மூலமாக அமைக்கப்படும் நீர்க்குடம் (வின்.); a sanctified water - potdedicated to Sun-god.

[சூரியன்+கும்பம்]

[Skt. sūrya > த. சூரியன்]

**சூரியகுலம்** *šūriya-kulam*, பெ.(n.) தமிழ் மன்னர்குல மூன்றனுள் கதிரவனைக் குலமுதல்வனாகக் கொண்ட சோழ மரபு; solar race of kings, as descended from the Sun, one of three maṉṉar-kulam.

[சூரியன்+குலம்]

[Skt. sūrya > த. சூரியன்]

**சூரியசக்தி** *šūriya-šakti*, பெ.(n.) கதிரவனின் வெப்பத்திலிருந்து பெறும் ஆற்றல்; solar energy.

[சூரியன் + சக்தி.]

[சத்தி >சக்தி]

[Skt. sūrya > த. சூரியன்]

**சூரியசரம்** *šū:'ya-šaram*, பெ.(n.) **சூரியகலை** பார்க்க (சங்.அக.); see *šūriya-kalai*.

**சூரியசித்தாந்தம்** *šūriya-šittāndam*, பெ.(n.) கதிரவனால் சொல்லப்பட்டதாகக் கருதப்படும் ஒரு வானியல் நூல்; a celebrated astronomical text-book, believed to be a direct revelation from the Sun.

[Skt. sūrya+šittanda > த. சூரியசித்தாந்தம்]

**சூரியதிசை** *šūriya-dišai*, பெ.(n.) கதிரவனுக்குரித்தான திசை, கிழக்கு (பிங்.); east, as the Sun's quarter.

[சூரியன்+திசை.]

[திக்கு >திசை]

**சூரியநமசுகாரம்** *šūriya-namašu-kāram*, பெ.(n.) மந்திரம் மூலமாகக் கதிரவனை நோக்கிச் செய்யும் வழிபாடு; sun-worship, adoration of the sun with mantras and prostrations.s

[Skt. sūrya +namaskāra> த. சூரிய நமசுகாரம்]

**சூரியநாராயணன்** *šūriya-nārāyaṇaṉ,* பெ.(n.) கதிரவன் மண்டலத்தில் வாழ்பவராகக் கருதப்படும் திருமால்; Nārāyaṇaṉ believed to be dwelling in the solar orb.

*[Skt. sūrya nārāyaṇa > த. சூரிய நாராயணன்]*

**சூரியப்படாம்** *šūriya-p-paḍām,* பெ.(n.) விருதுவகை; an emblem of authority, perhaps bearing the figure of the sun. *"செம்படாஞ் சூரியப்படாம்" (திருக்காளத். பு. 7, 69).*

*[சூரியன்+படாம்]*

*[Skt. sūrya > த. சூரியன்]*

**சூரியப்பிரபை** *šūriya-p-pirabai,* பெ.(n.) 1. வெயில்; Sun's rays, sunlight. 2. தலையின் வலப்பக்கத்தில் மகளிர் அணிந்து கொள்ளும் மணிபதித்த பொன்னணிகலன்வகை; ornament of gold set with precious stones, worm by women on the right side of the head. 3. கதிரவன் வடிவாக அமைந்த ஊர்தி; sun-shaped vehicle for an idol.

*[Skt. sūrya+prabhā > த. சூரியப்பிரபை]*

**சூரியப்பிரவை** *šūriya-p-piravai,* பெ.(n.) **சூரியப்பிரபை** பார்க்க; see *šūriya-p-pirabai.*

*[Skt. sūrya > த. சூரியப்பிரவை]*

**சூரியப்பிறை** *šūriya-p-piṟai,* பெ.(n.) சூரியப்பிரபை பார்க்க; see šūriya-p-pirabai.

**சூரியபடம்** *šūriya-paḍam,* பெ.(n.) **சூரியகாந்திப்பட்டு** (இ.வ.) பார்க்க; see *šūriya-gāndhi-p-paṭṭu.*

**சூரியபானம்** *šūriya-bāṉam,* பெ.(n.) அரசர் முதலியோர் முன்பு எடுத்துச் செல்லும் வட்டமான விருதுவகை; a round parasol or fan carried before great personages or idols.

*[K. sūryapāna > த. சூரியபானம்]*

**சூரியபிம்பம்** *šūriya-bimbam,* பெ.(n.) கதிரவன் வட்டம்; disc or orb of the sun.

*[சூரியன்+பிம்பம்]*

*[Skt. sūrya > த. சூரிய]*

**சூரியபிரபாவகுடிகா** *šūriya-pirabāva-kuḍigā,* பெ.(n.) சயம், காசம், பாண்டு, காமாலை, குன்மம், சூலை, குட்டம், மூலம் முதலிய பெரிய நோய்களுக்குக் கொடுக்கும் ஆயுள்வேத மருந்து; an Āyurvedic preparation given for consumption bronchitis, anaemia, jaundice, piles etc. (சா.அக.)

**சூரியபுடம்[1]** *šūriya-puḍam,* பெ.(n.) வெயிலில் வைக்கும் மருந்துப்புடம்; warming medicinal oils in sunlight.

*[Skt. sūrya+puṭa > த. சூரியபுடம்]*

**சூரியபுடம்[2]** *šūriya-puḍam,* பெ.(n.) வானத்திற் கதிரவனது உண்மை நிலை (வின்.); Sun's geocentric longitude.

*[Skt. sūrya+sphuṭa > த. சூரியபுடம்]*

**சூரியபுராணம்** *šūriya-purāṇam,* பெ.(n.) **பிரமகைவர்த்தம்** (சங்.அக.) பார்க்க; see *piramakaivarttam.*

*[Skt. sūrya+purāṇa > த. சூரியபுராணம்]*

**சூரியமண்டலம்** *šūriya-maṇḍalam,* பெ.(n.) 1. கதிரவன் வட்டம்; orb or disc of the sun. 2. பகலவன் உலகம்; region of the sun. 3. வழிபாட்டுக் காலங்களில் கதிரவன் திங்கள் தீ ஆகிய இவற்றை, அறிவு செயலாற்றல் களெனத் தம்மிடத்தில் அழைத்தல் செய்யப் படுவதும் தாமரைமலர்களால், பாவிக்கப்படு வதுமான சில உடற்சுழிகள் (வின்.); mystic circles in the body regarded as lotus flowers and assigned in worship to jñāna, kriyā, icchā šakti of the deity under the respective emblems of the sun, moon and fire.

*[Skt. sūrya > த. சூரியன்+மண்டலம்]*

**சூரியமத்தியம்** *šūriya-mattiyam*, பெ.(n.) கதிரவனது நெடுவரை (வாக்கியப்)பிழை தீர்க்கப்படாத நிலை (செந். viii, 216); Sun's mean longitude

*[Skt. sūrya+madhyama > த. சூரியமத்தியம்]*

**சூரியவட்டம்** *šūriya-vattam*, பெ.(n.) கதிரவக் காலங்காட்டி (வின்.); sun-dial.

*[சூரியன்+வட்டம்]*

*[Skt. sūrya > த. சூரியன்]*

**சூரியவாத்து** *šūriya-vattu*, பெ.(n.) கிழக்கு மேற்காக நீண்டிருக்கும் வீடு (சிற்பரத்.16); house whose measurement east to west is longer than that of south to north.

*[Skt. sūrya+vādin >சூரியவாஸ்து> த. சூரியவாத்து]*

**சூரியவாதி** *šūriya-vādi*, பெ.(n.) கதிரவனே கடவுளெனக் கொண்டு, அவனது உலகத்தை அடைவதே வீடுபேறென்று வழக்காடுவோன் (வின்.); one who holds that the Sun is the Supreme Being and that final liberation consists in reaching is world.

*[Skt. sūrya+vādin > த. சூரியவாதி]*

**சூரியவீதி** *šūriya-vīdi*, பெ.(n.) இடபம், மடங்கல், ஆடவை (மிதுனம்), கடகம் என்ற நான்கு மடங்கிய மேடவீதி: மீனம், மேடம், கன்னி, துலாம் என்ற நான்குமடங்கிய இடபவீதி : சிலை (தனுசு), சுறவம் (மகரம்), கும்பம், நளி (விருச்சிகம்) என்ற நான்குமடங்கிய ஆடவை (மிதுன)வீதி என்று மூன்றாகப் பகுக்கப்பட்டுக் கதிரவன் வடதென் பக்கங்களில், வளைந்து செல்லும் வழியைத் தன்னகத்தே கொண்ட வானத்தின் கூறு; Sun-path which comprehends northern and southern declination of the sun, divided into three parts of four signs each, viz., *mēda-vīdi, comprising idabam, šingam, mitunam, kadagam : idapavīdi, comprising mīnam, mēdam, kanni, tulām: mituna-vīdi, comprising tanušu, magaram, kumbam, viruccigam.*

*[Skt. sūrya+vīthi > த. சூரியவீதி]*

**சூரியன்** *šūriyan*, பெ.(n.) நிலவுலகுக்கு இன்றியமையாத ஒளியையும், வெப்பத்தையும் தரும் விண்மீன், ஞாயிறு; Sun. *"சூரியனார் தொண்டை வாயினிற் பற்களை வாரி நெரித்தவாறு" (திருவாச. 14:15).* 2. நூற்றெட்டு அறிவுநூற்றொகுதிகளுள் ஒன்று; (உபநிடதம்) an Upaniṣad, one of 108. 3. சோழன் (பிங்.); Chōlā king. 4. செவ்வெருக்கு (மலை.); purple madas. 5. செம்புமலை (வின்.); mountain containing copper.

*[Skt. sūrya > த. சூரியன்]*

**சூரியன்கண்ணாடி** *šūriyan-kannādi*, பெ.(n.) பூசையில் ஞாயிற்றைப் பார்த்ததற்கு, இரு கை விரல்களையும் ஒருவகையாகச் சேரக்கோத்து உண்டாக்கும் இடைவெளி (இ.வ.); the opening formed by the interwining of the fingers of the two hands for gazing at the sun, in devotions.

*[சூரியன்+கண்ணாடி]*

*[Skt. sūrya > த. சூரியன்]*

**சூரியன்போடு-தல்** *šūriyan-pōdu-*, 20 செ.கு.வி.(v.i.) வழிபாட்டில் ஞாயிற்றைப் பார்ப்பதற்கு இடைவெளியுண்டாகும்படி, இருகைவிரல்களையும் ஒருவகையாகச் சேரக்கோத்தல் (பிராமண); to intertwine the fingers of the two hands and leave an opening in the middle for gazing at the sun, at noon devotions.

*[சூரியன்+போடு-,]*

*[Skt. sūrya > த. சூரியன்]*

**சூரியாவர்த்தவாதம்** *šūriyāvartta-vādam*, பெ.(n.) ஞாயிறு தோன்றும்போதும் மறையும் போதும் காணும், ஒருவகைத் தலைநோய்; sun-headache, hemicrania.

*[Skt. sūrya+āvarta > த. சூரியாவர்த்த வாதம்]*

**சூன்மி** *šūnmi,* பெ.(n.) பிறன்மனைப் புகுந்தாரை, காய்ந்து கொதிக்கும் இருப்புப் பாவையைத் தழுவும்படிச் செய்து வருத்தும் நிரய வகையுள் ஒன்று (சேதுபு. தனுக்கோ.3); a hell where immoral people are punished by being forced to embrace red-hot iron statues .

*[Skt. sūrmi > த. சூன்மி]*

**சூன்யம்** *šūnyam,* பெ.(n.) **சூனியம்** பார்க்க; see *šūniyam.*

**சூனம்**[1] *šūnam,* பெ.(n.) விரிமலர் (யாழ்.அக.); full-blown flower.

**த.வ. வீ.**

*[Skt. sūna > த. சூனம்]*

**சூனம்**[2] *šūnam,* பெ.(n.) அடி வயிற்று வீக்கம்; swelling of the abdomen.

**த.வ. உப்புசம்**

*[Skt. šūna > த. சூனம்]*

**சூனர்** *šūnar,* பெ.(n.) ஊன்விற்போர் (திவா.); dealers in meat.

**த.வ. புலைய**

*[Skt. sūna > த. சூனர்]*

**சூனியக்காரன்** *šūniya-k-kāran,* பெ.(n.) மந்திரத்தால் கொல்லும் கலையைக் கற்றவன்; sorcerer any practiser of witch craft or of any charm or incantation - wavlock.

**த.வ. கருவித்தைக்காரன், செய்வினையாளன்**

*[Skt. šūnya>த.சூனியம்+காரன்]*

**சூனியக்காரி** *šūniya-k-kāri,* பெ.(n.) மாயக் கலையில் வல்லவள்; witchwife.

**த.வ. கருவித்தைக்காரி**

*[Skt. šūnya> த. சூனியம்+காரி]*

**சூனியகும்பகம்** *šūniya-kumbagam,* பெ.(n.) மூன்று வகைக் கும்பங்களில் ஒன்று; one of the three varieties of kumbagam.

*[Skt. šūnya> த. சூனியம்+கும்பகம்]*

**சூனியஞ்செய்–தல்** *šūniyañ-šey-,* 1 செ.கு.வி. (v.i.) மந்திரக் கலை செய்வினையால் ஒருவனுக்குத் தீங்கிழைத்தல்; doing harm or injury through the influence of evil spirits (சா.அக.).

**த.வ. கருவினை**

*[Skt. šūnya> த. சூனியம்+செய்தல்]*

**சூனியத்திரவியம்** *šūniya-t-tiraviyam,* பெ. (n.) மாய மந்திரக் கலைக்குப் பயன்படும் எழுவகைப் பொருட்களான எலும்பு, எட்டி விறகு, ஊமத்தை விதை, வேப்பெண்ணெய், கரி, எருக்கம்பூ, பாம்பு முள் மாலை; the articles used in witch craft, seven in number, viz., *elumbu, etti viragu, ūmattai vidai, vēppenney, kari, erukkam-pū, pāmbu mulmālai.*

**த.வ. கருவினைப்பொருள்**

*[Skt. šūnya +dravya > த. சூனியத் திரவியம்]*

**சூனியத்துவம்** *šūniya-t-tuvam,* பெ.(n.) ஒன்றும் இல்லாமற் செய்தல்; to create vacuum (சா.அக.).

**த.வ. பாழ்படுத்தல்**

*[Skt. šūnyatattva> த. சூனியத்துவம்]*

**சூனியத்தொழில்** *šūniya-t-tolil,* பெ.(n.) சூழ்வினை; black art (சா.அக.).

**த.வ. கருவினை**

*[Skt. šūnya+ > த. சூனியம்+தொழில்]*

**சூனியப்படுதல்** *šūniya-p-padutal,* தொ.பெ. (vbl.n.) பாழாதல்; get wasted (சா.அக.).

*[Skt. šūnya> த. சூனியம்+படுதல்]*

**சூனியப்பார்வை** *šūniya-p-pārvai,* பெ.(n.) கெட்ட பார்வை; evil eye (சா.அக.).

**த.வ. கரும்பார்வை**

*[Skt. šūnya > த. சூனியம்+பார்வை]*

**சூனியம்** *šūniyam,* பெ.(n.) 1. இன்மை; non-existence, vacuity, vacuum, non-entity, nothingness. *"யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலின்" (சி.போ.7).* 2. சுழியம்; cipher. 3. வறிதாயிருக்கை; bareness. *அவள் கழுத்துச் சூனியமாயிருக்கிறது.* 4. பயனற்றது; that which is useless, unproductive or unpropitious. 5. மாயை; that which is unreal, unsubstantial or illusory. 6. மந்திரத்தால் கொல்லும் கலை; witchcraft causing evil, sorcery, black art. *"சூனியங்கொள் செயலார்" (திருப்பு. 787).* 7. மந்திரக் கலைப் பொருள்; articles of witchcraft. 8. தூய்மைக்கேடு செய்கை; ceremonial defilement.

த.வ. பாழ்செய்வினை

*[Skt. šūnya > த. சூனியம்]*

**சூனியம்போக்கி** *šūniyam-pōkki,* பெ.(n.) மந்திரவினையைப் போக்கும் மருந்து; a cure for one affected by sorcery.

த.வ. செய்வினைப்போக்கி

*[Skt. šūnya > த. சூனியம்+போக்கி]*

பொறிசில் வேர், எழுமுள் வேர், சென்னகரி வேர், நறுமுன்னை வேங்காய்த் தொட்டி, நிலப்பனை வேர், குருக்கத்தி வேர், இவற்றைச் சந்தனம் போல் அரைத்து உள்ளுக்குக் குடித்து மேலுக்கும் பூசச் செய்வினை போகும் (சா.அக.).

**சூனியமெடு-த்தல்** *šūniyam-edu-,* 5 செ.குன்றாவி.(v.t.) ஒருவனுக்குப் பில்லியினால் இழைத்த தீங்கை மந்திர வலிமையால் நீக்கல்; removing the evil effects of sorcery through the power of magic (சா.அக.).

த.வ. செய்வினையெடுத்தல்

*[Skt. šūnya > த. சூனியம்+எடுத்-தல்]*

**சூனியம்வை-த்தல்** *šūniyam-vai-,* 4 செ. குன்றாவி.(v.t.) ஒருவனுக்குக் கொடிய சிறுதெய்வங்களினால் தீங்கிழைத்தல்; the practising of witch craft, a distructive magic, on a person through the influence of evil spirits the purpose is for causing death, bewitching by hiding something in the ground (சா.அக.).

த.வ. செய்வினைசெய்தல்

*[Skt. šūnya> த. சூனியம்+வை-த்தல்]*

**சூனியவாதம்** *šūniya-vādam,* பெ.(n.) 1. கடவுள் இல்லை என்ற கோட்பாடு; doctrine of void. 2. செய்வினை வைக்கை; witchcraft.

*[Skt. šūnya+vāda > த. சூனியவாதம்.]*

**சூனியவாதி** *šūniya-vādi,* பெ.(n.) 1. கடவுள் மறுப்புக் கொள்கை உடையவன்; atheist. 2. கருவித்தைக்காரன்; sorcerer.

*[Skt. šūnya+vādi(n) > த. சூனியவாதி]*

**சூனியவித்தை** *šūniya-vittai,* பெ.(n.) செய்வினைக்கலை; witchcraft; art of killing through sorcery.

*[Skt. šūnya +vidyā > த. சூனியவித்தை]*

**சூனியன்** *šūniyan,* பெ.(n.) முடவன் (பிங்.); a cripple or lame person.

*[Skt. šūna > த. சூனியன்]*

**சூனியார்க்கம்** *šūniyārkkam,* பெ.(n.) அகவிலை ஏறுங்காலத்தைக் கணிக்கை (சங்.அக.); (Astrol.) predicting the period when the prices of commodities will rise.

*[Skt. šūnya > த. சூனியார்க்கம்]*

**சூனியான்மவாதி** *šūniyān-mavādi,* பெ.(n.) ஆதனில்லையென்று உரையாடுபவர்; one who says there is no soul (சா.அக.).

*[Skt. šūnya+ānma+vādin>த.சூனியான்ம வாதி]*

**சூனியோபாதானம்** *šūniyōpādānam,* பெ. (n.) உலகம் உண்டாவதற்குக் காரணமான பாழ் வெளி; state of void, as the principle from which the visible universe came into existence.

த.வ. பாழ்நிலை

*[Skt. šūnya+upādhāna > த. சூனியோபாதானம்]*

**சூனு** *šūṉu,* பெ.(n.) மகன்; son. *"இந்திர சூனுவு மெழுந்து" (பாரத.திரௌபதி.58).*

*[Skt. šūnu > த. சூனு]*

**சூனை¹** *šūṉai,* பெ.(n.) 1. அடி வயிற்று வீக்கம்; swelling of the abdomen. 2. குற்றம்; blemish, fault. 3. சொத்தை; that which is decayed.

*[Skt. šūnā > த. சூனை]*

**சூனை²** *šūṉai,* பெ.(n.) ஆடு, மாடுகள் வதை செய்யப்படும் இடம்; slaughter-house. *"சொன்ன சூனைத் துறந்த வற்றட்டன" (நீலகேசி, 314).*

**த.வ. ஆட்டுத்தொட்டி**

*[Skt. šūnā > த. சூனை]*

**செக்கு** *cekku,* பெ.(n.) உண்டியல்; cheque, order on a bank or banker for money (கொ.வ.).

**த.வ. காசோலை**

*[E. cheque > த. செக்கு]*

**செக்குக்கிழி-த்தல்** *cekku-k-kiḻi-,* 4 செ.கு.வி. (v.t.) உண்டியல் எழுதுதல்; to issue cheque (தற்.).

**த.வ. காசோலை வழங்கல்**

*[E. cheque > த. செக்குகிழித்தல்]*

**செக்குத்துணி** *cekku-t-tuṉi,* பெ.(n.) சீட்டி வகை; a kind of cloth.

**த.வ. உரப்புத்துணி**

*[E. check> த. செக்குத்துணி]*

**செக்குபந்தி** *cekkupanti,* பெ.(n.) 1. ஒவ்வொரு வயலின் எல்லையையும் விளக்கமாகக் காட்டும் கல்; the four boundaries with their distinctive marks showing the limits of each field as entered in the survey accounts (R.F.). 2. அதிகார வெல்லை; jurisdiction.

**த.வ. எல்லைக்கல்**

*[U. cakbandi > த. செக்குபந்தி]*

**செக்குவெட்டு-தல்** *šekku-veṭṭu-,* பெ.(n.) **செக்குக்கிழி-த்தல்** பார்க்க; see *cekku-k-kiḻi.*

**த.வ. காசோலை வழங்கல்**

*[E. cheque > த. செக்குவெட்டு+வெட்டுதல்]*

**செகச்சாலம்** *šega-c-cālam,* பெ.(n.) மாயக் கலை; magic, illusion.

**த.வ. கருமாயம், மாயக்கலை**

*[Skt. jagaijāla > த. செகச்சாலம்]*

**செகச்சோதி** *šegaccōdi,* பெ.(n.) 1. பேரொளி; world-illuminating light. 2. உலகிற்கு ஒளியாயிருக்குங் கடவுள்; God, as the light of the universe (w.).

**த.வ. பெரும்பேரொளி**

*[Skt. jagajjyōtis > த. செகச்சோதி]*

**செகசாலக்குளிகை** *šegasāla-k-kuḷigai,* பெ.(n.) உலகத்தையே மயங்க வைக்கும் சித்தர்களிடம் இருக்கும் ஒருவகை மருந்துக் குளிகை; a magic pill supposed to be in possession of Siddhars bewildering the whole world (சா.அக.).

**த.வ. ஆள்மயக்கி**

*[Skt.jegajala> த. செகசாலம்+குளிகை]*

**செகசாலம்** *šegašālam,* பெ.(n.) 1. உலக மயக்கு; bewilderment, bewitchment. 2. மாயவித்தை; magic. 3. பொய்க்காட்சி; illusion (சா.அக.).

**த.வ. மந்திரமயக்கு**

*[Skt. jagajjāla > த. செகசாலம்]*

**செகசாலமாடல்** *šegašāla-māḍal,* பெ.(n.) உலகத்தை மயக்கல்; fascinating the world (சா.அக.).

**த.வ. உலகப் புரட்டு**

*[Skt. jegajjala+ > த. செகசாலம்+ஆடல்]*

**செகசாலவுப்பு** *šegašāla-v-uppu,* பெ.(n.) வழலையுப்பு; an universal salt used in alchemy (சா.அக.).

த.வ. உழைமண்ணுப்பு

*[Skt. jagajjala > த. செகசாலம்+உப்பு]*

**செகசோதி** *šega-šōdi,* பெ.(n.) **செகச்சோதி** பார்க்க; see *šega-c-cōdi* (சங்.அக.).

*[Skt. jaga > த. செகசோதி]*

**செகத்குரு** *šegat-guru,* பெ.(n.) 1. உலக குரு; universal guru. 2. சங்கராச்சாரியார் மடத்தலைவரின் பட்டப்பெயர்; title of the head of *šaṅgarāccāriyār* mutt. 3. கம்மாளர் பட்டப்பெயர்; title of *kammālar* caste.

*[Skt. jagat > த. செகத்+குரு]*

**செகதங்கமாக்குச்சி** *šegadaṅgamā-k-kucci,* பெ.(n.) கணுக்கால் எலும்பு; ankle bone upon which the tibia rests Talus (சா.அக.).

**செகதம்பிகை** *šegat-ambigai,* பெ.(n.) **செகன்மாதா** பார்க்க; see *šegaṉmādā.*

த.வ. உலகம்மை

*[Skt. jagadāmbikā > த. செகதம்பிகை.]*

**செகதலம்** *šegatalam,* பெ.(n.) உலகம்; the world.

த.வ. நிலவுலகம்

*[Skt. jaga+tala > த. செகதலம்]*

**செகம்** *segam,* பெ.(n.) 1. உலகம்; the world. *"செகத்தை யெல்லாம்" (தாயு.தந்தை தாய்.6).* 2. கருமநிலம்; meterial world (சா.அக.).

த.வ. ஞாலம்

*[Skt. jagat > த. செகம்]*

**செகமயக்கம்** *šega-mayakkam,* பெ.(n.) உலகப்பற்று; worldly temptations that which is presented to the mind as an inducement to evil (சா.அக.).

த.வ. உலகமயக்கம்

*[Skt. jegam > த. செகம்+மயக்கம்]*

**செகமயக்கி** *šega-mayakki,* பெ.(n.) உலகத்தை மயங்கச் செய்தல்; the act of tempting to solicitations of the passions thus obscuring the true intellect and darkening the faculty of true understanding.

*[Skt. jegam > த. செகம்+மயக்கி]*

**செகமவுனி** *šegamouṉi,* பெ.(n.) உலக நடவடிக்கைகளில் ஈடுபடாமல், அமைதி காப்பவன்; one who enter into silence by restraining from all worldly activities (சா.அக.).

த.வ. உம்மனாமூஞ்சி

*[Skt. jegat+mowni> த. செகமவுனி]*

**செகமுருகுமேனி** *šegamurugu-mēṉi,* பெ.(n.) குப்பைமேனி; rubbish plant (சா.அக.).

த.வ. பூனைவணங்கி

*[Skt. jegam > த. செகம்]*



**செகரம்** *šegaram,* பெ.(n.) வெள்ளி; silver,*Argentum.* (சா.அக.)

*[Skt. jegara > த. செகரம்]*

**செகராசசேகரம்** *šegarāša-šegaram,* பெ.(n.) ஒரு கணிய நூல்; a treatise on astrology.

*[Skt. jagat+rāja-šegara> த. செகராசசேகரம்]*

**செகராசம்** *šegarāšam,* பெ.(n.) தென்னை; cocoanut palm (சா.அக.).

த.வ. தெங்கு

*[Skt. Jegam > த. செகராசம்]*

**செகரிகம்** *šegarigam,* பெ.(n.) நாயுருவி; (மலை.) Indian burr; dog prick.

*[Skt. šaikharika > த. செகரிகம்]*



**செகவீரம்** *šegavēram,* பெ.(n.) கொச்சி வீரம்; native corossive sublimate formerly prepared in Cochin (சா.அக.).

*[Skt. jegam > த. செகவீரம்]*

**செகற்குரு** *šegar-guru,* பெ.(n.) **செகத்குரு** பார்க்க; see *šega-t-guru. "செகற்குருவாங் கொல்லன் கவியை" (தனிப்பா.i, 170. 22).*

**த.வ. உலககுரு**

*[Skt. jegam > த. செகம்+குரு]*

**செகன்மாதா** *šegan-mātā,* பெ.(n.) மலைமகள்; *Pārvati,* as mother of the world.

**த.வ. உலகம்மை**

*[Skt. jagatmātā > த. செகன்மாதா]*

**செகன்மோகினி** *šegan-mōgini,* பெ.(n.) உலகனைத்தும் மயக்கும் பேரழகி; beautiful woman, as fascinating all the world.

*[Skt.jagat+mōhini > த. செகன்மோகினி]*

**செகனம்** *šeganam,* பெ.(n.) 1. தொடையின் உட்பக்கம்; interior of thigh. 2. இடுப்பு; loin (சா.அக.).

**செகனவாதம்** *šegana-vādam,* பெ.(n.) ஊழற்சதை மிகுதியால் உண்டாகும் நோய் வகை; a disease due to flatulence.

**த.வ. ஊழலூதை**

*[Skt. jaghana+vāta > த. செகனவாதம்]*

**செகிப்புடலம்** *šegi-p-pudalam,* பெ.(n.) மரமஞ்சள்; tree turmeric (சா.அக.).

**செகு** *šegu,* பெ.(n.) தொடர்ந்திராமல் துண்டுதுண்டாக இருக்கும் சிற்றூர் நிலம் அல்லது இறையூட்டு நிலம்; detached fields of a village; a patch of rent-free land or any separate farm (R.T.).

*[U. cak > த. செகு.]*

**செடம்** *šedam,* பெ.(n.) பிறக்கும்போது ஆன்மாவின் நல்லறிவைக் கெடுக்கும் ஆவி; evil humour of the body destroying the innate intelligence of he soul at birth. *"செடநீறெழ வெரிக்குங் கிருபாகர" (நூற்றெட்டுத். திருப்புகழ்.15).*

*[Skt. šatha > த. செடம்]*

**செண்டா** *šendā,* பெ.(n.) கொடி; flag.

*[U. jhanda > த. செண்டா]*

**செணம்** *šenam,* பெ.(n.) கணநேரம்; moment (யாழ்.அக.).

**த.வ. கண்இமைப்போது; கைநொடிப்போது.**

*[Skt. ksana > த. செணம்]*

**செத்துவம்** *šettuvam,* பெ.(n.) பைசாசம்; evil spirit. *"செத்துவங்க டாக்கி" (நீலகேசி, 112).*

*[Skt. satva > த. செத்துவம்]*

**செந்து**[1] *šendu,* பெ.(n.) 1. உயிர் விலங்கு; anything possessed of life, living being, creature (பிங்.). 2. தாழ்ந்த வகையைச் சார்ந்த ஊர்வன முதலிய உயிரிகள்; animal of the inferior, species, as the lower brutes, insects, reptiles, worms. 3. நரி; jackal (பிங்.).

**த.வ. உயிரி**

*[Skt. jantu > த. செந்து]*

**செந்து[2]** *šendu* 1. அணு; atom (பிங்.). 2. ஏழு நிரய (நரக)த்தொன்று; a hell, one of *elu-naragam*, q.v. (பிங்.).

**செந்துத்தானம்** *šendu-t-tāṉam,* பெ.(n.) செந்துக்கள் மொய்த்துத் துன்பம் தரும் நிரய வகை; a hell of torture by means of worms and insects.

[*Skt. jantu-sthāna > த. செந்துத்தானம்*]

**செந்துரசம்** *šendu-rašam,* பெ.(n.) ஒட்டக் கூடிய ஒரு வகைப் பொருள்; copal, a resinous substance.

[*Skt. janturasa > த. செந்துரசம்*]

**செப்பட்டை** *šeppaṭṭai,* பெ.(n.) 1. பறவைச் சிறகு; wing (யாழ்.அக.). 2. தோள் பட்டை; shoulder blade. 3. கன்னம்; cheek. 4. தூண்டியில் வைக்கும் சதுரக்கல்; plinth.

**த.வ. சேர்பட்டை**

[*Skt. carpaṭa > த. செப்பட்டை*]

**செபக்குடம்** *šeba-k-kḍam,* பெ.(n.) மந்திரித்த நீர்க்குடம்; water-pot sanctified with mantras.

[*செபம்+குடம்*]

[*Skt. japa+ > த. செபம்*]

**செபம்** *šebam,* பெ.(n.) 1. மந்திரிக்கக்கூடிய இடம்; silent recitation of mantras. *"செபந்தவந்தானம்" (சேதுபு.சேதுபல.2).* 2. மன்றாட்டு; prayer. 3. தந்திரம்; stratagem, device, trick. *"நின்செபந்தாள் சிறிது நடவாது" (அருட்பா, vi, திருமு. தான்பெற்ற.8).*

**த.வ. உருவேற்றுதல்**

[*Skt. japa > த. செபம்*]

**செபி-த்தல்** *šebi-,* 11 செ.கு.வி.(v.i.) 1. மந்திரம் உருப்போடுதல்; to recite mantras in magical or religious ceremonies. *"ஒருமனுச் செபித்தான்" (உபதேச. உருத்திராக்க.7).* 2. வேண்டுதல்; to pray.

**த.வ. உருப்போடுதல்**

[*Skt. jap > த. செபி-த்தல்*]

**செமி[1]-த்தல்** *šemi-,* 11 செ.கு.வி.(v.t.) செரித்தல்; to digest. *"நஞ்சையுண்டு செமிப்பீரையா" (திருக்குற். ஊடற். 19:செந் XXV.392).*

**த.வ. செரித்தல்**

[*Skt. šām > த. செமி*]

**செமி[2]-த்தல்** *šemi,* 11 செ.கு.வி.(vi.) பிறத்தல்; to be born. *"செமித்த தெத்தனை" (திருப்பு.242).*

[*Skt. jan > த. செமி-த்தல்*]

**செமி[3]-த்தல்** *šemi,* 11 செ.கு.வி.(v.t.) மன்னித்தல்; to pardon, excuse. *"தீதேதுஞ் செமியாதீர்" (திருக்குற். ஊடற். 19:செந். XXV.392).*

[*Skt. kṣam > த. செமி-த்தல்*]

**செயகானப்பூடு** *šeyakāṉa-p-pūḍu,* பெ.(n.) மருளூமத்தை; confusion creeper, head ache plant (சா.அக.).

**த.வ. மருள்**

**செயசுண்ணம்** *šeyasuṇṇam,* பெ.(n.) 1. தாளித்த சுண்ணாம்பு; slaked lime. 2. புடமிட்டெடுத்த சுண்ணம்; a calcium compound derived from calcination (சா.அக.).

**த.வ. நீர்த்த சுண்ணாம்பு**

**செயசூதசெந்தூரம்** *šeyašūdasendūram,* பெ.(n.) இந்திர சித்து, சிசுபாலன் இவர்கள் தருக்கக் கலைக்காக இதளியத்தைக் கட்டிச் செய்த சிந்தூரம்; calcined red oxide prepared from consolidated mercury. It was prepared by Indirajithu and Sisu balan and others (சா.அக.).

**செயசூததாம்பிரம்** *šeyasūtatāmbiram,* பெ.(n.) செம்பைப் பொன்னாக்கும் மருந்து; that which converts copper into gold (சா.அக.).

**த.வ. பொன்னாக்கி**

**செயசூதம்** *šeyasūdam,* பெ.(n.) 1. யூகி முனி கூறிய புடமிடுதல் முறையால் செம்பினின்று எடுக்கப்பட்ட களிம்பற்ற செம்பு; alchemical copper (pure) obtained by removing the verdigris from ordinary copper, according to the process laid down in yogic muni works on Alchemy. 2. மூலிகை அல்லது தாதுப்பொருட்களினின்று எடுக்கும் செம்பு; copper extracted from herbs and animal matter or transmited or extracted from other mineral drugs as contemplated in Siddharswork. 3. செம்பு மூலிகை; copper plant. 4. செம்பு; copper (சா.அக.).

த.வ. மூலிகைச்செம்பு

**செயசோதி** *šeyasōdi,* பெ.(n.) அணியம் செய்த ஒரு உப்பு; a kind of prepared salt (சா.அக.).

த.வ. செய்யுப்பு

**செயடால்** *šeyaḍal,* பெ.(n.) 1. அடாவடி; foppery. 2. **சவடால்** பார்க்க; see *šavaḍāl.*

த.வ. தடாலடி

*[U. chauṭāl > த. செயடால்]*

**செயதீபகாரி** *šeyadībakāri,* பெ.(n.) பெருந் தும்பை; large leucas (சா.அக.).

த.வ. ஆனைத்தும்பை

**செயதே** *šeyadē,* பெ.(n.) உப்பு; salt (சா.அக.).

**செயதேகி** *šeyatēgi,* பெ.(n.) கல்லுப்பு; sea salt (சா.அக.).

**செயந்தி** *šeyandi,* பெ.(n.) தெய்வங்கள் மற்றும் பெரிய மாந்தர்களின் பிறந்தநாள்; birthday of gods and great personages.

*[Skt. jayanti > த. செயந்தி]*

**செயந்தியாசம்** *šeyandiyāsam,* பெ.(n.) எங்கும் காணக்கூடியதும், மஞ்சள் நிறப் பூக்களும், நீளமான காய்களும் உடைய மரம்; bastard sensitive plant-*Sesbania aegyptia alias coronilla sesban.* A common tree which has longer leaves, which yello flowers.

இதன் விதைகளை எண்ணெயில் காய்ச்சித் தடவ குருக்கள் குணமாகும். வதக்கிக் கட்ட வீக்கம் போகும் (சா.அக.).

**செயநாதம்** *šeyanādam,* பெ.(n.) துத்தம்; white vitriol zinc sulphate (சா.அக.).

த.வ. வெள்ளைத் துத்தம்

**செயநீர்**[1] *šeyanīr,* பெ.(n.) 1. ஒரு வகை நீர்மம்; any liquid prepared for drink. 2. சாராயம்; arrack. 3. அமுரி; urine. 4. முலைப்பால்; woman's breast milk. 5. குடிநீர்; any cool drink. 6. ஒரு வகை நெருப்புக் குழம்பு; இது கனிமங்களைக் கரைக்கும்; a pungent liquid used in Alchemy corrosive sublimate and salammoniac. 7. கருப்பையில் உண்டாகும் நீர்; a liquid formed in the womb on account that take place in the womb.

**செயநீர் வகைகள்** : 1. வெடியுப்புச் செயநீர்; 2. காரச்செயநீர்; 3. காடிச் செயநீர்; 4. தாம்பூரச் செயநீர்; 5. துரிசுச் செயநீர்; 6. பூரச் செயநீர்; 7. உப்புச் செயநீர்; 8. சாரக்கட்டுச் செயநீர்; 9. அறுவகைச்செயநீர்; 10. நாகச் செயநீர்; 11.அண்டச்செயநீர்,12. வீரச்செயநீர், 13. காரச் செயநீர், 14. சிப்பிச் செயநீர், 15. கௌரிச் செயநீர், 16. செங்குமரிச்செயநீர், 17. அமுரிச் செயநீர் (சா.அக.).

**செயநீர்**[2] *šeyanīr,* பெ.(n.) 1. சுண்ணாம்பும், எரியுப்பும் சேர்த்துப் பொடித்துப் பனியில் வைத்திறக்கிய காரநீர்; a pungent liquid prepared by exposing to nights dew a mixture of powdered lime and salammoniac. 2. பூநீறு, வீரம், சாரம் இவற்றைச் சரிபாதியாக எடுத்துப் பீங்கானிலிட்டு, இராப்பனியில் வைத்து இறக்கிய கார மருந்து நீர்; a medicinal preparation of pungent liquid obtained by exposing to nights dew a porcelain dish containing a mixture of saline efflorescence (purified fullers earth).

**செயநீர்இறக்கல்** *šeyanir-irakkal,* பெ.(n.) புடமிடுதல் முறையில் அணியம் செய்த மருந்தைச் செயநீர் எடுக்க வேண்டின், அதை ஒரு பீங்கானில் இட்டு பூரணை தொடங்கி, சுறவம் (தை) கும்பப் (மாசி) திங்கள்களில் இராப்பனியில், அன்றாடம் வைத்திருந்து இத்தனை நாள் என்னும் முறைப்படி விடிவதற்குள் வெயில் படாமல் எடுத்துவிட வேண்டிய முறை; this is the general method of preparaing a pungent liqud invariably every preparation contains salammoniac (சா.அக.).

**செயநீர்க்கருத்தன்** *šeyanir-k-karuttan,* பெ.(n.) எரியுப்பு; salammoniac, It is so called because it forms an important ingredient in the formation of most of the pungent liquids (சா.அக.).

**செயநீர்காலம்** *šeyanir-kālam,* பெ.(n.) செயநீர் இறக்குங் காலம்; season for preparing the pungent liquid or the philosophers acid-January and February dew seasons (சா.அக.).

**செயநீர்குத்தல்** *šeyanirkuttal,* பெ.(n.) செயநீர் ஊற்றி அரைத்தல்; grinding medicine with the prescribed pungent liquid (சா.அக.).

**செயநீர்காரணசித்தன்** *šeyanirkāraṇa cittaṉ,* பெ.(n.) செயநீர் உண்டாவதற்கு மூலமான எரியுப்பு; salammoniac is so called from its being an important of pungent liquid (சா.அக.).

**செயநீர்சித்திரம்** *šeyanir-cittiram,* பெ.(n.) ஒருவகை உப்பு; salammoniac (சா.அக.).

**செயநீர்போக்கு** *šeyanir-p-pōkku,* பெ.(n.) இன்ன மருந்து செய்வதற்கு இன்னவிதமான காரநீர் அணியம் செய்ய வேண்டுமென்ற முறை; the process of preparing a particular pungent fluid for a particular medicine.

**செயநீராட்டல்** *šeyanirāṭṭal,* பெ.(n.) மருந்துடன் செயநீர் கூட்டி அரைத்தல்; grinding the medicine with the liquid prepared by keeping some chemicals in the open air at night (சா.அக.).

**செயப்பூர்ப்பச்சை** *šeyappūr-p-paccai,* பெ. (n.) உயர்ந்த பச்சை மணி; true emerald, as brought from Jeypore, opp. to *vaḷaiyar-paccai.*

த.வ. பச்சை

*[செயப்பூர்+பச்சை]*

*[Skt. jaya-pura > த. செயப்பூர்ப்பச்சை]*

**செயபச்சை** *šeya-paccai,* பெ.(n.) மரமஞ்சள்; tree turmeric (சா.அக.).

**செயபரம்** *šeyaparam,* பெ.(n.) **செயபச்சை** பார்க்க; see *šeyapaccai.*

**செயபாகசாத்திரம்** *šēyabāgašāttiram,* பெ.(n.) மருந்துகளைச் செய்யும் முறைகளைக் கூறும் வடமொழி மருந்து இலக்கண நூல்; an authoritative treatise in Sanskrit on drugs and their preparation - *Pharmacopia* (சா.அக.).

**செயபீதம்** *šeya-pidam,* பெ.(n.) கௌரி நஞ்சு; a prepared yellow arsenic (மூ.அ.).

**செயபூநிம்பம்** *šeyapūnimbam,* பெ.(n.) நிலவேம்பு; ground neem (சா.அக.).

**செயம்** *šeyam,* பெ.(n.) 1. வெற்றி; victory, success. *"செப்பியமர்க் களம்புகுந்தாற் செயம் பெறுவர்" (சிவரக.கணபதியு.7).* 2. செயதிவசம் (பாக்கு); arecanut (விதான. குணாகுண.79).

*[Skt. jaya > த. செயம்]*

**செயமங்களம்** *šeya-maṅgaḷam,* பெ.(n.) நற்சுழியுள்ள குதிரைச் சாதி (அசுவசா.12); a breed of horse with auspicious marks.

*[Skt. jaya > த. செயம்+மங்களம்]*

**செயமதம்** *šeyamadam,* பெ.(n.) தயிர்; curd (சா.அக.).

**செயமாக்கி** *šeyamākki,* பெ.(n.) சேங் கொட்டை; marking or dhoby's nut (சா.அக.).

**செயமாகம்** *šeyamāgam,* பெ.(n.) தினை; millet.

**செயரசகற்பூரக்குளிகை** *šeyarašakarpūra-k-kuligai,* பெ.(n.) கல்லுளிச் சித்தன் முறைப் படி செரியாமைக்கும், கழிச்சலுக்கும் பயன் படும் மருந்துக்கட்டி; a pill prepared according to the method of Kalluli Siddhar and prescribed for indigestion and chronic diarrhoea.

**செயரசப்பிரளயம்** *šeyarasa-p-piralayam,* பெ.(n.) அகத்தியர் மருத்துவக் காவியத்திற் சொல்லி உள்ள ஒருவகைப் புடமிட்ட இதளியச் செந்தூரம்; a kind of calcined oxide of mercury described in Agastiar's treatise on medicine.

த.வ. இதளியச்செந்தூளம்

**செயரசம்** *šeyarašam,* பெ.(n.) 1. இலிங்கம், வீரம், பூரம் முதலிய சரக்குகளினின்று வாலையில் இறக்கித் தூய்மைப்படுத்தப்பட்ட இதளியம்; refined mercury extracted from its compound such as vermilin, corossive, sublimate etc. 2. வாலை இதளியம்; sublimate of mercury. 3. நெருப்பிற்கு ஓடாதபடி கட்டிய இதளியம்; consolidated mercury which will not disappear on heating. 4. கொங்கணவாத காவியத்திற் சொல்லியுள்ள சித்த இதளியம், சிராவண இதளியம், முதலிய இதளிய மருந்துகள்; mercurial preparation such as these mentioned above contemplated in Konganavar work in alchemy. 5. ஒரு வகை இதளியச் செந்தூரம்; an oxide of mercury.

**செயலவணம்** *šeyalavaṇam,* பெ.(n.) 1. கடல் நீரைக் காய்ச்சிய உப்பு; salt prepared from sea water. 2. ஆறாங் காய்ச்சலுப்பு; nite boiled and filtered six times 3. பிண்ட உப்பு; salt prepared from foetus. 4. தூய்மை செய்த உப்பு; refined salt. 5. கட்டுப்பு; consolidated salt (சா.அக.).

த.வ. நல்லுப்பு

**செயவிருட்சம்** *šeyavirutcam,* பெ.(n.) இதளை; an unidentified plant (சா.அக.).

**செயி-த்தல்** *šeyi-,* 4 செ.கு.வி. (v.t.) 1. வெல்லுதல்; to overcome, conquer, vanquish. 2. செயல் வெற்றி; to succeed, as in business.

*[Skt. jay > த. செயி-]*

**செயினட்டிகை** *šeyinaṭṭigai,* பெ.(n.) கடிகாரச் சங்கிலி போலச் செய்த அட்டிகை வகை (தற்.); a necklet in the pattern of a watch chain to which a pendant is attached.

*[E. chain> த. செயின்+அட்டிகை]*



**செயை** *šeyai,* பெ.(n.) மும்மி (திரிதியை), எண்மி (அட்டமி), பதின்மும்மி (திரயோதசி) என்ற பிறைநாள்கள் (திதிகள்); the 3rd, 8th and 13th lunar days (விதான.பஞ்சாங்.2).

*[Skt. jayā > த. செயை]*

**செல்லாய்** *šellāy,* பெ.(n.) சல்லா (பார்க்க); a kind of muslin (இ.வ.).

*[U. Sellā > த. செல்லாய்]*

**செல்லியம்** *šelliyam,* பெ.(n.) கோழி; fowl.

**செலசரம்** *šela-šaram,* பெ.(n.) நீர் வாழ்வன;

aquatic animals. *"இளையீந்தாள் செலசரமாகிய பலவும்" (கம்பரா.சடாயுகாண்.28).*

*[**Skt.** jala > த. செலசரம்]*

**செலதம்** *šeladam,* பெ.(n.) கோரைக்கிழங்கு (மலை.); fragrant tuber of cyperus rotundus.

*[**Skt.** jalada > த. செலதம்]*

**செலப்பிரீதி** *šela-p-piriti,* பெ.(n.) கருப்பூர சிலாசத்து; foliated crystallised gypsum, used in medicine as a caustic (சங்.அக.).

*[**Skt.** jala > த. செலப்பிரீதி]*

**செலம்** *šelam,* பெ.(n.) 1. நீர்; water. *"செலசரமாகிய பலவும்" (கம்பரா. சடாயுகாண். 28).* 2. இலாமிச்சை; cuscuss grass (சங்.அக.).

**த.வ. 1. தண்ணீர், 2. நறுமணப்புல்**

*[**Skt.** jala > த. செலம்]*

**செலாமணி** *šelāmaṇi,* பெ.(n.) 1. செல்லக் கூடியது; that which can be passed, as coin that which is a legal tender. 2. செல்வாக்கு; influence. *"இப்போது அவருக்கு அவ்வளவு செலாமணியில்லை" (இ.வ.).*

*[**U.** calāoni > த. செலாமணி]*

**செலான்** *šelāṉ,* பெ.(n.) செலுத்துச் சீட்டு (சலான்); certificate of despatch, etc. (R.F.).

*[**H.** calāṉ > த. செலான்]*

**செவம்** *ševam,* பெ.(n.) மன்றாட்டு; prayer, meditation. *"சந்தி செவத்தொழிலோமந் தேவதர்ப்பணம்" (பிரபோத.39, 14).*

*[**Skt.** japa > த. செவம்]*

**செவுங்களூர்ப்பூடு** *ševuṅgaḷūr-p-pūḍu,* பெ.(n.) ஒரு வகை மருந்து; a kind of plant (சா.அக.).

**செழுகம்** *šeḻugam,* பெ.(n.) அட்டை; leech. *"செழுகம்போலச் சுருக்கியும் விரிந்தும்" (சி.போ.பா.4, 2, பக்.264).*

*[**Skt.** jalukā > த. செழுகம்]*



**சென்மசாபலியம்** *šeṉmašābaliyam,* பெ.(n.) பிறவிப் பயனை அடைதல்; realisation of one object in life.

**த.வ. பிறவிப்பேறு**

**சென்மபத்திரிக்கை** *šeṉmapattirigai,* பெ.(n.) பிறப்புக் குறிப்பு அடங்கிய பிறப்பியம் (சாதகம்); horoscope indicating the events in ones life (சா.அக.).

**சென்மபீசம்** *šeṉma-pīšam,* பெ.(n.) ஆணவ மலம்; pride arrogant conduct (சா.அக.).

**சென்மம்** *šeṉmam,* பெ.(n.) 1. பிறப்பு; birth. *"சென்மந் தரங்கம்" (அஷ்டப். திருவரங்கத்தந்.46) 2. முழுவுரிமை;* absolute dominant right *Nāṉ. இந்த நிலம் சென்மமா ஒத்தியா?.*

**த.வ. பிறவி**

*[**Skt.** janman > த. சென்மம்]*

**சென்மமம்** *šeṉmamam,* பெ.(n.) பிறப்பு; birth (சா.அக.).

**சென்மமலடி** *šeṉma-maladi,* பெ.(n.) பிறவி மலடி; barren women by birth (சா.அக.).

**சென்மமார்க்காகி** *šeṉma-mārkkāki,* பெ.(n.) நஞ்சைக் கட்டுகிற மூலிகைச் செடி; a

rare plant supposed to have the virtue of consolidating arsenic.

**சென்மாந்திரம்** *šeṉmāndiram,* பெ.(n.) முற்பிறப்பு, வருபிறப்பு, இரண்டுங் கூடியது; birth referring to the past and future births (சா.அக.).

**த.வ. பிறவித்தொடர்ச்சி**

**சென்மாந்திரவாசனை** *šeṉmāndira-vāšaṉai,* பெ.(n.) கருமபலனால் ஏற்பட்ட வினைகள்; deeds attributed to one's previous birth (சா.அக.).

**த.வ. முற்பிறப்புநினைவு**

**சென்னியம்** *šeṉṉiyam,* பெ.(n.) உண்டு பண்ணப்பட்டது; thing produced. *"பிராந்தி சென்னியமாகும்" (வேதா.சூ. 110).*

**த.வ. செய்யப்பட்டது**

*[Skt. janya > த. சென்னியம்]*

**சென்னீர்த்துடக்கம்** *šeṉṉīr-t-tuḍakkam,* பெ.(n.) மாதவிடாய்க் குருதி; menstrual blood (சா.அக.).

**சென்னை** *šeṉṉai,* பெ.(n.) கோயிலில் உலாத் திருமேனி புறப்பாடறிவிக்கும் மேளம்; a drum announcing the procession of an idon.

**த.வ. செண்டை**

*[Skt. samjñā > த. சென்னை]*

**செனகசெனனியர்** *šeṉaga-šeṉaṉiyar,* பெ.(n.) தாய், தந்தையர்; parents. *"மறலியு முளைவுறச் சிவனை வழிபடு மகவை யருளிய செனக செனனியர்" (பாரத.வேத்திர.47).*

*[Skt.janaka+janani>த.செனகசெனனியர்]*

**செனகநங்கை** *šeṉaga-naṅgai,* பெ.(n.) செடிவகை; seneca milkwort, polygala senega.

*[செனகல்+நங்கை]*

*[E. Senegal > த. செனகல்]*

**செனகன்** *šeṉagaṉ,* பெ.(n.) தந்தை; father (பாரத.வேத்திர.47).

*[Skt. janaka > த. செனகன்]*

**செனனம்** *šeṉaṉam,* பெ.(n.) பிறப்பு; birth (சூடா.). *"அன்பர்தஞ் செனனவித்தைப் பொடிப்படுத்தே" (சிவரக.காயத்திரி.13).*

*[Skt. janana > த. செனனம்]*

**செனனி** *šeṉaṉi,* பெ.(n.) 1. தாய்; mother (பாரத. வேத்திர.47.). 2. உயிர்களின் பிறப்புக்குக் காரணமான சிவசத்தி; (šaiva) creative energy of *Šivaṉ* (சி.சி.1, 60, ஞானப்.).

**த.வ. ஈன்றோள்**

*[Skt. janani > த. செனனி]*

**செனி-த்தல்** *šeṉi-,* 11 செ.கு.வி.(v.i.) பிறத்தல்; to be born. *"திங்கணுதல் வேர்விற் செனித்தோனும்" (ஏகாம்.உலா.84).*

*[Skt. jan > த. செனி-]*

**செனு** *šeṉu,* பெ.(n.) தோன்றிடம் (உற்பத்தியிடம்); birth place. *"தனுவேதத்தின் கேள்விக்குஞ் சதுர்வேதத்தின் வேள்விக்குஞ் செனுவே" (பாரத.பதினோ.37).*

*[Skt. janus > த. செனு]*

**சேகண்டி** *šēgaṇḍi,* பெ.(n.) கோல் கொண்டடிக்கும் வட்ட மணி வகை (சூடா.); gong.

*[Skt. jaya-ghaṇṭā > த. சேகண்டி]*



**சேகரம்**[1] *šēgaram,* பெ.(n.) 1. வருவாய் ஈட்டுகை; acquisition, savings. 2. அணியம் செய்தல்; provision, preparation, readiness. 3. கூட்டம்; collection, gathering. 4. கொடிவழி (வமிசம்); family, tribe.

"நீ எந்தச் சேகரத்தான்?". 5. மாவட்டம்; district. "இராமநாதபுரஞ் சேகரம்".

[Skt. perh.svikr. > த. சேகரம்]

**சேகரம்[2]** *šēgaram,* பெ.(n.) 1. மணிமுடி; crown, crest (பிங்.). 2. தலை; head (சூடா.). "செக்கர்வான் றிங்களணி சேகரத்தான்" (திருவானைக்.உலா, 82). 3. தலையிலணிவது; that which is worn on the head, as garland of flowers. 4. அழகு; beauty (சூடா.).

[Skt. šēkhara > த. சேகரம்]

**சேகரன்** *šēgaran,* பெ.(n.) சிறந்தோன்; eminent person. "மூதறிஞர் சேகரன்" (பிரபோத.கடவுள்.4).

[Skt. šēkhara > த. சேகரன்.]

**சேகரி[1]-த்தல்** *šēgari-,* 11 செ.குன்றாவி. (v.t.) 1. வருவாய் ஈட்டுகை; to acquire, get, secure, procure. "பதார்த்தமெல்லாம்... சேகரித்துப் பூசித்தேத்தி" (சிவரக. சிவதன்மா.34). 2. அணியஞ்செய்தல்; to prepare, make ready. 3. ஒன்று சேர்த்தல்; to collect, gather, assemble.

[Skt. svikr> த. சேகரி-]

**சேகரி[2]-த்தல்** *šēgari-,*11 செ.குன்றாவி. (v.t.) சிறந்திருத்தல்; to excel. "அவர்களுக்குச் சிகாமணிபோலே சேகரிக்குமவராய்" (திவ். பெருமாள். தனியன், வியா, பக்.6).

[Skt. šēkhara > த. சேகரி-]

**சேகன்** *šēgan,* பெ.(n.) படையாள் (சேவகன்); soldier. "சேகா... குதிரையோ வீறியது" (கலித்.96).

ம. சேகன்

த.வ. போர்வீரன், மறவன்

[Skt. šēvaka > த. சேகன்]

**சேசகிரி** *šēša-giri,* பெ.(n.) ஆதிசேடனது உருவமாகக் கருதப்படும் திருப்பதி மலை; Tirupathi hills, considered as *ādi-šēṣa.*

த.வ. ஏழுமலை, திருமலை

[Skt. sēsa > த. சேசகிரி.]

**சேசச்சினையெண்** *šēsa-c-cinaiyen,* பெ. (n.) வகுத்தலிற் சரியாயடங்காத எண்; aliquant (தற்.).

[Skt. sēsa > த. சேசச்சினையெண்]

**சேசசயனம்** *šēṣa-šayanam,* பெ.(n.) திருமாலுக்குரிய ஆதிசேடனாகிய படுக்கை; Vishnu's bed formed by *Adi-šēṣa.*

த.வ. அரவணை, பாம்புப்படுக்கை

[Skt. cēsa+cayanam.> த. சேசசயனம்]



**சேசசாயி** *šēša-sāyi,* பெ.(n.) திருமால்; Viṣnu's as reclining on *Ādi-šēṣa.* ஆதிசேடன் மீது பள்ளி கொண்டோன்.

த.வ. அரவணையான்

[Skt. šēsa+šāyin > த. சேசசாயி]

**சேசத்தியாச்சியம்** *šēša-t-tiyācciyam,* பெ. (n.) முன்னாளிலிருந்து தொடர்ந்த மிச்சமாய் நற்செயல்களுக்குத் தகாத காலம்; (Astrol.) the unexpired period of *tiyācciyam* that runs over from the end of one day to the next, believed to be inauspicious.

[Skt. šēṣa+tiyacciyam]

**சேசநம்** *šēsanam,* பெ.(n.) பெண் ஆமை; female tortoise(சா.அக.).

**சேசபூதன்** *šēša-būdaṉ,* பெ.(n.) அடியவன் (ஈடு.); god's slave, devotee *sēsa-būtaṉ.*

**த.வ. அடிப்பொடி**

*[Skt. šēṣa > த.சேசம்]*

**சேசம்** *šēšam,* பெ.(n.) மீதம் (சேடம்); remainder.

**த.வ. மீதி**

*[Skt. šēṣa > த.சேசம்]*

**சேசவோமம்** *šēša-vōmam,* பெ.(n.) திருமணம் நடக்கும் நாள்களில் இறுதிநாளில் நடைபெறும் ஓமச்சடங்கு; sacrificial offering at the close of a wedding ceremony (Brāh.).

*[Skt. šēṣa>த. சேசவோமம்]*

**சேசன்** *šēšaṉ,* பெ.(n.) 1. ஆதி வடிவானவன்; *ādi-sēṣa* the thousand - headed serpent. 2. அடியவன்; devotee, slave.

**த.வ. அடிப்பொடி**

*[Skt. šēṣa > த. சேசன்]*

**சேசனக்கிரியை** *šēšaṉa-k-kiriyai,* பெ.(n.) புண்களை, மருந்துநீர் அல்லது நெய்மத்தினால் நனைத்தல் அல்லது கழுவுதல்; cleaning the ulcers of wounds with lotions or oils (சா.அக.).

**சேசனம்**[1] *šēšaṉam,* பெ.(n.) 1. நனைத்தல்; soaking in water. 2. ஈரமாக்கல்; marking wet.

**சேசனம்**[2] *šēšaṉam,* பெ.(n.) பெண் ஆமை; female tortoise (சா.அக.).

**சேசனியம்** *šēšaṉiyam,* பெ.(n.) தெள்ளுக் கொடி; negrobean creeper, negrobean cowith (சா.அக.).

**சேசாசலம்** *šēšasalam,* பெ.(n.) **சேசகிரி** பார்க்க; see *sēsagiri.*

**த.வ. ஏழுமலை, திருமலை**

*[Skt. šēṣacala > த.சேசாசலம்]*

**சேசாத்திரி** *šēšāttiri,* பெ.(n.) **சேசகிரி** பார்க்க; see *sēsagiri.*

*[Skt. šēṣādri > த.சேசாத்திரி]*

**சேசானுமானம்** *šēšāṉumāṉam,* பெ.(n.) எச்சஊகம்; inference of a past cause from a present effect see (மணிமே.27, 33, அரும்.).

*[Skt. šēṣā+anumāna>த.சேசானுமானம்]*

**சேசி**[1]**–த்தல்** *šēṣi,* 11 செ.கு.வி.(v.i.) **சேடி** பார்க்க; see *cēḍi.*

*[Skt. šēṣi > த. சேடி]*

**சேசி**[2] *šēṣi,* பெ.(n.) 1. ஆண்டவனான கடவுள்; god as the lord of mankind. *"நியா மகனாய்ச் சேசியாய் நின்று நடத்திக் கொண்டு" (ஈடு.1, 1, 7).* 2. ஆற்றல்; ability, capacity. *"அதைச் செய்ய எனக்குச் சேஷியில்லை".*

**த.வ. வினைத்திறம்**

*[Skt. šēṣin > த. சேசி]*

**சேசி**[3] *šēši,* பெ.(n.) 1. காட்டுக் கஞ்சாங்கோரை; sage teaplant, Salvia officinalis. 2. சீமைக் கஞ்சாங்கோரை; garden sage. 3. சீமைக் கற்பூர இலை; Indian sage leaf plant, *Salvia bengalensis* (சா.அக.).

**சேசுநாதர்** *šēšunādar,* பெ.(n.) இயேசுநாதர் (பார்க்க); Jesus.

*[Fr. jesus > த. சேசுநாதர்]*

**சேசுரவாதி** *šēšuravādi,* பெ.(n.) கடவு ளுண்மையை ஒப்புக் கொள்வோன்; theist (விவேக.சிந்.பக்.20).

*[Skt. šēšvara > த. சேசுரவாதி]*

**சேசுவரசாங்கியன்** *šēšuvarašāṅgiyaṉ,* பெ.(n.) கடவுள் உண்மையை ஒப்புக் கொள்ளும் சாங்கிய மதவாதி; (phil.) follower of theistic *šāṅkhya* system (சி.சி.2, 57, சிவாக்.).

*[Skt. šēšvara + šaṅkiya > த. சேசுவரசாங்கியன்]*

**சேட்டம்[1]** *šēttam,* பெ.(n.) 1. மேன்மை; eminence, greatness, excellence. *"சேட்ட மல்கிய பாதுகை" (விநாயகபு.80, 278).* 2. வலிமை; strength, power, capacity. *'எழுந்திருக்கச் சேட்டமில்லை'.* 3. செழிப்பு; luxuriance, fertility. *'சேட்டமாய் உண்டாக'.* 4. அழகு; bloom as of countenance.

*[**Skt.** śrēṣta > த. சேட்டம்]*

**சேட்டம்[2]** *šēttam,* பெ.(n.) 1. விடை (வைகாசி) மாதக் காருவா (அமாவாசை) கழிந்த ஓரி (பிரதமை) முதல் ஆடவை (ஆனி) மாதக் காருவா முடியவுள்ள நிலாவளவு (சந்திரமான) மாதம்; the third lunar month from the day following the new moon in the month of *viḍai* (*vaikāsi*) to the end of the new moon day in the month of *āḍavai* (*āṉi*.)

**சேட்டன்** *šēttaṉ,* பெ.(n.) 1. பெரியோன்; person of eminence or superior rank, great man. *"சேட்டரா முனிவோர்களும்" (விநாயகபு.75, 79).* 2. உருத்திரருள் ஒருவர்; a Rudra (சி.போ.பா.2, 3, பக்.212).

*[**Skt.** śrēṣtha > த. சேட்டன்]*

**சேட்டனம்** *šēttaṉam,* பெ.(n.) முயற்சி; exertion, effort (யாழ்.அக.).

*[**Skt.** cēṣtana > த. சேட்டனம்]*

**சேட்டாதேவி** *šēttā-dēvi,* பெ.(n.) மூதேவி, இலக்குமிக்கு மூத்தவள்; goddess of misfortune, as the elder sister of Lakṣmi.

**த.வ. தவ்வை, முகடி**

*[**Skt.** jyēsthā> த. சேட்டாதேவி]*

**சேட்டி** *šētti,* பெ.(n.) தமக்கை; elder sister (யாழ்.அக.).

*[**Skt.** jyēṣthā > த. சேட்டி]*

**சேட்டி[1]-த்தல்** *šētti-,* 11 செ.கு.வி.(v.i.) தொழிற்படுதல்; to exert oneself, to perform, to be active.

*[**Skt.** cēst > த. சேட்டி-]*

**சேட்டி[2]-த்தல்** *šētti-,* 18 செ.குு.வி.(v.t.) தொழிற்படுத்துதல்; to cause to be active, to operate upon. சந்நிதி சேட்டிப்ப (திருமந்.2391).

*[**Skt.** cēst > த. சேட்டி-,]*

**சேட்டிதன்** *šēttidaṉ,* பெ.(n.) தொழிற் படுத்துவோன்; directing agent; one who sets others to work. *"சித்துடன சித்துக் கெல்லாஞ் சேட்டிதனாதலானும்" (சி.சி..1, 56, பக். 637).*

*[**Skt.** cēṣtita > த. சேட்டிதன்]*

**சேட்டு** *šēttu,* பெ.(n.) பெரும்பான்மையும் குசராத்தி வணிகர்க்கு வழங்கும் சிறப்புப் பெயர்; title of merchants, especially Guzeratis.

*[**H.** sēṭh > த. சேட்டு]*

**சேட்டுக்கடை** *šēttu-k-kaḍai,* பெ.(n.) குசராத்தியர், மார்வாரிகள் முதலியோர் வாணிகம் செய்யும் இடம்; place of business of a aurarati merchant, Marwari etc.

*[சேட்டு+கடை]*

*[**H.** sēth > த. சேட்டு]*

**சேட்டுமம்** *šēttumam,* பெ.(n.) கோழை (கபம்); phlegm (சங்.அக.).

**த.வ. சளி**

*[**Skt.** ślēṣman > த. சேட்டுமம்]*

**சேட்டை[1]** *šēttai,* பெ.(n.) 1. மூத்தவள்; elder sister, elder woman (திவா.). 2. மூதேவி; goddess of misfortune, as the elder sister of Lakshmi (திவா.).

**த.வ. அக்காள், தவ்வை**

*[**Skt.** jyēsthā > த. சேட்டை]*

**சேட்டை[2]** *šēttai,* பெ.(n.) 1. பெருவிரல்; thumb. *"செறித்துவடந் தர்ச்சனி மீதே செபிக்க வொலியைச் சேட்டையினால்" (சிவதரு.3, 3).* 2. தழல் (கேட்டை); the 18th nakṣatra. 3. சுளகு (விசாகம்); the 16th nakṣatra.

**சேடக்கிரியை** *šēḍa-k-kiriyai,* பெ.(n.) கருமாந்திரம்; funeral rites.

**த.வ. கருமாதி**

*[Skt. šēṣa+k+kiriyād>த.சேடக்கிரியை]*

**சேடக்குடும்பி** *šēḍa-k-kuḍumbi,* பெ.(n.) (அடியார் குடும்பத்திலுள்ளவன்) கோயிலருச்சகன்; temple priest, as belonging to a family of devotees. *"சேடக் குடும்பியின் குறுமகள்" (சிலப்.30, 52).*

**த.வ. குருக்கள்**

*[Skt. šeṣa > த. சேடக்குடும்பி]*

**சேடகம்** *šēḍagam,* பெ.(n.) கேடயம்; shield. *"மயிர்ப்புளக சேடகமுமேந்தி" (சூளா. அரசி.159).*

**த.வ. கிடுகு**

*[Skt. khēṭaka > த. சேடகம்]*

**சேடன்** *šēḍaṉ,* பெ.(n.) 1. தோழன்; companion, associate, friend (பிங்.). 2. காதல் தொடர்பான செய்திகளில் துணைபுரிபவன்; a companion who helps one in his love affairs. *"ஊடநீர்க்குஞ் சேடரின்" (சீவக.852).*

**த.வ. பாங்கன்**

*[Skt. cēṭa > த. சேடன்]*

**சேடி** *šēḍi,* பெ.(n.) 1. தெருச்சிறகு; side of a street (சூடா.). 2. வித்தியாதரருலகு; the world of *vidyādharas. "மாசில் வாலொளி வடதிசைச் சேடி" (மணிமே.17, 21).*

*[Skt. šrēni > த. சேடி]*

**சேடித்துவம்** *šēḍi-t-tuvam,* பெ.(n.) ஆளுந்தன்மை; state of being the master. *"சேடித்துவப்பரரெவர்" (நூற்றெட்டுத். திருப்புகழ்.62).*

**த.வ. ஆளுமை**

*[Skt. šeṣitva > த. சேடித்துவம்]*

**சேடியம்** *šēḍiyam,* பெ.(n.) ஊழியம்; service.

**த.வ. தொண்டு**

*[Skt. šēṣatva > த. சேடியம்]*

**சேடை** *šēḍai,* பெ.(n.) தொளியுழவுக்காக நீர் கட்டப்பெற்ற வயல்; field filled with water with a view to prepare it for sowing (Loc).

**த.வ. நீர்க்கட்டல், தொளி**

*[U. jēde > த. சேடை]*

**சேணி** *šēṇi,* பெ.(n.) 1. **சேடி** பார்க்க; see *šēḍi.* 2. ஏணி; ladder (திவா.). 3. முறை; order, arrangement (யாழ்.அக.). 4. குழு; party of workmen, set of players, company of travellers.

*[Pkt. sēṇi > த. சேணி]*

**சேணிகன்** *šēṇigaṉ,* பெ.(n.) 1. சமணப் பேரரசர்களுள் சிறந்தோன்; an illustrious jain king. 2. **சேணியன்** பார்க்க; see *šēṇiyan. "இவ்வாடை சேணிகன்" (நன்.289, மயிலை.).*

*[Skt. šrēnika > த. சேணிகன்]*

**சேணியன்** *šēṇiyaṉ,* பெ.(n.) ஆடை நெய்யும் தொழில் (சாதி)வகையான்; a class of weavers.

**த.வ. நெசவாளன்**

*[Skt. srēṇika > த. சேணியன்]*

**சேத்திரக்கிஞன்** *šēttirakkiñaṉ,* பெ.(n.) (உடம்பை அறிபவன்) ஆதன் (ஆன்மா); soul, as having knowledge of the body. *"ஏத்திய சேத்திரக்கிஞன்" (விநாயகபு.83, 73).*

*[Skt. kṣētra-jña > த. சேத்திரக்கினன்]*

**சேத்திரபாலன்** *šēttirabālaṉ,* பெ.(n.) 1. ஒவ்வொரு ஊருக்குமுள்ள காவல் தெய்வம்; guardian-deity. 2. வயிரவர்; Bhairava.

**த.வ. ஊர்க்காவல் தெய்வம்**

*[Skt. ksētra+pāla > த.,சேத்திரபாலன்]*

**சேத்திரபிண்டம்** *šēttira-pindam,* பெ.(n.) புண்ணியத் தலத்திற் தென்புலத்தார்ப் பொருட்டுக் கொடுக்கும் உணவுப் படையல்; ball of rice offered to manes in a sacred place. *'திகிரியறற்கரையிற் சேத்திர பிண்டங் கொடுத்து' (சேதுபு.தேவிபுர.84).*

த.வ. தென்புலத்தார்ப்படையல்

*[Skt. kṣētra-pinda > த. சேத்திரபிண்டம்]*

**சேத்திரம்** *šēttiram,* பெ.(n.) இடம்; place.

த.வ. இடம்

*[Skt. kṣētra > த. சேத்திரம்]*

**சேத்து** *šēttu,* பெ.(n.) நிலம்; field, plot of ground.

*[Skt. khetta > த. சேத்து]*

**சேத்துமம்** *šēttumam,* பெ.(n.) கோழை, சளி (சிலேட்டுமம்); phlegm. *"திருவிரல் மூன்றி லோடில் சேத்தும நாடியாமே" (தஞ்.சர.ii, 307).*

*[Skt. šlēṣma > த. சேத்துமம்]*

**சேதக்காலன்** *šētakkālan,* பெ.(n.) கெடுதிக்காரன்; mischievous person.

த.வ. தீக்குணத்தான்

*[Skt. chēda > த. சேதக்காலன்]*

**சேதகம்** *šētagam,* பெ.(n.) சேறு; mud, slush (திவா.). *"குங்குமச் சேதகந்திமிர" (கம்பரா. வரைக்காட்சி.56).*

*[Skt. šāda > த. சேதகம்]*

**சேதனத்துவம்** *šēdanattuvam,* பெ.(n.) அறிவால் உயர்ந்த நிலை; state of being a *cētanan* (வேதாந்தசாரம்.பக்.59).

*[Skt. cētana-tva > த. சேதனத்துவம்]*

**சேதனன்** *šēdanan,* பெ.(n.) 1. அறிவுடையோன்; intelligent, wise person, rational being one endowed with intelligence. 2. (அறிவுடையது) ஆதன் (ஆன்மா) (பிங்.); the soul, as intelligent.

த.வ. அறிவாளி

**சேதனாசாரம்** *šēdanāšāram,* பெ.(n.) சுன்னத்து; (R.C.); rite of circumcision.

*[Skt. chēdana+ā-cāra > த. சேதனாசாரம்]*

**சேதனை**[1] *šēdanai,* பெ.(n.) அறிவு; knowledge. *"சேதனை மன்னுயிர்" (கம்பரா. சடாயுவுயிர்.51).*

*[Skt. cētanā > த. சேதனை]*

**சேதனை**[2] *šēdanai,* பெ.(n.) **சேதனை**[1] பார்க்க; see *šētanai. "சேதனையுண்ணக் கண்டான்" (கம்பரா. இராவணன் வதை.56).*

*[Skt. chēdanā > த. சேதனை]*

**சேதி** *šēdi,* பெ.(n.) 1. வடதேசங்களுள் ஒன்று; Chedi, the region round Bilaspur and Jubbalpur, one of 56 *tēcam,* q.v. *"சேதிப்பெருமான் சிசுபாலன்" (பாரத. திரௌபதி.42).* 2. **சேதிநாடு** பார்க்க; see *sēdinādu. "சேதி நன்னாட்டு நீடு திருக் கோவலூரில்" (பெரியபு.மெய்ப்பொரு.).* 3. சேதியை ஆண்ட ஓர் அரசக்குடி; the dynasty that ruled Chedi. *"சேதிமா மாபோன்" (பாரத.குருகுல.104).*

*[Skt. cēdi > த. சேதி]*

**சேதிநாடு** *šēti-ñadu,* பெ.(n.) திருக் கோவலூரைத் தலைநகராகக் கொண்ட நடு நாடு; naṭu-nādu in Tamil country having Tirukkōvalūr as its capital.

**சேதிபன்** *šēdiban,* பெ.(n.) 1. சேதி நாட்டரசன்; the king of *Chēdi. "சேதிபப் பெரும்பகை செகுத்தே" (பாரத. இராசசூய. 152).* 2. நடுநாட்டரசன்; the king of *Cēdi-nāḍu. "சேதிபர் நற்கோவலூரா் மலாடமன்னா்" (புராணசாரம், 8. பெரியபு.பதிப்.).*

*[Skt. cedi-pa> த. சேதிபன்]*

**சேதிமரம்** *šēdi-maram,* பெ.(n.) அருக (சமண)க் கோயிலில் உள்ள குளிர்ச்சியும் தூய்மையும் தரும் மரவகை; sacred tree in a jaina temple. *"சேதிமரங்களெட்டு" (மேருமந். 1063).*

*[Skt. caitya> த. சேதிமரம்]*

**சேது** *šēdu,* பெ. (n.) 1. செய்கரை; cause way, bridge dam (பிங்.). 2. இராமபிரானது படை (சேனை)கள் இலங்கை செல்லுதற்கென இயற்றப்பெற்றதாகக் கருதப்படுந் திருவணை; adams bridge a reef of sunken rocks connecting the north of Ceylon with the main land of india, 30 ft. wide with 3 or 4 ft. of water above it at high tide, said to have been constructed to enable Rama's forces to cross over to *Lanka. "சேடனென்னப் பொலிந்தது சேதுவே"(கம்பரா. சேதுப.66).*3. இராமேசுவரம்; the island of *Ramēsvaram. "சேதுவினி ராம நாதனை நிறுவிய காதையை" (சேதுபு.அவை.1).* 4.தனுக்கோடி, தருப்ப சயனம் முதலிய வற்றிலுள்ள புனித நீராடல் துறை; sacred bathing-ghat at *Dhanuskōḍi, Darbha-šayanam,* etc.

*[Skt. šētu > த. சேது]*

**சேதுசுநானம்** *šēdus-unāṉam,* பெ.(n.) தனுக்கோடி, தருப்பசயனம், முதலிய சேதுக்கரையில் செய்யும் கடல் நீராட்டு; sea bath at *Dhanuskōḍi, Darbha-šayanam,* etc, considered to be of religious merit (இ.வ.).

**த.வ. சேதுக்குளியல்**

*[Skt. sētu+snāna> த. சேதுசுநானம்]*

**சேந்தி** *šēndi,* பெ.(n.) கள்; toddy. *சேந்திக்கடை* (W.G.).

*[U. sēndi >த. சேந்தி]*

**சேப்பு** *šēppu,* பெ.(n.) சட்டைப்பை; packet.

*[Ar. jeb > த. சேப்பு]*

**சேபம்** *šēbam,* பெ.(n.) ஆண்குறி; membrum virile (யாழ்.அக.).

*[Skt. sēpha > த. சேபம்]*

**சேம்பா** *šēmbā,* பெ.(n.) குதிரைக்கு வருஞ் சளிநோய்; glanders, a horse-disease (அசு.வசா.92.).

*[U. sēmbā > த. சேம்பா]*

**சேமண்டன்** *šēmaṇḍaṉ,* பெ.(n.) தந்தையில்லாதவன்; one who has lost his father.

**த.வ. தந்தையிலி**

*[Skt. sēmbā > த. சேமண்டன்]*

**சேமம்** *šēmam,* பெ.(n.) 1. நல்வாழ்வு; safety, well-being, welfare. *"சேமமேயுன்றனக் கென்றருள் செய்தவன்" (தேவா. 1136, 9).* 2. இன்பம்; happiness, pleasure (சூடா.). 3. காவல்; protection, preservation, security, defence, safe guard. *"சேம வன்மதில்" (தேவா.93,4).* 4. அரணான இடம்; strong hold, secure place. 5. சிறைச்சாலை; prison, dungeon. 6. புதை பொருள்; hoard treasure-trove. *"சேமம்போ வெடுப்பவர்" (பிரபுலிங். சித்தரா.49).* 7. ஓலைச் சுவடியின் கட்டு; tying of ola book. *"புத்தகந் தன்னைச் சேம நீக்கின னோதினான்" (திருவாத.பு. திருவடி.20).* 8. போர்வீரன் தன்னைக் காத்துக் கொள்ளும் ஐவகைச் செயல்களுள் பகைவரது அம்பு தன்மேற்படாமல் காக்குஞ் செயல்; act of a warrior protecting himself against hostile arrows, one of *pañca-kiruttiyam,* q.v. *"எய்தாற் கருவியாலே மறைத்துச் சேமஞ் செய்யுமாறும்" (சீவக.1676,உரை).* 9. பிணக்காப்பு; binding and shrouding a corpse for burning or interment (வின்.).

*[Skt. kṣēma > த. சேமம்]*

**சேமாதிசயம்** *šēmādišayam,* பெ.(n.) நலவாழ்வுச் செய்தி; news of welfare.

*[Skt. ksēma+atišaya > த. சேமாதிசயம்]*

**சேமியா** *šēmiyā,* பெ.(n.) கோதுமை முதலிய தவசங்களால் திரிதிரியாகச் செய்யப்பட்டுப் பாயசம் முதலிய பலவகைப் பலகாரஞ் செய்வதற்கு உதவும் உணவுப் பொருள்; vermicelli.

த.வ. **நூல்மா**

*[Mhr. šēvari > த. சேமியா]*

**சேயா** *šēyā,* பெ.(n.) கடுக்காய் (மலை); chebulic myrobalan.

*[Skt. jayā > த. சேயா]*

**சேர்** *šēr,* பெ.(n.) 1. எட்டுப் பலங்கொண்ட ஒரு நிறுத்தலளவை; a standard weight = 8 palams. 2. ஒரு முகத்தலளவை; dry or liquid measure = 1/24 *paṟai* in ceylon = 70 cu.in. and upward in s.india.

*[H. sēr > த. சேர்]*

**சேர்பந்து** *šērpandu,* பெ.(n.) கசை; whip, scourge.

*[U. zērband > த. சேர்பந்து]*

**சேர்விலங்கு** *šēr-vilaṅgu,* பெ.(n.) தளை (யாழ்ப்.); fetters for the feet or hands (j.).

*[U. zēr > த. சேர்விலங்கு]*

**சேவகம்** *šēvagam,* பெ.(n.) 1. ஊழியம்; service, as of soldier, peon. *"சிலதியராகிச் சூழ்ந்து சேகவஞ்செய்ய" (திருவிளை. அட்டமா.7).* 2. வீரம்; valour, bravery. *"என்னெடுஞ் சேவகந் தோற்க" (கம்பரா. நாகபா.10).*

த.வ. **தொண்டு**

*[Skt. šēvaka > த. சேவகம்]*

**சேவகன்** *šēvagaṉ,* பெ.(n.) 1. வீரன்; soldier, warrior, veteran. *"சேவகனாகித் திண் சிலையேந்தி" (திருவாச.2, 81).* 2. ஊழியஞ் செய்வோன்; servant, peon, attendant. *"மாற்றான்றன் சேவகன்" (தனிப்பா.ii, 6, 12).*

த.வ. **தொண்டன்**

*[Skt. šēvaka > த. சேவகன்]*

**சேவகனார்** *šēvagaṉār,* பெ.(n.) ஐயனார்; *Aiyaṉār,* as a warrior-deity (வீரத் தெய்வம்) (சங்.அக.).

*[Skt. sēvaka > த. சேவகனார்]*



**சேவதி** *šēvadi,* பெ.(n.) குபேரனது செல்வவளம் (நிதி); *Kubēra*'s treasure (யாழ்.அக.).

*[Skt. šēvadhi > த. சேவதி.]*

**சேவனம்** *šēvaṉam,* பெ.(n.) தைக்கை; stitching (யாழ்.அக.).

த.வ. **தைத்தல்**

*[Skt. šēvana > த. சேவனம்]*

**சேவனை** *šēvaṉai,* பெ.(n.) 1. ஊழியத் தொழில்; service under a master. 2. கோயிற் றொண்டு; temple service. 3. விழாக் காலங்களில் மேளம் முதலியன அடித்தல்; playing on drums, pipes, etc. at a festival, wedding etc.

த.வ. **கோயிற்பணி**

*[Skt. šēvana > த. சேவனை]*

**சேவனைக்காரர்** *šēvaṉai-k-kārar,* பெ.(n.) கோயில் மேளக்காரர்; pipers and drummers attached to a temple.

த.வ. **ஓலகர், ஓலகத்தார்**

*[Skt. sēvana > த. சேவனை+காரர்]*

**சேவா** *šēvā,* பெ.(n.) வாடகை; rent in kind or money.

*[Skt. sheva > த. சேவா]*

**சேவாகாலம்** *šēvā-kālam,* பெ.(n.) திருமால் கோயில் முதலியவற்றில் தெய்வப் பனுவல் (திவ்வியப் பிரபந்தம்) ஓதுகை; recitation of *divya-p-pirabandam*, as in *Visṇu* temples (Vaisṇ).

*[Skt. sēvā > த. சேவா+காலம்]*

**சேவாலம்** *šēvālam,* பெ.(n.) நேர்வாளம்; croton (மலை.).

*[Skt. jayapāla > த. சேவாலம்]*

**சேவாலிகம்** *šēvāligam,* பெ.(n.)கருநொச்சி; willow-leaved justicia (மலை.).

*[Skt. šēphālikā > த. சேவாலிகம்]*



**சேவி-த்தல்** *šēvi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. வணங்குதல்; to worship, make obeisance to, render homage to. *"சேனைத் தலைவன் திருத்தாள் கருத் தொடுஞ் சேவிப்பனே" (அழகர்கலம். காப்பு).* 2. பணி செய்தல்; to serve, as under a master; to render service. *"சிலைமதனன் தனிசேவிக்க" (பாரத.அருச்சனன்நீர்.24).* 3. வழிபடுதல்; to obtain sight, as of a deity, a great person, a sacred place. *"சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்து" (திவ்.திருப்பா.29).* 4. தெய்வப்பனுவல் (திவ்வியப் பிரபந்தம்) முதலியன ஓதுதல் (வைணவ.); to recite, as *divya-p-prabandam*, to read as sacred books. 5. மருந்து முதலியன உட்கொள்ளுதல்; to take in, as medicine.

**த.வ. வழிபாடு செய்தல்**

*[Skt. sev > த. சேவி-,]*

**சேவிதம்** *šēvidam,* பெ.(n.) வழிபடுதல்; service (யாழ்.அக.).

*[Skt. sēvita > த. சேவிதம்]*

**சேவியம்** *šēviyam,* பெ.(n.) வெள்ளை வெட்டி வேர் (மூ.அ.); a variety of cuscuss grass.

*[Skt. ševia > த. சேவியம்]*

**சேவு** *šēvu,* பெ.(n.) **சேவை** பார்க்க; see *šēvai.*

*[U.sēv > த. சேவு]*

**சேவுகம்** *šēvugam,* பெ.(n.) **சேவகம்** பார்க்க; see *sēvagam.*

*[Skt. sevugam > த. சேவுகம்]*

**சேவை** *šēvai,* பெ.(n.) ஒருவகைப் பண்ணிகாரம்; a kind of confection.

*[H. šēv > த. சேவை]*

**சேழக்கிரியை** *šēḻa-k-kiriyai,* பெ.(n.) இறுதிச் சடங்கு; funeral rites.

*[Skt. šēsha > த. சேழக்கிரியை]*

**சேழகாரன்** *šēḻakāraṉ,* பெ.(n.) மருமகன்; nephew (T.A.S.iii, 229).

*[சேழ+காரன்]*

*[Skt. šēsa > த. சேழ]*

**சேளம்** *šēḷam,* பெ.(n.) மீதி; reminder, balance.

*[Skt. šēsa > த. சேளம்]*

**சேற்பம்** *šēṟpam,* பெ.(n.) **சேற்பனம்** பார்க்க; see *sēṟpaṉam* (யாழ்.அக.).

*[Skt. šlēsmam > த. சேற்பம்]*

**சேற்பனசுரம்** *šērpaṉa-šuram,* பெ.(n.) சளியால் வரும் காய்ச்சல்; (J.) phlegmatic fever.

*[சேற்பனம்+சுரம்]*

*[Skt. šlēṣman> த. சேற்பனம்]*

**சேற்பனந்தொடுதல்** *šērpaṉan-toḍudal,* பெ. (n.) இறக்குந் தருவாயில் தொண்டையிற் சத்தமுண்டாகும்படிச் சளிக்கட்டிக் கொள்ளுதல் (யாழ்ப்.); accumulation of phlegm in the throat which causes death-rattle.

**த.வ. தொண்டைக்கட்டு**

*[சேற்பனம்+தொடுதல்]*

*[Skt. šlēṣman > த. சேற்பனம்]*

**சேற்பனம்** *šērpaṉam,* பெ.(n.) சளி; phlegm (சங்.அக.).

*[Skt. šlēṣman> த. சேற்பனம்]*

**சேற்றுமம்** *šērrumam,* பெ.(n.) **சேற்பனம்** பார்க்க; see *šērpaṉam* (யாழ்.அக.).

*[Skt. šlēṣman > த. சேற்றுமம்]*

**சேனம்** *šēṉam,* பெ.(n.) பருந்து; kite (திவா.).

*[Skt. šyēna > த. சேனம்]*



**சேனன்** *šēṉan,* பெ.(n.) அரசர்க்குரிய ஒரு பழைய பட்டப் பெயர்; an ancient title. *"சந்துசேனனு மிந்துசேனனுந் தருமசேனனும்" (தேவா.859, 4).*

*[Skt. šēna > த. சேனன்]*

**சேனா** *šēṉā,* பெ.(n.) நிலவாவிதை; tinne velly senna.

*[E. senna > த. சேனா.]*

**சேனாங்கம்** *šēṉāṅgam,* பெ.(n.) படையின் உறுப்பு; component division of an army (யாழ்.அக.).

*[Skt. šēnā+āṅga > த. சேனாங்கம்]*

**சேனாபத்தியம்** *šēṉāpattiyam,* பெ.(n.) படைத்தலைமை; office of a commander, commandership.

*[Skt. šēnāpatya > த. சேனாபத்தியம்]*

**சேனாபதி** *šēṉā-padi,* பெ.(n.) படைத் தலைவன்; general, commander of an army. *"சுவேதனைச் சேனாபதியாய்" (திவ்.இயற்.4, 24).*

*[Skt. šēṉā-pati > த. சேனாபதி]*

**சேனாபதியாழ்வார்** *šēṉāpadiyāḻvār,* பெ. (n.) சேனை முதலியார்; *visvaksēna*, the chief of Viṣnu's host (M.E.R.514 of 1917).

*[சேனாபதி+ஆழ்வார்]*

*[Skt. senāpati > த. சேனாபதி]*

**சேனாவரையர்** *šēṉā-v-araiyar,* பெ.(n.) தொல்காப்பிய உரைகாரருள் ஒருவர்; a comentator of Tolkappiyam.

**சேனாவரையன்** *šēṉā-v-araiyaṉ,* பெ.(n.) **சேனாபதி** பார்க்க; see *šēṉāpati.*

*[சேனா+வரையன்]*

*[Skt. sēnā > த. சேனா]*

**சேனை¹** *šēṉai,* பெ.(n.) 1. யானை, தேர், பரி, காலாள் என்ற நாற்படை; army comprising four fold divisions, viz., *yāṉai, tēr, pari, kālāḷ.* 2. ஆயுதம்; weapon (அக.நி.). 3. கூட்டம்; multitude crowd. *"குரிசிலை விடாத சேனையே" (கம்பரா.தைலமா.8).* 4. கிளையும் கேண்மையும்; friends and

relations. 'அவன் சேனையை யாரால் தாங்க முடியும்'.

[த. யானை > ஏனை > சேனை **Skt.** *šēnā* > த. சேனை]

**சேனை²** *šēṉai,* பெ.(n.) 1. தெரு; street (பிங்.). 2. கடைத்தெரு; bazaar. 3. சந்தை; market fair.

[**Skt.** *šrēni* > த. சேனை]

**சேனைபோகம்** *šēṉai-pōgam,* பெ.(n.) படைக்குரிய அலுவலகங்களுள் ஒன்று; an office in the military service (S.I.I.iv.134).

[**Skt.** *šenā+pōga* > த. சேனைபோகம்]

**சைக்கிள்வண்டி** *šaiikkiḷ-vaṇḍi,* பெ.(n.) காலாலோட்டும் இரு சக்கர வண்டி, ஈருருளி; bicycle.

**த.வ. மிதிவண்டி**

[சைக்கிள்+வண்டி] [**E.** *cycle* > த. சைக்கிள்]



**சைக்கினை** *šaikkiṉai,* பெ.(n.) சைகை; குறியீடு; signal, gesture.

**த.வ. குறிப்புமொழி**

[**Skt.** *samjnā* > த. சைக்கினை]

**சைகதம்** *šaikadam,* பெ.(n.) 1. மணல்; sand (யாழ்.அக.). 2. மணற்கரை; sandbank.

[**Skt.** *saikata* > த. சைகதம்]

**சைகதலிங்கம்** *šaikata-liṅgam,* பெ.(n.) மணலால் ஆகிய சிவலிங்கம்; lingam made of sand.

[சைகதம்+லிங்கம்]

[**Skt.** *saikata*> த. சைகதம்]

**சைகதவுண்டை** *šaikata-v-uṇḍai,* பெ.(n.) மணல் மலை (யாழ்.அக.); sand-hill.

[சைகதம்+உண்டை]

[**Skt.** *saikata* >த. சைகதம்]

**சைகை** *šaigai,* பெ.(n.) **சைக்கினை** பார்க்க; see *šaikkiṉai.* "செங்கட் சைகை" (சூடா. குமார.27).

**த.வ. செய்கை**

[**Skt.** *samjnā*> த. சைகை]

**சைங்கிகேயன்** *šaiṅgikēyaṉ,* பெ.(n.) கருங்கோள் (இராகு) (இலக்.அக.); the moon's ascending node.

[**Skt.** *saimhikēya* > த. சைங்கிகேயன்]

**சைசவம்** *šaišavam,* பெ. (n.) இளமை; infancy, childhood. "சைசவத்தற் றொடரும்" (ஞானவாமுமுட்சு.1).

[**Skt.** *saišava* > த. சைசவம்]

**சைத்தன்னியநீர்** *šaittaṉṉiya-nīr,* பெ.(n.) பனிக்குடத்து நீர்; first presentation, liquorammi (சா.அக.).

**சைத்தன்னியப்பாஞ்சான்** *šaittaṉṉiya-p-pāñjāṉ,* பெ.(n.) நஞ்சறுப்பான் கொடி; a creeper that is said to alleviate arsenic of snake poisons (சா.அக.).

**சைத்தான்** *šaittāṉ,* பெ.(n.) பேய், பிசாசு; devil.

**ம.** caittāṉ.

[**Ar.** *shaitan*>த.சைத்தான்.**E.** *satan*>த.சைத்தான்]

**சைத்தியக்கட்டி** *šaittiya-k-kaṭṭi,* பெ.(n.) தொண்டையில் வரும் புண்கட்டி; tonsilitis.

**த.வ. தொண்டையழற்சி**

[**Skt.** *šaitya+* > த. சைத்தியம்+கட்டி]

**சைத்தியக்குணம்** *šaittiya-k-kuṇam,* பெ. (n.) முடக்கு நோய்; rheumatic tendencies (சா.அக.).

**சைத்தியம்**[1] *šaittiyam,* பெ.(n.) பௌத்தர் முதலியோர்க்குரிய ஆலயம்; temple or shrine, especially buddhistic. *"அவ்வூர்ப் புத்த சைத்தியத்து" (சிலம்ப், 10, 14, உரை).*

*[Skt. caitya > த. சைத்தியம்]*

**சைத்தியம்**[2] *šaittiyam,* பெ.(n.) இறப்புக் கல்வெட்டு; stone epitaph (யாழ்.அக.).

**த.வ. கல்லறைக்கல், நடுகல்**

*[Skt. caitya > த. சைத்தியம்]*

**சைத்தியம்**[3] *šaittiyam,* பெ.(n.) குளிர்ச்சி; coldness, chillness.

*[Skt. šaitya > த. சைத்தியம்]*

**சைத்தியவிருட்சம்** *šaittiyavirutcam,* பெ. (n.) **சேதிமரம்** பார்க்க; see *sēdi-maram (மேருமந்.625, உரை).*

*[Skt. caitya+vṛkṣa > த. சைத்தியவிருட்சம்]*

**சைத்தியோபசாரம்** *šaittiyōpacāram,* பெ. (n.) உடம்பைக் குளிர்விக்கவும் புத்துயி ரூட்டவும் செய்யப்படும் செயல்கள்; acts intended to cool and refresh the system.

**த.வ. உடலோம்புபணிவிடை**

*[Skt. saityaupa-cāra > த. சைத்தியோபசாரம்]*

**சைத்திரகம்** *šaittiragam,* பெ.(n.) **சைத்திரம்** பார்க்க; see *šaittiram.*

*[Skt. šaitraka > த. சைத்திரகம்]*

**சைத்திரம்** *šaittiram,* பெ.(n.) 1. மீன (பங்குனி)க் காருவாவிற்கு அடுத்த நாள் (பிரதமை) முதல் மேழ (சித்திரை)க் காருவா முடிவு வரையுள்ள சந்திர மாதம்; first lunar month extending from the day following the new moon in *pańguṇi* to the new moon day in cittirai. 2. சித்திரவேலை; artistic work (சங்.அக.).

*[Skt. caitra > த. சைத்திரம்]*

**சைத்திரரதம்** *šaittira-radam,* பெ.(n.) குபேரனது பூந்தோட்டம்; garden or *Kubēra.*

*[Skt. caitra > த. சைத்திரரதம்]*

**சைத்திரவிரதம்** *šaitraviradam,* பெ.(n.) **சைத்திரரதம்** பார்க்க; see *saitraratam. "பானுவுஞ் செல்கலாச் சைத்திர விரதம்" (இரகு.நகர.9).*

**சைத்திராவலி** *šaitrāvali,* பெ.(n.) மேழ (சித்திரை) மாதத்து வெள்ளுவா (பௌர்ணமி.) (யாழ்.அக.); full moon in the month of cittirai.

**த.வ. மேழவெள்ளுவா**

**சைத்திரி** *šaittiri,* பெ.(n.) மேழ (சித்திரை) வெள்ளுவாவில் நடத்தப்பெறும் வேள்வி; sacrifice offered on the full moon day in cittirai (திவா.).

*[Skt. caitrī > த. சைத்திரி]*

**சைத்திரியஞானம்** *šaittiriyaññāṉam,* பெ.(n.) கடவுள் உயிர்களைப் பற்றிய அறிவு; spiritual knowledge, the knowledge of nature of the god or the soul (சா.அக.).

*[Skt. ksaitrainā+jñāna > த. சைத்திரிய ஞானம்]*

**சைத்திரியம்** *šaittiriyam,* பெ.(n.) மனத் திண்மை; steadfastness, stability, courage.

**த.வ. மனத்திட்பம்**

*[Skt. sthairya > த. சைத்திரியம்]*

**சைத்திரோற்சவம்** *šaittirōṟcavam,* பெ.(n.) சித்திரையில் நிகழும் கோயிற்றிருவிழா; temple festival celebrated in cittirai.

**த.வ. மேழவிழா**

*[Skt. caitra+uksava > த. சைத்திரோற்சவம்]*

**சைதன்னியநிலை** *šaitaṉṉiya-nilai,* பெ.(n.) பிறப்பு, இறப்பு ஆகியவற்றைக் கடந்து நிற்றல்; a condition or state of being liberated from the tormentation of births and deaths (சா.அக.).

**சைதனம்** *šaitaṉam,* பெ.(n.) பிறப் பிறப்பிற்குள் ளடங்கிய உயிர் (சீவாத்துமா); individual soul subjected to births and deaths (சா.அக.).

**சைதனியம்** *šaitaṉiyam,* பெ.(n.) 1. அறிவு; intelligence. *"சத்தான்ம சைதனியமே தனக்குச் சொரூபமாகக் கொண்டு" (சி.போ.8, 2).* 2. உயிராதன் (சீவான்மா); individual soul, *šiva.* 2. பேராதன் (பரமான்மா); universal soul (சி.போ.சிற்.2, 4).

*[Skt. caitanya > த. சைதனியம்]*

**சைதனியவான்** *šaitaṉiyavāṉ,* பெ.(n.) அறிவுள்ளவன்; sentient being. *"ஆன்மாச் சைதனியவானென்றால்" (மணிமே.29, 176).*

*[Skt. caitanya > த. சைதனியவான்]*

**சைதிகம்** *šaitigam,* பெ.(n.) பிரம்பு; cane (யாழ்.அக.).

*[Skt. chaidika > த. சைதிகம்]*

**சைதூண்** *šaitūṉ,* பெ.(n.) ஒலிவ மரம்; European olive.

*[U. zaitūn > த. சைதூண்]*

**சைந்தவம்** *šaindavam,* பெ.(n.) 1. **சயித்தவம்** பார்க்க; see *sayttavam* (சூடா.). 2. சிந்து நாடு; Sind. *"காம்போச மாரியஞ் சாம்பிராணி சைந்தவம்" (திருவாலவா.27, 73).*

*[Skt. saindhava > த. சைந்தவம்]*

**சைந்தவி** *šaindavi,* பெ.(n.) சயந்தவி; a specific melody type (சங்.அக.).

*[Skt. saindhavi > த. சையந்தவி]*

**சைந்தியலவணம்** *šaindiya-lavaṇam,* பெ.(n.) இந்துப்பு; rock-salt.

*[Skt. saindhava> த. சைந்தியலவணம்]*

**சைமானம்** *šaimāṉam,* பெ.(n.) அன்பளிப்பு, பரிசு; present, reward.

*[Skt. sam-māna > த. சைமானம்]*

**சைமினி**[1] *šaimiṉi,* பெ.(n.) **சையமினி** பார்க்க; see *šaiyamiṉi. "சைமினி நகரோன்" (பிங்.197).*

*[Skt. saṃyaminī > த. சைமினி]*

**சைமினி**[2] *šaimiṉi,* பெ.(n.) பூருவ மீ மாஞ்சையின் ஆசிரியரான ஒரு முனிவர்; a sage-philosopher, the author of *pūrva-mīmamsā-sūtra. "அக்கபாதன் கணாதன் சைமினி" (மணிமே.27, 82).*

*[Skt. jaimini > த. சைமினி]*

**சையகம்** *šaiyagam,* பெ.(n.) படுக்கை; bed (அக.நி.).

*[Skt. šayyā > த. சையகம்]*

**சையம்**[1] *šaiyam,* பெ.(n.) 1. சகியம்; a mountain. *"புரைகெழு சையம் பொழிமழை" (பரிபா.11, 14).* 2. மலை; hill, mountain. *"சக்கரவாளசையம்" (கந்தபு.அண்டகோ.20).* 3. கல்; stone, rock. *"சையம் பூண்டு சமுத்திர நீந்துவான்" (சீவக.1426).*

*[Skt. sahya > த. சையம்]*

**சையம்**[2] *šaiyam,* பெ.(n.) ஒழுங்கு (நியமம்); self control. *"சையமே லேற்றினான்" (மேருமந்.544).*

த.வ. தன்னடக்கம்

*[Skt. sam-yama > த. சையம்]*

**சையமினி** *šaiyamiṉi,* பெ.(n.) எமனது நகரம்; city of Yama. *"சையமினி யீதுகொல்" (காசிக.சிவசன்.இயம.18).*

*[Skt. samyaminī > த. சையமினி]*

**சையுத்தசமவாயம்** *šaiyutta-camavāyam,* பெ.(n.) காட்சியில் ஏற்படும் அறுவகைச் சன்னிகரிடத்துள் புலன்களுக்கும் ஒரு பொருளின் குணம் முதலியவற்றிற்குமுள்ள தொடர்பு; the relation of inherence in that which is in conjunction, as of the sense of sight with the colour of an object in

perception, one of six *cannikaridam*, q.v. (தருக்கசங்.31.).

*[Skt. samyukta+samavāya > த. சையுத்த சமவாயம்]*

**சையுத்தம்** *šaiyuttam,* பெ.(n.) 1. **சையோக சம்பந்தம்** பார்க்க; see *saiyōga-sambandam.* 2. பாலுறவு; sexual inter course. 3. மயக்கம்; giddiness (சங்.அக.).

*[Skt. samyukta > த. சையுத்தம்]*

**சையை** *šaiyai,* பெ.(n.) சைகை; flow of verse.

த.வ. செய்கை

*[Skt. šayyā > த. சையை]*

**சையோகசம்பந்தம்** *šaiyōgašambandam,* பெ.(n.) இரண்டு பொருள்கள் கூடி இருத்தலாகிய ஒத்துப்போதல் (தருக்கசங். 31.); conjunction between two objects.

த.வ. ஒத்திசைவு

*[Skt.sam-yōga > த. சையோகசம்பந்தம்]*

**சையோகநிருவாகம்** *šaiyōga-niruvāgam,* பெ.(n.) பாலுறவுப் பொறுமை; sexual tolerance (சா.அக.).

**சையோகபயம்** *šaiyōga-bayam,* பெ.(n.) பாலுறவிற்கு அஞ்சும் நிலை; coitophobia.

**சையோகம்** *šaiyōgam,* பெ.(n.) 1. கலக்கை; union, obsorption. 2. **சையோகசம்பந்தம்** பார்க்க; see *saiyōgasambandam* (சி.சி.). 3. புணர்ச்சி; sexual union. *"இரவு பகலே ழையர்கள் சையோக மாயினோம்" (தாயு. எங்குநிறை.9.).*

*[Skt. sam-yōga > த. சையோகம்]*

**சையோகாட்சரம்** *šaiyōgāṭcaram,* பெ.(n.) வடமொழிக்கூட்டுமெய்யெழுத்து; conjunct consonant in Sanskrit.

*[Skt.sam+akṣara > த. சையோகாட்சரம்]*

**சைரிகம்** *šairigam,* பெ.(n.) கலப்பை; ploughshare (யாழ்.அக.).

த.வ. ஏர்

*[Skt. sairika > த. சைரிகம்]*



**சைரிகன்** *šairigan,* பெ.(n.) 1. உழுவன்; plough man. 2. ஏர்மாடு; plough-bullock (யாழ்.அக.).

*[Skt. sairika > த. சைரிகன்]*

**சைரிபம்** *šairibam,* பெ.(n.) எருமை; buffalo (பிங்.).

த.வ. காரான்

*[Skt. sairibha > த. சைரிபம்]*



**சைரியம்** *šairiyam,* பெ.(n.) பெருங் குறிஞ்சி; medium glabrous seven leaved conehead (சா.அக.).

**சைரீயகம்** *šairīyagam,* பெ.(n.) 1. மரு தோன்றி; common naildye, Laujonia

spinosa. 2. மேக வண்ணக் குறிஞ்சி; blue nail dye of western ghats (சா.அக.).

**சைரேயகம்** *šairēyagam,* பெ.(n.) மேக வண்ணக் குறிஞ்சி; western ghats blue-nail dye.

*[Skt. sairēyaka > த. சைரேயகம்]*

**சைலகம்** *šailagam,* பெ.(n.) 1. மலையிரு வேலி (மலை.); mountaingrass 2. நறும்புகை (சாம்பிராணி) (சங்.அக.); benzoin.

*[Skt. sailaka > த. சைலகம்]*

**சைலகர்மோனியம்** *šailagar-mōṉiyam,* பெ. (n.) பொற்குன்றிமணி; yellow crab's eye (சா.அக.).

**சைலகாரிகம்** *šailakārigam,* பெ.(n.) மஞ்சட் கடம்பு; yellow kadamba, yellow teak of Mysore (சா.அக.).

**சைலகோடகம்** *šaila-kōḍagam,* பெ.(n.) கோடக சாலை; coromandel gendarussa-Justica procumbens (சா.அக.).

**சைலசீரிடம்** *šailašīriḍam,* பெ.(n.) கருஞ்சீரகம்; black cumin (சா.அக.).

**சைலதரன்** *šailadaraṉ,* பெ.(n.) கண்ணபிரான், மலையைத் தாங்கியவன் (யாழ்.அக.); *Kṛṣṇa*, as holding the *Gōvardhana* mountain.

*[Skt. šaila+dhara > த. சைலதரன்]*

**சைலதாரகி** *šailatāragi,* பெ.(n.) பசு முன்னை; Indian head ache tree (சா.அக.).

**சைலந்தம்** *šailandam,* பெ.(n.) சாதிலிங்கம்; vermilian red sulphate of mercury (சா.அக.).

**சைலப்பாலை** *šaila-p-pālai,* பெ.(n.) வெப்பாலை; wrightia tinctoria (சா.அக.).

**சைலபதி** *šaila-padi,* பெ.(n.) இமயமலை *(யாழ்.அக.);* the Himalayas, as the lord of mountains. *"மலைகளுக்குத் தலைவன்".*

*[Skt. šaila+pati > த. சைலபதி]*

**சைலபித்தி** *šailapitti,* பெ.(n.) 1. பேய்க்களா; a bitter variety of carondah. 2. மலைக் களா; hill carondah-Vacanumgenus. 3.முள்ளுக்களா; baberry-Barberis aristata (சா.அக.).

**சைலம்** *šailam,* பெ.(n.) மலை; mountain, hill.

த.வ. சாரல்

*[Skt. šaila > த. சைலம்]*

*[த. சாரல் >சாரலம் >சேரலம் >சேலம் >* ***Skt.*** *šaila]*

**சைலமாதிகம்** *šaila-mādigam,* பெ.(n.) பாஞ்சாலிக்கொடி; a kind of mountain creeper (சா.அக.).

**சைலமேனி** *šailamēṉi,* பெ.(n.) குப்பைமேனி; rubbish plant (சா.அக.).

த.வ. பூனைவணங்கி



**சைலா** *šailā,* பெ.(n.) 1. நீண்ட மேலுடை; flowing dress. 2. பட்டுத் தலைப்பாகை வகை; a kind of silk turban (muham.).

*[H. selā >த. சைலா]*

**சைலாந்திரம்** *šailāndiram,* பெ.(n.) மலைக் குகை; cave or hollow in a mountain (யாழ்.அக.).

*[Skt. šaila+antara > த. சைலாந்திரம்]*

**சைவகலாலயசக்கரவர்த்தி** *šaiva-kalā-laya-cakkaravartti,* பெ.(n.) கல்வி கேள்விகளில் வல்ல சிவாசாரியரது பட்டங்களுள் ஒன்று; a

title of the learned *śivācāryas* "சைவகலாலய சக்கரவர்த்தி உள்ளிட்டோமும்" (தெ.கல்.தொ.5:101).

*[Skt.சைவம்+கலாலய+சக்கர+வர்த்தி]*

*[Skt. śaiva+kalā+ā-laya >த.சைவ கலாலயம் Skt. vartti>த.வர்த்தி]*

**சைவசூளாமணி** *śaiva-śūḷāmaṇi,* பெ.(n.) சிவாசாரியரது பட்டங்களுள் ஒன்று; a title of *śivācāryas. "பாண்டியன் கந்தனான சைவ சூளாமணி பிரமாதராயனேன்"* (தெ.கல். தொ.5:101).

*[சைவம்+சூளாமணி]*

*[Skt. śaiva+ > த. சைவம்]*

**சைவம்**[1] *śaivam,* பெ.(n.) 1. **சிவனியம்** பார்க்க; see ṣivaṉiyam 2. சிவமா தொன்மம்; a chief *pūraṇa* "எதிரில் சைவமே பவிடியம்" (கந்தபு.பாயி.54). 3. தோன்றியம் (ஆகமம்) (அக.நி.); *āgama* 4. புலாலுண்ணாமை; vegetarianism

**த.வ. சிவனியம்**

*[Skt. śaiva > த. சைவம்]*

சிவனியமதம். ஊர்த்த சைவம், அனாதி சைவம், ஆதி சைவம், மகாசைவம், பேதசைவம், அபேத சைவம், அந்தர சைவம், குணசைவம், நிர்க்குணசைவம், அத்துவா சைவம், யோக சைவம், ஞான சைவம், அணுசைவம், கிரியாசைவம், நாலுபாத சைவம், சுத்தசைவம் என்ற பதினாறு வகைப்பட்டதாய்ச் சிவனைப் பர தெய்வமாகக் கொண்டு வழிபடுஞ் சமயம்; the religion which regards *Siva* as the Supreme Being and is exclusively devoted to his worship, of sixteen sects. viz; *ūrttacaivam, aṉāti saivam, āti saivam, magā saivam, pēta saivam, apēta saivam, antara saivam, kuṉa saivam, nirkkuna-saivam, antarasaivam, yōga saivam, ñāna saivam, anu saivam, kiriyā saivam, nālupāda saivam, sutta saivam.*

**சைவம்**[2] *śaivam,* பெ.(n.) இளமை (அக.நி.); childhood.

*[Skt. śaiśava > த. சைவம்]*

**சைவர்** *śaivar,* பெ.(n.) **சிவனியர்** பார்க்க; see śivaṉiyar.

**த.வ. சிவனியர்**

*[Skt. śaiva > த. சைவர்]*

அனாதிசைவர், ஆதி சைவர், மகாசைவர், அணுசைவர், அவாந்தர சைவர், பிரவரசைவர், அந்திய சைவர் என்ற ஏழுவகைச் சைவ சமயிகள் (சைவச.பொது.435, உரை); those who profess the *śaiva* religion , of seven classes, viz., *anādi-saivar, ādi-saivar, mahā-saivar, aṉu-saivar, avāndara-saivar, piravara-saivar, antiya-saivar .*

**சைவலம்** *śaivalam,* பெ.(n.) ஒரு வகைப்பாசி (சூடா.); duck weed, green, moss-like plant growing in pools, Blyxa octandra.

*[Skt. śaivala > த. சைவலம்]*

**சைவவாதி** *śaiva-vādi,* பெ.(n.) சிவனியக் கொள்கையை எடுத்துரைப்போன்; an exponent of *śaiva* philosophy. *"நின்ற சைவவாதி நேர்படுதலும்" (மணிமே. 27: 87).*

*[Skt. śaiva+vādi > த. சைவவாதி]*

**சைவன்** *śaivaṉ,* பெ.(n.) 1. சிவனை வழிபடுவோன்; one who professes the *śaiva* religion. 2. சிவன்; *śivaṉ. "தழலிலங்கு திருவுருச்சைவனே" (தேவா.866, 7).* 3. புலாலுண்ணாதவன்; vegetarian.

*[Skt. śaiva > த. சைவன்]*

**சைவாத்திரம்** *śaivāttiram,* பெ.(n.) சிவகணை (பாசு பதாத்திரம்); *pāsupatāttiram,* an arrow which has *śivaṉ* as its presiding deity. *"தவம் புரியச் சைவாத்திரங் கொடுக்கவாங்கி" (கடம்பர்.உலா.34).*

*[Skt. śaiva+āstra > த. சைவாத்திரம்]*

**சைனம்** *śaiṉam,* பெ.(n.) சமண மதம்; jainism.

*[Skt. jaina > த. சைனம்]*

**சைனர்** *śaiṉar,* பெ.(n.) சீன நாட்டவர் (யாழ்.அக.); Chinamen .

*[E. china > த. சைனர்]*

**சைனன்** *śaiṉaṉ,* பெ.(n.) 1. அருக சமயத்தவன்; a Jaina. 2. புத்தன் (திவா.); Buddha. 3. அருகக் கடவுள்; Arhat.

*[Skt. caina > த. சைனன்]*

**சைனாக்கோழி** *šainā-k-kōḻi,* பெ.(n.) அடைகாக்காமல் முட்டை பொரிக்குஞ் சீனக்கோழி; a species of fowl which hatches eggs without brooding.

*[Skt. China > த. சைனா+கோழி]*

**சைனாகமம்** *šaiṉāgamam,* பெ.(n.) அங்காகமம், பூர்வாகமம், பகு சுருதியாகமம் என முப்பகுதிப்பட்ட சைன சமய ஆகம நூல் (சீவக.1246, உரை); the sacred scriptures of the Jainas, of three kinds, viz aṅgākamam, Pūrvākamam, paku-šuruti-y-ākamam.

*[Skt. Jaina+ā+gama > த. சைனாகமம்]*

**சைனியம்** *šaiṉiyam,* பெ.(n.) சேனை; army.

*[Skt. sainya > த. சைனியம்]*

**சொக்கம்[1]** *šokkam,* பெ.(n.) 1. தூய்மை; genuineness, purity, excellence, as of gold, silver. 2. அழகு; beauty (பிங்.). 3. **சொக்கத்தாண்டவம்** பார்க்க; see *sokka-t-tāṇḍavam.* "சொக்க மவினை நாடகம்" (சிலப். பதி. 73, உரை) 4. கெம்பு; ruby (சங்.அக.).

*[Skt. svaccha> **Pkt.** šokkha > த. சொக்கம்]*

**சொக்கம்[2]** *šokkam,* பெ.(n.) அமரருலகு; Indra's heaven.

*[Skt. svarga > த. சொக்கம்]*

**சொக்கரா** *šokkarā,* பெ.(n.) வேலைக்காரச் சிறுவன்; errand- boy, attendant.

*[U. cōkrā > த. சொக்கரா]*

**சொக்காக்கீரை** *šokkā-k-kīrai,* பெ.(n.) கீரை வகை; a species of greens.

*[U. cokka > த. சொக்கா+கீரை]*

**சொகினம்** *šogiṉam,* பெ.(n.) நிமித்தம்; omen. *"இன்னா சொகின மிசையா விரிச்சியும்" (பு.வெ.10, சிறப்பிற்.12).*

*[Skt. šakana > த. சொகினம்]*

**சொகுசா** *šogusā,* பெ.(n.) துத்தமுஞ் செம்புங் கலந்த மாழை; pinch beck, gold-like alloy of copper and zinc.

*[U. sogsā > த. சொகுசா]*

**சொகுரு** *šoguru,* பெ.(n.) தன்னுடைய ஆசாரியன்; one's own teacher (சிவநெறிப்பிர.உரை).

*[சொ+குரு]*

*[Skt. sva> த. சொ]*

**சொச்சி** *šocci,* பெ.(n.) 1. கோதுமைக்குருணை, சருக்கரை, நெய் அல்லது பால் கலந்திட்ட இனிய உணவு; a preparation made of wheat grits, sugar and ghee or milk. 2. பொரியரிசியால் ஆக்கிய உணவு; a kind of food prepared from fried rice.

**த.வ. இன்னப்பம்**

*[H. suji > த. சொச்சி]*

**சொச்சொரூபம்** *šo-c-corūbam,* பெ.(n.) தன்னியல்பு; inherent nature (சொரூபசா. சொரூபஸர்க்கம்).

*[Skt.sva+svarūpa > த. சொச்சொரூபம்]*

**சொத்தம்** *šottam,* பெ.(n.) 1. நலப்பாடு; convalescence, healthy condition. 2. நல்ல நிலை; comfortable circumstances. 3.பணியேதுமில்லாமலேயே நல்வாழ்க்கை வாழ்பவன்; being without any profession or calling.

**த.வ. நலப்பாடு**

*[Skt. šva-stha > த. சொத்தம்]*

**சொத்தானம்** *šottāṉam,* பெ. (n.) 1.சொந்தஇடம்; one's own place. 2.உடம்புடனே (சரீரத்துடன்) உயிர்த்தெழுகை (R.C); resurrection.

*[Skt. sva+stnāna > த. சொத்தானம்]*

**சொத்தி[1]** *šotti,* பெ.(n.) 1. ஈடுபாடு இன்மை; negligence. *'அவன் சொத்(ஸ்)தியால் அது*

நடக்கவில்லை'. 2. சோம்பேறித்தனம்; laziness.

[Persn. susti > த. சொத்தி]

**சொத்தி**[2] *šotti*, பெ.(n.) வெறுமை; nothing. *சொத்தை யெல்லாம் சொத்தியாக்கி விட்டான்.*

**த.வ. பாழ்**

[Persn. susti > த. சொத்தி]

**சொத்திரி** *šottiri*, பெ.(n.) திருமணம் செய்த மனைவி (பத்தினி); wedded wife.

**த.வ. இல்லாள், மனையாள்**

[Skt. sva+strī > த. சொத்திரி]

**சொத்து** *šottu*, பெ.(n.) 1. அசைவதும் அசையாததுமாகிய (தாவர சங்கமங்களாகிய) உடைமை; property, possessions, being of two kinds, viz., *tāvaram* and *šaṅgamam*. 2. பொன்; gold. *"சொத்துற் றமைந்த சுதையில் செஞ்சுவர்" (பெருங்.உஞ்சைக்:34, 221).*

**த.வ. உடைமை, உரிமைப்பொருள்**

[Skt. svam > த. சொத்து]

**சொத்துவம்** *šottuvam*, பெ.(n.) 1. பொருள் உரிமை (சங்.அக.); right, proprietorship, title, claim 2. தான் தோன்றி (சுயம்பு); self-existence, independent condition.

**த.வ. உரிமம்**

[Skt. sva-tva > த. சொத்துவம்]

**சொப்பனக்கலிதம்** *šoppaṉa-k-kalidam*, பெ.(n.) கனவில் நேரும் விந்து வெளிப்பாடு; spermatorrhoea during dream.

**த.வ. கனாக்கசிவு**

[Skt.svapna+skhalida > த.சொப்பனஸ் கலிதம் > த. சொப்பனக்கலிதம்]

**சொப்பனம்** *šoppaṉam*, பெ.(n.) 1. கனவு; dream. *"ஏட்டுக்கடங்காச் சொப்பனம் போல்" (தாயு.சொல்லற்.10).* 2. **சொப்பனாவத்தை** பார்க்க; see *šoppaṉāvattai*. 3. மாயத் தோற்றம்; illusion; transience.

**த.வ. கனவு**

[Skt. svapna > த. சொப்பனம்]

**சொப்பனாவத்தை** *šoppaṉāvattai*, பெ.(n.) ஆதன் (ஆன்மா) கண்டத்தில் நிற்க, மனம் வேலை செய்து கொண்டும், உறுப்புகள் (இந்திரியங்கள்) பத்தும் தொழிலின்றியும் உள்ள நிலை (சி.சி.4: 33, நிரம்ப.); dreams state in which the soul is in the neck, the mind is working and the sense organs are at rest.

[Skt.svapna+avasthā>த. சொப்பனாவத்தை]

**சொப்பனேந்திரியம்** *šoppaṉēndiriyam*, பெ.(n.) ***சொப்பனக்கலிதம்*** பார்க்க; see *soppaṉa-k-kalidam*.

[Skt.svepna+indriya>த. சொப்பனேந்திரம்]

**சொப்பிரகாசம்** *šoppiragāšam*, பெ.(n.) தற்பேரொளி; self - luminosity, self-radiance. *"சொப்பிர காசமாய் விளங்குஞ் சந்திர னிடத்தில்" (வேதா.சூ.56, உரை).*

**த.வ. தான்தோன்றிபேரொளி**

[Skt. svaprakāšā > த. சொப்பிரகாசம்]

**சொம்** *šom*, பெ.(n.) சொத்து; property, wealth, one's own goods. *"சொம் மனைவைத் தெப்படி நடப்பீர்" (குமர. பிர.காசிக்.34).*

**த.வ. செல்வம், உடைமை**

[Skt. svam > த. சொம்]

**சொயம்** *šoyam*, பெ.(n.) 1. சொந்தமானது; one's own. (பெ.அ.) 2. சொந்தமான; one's own.

**த.வ. தன், தனது**

[Skt. svayam > த. சொயம்.]

**சொயம்பு** *šoyambu*, பெ.(n.) தானே தோன்றியது; anything considered to be uncreated.

**த.வ. தான்தோன்றி**

[Skt. svayam-bhū > த. சொயம்பு]

**சொர்க்கப்படம்** *šorkku-p-paḍam,* பெ.(n.) கட்டங்களிற் காய்கள் வைத்தாடும் ஒருவகைப் படம்; board for a kind of back gammon.

த.வ. பரமப்படம்

*[Skt. svarga> த. சொர்க்கம்+படம்]*



**சொர்க்கம்**[1] *šorkkam,* பெ.(n.) தேவருலகு (சூடா.); Indra's heaven. "மேல் வீடு சொர்க்கமென்றும்" (தாயு.மௌன.4).

*[Skt. svarga> த. சொர்க்கம்]*

**சொர்க்கம்**[2] *šorkkam,* பெ.(n.) மாதர் மார்பகம் (சூடா.); woman's breast.

*[Skt. su-varga> த. சொர்க்கம்]*

**சொர்க்கவாசல்** *šorkka-vāšal,* பெ.(n.) **சுவர்க்க வாசல்** பார்க்க; see šuvarkka-vāšal.

*[Skt. svarga> த. சொர்க்கம்+வாசல்]*

**சொர்ணக்கல்** *šorṇa-k-kal,* பெ.(n.) வைடூரியம் lapis lazuli.

*[Skt. svarṇa> த. சொர்ணம்+கல்]*

**சொர்ணகருணைபாடாணம்** *šorṇa-karuṇai-pāḍāṇam,* பெ.(n.) மச்சமுனி 800ல் கூறியபடி, இலிங்கம் சிலை, தாரம், சூதம், நாகம், வீரம், காரம் இவற்றைச் சமமாகப் பொடித்து தங்க அகலில் வைத்துப் பிறகு அதைத் தாழிக்குள் வைத்து மணலிட்டுக் கதிக்க எரித்திட தங்கமும் ஒத்துக்கூடி உருகி இறுகி மணிபோலிருக்கும். வேதைக்குதவும், மாழையில் மாட்டிடத் தங்கமாம்; this is a ball prepared by the process mentioned in Machamuni 800, using gold, mercury zinc, a few arsenics etc. It is useful in Alchemy (சா.அக.).

த.வ. பொன்கருணைச் செய்ந்நஞ்சு

*[சொர்ணம் + கருணை + பாடாணம்]*

**சொர்ணகனம்** *šorṇagaṇam,* பெ.(n.) வைடூரியம்; cats eye (சா.அக.).

*[சொர்ணம் + கனம்]*

**சொர்ணசீரகம்** *šorṇa-sīragam,* பெ.(n.) 1. சிவப்புச் சீரகம்; red cumin 2. கரும்பு (மலை.); sugarcane (சா.அக.).

*[சொர்ணம் + சீரகம்]*

**சொர்ணசீரத்திரயம்** *šorṇašīra-t-tirayam,* பெ.(n.) மஞ்சள் குன்றிமணி; yellow crabs eye (சா.அக.).

*[சொர்ணம் + சீரத்திரயம்]*

**சொர்ணசீரம்** *šorṇa-šīram,* பெ.(n.) கரும்புச் சாறு; juice of sugarcane (சா.அக.).

*[சொர்ணம் + சீரம்]*

**சொர்ணத்திராவகம்** *šorṇa-t-tirāvagam,* பெ.(n.) தங்கத்தைக் கரைக்கும் ஒரு மூலப்பொருள்; a mineral solvent of gold.

த.வ. பொன்னாக்கநீர்மம்

*[சொர்ணம் + திராவகம்]*

**சொர்ணப்பூடு** *šorṇa-p-pūḍu,* பெ.(n.) கோடகசாலை (பதார்த்த:252); a very small plant-*Juatica procumbens* (சா.அக.).

*[சொர்ணம் + பூடு]*

**சொர்ணபட்டி** *šorṇapaṭṭi,* பெ.(n.) நாக செண்பகம்; common yellow trumpet - flower tree-*Tecoma stans* (சா.அக.).

த.வ. மஞ்சளலரி

*[சொர்ணம் + பட்டி]*

*[Skt. svarṇa > த. சொர்ணம்]*

**சொர்ணபற்பம்** *šorṇaparpam,* பெ.(n.) தங்கப்பொடி; golden powder.

**த.வ. பொன்னீறு**

*[சொர்ணம் + பற்பம்]*

**சொர்ணபூங்காலி** *šorṇa-pūṅgāli,* பெ.(n.) மூல்தான் மண்; mulltan mud so called of its yellowish red colour (சா.அக.).

**த.வ.செம்பூங்காவி**

*[சொர்ணம் + பூங்காலி.]*

**சொர்ணபேதி** *šorṇa-bēdi,* பெ.(n.) 1. தங்கத்தைக் கரைக்கும் ஒரு தாதுப் பொருள்; a mineral solvent of gold. 2. பொன்னைக் கரைக்கும் ஒரு நீர்மம்; aquaregia capable of dissolving gold (சா.அக.).

**த.வ. பொன்கரைச்சி**

*[சொர்ணம் + பேதி.]*

**சொர்ணம்** *šorṇam,* பெ.(n.) 1. பொன்; gold. **சொர்ணப்பூடு** பார்க்க; see šorṇa-pūḍu.

*[Skt.svarna > த. சொர்ணம் (→சொன்னம்.)]*

**சொர்ணமாக்கி** *šorṇam-ākki,* பெ.(n.) பவள நஞ்சு; prepared arsenic (சா.அக.)

**த.வ. பொன்னாக்கி**

*[சொர்ணம் + ஆக்கி.]*

**சொர்ணமாட்சிகம்** *šorṇa-māṭcigam,* பெ. (n.) பொன்னிமிளை; gold pyrites (சா.அக.).

**த.வ. மஞ்சள்நிமிளை**

**சொர்ணமாட்சிகை** *šorṇa-māṭcigai,* பெ.(n.) **சொர்ணமாட்சிகம்** பார்க்க; see *šorṇamāṭcigam* (சா.அக.).

**சொர்ணமூலி** *šorṇa-mūli,* பெ.(n.) 1. பொன்னிருக்கும் மூலிகைப் பூடு; herbs containing gold. 2 பொன் செய்வதற்குப் பயன்படும் மூலிகைகள்; herbs used in Alchemy (சா.அக.).

**த.வ. பொன்மூலி**

*[சொர்ணம் + மூலி.]*

*[Skt. svarṇa> த. சொர்ணம்.]*

**சொர்ணலிங்கச்செந்தூரம்** *šorṇa-liṅga-c-cendūram,* பெ.(n.) தங்கமும் இலிங்கமும் சேர்த்துச் செய்த செந்தூரம்; red coloured calcination of gold and cinnabar (சா.அக.).

**த.வ. பொன்னிலங்கள் செந்தூளம்**

*[சொர்ணம் + இலிங்கம் + செந்தூரம்.]*

*[Skt. svarṇa > த. சொர்ணம்]*

**சொர்ணவாதியதிமதுகம்** *šorṇa-vādiyadi madugam,* பெ.(n.) சிறு குறிஞ்சா; small Indian ipecacuanha-*Gymnema sylaestre* (சா.அக.).

*[சொர்ணம் + வாதி + அதிமதுகம்.]*

**சொரிதம்** *šoridam,* பெ.(n.) நலிதலோசை; circumflex accent. *"ஓசை யனுதாத்த சொரிதந் தழுவவோதி" (திருவிளை. தடாதகை.8).*

**த.வ. நலிதலோசை**

*[Skt. svarita > த. சொரிதம்.]*

**சொருக்கம்** *šorukkam,* பெ.(n.) தேவருலகு (சூடா.); Indra's heaven.

**த.வ. அமரருலகு**

*[Skt. svarga > த. சொருக்கம்.]*

**சொருக்கத்தராதல்** *šorukkattarā-dal,* தொ.பெ.(vbl.n.) இறத்தல்; dying. *"பரமேசுரா பேபாத்தரயர் சொர்க்கஸ்தராவது" (S.I.I.iv, 10).*

*[சொருக்கம்+அராதல்]*

*[Skt. svarga+ > த. சொர்க்கம் > சொருக்கம்]*

**சொரூட்சா** *šorūṭšā,* பெ.(n.) 1. வெள்ளுள்ளி; garlic. 2. வெள்ளை வெங்காயம்; white onion (சா.அக.).

**த.வ. பூண்டு**

**சொரூபசூசகம்** *šorūba-šūšagam,* பெ.(n.) ஒரு காம நூல்; a treatise on love and love affair (சா.அக.).

*[சொரூபம் + சூசகம்.]*

**சொரூபஞானம்** *šorūba-ñānam,* பெ.(n.) 1. மெய்யறிவு; divine knowledge, knowledge of the diety or of the soul as obtained by divine aid; real wisdom. 2. ஆதனறிவு; knowledge of the soul as opposed to செய்தி அறிவு; knowledge derived by the senses (சா.அக.).

*[Skt. sva-rūpa+jñāna> த. சொரூப ஞானம்]*

**சொரூபம்**[1] *šorūbam,* பெ.(n.) 1. இயற்கைத் தன்மை; real nature, natural state or condition. *"ஆன்மாவி னிசசொரூபமிதுவென வுணர்தல்" (வேதா.சூ.29)* 2. சாயல்; exact likeness, resemblance. *அவனுடைய சொரூபமாய் இவன் இருக்கிறான்* (சங்.அக.). 3. வடிவம்; form, shape. *பேதமா முரணவித்த சொரூபம் (திருப்போ.சந்.கட்டளைக்.5).* 4. படிமம் (பிரதிமை); image, idol. 5. குணங் குறியின்றி ஒன்றாய் யாவுங் கடந்த பதி; the Supreme Being, as the one, the Indivisible, the attributeless etc., opp. to *taṭattam.* 6. **சொரூபலட்சணம்** பார்க்க; see *šorūba-laṭcaṇam.* *"மாகனலி விளங்குகதிர் சொரூபனெனல்போ லான்மாவி நிசசொரப மிதுவெனவுணர்தல் சொரூபம்" (வேதா.சூ.29).*

**த.வ. தன்னியல்பு**

*[Skt. sva-rūpa > த. சொரூபம்.]*

**சொரூபம்**[2] *šorūbam,* பெ.(n.) அழகு; beauty.

**த.வ. நல்லுருவம்**

*[Skt. su-rūpa > த. சொரூபம்.]*

**சொரூபமணி** *šorūbamaṇi,* பெ.(n.) கருவூரார் நூற்பாவிற் சொல்லியுள்ள இதளியமணி; consolidated and mercurial ball prepared as contemplated in *Karuvūrār šūttiram* (சா.அக.).

*[சொரூபம் + மணி.]*

*[Skt. sva-rūpa > த. சொரூபம்]*

**சொரூபலட்சணம்** *šorūba-laṭcaṇam,* பெ.(n.) 1. பரப்பிரமத்தின் சச்சிதானத்துருபமான உண்மை இயல்பு (வேதா.சூ.29, உரை); the real nature of God as the Ever-existing, Ever-knowingand Ever-blissful 2. சிறப்பியல்பு (சி.சி.1, 70, சிவஞா.); special, distinquishing attributes.

**த.வ. தெய்வஇயல்பு**

*[Skt. svarūpa-lakṣaṇa > த. சொரூபலட்சணம்.]*

**சொரூபவித்து** *šorūbavittu,* பெ.(n.) தன்னியல்பை உணர்ந்தவன்; one who has attained self-realisation. *"சொரூபவித்தான மேலோர் சுபாவமே யர்குமன்றோ" (விவேக சூடா.43).*

**த.வ. தன்னுணர்ந்தான்**

*[Skt. svarūpavid > த. சொரூபவித்து.]*

**சொரூபன்** *šorūban,* பெ.(n.) பாம்பாட்டி சித்தன்; *Pāmpāṭṭi Siddhar* (சா.அக.).

**சொரூபானாந்தம்** *šorūbāṉandam,* பெ. (n.) 1. முழு (பூரண)வின்பம் (சங்.அக.); perfect bliss 2. தமிழிலுள்ள ஒரு வேதாந்த நூல்; a treatise on *Vēdānta* in Tamil.

**த.வ. முழுவின்பம்**

*[Skt.svarūpānanda >த. சொரூபானந்தம்.]*

**சொரூபானாந்தர்** *šorūbāṉandar,* பெ. (n.) தமிழில் இரண்டன்மை (அத்துவித) நூல்கள் பல இயற்றிய ஒரு பெரியார் (பெருந்திரட்டு); an ascetic, author of many treatises in Advaita on *Vēdānda* in Tamil.

*[Skt.svarūpānanda >த. சொரூபானந்தர்.]*

**சொரூபானுபூதி** *šorūbāṉubūdi,* பெ.(n.) பதியுடன் உயிர் ஐக்கியமுற்று நிற்கும் நிலை; state of communion with God. *"சொரூபானு பூதி காட்டி" (தாய.சின்மயா.1).*

த.வ. இறைசேருயிர்

*[Skt.svarūpa+anu-bhūti > த. சொரூபானு பூதி.]*

**சொரூபி** *šorūbi,* பெ.(n.) உருவமுள்ளவள் (யாழ்.அக.); one who has form.

*[Skt. sva-rūpin > த. சொரூபி.]*

**சொற்பசீவனம்** *šoṟpa-šivaṉam,* பெ.(n.) வறுமைப்பட்ட வாழ்வு; precarious living, living from hand to mouth.

த.வ. சீரில்வாழ்வு

*[Skt. svalpa > த. சொற்பசீவனம்.]*

**சொற்பம்** *šoṟpam,* பெ.(n.) 1. சிறுமை; smallness, slightness, meanness. 2. சிறியது; trifle, that which is small or insignificant.

*[Skt. svalpa > த. சொற்பம்.]*

**சொற்பவிருமல்** *šoṟpa-virumal,* பெ.(n.) சிணுக்கிருமல்; slight cough (சா.அக.).

த.வ. நச்சிருமல்

**சொற்பனம்** *šoṟpaṉam,* பெ.(n.) ***சொப்பனம்*** பார்க்க; see *šoppaṉam. "சொற்பன நடுமனையை விளக்கியே" (வேதா.சூ.10).*

*[Skt. svapna > த. சொற்பனம்.]*

**சொற்பானு** *šoṟpāṉu,* பெ.(n.) கருங்கோள் (இராகு); moon's ascending node. *"புகழுஞ் சொற்பானுவென்றும்" (மச்சபு.புவனகோ.27).*

த.வ. கருங்கோள்

*[Skt. svarbhānu > த. சொற்பானு.]*

**சொன்னகாரன்** *šoṉṉakāraṉ,* பெ.(n.) தட்டான் (பிங்.); goldsmith.

த.வ. பொன்னாசாரி

*[Skt. svarṇa-kāra > த. சொன்னகாரன்.]*

**சொன்னதானம்** *šoṉṉa-dāṉam,* பெ.(n.) பொன்னை வழங்குகை; gift of gold or money. *"சொன்னதானப் பயனெனச் சொல்லுவர்" (கம்பரா.சிறப்பு.).*

த.வ. பொற்கொடை

*[Skt. svarṇa> த. சொன்னம்+தானம்.]*

**சொன்னம்** *šoṉṉam,* பெ.(n.) தங்கம் (திவா.); golds.

த.வ. பொன்

*[Skt. svarṇa > த. சொன்னம்.]*

**சொன்னயாகம்** *šoṉṉa-yāgam,* பெ.(n.) இரணியகருப்பம்; ceremony of passing through the hollow golden image of a cow. *"நீள்சொன்ன யாகபலம்... ஒய்ந்து" (சேதுபு.பல.தீர்த்த.23).*

த.வ. பொன்

*[Skt. svarna+ > த. சொன்னயாகம்.]*

**சோக்கதார்** *šōkkadār,* பெ.(n.) சௌக்கிதார்; chowkidar. *"சோக்கதார் கடிகை மின்ன" (பிரதாப.விலா.2).*

*[H. caukī > த. சோக்கதார்.]*

**சோக்கரா** *šōkkarā,* பெ.(n.) ஊழியப் பையன்; boy attendant or servant.

த.வ. ஏவலாள்

*[H. chōkra > த. சோக்கரா.]*

**சோக்கு** *šōkku,* பெ.(n.) பகட்டு, ஆடம்பரம்; gaudiness pomp.

*[U. shōkh> த. சோக்கு.]*

**சோகசாஅதிசாரம்** *šogašā-adišāram,* பெ.(n.) மனக்கவலையினால் உண்டான கழிச்சல்; diarrhoea born of grief (சா.அக.).

**சோகந்தெளிதல்** *šōgandeḷidal,* தொ.பெ. (vbl.n.) மயக்கம் நீங்கி தெளிவடைதல்; recovering from swoon or fainting (சா.அக.).

த.வ. அயற்சிநீங்கல்

*[சோகம் + தெளிதல்.]*

*[Skt. sōham > த. சோகம்]*

**சோகநிவர்த்தி** *šōga-nivartti,* பெ.(n.) 1. துன்பத்தினின்றும் விலகுகை; relief from

affliction. 2. பிறப்பு இறப்பு துன்பம் (துக்கம்) தனக் கில்லை என்று தள்ளி நிற்கை; the sixth state of seven states of soul, to stand along that he is free from births or death (சா.அக.).

*[சோகம் + நிவர்த்தி.]*

**சோகபித்தரோகம்** *šōgapitta-rōgam,* பெ.(n.) தலைதிருப்பல், உள்ளங்கை உள்ளங்கால் எரிச்சல், உடம்பில் தடிப்பு, செரியாமை, வயிற்றுப் பொருமல், தொடைகளில் வலி முதலிய குணங்களைக் காட்டும் ஒரு வகைப் பித்த நோய்; this is a bilious disease characterised by burning sensation of hands and feet indigestion bloating of abdomen, pain in the thighs etc. (சா.அக.).

**த.வ. பித்தநோய்**

*[சோகம் + பித்தம் + ரோகம்.]*

**சோகம்** *šōgam,* பெ.(n.) 1. சோம்பல்; drowsiness, langour. 2. சோர்வு; a state of extreme prostation and depression with failure of circulation collapse. 3. நினைவிழக்கை (மூர்ச்சை); swoon. 4. மனநோய்; loss of consciousness. 5. மயக்கம்; fainting. 6. உருண்டை; ball. 7. ஒகிருக்கை (யோகாசனம்) செய்கையில், மந்திரத்தைப் பலுக்கினால், வரிசையாக மூச்சு அடங்கி மெய்யறிவாளர்கள் தன் வயப்பட்டு நிற்கும் ஆடசைவு அற்றநிலை; a course of meditation on the mystic syllable 'om' in which the breath is controlled several faculties are brought to subjection and calmness or tranquility of mind is established (சா.அக.).

***[Skt. šōka > த. சோகம்]***

**சோகம்பாவனை[1]** *šōgambāvaṉai,* பெ.(n.) தனக்கு இன்னல்கள் பல இருப்பதாக எப்பொழுதும் எண்ணி வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும் தன்மை; melancholia which is popularly known as vapours because the person fancies himself the subject of various bodily ills, and does not believe if told there is nothing wrong in him.

**த.வ. தன்வருத்தி**

*[சோகம் + பாவனை.]*

**சோகம்பாவனை[2]** *šōgambāvaṉai,* பெ.(n.) உயிர்களின் ஆதன் பரம்பொருளோடு ஒன்றிக் கலத்தல்; the union of the individual soul (சா.அக.).

*(சோகம் + பாவனை.)*

**சோகம்பாவி-த்தல்** *šōgampāvittal,* 4 செ. குன்றாவி.(v.t.) தன்னைப் பரம்பொருள் அல்லது சிவனே எனக்கருதி ஒன்றுதல்; meditating on the assumption of his being one with the Supreme Being (சா.அக.).

*[சோகம் + பாவி-த்தல்.]*

**சோகம்போடுதல்** *šōgam-pōḍu-dal,* தொ.பெ.(vbl.n.) மயங்கிச் சோர்வடைதல்; fainting as in collapse (சா.அக.).

*[சோகம் + போடுதல்.]*

***[Skt. sōham > த. சோகம்]***

**சோகமாதிதம்** *šōgamādidam,* பெ.(n.) கோங்கு; false tragacanth, golden silk cotton (சா.அக.).

**த.வ. கோங்கிலவு, முன்னிலவு**

**சோகரிகன்** *šogarigaṉ,* பெ.(n.) வேட்டைக் காரன் (யாழ்.அக.); shikari, hunter.

**த.வ. வேடன்**

*[U. shikār > த. சோகரிகன்.]*

**சோகரியம்** *šōgariyam,* பெ.(n.) ஏந்து (செளகரியம்); comfort. *சோகரியமாய் வளர்ந்தவள்.*

**த.வ. வளப்பம்**

***[Skt. saukarya > த. சோகரியம்.]***

**சோசியம்** *šōšiyam,* பெ.(n.) கணியம்; astrology.

**த.வ. கணியம்**

*[Skt. jyōtiṣa > த. சோசியம்.]*

**சோசியன்** *šōšiyan,* பெ.(n.) கணியன்; astrologer.

*[Skt. jyōtiṣa > த. சோசியன்.]*

**சோட்டா** *šōṭṭā,* பெ.(n.) 1. இலேசான; light. 2. சிறிய; little, small.

*[H. chōtā > த. சோட்டா.]*

**சோட்டாப்பையன்** *šōṭṭā-p-paiyan,* பெ.(n.) ஊழியச் சிறுவன்; boy-attender.

**த.வ. ஏவலன்**

*[சோட்டா+பையன்]*

*[H. chōṭā > த. சோட்டா]*

**சோட்டாகச்ரி** *šōṭṭākacri,* பெ.(n.) சிற்றுணவு; light refreshment; chota hazari.

**த.வ. சிற்றுண்டி**

*[H. chōṭa+Ar. hāziri > த. சோட்டாகச்ரி.]*

**சோடசகலை** *šōḍašakalai,* பெ.(n.) மாந்தன் உடம்பில் ஆற்றல் நிலைத்திருக்கும் 16 ஓக நிலைகள்; the sixteen mystic centres in the human body in which the goddess Sakthi manifests herself.

**த.வ. ஓகப்புள்ளி**

*[சோடசம் + கலை.]*

*[Skt. sōḍašā > த. சோடசம்]*

**சோடசத்தொன்று** *šōḍasa-t-tonru,* பெ.(n.) மாகாணி, வீசம், பதினாறில் ஒன்று; (1/16 part) one sixteenth part (சா.அக.).

*[சோடசம் + அத்து + ஒன்று]*

**சோடசதானம்** *sōḍaša-dānam,* பெ.(n.) பதினாறு வகைப்பட்ட கொடை (சங்.அக.); the sixteen kinds of gifts.

*[Skt. ṣōḍaša-tāna > த. சோடசதானம்.]*

**சோடசபாவனை** *šōḍašā-bāvanai,* பெ.(n.) சமண சமயத்து இல்லறத்தானும், துறவியும் செய்த வினை நீக்கத்தின் பொருட்டு மேற்கொள்ளும் பதினாறு இயல்புகள்; the sixteen kinds of mental exercises by which the layman and the monk can arrest the inflow of karma. *"பட்டினிகளோடே சோடச பாவனைகளை மருவி" (சீவக.3133, உரை).*

*(சோடசம் + பாவனை.)*

*[Skt. ṣōḍaša+ > த. சோடசம்.]*

**சோடசம்** *sōḍašam,* பெ.(n.) 1. பதினாறு (யாழ்.அக.); sixteen 2. இறந்தவர் பொருட்டுப் பன்னிரண்டாநாள் பதினறுவர்க்கு உண வளிக்கும் ஒரு சடங்கு; ceremony of feeding 16 persons, generally on the 12th day of the funeral rite. 3.**சோடசோபசாரம்** பார்க்க; see *sōḍašōbašāram. "சோடசத்தாற் பணிமாறி" (குற்றா.தல. சிவரக.3: 121).*

*[Skt. sōdaša > த. சோடசம்.]*

**சோடசவாண்டுமூலி** *šōḍaša-vāṇḍu-mūli,* பெ.(n.) பசியெடுக்காதிருக்க சித்தர்கள் பதினாறு ஆண்டுகளுக்கு ஒரு முறை உண்ணும் மூலிகை; a rare drug used by Siddhars to keep them off from hunger and thrist, they ate this drug once in sixteen years (சா.அக.).

**த.வ. பசிதீர்மூலி**

*[சோடசம் + ஆண்டு + மூலி.]*

**சோடசாகம்** *šōḍašāgam,* பெ.(n.) வேள்வி இருபத்தொன்றனுள் பதினாறு நாட்கள் தொடர்ந்து செய்யப்படும் ஒரு வகை வேள்வி; a sacrifice performed for 16 days, one of 21 *yākam,* q.v. (திருவிளை.தலவி.9),

*[Skt. sōdašāha > த. சோடசாகம்.]*

**சோடசாவதானம்** *šōḍašāvadānam,* பெ.(n.) பதினாறு வகையான வெவ்வேறு

செயல்களை ஒரே நேரத்தில் மனத்துட் கொண்டு செய்து முடிக்கை; art of performing sixteen different acts at the same time.

*[Skt. ṣōḍaša+avatana>த.சோடசாவ தானம்]*

**சோடசி** *sōḍasi,* பெ.(n.) **சோடசாகம்** பார்க்க; see *šōḍašāgam.*

*[Skt. sōḍašin > த. சோடசி.]*

**சோடசோபசாரம்** *šōḍašōbašāram,* பெ.(n.) பதினாறு வகைப் பணிவிடைகள் (உபசாரம்); the sixteen acts of homage and honour paid deities and venerable personages.

**த.வ. ஈரெண்பணிவிடை**

*[Skt. ṣōḍša+upacāra > த. சோடசோப சாரம்]*

ஆசனம், சுவாகதம், பாத்தியம், அர்க்கியம், ஆசமனீயம், மதுபர்க்கம், ஆசமனம், ஸ்னானம், ஆடை, ஆபரணம், கந்தம், புட்பம், தூபம், தீபம், நைவேத்தியம், வந்தனம் அல்லது மஞ்சனம், பூ, கந்தம், தூபம், தீபம், நீர், அமுது, தூசு, அடைக்காய், ஆடி, குடை, கவரி, ஆலவட்டம், விசிறி, ஆடல், வாச்சியம் *āšaṉam, šuvākatam, pāttiyam, arkkiyam, āšamaṉiyam, snaṉam, ādai, āparaṇam, kantam, puṭpam, tūpam, naivēttiyam, vantaṉam;* or *mañjaṉam, pū, kandam, tūbam, tībam, nīr, amuda, tūšu, aḍaikkāy, āṭi, kuḍai, kavari, ālavaṭṭam, visiṟi, āḍal, vācciyam.*

**சோடணம்** *šōḍaṇam,* பெ.(n.) 1. உலருகை; drying. 2. உமிந்து குடிக்கை, நாவினால் சாரம் வாங்கிக் குடிக்கை; sipping (சா.அக.).

*[Skt. šōṣaṇa > த. சோடணம்.]*

**சோடணி** *šōḍaṇi,* பெ.(n.) வற்றச் செய்யக் கூடியது; anything which absorps- Absorbent (சா.அக.).

*[Skt. šōṣaṇī > த. சோடணி.]*

**சோடத்திராவம்** *šōḍa-t-tirāvam,* பெ.(n.) ஒருவகை உப்பு எரி நீர்; soda flux (சா.அக.).

*[சோடம் + திராவம்.]*

**சோடம்** *sōḍam,* பெ.(n.) காமத்தால் வரு கின்ற சூடு; abnormal heat arising from love sickness (சா.அக.).

**த.வ. காமச்சூடு**

*[Skt. šōṣa > த. சோடம்.]*

**சோடனை** *šōḍaṉai,* பெ.(n.) **சோடினை** பார்க்க; see *sōḍiṉai.*

*[H. joḍna > த. சோடனை.]*

**சோடா** *šōḍā,* பெ.(n.) 1. ஒருவகை உப்பு; soda, bicarbonate of soda. 2. ஒருவகைப் பருகம்; aerated drink.

*[E. soda > த. சோடா.]*

**சோடாபொட்டிலுப்பு** *šōḍā-p-poṭṭiluppu,* ஒரு வகை மருந்துப்பு; nitrate of soda, chilian saltpetre.

*[சோடா + பொட்டில் + உப்பு.]*

*[E. soda > த. சோடா.]*

**சோடாவுப்பு** *šōḍā-v-uppu,* பெ.(n.) மண்காரம் (பூநீர் விளையும் நிலத்தில் இருந்து உவர்மண் காரம் எடுத்து, அதை தூய்மை செய்த உப்பு); bicarbonate cf soda. Its a carbonate of soda mixed with various impurities and obtained from pooneer (சா.அக.).

**த.வ. உழமண்உப்பு**

*[சோடா + உப்பு.]*

இது கடற்கரையிலுள்ள பூண்டுகளைக் கொளுத்தி அச்சாம்பலினின்றும், வேதி (இரசாயன) வழியாகப் பிரித்தும் எடுப்பதுண்டு. இது பெரும் பாலும் ஐரோப்பிய நாடுகளினின்று இறக்குமதி யாகிறது. மருத்துவத்திற்கும், பிற காரியங்களுக்கும் பயன்படுவதால் நன்கு விற்பனையாகிறது. இது வெள்ளைக் கட்டியாயும், தூளாகவும் கிடைக்கிறது. செரியாமைக்கும், நெருப்புக் காயங்களுக்கும் மருந்தாகப் பயன்படும்.

**சோத்தம்** *šōttam,* பெ.(n.) இழிந்தார் செய்யும் அஞ்சலி; expr. of salutation from an inferior *"சோத்தம் நம்பியென்று தொண்டர்.... அழைக்கும்" (திவ்.பெரியதி.2. 2: 6).*

*[Skt. stōtra > த. சோத்தம்.]*

**சோத்தி** *šōtti,* பெ.(n.) 1. சுழுத்தி; state of sound sleep. 2. நடுச்சாமம்; midnight.

**த.வ. ஆழ்ந்ததூக்கம்**

*[Skt. susupti > த. சோத்தி.]*

**சோத்திகம்** *šōttigam,* பெ.(n.) ஒன்பதுவகை இருக்கைகளுள் கால்களைக் குறுக்கிட்டு வைத்துக்கொண்டு உடல் நிமிர அமரும் ஒகஇருக்கை வகை; a yōgic posture symbolic of success, which consists in sitting with legs crosswise while the body is held erect and at case one of nine āsaṉam. *"சோத்திக மூருவுக்கு முழந் தாளுக்கு நடுவேயுள்ளந் தாட்டுணையைச் செலுத்தி யிறுமாந்திருத்தல்" (பிரபோத.44 : 7).*

*[Skt. svastika > த. சோத்திகம்.]*



**சோத்தியம்** *šōttiyam,* பெ.(n.) 1. வினா (நாஞ்.); question. 2. வியப்பு; surprise, astonishment, wonder. *'சோத்தியப்பட்டான்'.* 3. வியக்கத் தக்கது; wonderful or astonishing occurrence.

*[Skt. cōdya > த. சோத்தியம்.]*

**சோத்திரம்** *šōttiram,* பெ.(n.) 1. காது (பிங்.); ear . *"வாக்காதி சோத்திராதியும்" (தாயு. கருணா.2).* 2. கேள்வி (வின்.); hearing audience

*[Skt. šrōtra > த. சோத்திரம்.]*

**சோத்திரியர்** *šōttiriyar,* பெ.(n.) வேதப் பார்ப்பனர்; Brahmins versed in *Vēdas.* *"இத்தொழில்கொல் சோத்திரியர் செய்கை" (பிரபோத.11 : 65).*

*[Skt. šrōtriya > த. சோத்திரியர்.]*

**சோதகம்** *šōdagam,* பெ.(n.) 1. தூய்மை செய்கை(யாழ்.அக.); cleansing, purifying. 2. சோதனை; investigation, examination. 3. கழிக்குந் தொகை (யாழ்.அக.); minuend.

*[Skt. šōdhaka > த. சோதகம்.]*

**சோதகும்பம்** *šōdakumbam,* பெ.(n.) பார்ப்பனன் ஒருவனுக்குப் முன்னோர் பொருட்டுத் தண்ணீர் ஏனம் அளித்துப் புரியும் நினைவு சடங்கு; a ceremony in honour of the manes, in which a pot of water is given to a Brahmin.

*[Skt. sōdakumbha > த. சோதகும்பம்.]*

**சோதம்** *sōdam,* பெ.(n.) 1. தூய்மையான நீர்; clean or pure water. 2. வாலையிலிறக்கிய நீர்; distilled water. 3. வீக்கம்; swelling (சா.அக.).

**சோதரம்** *sōdaram,* பெ.(n.) உடன்பிறப்பு (யாழ்.அக.); relationship of persons born of the same parents, brotherhood: sisterhood .

*[Skt. sōdara > த. சோதரம்.]*

**சோதரன்** *sōdaraṉ,* பெ.(n.) உடன் பிறந்தவன்; uterine brother. *"தொந்திக் கணபதி மகிழ் சோதரனே" (திருப்பு.136).*

**த.வ. பிறவன்**

*[Skt. sōdara > த. சோதரன்.]*

**சோதரி** *sōdari,* பெ.(n.) உடன்பிறந்தவள்; uterine sister. *"மூர்க்ககுலத்தி விபீஷணன் சோதரி" (திருப்பு.136).*

**த.வ. பிறவி**

*[Skt. sōdarī > த. சோதரி.]*

**சோதரிமாதறம்** *šōdari-mādaṟam,* பெ.(n.) கன்னல் சருக்கரை; sugar prepared from the juice of sugarcane (சா.அக.).

**த.வ. பழுப்புச் சருக்கரை**

**சோதரை** *šōdarai,* பெ.(n.) **சோதரி** பார்க்க; see *šōdari* (சங்.அக.).

**சோதளங்காய்** *šōdaḷaṅgāi,* பெ.(n.) சமுத்திராப் பழம்; Indian oak (சா.அக.).

**சோதனகசாயம்** *šōdaṉa-kašāyam,* பெ.(n.) தூய்மை செய்யப் பயன்படும் குடிநீர்; disinfecting decoction (சா.அக.).

**த.வ. கருக்கு, வடிநீர், கியாழநீர்.**

*[சோதனம் + கசாயம்.]*

**சோதனகிருதம்** *šōdaṉa-kirudam,* பெ.(n.) தூய்மைப்படுத்தப் பயன்படும் மருந்து நெய்; disinfecting ghee (சா.அக.).

**த.வ. மருந்து நெய்மம்**

*[சோதனம் + கிருதம்.]*

**சோதனத்திரவியம்** *šōdaṉa-t-tiraviyam,* பெ.(n.) தூய்மை செய்யப் பயன்படுத்தும் ஆமணக்கெண்ணெய், அத்திப்பால், ஆலம் பால் முதலியன; drugs used to remove the impurities from the body (e.g.) castor oil, milky juice of fig, milky, juice of banian (சா.அக.).

**த.வ. வயிற்றுப்போக்கு மருந்து, கழிச்சல் மருந்து.**

*[சோதனம் + திரவியம்.]*

**சோதனதைலம்** *šōdaṉa-tailam,* பெ.(n.) தூய்மைப்படுத்தப் பயன்படும் மருந்து நெய்மம்; disinfecting oil (சா.அக.).

**த.வ. வயிற்றுப்போக்கு மருந்து, கழிச்சல் மருந்து.**

*[சோதனம் + தைலம்.]*

**சோதனப்பத்திரம்** *šōdaṉa-p-pattiram,* பெ.(n.) பிழை திருத்தக்குறிப்பு; table of errata (தற்.).

*[Skt. šōdhana+patra>த.சோதன பத்திரம்.]*

**சோதனப்பிரலேபனம்** *šōdaṉa-p-piralēbaṉam,* பெ.(n.) தூய்மை செய்யும் களிம்பு; disinfecting ointment (சா.அக.).

**த.வ. கழிச்சல் மருந்து**

*[சோதனம் + பிரலேபனம்.]*

**சோதனம்** *šōdaṉam,* பெ.(n.) 1. ஆராய்கை; examining, investigating (யாழ்.அக.). 2. மாழைகளின் தரத்தைச் ஆய்வு செய்கை; assaying metals. 3. மாழைகளைப் புடமிட்டுத் தூய்மை செய்கை; refining metals. 4. நற்குறி; omen, augury (பிங்.).

*[Skt. šōdhana > த. சோதனம்.]*

**சோதனவத்தி** *šōtaṉavatti,* பெ.(n.) துணியைத் திரித்து மருந்தில் நனைத்துப் புண்ணின் உட்புறத்தைத் தூய்மைப்படுத்த வேண்டிய இடத்திற்குள் நுழைக்கும் திரி (வத்தி); a lint soaked or saturated with medicine and inserted into an ulcer or sinus for the purification of interior-Aseptic plug (சா.அக.).

**த.வ. காரசீலை**

*[சோதனம் + வத்தி.]*

**சோதனாபிரதிகாலம்** *šōdaṉāpiradikālam,* பெ.(n.) சான்று உசாவலுக்காக வழக்கை ஒத்திவைக்கை; adjournment of a suit for examination of witnesses (சுக்கிரநீதி. 282).

**த.வ. ஒத்திவைப்பு**

*[சோதனம் + பிரதி+காலம்.]*

*[Skt. cōdanā+prati+> த. சோதனாபிரதி]*

**சோதனி** *šōdaṉi,* பெ.(n.) 1. துடைப்பம்; broom, besom, brush (பிங்.). *"முன்றில் சோதனி கொண்டு துடைத்து" (சேதுபு. மங்கல.40).* 2. செத்தை (சூடா.); dry rubbish, decayed vegetable matter.

**த.வ. விளக்குமாறு; பெருக்குமாறு; வாரியல்**

*[Skt. šōdhanī > த. சோதனி.]*

**சோதனை[1]** *šōdaṉai,* பெ.(n.) 1. தேர்வு; examination, inspection, trial. *"பொற்றோள் வலி நிலைசோதனை புரிவானசை யுடையேன்" (கம்பரா.பரளசுரா.18).* 2. தெய்வ ஆய்வுத் தேர்வு; divine trial. 3. ஆராய்ச்சி; sifting, search, investigation. 4. தீமை செய்தவற்குத் தூண்டுகை; temptation. 5. மாழைகளின் தரத்தைச் ஆய்வு செய்கை (வின்.); assaying metals. 6. ஒரு முகத்தலளவு; a kind of measure (j.).

**த.வ. நோட்டம்**

*[Skt. šōdhanā > த. சோதனை.]*

**சோதனை[2]** *šōdaṉai,* பெ.(n.) கழிச்சல் மருந்து; purgative (இ.வ.).

*[Skt. cōdanā > த. சோதனை.]*

**சோதனை[3]** *šōdaṉai,* பெ.(n.) குறிப்பு; direction, hint. *"என்றன் சோதனை நோக்கிச் செய்தி" (கம்பரா.இராவணன் வதை.6).*

*[Skt. cōdanā > த. சோதனை.]*

**சோதனைக்கம்பி** *šōdaṉai-k-kambi,* பெ.(n.) பொன் மாற்றுகளை அறிவதற்கான கம்பிகள் அல்லது ஆணிகள்; a bunch of touch nails for finding out the different standards in the fineness of gold as carets (சா.அக.).

**த.வ. உரைக்கம்பி**

*[சோதனை + கம்பி.]*

*[Skt. šōdhaṉā > த. சோதனை.]*

**சோதனைக்கருவி** *šōdaṉai-k-karuvi,* பெ. (n.) ஆய்வு செய்யப் பயன்படும் கருவிகள்; articles or instruments used while examining such as probe, specula, catheter, stethescope etc. (சா.அக.).

**த.வ. ஆய்வுக்கருவி**

*[சோதனை + கருவி.]*

*[Skt. šōdhana > த. சோதனை]*

**சோதனைக்கல்** *šōdaṉai-k-kal,* பெ.(n.) உரைகல்; touch stone (சா.அக.).

**த.வ. கட்டளைக்கல்**

*[சோதனை + கல்.]*

*[Skt. šōdhana > த. சோதனை]*

**சோதனைக்கனம்** *šōdaṉai-k-kaṉam,* பெ. (n.) நோய்களை ஆய்வு செய்யப் பயன்படும் ஆயுள் வேதத்திற் கூறிய பொருட்கள்; drugs used for investigation of diseases (சா.அக.).

**த.வ. ஆய்வுக்கனம்**

*[சோதனை + கனம்.]*

*[Skt. šōdhana > த. சோதனை]*

**சோதனைக்காரன்** *šōdaṉaikkāraṉ,* பெ.(n.) ஆய்வு செய்பவன்; one who examines or investigates into anything testor or examiner (சா.அக.).

**த.வ. நோட்டகன், ஆய்வாளன்**

*[சோதனை + காரன்.]*

*[Skt. šōdhana > த. சோதனை]*

**சோதனைக்குரு** *šōdaṉai-k-kuru,* பெ.(n.) **சோதனையுப்பு** பார்க்க; see *šōdaṉai-y-uppu* (சா.அக.).

**சோதனைக்குழல்** *šōdaṉai-k-kuḻal,* பெ.(n.) மருந்தை ஆய்வு செய்யப் பயன்படுத்தும் ஒரு கண்ணாடிக் குழாய்; a test tube for testing medicine or other chemicals (சா.அக.).

**த.வ. ஆய்வுக்குழாய்**

*[சோதனை + குழல்.]*

*[Skt. šōdhana > த. சோதனை]*

**சோதனைக்கோல்** *šōdaṉai-k-kōl,* பெ.(n.) 1. அறுவை மருத்துவன் பயன்படுத்தும் வெள்ளி அல்லது செம்பினாற் செய்த குத்தூசி; surgeons instrument or needles or thin rod made of silver or copper usually for examining the depth of sinus-probe.

2. மாத்திரைக்கோல்; measuring rod. 3. பொன்னின் தரத்தை அறியப் பயன்படுத்தும் கம்பி; gold wire or rod used for testing gold (சா.அக.).

த.வ. மாழைக்கோல்

*[சோதனை + கோல்.]*

*[Skt. šōdhana > த. சோதனை]*

**சோதனைகொடு-த்தல்** *šōdaṉai-koḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. நோயாளிகள் தங்களை மருத்துவரிடத்தில் காண்பித்தல்; submitting oneself as a patient for diagnosis (சா.அக.). /2. ஆய்வு செய்தல்; to be examined, to undergo examination. 3. தேர்வில் தேறுதல்; to pass examination as candidates (சா.அக.).

த.வ. ஆய்வுக்குட்படுத்தல், நோய்க்குறி ஆய்வு.

*[சோதனை + கொடு-.]*

*[Skt. šōdhana > த. சோதனை]*

**சோதனைச்சாலை** *šōdaṉai-c-cālai,* பெ.(n.) தொழில் வகைகளிலும், மருத்துவ முறையிலும் பயன்படுத்தப்படும் மருந்துகளை ஆய்வு செய்யுமிடம்; a building set a part for examined or testing medicines and other chemicals used in arts and industries (சா.அக.).

த.வ. ஆய்வுச்சாலை

*[சோதனை + சாலை.]*

*[Skt. šōdhana > த. சோதனை]*

**சோதனைசாபிதா** *šōdaṉai-šābidā,* பெ.(n.) உசாவல் அதிகாரிகள் பிறரிடமிருந்து கையகப்படுத்திய பொருள்களின் குறிப்பு; search list (தற்.).

த.வ. கைப்பற்றற்குறிப்பு

*[Skt. šōdhana+ U. jābitā> த.சோதனைசாபிதா.]*

**சோதனைசெய்தல்** *šōdaṉaiceydal,* தொ.பெ. (vbl.n.) 1. ஆய்வு செய்யல்; examination. 2. நாடி, மலம், சிறுநீர் இவற்றை ஆய்வு செய்தல்; examination of pulse, feaces, urine etc, for purpose sputum of diagonising the diseases (சா.அக.).

த.வ. கூர்நோக்கு

*[சோதனை + செய்தல்.]*

*[Skt. šōdhana > த. சோதனை]*

**சோதனைத்திரி** *šōdaṉai-t-tiri,* பெ.(n.) கருவை அழிக்கப் பயன்படுத்தும் காரத்திரி; corrusive lint used, to insert into the vagina of females for aborting the child or foetus in the womb (சா.அக.).

த.வ. காரச்சீலைத்திரி

*[சோதனை + திரி.]*

**சோதனைநாழி** *šōdaṉai-nāḻi,* பெ.(n.) திட்டமான முகத்தலளவைக் கருவி; a standard measure of capacity.

த.வ. அளவுக்கருவி

*[சோதனை+நாழி]*

*[Skt. šōdhana > த. சோதனை.]*

**சோதனைநூல்** *šōdaṉai-nūl,* பெ.(n.) மருந்துகளின் ஆய்வைப் பற்றிக் கூறும் நூல்; experimental science (சா.அக.).

*[சோதனை + நூல்.]*

*[Skt. šōdhana > த. சோதனை]*

**சோதனைபண்ணு-தல்[1]** *šōdaṉaipaṇṇu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. ஆராய்ந்து பார்த்தல்; to examine, sift, scrutinise, search, try. 2. வறுமை முதலியவற்றால் மக்களின் மனநிலையை ஆய்வு செய்தல்; to test the sincerity or integrity of a person by adversity, affliction or other means.

த.வ. ஆய்வுச்செய்தல்

*[சோதனை+பண்ணு-]*

*[Skt. šōdhana+>த.சோதனை]*

**சோதனைபண்ணு-தல்**[2] *šōdaṉaipaṇṇu-,* 5 செ. குன்றாவி (v.t.) 1. பெண்ணின் கற்பை சோதித்து அறிதல்; testing the virginity of woman. 2. கரு உண்டானதை உறுதி செய்தல்; determinirg the pregnancy of woman. 3. கடவுள், ஒருவன் மனத்தை துன்பத்திற்கும், நேர்மைக்கும் ஆளாக்கி அவன் மன நிலையைத் தெரிவு செய்தல்; testing of men by god as regards his integrity or mental state in adversity (சா.அக.).

**த.வ. கூர்ந்தாய்வு செய்தல்**

*[சோதனை + பண்ணு-தல்]*

*[**Skt.** šōdhana > த. சோதனை]*

**சோதனைபார்-த்தல்** *šōdaṉai-pār-,* 4 செ. குன்றாவி.(v.t.) **சோதனைபண்ணு** பார்க்க; see *šōdaṉai-paṇṇu-.*

*[சோதனை+பார்த்தல்]*

*[**Skt.** šōdhanai > த.சோதனை]*

**சோதனைமை** *šōdaṉai-mai,* பெ.(n.) 1. நிலத்திற்குள் இருக்கும் செல்வத்தைத் தெரிவு செய்யப் பயன்படும் மாயமை; a magic paint used as a collyrium for the eyes for ascertaining the hidden treasure. 2. வசியமை; a magic paint used for fascinating or captivating women for illegal intercourse (சா.அக.).

**த.வ. ஆய்வுமை**

*[சோதனை + மை]*

*[**Skt.** šōdhanai > த. சோதனை]*

**சோதனையுப்பு** *šōdaṉai-y-uppu,* பெ.(n.) 1. பொன்னாக்க முறையில், இழிந்த மாழைகளைப் பொன்னாக மாற்றும் வகையை ஆய்வு செய்யப் பயன்படும் குரு மருந்து; quintessence salt used in Alchemy for testing the transmution of metals into gold (சா.அக.).

**த.வ. ஆய்வுக்குருமருந்து**

*[சோதனை + உப்பு]*

*[**Skt.** šōdhanai > த. சோதனை]*

**சோதா**[1] *šōdā,* பெ.(n.) 1. சோம்பேறி, குறைந்த தகுதியுடையவன்; lazy fellow. 2. கண்டபடி திரிபவன்; vagabond. 3. வலுக்குறைந்தவன்; weak person. 4. ஒன்றுக்கும் உதவாதவன்; useless person.

*[H. shuhda > த. சோதா]*

**சோதா**[2] *šōdā,* பெ.(n.) உசாவல்; trial, examination, inquiry (P.T.L.).

*[**Skt.** šōdhā > த. சோதா.]*

**சோதி-த்தல்**[1] *šōdi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. உசாவுதல்; to search, make research into, inquire, investigate, examine. *'நியாயசபையில் என்னைச் சோதித் தாய்விட்டது' (இ.வ.).* 2. ஆய்தல்; to sift as rice, test, experiment, assay, scrutinise, probe. *"சோதியுனைச் சோதிக்கத் துணிந்தேன்" (திருவிளை. நான்மாட.22).* 3. தூய்மை செய்தல்; to cleanse. *'அமுது படைக்கும் இலையைச் சோதித்த பின் இடுக'.* 4. **சோதனை பண்ணு-தல்** பார்க்க; see *sōdaṉaipaṇṇu-.* 5. தீமை செய்வதற்குத் தூண்டுதல் (கிறித்.); to tempt, incite.

*[**Skt.** sōdhā > த. சோதி]*

**சோதி-த்தல்**[2] *šōdi-,* 4 செ.குன்றாவி.(v.t.) விளக்கமுறுதல் (வின்.); to be splended, lustrous.

*[**Skt.** jyōtis > த. சோதி]*

**சோதி-த்தல்**[3] *šōdi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. நோயாளியை ஆய்வுக்குட்படுத்துதல்; examining a patient. 2. **சோதனைசெய்தல்** பார்க்க; see *šōdaṉaiseydal* (சா.அக.).

**சோதி**[1] *šōdi,* பெ.(n.) 1. ஒளி; light, splendour, lustre, brilliancy, effulgence. *"அருக்கனிற் சோதியமைத்தோன்" (திருவாச.3, 20).* 2. ஒளிக்கதிர்; ray or streak of light (சூடா.). 3. விளக்கு; lamp, torch (சூடா.). 4. தீ; fire

(பிங்.). 5. கதிரவன்; sun (பிங்.). 6. விண்மீன்; star. 7. கடவுள்; the supreme being (பிங்.). 8: சிவன்; *Śiva* (அக.நி.). 9. அருகன்; arhat (அக.நி.). 10. பூநாகம், மண்புழு; ground-worm.

*[Skt. jyōtis > த. சோதி.]*

**சோதி[2]** *sōdi,* பெ.(n.) 1. கருப்பூரம்; camphor. 2. சாதி லிங்கம்; virmilion. 3. கற்றாழை; aloes.

**சோதி[3]** *sōdi,* பெ.(n.) சுவர் முதலியவற்றில் காணும் வெடிப்பு (வின்.); crack in walls, dams or banks.

*[Skt. chēda > த. சோதி.]*

**சோதிக்குண்மணி** *sōdi-k-kunmani,* பெ.(n.) வெள்ளொளியால் சூழ்ந்த முத்து மணி; pearl as having bright white lustre.

*[சோதிக்கு+உள்+மணி]*

*[Skt. jyōti-k-kun > த. சோதிக்குண்]*

**சோதிக்குருடு** *śōdi-k-kurudu,* பெ.(n.) ஒகநிலை அல்லது ஊழ்கத்திற் காணும் ஒளியினால் அச்சமயத்தில் ஏற்படும் குருட்டுத்தனம்; temporary blindness due to the seeing of Astrual light (சா.அக.).

*[சோதி + குருடு.]*

*[Skt. jyotis > த. சோதி]*

**சோதிக** *śōdiga,* பெ.(n.) பேரொளி; brillancy (சா.அக.).

த.வ. மிகு வெளிச்சம்

**சோதிகலை** *śōdikalai,* பெ.(n.) சந்திரகலை; the vital air passing through the left nostril (சா.அக.).

*[சோதி + கலை]*

**சோதிகவாரி** *śōdikavāri,* பெ.(n.) புளி நறணை; fox grape (சா.அக.).

*[சோதிகம் + வாரி.]*

**சோதிகாந்தம்** *śōtikāndam,* பெ.(n.) சித்திர மூலம்; lead wort (சா.அக.).

*[சோதி + காந்தம்]*

**சோதிகாவிரணம்** *śōdikā-viranam,* பெ.(n.) **சோதியில்விரணம்** பார்க்க; see *śōdiyilviranam* (சா.அக.).

**சோதிச்சக்கரம்** *śōdi-c-cakkaram,* பெ.(n.) 1. வானவட்டம் (வின்.); the starry firmament. 2. முனைவட்டம், துருவசக்கரம் (யாழ்.அக.); polar circle.

*[சோதி+சக்கரம்]*

*[Skt.jyōtis>த. சோதி]*

**சோதிசம்பாதம்** *śōdi-sambādam,* பெ.(n.) விளக்கு (சுவாதி) விண்மீனும் கதிரவனும் கூடும் தீ நாள் (விதான.அரசர்.10); the conjunction of the star *svāti* and the sun, considered inauspicious.

*[Skt.svāti-sambādam>த. சோதிசம்பாதம்.]*

**சோதிசாத்திரம்** *śōdi-śāttiram,* பெ.(n.) வானவியல்; astronomy (தற்.).

*[சோதி + சாத்திரம்]*

*[Skt. jyōti > த. சோதி]*

**சோதிசு** *śōdicu,* பெ.(n.) பேரொளி; brilliancy (சி.சி.8, 21, சிவாக்.).

*[Skt. jyōtis > த. சோதிசு]*

**சோதிட்டுமகம்** *śōtittu-magam,* பெ.(n.) **சோதிட்டோமம்** பார்க்க; see *śōtittōmam.*

*[Skt. jyōtiṣṭōma > த. சோதிட்டுமகம்]*

**சோதிட்டோமம்** *śōtittōmam,* பெ.(n.) சோமவேள்வி வகை; a kind of *sōma* sacrifice (பிங்.அக.).

*[Skt. jyōtistōma > த. சோதிட்டோமம்]*

**சோதிடங்கொள்(ளு)-தல்** *śōdidań-kol-,* செ.கு.வி.(v.i.) கணியம் சொல்லுதலைப் பொருந்துதல்; to act the part of an astrologer, to foretell events. *"சோதிடங்*

கொண்டி தெம்மைக் கெடுவித்தது" (திருக்கோ.138).

[சோதிடம் + கொள்(ளு)-]

[Skt. Jyōtiṣa > த. சோதிடம்]

**சோதிடசாத்திரம்** *šōdiḍa-cāttiram,* பெ.(n.) **சோதிடநூல்** பார்க்க; see *šōdiḍa-nūl.*

**த.வ. கணியநூல்**

**சோதிடத்தேவர்** *šōdiḍa-t-tēvar,* பெ.(n.) ஒரு சார் தேவ குலத்தார் (jaina.); a class of gods. *"வாய்தல் சோதிடத்தேவர்காப்ப" (மேருமந். 1060).*

[சோதிடம் + தேவர்]

[Skt. jyōtiṣa > த. சோதிடம்]

**சோதிடநூல்** *šōdiḍa-nūl,* பெ.(n.) 1. வான வியல்; astronomy. *"சோதிட நூலார் இங்ஙனம் கூறுப" (சீவக.532, உரை).* 2. கோள்களின் நன்மை தீமைகளை அறிவிக்கும் நூல்; astrology.

**த.வ. கணியநூல்**

[சோதிடம் + நூல்]

[Skt. Jyōtiṣa > த. சோதிடம்]

**சோதிடபீடிதம்** *šōdiḍa-pīḍidam,* பெ.(n.) கணிய நூற்படி ஒருவனை நோய் வந்து அணுகுதல்; as per astrology one who attacked by the disease.

[சோதிடம் + பீடிதம்]

**சோதிடம்**[1] *šōdiḍam,* பெ.(n.) 1. **சோதிடநூல்** பார்க்க; see *šōdiḍa-nūl. "சத்தமுஞ் சோதிடமும்" (நாலடி, 52).* 2. நிமித்தம்; omen (பிங்.).

[Skt. jyōtiṣa > த. சோதிடம்]

**சோதிடம்**[2] *šōdiḍam,* பெ.(n.) 1. வானநூல்; astronomy. 2. நாடிநூல்; astrology (சா.அக.).

**சோதிடம்பார்–த்தல்** *šōdiḍam-pār-,* 4 செ.கு.வி. (v.t.) கணியநூல் பார்த்துப் பயனை அறிதல்; to consult astrology.

**த.வ. கணியம்பார்த்தல்**

[சோதிடம்+பார்–]

[Skt. jyōtiṣa+ > த. சோதிடம்]

**சோதிடர்** *šōdiḍar,* பெ.(n.) 1. கணியன்; astrologer. 2. திங்கள் (சந்திரன்), கதிரவன் கோள்கள் விண்மீன் முதலிய வானக மண்டலங்கள்; the heavenly bodies. *"சுடர்பவருஞ் சோதிடரே" (சூளா.துறவு.206).*

**த.வ. கணியர்**

[Skt. jyōtiṣa > த. சோதிடர்]

**சோதிடவர்** *šōdiḍavar,* பெ.(n.) **சோதிடர்** பார்க்க; see *šōdiḍar. "சோதிட வருடனே கூட்டி நல்ல நாளிலே குடையைப் புறவீடு விட்டான்" (பு.வெ.4, 8, உரை).*

**த.வ. கணியன்**

[Skt. jyōtiṣa > த. சோதிடவர்]

**சோதிடவாதம்** *šōdiḍa-vādam,* பெ.(n.) வான மண்டலங்களையே தெய்வமாகக் கருதி வழிபடுங் கொள்கை (வின்.); a religious system which regards the heavenly bodies as the supreme being (w.).

**த.வ. கணியக்கொண்முடிபு**

[Skt. jyōtiṣa+vāda > த. சோதிடவாதம்]

**சோதிடோப்பரிகை** *šōdiḍōpparigai,* பெ.(n.) கோள்கள் மற்றும் விண்மீன்களின் இயக்கங்களை ஆராய்தற்கு உதவியாகக் கட்டப்பட்டிருக்கும் உயரமான அரண்; observatory.

**த.வ. ஆய்வரண்**

[சோதிடம் + உப்பரிகை]

[Skt. jyōtiṣa>த. சோதிடம்.]

**சோதிதம்** *šōdidam,* பெ.(n.) 1. ஆய்வு செய்யப்பட்டது; that which has been examined or reviewed. *"சோதித தற்பதார்த்தம்" (வேதா.சூ.119).* 2. கழிக்கப் பட்டது (கணி.); subtrahend (math.).

[Skt. šōdhita > த. சோதிதம்.]

**சோதிதனம்** *šōditaṉam,* பெ.(n.) விடரியம், ஒன்பான் மணிகளுள் ஒன்று; cat's eye, one of the nine gems (சா.அக.).

**த.வ. பூனைக்கண்மணி**

**சோதிநாயகன்** *šōdi-nāyagaṉ,* பெ.(n.) **சோதியன்** பார்க்க (யாழ்.அக.); see *šōdiyaṉ.*

*[Skt. jyōtis-nāyagaṉ>த. சோதிநாயகன்.]*

**சோதிநாள்** *šōdi-nāḷ,* பெ.(n.) **சோதி**[4] பார்க்க (பிங்.); see *šōdi*[4].

*[Skt. svātī > த. சோதிநாள்.]*

**சோதிநிகரம்** *šōdi-nigaram,* பெ.(n.) அரச மரம்; peepal tree (சா.அக.).



**சோதிநிமிளை** *šōdinimiḷai,* பெ.(n.) அஞ்சனக் கல்; sulphuret of antimony so called from its being used in works (சா.அக.).

*[சோதி + நிமிளை.]*

**சோதிநீச்சடம்** *šōdi-nīccaḍam,* பெ.(n.) முத்துச் சிப்பி; pearl oyster (சா.அக.).

*[Skt. svatī-nīccaḍam>த. சோதிநீச்சடம்.]*



**சோதிநூல்** *šōdinūl,* பெ.(n.) **சோதி சாத்திரம்** பார்க்க; see *šōdi-sāttiram.* *"சோதிநூ லறிஞருந் துணுக்க மெய்துவார்" (சேதுபு. கந்தமா.17).*

**த.வ. கணியநூல்**

*[சோதி + நூல்.]*

*[Skt. jyōtis > த. சோதி]*

**சோதிநெறி** *sōdi-neṟi,* பெ.(n.) கண்ணில் கிளைகள் பல கிளம்பி, மூன்றாம் நாளில் மறைந்து, நாளுக்கு நாள் கிளைத்து, பல இன்னல்களை உண்டு பண்ணும் ஒரு நோய்; form of conjunctivitis attended with a number of granulations which disappear on the third day and reappear gradually giving rise to many health hazards (சா.அக.).

**த.வ. கண்கட்டிநோய்**

*[சோதி + நெறி.]*

*[Skt. jyōtis > த. சோதி]*

**சோதிப்பிழம்பு** *šōdi-p-piḻambu,* பெ.(n.) ஒளித் திரட்சி; bundle of rays, shaft of light.

*[சோதி+பிழம்பு]*

*[Skt. jyōtis > த. சோதி]*

**சோதிப்புல்** *šōdippul,* பெ.(n.) இரவில் எரியும் புல்; luminous grass it is known by different names as brilliant grass, fire grass etc. (சா.அக.).

**த.வ. காந்திப்புல், தீப்புல்**

*[சோதி + புல்.]*

*[Skt. jyōtis > த. சோதி]*

**சோதிப்பூநாகம்** *šōdi-p-pūnāgam,* பெ.(n.) கருப்பூரம்; camphor (சா.அக.).

*[சோதி + பூ + நாகம்.]*

**சோதிம்பம்** *šōdimbam,* பெ.(n.) வாலுளுவை; spindle tree (சா.அக.).

**சோதிமண்டலம்** *šōdi-mandalam,* பெ. (n.) 1. ஒளி வட்டம்; halo of light. *"சோதிமண்டலத் தோன்றுவ துளதேல்" (பெருந்தொ.161).* 2. கோள்கள் மற்றும் விண் மீன்களுக்கு இடமான வானவட்டம் (வின்.); starry firmament.

*[சோதி+மண்டலம்]*

*[**Skt.** jyōtis > த. சோதி]*

**சோதிமணி** *šōdimani,* பெ.(n.) முத்து; pearl (சா.அக.).

**த.வ. வெண்மணி**

*[சோதி + மணி.]*

*[**Skt.** jyōtis > த. சோதி]*

**சோதிமத்தி** *šōdimatti,* பெ.(n.) முடக்கற்றான்; balloon vine, Palsy curer - cardio spermum (சா.அக.).

**சோதிமயம்**[1] *šōdimayam,* பெ.(n.) 1. ஒளி வடிவு; body of light (சங்.அக.). 2. **சோதியம்** பார்க்க; see *šōdiyam* (மலை.).

*[**Skt.** jyōtirmaya > த. சோதிமயம்.]*

**சோதிமயம்**[2] *šōdimayam,* பெ.(n.) வாலுளுவை; spindle tree celastrus paniculata (சா.அக.).

**சோதிமரம்** *šōdi-maram,* பெ.(n.) **சோதி விருட்சம்** பார்க்க (நாஞ்.நா.); see *šōdi-virutcam.*

*[சோதி+மரம்]*

*[**Skt.** jyōtis > த. சோதி]*

**சோதிமா** *šōdi-mā,* பெ.(n.) **சோதிவிருட்சம்** பார்க்க (மலை.); see *šōdi-virutcam* (m.)

*[**Skt.** jyōtis > த. சோதிமா.]*

**சோதிமின்னல்** *šōdi-minnal,* பெ.(n.) கதிரவன் விளக்கு (சுவாதி) விண்மீனில் புகும்பொழுது மழைக்கு அறிகுறியாகக் கிழக்கே தோன்றும் மின்னல் (வருஷாதி.212); lightning in the east when the sun enters *svāti naksatra,* believed to indicate rain.

**த.வ. ஈழமின்னல்**

*[சோதி+மின்னல்]*

*[**Skt.** svāti > த. சோதி]*

**சோதிமுனி** *šōdimuni,* பெ.(n.) இவர் பிரமரிசிக்கும் மறவர் குலப் பெண்ணுக்குப் பிறந்த ஒரு சித்தர்; a Siddhar who is the son of the son of Brahmarishi. (சா.அக.).

*[சோதி + முனி.]*

*[**Skt.** svāti > த. சோதி]*

**சோதியட்சரம்** *šōdiyatcaram,* பெ.(n.) குழந்தைகளுக்கு வாய்வெந்து நாக்கும் பல்லும் நிறமாறி முதுகும் வயிறும் எரிச்சல் கண்டு, காய்ச்சலுடன், குமட்டலுடன் கழிச்சலும் உண்டாகும் ஒரு நோய்; a kind of stomatitis in children marked by inflammation of the mouth discolouration of tongue and teeth, burning sensation in the stomach, and on the back, fever and diarrhoea stomatitis scorbutica (சா.அக.).

**த.வ. அச்சரம்**

*[சோதி + அட்சரம்.]*

**சோதியம்** *šōdiyam,* பெ.(n.) வாலுளுவை; climbing staff plant (மலை.).

**சோதியமயவேதி** *šōdiyamaya-vēdi,* பெ.(n.) நாங்கூழ்; earth worm (சா.அக.).

**த.வ. நாக்குப்பூச்சி, மண்புழு**

*[சோதியம் + மயம் + வேதி.]*

**சோதியன்** *šōdiyan,* பெ.(n.) ஒளி வடிவான கடவுள்; god, as radiant. *"யாவையுமா யல்லையுமாஞ் சோதியனே" (திருவாச.1, 72).*

**த.வ. சுடரோன்**

*[**Skt.** jyōtis > த. சோதியன்.]*

**சோதியான்** *šōdiyān,* பெ.(n.) கதிரவன் (ஒளிப் பிழம்பானவன்); the sun, as luminous. *"சோதியான் மகனும்" (கம்பரா. திருமுடி.34).*

த.வ. பகலவன்

*[Skt. jyōtis > த. சோதியான்.]*

**சோதியில்விரணம்** *šōdiyil-viraṇam,* பெ.(n.) வெள்விழி, கருவிழியெங்கும் பூவுண்டாக, நீர் வடிந்து, கண் விழிக்க முடியாமல், கூசி, நடுவிழியில் நண்டின் கண்ணைப் போல் சிறியதாய்த் துருத்திக் கொண்டிருக்கும் ஒரு கண் நோய்; protrusion of cornea caused by the cornea losing its transparency by the formation of cataract and projecting beyond the eye-lid like crabs eye (சா.அக.).

*[சோதியில் + விரணம்.]*

**சோதியொளி** *šōdiyoḷi,* பெ.(n.) விட்டுணு காந்தி என்னும் மூலிகை; a medicinal plant (சா.அக.).

*[சோதி + ஒளி.]*

*[Skt. jyōti > த. சோதி]*

**சோதியொளிதீபம்** *šōdiyoḷi-dībam,* பெ.(n.) தூதுவளை; three lobed night shade-*Solanum trilobatum* (சா.அக.).

*[சோதி + ஒளி + தீபம்.]*

*[Skt. jyōti > த. சோதி]*



**சோதிர்லோகம்** *šōdir-lōgam,* பெ.(n.) எழுவகை உலகங்களுள் ஒன்று (திருக்கலம். 6, உரை); (Jaina.) one of the seven worlds.

*[சோதி + உலகம்.]*

*[Skt. jyōtir > த. சோதிர்]*

**சோதிரவிமாலி** *šōdiravimāli,* பெ.(n.) அத்தினி குலப்பெண்; one of the four classes of women divided according to lust (சா.அக.).

**சோதிராங்கம்** *šōdirāṅgam,* பெ.(n.) எல்லா ஒளியையும் அடக்கும் ஒளியை வீசு தெய்வமரம்; a *kalpataru* whose splendour casts all other bright objects into shade (தக்கயாகப்.757, குறிப்பு).

*[Skt. jyōtirāṅga > த. சோதிராங்கம்.]*

**சோதிராத்திரி** *šōdi-rāttiri,* பெ.(n.) நடு இரவு; mid night.

த.வ. நள்ளிரவு

*[Skt. šōti+rāttiri > த. சோதிராத்திரி.]*

**சோதிரி** *šōdiri,* பெ.(n.) கணியளஞ் சொல்லுபவன் (நாஞ்.); astrologer.

த.வ. கணியன்

*[Skt. jōtiṣa >த.சோதிரி.]*

**சோதிரிசித்தைலம்** *sōdiriši-t-tailam,* பெ.(n.) எல்லா வலிப்புகளுக்கும் பயன்படும் ஒரு வகை நெய்மம்; this is an oil used for all kinds of convulsions (சா.அக.).

த.வ. வலிப்பெண்ணெய்

**சோதிவிரணம்** *šōdi-viraṇam,* பெ.(n.) கண்ணின் கருவிழிக்கு நடுவ (மைய)த்தில் அமைந்த ஒளிக்குக் காணும் ஒரு புண்; ulceration in the central part of area of the retina attended with the affection of the vision. 2. கண்ணில் பூ விழுந்து நீர் வடிதல்; ulcer in the eye marked by watery discharge and protrusion of that part of the eye. It then looks like crab's eye.

த.வ. கண்பூ

**சோதிவிருட்சம்** *šōdiviruṭcam,* பெ.(n.) இரவில் ஒளியுடன் விளங்குவதாகக் கருதப் படும் மரவகை; a tree said to shine in the dark (யாழ்.அக.).

த.வ. ஒளிமரம்.

*[Skt. jyoti+vrkṣa > த. சோதிவிருட்சம்]*

**சோதிவிழு–தல்** *šōdi-viḻu-,* 2. செ.கு.வி.(v.i.) பிளவு ஏற்படல்; to be cracked, dimpled.

*[சோதி+விழு–.]*

*[Skt. chēda > த. சோதி]*

**சோதினி** *šōdiṉi,* பெ.(n.) **சோதனி** பார்க்க; see *šōdaṉi* (திவா.).

*[Skt. šōdhanī > த. சோதினி.]*

**சோதிசம்** *šōdiṣam,* பெ.(n.) **சோதிடம்** பார்க்க; see *šōdiḍam.*

*[Skt. jyōtiṣa > த. சோதிசம்.]*

**சோதிசாதிவிதை** *šōdisādi-vidai,* பெ.(n.) வாலுளுவை அரிசி; seeds of spendle tree, *Celastrus paniculata* (சா.அக.).

**சோதை** *šōdai,* பெ.(n.) சங்கினி குலப் பெண்; one of the four classes of women divided according to lust (சா.அக.).

**சோந்திரியம்** *šōndiriyam,* பெ.(n.) **சுதந்திரம்** பார்க்க; see *sudandiram.*

**சோப்தார்** *šōptār,* பெ.(n.) அரிக்காரன்; mace-bearer, attendant carrying a staff.

த.வ. மெய்க்காப்பாளன்

*[U. cōbdār > த. சோப்தார்.]*

**சோப்பம்** *šōppam,* பெ.(n.) **சோபம்**[1] **1, 5** பார்க்க (வின்.); see *šōbam*[1] *1, 5.*

*[Skt. kṣōbha > த. சோப்பம்.]*

**சோப்பு** *šōppu,* பெ.(n.) வழலைக்கட்டி; soap.

*[E. soap > த. சோப்பு.]*

த.வ. சவர்க்காரம்

**சோபக்கழிச்சல்** *šōbakkaḻiccal,* பெ.(n.) உடல் வலுவற்று, களைப்போடு கூடிய கழிச்சல்; diarrhoea followed by weakness and exhaustion (சா.அக.).

த.வ. களைப்புக்கழிச்சல்

*[சோபம் + கழிச்சல்.]*

*[Skt. ṣōbha > த. சோபம்]*

**சோபக்கிராணி** *šōbakkirāṇi,* பெ.(n.) வலிமைக் குறைவு, சோர்வு இவற்றை யுண்டாக்கும் கழிச்சல்; a chronic diarrhoea attended with weakness and exhaustion (சா.அக.).

த.வ. களைப்புக்கழிச்சல்

**சோபக்கினம்** *šōbakkiṉam,* பெ.(n.) வீக்கத்தைத் தணிக்கும் செயல்பாடு; a treatment having for its object alleviation of swelling (சா.அக.).

**சோபக்கினி** *šōbakkiṉi,* பெ.(n.) நில வேம்பு; ground neem (சா.அக.).

**சோபகிருது** *šōbakirudu,* பெ.(n.) ஆண்டு வட்டம் அறுபதனுள் முப்பத்தேழாவது ஆண்டு; the 37th year of the jupiter cycle.

*[Skt. šōbhakṛt > த. சோபகிருது.]*

**சோபகுஞ்சி** *šōbakuñji,* பெ.(n.) கருஞ்சீரகம்; black cumin (சா.அக.).

**சோபங்கொள்ளல்** *šōbaṅ-koḷḷal,* பெ.(n.) மயக்கம் அடைதல்; getting swooned or fainted (சா.அக.).

*[சோபம் + கொள்ளல்.]*

*[Skt. ṣōbha > த. சோபம்]*

**சோபசுரம்** *šōbašuram,* பெ.(n.) 1. வலிமைக் குறைவு, தளர்ச்சி இவற்றை யுண்டாக்கும் காய்ச்சல்; fever marked by weakness, fatigue and fainting. 2. மயக்கத்தை உண்டுபண்ணும் மிகுதியான காய்ச்சல்; high fever causing faintness or swooning - *Hyper pyrexia* (சா.அக.).

*[சோபம் + சுரம்.]*

*[Skt. ṣōbha > த. சோபம்]*

**சோபதி** *šōbaḍi,* பெ.(n.) தோழன்; companion, comrade. *உன் சுற்றுச் செலவில் கூடவரும் சோபதிகள் எத்தனை பேர் (இ.வ.).*

த.வ. பாங்கன்

*[H. suhbati > த. சோபதி.]*

**சோபந்தெளி-தல்** *šōbanteḷi-,* 2 செ.கு.வி. (v.i.) மயக்கத்தினின்று தெளிதல்; to recover from swoon (சா.அக.).

*[சோபம் + தெளி-.]*

*[**Skt.** sōbha > த. சோபம்]*

**சோபநசினி** *šōbanašiṉi,* பெ.(n.) இடக்கை; left hand (சா.அக.).

**சோபநாசினி** *šōbanāšiṉi,* பெ.(n.) கழற் கொடி; *bonduc* creeper (சா.அக.).

த.வ. கழற்சிக்காய்க்கொடி

*[சோபம் + நாசினி.]*

**சோபநித்திரை**[1] *šōba-nittirai,* பெ.(n.) 1. அயர்ந்த தூக்கம்; sound sleep. 2. மயக்கத்தோடு கூடிய தூக்கம்; sleep as a result of fainting. 3. மயக்குத் தூக்கம்; hypnotic sleep. 4. சோம்பலினால் உறங்குதல்; sleep through drowsiness. 5. நோயின் களைப்பினால் அடிக்கடி உண்டாகும் தூக்கம்; sleep recurring after paroxysm in diseases - *Paroxysmal sleep* (சா.அக.).

த.வ. ஆழ்துயில்

*[**Skt.** ksōbha+nidra > த. சோபநித்திரை]*

**சோபநித்திரை**[2] *šōba-nittirai,* பெ.(n.) கலவி முடிந்தவுடன் நிகழும் அயர்ந்த தூக்கம்; the deep sleep immediately following sexual intercourse. *"சோப நித்திரைபோய்ச் சற்றேநினைவுவந்து" (விறலிவிடு.574).*

த.வ. கலவித்தூக்கம்

*[**Skt.** ksōbha+nidrā > த. சோபநித்திரை]*

**சோபம்**[1] *šōbam,* பெ.(n.) 1. இரக்கம்; pity, compassion. 2. துன்பம்; grief, sorrow. *"புத்திரசோபம்" (உத்தரரா.சம்புவ.12).* 3. கள்; toddy (சூடா.). 4. மயக்கம்; fainting, swooning. 5. களைப்பு; languor, lassitude, fatigue, prostration. 6. சோம்பல்; drowsiness, heaviness, indolence.

*[**Skt.** kṣōbha > த. சோபம்.]*

**சோபம்**[2] *šōbam,* பெ.(n.) அரத்தத்தை (குருதியை)க் குறைக்கும் நோய் வகை; anemia. *"சோபம்பெறப் பிறக்குஞ் சொல்லினாள்" (பூவண.உலா.288).*

*[**Skt.** šōpha > த. சோபம்.]*

**சோபம்**[3] *šōbam,* பெ.(n.) 1. அழகு; beauty, handsomeness (உரி.நி.). 2. ஒளி; lustre, radiance, splendour (யாழ்.அக.).

*[**Skt.** šōbhā > த. சோபம்.]*

**சோபரோகம்** *šōbarōgam,* பெ.(n.) **சோகை** பார்க்க; see *šōgai* (சா.அக.).

**சோபலம்**[1] *šōbalam,* பெ.(n.) சோம்பு; anise seed, *illecium ancisatum* (சா.அக.).

த.வ. பெருஞ்சீரகம்

**சோபலம்**[2] *šōbalam,* பெ.(n.) சோம்பல்; laziness, sluggishness.

த.வ. சோம்பேறித்தனம்

**சோபலாங்கி** *šōbalāṅgi,* பெ.(n.) **சோப்பளாங்கி** பார்க்க; see *šōppaḷāṅgi*(w.).

**சோபவரி** *šōbavari,* பெ.(n.) சேரான் கொட்டை; dhobys nut semecarpus ana cardiun. It cures swelling (சா.அக.).

த.வ. தேற்றாங்கொட்டை

**சோபன்** *šōbaṉ,* பெ.(n.) கள்; toddy (சா.அக.).

த.வ. சொல்விளம்பி, வெறிநீர்

**சோபனகலியாணம்** *šōbaṉa-kaliyāṇam,* பெ.(n.) திருமணத்தின் பின் மணமக்கள் ஒன்றுகூடல்; consummation after marriage.

த.வ. முதலிரவு

*[சோபனம்+கலியாணம்]*

*[**Skt.** šōbhana+ > த. சோபனம்.]*

**சோபனகாரியம்** *šōbaṉa-kāriyam,* பெ.(n.) **சோபனம்,** 4 பார்க்க (கொ.வ.); see *sōbaṉam,4.*

*[சோபனம்+காரியம்]*

*[Skt. šōbhana+ > த. சோபனம்.]*

**சோபனச்செய்தி** *šōbaṉa-c-ceydi,* பெ. (n.) **சோபனம்,** 3 பார்க்க (வின்.); see *sōbaṉam,* 3.

**த.வ. நற்செய்தி**

*[சோபனம்+செய்தி]*

*[Skt. šōbhana > த. சோபனம்.]*

**சோபனசினி** *šōbaṉašiṉi,* பெ.(n.) இடதுகை; left hand (சா.அக.).

**சோபனஞ்சொல்(லு)—தல்** *šōbaṉa-ñ-col-,* 8 செ.குன்றாவி.(v.t.) 1. பெண்பூப்பு முதலிய நற்செய்தி கூறுதல் (பிரா.கொ.வ.); to communicate good news, as a girls pubescence, birth of a son, etc. 2. வாழ்த்துக் கூறுதல் (வின்.); to congra tulate, utter benedictions.3. மங்கலப்பாட்டுப் பாடுதல் (கொ.வ.); to sing congratulatory songs.

*[சோபனம்+சொல்(லு)–]*

*[Skt. sōbhana >த.சோபனம்]*

**சோபனப்பாட்டு** *šōbaṉa-p-pāṭṭu,* பெ.(n.) மங்கலப்பாடல் (கொ.வ.); congratulatory songs, songs of benediction.

*[சோபனம்+பாட்டு]*

*[Skt. šōbana > த. சோபனம்]*

**சோபனப்பிழை** *šōbaṉa-p-piḻai,* பெ.(n.) நலமின்மை (வின்.); inauspiciousness.

*[சோபனம்+பிழை]*

*[Skt. sōbana > த. சோபனம்]*

**சோபனம்** *šōbaṉam,* பெ.(n.) 1. வாழ்த்து; congratulation, benediction (பிங்.). *"முனிவர் சோபனங்கள் செப்ப" (கம்பரா. ஊர்தேடு.120).* 2. வாழ்த்துச் சொல்லை இறுதியிலுடைய வாழ்த்துப் பாட்டு; congratulatory song ending with the word *šōbaṉam.* 3. நற்செய்தி; joyfultidings. 4. நற்செயல்; happy event, as a girl's pubescence. 5. அழகு; beauty (சங்.அக.).

*[Skt. šōbhana > த. சோபனம்.]*

**சோபனமடி—த்தல்** *šōbaṉamaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) கும்மியடித்தல்; to dance and sing to the clapping of hands on happy occasions.

*[சோபனம்+மடி–.]*

*[Skt. šōbhana > த. சோபனம்]*



**சோபனவாழ்த்து** *šōbaṉa-vāḻttu,* பெ.(n.) மங்கலப்பாட்டு; congratulatory song on a marriage.

*[சோபன(ம்)+வாழ்த்து]*

**சோபனாட்சதை** *šōbaṉāṭcadai,* பெ.(n.) நல்ல காலங்களில் மக்களை வாழ்த்துதற்கு உரிய மங்கல அரிசி; grains of rice, coloured yellow with turmeric and sprinkled on the heads of persons with benediction on auspicious occasions.

**த.வ. மஞ்சளரிசி**

*[Skt. sōbana+akšada>த. சோபனாட்சதை.]*

**சோபாஞ்சனம்** *šōbāñjaṉam,* பெ.(n.) முருங்கை; drumstrick tree, *phyregos perma moringa* (சா.அக.).



**சோபாட்சிபாகம்** *šōbāṭci-bāgam,* பெ.(n.) மூவகைத் தீட்டினால், கண்வீக்கம், கண் சிவப்பு, வலி, எரிச்சல், வெள்விழி அத்திப் பழம் போலிருந்து, பிசுபிசுப்பான நீரொழுக்கும் உண்டாகும் ஒரு கண்ணோய்; an eye disease marked by swelling, redness pain, burning sensation etc. (சா.அக.).

**சோபாதானம்** *šōbādāṉam,* பெ.(n.) முதற் கரணியத்தை உடையது; that which was a material cause, as pot (சங்.அக.).

*[Skt. sōpādāna > த. சோபாதானம்.]*

**சோபாதிகம்**[1] *šōbādigam,* பெ.(n.) தொல்லைகளை மேற்கொண்டு வருவது; that which is conditional. *"பதிபசுபாசாதி நாமங்கள் சோபாதிகங்கள்" (சிவசம.39).*

*[Skt. sōpādhika > த. சோபாதிகம்.]*

**சோபாதிகம்**[2] *šōbādigam,* பெ.(n.) வலியிருத்தல் போல் தோன்றுதல்; feeling as if there is pain (சா.அக.).

**சோபாநாசினி** *šōbānāšiṉi,* பெ.(n.) வீக்கம், கட்டி இவற்றைக் கரைக்கும் மருந்து; medicine or drug suppose to have the power to resolve swelling tumour etc., discutient (சா.அக.).

**சோபாரிரசம்** *šōbārirašam,* பெ.(n.) கழிச்சல், சோகை, பாண்டு நோய்களுக்குக் கொடுக்கும் ஆயுர்வேத மருந்து; an ayurvedic medicine given for chronic diarrohea anemia, and rheumatic affections (சா.அக.).

**சோபாரோகம்** *šōbārōgam,* பெ.(n.) உடம்பின் புழையிடங்கள் தோறும் நீர் திரண்டு தேங்குவிக்கும் ஒரு நோய்; dropsy (சா.அக.).

**சோபாலிகை**[1] *šōbāligai,* பெ.(n.) அடம்பு; hare-leaf. *"சுனைநீலஞ் சோபாலிகை" (திணை மாலை.2).*

*[Skt. šēphālikā > த. சோபாலிகை.]*

**சோபாலிகை**[2] *šōbāligai,* பெ.(n.) 1. குடை, மேற்குடைச் செடி; an unknown plant. 2. அடம்பு; hareleaf plant. 3. வெண்ணொச்சி; vitex negundo. 4. தீக்கொழுந்து; fire flame (சா.அக.).

**சோபானம்** *šōbāṉam,* பெ.(n.) 1. படிக்கட்டு; steps, stairs, gradations. *"பேறு தத்துவங்களென்னும் பெருகு சோபானமேறி" (பெரியபு.கண்ணப்ப.103).* 2. தாழ்வாரம்; sloping roof (பிங்.).

*[Skt. sōpāna > த. சோபானம்.]*

**சோபானமுறை** *šōbāṉa-muṟai,* பெ.(n.) படிநிலை; graduated or regular course. *"ஆன்மாக்கள் சோபான முறையின் அறிந்து வருந் தன்மைக் கேற்ப" (சி.போ.பா. சிறப்.5).*

த.வ. படிமுறை

*[சோபானம்+முறை]*

*[Skt. sopāṉa > த. சோபானம்]*

**சோபானவகை** *šōbāṉavagai,* பெ.(n.) கொடிவழி; unbroken, continuous tradition. *"சோபானவகை தொகுத்த புராணம்" (கோயிற்பு.பாயி.24).*

த.வ. கால்வழி

*[சோபானம்+வகை]*

*[Skt. sōpāna > த. சோபானம்]*

**சோபி¹-த்தல்** *šōbi-,* 11 செ.கு.வி.(v.i.) 1. ஒளிவிடுதல்; to be beautiful, to be splendid, lustrous (யாழ்.அக.). 2. அழகாக இருத்தல்; to be ornamental, decorated; to be flowery, as language (சங்.அக.). 3. மேம்படுதல்; to shine, show brilliancy, as of intellect (கொ.வ.).

**த.வ. மேம்பட்ட அழகு**

*[Skt. šōbhā > த. சோபி-]*

**சோபி-த்தல்²** *šōbi-,* 11 செ.கு.வி.(v.i.) சோர்வுறுதல் (வின்.); to faint, swoon, to be bereft of conciousness. *'அவன் சோபித்துக் கிடக்கிறான்'.*

*[Skt. kṣubh > த. சோபி]*

**சோபி³** *šōbi,* பெ.(n.) நேர்வாளம்; croton seed, *croton tigiiium* (சா.அக.).

**சோபித்துக்கிட-த்தல்** *šōbittu-k-kiḍa-,* 3 செ.கு.வி.(v.i.)மயக்கமடைந்து சொரணை யற்றுக் கிடத்தல்; to lye unconscious through fainting (சா.அக.).

**சோபிதம்** *šōbitam,* பெ.(n.) **சோபை¹** பார்க்க; see *šōbai¹.*

*[Skt. šōbhita > த. சோபிதம்.]*

**சோபிதவாளம்** *šōbida-vāḷam,* பெ.(n.) நேர்வாளம்; croton seed (யாழ்.அக.).

**சோபீசம்** *šōbīšam,* பெ.(n.) எலுமிச்சை; lime fruit (சா.அக.).

**சோபை¹** *šōbai,* பெ.(n.) 1. அழகு; beauty, splendour. *"சோபைவட கோபுரத்தி லுறைவோனே" (திருப்பு.489).* 2. ஒளி; lustre, brilliancy, brightness, as of countenance. *"ஒரு மரகத சோபையுற" (பாரத.கிருட்.208).*

**த.வ. பொலிவு**

*[Skt. šōbhā > த. சோபை.]*

**சோபை²** *šōbai,* பெ.(n.) நோய் வகை (தைலவ. தைலா.7); swelling, intumescence.

*[Skt. šōpha > த. சோபை.]*

**சோபைசுரம்** *šōbaišuram,* பெ.(n.) கீல்களில் வீக்கம், மார்பு அடைப்பு, வயிற்றுப் பொருமல், வலி, மலக்கட்டு, காய்ச்சல் இவற்றா லுண்டாகும் வீக்கக் காய்ச்சல்; fever through anemia which is marked by constipation (சா.அக.).

*[சோபை + சுரம்.]*

*[Skt. šōpha > த. சோபை]*

**சோபைரோகக்கூட்டம்** *šōbairōga-k-kūṭṭam,* பெ.(n.) சோகை தொடர்பான நோய்கள்; group of diseases relating to anemia (சா.அக.).

*[சோபை + ரோகம் + கூட்டம்.]*

*[Skt. šōpha+rōga > த. சோபைரோகம்]*

**சோபோதரம்** *šōbōtaram,* பெ.(n.) சோகை யினால் ஏற்படும் வயிற்று வீக்கம்; swelling of abdomen due to anemia (சா.அக.).

**த.வ. பெரும்பானை**

**சோபோதாபா** *šōbōtābā,* பெ.(n.) பேய்க் குமட்டி; bitter apple, *Citrullus colocynthis* (சா.அக.).

**த.வ. காட்டுக்குமட்டி**



**சோம்பரை** *šōmbarai,* பெ.(n.) சோம்பல்; laziness, drowsiness (சா.அக.).

த.வ. மயக்கநிலை

**சோம்பலம்** *šōmbalam,* பெ.(n.) சேங்கொட்டை; marking - nut tree (மலை.).

த.வ. தேத்தாங்கொட்டை

**சோம்பாக்கு** *šōmbākku,* பெ.(n.) சோம்பை வாலையிலிட்டு இறக்கிய தீ நீர்; distilled liquid of anise beeds (சா.அக.).

**சோம்பாகி** *šōmbāgi,* பெ.(n.)1. சமையற்காரன்; cook, especially in temple service. 2. வழலைக்கட்டி; soap (w.).

*[Skt. svayam-pākin> த. > சோம்பாகி.]*

**சோம்பாயி** *šōmbāyi,* பெ.(n.) **சோம்பாகி** பார்க்க (வின்.); see *šōmbāgi.*

**சோமக்கிரகணம்** *šōma-k-kiraganam,* பெ. (n.) நிலாமறைப்பு (சந்திரகிரகணம்); lunar eclipse. *"சோமக்கிரகணத்தினான்று" (S.I.I.i.169)*

த.வ. நிலாமறை, திங்கள் மறைப்பு

*[Skt.sōma+grahana>த. சோமக்கிரகணம்.]*

**சோமக்கொடி** *šōmakkodi,* பெ.(n.) சோமப்பூடு; soma plant (சா.அக.).

த.வ. கஞ்சா, அனுவல்லிப்பூடு

**சோமகர்** *šōmagar,* பெ.(n.) பாஞ்சால அரசர்கள்; *Pāñcāla* kings. *"செஞ்சகர் சோமகர்" (கம்பரா.உலாவியற்.48).*

*[Skt. sōmaka > த. சோமகர்.]*

**சோமகீடம்** *šōmakīdam,* பெ.(n.) புழுக்களின் வேறு வகை உருவம்; one of the several groups of worms (சா.அக.).

**சோமகுண்டம்** *šōma-kundam,* பெ.(n.) காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள ஒரு புண்ணிய நீர்த்துறை; a sacred tank in *Kāviri-p-pūmpattinam. "சோமகுண்டஞ் சூரியகுண்டந்துறை மூழ்கி" (சிலப்.9, 59).*

த.வ. நிலாக்குளம்

*[சோம(ம்)+குண்டம்]*

*[Skt. šoma > த. சோமம்.]*

*[குள > குண்டு > குண்டம்]*

**சோமகுணம்** *šōmagunam,* பெ.(n.) குளிர்ச்சியான தன்மை; cooling nature (சா.அக.).

*[சோம(ம்)+குணம்]*

*[Skt. sōma> த. சோமம்]*

**சோமகேசர்** *šōmakēšar,* பெ.(n.) **சோமகர்** பார்க்க; see *šōmagar. "சோமகேசர் பொருதலால்" (பாரத.வாரணா.79).*

*[Skt. sōmakēšā > த. சோமகேசர்.]*

**சோமசக்கரம்** *šōma-šakkaram,* பெ.(n.) பதினாறு இதழ்களையுடைய சக்கரம்; sixteen lobed gangtion, the seat of altruistic sentements and volitional control v.z., compassion, patience, renunciation meditativeness, gravity, determination, magnanimity, gentliness etc. (சா.அக.).

த.வ. ஈரெண் இதழாழி

*[சோம+சக்கரம்]*

*[Skt. sōma> த. சோம]*

**சோமசபன்னி** *šōmašapanni,* பெ.(n.) குங்கிலியம்; Indian damer resin (சா.அக.).

த.வ. வெள்ளைச்சாம்பிராணி

**சோமசாரம்** *šōmašāram,* பெ.(n.) 1. வெள்ளைச் சாம்பிராணி, வெண் கருங்காலி; a white spieces of ebony; egg fruited ebony, *Diospyros occurpa.* 2. ஒரு வகைச் சாரம், காடிகாரம்; silver nitrate, lunar caustic (சா.அக.).

**சோமசியா** *šōmašiyā,* பெ.(n.) சிறு கல்லூரி என்னும் மூலிகை; an unidentified plant said to consolidate sea salt (சா.அக.).

**சோமசுந்தரன்** *šōma-sundaran,* பெ.(n.) மதுரையில் கோயில் கொண்டுள்ள சிவ பெருமான்; Šivan worshipped in Madurai (திருவிளை. மூர்த்தி.34).

*[Skt. sōmasundara > த. சோமசுந்தரன்.]*

**சோமசூத்திரப்பிரதட்சிணம்** *šōmašūttira-p-piratatcinam,* பெ.(n.) சிவன் திருக் கோயிலில் கோமுகியைக் கடவாது திருச் சுற்றில் வலம் வருதல்; a special kind of circumambulation in a *Šivan* temple performed without crossing the *cōmacūttiram* (இ.வ.).

*[Skt. sōmasūtra+pradakšina>த. சோம சூத்திரபிரதட்சிணம்.]*

**சோமசூத்திரம்** *šōma-šūttiram,* பெ.(n.) சிவன் கோயிலில் முழுக்காட்டு நீர் விழும் கோமுகம்; a spout attached to the innershrine of a *Šivan* temple (G sm. D.I.i.112).

*[Skt. sōmasūtra > த. சோமசூத்திரம்.]*

**சோமசேகரன்** *šōma-šēgaran,* பெ.(n.) சிவன்; *Šivan,* as having the moon on his crest. *(சந்திரனை முடியில் உடையவன்) "சோமசேகர க்ருபாளுவாய்" (தாயு.சிற்சுகோ. 10).*

*[Skt.sōma+šēkhara > த. சோமசேகரன்.]*

**சோமசொரூபம்** *šōma-šorūbam,* பெ.(n.) குளிர்ந்த தன்மை; cooling nature (சா.அக.).

**சோமணம்** *šōmanam,* பெ.(n.) மலங்கழித்த பின் தூய்மை செய்தல்; cleaning or washing the posteriors after evacuation of bowels (சா.அக.).

**த.வ. கால் கழுவுதல்**

**சோமதனம்** *šōmadanam,* பெ.(n.) செம்மரம்; coromendel redwood, *Soymida febrifuga* (சா.அக.).

**சோமதாரி** *šōmadāri,* பெ.(n.) இந்துப்பு; rock salt (சா.அக.).

**சோமதிசை** *šōma-dišai,* பெ.(n.) குபேரனது திசை எனப்படும் வடதிசை; north, as *Kubēra's* quarter (திவா.).

**த.வ. வடதிசை**

*[சோம+திசை.]*

*[Skt. sōma > த. சோம]*

**சோமநாதச்சுண்ணம்** *šōmanāda-c-cunnam,* பெ.(n.) அரத்தத் தூய்மைக்காக இரும்பைக் கொண்டு அணியம் செய்யும் ஒரு வகை மருந்து; an Ayurvedic preparation of iron prescribed for impurities of blood (சா.அக.).

**சோமநாதப்பெருங்காயம்** *šōmanāda-p-perungāyam,* பெ.(n.) பண்டைய காலத்தில் கூர்ச்சர நாட்டில் இருக்கும் சோமநாத புரத்திலிருந்து இறக்குமதியாகும் ஒரு பெருங்காயம்; a kind of pure asafoetida imported from Somanath in Gujarat (சா.அக.).

**சோமநாதரசம்** *šōmanāda-rašam,* பெ.(n.) மனோசிலையைத் தூய்மைப்படுத்தி, இரும்பு, அப்பிரகம், வெள்ளி சேர்த்துப் புடமிட்டு எடுத்த நீரிழிவு போன்றவற்றிற்கான ஆயுள்வேத மருந்து; an Ayurvedic preparation given for diabetes and venerial diseases (சா.அக.).

**த.வ. கமுக்கமருந்து**

**சோமநாதி** *šōmanādi,* பெ.(n.) **சோமநாதப் பெருங்காயம்** பார்க்க; see *šōmanāda-p-perungāyam* (சா.அக.).

**த.வ. சீந்தில்**

**சோமநாயகம்** *šōmanāyagam,* பெ.(n.) வேலிப்பருத்தி; hedge cotton (சா.அக.).

**த.வ. சீந்தில்**



**சோமநோய்** *šōmanōy,* பெ.(n.) கருப்ப வெட்டை; a discharge of a whitish colour, coming from the vegina or from the neck of the womb cervix (சா.அக.).

**சோமப்பால்** *šōmappāl,* பெ.(n.) சோமச் செடியின் பால் போன்ற வெண்ணிறமான சாறு; the milky juice of soma plant (சா.அக.).

*[சோம(ம்)+பால்]*

*[Skt. sōma > த. சோமம்]*

**சோமப்பிணி** *šōma-p-piṇi,* பெ.(n.) நீரிழிவு; diabetes (சா.அக.).

**த.வ. சருக்கரைநோய்**

**சோமப்பூடு** *šōma-p-pūḍu,* பெ.(n.) சோமலதை அல்லது கொடிக்கள்ளி; moon creeper (சா.அக.).

**சோமபந்து** *šōmabandu,* பெ.(n.) 1. ஆம்பல்; water lily. 2. பெருங்காயம்; asafoetida (சா.அக.).

**சோமபானம்** *šōmabāṉam,* பெ.(n.) சோம வேள்வியில் சோமச்சாறு பருகுகை; drinking of the *sōma* beverage at the *sōma* sacrifice.

**த.வ. சோமச்சாறு**

*[சோமம்+பானம்]*

*[Skt. sōma>த. சோமம்.]*

**சோமம்**[1] *šōmam,* பெ.(n.) 1. வேள்விகளில் தேவிகளுக்குப் படையலாக்கிய பின் வேள்வி செய்வார் பருகுதற்குரிய சாறு அணியம் செய்யுங்கொடி; *sōma* plant, whose juice was offered to gods in *vēdic* sacrifices and drunk by the priests. *"கொடிகளிற் சோமக்கொடியுநீ" (காசிக. துருவன்பதம்.4).* 2. **சோமயாகம்** பார்க்க; see *sōmayōgam.* 3. கொடிக் கள்ளி; moon creeper.

*[Skt. sōma > த. சோமம்.]*

**சோமம்**[2] *šōmam,* பெ.(n.) 1. ஆட்டாங்கொடி; a kind of creeper. 2. ஒரு கொடி; the moon plant. 3. கஞ்சி; liquid rice. 4. அருவதா; rue, any fermented liquor. 5. கள்; toddy (சா.அக.).

**சோமமணல்** *šōmamaṇal,* பெ.(n.) வெள்ளி மணல்; sand containing silver ore (சா.அக.).

**த.வ. வெள்ளிக்கனிமம்**

**சோமயாகம்** *šōma-yāgam,* பெ.(n.) தேவர் பொருட்டுச் சோமச்சாறு அளிக்கும் வேள்வி வகை; a kind of sacrifice at which *sōma* juice is offered to gods (பிங்.).

*[Skt. sōma+yāga > த. சோமயாகம்.]*

**சோமயாசி** *šōmayāši,* பெ.(n.) 1. சோம வேள்வி செய்தோன்; Brahmin who has performed the *sōma* sacrifice. *"குட்டேறபட்ட சோமயாஜியார்" (S.I.I.iii, 110).* 2. சோமயாசிகளின் மரபினரான பார்ப்பனர் சூட்டிக் கொள்ளும் பட்டப் பெயர்; a titile among Brahmins whose ancestors have performed *sōma* sacrifice.

*[Skt. sōma+yājin> த. சோமயாசி]*

**சோமயோனி** *šōmayōṉi,* பெ.(n.) ஒரு வகைச் சந்தனம்; a kind of sandal wood (சா.அக.).

**சோமர்** *šōmar,* பெ.(n.) தென்புலத்தாருள் ஒருவகையினர்; a particular class of manes (சங்.அக.).

*[**Skt.** sōma-pā > த. சோமர்.]*

**சோமரசகுணம்** *šōmarašagunam,* பெ.(n.) சோமச்செடியிலிருந்து எடுக்கப்படும் சோமச் சாற்றின் குணம்; the properties of the *šōma* juice (சா.அக.).

*[சோமரச+குணம்]*

*[**Skt.** šōmaraša>த. சோமரசம்.]*

**சோமராகம்** *šōma-rāgam,* பெ.(n.) பாலைப் பண்களுளொன்று; (Mus.) a musical mode of the *pālai* class (பிங்.).

*[**Skt.** sōma+rāga > த. சோமராகம்.]*

**சோமராசி** *šōmarāši,* பெ.(n.) 1. கார்போக வரிசி; seeds of hazel leaved psoralea. 2. காட்டுச் சீரகம்; purple fleabane (சா.அக.).

**த.வ. பேய்ச்சீரகம்**

**சோமரிதம்** *šōmaridam,* பெ.(n.) தூதுவளை; three lobed nightshade (சா.அக.).

**த.வ. சளியறுப்பான்**

**சோமரிரசம்** *šōmarirašam,* பெ.(n.) பெண் களின் வெள்ளை ஒழுக்கிற்குச் சாப்பிடும் இதளியம் சேர்ந்த மருந்து; a mercurial preparation given for a disease of women (சா.அக.).

**சோமரோகம்** *šōmarōgam,* பெ.(n.) 1. **சோமநோய்** பார்க்க; see *šōmanōy.* 2. நீரிழிவு; diabetes. 3. பெண்களுக்கு வரும் ஒரு நோய்; a disease of women marked by a white discharge through vagina (சா.அக.).

**சோமலதை**[1] *šōmaladai,* பெ.(n.) 1. கொடிக் கள்ளி; creeping milk hedge. 2. **சோமப்பூடு** பார்க்க; see *šōma-p-pūḍu* (சா.அக.).



**சோமலதை**[2] *šōmaladai,* பெ.(n.) சோமக் கொடி; *sōma* plant.

*[**Skt.** sōma+latā > த.சோமலதை.]*

**சோமவல்லரி** *šōma-vallari,* பெ.(n.) பொன்னாங்கன்னி (பார்க்க); a plant, see *ponnāṅkanni.*

*[**Skt.** sōmavallari > த. சோமவல்லரி.]*



**சோமவலக்கம்** *šōmavalakkam,* பெ.(n.) பெருங்குமிழ்; cashmere tree (சா.அக.).

**சோமவலக்கலம்** *šōmavalakkalam,* பெ.(n.) வெண் கருங்காலி; a white spieces of ebony (சா.அக.).

**சோமவலகம்** *šōmavalagam,* பெ.(n.) சீந்தில்; moon creeper (சா.அக.).

**சோமவாரம்** *šōma-vāram,* பெ.(n.) திங்கட்கிழமை; monday. *"பதின்மூன்றாம் பக்கமும் சோமவாரமும் பெற்ற அனுடத்தில்" (சிலப்.10, 2, உரை).*

*[**Skt.** sōma+vāra > த. சோமவாரம்.]*

**சோமவாலி** *šōmavāli,* பெ.(n.) பெருங்குமிழ்; cashmere tree (சா.அக.).

த.வ. குமிழமரம்

**சோமவிருட்சம்** *šōmavirutcam,* பெ.(n.) சிவமலை (சிவகிரி)யின் மேலுள்ள புத்துணர் வுக்காகப் பயன்படுத்தப்படும் ஒரு வகை கற்ப மரம்; an unknown tree said to be found on the top of Sivagiri hills (Madurai or Tirunelveli Dist.). It is useful in rejuvenation (சா.அக.).

**சோமவுலுக்கம்** *šōmavulukkam,* பெ.(n.) தேக்கு; teak (மூ.அ.).

*[Skt. sōmavalka > த. சோமவுலுக்கம்.]*

**சோமன்** *šōman,* பெ.(n.) 1. அமுதம்; nector. 2. கருப்பூரம்; camphor. 3. கோழை; phlegm. 4. காற்று; wind. 5. நீர்; water. 6. வழலை; soap. 7. நீல நஞ்சு; a prepared arsenic. 8. வெள்ளி மணல்; sand mixed with silver ore. 9. நிலவு; moon. 10. செம்பு; copper. 11. பச்சைக் கற்பூரம்; crude camphor. 12. மலை; mountain. 13. மென்மைக்கும், நிறைவிற்கும் உரிய சின்னம்; a symbol of mildness, contentment and satisfaction (சா.அக.).

**சோமன்புத்திரி** *šōman-puttiri,* பெ.(n.) நருமதை; the river Narmada, as the moon's daughter (பிங்.).

*[Skt. sōmaputri > த. சோமன்புத்திரி.]*

**சோமன்ரவிவன்னியானோன்** *šōman-ravi vanniyānōn,* பெ.(n.) வழலை; soap (சா.அக.).

**சோமனாசி** *šōmanāši,* பெ.(n.) பழங் காலத்தில் கூர்ச்சரநாட்டிலிருந்து இறக்குமதி யாகிய பெருங்காயம்; சோமநாத பெருங்காயம்; a kind of pure asafoetida imported from Somanath in Gujarat (சா.அக.).

**சோமனுப்பு** *šōmanuppu,* பெ.(n.) 1. இந்துப்பு; rock salt. 2. பச்சைக் கருப்பூரம்; crude camphor. 3. நீல நஞ்சு; a kind of prepared arsenic (சா.அக.).

**சோமனோய்** *šōmanōy,* பெ.(n.) **சோம நோய்** பார்க்க; see *šōmanōy* (சா.அக.).

**சோமாக்கியம்** *šōmākkiyam,* பெ.(n.) 1. செந்தாமரை; red lotus (மூ.அ.). 2. செவ்வல்லி; red Indian water lilly.

த.வ. ஆம்பல்

*[Skt. sōmākhya > த. சோமாக்கியம்.]*

**சோமாசி** *šōmāsi,* பெ.(n.) **சோமயாசி** பார்க்க; see *šōmayāši. "சோமாசிமாறர்" (பெரியபு. மூர்க்க.12).*

*[Skt. sōma-yājin > த. சோமாசி.]*

**சோமாசுகந்தன்** *šōmāsugandan,* பெ.(n.) உமையோடும் கந்தனோடுங் கூடியுள்ள சிவத்திருமேனி; šivan, with *Pārvadi* and *kandan*

*[Skt. sā+umā+skanda > த. சோமாசு கந்தன்.]*

**சோமி** *šōmi,* பெ.(n.) கொற்றவை; *Durgā. "சத்தியுஞ் சோமியும்" (திருவாச.9, 1).*

*[Skt. sōma > த. சோமி.]*

**சோமுகன்** *šōmugan,* பெ.(n.) திருமாலாற் கொல்லப்பட்ட ஓர் அரக்கன்; an *Asura* slain by *Visnu.*

*[Skt. sōmaka > த. சோமுகன்.]*

**சோமேசுவரரசம்** *šōmēšuwararašam,* பெ. (n.) பெண்களின் வெள்ளை ஒழுக்கிற்கான ஓர் ஆயுர்வேத மருந்து; an ayurvedic medicine useful for white discharge of women (சா.அக.).

**சோமேதா** *šōmēdā,* பெ.(n.) **சோமதனம்** பார்க்க; see *šōmadanam* (சா.அக.).

**சோயம்** *śōyam,* பெ.(n.) "இவன் அவனே" என்னும் பொருள் கொண்ட வடமொழித் தொடர்; a Sanskrit expression meaning "this is he" (கைவல்.தத்.79).

*[Skt. sōyam > த. சோயம்.]*

**சோயவபலம்** *śōyavabalam,* பெ.(n.) மூங்கிற் குருத்து; shoots of bamboo tree (சா.அக.).

**த.வ. மூங்கில் முளை**

**சோர்** *śōr,* பெ.(n.) ஆடம்பரம்; guadiness, pomposity.

**த.வ. பகட்டு**

*[U. jōr > த. சோர்.]*

**சோர்தாக்கீது** *śōr-tākkīdu,* பெ.(n.) கண்டிப்பான கட்டளை; stringent order (Loc.).

*[U. jōrtākhīd > த. சோர்தாக்கீது.]*

**சோர்பதன்** *śōrpadaṉ,* பெ.(n.) தளர்ந்த காலம்; one's weak moments (சா.அக.).

**சோர்பொழுது** *śōrpoḻudu,* பெ.(n.) மாலைப் பொழுது; evening time (சா.அக.).

**சோர்பௌவம்** *śōrpouvam,* பெ.(n.) நறும் பிசின்; fragrant resin (சா.அக.).

**சோர்வாதம்** *śōrvādam,* பெ.(n.) 1. கால் கை மரத்துப்போய் அயர்ச்சியை உண்டாக்கி விழச் செய்யும் முடக்கு நோய்; paralysis causing loss of power, in the limbs. 2. திமிர்வாதம்; palsy (சா.அக.).

**சோரகவி** *śōrakavi,* பெ.(n.) 1. ஒருவர் மேல் பிறன்பாடிய பாடலைத் தான் பாடியதாக வேறொருவனுக்குச் சூட்டுபவன்; plagiarist-poet who offers another's poem as his own. 2. திருட்டுப் பாட்டு; plagiarised poem.

*[Skt. cōra > த. சோரம்.]*

**சோரகன்** *śōragaṉ,* பெ.(n.) திருடன்; thief (சங்.அக.).

*[Skt. cōrakā > த. சோரகன்.]*

**சோரங்கபாடாணம்** *śōraṅga-pāḍāṇam,* பெ.(n.) ஒருவகைச் செய்ந்நஞ்சு; a kind of prepared arsenic poison (சா.அக.).

**சோரங்கொடு-த்தல்** *śōraṅkoḍu-,* 4 செ. குன்றாவி.(v.t.) பெண்ணைக் கூட்டிக் கொடுத்தல்; to pimp (சா.அக.).

**சோரசத்துரு** *śōra-śatturu,* பெ.(n.) சோர நஞ்சின் பகை மருந்தான சவ்வீரம்; sublimate of mercury which is an antidote to *śōranañju* (சா.அக.).

**சோரசெந்தூரி** *śōra-śendūri,* பெ.(n.) நாகதாளி; a plant of the convolvulus genus capable of calcing *śōrapāṣaṇam.* Its not the prickly pear plant as is given out by many authors (சா.அக.).

**சோரத்தனம்** *śōra-t-taṉam,* பெ.(n.) 1. திருட்டுக்குணம்; thievishness. 2. ஏமாற்றுக் குணம்; fraud, dishonesty. 3. பரத்தமை; adultery or unfaithfulness of a wife.

*[சோர(ம்)+ தனம்.]*

*[Skt. cōra > த. சோரம்.]*

**சோரத்திரி** *śōrattiri,* பெ.(n.) பரத்தை; prostitute (சா.அக.).

**த.வ. விலைமகள்**

**சோரத்துவம்** *śōrattuvam,* பெ. (n.) **சோரத்தனம்** பார்க்க; see *śōrattaṉam.*

*[Skt. cōra-tva> த. சோரநாசம்]*

**சோரநாசம்** *śōra-nāśam,* பெ.(n.) திருடரின் அழிவு; destruction of thieves.

*[Skt. cōranāsa > த. சோரநாசம்]*

**சோரநாயகன்** *śōranāyagaṉ,* பெ.(n.) கள்ளக் காதலன்; paramour.

*[சோர+நாயகன்]*

*[Skt. cōra+ > த. சோர]*

**சோரப்பார்வை** *šōra-p-pārvai,* பெ.(n.) சேர விருப்பங் கொள்ளும் பார்வை; amorous look, ogling (சா.அக.).

**த.வ. விழுங்கும் பார்வை**

**சோரப்புணர்ச்சி** *šōra-p-puṇarcci,* பெ.(n.) கள்ள உறவு; illicit intercourse (சா.அக.).

**த.வ. கள்ளக்காதல்**

**சோரபத்திரி** *šōrapattiri,* பெ.(n.) ஒரு சரக்கு; a drug (சா.அக.).

**சோரபாடாணம்** *šōrapāḍāṇam,* பெ.(n.) 32 வகையான செய்ந்நஞ்சு வகைகளில் ஒன்று; one among 32 kinds of prepared arsenic (சா.அக.).

**சோரபுட்பம்** *šōra-puṭpam,* பெ.(n.) சங்கங் குப்பி; smooth volkameria (மலை.).

*[Skt. cōra-pušpī > த. சோரபுட்பம்.]*

**சோரபுட்பி** *šōrapuṭpi,* பெ.(n.) **சோரபுட்பம்** பார்க்க; see *šōrapuṭpam* (சா.அக.).

**சோரபுத்திரன்** *šōraputtiran,* பெ.(n.) கணவனல்லாத பிறனுக்குப் பிறந்த பிள்ளை; unnatural son (சா.அக.).

*[சோர(ம்) + புத்திரன்.]*

*[Skt. cōra > த. சோரம்.]*

**சோரபேதி** *šōrabēdi,* பெ.(n.) அஞ்சன நஞ்சு; a kind of native arsenic (சா.அக.).

**சோரம்[1]** *šōram,* பெ.(n.) 1. களவு; stealing, embezzling. *"சோரங் கொலை யெய்தாது" (பாரத. அருச்சுனன்றீர்.1).* 2. வஞ்சனை; deceit, fraud. *"மாயைசெய் சோரம் பொய்க் குடில்" (திருப்பு.164) (சங்.அக.).* 3. பரத்தனம்; adultery (சங்.அக.). 4. **சோராபாடாணம்** பார்க்க; see *šōrāpāḍāṇam.*

*[Skt. cōra > த. சோரம்.]*

**சோரம்[2]** *šōram,* பெ.(n.) 1. சோர நஞ்சு; a prepared arsenic. 2. கோடா சுரி; . 3. நாகம்; zinc. 4. மாதவிடாய்; menstrual blood. 5. பரத்தமை; adultery (சா.அக.).

**சோரம்போதல்** *šōrampōdal,* பெ.(n.) தகாத உறவு கொள்ளல்; commetting adultery (சா.அக.).

**த.வ. கள்ளப்புணர்ச்சி**

*[சோரம் + போதல்.]*

*[Skt. sōra > த. சோரம்.]*

**சோரமார்க்கம்** *šōramārkkam,* பெ.(n.) பரத்தமை; adultery (சா.அக.).

**சோரல்** *šōral,* பெ.(n.) சோர்தல்; fainting (சா.அக.).

**த.வ. மயக்கமாதல்**

**சோரன்** *šōran,* பெ.(n.) 1. ஆட்டுக்குட்டி; lamb, kid. 2. வெடியுப்பு; nitre. 3. சவ்வீரம்; corrosive sublimate. 4. பரத்தமை; adultery (சா.அக.).

**சோரன்கிழங்கு** *šōran-kilangu,* பெ.(n.) நிலச் சருக்கரைக் கிழங்கு; ground sugar root (சா.அக.).

**சோராக்கண்துடிப்பு** *šōrākkan-tuḍippu,* பெ.(n.) கண்ணின் பாவைக்கடுத்துக் குத்தல்; an eye disease marked by irritation of the lens (சா.அக.).

**சோராஞ்சனம்** *šōrāñjanam,* பெ.(n.) களவு போன சொத்தைக் கண்டுபிடிக்கவும், பெண்களை வயப்படுத்தவும் பயன்படும் மை; a magic paint used for tracing stolen property and for captivating women (சா.அக.).

**சோராவரி[1]** *šōrāvari,* பெ.(n.) 1. கொள்ளை; dacoity, robbery, depredation. 2. வன்முறை; force, violence, outrage, as on a woman's modesty (Loc.).

**த.வ. வலக்காரம்**

*[U. jōrāvari > த. சோராவரி.]*

**சோராவரி²** *šōrāvari,* பெ.(n.) வலக்காரம்; out raging as on a women's modesty (சா.அக.).

**சோரி** *šōri,* பெ.(n.) 1. அரத்தம்; blood. 2. மழை; rain. 3. சிறு செருப்படை என்னும் மூலிகை; a low spreading medicinal plant. 4. கொடிக்கள்ளி; creeper milkhedge (சா.அக.).

**சோரிக்கட்டி** *šōrikkaṭṭi,* பெ.(n.) 1.வேனிற்கட்டி; summer boils arising in several parts of the body. 2. உறைந்த அரத்தம்; blood clots (சா.அக.).

த.வ. வேனல்கட்டி

**சோரிக்கட்டு** *šōrikkaṭṭu,* பெ.(n.) தீட்டுக் கட்டு; suppression of menses (சா.அக.).

**சோரிக்கடுப்பு** *šōrikkaḍuppu,* பெ.(n.) அரத்தக் கடுப்பு; irritation and pain while passing stools mixed with blood (சா.அக.).

**சோரிநார்** *šōrinār,* பெ.(n.) 1. அரத்த உறைவின் போது உண்டாகும் நார் போன்ற பொருள்; a peculiar organic fibre like substance found in blood during blood clot. 2. அரத்த உறையின் போது உண்டாகும் நீர்; liquor sanguines (சா.அக.).

**சோரிப்படர்த்தி** *šōri-p-paḍartti,* பெ.(n.) வெண் விழியில் அரத்தம் குழம்பும்படிச் செந்நிறச் சதை வளரும் ஒரு கண்ணோய்; a disease of the eye marked by reddish growth of flash in the selerotic coat (சா.அக.).

**சோரியிளநீர்** *šōriyiḷanīr,* பெ.(n.) பூச்சி, பாம்புப்பூச்சி, திமிர் பூச்சி ஆகியவற்றைப் போக்கும் செந்நிற இளநீர்; water of reddish tender cocoanut (சா.அக.).

**சோரியோமம்** *šōriyōmam,* பெ.(n.) செந்நிற ஓமம்; a red variety of sison on bishops weed (சா.அக.).

த.வ. செவ்வோமம்

**சோரிவரி** *šōrivari,* பெ.(n.) கண்ணில் அரத்தப் படலத்தில் வரும் கண்ணோய் வகை; an eye disease characterised by red lines or streaks (சா.அக.).

**சோரிவிழல்** *šōri-viḻal,* பெ.(n.) மூக்கில் வரும் அரத்த ஒழுக்கு; bleeding of the nose (சா.அக.).

**சோல்னா** *šōlṉā,* பெ.(n.) நீண்ட வளைப்பிடியுள்ள ஒரு வகைச் சிறுபை; a kind of small bag or pouch (கொ.வ.).

த.வ. தோட்பை

*[U. jhōlnā > த. சோல்னா.]*



**சோலி** *šōli,* பெ.(n.) பெண்கள் மேல் அணியும் ஆடை; woman's jacket (யாழ்.அக.).

த.வ. கச்சு

*[Skt. cōlī > த. சோலி.]*

**சோலிக்காய்** *šōlikkāy,* பெ.(n.) கற்றேக்கு; racemed fish bone tree (சா.அக.).

**சோவாசி** *šōvāši,* பெ.(n.) பயிரிடுங் குடியானவன்; cultivating tenant Cg.

த.வ. காராளன், உழவன்

*[Skt. sukha+vāsin>த.சோவாசி.]*

**சோவானை** *šōvāṉai,* பெ.(n.) மங்கலம் பொருந்திய ஆலத்திப்பாட்டு; a benedictory song. *சோவானைபாடி ஆலத்தி எடுத்தாள்* (Loc.).

*[Skt. šōbhana > த. சோவானை.]*

**சோவை** *šōvai,* பெ.(n.) **சோகை** பார்க்க; see *šōgai.*

*[Skt. šōpha > த. சோவை.]*

**சோழியப்பை** *šōḻiya-p-pai,* பெ.(n.) இரவலர் (பிச்சைக்காரர்கள்) பிச்சையேற்கும் பை; a large kind of bag used by mendicants.

த.வ. தோட்பை

*[H. jōlna> த. சோழியப்பை]*

**சோளகம்** *šōḷagam,* பெ.(n.) குடுமி வைக்கும் சடங்கு; shaving the ceremony of tonsure (சங்.அக.).

*[Skt. caula > த. சோளகம்.]*

**சோறாபரி** *šōṟāpari,* பெ.(n.) **சோராவரி** பார்க்க; see *šōrāvari.*

*[U. jorāwari > த. சோறாபரி.]*

**சோன்முகத்தாமரை** *šōṉmuga-t-tāmarai* பெ.(n.) முண்டினி மரம்; an unidentified tree (சா.அக.).

**சோனகங்கெளுத்தி** *šōṉagaṅkeḷutti,* பெ.(n.) ஒருவகை ஆற்றுக் கெளுத்தி மீன்; a kind of river macrone fish, *Macrones punctatus* (சா.அக.).



**சோனகசுரம்** *šōṉaga-šuram,* பெ.(n.) உடலில் சிவந்த கொப்புளங்களை எழுப்பும் காய்ச்சல். இது இசுலாமிய நாடுகளாகிய பாபிலோன், அரபி, கிரீசு முதலான இடங்களில் பரவி வந்த ஒரு வகைத் தொற்றுக் காய்ச்சல்; a kind of fever prevalent in Jonaca (Mahamadan) countries of Babylonia, Arabia, Greece etc. Its a contagious disease with raht - scarlatina (சா.அக.).

**சோனகத்திருக்கை** *šōṉaga-t-tirukkai,* பெ.(n.) கடலில் வாழும் ஒரு வகைத் திருக்கை மீன்; tiger tenkey, English ray trygon warnak (சா.அக.).

த.வ. அயற்றிருக்கை



**சோனகப்புல்** *šōṉagappul,* பெ.(n.) திராய்ப் புல்; a kind of straw plant, *Medicagoesculenta* (சா.அக.).

**சோனகப்பூ** *šōṉagappū,* பெ.(n.) நாகப்பூ; scarlet flowered plant (சா.அக.).

த.வ. நாகலிங்கப்பூ

**சோனகம்** *šōṉagam,* பெ.(n.) 1. உள்ளி; onion. 2. இளமை; youth. 3. அரபு நாடு; Arabia. 4. யவனநாடு; Greeks. 5. அரபுமொழி (பதினெண்மொழிகளில் ஒன்று); Hindustani as one of the 18 languages of olden days. 6. வாகை; *Allizzia labbek.* 7. உத்தாமணி; hedge cotton (சா.அக.).

*[Skt. yavana > த. சோனகம்.]*

**சோனகர்** *šōṉagar,* பெ.(n.) 1. அரபு நாட்டவர்; the Arabs. 2. யோனகர்; yonacus or Ionians. 3. யாழ்ப்பாணத்து யூதர்கள்; black Jews of

Malabar including white Jews of Cochin. 4. யவனர் அல்லது கிரேக்கர்; Greeks 5. இராமநாத புரத்திலும், தூத்துக்குடியிலும் உள்ள முத்துக்குளிக்கும் ஒரு குலத்தார்; a class of people living in Ramanatha puram and Tuticorin whose vocation is pearl diving (சா.அக.).

**சோனகவாளை** *šōṉaga-vāḷai,* பெ.(n.) 1.5 அடி நீளமும், வெண்ணிறமும் உடைய கடல் சரவாளை மீன்; a sea-fish of wallago genus moorman's valai.



**சோனகன்** *šōṉagaṉ,* பெ.(n.) யவன தேயத்தான்; foreigner, especially Greek, Arab or Moor (திவா.). *"சோனகர் மனையின்னுாய்" (கம்பரா.ஊர்தேடு.112).*

*[Skt. yavana > த. சோனகன்.]*

**சோனபதன்** *šōṉapadaṉ,* பெ.(n.) பித்தன்; lunatic (சா.அக.).

**த.வ. பித்துக்கொளி**

**சோனம்** *šōṉam,* பெ.(n.) 1. சிறு கரும்பு; a kind of sugarcane of stunted growth. 2. இரும்பு; iron. 3. 56 நாடுகளுள் ஒன்று; one of the 56 countries according to the territorial division of ancient days (சா.அக.).

**சோனாகம்** *šōṉāgam,* பெ.(n.) பெரு வாகை; common sirissa (சா.அக.).

**சோனி** *šōṉi,* பெ.(n.) 1. வளராமலும், பருக்காமலும் உள்ளவன்; a man of stunted growth and slender body. 2. மெலிந்தவன்; lean or slender body (சா.அக.).

**த.வ. கறளை**

**சோனிடாட்சகி** *šōṉiḍāṭšagi,* பெ.(n.) குந்திரிக்கம்; frankincense (சா.அக.).

**சோனை**[1] *šōṉai,* பெ.(n.) 1. மூடுபனி; mist. 2. ஓர் அத்தி வகை; a kind of fig. 3. விடாமழை; torrential rain (சா.அக.).

**சோனை**[2] *šōṉai,* பெ.(n.) திருவோணம் (பார்க்க); the 22nd nakṣatra (பிங்.).

*[Skt. šrōṇā > த. சோனை.]*

**சோனைப்புல்** *šōṉai-p-pul,* பெ.(n.) அக்க தேவி; guinea grass found in poor clay soil (சா.அக.).

**சோனையத்தி** *šōṉaiyatti,* பெ.(n.) 1. **சோனை** பார்க்க; see *šōṉai.* 2. **சொனையத்தி** பார்க்க; see *šoṉaiyatti* (சா.அக.).

**செள** *šau,* பெ.(n.) சிறுமிகளையும் வாழ்வரசிகளையும் குறிக்க வழங்கும் செளபாக்கியவதி என்ற சொல்லின் முதல் எழுத்துக் குறிப்பு; the initial letter of the word *šaupākkiyavadi,* used by elderly persons before the names of young girls and married women.

**த.வ. திருநிறைச்செல்வி**

*[Skt. sau> த. செள.]*

**செளக்கம்**[1] *šaukkam,* பெ.(n.) பண்டங்களின் மலிவு; cheapness.

**செளக்கம்**[2] *šoukkam,* பெ.(n.) **சவுக்கம்** பார்க்க; square. see *savukkam (சா.அக.).*

**த.வ. சதுக்கம்**

**செளக்கார்** *šaukkār,* பெ.(n.) பணம் கொடுக்கல் வாங்கல் செய்பவன்; native banker, sowcar.

**த.வ. கொள்கொடையாளன், வட்டிக்காரன், காசுக்கடைக்காரன்**

*[Pkt. sāvakār>த. செளக்கார்.]*

**சௌக்காரி** *šaukkāri,* பெ.(n.) **சாவ்கார்** பார்க்க; see *šaukkār.*

**சௌக்கிதார்** *šaukkidār,* பெ.(n.) பாராக்காரன்; chokidar, guard, sentinel (Loc.).

**த.வ. காவற்காரன்**

*[H. caukidār> த. சௌக்கிதார்.]*

**சௌக்கியத்தப்பு** *šaukkiya-t-tappu,* பெ.(n.) நோய்; ill health, indisposition.

**த.வ. நலப்பிழை**

*[சௌக்கியம் + தப்பு.]*

*[Skt. saukhya>த. சௌக்கியம்]*

**சௌக்கியம்** *šaukkiyam,* பெ.(n.) 1. நலம்; health, convalescence. 2. **சௌகரியம்** பார்க்க; see *šaugariyam.* 3. மலங்கழிக்கை; evacuation (Loc.).

*[Skt. šaukhya > த. சௌக்கியம்.]*

**சௌக்கியவீனம்** *šaukkiyavīnam,* பெ.(n.) நலமில்லாமை; ill health.

**த.வ. உடல்நலிவு**

*[Skt. saukhya+hina>த. சௌக்கியவீனம்.]*

**சௌக்கு[1]** *šaukku,* பெ.(n.) **சவுக்கம்,** 1 பார்க்க; see *šavukkam,1.*

**த.வ. அம்பலம், பொதுவிடம்**

**சௌக்கு[2]** *šoukku,* பெ.(n.) **சவுக்கு** பார்க்க; see *šavukku* (சா.அக.).

**சௌகண்டிகம்** *šoukandigam,* பெ.(n.) கோழையினால் வயிற்றில் பிறக்கும் ஒரு வகைப் பூச்சி; a kind of worm born at the lower end of the stomach out of phlegm (சா.அக.).

**த.வ. சளிப்பூச்சி**

**சௌகதன்** *šowkadan,* பெ.(n.) மந்திரவாதி; a magician, a sorcerer (சா.அக.).

**த.வ. மந்திரக்காரன்**

**சௌகந்தகம்** *šowkandagam,* பெ.(n.) 32 வகை நஞ்சுகளில் ஒரு வகை நஞ்சாகிய கற்கடக நஞ்சு; a kind of arsenic poison (சா.அக.).

**சௌகந்தி** *šaukandi,* பெ.(n.) 1. மாணிக்க வகை (சிலப்.14, 186, உரை); a kind of ruby having the tint of the red flowered water-lilly, one of four *māṇikkam,* q.v. 2. கந்தகச் செய்நஞ்சு; a mineral poison.

*[Skt. saugandhika > த. சௌகந்தி.]*

**சௌகந்திகம்** *šaukandigam,* பெ.(n.) 1. நீல ஆம்பல் (நீலோற்பலம்); blue Indian water lilly. 2. **சௌகந்தி** பார்க்க; see *šaukanti.* 3. வெள்ளாம்பல் (மலை.); white Indian water-lilly.

*[Skt. saugandhika > த. சௌகந்திகம்.]*

**சௌகந்திகை** *šoukandigai,* பெ.(n.) மணமுள்ள ஒரு வகைத் தாமரை; a kind of fragrant lotus (சா.அக.).

**சௌகந்தியம்** *šoukandiyam,* பெ.(n.) 1. நலம்; health. 2. **சௌக்கியம்** பார்க்க; see *šowkkiyam.* 3. மணம்; fragrant (சா.அக.).

**சௌகம்[1]** *šaugam,* பெ.(n.) நான்கு; four.

*[H. cauk > த. சௌகம்.]*

**சௌகம்[2]** *šougam,* பெ.(n.) 1. கிளி; parrot. 2. துன்பம் (துக்கம்); grief (சா.அக.).

**சௌகரிகம்** *šougarigam,* பெ.(n.) **சௌகரியம்** பார்க்க; see *šowgariyam* (சா.அக.).

**த.வ. ஏந்து**

**சௌகரியம்** *šougariyam,* பெ.(n.) 1. ஏந்து (வசதி); ease, comfort, convenience. 2. மலிவு; cheapness.

**த.வ. ஏந்து**

*[Skt. saukarya > த. சௌகரியம்.]*

**சௌகு** *śougu,* பெ.(n.) 1. மண்காரம்; crude carbonate of soda. 2. வளையலுப்பு; glass gall. 3. சவுட்டுப்பு; nitre, potasium nitrate (சா.அக.).

ந.வ. உவர்மண் உப்பு

**சௌகுமாரியம்** *śoukumāriyam,* பெ.(n.) இளமை; youth (சா.அக.).

**சௌச்சிதம்** *śouccitam,* பெ.(n.) சங்கிலை; four spined monetia (சா.அக.).

**சௌசண்டி** *śousaṇḍi,* பெ.(n.) திப்பிலி; long pepper (சா.அக.)



**சௌசம்** *śausam,* பெ.(n.) 1. தூய்மை; purity, cleanliness (சூடா.). 2. கால் கழுவுகை; cleansing, washing after evacuation.

*[Skt. śauca > த. சௌசம்.]*

**சௌசவிதி** *śausa-vidi,* பெ.(n.) உடம்பைத் தூய்மைச் செய்ய வேண்டிய முறை; rules prescribed for washing one's body.

*[Skt. śauca + vidhi > த. சௌசவிதி.]*

**சௌசன்னியம்** *śaucaṉṉiyam,* பெ.(n.) 1. இனிய குணம்; kindly disposition, amiability. 2. நெருங்கிய நட்பு; friendship, intimacy.

த.வ. நல்லிணக்கம்

*[Skt. saujanya > த. சௌசன்னியம்.]*

**சௌசிங்கம்** *śouśiṅgam,* பெ.(n.) மலையாடு; four horned antelope (சா.அக.).

த.வ. வரையாடு

**சௌசௌ** *sousou,* பெ.(n.) 1. உணவு வகை (இ.வ.); chow-chow. 2. காய்கறிவகை (இ.வ.); a kind of vegetable. 3. பல நாடகங்களிலிருந்து ஒவ்வொரு கூறுகளை எடுத்துக் கொண்டு நடிக்கும் நாடக வகை; a variety entertainment made up of several short dramatic performances (mod.).

**சௌடால்** *śauḍāl,* பெ.(n.) சவடால்; ostentation, stylishness.

த.வ. இடக்குப்பேச்சு

*[U. cautāl > த. சௌடால்.]*

**சௌடீரியம்** *śouḍiriyam,* பெ.(n.) மறம், வீரம்; valour (சா.அக.).

**சௌடோல்** *souḍōl,* பெ.(n.) யானை மீது அமைக்கப்படும் இருக்கை (அம்பாரி); howdah.

த.வ. யானைத்தவிசு

*[H. cauḍōla > த. சௌடோல்.]*

**சௌண்டலை** *souṇḍalai,* பெ.(n.) சோலை வெண் தேக்கு; garden white teak (சா.அக.).

**சௌண்டிகன்** *souṇḍigaṉ,* பெ.(n.) கள் விற்போன் (சூடா.); toddy - seller.

*[Skt. śauṇḍika > த. சௌண்டிகன்.]*

**சௌத்தி** *soutti,* பெ.(n.) உடன்கிழத்தி (சக்களத்தி) (வின்.); rival or co-wife.

**சௌத்திரமேகம்** *southtiramēgam,* பெ.(n.) சிறுநீர், தேனைப் போலவும், சுவைக்கத் தித்திப்பாயும் உள்ள ஒரு வகை வெள்ளை நோய்; a disease in which urine resembles honey and acquires a sweet taste (சா.அக.).

**சௌத்திரன்** *souttiraṉ,* பெ.(n.) சூத்திரன் பார்க்க; *see sūdra.*

*[Skt. sūdra > śaudra > த. சௌத்திரன்.]*

**சௌத்திராந்திகம்** *souttirāndigam,* பெ.(n.) சூத்திரபிடகத்தை மட்டும் அதிகாரமாகக் கொள்ளும் பௌத்த மதப் பிரிவு; a school of Buddhism which admits the authority of the buddhist *sūtras* only.

*[Skt. sautrāntika > த. சௌத்திராந்திகம்.]*

**சௌத்திராந்திகன்** *souttirāndigan,* பெ.(n.) புத்த மதத்தில் சௌத்திராந்திகப் பிரிவைச் சார்ந்தவன்; the follower or adherent of *cauttirāntika* sect of buddhism (சி.போ.பா. அவை. பக்.37).

*[Skt. sautrāntika > த. சௌத்திராந்திகன்.]*

**சௌத்திராமணி** *souttirāmaṇi,* பெ.(n.) இந்திரனைக் குறித்துச் செய்யும் வேள்வி வகை; a sacrifice in honour of indra (திவா.).

த.வ. இந்திரவிழா

**சௌத்து**[1] *souttu,* பெ.(n.) போலிகை (மாதிரிகை); pattern, sample, model.

**சௌத்து**[2] *souttu,* பெ.(n.) மகாராட்டிரத்து ஆட்சியின் கீழ்ப்பட்ட அரசரிடமிருந்து தண்டல் செய்த தொகையின் நாலில் ஒரு பாகமான அரசிறை; one fourth of the actual collections of revenue, levied by the mahrattas on their subordinate rulers.

*[U. cauth > த. சௌத்து.]*

**சௌதம்** *šoudam,* பெ.(n.) வெள்ளி; silver (சா.அக.).

**சௌதயம்** *šoudayam,* பெ.(n.) பெருங் காளான்; large variety of mushroom (சா.அக.).

**சௌதாகிரி** *šoudāgiri,* பெ.(n.) குதிரை வணிகர்; horse dealer.

*[Persn. saudāgari > த. சௌதாகிரி.]*

**சௌதாகிரிக்குதிரை** *šoudāgiri-k-kudirai,* பெ.(n.) விற்கப்படுங் குதிரை (வின்.); horse for sale.

**சௌதாய்ப்புல்வரி** *šoudāi-p-pulvari,* பெ.(n.) புல் தரையைப் பயிர் நிலமாக்கிப் பயன் படுத்துவதற்கு இடப்படும் நாலிலொரு பங்கு நிலவரி; tax levied for grazing = 1/4 of the full assessment of the land when used for cultivation.

*[சௌதாய்+புல்+வரி.]*

*[U. cauth > த. சௌதாய்ப்புல்வரி.]*

**சௌதாயம்** *šoudāyam,* பெ.(n.) 1. முன் பின்னாக அன்புடைச் சுற்றத்தாராற் கொடுக் கப்படுங் கொடை வகை; gift made to a woman by affectionate kindred, before of after marriage. 2. வெகுமதிப் பொருள்; prize, reward.

த.வ. பரிசப்பொருள்

*[Skt. su-dāya > த. சௌதாயம்.]*

**சௌதாயிகம்**[1] *šoudhāyigam,* பெ.(n.) குளிர்ச்சி; coldness (சா.அக.).

**சௌதாயிகம்**[2] *šoutdāyigam,* பெ.(n.) **சௌதாயம்** பார்க்க; see *šoudhāyam* (விவகாரசங்.சிறப்.பக்.90).

*[Skt. šaudāyika > த. சௌதாயிகம்.]*

**சௌந்தம்** *šoundam,* பெ.(n.) ஒரு பிறவி நஞ்சு; (கற்கடக நஞ்சு); a mineral poison (சா.அக.).

**சௌந்தரசூரிதம்** *šoundara-sūridam,* பெ.(n.) குளிக்கும் மஞ்சள்; turmeric used for bath (சா.அக.).

த.வ. குளிமஞ்சள்

**சௌந்தரம்**[1] *šoundaram,* பெ.(n.) **சௌந்தரியம்** பார்க்க; see *šowndariyam* (சா.அக.).

த.வ. அழகு

**சௌந்தரம்**[2] *šoundaram,* பெ.(n.) **சௌந்தரியம்** பார்க்க (வின்.); see *šowndariyam.*

த.வ. அழகு

**சௌந்தரமுகம்** *šoundara-mugam,* பெ. (n.) 1. மலர்ந்த முகம்; blooming, joyful countenance. 2.முகநளிநயம்பதினான்கனுள் ஒன்றாய் மிக்க மகிழ்ச்சியால் மலர்ந்த முகத்தைக் காட்டுகை; showing a cheerful countenance indicative of over flowing happiness, one of 14 *muka-v-apiṉayam,* q.v. (*nāṭya.*).

த.வ. அழகுமுகம்

*[சௌந்தர(ம்)+முகம்.]*

*[**Skt.** sundara > **த.** சௌந்தரம்.]*

**சௌந்தரி** *šoundari,* பெ.(n.) அழகுடையவள்; a lovely woman (கொ.வ.).

த.வ. அழகி

*[**Skt.** sundarī > **த.** சௌந்தரி.]*

**சௌந்தரிகம்** *šoundarigam,* பெ.(n.) அழகு; beauty (சா.அக.).

த.வ. புனையா அழகு

**சௌந்தரிகை** *šoundarigai,* பெ.(n.) 1. கண்ணாடியிலைப் பூடு; looking glass plant of S.ghat. 2. **சௌன்முந்திரி** பார்க்க; see *šowṉ-muntiri.* 3. **சோலைவெண்தேக்கு** பார்க்க; see *šōlai-veṇtēkku* (சா.அக.).

**சௌந்தரியப்பூடு** *šoundariya-p-pūḍu,* பெ.(n.) **இரத்தினத்திரு** பார்க்க; see *irattiṉa-t-tiru* (சா.அக.).

**சௌந்தரியம்** *šoundariyam,* பெ.(n.) அழகு; beauty, loveliness.

*[**Skt.** saundarya > **த.** சௌந்தரியம்.]*

**சௌந்தரியலகரி** *šoundariya-lagari,* பெ.(n.) வீரைக் கவிராச பண்டிதரால் தமிழ்ச் செய்யுளாகச் செய்யப்பட்டதும் சங்கராச் சாரியார் எழுதிய சௌந்தரியலகரியின் மொழி பெயர்ப்புமான ஒரு நூல்; a metrical version in Tamil of *šaṅkarācārya šowndarya lagari,* by *Virai-k-kavirāca-paṇḍidar.*

*[**Skt.**saundaryalahari>**த.** சௌந்தரியலகரி.]*

**சௌந்தரியவதி** *šoundariyavadi,* பெ.(n.) அழகுள்ளவள்; beautiful woman.

*[**Skt.**saundarya-vati>**த.** சௌந்தரியவதி.]*

**சௌந்தி** *šoundi,* பெ.(n.) கந்தக நஞ்சு; a kind of sulphur poison (சா.அக.).

**சௌந்திகா** *šoundikā,* பெ.(n.) ஒரு வகைக் கீரை; a kind of greens (சா.அக.).

**சௌந்திபம்** *šoundibam,* பெ.(n.) கொச்சி சாரம்; sal ammoniac prepared in cochin (சா.அக.).

**சௌந்திராப்பூ** *šoundirāppū,* பெ.(n.) பனி நீர் மலர்; rose flower (சா.அக.).

**சௌப்திகம்** *šouptigam,*பெ.(n.) துயில்வோரை எதிர்த்துக் கொல்லுகை; night attack and slaughter of sleeping persons. *"சௌப்திக பருவம்" (பாரத.).*

*[**Skt.** sauptika > **த.** சௌப்திகம்.]*

**சௌபஞ்சம்** *šoupañjam,* பெ.(n.) **சௌபஞ்சனம்** பார்க்க; see *šoupañjaṉam* (சா.அக.).

**சௌபஞ்சனம்** *šoupañjaṉam,* பெ.(n.) புனல் முருங்கை (மலை.); three-leaved indigo.

*[**Skt.** šaubhōñjana > **த.** சௌபஞ்சனம்.]*



**சௌபலன்** *šoubalaṉ,* பெ.(n.) சகுனி; *Saguṉi.* *"கன்னசௌபலர்" (பாரத. வாரணா. 5).*

த.வ. சகுனி – பறவைக் குறிப் பார்ப்பதில் வல்லவன்

*[Skt. saubaka > த. சௌபலன்.]*

**சௌபன்னம்** *śoupannam,* பெ.(n.) 1. சுக்கு; dried ginger. 2. மரகதம்; emerald (யாழ்.அக.).

*[Skt. sauparṇa > த. சௌபன்னம்.]*

**சௌபாக்கியசிந்தாமணி** *soubākkiya-śindāmaṇi,* பெ.(n.) ஓர் ஆயுள்வேத மருந்து; an ayurvedic medicine (சா.அக.).

**சௌபாக்கியசுண்டிமோதகம்** *śoubākkiya-suṇḍi-mōdagam,* பெ.(n.) ஆமலபித்தம், செரியாமை, குன்மம் இவற்றிற்குக் கொடுக்கும் ஆயுள்வேத மருந்து; an ayurvedic medicine prescribed for indigestion biliousness pain in the stomach etc. (சா.அக.).

**சௌபாக்கியசொண்டி** *śoubākkiya-śoṇḍi,* பெ.(n.) சுக்குடன் பல கடைச்சரக்குகளும், மூலிகைச் சாறுகளும் சேர்த்து, நெய் சக்கரையும் கலந்து, இளகியமாக்கி, மாத விலக்கு (சூதகவலி) வலிக்குக் கொடுக்கும் மருந்து; an ayurvedic preparation contemplated in the work of Barathwaja Rishi. It is an electuary prepared with dried ginger as the chief ingredients amongst other bazaar drugs (சா.அக.).

**சௌபாக்கியபரம்** *śoubākkiyaparam,* பெ.(n.) இதளியம்; mercury (சா.அக.).

**சௌபாக்கியம்**[1] *śoubākkiyam,* பெ.(n.) 1. மிகு பேறு; auspiciousness, good fortune, prosperity. *"இகபர சௌபாக்கிய மருள்வாயே" (திருப்பு.177).* 2. ஓகம் (யோகம்) இருபத்தேழனுள் ஒன்று; a division of time, one of 27 *yōgam,* q.v. (Astron.). 3.நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; an upanisad, one of 108.

த.வ. மிகுநலம்

*[Skt. saubhāgya > த. சௌபாக்கியம்.]*

**சௌபாக்கியம்**[2] *śoubākkiyam,* பெ.(n.) 1. செங்கழுநீர்; red Indian water lily. 2. சுக்கு; dried ginger (சா.அக.).

**சௌபாக்கியரேகை** *śoubākkiya-rēgai,* பெ.(n.) ஒருவனது ஆகூழைக் குறிப்பதாகக் கருதப்படும் கைவரி வகை (கொ.வ.); a kind of distinctive mark on the palm, believed to indicate one's fortune.

த.வ. நற்பேற்றுக்கைவரி

*[Skt.saubhāgya>த. சௌபாக்கியம்.]*

**சௌபாக்கியவதி** *śoubākkiyavadi,* பெ.(n.) சிறு பெண்கள், திருமணமான மகளிர் இவர்களின் பெயர்க்கு முன் வழங்கும் ஒரு மங்கலச் சொல்; a title applied to a girl or woman whose husband is alive.

த.வ. திருவளர்செல்வி

*[Skt.saubhāgyavati> த. சௌபாக்கியவதி.]*

**சௌபாஞ்சனம்** *śoubāñjaṉam,* பெ.(n.) 1. ஒரு வகை முருங்கை மரம்; drumstick tree. 2. முள் முருங்கைமரம் (சா.அக.); Erythrina indica.

**சௌபாமிகம்** *śoubāmigam,* பெ.(n.) கொட்டையில்லா முந்திரி; seedless grapes (சா.அக.).

**சௌபானம்** *śoubāṉam,* பெ.(n.) படிக்கட்டு; steps, as of a staircase. *"பண்புறவே சௌபான பட்சங்காட்டி" (தாயு.ஆகார.10).*

*[Skt. sōpāna > த. சௌபானம்.]*

**சௌபிகள்** *śoubigaḷ,* பெ.(n.) 1. மாந்திரிகன்; magician. 2. மந்திர வித்தை கற்றவன்; hypnotiser, sorcerer (சா.அக.).

**சௌமம்** *śoumam,* பெ.(n.) சிற்ப நூல் முப்பத்திரண்டனுள் ஒன்று; a treatise on architecture, one of 32 *cirpa-nūl,* q.v. (இருசமய சிற்பசாத்.3).

*[Skt. sauuma > த. சௌமம்.]*

**சௌமலி** *śoumali,* பெ.(n.) முள் இலவமரம்; the red silk cotton tree (சா.அக.).

**சௌமன்** *śoumaṉ,* பெ.(n.) நிலா (சந்திரன்) மகனாகிய அறிவன் (புதன்); mercury, as the moon's son.

*[Skt. saumya > த. சௌமன்.]*

**சௌமனசாயினி** *śoumaṉaśāyiṉi,* பெ. (n.) மலடி மலர்; echites caryophyllata (சா.அக.).

**சௌமனசை** *śoumaṉasai,* பெ.(n.) சாதி பத்திரி; mace pulp over nutmeg (சா.அக.).

**சௌமிய** *śoumiya,* பெ.(n.) வடமொழி யாளரின் ஆண்டு வட்டம் அறுபதனுள் நாற்பத்து மூன்றாவது; the 43rd year of the jupiter cycle.

*[Skt. saumya > த. சௌமிய.]*

**சௌமியம்** *śoumiyam,* பெ.(n.) 1. அமைதி; calmness, gentleness, meekness. 2. அழகு; loveliness, beauty.

*[Skt. saumya > த. சௌமியம்.]*

**சௌமியவாரம்** *śoumiya-vāram,* பெ.(n.) அறிவன் (புதன்) கிழமை (கொ.வ.); wednesday.

*[Skt. soumya+vāra > த. சௌமியவாரம்.]*

**சௌமியன்** *śoumiyaṉ,* பெ.(n.) 1. பொறுமை யுள்ளவன்; person of gentle disposition. 2. அறிவன் (புதன்) (திவா.); mercury. 3. பன்னிருகதிரவருள் ஒருவர் (திவா.); a Rudra, one of *ekādacaruttirar.* 4. சமணத் துறவி (சூடா.); jaina ascetic. 5. அருகன் (சங்.அக.); Arhat.

**சௌரம்[1]** *śouram,* பெ.(n.) 1. துணைத் தொன்மம் பதினெட்டனுள் ஒன்று; a secondary *purāṇa,* one of 18 *upa-purāṇam* q.v. 2. சூரியனை வழிபடும் சமயம்; the religion of the sauras who regard the sun as the supreme being and are exclusively devoted to his worship.

*[Skt. saura > த. சௌரம்.]*

**சௌரம்[2]** *śouram,* பெ.(n.) மயிர் மழிக்கை; shaving.

*[Skt. kṣaura > த. சௌரம்.]*

**சௌரமாசம்** *śoura-māšam,* பெ.(n.) சூரிய சுழற்சியினால் ஏற்படும் மாதம் (விதான. குணகுண.80, உரை); solar month.

*[Skt. saurā+māsa > த. சௌரமாசம்.]*

**சௌரமானம்** *śoura-māṉam,* பெ.(n.) சூரிய சுழற்சியைக் கொண்டு மாத ஆண்டுகளை அளவிடும் முறை; system of calculation of months and years based on the sun's course. *"சௌரமானபட்சத்தால் மாசித் திங்கள் கொள்ளார்" (சீவக. 493, உரை).*

**த.வ. கதிராண்டுமானம்**

*[சௌரம்+மானம்]*

*[Skt. saura> த. சௌரம்]*

**சௌராட்டிரம்[1]** *śourāṭṭiram,* பெ.(n.) 1. வெண்கலம்; bronze, bell metal. 2. பித்தளை; brass (சா.அக.).

**சௌராட்டிரம்[2]** *śourāṭṭiram,* பெ.(n.) 1. கத்தியவார் என்று இக்காலத்துக் கூறப்படும் தேசம்; Surat, modern peninsula of Kathiawar. 2. பண்வகை; a secondary tune (Mus.).

**சௌராட்டிரர்** *śourāṭṭirar,* பெ.(n.) தென்னாட்டு நாயக்கர்களினாட்சியில் கூர்ச்ச தேயத்திலிருந்து தமிழ் நாட்டிற் புகுந்தவரும், குசராத்திக்குத் தொடர்புடைய ஒருவகைப் மொழியைப் பேசுபவருமான பட்டு நூற்காரச் சாதியார்; a class of silk-weavers, immigrants from Gujarat into the Tamil country in the days of the early Nayak kings, speaking a corrupt dialect of Gujarati (E.T.).

*[Skt. saurāṣṭira > த. சௌராட்டிரர்.]*

**சௌராட்டிரிகம்** *śourāṭṭirigam,* பெ.(n.) ஒரு வகை வசனாவி; a species of aconite root grown near surat (சா.அக.).

**சௌரி[1]** *śouri,* பெ.(n.) 1. காரி, (சனி); saturn. 2. காலன் (யமன்); Yaman, the god of death. 3. கர்ணன்; *Karṇan.*

**சௌரி²** *šouri,* பெ.(n.) யமுனை நதி (பிங்.); the jamuna river.

**சௌரி³** *šouri,* பெ.(n.) திருமால் (பிங்.); *Visṇu.*

**சௌரி⁴** *šouri,* பெ.(n.) 1. கருடன்; Brahmini kite. 2. சவுரிப்பழம் அல்லது குறட்டைப் பழம்; fruit of round snake gourd. (சா.அக.).

**சௌரி⁵** *šouri,* பெ.(n.) **சவரி¹** பார்க்க; see *savari¹;* chowry.

**சௌரிக்கொத்து** *šouri-k-kottu,* பெ.(n.) முதியோர் கூந்தல் என்னும் மூலிகை; creeper of *šouri* (சா.அக.).

**சௌரிப்பழம்** *šouri-p-palam,* பெ.(n.) குறட்டைப் பழம்; fruit of round snake gourd (சா.அக.).

**சௌரியம்¹** *šouriyam,* பெ.(n.) களவு; theft (திவா.).

*[Skt. caurya > த. சௌரியம்.]*

**சௌரியம்²** *šouriyam,* பெ.(n.) வீரம் (சூடா.); prowess, bravery, valour.

த.வ. மறம்

*[Skt. šaurya > த. சௌரியம்.]*

**சௌரியம்³** *šouriyam,* பெ.(n.) **சௌகரியம்** பார்க்க (கொ.வ.); see *šougariyam.*

**சௌரியலட்சுமி** *šouriya-latcumi,* பெ.(n.) வீர இலக்குமி; the goddess of heroism.

த.வ. வெற்றிச்செல்வி

*[Skt. šaurya+lakṣmi>த. சௌரியலட்சுமி.]*

**சௌரியவான்** *šouriya-vān,* பெ.(n.) வீரன்; brave person.

*[Skt. šaurya > த. சௌரியவான்.]*

**சௌரியன்** *šouriyan,* பெ.(n.) **சௌரியவான்** பார்க்க (யாழ்.அக.); see *sauriyavān.*

*[Skt. šaurya > த. சௌரியன்.]*

**சௌரிரத்தினம்** *šouri-rattinam,* பெ.(n.) நீலமணி; sapphire, a blue gem (சா.அக.).

**சௌரு** *šouru,* பெ.(n.) 1. கொச்சை நாற்றத்தோடு கூடிய சுவை; greasy taste, as of goat's milk. 2. உவர்ப்பு; brackishness (w.).

*[Skt.T. tcaura>K.savuḷu.> த. சௌரு-]*

**சௌல்** *šoul,* பெ.(n.) 1. மகிழ்ச்சி; jollity. 2. இடம்பம்; ostentation.

*[U. caul > த. சௌல்.]*

**சௌலப்பியம்** *šōulappiyam,* பெ.(n.) எளியதாந்தன்மை; easiness of acquisition or attainment accessibility, affability.

த.வ. எளிமை

*[Skt. saulabhya > த. சௌலப்பியம்.]*

**சௌலம்** *šoulam,* பெ.(n.) 1. அரை உருபா; half a rupee. 2. 6 3/4 குண்டுமணி எடை; 6 3/4 grams weight (சா.அக.).

**சௌவர்ச்சலம்** *šouvar-c-calam,* பெ. (n.) 1. உப்பு வகை; a kind of salt. 2. உவர்நீர்; brackish water.

*[Skt. sauvarcala > த. சௌவர்ச்சலம்.]*

**சௌவர்ணம்** *šouvarṇam,* பெ.(n.) 1. சுக்கு; dried ginger. 2. மரகதம்; emerald, a green gem. 3. சுக்குநாறி மரம்; a tree smelling like dried ginger (சா.அக.).

**சௌவரிசி** *šouariši,* பெ.(n.) சவ்வரிசி; sago (சா.அக.).

**சௌவாது** *šouvādu,* பெ.(n.) **சவ்வாது** பார்க்க; see *šavvādu* (சா.அக.).

**சௌவிதி** *šouvidi,* பெ.(n.) மலமும் நீரும் கழித்த பின் தூய்மை செய்யும் நெறி; rules regarding the washing of the posterior after passing stools (சா.அக.).

**சௌவீரகம்** *šouvīragam,* பெ.(n.) 1. இலந்தைக் கனி; indian plumziziphus jujuba. 2. வீரம்; corrosive sublimate (சா.அக.).

**சௌவீரம்** *šouvīram,* பெ.(n.) 1. **சவ்வீரம்** பார்க்க; see *šavvīram. "கற்றவர் புகழ் சௌவீர மிக்கோரம்" (திருவிளை.நரிபரி.106).* 2. வைப்பு நஞ்சு முப்பத்திரண்டனுள் ஒன்று; a prepared arsenic, one of 32. 3. இலந்தை (மூ.அ.); jujuba tree.

*[Skt. sauvīra > த. சௌவீரம்.]*

**சௌளம்** *šoulam,* பெ.(n.) முதலில் பிறந்த ஆண் குழந்தைக்கு முடி வாங்குகை; ceremonial shaving of a male child's head, one of *cōṭaca-camskāram,* q.v.

த.வ. முடியிறக்குதல்; முடிகொடுத்தல்

*[Skt. caula > த. சௌளம்.]*

**டக்கணி** *ṭakkaṇi,* பெ.(n.) தக்காண நாடு (வின்.); country of deccan.

*[H > dakkhani > E.Deccan > த. டக்கணி]*

**டக்கயம்** *ṭakkayam,* பெ.(n.) கொடி; flag. *"பொர டக்கயம் பிடியென்றான்" (தனிப்பா. I, 415, 55).*

தெ. டெக்கியமு; க. டெகெ.

**டக்கர்[1]** *ṭakkar,* பெ.(n.) மோதுகை; striking or knocking against; collision. *'வண்டி ஒன்றோடொன்று டக்கரடித்தது' (கொ.வ.).*

*[H. ṭakkar > த. டக்கர்]*

**டக்கர்[2]** *ṭakkar,* பெ.(n.) குழப்பம் (இ.வ.); confusion, bewilderment.

*[U. tagar > த. டக்கர்]*

**டக்கரடி-த்தல்** *ṭakkar-aḍi-,* செ.கு.வி.(v.i.) 1. ஒன்றோடொன்று மோதுதல் (இ.வ.); to collide. 2. சவாரிக் குதிரை முதலியன முரட்டுத்தனம் பண்ணுதல் (கொ.வ.); to be unruly or unmanageable, as a restive or turbulent horse.

*[டக்கர் + அடி-,]*

*[U. ṭagar > த. டக்கர்]*

**டக்காமுக்கி** *ṭakkā-mukki,* பெ.(n.) இக்கட்டு, மனக் கடினப்பாடு (இ.வ.); difficulty, trying occasion, perplexity, trouble.

*[H. dagmag > த. டக்காமுக்கி]*

**டக்கியம்** *ṭakkiyam,* பெ.(n.) கொடி; flag.

தெ. டக்கியமு; க. டக்கிய

**டக்கு[1]** *ṭakku,* பெ.(n.) 1. ஏமாற்று (தந்திரம்); dodge, trick, pretence. 2. பகட்டு நடை (பிகு); affectation.

தெ. டக்கு.

**டக்கு[2]** *ṭakku,* பெ.(n.) சட்டை முதலியவற்றில் வைக்கும் மடிப்பு; fold in a garment.

*[E. tuck > த. டக்கு]*

**டக்குடமாரம்** *ṭakkuḍamāram,* பெ.(n.) ஏமாற்றுகை; deceit. *'டக்குடமாரம் பண்ணிப் பணம் வாங்கி விட்டான்' (இ.வ.).*

தெ. டக்குமடாரம்.

**டக்குத்தனம்** *ṭakku-t-taṉam,* பெ.(n.) ஏமாற்றும் தன்மை; cunning. deceitful behavior.

*[டக்கு + தனம்]*

**டக்குத்தையல்** *ṭakku-t-taiyal,* பெ.(n.) ஒட்டுத்தையல் (இ.வ.); tucking.

*[டக்கு + தையல்]*

*[E. tuck > த. டக்கு]*

**டக்குப்பிடி-த்தல்** *ṭakku-p-piḍi-,* 4 செ.கு.வி. (v.i.) சட்டை முதலியவற்றில் மடிப்பு வைத்துத் தைத்தல் (கொ.வ.); to tuck or sew folds in a garment.

த.வ. மடிப்புப் பிடித்தல்

*[டக்கு + பிடி-,]*

*[E. tuck > த. டக்கு]*

**டக்குப்புக்கு** *ṭakku-p-pukku,* பெ.(n.) புரட்டு; cunning device, trickery.

**டக்குவண்டி** *ṭakkuvaṇḍi,* பெ.(n.) தொடர் சரக்குந்துகள்; railway truck.

*[டக்கு + வண்டி]*

*[E. truck > த. டக்கு]*



**டக்கை** *ṭakkai*, பெ.(n.) இடக்கைப் பறை; small drum beaten by the left hand.

*[**Skt**. dhakkā > த. டக்கை]*

**டக்தர்** *ṭaktar*, பெ.(n.) மருத்துவர் (வைத்தியன்) (பாண்டி.); doctor.

*[**E**. doctor > த. டக்தர்]*

**டகர்வாங்கு-தல்** *ṭagar-vāṅgu-*, 5 செ.குன்றாவி.(v.t.) **டர்வாங்கு**, பார்க்க; see *ṭar-, vāṅgu-,*.

*[டகர் + வாங்கு-,]*

**டகல்பாச்சி** *ṭagal-pācci*, பெ.(n.) வஞ்சகன்; cunning man.

த.வ. ஏமாற்றி, ஏய்ப்பன்

*[**Persn**. daghabāzi > த. டகல்பாச்சி]*

**டங்கணம்** *ṭaṅgaṇam*, பெ.(n.) வெண்காரம்; borax.

*[**Skt**. taṅkaṇa > த. டங்கணம்]*

**டங்கம்** *ṭaṅgam*, பெ.(n.) கற்றச்சன் உளி, கல்லுளி; stone-cutter's chisel.

*[**Skt**. taṅka > த. டங்கம்]*

**டங்கா** *ṭaṅgā*, பெ.(n.) ஒருவகைத் தோற்கருவி (இ.வ.); a small drum, a pair of kettle - drums.

*[**U**. daṅka > த. டங்கா]*



**டங்காக்கிழி-த்தல்** *ṭaṅkā-k-kiḻi*, 4 செ.குன்றாவி.(v.t.) உடலைக் கிழித்து விடுதல் (இ.வ.); to tear one's body to pieces.

*[டங்கா + கிழி-,]*

**டங்காக்கிழிதல்** *ṭaṅgā-k-kiḻidal*, பெ.(n.) வேலை மிகுதியால் வலிமை குறைகை (இ.வ.); exhaustion from over work, as a drum spoiled by over-beating.

*[டங்கா + கிழி-.]*

*[**U**. daṇkā > த.டங்கா]*

*[கிழி → கிழிதல். 'தல் தொ.பெ.ஈறு]*

**டங்காக்குதிரை** *ṭaṅgā-k-kudirai*, பெ.(n.) டங்கா என்னும் தோற்கருவியை ஏற்றிக் கொண்டு ஊர்வலத்தில் செல்லும் குதிரை (இ.வ.); horse used to carry kettle-drums in a procession.

*[டங்கா + குதிரை.]*

*[**U**. daṇkā > த.டங்கா]*

*[குதி → குதிரை]*

**டங்கார்** *ṭaṅgār*, பெ.(n.) **டங்குவார்** பார்க்க; see *ṭaṅguvār*.

**டங்காரம்** *ṭaṅgāram*, பெ.(n.) வில்லின் நாணோசை (கொ.வ.); twang of a bowstring.

*[**Skt**. ṭaṅkāra > த. டங்காரம்]*

**டங்கு** *ṭaṅgu*, பெ.(n.) **டங்குவார்** பார்க்க (இ.வ.); see *ṭaṅguvār*.

**டங்குவார்** *ṭaṅguvār*, பெ.(n.) குதிரையைப் பிணிக்கும் தோற்பட்டை; braces of a horse-carriage, saddle - girth.

த.வ. பரிப்பட்டை

*[டங்கு + வார்]*

*[தெ. டங்கு > த. டங்கு]*

வடி → வார் → வாரி = நீண்ட பெருங் கம்பு, நீண்ட தோல் துண்டு.

**டங்குவாரறுத்தல்** *taṅguvār-aṟuttal,* பெ.(n.) 1. மிகுதியாற் களைத்துப் போகை; being overworkeo and exhausted. 2. ஏழ்மைப் படுகை; being reduced to poverty or an unenviable position. 3. குதிரையின் தோற் பட்டை வார் அறுகை; breaking of the saddle girth.

*[டங்கு + வார் + அறுதல்]*

*[Te. taṅguvāru > த. டங்குவார்]*

**டசன்** *tasaṉ,* பெ.(n.) பன்னிரண்டு; twelve.

த.வ. எல்லோன்

*[**E**. dozen > த. டஜன்]*

**டசனடி** *tasaṉ-aḍi,* பெ.(n.) முக்காலியிற் கட்டியடிக்கும் கசையடி (கொ.வ.); flogging or whipping, as a punishment especially for juveniles.

த.வ. கசையடி

*[**E**. dozen > த. டஜன்]*

**டசுதூர்** *tasutūr,* பெ.(n.) பறுவான்களில் விரிக்கப்படும் சதுரப் பாய்களின் வெளிப் புறத்துப் போடப்படும் துணைப்பாய்; studding sail (M. Navi. 83).

த.வ. துணைப்பாய்

**டசுதூர்ப்பட்டை** *tasutūr-p-paṭṭai,* பெ.(n.) சிறு பாய்மரத்தை மாட்டும் துளை (துவாரம்) (naut); eye or hole at the end of a yard through which is passed the studding - sail boom.

*[**U**. dastūr > த. டசுதூர்]*

**டடம்** *taḍam,* பெ.(n.) மத்தள வகை (பரத. ஒழிவி. 13); a kind of mattaḷam.

**டப்டர்தோட்டம்** *taptar-tōṭṭam,* பெ.(n.) தென்னார்க்காடு மாவட்டத்தில் பழைய பதிவேடுகளில் பதிவு செய்யப்பட்டதும் உரிமையாக நுகர்ந்துவருவதும் ஆகிய இலவயத் (அனுபவிக்கப்படும் இனாம்) தோட்டம்; dufter gardens, inam gardens entered in the early dufters or registers in the district of South Arcot and enjoyed as private property without being subject to the ordinary lapse rules.

த.வ. துய்ப்புத்தோட்டம்

**டப்தர்** *taptar,* பெ.(n.) ஆவணங்களின் கட்டு; bundle of documents; registers and other records.

*[**Persn**. daftar > த. டப்தர்]*

**டப்தர்பந்து** *taptar-bandu,* பெ.(n.) 1. அலுவலகத் தொடர்பான ஆவணக் கட்டு களைப் பார்த்துக் கொள்பவன்; record-keeper. 2. அலுவலக சிறு வேலைகளைக் கவனிப்போன்; attender in an office.

த.வ. ஆவணப் பணியாளன்

**டப்பஞ்சு** *tappañju,* பெ.(n.) பகட்டுக் கரையுள்ள வேட்டி (வின்.); rich-bordered cloth.

த.வ. கொட்டைக்கரை

க. டபான்சு.

*[**Te**. dabbañcu > த. டப்பஞ்சு]*

**டப்பா[1]** *tappā,* பெ.(n.) இந்துத்தானி தொனியில் அமைந்த ஒருவகை இசைப் பாட்டு; Tamil song attuned to Hindustan style of music.

த.வ. மக்கள்பாட்டு

*[**U**. tappa > த. டப்பா]*

**டப்பா[2]** *tappā,* பெ.(n.) 1. மெல்லிய மாழை (உலோகம்) முதலியவற்றால் பலவகை அளவில் செய்யப்படும் மூடி போட்ட கொள்கலம்; container (made of metals like tin or plastic), tin (of various sizes). *"கடுகை டப்பாவில் போட்டு மூடு", "பொடி டப்பா".* 2. சிமிழ்; small box for keeping jewels, scent etc., casket.

த.வ. அடைப்பி

*[**H**. dibhā > த. டப்பா]*

**டப்பாக்கரை** *ṭappā-k-karai,* பெ.(n.) ஆடையின் அகண்ட பகட்டுக்கரை (இ.வ.); thick border of a cloth.

த.வ. அகலக்கரை

*[டப்பா + கரை]*

**டப்பாக்கிஅரிசி** *ṭappākki-ariśi,* பெ.(n.) ஒரு வகை ஆழ் வள்ளி அரிசி; a kind of rice like sago. (சா.அக.)

*[டப்பாக்கி + அரிசி.]*

*[அரி → அரிசி]*

**டப்பாக்கிஅரிசிகஞ்சி** *ṭappākki-ariśi-kāñji,* பெ.(n.) டப்பாக்கி அரிசியால் செய்யும் கஞ்சி; a liquid pudding prepared from tapioca. (சா.அக.)

*[டப்பாக்கி+அரிசி + கஞ்சி]*

**டப்பாங்குத்து** *ṭappāṅguttu,* பெ.(n.) பாட்டுக்கு அல்லது தப்பட்டை போன்ற கருவிகளின் ஓசைக்குத் தகுந்தபடி குதித்துக் குதித்து (ஆண்கள்) ஆடும் ஆட்டம்; a sort of dancing done in streets (by men) to an improvised tune and accompanied by drums. *"அண்மைக் காலங்களில் டப்பாங் குத்துப் பாடல் திரைப்பாடல்களில் பயன்படுத்தப்படுகிறது".*

**டப்பாசு** *ṭappāsu,* பெ.(n.) சீனவெடி (கொ.வ.); fire-crackers.

த.வ. வண்ணவான்வெடி

*[U. tappās > த. டப்பாசு]*



**டப்பாசுச்செடி** *ṭappāśu-c-ceḍi,* பெ.(n.) வெடித்துச் சிதறும் காய்களையுடைய செடி வகை; plant whose pods burst and scatter seeds.

த.வ. வெடிகாய்ச்செடி

*[டப்பாசு + செடி]*

*[U. tappās > த. டப்பாசு]*

**டப்பால்** *ṭappāl,* பெ.(n.) அஞ்சல் (தபால்) (இக்.வ.); post, mail.

*[H. tippāl > த. டப்பால்]*

**டப்பி** *ṭappi,* பெ.(n.) சிமிழ் (கொ.வ.); small box or case.

த.வ. குப்பி

*[H. ḍippi > த. டப்பி]*

**டப்பு**[1] *ṭappu,* பெ.(n.) 1. காசு (துட்டு) வகை (வின்.); small copper coin, dub, 20 case. 2. துட்டு, பழைய நான்கு காசு (இ.வ.); coin worth 1/3 anna. 3. பணம் (இ.வ.); cash, money.

த.வ. பணம்

**டப்பு**[2] *ṭappu,* பெ.(n.) கப்பல் வேகத்தை அளக்கும் கருவி; log, an instrument for ascertaining the speed of a ship. (M.Navi. 66).

த.வ. வேகமானி

**டப்பு**[3] *ṭappu,* பெ.(n.) 1. பொய் (வின்.) false hood. 2. பகட்டு (வின்.); display, showiness.

**டப்புக்கயிறு** *ṭappu-k-kayiṟu,* பெ.(n.) டப்புப் பலகையின் ஓட்டைகளின் வழியாய்ச் செல்லும் கயிறு; rope passing through the holes at the extremities of a log. (M. Navi. 66).

த.வ. துளைக்கயிறு

*[டப்பு + கயிறு]*

**டப்புப்பலகை** *ṭappu-p-palagai,* பெ.(n.) டப்புக் கருவியிலுள்ள மரத்துண்டு; the piece

of wood, quadrant in shape, which is used in the log. (M. Navi. 67).

த.வ. ஆப்புக்கட்டை

*[டப்பு + பலகை]*

**டப்பை[1]** *ṭappai,* பெ.(n.) டப்பி பார்க்க (வின்.); see *ṭappi.*

**டப்பை[2]** *ṭappai,* பெ.(n.) மூங்கிற் பிளாச்சு (வின்.); half of split bamboo.

த.வ. பிளாச்சு

*[தெ. டப்ப் > த. டப்பை]*

**டப்பை[3]** *ṭappai,* பெ.(n.) காவல் (வின்.); patrol.

**டபரா** *ṭabarā,* பெ.(n.) சூடான தேநீர், பால் போன்ற குடிப்புக் (பானங்)களை ஆற்றிக் குடிக்கக் குவளையோடு பயன்படுத்தும் விளிம்புள்ள சிறிய வட்ட வடிவ ஏனம்; a saucer-like vessel slightly deeper used along with a tumbler for serving hot drinks.

த.வ. அகல்குப்பி



**டபாய்-த்தல்** *ṭabāy-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. ஏமாற்றி மேற்கொள்ளுதல் (இ.வ.); to bluster, to frighten. 2. கிண்டல் செய்தல் (பரிகசித்தல்) (கொ.வ.); to mock at.

த.வ. கரவடிப்பு, ஏய்ப்பு

*[H. dhabānā > த. டபாய்-,]*

**டபீர்முரி** *ṭabīr-muri,* பெ.(n.) தஞ்சாவூரில் 1773 ஆம் ஆண்டு டபீர் பண்டிதரால் ஏற்படுத்தப்பட்ட நிலவரித் திட்டம்; settlement of land revenue in Tanjore, as introduced by Dabir pandit in 1773 A.D. (G.Tj. D. I. 169).

**டபீரடி** *ṭapīr-aḍi,* பெ.(n.) பெரும் பொய் (கொ.வ.); big lie.

த.வ. அடாவடி

*[டபீர் + அடி]*

**டபீரடியடி-த்தல்** *ṭabīr-aḍi-y-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) பெரும் பொய் பேசுதல்; to utter a big lie. *'என்னடா டபீரடியடிக்கிறாய்' (இ.வ.).*

த.வ. அடாவடி பேசுதல்

*[டபீர் + அடி-,]*

**டபேதார்** *ṭabēdār,* பெ.(n.) தலைமைத் ஏவலன் (கொ.வ.); head peon.

த.வ. தலைமையேவலன்

*[U. dafēdār > த. டபேதார்]*

**டம்பக்காரன்** *ṭamba-k-kāraṉ,* பெ.(n.) பகட்டுக்காரன்; an ostentatious person.

*[டம்பம் + காரன்]*

*[Skt. ḍambha > த. டம்பம்]*

*("காரன்" உடைமைப் பொருள். ஆ.பா.ஈ.)*

**டம்பப்பை** *ṭambappai,* பெ.(n.) (அ.வ.) (பெண்கள்) கையில் கொண்டு போகும் பை; (lady's) handbag; vanity bag. *'பெண்ணிடமிருந்து டம்பப் பையை யாரோ ஒருவர்*



*விளையாட்டாக எடுத்து மறைத்து வைத் திருக்கிறார்?*

த.வ. பகட்டுப்பை

*[டம்ப + பை]*

**டம்பம்** *ṭambam,* பெ.(n.) 1. வெளிப் பகட்டு (ஆடம்பரம்); being showy or vain. *'உன் டம்பத்தை என்னிடம் காட்டாதே'.* 2. அடாவடி, வீராப்பு; rain or empty boast. *'டம்பமாகப் பேசுவார், காரியத்தில் ஒன்றும் கிடையாது'.*

த.வ. தற்பீற்றல், பகட்டு

*[Skt. ḍambha > த. டம்பம்]*

**டம்பாசாரி** *ṭambāsāri,* பெ.(n.) பகட்டுக் காரன்; fop.

*[Skt. ḍambha+-ācārya > த. டம்பாசாரி]*

**டம்பாசாரிவிலாசம்** *ṭampāšāri-vilāsam,* பெ.(n.) விசுவநாதன் இயற்றியதும் பகட்டு மிக்க ஒருவனது கதையைக் கூறுவதும் நகைச்சுவையுள்ளதுமான நாடக நூல்; drama ridiculing the life of a fop, by *Viswa-nāthan.*

**டம்மாரம்** *ṭammāram,* பெ.(n.) **டமாரம்** பார்க்க; see *tamāram. 'ஒட்டகமேற் கொட் டுகின்ற டம்மாரம்' (விறலிவிடு. 67).*

த.வ. சிறுமுரசு

**டம்மானம்** *ṭammāṉam,* பெ.(n.) **டமாரம்** பார்க்க (வின்.); see *ṭamāram.*

**டம்ளர்** *ṭamḷar,* பெ.(n.) ஏன (பாத்திர) வகை; a kind of vessels.

த.வ. குவளை

*[E. tumbler > த. டம்ளர்]*

**டமரகர்** *ṭamaragar,* பெ.(n.) மருத்துவ நூல் செய்த ஓர் சித்தர்; a Siddhar who is the author of a medical book. (சா.அக.)

த.வ. தமிழாகரர்

**டமரகன்** *ṭamaragaṉ,* பெ.(n.) சுந்திரா னந்தரின் மைந்தர்; he is the son of sundarandhar. (சா.அக.)

**டமரத்தை** *ṭamarattai,* பெ.(n.) கொச்சித் தமரத்தை; bilimbi. (சா.அக.)

**டமரா** *ṭamarā,* பெ.(n.) டபரா (செ.வ.) பார்க்க; see *ṭabarā.*

**டமரு** *ṭamaru,* பெ.(n.) **டமருகம்** பார்க்க; see *ṭamarugam.*

**டமருகம்** *ṭamarugam,* பெ.(n.) உடுக்கை என்னும் சிறுபறை (வின்.); a tabour or small drum shaped like an hourglass.

த.வ. தமருகம்

*[Skt. ḍamaruka > த. டமருகம்]*



**டமாயி**[1] *ṭamāyi,* பெ.(n.) வளைந்து கொடுக்கை; elasticity, springiness.

**டமாயி**[2] *ṭamāyi,* பெ.(n.) பெரும்பாலும் விழாக் களில் (உற்சவங்களில்) காளை மாட்டின் முதுகிலேற்றி வைத்து அடிக்கும் கொட்டு; kettle-drums mounted on an ox and beaten, as in processions. (Madr.)

த.வ. விழாப்பறை, ஏற்றுப்பாறை

**டமாரம்**[1] *ṭamāram,* பெ.(n.) 1. ஒருவகை கொட்டு; a kind of drum. 2. டமருகம் பார்க்க; see Tamarukam.

த.வ. பெரும்பறை

**டமாரம்**[2] *ṭamāram,* பெ.(n.) பெருஞ் செவிடன் (இ.வ.); person who is stone-deaf, as unable to hear even a drum-beat.

த.வ. காதறையன்

**டமாரமடி-த்தல்** *ṭamāramaḍi-,* 4 செ. கு.வி.(v.t.) செய்தியை எல்லோரிடமும் வெளிப்படையாகத் தெரிவித்தல் அல்லது பரப்புதல்; to spread news, trumpet (sth. needlessly); tom-tom. *'எனக்கு வேலை கிடைத்த செய்தியை அதற்குள் டமாரமடித்து விட்டாயா?'.*

த.வ. பறைமுழக்குதல், பறைதல்

*[டமாரம் + அடி-,]*

*[**Skt**. ḍamārā > த. டமாரம்]*

**டமானம்** *ṭamāṉam,* பெ.(n.) **டமாரம்** பார்க்க; see *ṭamāram. 'கலக்க டமானத்தொனியை முழக்க' (தனிப்பா.* I, 320, 12).

**டயன்** *ṭayaṉ,* பெ.(n.) நேரம் (கொ.வ.); time.

*[**E**. time > த. டயன்]*

**டர்** *ṭar,* பெ.(n.) அச்சம் (வின்.); fear.

*[**H**. ḍar > த. டர்]*

**டர்ராக்கிழி-தல்** *ṭarrā-k-kiḻi-,* செ.கு.வி.(v.i.) 1. **டங்காக்கிழி-தல்,** பார்க்க; see *ṭaṅgā-k-kiḻi-,* 2. **டர்வாங்கு-தல்,** பார்க்க; see *ṭarvāṅgu-,*

**டர்வாங்கு-தல்**[1] *ṭar-vāṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. அச்சப்படுதல்; to be afraid. 2. வயிற்றுப் போக்கு முதலியவற்றாற் களைத்துப் போதல்; to be weakened by over-purging of the bowels, excessive work etc.

**டர்வாங்கு-தல்**[2] *ṭar-vāṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) களைக்கச் செய்தல் (கொ.வ.); to bring under unbearable strain; to exact excessive work as from a labourer.

*[டர் + வாங்கு-,]*

*[**Skt**. tar > த. டர்]*

**டரா** *ṭarā,* பெ.(n.) ஒருவகைப் படரும் கொடி; it is a common creeper to be found all over indis. (சா.அக.)

**டராய்-த்தல்**[1] *ṭarāy-,* 4 செ.குன்றாவி.(v.t.) இனிய சொற் (வார்த்தை)களைக் கூறி வஞ்சித்தல் (இ.வ.); to deceive, befool a person by honied words.

த.வ. நயஏய்ப்பு

*[**H**. ḍakārnā > த. டராய்-,]*

**டராய்-த்தல்**[2] *ṭarāy-,* 4 செ.குன்றாவி.(v.t.) நிலைநிறுத்துதல்; to fix, establish, adjust, settle. (C.G.).

*[**H**. tahrāna > த. டராய்-,]*

**டலாயத்து** *ṭalāyattu,* பெ.(n.) வெள்ளி வில்லை அணிந்த தொண்டன்; head peon of a district or divisional office, as wearing a silver badge.

த.வ. அதிகார ஏவலர்

*[**U**. dhalāit > த. டலாயத்து]*

**டவண்டை** *ṭavaṇḍai,* பெ.(n.) 1. பெரிய பறை வகை (வின்.); a big drum. 2. பாழ், சுழி (சுன்னம்); cipher, zero. *'அவன் தேர்வில் டவண்டை வாங்கினான்' (இ.வ.).*

த.வ. ஒருகண்மாக்கிணை, தவண்டை

*[**Skt**. ḍamāram(u) > த. டமாரம்]*

க. டவணெ; தெ. டவின.

**டவண்டையடி-த்தல்** *ṭavaṇḍai-yaḍi-,* 4 செ.கு.வி.(v.i.) தேர்வில் தவறுதல்; to fail, as in an examination.

*[டவண்டை + அடி-,]*

**டவண்டையா-தல்** *ṭavaṇḍaiyā-,* 6 செ.கு.வி. (v.i.) இறந்து போதல்; to breathe one's last, used in contempt. *'அவன் டவண்டையாகி விட்டான்' (இ.வ.).*

*[டவண்டை + ஆ-,]*

**டவண்டைவாங்கு-தல்** *ṭavaṇḍai-vāṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) **டவண்டையடி-தல்,** பார்க்க; see *ṭavaṇḍaiyaḍi-,*

*[டவண்டை + வாங்கு-,]*

**டவர்மரம்** *ṭavar-maram,* பெ.(n.) பாய் மரத்தின் நான்காவது அல்லது உச்சிப் பாகம்; royal mast (M. Navi. 81).

**டவல்** taval பெ.(n.) துண்டு; towel.

த.வ. உறிவை, கைத்துண்டு

*[E. towel>> த. டவல்]*

**டவளாய்-த்தல்** *ṭavaḷāy-,* 4 செ.கு.வி.(v.i.) மிகையாக உண்ணுதல் (இ.வ.); to eat or drink to excess.

த.வ. கும்முதல்

க. டவலிசு

**டவளி** *ṭavaḷi,* பெ.(n.) ஏய்ப்பு, வஞ்சகம் (இ.வ.); fraud, deceit; lie.

க., தெ. டவளி.

**டவற்குந்தா** *ṭavar-kundā,* பெ.(n.) உச்சிப் பாய்மரம்; royal mast (naut.).

[tavar+kunda]

**டவற்பறுவான்** *ṭavar-paṟuvāṉ,* பெ.(n.) உச்சிப்பாய்தாங்குங் கட்டை; royal yard (naut.).

**டவாலி** *ṭavāli,* பெ.(n.) வில்லையோடு கூடிய தொண்டனின் தோட்கச்சை (கொ.வ.); peon's belt on which a badge is worn.

த.வ. தோளணி,மாராப்பு

*[Persn. dawāli > த. டவாலி]*



**டவுல்** *ṭavul,* பெ.(n.) 1. வட்டாரம் அல்லது பண்ணையிலிருந்து கிடைக்கக்கூடிய தண்டலின் குத்து (தோராய) மதிப்பு; estimate, valuation, estimate of the amount of revenue which a district or estate may be expected to yield. 2. ஒவ்வொரு திங்களும் இவ்வளவு சாராயம் விற்பனைக்கு எடுத்துக் கொள்வேனென்று சாராயக்கடைக்காரன் குத்தகைக்காரனிடம் செய்து கொள்ளும் ஒப்பந்தம்; agreement between a wholesale renter and his shopkeeper by which the latter agrees to take each month a certain quantity of liquor for sale. 3. **தவுல்** பார்க்க; see *tavul.*

த.வ. வருவாய் மதிப்பீடு

*[H. taul> த. டவுல்]*

**டவுல்கணக்கு** *ṭavul-kaṇakku,* பெ.(n.) வரி செலுத்துவோனுக்குக் கொடுக்கும் தீர்வை விளக்க (விவர)க் கணக்குக் குறிப்பு; extract from the estimated assessment, given for the information of the tax-payer.

*[டவுல் + கணக்கு.]*

*[H. taul> த. டவுல்]*

*[கண → கணக்கு.]*

**டவுல்சமா** *ṭavul-camā,* பெ.(n.) ஒரு வட்டாரத்தின் அல்லது ஊரின் தீர்வை மொத்த வருமான விளக்கம் (விவரம்); particulars of the total revenue assessed upon a district or village (R.f.).

*[H. tavl-jamā > த.டவுல்சமா]*

**டவுல்நாமா** *ṭavul-nāmā,* பெ.(n.) **டவுல் கணக்கு** பார்க்க; see *ṭavul-kaṇakku.* (R.T.).

**டவுல்வசூல்பாக்கி** *ṭavul-vasul-pākki,* பெ.(n.) சேர வேண்டிய தொகை நிலுவைத்

த்ண்டல் இவற்றின் விளக்கம் அடங்கிய வரிக்கணக்கு; a revenue account containing particulars of demand collection and balance. (R.T.).

த.வ. வரிக்கணக்கு ஏடு

*[டவுல் + வசூல் + பாக்கி]*

*[H. ṭavl-u.wasūl > த. டவுல்வசூல்]*

**டவுலடி–த்தல்** *ṭavul-aḍi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. தன்னைத் தானே புகழ்ந்து கூறுதல்; to praise oneself, boast, as beating one's own drum. 2. பொய்ச் செய்தி எழுப்புதல்; to utter lies, spread false rumours.

த.வ. தன்னை வியத்தல்

*[டவுல் + அடி–,]*

*[Ar. tabal > த. டவுல்]*

**டவை** *ṭavai,* பெ.(n.) தலைமைத் தொண்டன்; head peon.

*[U. defēdār > த. டவை]*

**டவைதார்** *ṭavaidār,* பெ.(n.) **டபேதார்** பார்க்க; see *tapēdār.*

**டாக்கன்** *ṭākkaṉ,* பெ.(n.) செருக்கன் (வின்.); petulant fellow.

*[H. ṭāgā > த. டாக்கன்]*

**டாக்கா** *ṭākkā,* பெ.(n.) மேலோட்டுத் தையல் (இ.வ.); basting.

*[H. tāgnā > த. டாக்கா]*

**டாக்காணா** *ṭākkāṇā,* பெ.(n.) அஞ்சலகம் (இ.வ.); post office.

*[H. ḍak-khāna > த. டாக்காணா]*

**டாக்கார்ட்டு** *ṭākkārṭṭu,* பெ.(n.) இரட்டைச் சக்கரக் குதிரை வண்டி வகை; dogcart.

*[E. dogcart > த. டாக்கார்ட்டு]*

**டாக்கு** *ṭākku,* பெ.(n.) 1. வலிமை; strength, robustness. 2. செருக்கு (வின்.); petul ancy, pride.

**டாக்கும்டீக்குமாய்** *ṭākkum-ṭīkkum-āy,* பெ.அ.(adj.) சிறப்பாக (இ.வ.); in a neat or well dressed manner.

த.வ. வெள்ளையும் சள்ளையுமாய்

**டாக்கோடாக்காய்** *ṭākkōḍākkāy,* வி.அ.(adv.) வேகமாய்; with great speed.

**டாக்டர்** *ḍākṭar,* பெ.(n.) 1. மேல் நாட்டு மருத்துவ முறையில் படித்துப் பட்டம் பெற்ற மருத்துவர்; doctor (of medicine). *'மருத்துவத் துறையில் ஈடுபடும் டாக்டர்கள் கிராமப் புறங்களில் சேவை செய்வது நன்மை பயக்கும் செயலாகும்'.* 2. முனைவர்; doctor of philosophy.

*[L. doctor > த. டாக்டர்]*

**டாகினி** *ṭāgiṉi,* பெ.(n.) இடாகினி (இ.வ.); a female imp. or goblin.

**டாகு** *ṭāku,* பெ.(n.) புள்ளி (வின்.); mark, spot, brand.

*[Persn. ḍāgh > த. டாகு]*

**டாகுபோடு–தல்** *ṭāku-pōḍu-,* செ.கு.வி.(v.i.) மாடு, குதிரை முதலியவற்றிற்குச் சூடு போடுதல் (வின்.); to brand cattle or horses with a red-hot iron.

*[டாகு + போடு–.]*

*[Persn. dāgh > த. டாகு]*

**டாங்கர்** *ṭāṅgar,* பெ.(n.) 1. **டாங்கர்மா** பார்க்க; see *ṭāṅgarmā.* 2. **டாங்கர்பச்சடி** பார்க்க; see *ṭāṅgar-paccaḍi.*

**டாங்கர்மா** *ṭāṅgarmā,* பெ.(n.) உளுந்துமா (இ.வ.); blackgram flour.

*[Mar. dangar > த. டாங்கர்மா]*

**டாங்கி** *ṭāṅgi,* பெ.(n.) சக்கரங்களின் மேல் சுற்றி வரும் இரும்புப் பட்டை பொருத்தப் பட்டதும் நீண்ட குழா (பீரங்கி)யை

உடையதுமான படைத்துறை (இராணுவ) வண்டி; tank (used in war-fare). *'பகைவர் நாட்டைத் தாக்கும் போது பயன்படுத்தப்படும் டாங்கி'.*

த.வ. இடிகுழல் இரும்புந்து

*[E. tank > த. டாங்கி]*



**டாங்கிலிமூலம்** *ṭāṅgili-mūlam,* பெ.(n.) ஆடாதோடை; Malabar nut. (சா.அக.)



**டாங்கு** *ṭāṅgu,* பெ.(n.) ஐந்து குன்றிமணி எடை; a weight of five jeweller's grains. (சா.அக.)

**டாண்-என்று** *ṭāṇ-eṉṟu,* வி.அ.(v.) (பே.வ.) (குறிப்பிட்ட காலத்தில்) சிறிதும் தவறாமல்; மிகச் சரியாக; one the dot. *'முதல் தேதி யன்று டாணென்று வாடகையைக் கொடுத்து விடுவார்'. 'சொன்னபடி டாணென்று ஆறு மணிக்கு வந்துவிட்டாயே!'.*

த.வ. முற்றாக, நெற்றாக

**டாணா** *ṭāṇā,* பெ.(n.) காவலிடம் (கொ.வ.); police station, guard-house.

*[U. thānā > த. டாணா]*

**டாணாக்காரன்** *ṭāṇā-k-kāraṉ,* பெ.(n.) காவற் தொண்டன்; person incharge of a police station, station-house officer, police constable.

**டாணாதார்** *ṭāṇādār,* பெ.(n.) **டாணாக் காரன்** (இ.வ.) பார்க்க; see *ṭāṇā-k-kāraṉ.*

**டாப்பு**[1] *ṭāppu,* பெ.(n.) பட்டியல்; catalogue, list, inventory, physician's prescriptions.

தெ. டாபு

**டாப்பு**[2] *ṭāppu,* பெ.(n.) பகட்டு (இ.வ.); show, display, pomp.

*[H. ḍhāb > த. டாப்பு]*

**டாப்பு**[3] *ṭāppu,* பெ.(n.)உச்சம், சிறப்பு, உயர்நிலை; excellence, greatness.

*[E. ḍhāb > த. டாப்பு]*

**டாப்புச்சிறப்பு** *ṭāppu-c-ciṟappu,* பெ.(n.) டாப்பு[2] (கொ.வ.) பார்க்க; see *ṭāppu.*

**டாபர்** *ṭāpar,* பெ.(n.) கூட்டிக் கொடுப்போன் (கொ.வ.); pimp, procurer.

*[U. dhawwā > த. டாபர்]*

**டாபா** *ṭāpā,* பெ.(n.) மேல் மாடியின் வெளியிடம் (செ.வ.); open terrace.

த.வ. மாடம்

*[Te. dabā > த. டாபா]*

**டாபால்** *ṭāpāl,* பெ.(n.) கோட்டைக்குச் செல் வதற்கான சுரங்க வழி (வின்.); under-ground passage to fortified place.

*[Te. dābālu > த. டாபால்]*

**டாபால்நடத்து-தல்** *ṭāpāl-naḍattu-,* 2 பி.வி. (v.cans.) கோட்டை முதலியன முற்றுகை யிடுதற்காகச் சுரங்க வழி அகழ்தல் (வின்.);

to dig mine, excavate trenches, as in besieging to fortified place.

*[டாபால் + நடத்து-,]*

*[**Te.** dābālu > த. டாபால்]*

**டாபால்போடு-தல்** *ṭāpāl-pōḍu-,* 19 செ. குன்றாவி.(v.t.) முற்றுகையிடுதல் (வின்.); to sorround and besiege a fortified place.

*[டாபால்+போடு-,]*

*[**Te.** dābālu > த. டாபால்]*

**டாபால்முறி-த்தல்** *ṭāpāl-muṟi-,* 2 செ.கு.வி. (v.t.) முற்றுகை நீக்குதல்; to raise a siege.

*[டாபால் + முறி-,]*

*[**Te.** dābālu > த. டாபால்]*

**டாம்பிகம்** *ṭāmbigam,* பெ.(n.) வீண் பகட்டு (வின்.); ostentation, pomp.

த.வ. பகட்டாரம், அலப்பு

*[**Skt.** dāmbhika > த. டாம்பீகம்]*

**டாம்பிகன்** *ṭāmbigaṉ,* பெ.(n.) இடம்பன்; coxcomb, fop, ostentatious person. *'இனைய பற்பல டாம்பிகர்' (பிபோத. 10, 14).*

த.வ. வீண் பகட்டன்

*[**Skt.** dāmbhika > த. டாம்பீகன்]*

**டாமர்** *ṭāmar,* பெ.(n.) ஒரு வகை மரம்; dammer tree. (சா.அக.)

**டாமர்சோபிதம்** *ṭāmar-šōbidam,* பெ.(n.) ஒரு வகைச் சீனத்துச் செடி; a plant native of China. (சா.அக.)

**டாயம்பாடு-தல்** *ṭāyam-pāḍu-,* செ.கு.வி. (v.i.) ஓர் இசைச் சுரத்தை மூலமாகக் கொண்டு மற்ற சுரங்களால் பண்பாடுதல் (இ.வ.); to sing a tune within the limit of specified note.

த.வ. தாயம்பாடுதல்

*[டாயம் + பாடு-,]*

*[**Skt.** sthāyin > த. டாயம்]*

**டாயில்கறி** *ṭāyil-kaṟi,* பெ.(n.) ஒரு பறவையின் இறைச்சி; flesh of a bird. (சா.அக.)

**டார்** *ṭār,* பெ.(n.) கீலெண்ணெய் (தார்); tar. (சா.அக.)

*[**E.** tar > த. டார்]*

**டார்வாங்கு-தல்** *ṭār-vāṅgu-,* செ.கு.வி.(v.i.) **டர்வாங்கு-தல்,** பார்க்க; see *ṭar-vāṅgu-,*

*[டார் + வாங்கு-,]*

*[**H.** ḍar > த. டார்]*

**டால்** *ṭāl,* பெ.(n.) 1. கொடி (வின்.); flag, colours. 2. கேடகம் (வின்.); shield. 3. ஒளி; lustre. 4. மிகை பேச்சு; ostentations, boastful - speech. *'அவன் டாலடிக்கிறான்' (இ.வ.).*

தெ. டாலு; க. டால்.

**டால்வாங்கி** *ṭāl-vāṅgi,* பெ.(n.) கத்தரிக் காயும், பருப்பும் இட்டுச் செய்த குழம்பு வகை (இ.வ.); a sauce made of dholl and brinjal.

*[**H.** dāl+**Mhr.** vāṅgi > த. டால்வாங்கி]*

**டால்வீசு-தல்** *ṭāl-vīšu-,* 5 செ.கு.வி.(v.i.) ஒளி வீசுதல் (கொ.வ.); to sparkle, as a gem; to shine. 2. மிகைபடக் கூறல் (இ.வ.); to talk boastingly.

*[டால் + வீசு-,]*

**டாலடி-த்தல்** *ḍālaḍi-,* 4 செ.கு.வி.(v.i.) கண்ணைப் பறிக்கும் வகையில் மின்னுதல்; பளபளத்தல்; glitter. *'வைரமூக்குத்தி வெயில் பட்டு டாலடித்தது'.*

**டாலர்** *ḍālar,* பெ.(n.) அமெரிக்கா, சிங்கப்பூர் முதலிய நாடுகளில் வழங்கும் காசு (நாணய) வகை (கொ.வ.); dollar, a coin in the currency of the U.S.A, straits settle ments, etc.

த.வ. தாளுருவா

*[**E.** doller > த. டாலர்]*

**டாலு** *ṭālu,* பெ.(n.) அலுக்கம் (கமகம்) பத்த னுளொன்று (பரத. இராக. 23); appog giatura, two notes played closely together, the first being lower and touched very lightly, one of ten kamakam, (q.v.).

**டாவால்** *ṭāvāl,* பெ.(n.) **டாபால்** (வின்.) பார்க்க; see *ṭāpāl.*

**டாவாபோடுகை** *ṭāvā-pōḍugai,* பெ.(n.) கப்பலின் இடப்பக்கம்; port, the left side of a ship (Naut.)

*[U. dāvā+E. port > த. டாவாபோடுகை]*

**டாவு** *ṭāvu,* பெ.(n.) செருக்கு (கொ.வ.); haughtiness.

**டானிப்** *ṭāṉip,* பெ.(n.) குளிர் நாடுகளில் பயிராகும் முள்ளங்கியைப் போன்றும் உருண் டையாகவும் உள்ள (கோசு இனத்தைச் சேர்ந்த) ஒரு வகைக் கிழங்கு; thick fles by underground stem of Brassica cam pestris, used as vegetables. (சா.அக.)

*[Fr. tour+L. nāphs>E. turnip > த. டானிப்]*



**டிக்கட்டு** *ṭikkaṭṭu,* பெ.(n.) 1. அனுமதிச் சீட்டு; ticket. 2. திருமண முதலியவற்றில் அனுப்பும் அழைப்புச் சீட்டு (செ.வ.); card a letter of invitation for marriage, etc.

த.வ. சீட்டு

*[E. ticket > த. டிக்கட்டு]*

**டிக்காமல்லி** *ṭikkāmalli,* பெ.(n.) மயிலாலக்கடி; cambi resin. (சா.அக.)

**டிக்கிரி** *ṭikkiri,* பெ.(n.) வழக்குத் தீர்ப்பில் நிறைவேற்றுதற்குரியத் தன்மை (கொ.வ.); degree in a suit.

த.வ. தீர்ப்பாணை

*[E. decree > த. டிக்கிரி]*

**டிகாணா** *ṭikāṇā,* பெ.(n.) தங்குமிடம் (கொ.வ.); station, camp.

*[H. ṭikāṇā > த. டிகாணா]*

**டிங்கி** *ṭiṅgi,* பெ.(n.) குட்டிக் கரணம் (இ.வ.); somen-sault, tumbling.

தெ., க. டிங்கி.

**டிங்கிசுரம்** *ṭiṅgi-suram,* பெ.(n.) முடக்குச் சுரம் (கொ.வ.); dengue fever.

*[டிங்கி + சுரம்]*

*[E. dengue > த. டிங்கி]*

**டிங்கியடி-த்தல்** *ṭiṅgi-y-aḍi-,* 4 செ.கு.வி.(v.i.) சோற்றுக்குத் திண்டாடுதல் (இ.வ.); to struggle hard for one's food, as turning somersaults, to lead a precarious existence.

*[டிங்கி + அடி-,]*

**டிங்டிங்** *ṭiṅṭiṅ,* பெ.(n.) உப்புக் கண்டம் (வின்.); dried mutton.

**டிண்டிமம்** *ṭiṇḍimam,* பெ.(n.) ஒருவகைப் பறை; a kind of drum.

*[Skt. ḍiṇḍima > த. டிண்டிமம்]*

**டிப்பணி** *ṭippaṇi,* பெ.(n.) உரைவகை (இ.வ.); gloss, commentary.

*[Skt. ṭippaṇi > த. டிப்பணி]*

**டிம்மிக்கட்டை**[1] *ṭimmi-k-kaṭṭai,* பெ.(n.) 1. தொலைவரி (கம்பி) பழகுங் கட்டை; model

of a telegraphic instrument for learning telegraphy.

*[டிம்மி + கட்டை]*

*[E. dummy > த. டிம்மி]*

கள் → கட்டு → கட்டை = திரண்ட மரத்துண்டு, திரண்ட விறகு

**டிம்மிக்கட்டை²** *ṭimmi-k-kaṭṭai,* பெ.(n.) முட்டாள் (இ.வ.); blockhead.

**டிமம்** *ṭimam,* பெ.(n.) வடமொழி உருவகம் (ரூபகம்) பத்தனுள் முற்றுகையிடுதலைப் பற்றி வருவது (சிலப். பக். 84, கீழ்க்குறிப்பு); a kind of drama in sanskrit representing a siege, one of ten rupagam (q.v.).

*[Skt. ḍima > த. டிமம்]*

**டிமிக்கி¹** *ṭimikki,* பெ.(n.) மட்பாண்டத் தாலமைந்த ஒருவகைச் சிறுபறை; a kind of tabor, made with an earthen frame.

த.வ. தமுக்கு

*[U. ṭumkī > த. டிமிக்கி]*

**டிமிக்கி²** *ḍimikki,* பெ.(n.) (கண்காணிப்பவர் கண்ணில் படாமல் அல்லது தான் போக வேண்டிய இடத்திற்குப் போகாமல்) ஏமாற்றி நழுவிவிடும் செயல்; giving the slip; playing truant. *'பள்ளிக்கூடம் போகவில்லையா? இன்றைக்கு டிமிக்கியா?'. 'பல தடவை காவலருக்கு டிமிக்கி கொடுத்த கேடி கைதானான்'. 'வாடகையே கொடுக்காமல் டிமிக்கிக் கொடுத்துக் கொண்டு திரிகிறான்'.*

த.வ. நழுவல்

**டிமிக்கிகொடு-த்தல்** *ṭimikki-koḍu-,* 4 செ.கு.வி.(v.i.) தந்திரமாய் மறைதல் (கொ.வ.); to abscond, to bolt, give one the slip.

த.வ. தப்பி மறைதல்

*[டிமிக்கி + கொடு-,]*

**டிமிக்கியடி-த்தல்** *ṭimikki-aṭi-,* 4 செ.கு.வி. (v.i.) **டிமிக்கிகொடு-,** பார்க்க; see *ṭimikki-koḍu.*

*[டிமிக்கி + அடி-,]*

**டிரங்குப்பெட்டி** *ṭiruṅgu-p-peṭṭi,* பெ.(n.) தகரத்தாலான செவ்வக வடிவப் பெட்டி; large case (for packing clothes, etc.) (in India) trank.

த.வ. இரும்புப்பெட்டி

*[டிரங்கு + பெட்டி]*

*[E. trunk > த. டிரங்கு]*



**டிராம்வண்டி** *ṭirām-vaṇḍi,* பெ.(n.) மின்சார வண்டி (இ.வ); train.

த.வ. மின்னுந்து

*[டிராம் + வண்டி]*

*[E. tram > த. டிராம்]*

**டிராயர்¹** *ṭirāyar,* பெ.(n.) அரைக் கால்சட்டை; shorts; half trousers. *'பழுப்பு நிற டிராயரும் வெள்ளை நிறச் சட்டையும் அணிந்திருந்தான்'.*

*[E. drawer > த. டிராயர்]*



**டிராயர்**[2] *ṭirāyar,* பெ.(n.) (மேசை, நிலைப் பேழை (பீரோ) முதலியவற்றில் உள்ள) இழுப்பறை; drawer (of a desk). *'மேசை டிராயரின் பணம் வைத்திருக்கிறேன், எடுத்துக் கொள்'.*

த.வ. இழுவை

*[E. drawer > த. டிராயர்]*



**டிரேகா** *ṭirēgā,* பெ.(n.) காந்தச் செடி; an unknown plant. (சா.அக.)

**டில்லி** *ṭilli,* பெ.(n.) முற்காலத்தில் மகமதியர் (முகலாயர்)களின் தலைநகரமாகவும், இக்காலத்தில் இந்தியாவின் தலைநகர மாகவும் உள்ள ஒரு மா நகரம்; Delhi, for merly the capital of the Moghuls and now the capital of India.

த.வ. தில்லி

*[H. ḍilli > த. டில்லி]*

**டில்லிதர்பார்**[1] *ḍilli-darbār,* பெ.(n.) ஒரு வகை உயர்ந்த பட்டுப் புடவை (கொ.வ.); a kind of superior silk saree.

*[H. ḍilli+U. darbār > த. டில்லிதர்பார்]*

**டில்லிதர்பார்**[2] *ḍilli-darbār,* பெ.(n.) தன்முனைப்பாட்சி; auto cracy.

**டில்லிபாச்சா** *ḍilli-pāccā,* பெ.(n.) மகமதிய (மொகலாய) அரசன்; the Moghul king.

*[H. ḍilli+U. bādshāh > த. டில்லிபாச்சா]*

**டில்லிராவடம்** *ḍilli-rāvaḍam,* பெ.(n.) கெம்பு (வின்.); a choice ruby.

**டின்** *ṭin,* பெ.(n.) எண்ணெய், அரிசி முதலியவை வைத்துக் கொள்ள உதவும் பெரிய அடைப்பு, சிமிழ்; a large container made of tin. *'அரிசியைப் பாதுகாப்பாக உள்ள டின்னில் போட்டு வைப்பது நல்லது'.*

த.வ. அடைப்பி

*[E. tin > த. டின்]*



**டீ** *ṭī,* பெ.(n.) 1. தேயிலை; tea leaf. 2. கொதிக்கும் நீரில் வறண்ட தேயிலைப் பொடியைப்போட்டுச் சாறு வடித்தெடுக்கும் ஒருவகைக் குடிப்பு; tea, the beverage.

த.வ. தேநீர்

*[Chin. te > த. டீ]*

**டீக்காப்பதக்கம்** *ṭikkā-p-patakkam,* பெ.(n.) மகளிர் அணியும் பதக்க வகை (கொ.வ.); a jewel pendant with a top-clasp of gold, set with precious stones.

*[டீக்கா + பதக்கம்]*

*[U. ṭika > த. டீக்கா]*

**டீக்கு** *ṭikku,* பெ.(n.) 1. மிடுக்கு; spruceness, stiffness as of manners. 2. சரியாகை; exactness, correctness, fitness, suitability. *'அந்தச் செயல் டீக்காய் முடிந்தது'.*

*[H. ṭhik > த. டீக்கு]*

**டீக்கொடு-த்தல்** *ṭī-k-koḍu-,* 4 செ.கு.வி.(v.i.) ஒன்றோடு ஒன்று மோதிக் கொள்ளுதல் (கொ.வ.); to butt, as rams in fighting.

த.வ. இடி கொடுத்தல்

*[டீக்+கொடு]*

**டீகா**[1] *ṭīkā,* பெ.(n.) **டீக்காப்பதக்கம்** பார்க்க; see *ṭīkā-p-padakkam.*

**டீகா**[2] *ṭīkā,* பெ.(n.) **டீகை** பார்க்க (கொ.வ.); see *ṭīgai.*

**டீகாப்பொட்டு** *ṭīkā-p-poṭṭu,* பெ.(n.) மகளிர் தலைவகிடுக்கு நேரே நெற்றியிலணியும் அணி வகை (இ.வ.); a jewel pendant worn by woman on the fore-head.



*[டீகா + பொட்டு]*

**டீகை** *ṭīgai,* பெ.(n.) உரை; commentary, gloss.

*[Skt. ṭīkā > த. டீகை]*

**டீச்சர்** *ṭīccar,* பெ.(n.) ஆசிரியை; woman teacher. *'டீச்சர் கற்பிப்பதை மாணவ, மாணவிகள் ஒருநிலைப் படுத்திக் கவனித்து வந்தாலே அதிக மதிப்பெண்கள் எடுக்க முடியும்'.*

*[E. teacher > த. டீச்சர்]*

ஆங்கிலத்தில் teacher என்னும் சொல் ஆண் பெண் பாகுபாடு காட்டாது ஆசிரியர் என்னும் பொருளையே கொண்டுள்ளது. தமிழில் பெரும்பாலும் டீச்சர் பெண்பால் ஆசிரியரைக் குறிப்பிடுகிறது. இதனைப் பொருட்பாட்டுப் புடைபெயர்ச்சி எனலாம்

**டீலா**[1] *ṭīlā,* பெ.(n.) 1. நெகிழ்ச்சி (வின்.); looseness. 2. தளர்ச்சி; weakness, helplessness. *'அவன் டீலா வாய்விட்டான்' (இ.வ.).*

*[H. ḍhīla > த. டீலா]*

**டீலா**[2] *ṭīlā,* பெ.(n.) சுணக்கம், தாமதம்; delay.

க. டீலா.

**டீலாவில்விடு-தல்** *ṭīlāvil-viḍu-,* 8 செ.கு.வி. (v.t.) திண்டாட விடுதல் (இ.வ.); to forsake, leave one helpless or destitute.

*[டீலா + விடு-,]*

**டீவு** *ṭīvu,* பெ.(n.) தளுக்கு; style, fashion.

தெ. டீவு.

**டூ** *ṭū,* பெ.(n.) சேர்ந்திருக்கும் சுட்டு விரலையும் நடுவிரலையும் பிரித்துக் காட்டித் தெரிவிக்கும் நட்பின்மைக் (சிநேகமின்மைக்) குறிப்பு; an exclamation declaring breach of friendship, indicated by disjoining the ring formed of the fore and middle fingers. *'அவன் டூ சொன்னான்'.*

த.வ. தூவிடுதல்

**டூப்** *ḍūp,* பெ.(n.) (கேட்பவருக்கு) நம்ப முடியாதபடி இருக்கும் பேச்சு; பொய்; fib, spinning a yarn; lie. *'அவன் சொல்வது முக்கால்வாசி டூப்பாகத்தான் இருக்கும், நம்பிவிடாதே!'. 2. 'திரைப்படங்களில் கதாநாயகர்கள் நடிக்க இயலாத கடினமான காட்சிகளில் மாற்றாள் டூப் போட்டு நடிக்க வைப்பது'*; dupe.

த.வ. 1. அண்டப்புளுகு. 2. மாற்றாள்

*[E. dupe > த. டூப்]*

**டூலி** *ḍūli,* பெ.(n.) நோயாளிகளை எடுத்துப் போகப் பயன்படும் ஒரு நீண்ட மூங்கிலின் நடுவில் தொங்கும் கட்டிலை உடைய ஒரு கருவி; a swinging litter for carrying sick persons, a cot, or frame suspended by the four corners from a bamboo pole and is carried by two or four persons. (சா.அக.)

த.வ. தொங்குகட்டில்

**டூவிடு-தல்** *ṭū-viḍu-,* 20 செ.குவி.(v.i.) நட்பை விட்டிடுதல்; to declare breake of friendship.

*[டூ + விடு-,]*

**டெங்கணிக்கோட்டை** *ṭeṅgaṇi-k-kōṭṭai,* பெ.(n.) கொடி மரமமைந்த மதிலுடன் கூடிய கோட்டை (இ.வ.); fort with a bastion provided with a flag-staff.

த.வ. கொடிமரக்கோட்டை

*[டெங்கணி + கோட்டை]*

க. டெங்கணி, டெங்கண (கோட்டைக் கொத்தளத்தில் அமைந்த கொடி மரம்.)

**டெங்கு** *ṭeṅgu,* பெ.(n.) **டிங்கிசுரம்** (இ.வ.) பார்க்க; see *ṭiṅgi-suram.*

*[E. dengu > த. டெங்கு]*

**டெண்டர்** *ṭeṇḍar,* பெ.(n.) ஒரு வேலையைக் குறிப்பிட்ட தொகையிற் செய்து முடிப்ப தற்காக உடன்படுஞ் சீட்டு, ஒப்பந்தப் புள்ளி (கொ.வ.); tender.

*[E. tender > த. டெண்டர்]*

**டெலிபோன்** *ṭeli-pōṉ,* பெ.(n.) தொலைபேசி; telephone.

*[E. telephone > த. டெலிபோன்]*



**டேக்கு-தல்** *ṭēkku-,* 5 செ.கு.வி.(v.i.) புட்டத்தால் நகர்ந்து நகர்ந்து செல்லுதல் (செ.வ.); to creep along on the buttocks as a crippled person.

த.வ. தேங்கி நகர்தல், தேக்குதல்

**டேகை** *ṭēgai,* பெ.(n.) ஒருவகைக் காட்டுப் பறவை (கொ.வ.); a wild bird.

த.வ. தேகை

க., தெ. டேக.

**டேகையாட்டம்** *ṭēgai-y-āṭṭam,* பெ.(n.) திருமணக் காலங்களில் மாலை மாற்றும் போது மணமகனும் மணமகளும் தம் தோள்களில் வீற்றிருக்க இருதிறத்து அம்மான்மாரும் ஆடும் விந்தையான (வினோத) ஆட்டம் (இ.வ.); an amusing dance by uncles, with the bride and bridegroom on their shoulders, when the latter exchange garlands.

த.வ. தோகையாட்டம்

*[டேகை + ஆட்டம்]*

தெ. டேகாட.

**டேமணி** *ṭēmaṇi,* பெ.(n.) **டேவணி** பார்க்க; see *ṭēvaṇi.*

*[U. thēwni > த. டேவணி > டேமணி]*

**டேரா** *ḍērā,* பெ.(n.) 1. வட்டரங்கு (சர்க்கசு நடத்துபவர் ஓர் ஊரில் அமைக்கும் கூடாரம்); tent (by a circus party). *'வட்டரங்கு (சர்க்கசு) நடத்துபவர் டேரா அமைத்து*

*பலவகை நிகழ்ச்சிகள் நடத்தி காண்போர் மனம் கொள்ளைக் கொள்ளச் செய்வர்'.* 2. (வீட்டுக்காரர் வெறுக்கும் அளவுக்கு) பலநாள் தங்குதல்; overstay (in a house or a place to the extent of causing displeasure to the host). *'தூரத்து உறவு என்று சொல்லிக் கொண்டு வந்து ஒரு மாதம் டேரா அடித்து விட்டார்'.*

த.வ. கூடாரம்

*[H. ḍērā > த. டேரா]*

**டேவணி** *ṭēvaṇi*, பெ.(n.) முன்பணம் (இ.வ.); earnest money, cash security.

தெ. டேவணி.

*[U. டேவணி > த. டேவணி]*

**டைகாத்** *ṭaigāt*, பெ.(n.) இலவய (இனாம்) ஊர்; entire village held as inam.

த.வ. முற்றூட்டு

*[U. ḍēhāt > த. டைகாத்]*

**டைகிளாட்டு** *ṭaigiḷāṭṭu*, பெ.(n.) இரு மொழிகளிலமைந்த நிலத்தீர்வை, கணக்கு முதலியன; books or records in two languages, as settlement register.

த.வ. இருமொழிக்கணக்கு ஏடு

*[E. ḍiglott > த. டைகிளாட்டு]*

**டைமன்** *ḍaimaṉ*, பெ.(n.) விளையாட்டுச் சீட்டுக் கட்டில் ஒரு சாதிச் சீட்டு (கொ.வ.); diamonds, a suite in playing - cards.

*[E. diamond > த. டைமன்]*



**டையடி-த்தல்** *ḍai-y-aḍi-*, 4 செ.கு.வி.(v.t.) 1. அச்சில் அடித்தல்; to strike in a die, as a piece of metal. 2. வெள்ளை மயிர்களுக்குக் கறுப்புச் சாயம் போடுதல் (த.வ.); to apply die to hair.

*[டை + அடி-,]*

*[E. die > த. டை]*

**டொக்குவிழல்** *ḍokku-viḻal*, பெ.(n.) கன்னத்தில் பள்ளம் விழுகை; sunken as cheeks. (சா.அக.)

**டொக்கை** *ḍokkai*, பெ.(n.) பெருச்சாளி முதலியவற்றாற் கட்டடத் தரையில் விழும் குழிவு; depression or hollow in the paved floor, caused by bandicoots etc.

த.வ. துளை விழுதல், தொள்ளை விழுதல்

**டொங்கு**[1] *ḍoṅgu*, பெ.(n.) பொந்து (இ.வ.); hole or hollow, as in a tree or wall.

தெ. டொங்கு.

**டொங்கு**[2] *ḍoṅgu*, பெ.(n.) கோணல் (கொ.வ.); crookedness.

க., தெ. டொங்கு.

**டொங்குவிழு-தல்** *ḍoṅgu-viḻu-*, 2 செ.கு.வி. (v.i.) பணம் முதலியன குறைதல்; to decrease, dwindle, to be short as money. *'முப்பதில் 2 ருபா டொங்கு விழுகிறது' (இ.வ.).*

த.வ. தொங்கல் விழுதல், குறைபடல்

*[டொங்கு + விழு-,]*

**டொம்பர்** *ḍombar*, பெ.(n.) கழைக் கூத்தன் (கொ.வ.); a wandering tribe of singers and rope-dancers.

த.வ. தொம்பன், தொழும்பன்

க. டொம்பரு.



**டொம்பரவர்** *ḍombaravar,* பெ.(n.) **டொம்பர்** (வின்.) பார்க்க; see *ḍombar.*

**டொழா** *ḍoḻā,* பெ.(n.) இலுப்பை; narrow, leaved mohua. (சா.அக.)

**டொள்** *ḍoḷ,* பெ.(n.) கப்பற் கயிறு மாட்டும் முளை; belaying pin (naut.).

த.வ. குட்டம் (கூட்டம்)

*[Du. dol > த. டொள்]*

**டொள்மேசை** *ḍoḷ-mēšai,* பெ.(n.) கப்பற் கயிற்றுச் சட்டம்; belaying rail (naut.).

*[டொள் + மேசை]*

*[Du. dol > த. டொள்]*

**டோக்கன்** *ṭōkkan,* பெ.(n.) வில்லை; a voucher or disc exchanged for goods or services.

த.வ. வில்லை

*[E. Token > த. டோக்கன்]*

**டோக்கு** *ḍōkku,* பெ.(n.) பணம் (ரொக்கம்); hard cash, ready money. *டோக்கா நூறு ரூபாய் கொடுத்தேன்' (கொ.வ.).*

க., தெ. டோகு.

**டோகர்** *ṭōgar,* பெ.(n.) மோதுகை (இ.வ.); blow, stroke, collision.

*[H. ṭakkar > த. டோகர்]*

**டோகர்கொடு-த்தல்** *ṭōgar-koḍu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. மோதுதல்; to collide. *'வண்டி டோகர் கொடுத்தது' (இ.வ.).* 2. ஓடிப்போதல்; to run away, abscond. *'அவன் பணத்தை எடுத்துக் கொண்டு டோகர் கொடுத்து விட்டான்' (கொ.வ.).*

த.வ. இடிகொடுத்தல்

*[டோகர் + கொடு-,]*

*[H. ṭakkar > த. டோகர்]*

**டோகர்விடு-தல்** *ṭōkar-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) **டோகர்கொடு-,** பார்க்க;see *ṭōkar-koḍu-.*

*[டோகர் + விடு-,]*

*[H. ṭakkar > த. டோகர்]*

**டோங்கா** *ṭōṅgā,* பெ.(n.) விதை வீக்கம் (அண்டவாதம்); hydrocele, swelling of the scrotum. *'அவனுக்கு டோங்கா விழுந்து விட்டது' (கொ.வ.).*

த.வ. புருடை வீக்கம், கொட்டை வீக்கம்

*[H. dhauṅknā > த. டோங்கா]*

**டோங்கு-தல்** *ḍōṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) முழங்கையாற் கோலியுருண்டையைத் தள்ளி விளையாடுதல் (வின்.); to play at marbles, pushing them with the elbows.

தெ. டோகு.



**டோப்பா** *ṭōppā,* பெ.(n.) ஆண்கள் தலையில் வைத்துக் கொள்ளும் செயற்கை முடி; பொய் முடி; wig (for men). *'திரைப்படங்களில் டோப்பாவை அதிக அளவில் பயன்படுத்துகிறார்கள்'.*

த.வ. புனைமுடி



**டோபி** *ṭōpi,* பெ.(n.) சலவைத் தொழிலாளி (இக்.வ.); washer man, dhoby.

*[H. dhōbi > த. டோபி]*

**டோபிகானா** *ṭōpi-kāṉā,* பெ.(n.) சலவைத் துறை (இ.வ.); place for washing cloth.

**டோமம்** *ṭōmam,* பெ.(n.) ஓர் மூலி; a plant. (சா.அக.).

**டோரியா**[1] *ṭōriyā,* பெ.(n.) ஒரு வகைத் தயிர்ப்பச்சடி (இ.வ.); relish of curds and condiments.

*[U. ḍōrā > த. டோரியா]*

**டோரியா**[2] *ṭōriyā,* பெ.(n.) இடையிடையே இழைக் கோடுள்ள துணி வகை (கொ.வ.); striped muslin.

*[H. ḍōriyā > த. டோரியா]*

**டோல்**[1] *ḍōl,* பெ.(n.) **1.** ஒரு வகை இசைக்கருவி; a large drum. *'கூறு சங்கு டோல் முரசு' (தனிப்பா* I, 270, 1). 2. திறமையும், அறிவும் சேர்ந்த பேச்சு; clever talk. *'உன்னுடைய டோல் இங்கே செல்லாது' (இ.வ.).*

த.வ. தோல்

தெ. டோலு.

*[H. ḍhōl > த. டோல்]*

**டோல்**[2] *ḍol,* பெ.(n.) தூங்குமஞ்சம் (இ.வ.); sleeping cot.

*[Skt. ḍōlā > த. டோல்]*

**டோல்பின்** *ṭōlpiṉ,* பெ.(n.) கப்பலின் முகப்பைத் தாங்கும் கட்டை; martingale, short spar under the bowsprit.

த.வ. ஓங்கில் கட்டை

*[E. dolphin > த. டோல்பின்]*

**டோலக்கு** *ḍōlakku,* பெ.(n.) சிறுதோல் இசைக் கருவி வகை (இ.வ.); a small drum.

த.வ. கைப்பறை

*[H. ḍhōkk > த. டோலக்கு]*

**டோலாக்கு** *ḍōlākku,* பெ.(n.) காதணி வகை; an ear pendant.

த.வ. தொங்கட்டான்

*[H. lōla > த. டோலாக்கு]*



**டோலாக்கியம்** *ḍōlākkiyam,* பெ.(n.) ஒரு சீமைச்செடி; a foreign plant. (சா.அக.).

**டோலாயந்திரம்** *ḍōlāyandiram,* பெ.(n.) **டோலேந்திரம்** பார்க்க; see *ḍōlēntiram.*

**டோலி** *ḍōli,* பெ.(n.) தூக்கிச் செல்லும் மஞ்சம்; litter, dooly, a kind of sedan.

**த.வ. தொங்கு மஞ்சம், தொங்கலி**

*[H. ḍōlā > த. டோலி]*



**டோலுகிழங்கு** *ḍōlukiḻaṅgu,* பெ.(n.) சீழ்மூல (பவுத்திர)த்தைப் போக்கும் மூலி; a drug that cures fistula. (சா.அக.).

**டோலேந்திரம்** *ḍōlēndiram,* பெ.(n.) நீர் முதலியவற்றை ஏனத்தில் (பாத்திரத்தில்) இட்டுக் கயிற்றால் அவ்வேனம் தீயிற்படும் படி செய்து காய்ச்சும் ஒரு கருவி (வின்.); a contrivance for boiling water etc, by suspending the vessel containing it over fire by means of a string.

**டோலை** *ḍōlai,* பெ.(n.) ஊசல் (இ.வ.); swing, swinging cot.

*[Skt. ḍōlā > த. டோலை]*

**டோலையில்எரி-த்தல்** *ḍōlaiyil-eri-,* 4 செ.கு.வி.(v.i.) டோலா இயந்திரத்தில் வைத்து ஆவி எழும்படி தீமூட்டுதல்; to heat the drug or medicine in the apparatus for vapour bath. (சா.அக.)

**டோலோற்சவம்** *ḍōlōṟ-savam,* பெ.(n.) அழகுபடுத்தப்பட்ட (அலங்கரித்த) ஊஞ்சலில் கோயில் திருமேனிகளை (மூர்த்திகளை) எழுந்தருளுவித்து ஆட்டி நடத்தும் விழா; a festival in which the images of gods and goddesses are placed in a decorated swing and rocked to and fro.

**த.வ. பொன்னூசல் திருவிழா**

*[Skt. ḍōlā+utsava > த. டோலோர்சவம்]*

**டோளக்கை** *ḍōḷakkai,* பெ.(n.) பறவை தன் சிறகுகளைச் சமப்படுத்துவதுபோல் இரு கைகளையும் இருபுறத்தும் விரித்துக் காட்டும் நாட்டிய (அபிநய)க்கை (பரத. பாவ. 52); a pose which consists in extending the hands on both sides in imitation of a bird balancing itself on its wings.

**த.வ. விரிசிறைக்கை**

*[டோள + கை]*

*[Skt. ḍōla > த. டோள]*



**டோளாயந்திரம்** *ḍōḷāyandiram,* பெ.(n.) **டோலாயந்திரம்** பார்க்க; see *ḍōlāyan diram.* (சா.அக.).

**டோசு** *ḍōsu,* பெ.(n.) சில நேரங்களில் செய்த தவற்றுக்காகக் கிடைக்கும் திட்டு; rebuke (which one receives for his / her mistakes). *'நேரம் கழித்துச் சென்றால் அப்பாவிடம் டோசு வாங்க வேண்டும்', 'அம்மா கொடுத்த டோசில் அண்ணன் திரைப்படத்திற்குப் போவதைக் குறைத்து விட்டார்'.*

**டௌல்** *ḍaul,* பெ.(n.) 1. மதிப்பீடு; estimate. 2. உடன்படிக்கை; ஒப்பந்தம்; agreement. 3. டவுல்[1,2] பார்க்க; see *ṭavul*[1,2] .

*[H. daul > த. டௌல்]*

